# லேவ் தல்ஸ்தோய்

## சிறுகதைகளும் குறுநாவல்களும்



# லேவ் தல்ஸ்தோய்

## சிறுகதைகளும் குறுநாவல்களும்






ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ




விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

மொழிபெயர்ப்பாளர்: நா. தர்மராஜன் எம். ஏ

ஓவியர்: எம். எஸ். ருதகோவ்

**Лев Толстой**

ПОВЕСТИ И РАССКАЗЫ

*На тамильском языке*

**Leo Tolstoy**

SHORT NOVELS AND STORIES

*In Tamil*



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

**T** $\frac{4702010100-523}{031(01)-84}$ **356—84**

# பொருளடக்கம்

**லியனீத் லியோனவ்.** தல்ஸ்தோயைப் பற்றி **(முன்னுரை)** . . . . . . 5

இரண்டு ஹுஸ்ஸார்கள் . . . . . 9

குடும்ப மகிழ்ச்சி . . . . . . . 170

கஜக்கோல் . . . . . . . . . 394

இவான் இலியீச்சின் மரணம் . . . 497

கிரேய்ஸர் சொனாட்டா . . . . . 650

நடனத்திற்குப் பிறகு . . . . . . 864

# தல்ஸ்தோயைப் பற்றி

## (முன்னுரை)

ருஷ்யாவின் சமூக வாழ்க்கையில் லேவ் தல்ஸ்தோய் வகித்த பாத்திரத்தைப் பல ருஷ்ய எழுத்தாளர்கள் பன்முறை வலியுறுத்தியிருக்கிருர்கள். தல்ஸ்தோய் மரணமடைவதற்குப் பத்து வருடங்களுக்கு முன்பு அன்தோன் சேகவ் பின்வருமாறு எழுதினுர்: ''...தல்ஸ்தோய் மரணமடைந்துவிட்டால் என்னுடைய வாழ்க்கையில் மாபெரும் சூன்யம் ஏற்பட்டு விடும்... அவர் இல்லையென்ருல் நம்முடைய இலக்கியம் மேய்ப்பவன் இல்லாத ஆட்டுக் கிடையாகிவிடும்.'' இதற்கு இருபது வருடங் களுக்கு முன்பு துர்கேனெவும் இதே கருத்தைக் கூறியிருந்தார்... தல்ஸ்தோய் மரண மடைந்தால் முற்போக்கான அறிவுஜீவிகள் அஞதைகளாகி விடுவார்கள். அது மட்டுமல்ல. தங்கள் தலைகளை இழந்த நிலைமைக்கு அவர் கள் ஆளாவார்கள். அவர் மரணமடைந்த பொழுது ருஷ்யாவின் சாதாரண மக்கள் கூட

எதையோ பறிகொடுத்ததைப் போன்ற உணர்ச்சிக்கு ஆளானுர்கள். அன்று ருஷ்யாவிலிருந்த நிலைமைகளில் மிகச் சிறந்த இலக்கியப் படைப்புகள் கூட மிகவும் நீண்ட, சுற்றி வளைத்து வருகின்ற பாதைகளின் மூலமாகவே சாதாரண மக்களுக்குக் கிடைத்தன. அன்றைய நிலையில் ஒரு எழுத்தாளரின் சமூக நடவடிக்கைகளின் மூலமாகவே சாதாரண மக்கள் அவரைப் பற்றித் தெரிந்து கொண்டார்கள். ஆனுல் தல்ஸ்தோயைப் பொறுத்தவரை அவர் தன்னுடைய மொத்த வாழ்க்கையையும் மக்களிடையே கழித்தார் என்று நாம் கூற முடியும். அவர் ஒலேனின் (''காஸ்ஸாக்குகள்'') அல்லது லெவின் (''ஆன்ஞ கரேனிஞ'') அல்லது நெஹ்லூதவ் (''புத்துயிர்ப்பு'') என்ற புனைபெயர்களில் தன்னுடைய ஆன்மாவின் மிகவும் ஆழமான மூலைகளைக் கூடத் திறந்து காட்டினுர். தல்ஸ்தோய் எப்பொழுதுமே அநீதியான முறைகளில் திரட்டப்பட்ட செல்வத்துக்கு எதிராக, சோம்பலுக்கும் ஒடுக்குமுறைக்கும் எதிராகப் போராடினுர், கிழடாகிப் போன நாகரிகத்தின் ஒன்று திரட்டப்பட்ட கோரங்களுக்கு எதிராகப் போராடினுர். தன் காலத்தில் ஆதிக்கம் செலுத்திய கருத்துக்களை எதிர்த்து நீந்தினுர். அவருடைய வாழ்க்கை மிகவும் நீண்டதாக இருந்த காரணத்தால் சாதாரண மக்களுடைய முற்போக்கான உள்ளங்கள் ஒரு ஆறுதலான எண்ணத்துக்குப் பழக்கப்பட்டு விட்டன. நமக்குப் பக்கத்தில்

ஊழல் நெருங்க முடியாத இதயம் துடித்துக் கொண்டிருக்கிறது. தல்ஸ்தோயின் கண்கள் நம்முடைய கடும் உழைப்பையும் தாங்க முடியாத துன்பங்களையும் பார்த்துக் கொண்டிருக்கின்றன. நம்முடைய வேதனைகளையும் துயரப் பாடல்களையும் அவருடைய காதுகள் கேட்டுக் கொண்டிருக்கின்றன. காலப்போக்கில் இவை அனைத்தும் பரிசுத்தமான தங்கமாக மாறும். நாளை ஏற்படப் போகின்ற புத்துயிரடைந்த உலகத்தின் பொதுக் கருவூலத்தில் அவை சேர்க்கப்படும்.

ஆம். பத்தரை மாற்றுப் பசும்பொன் மட்டும்தான் காலத்தின் சோதனையில் மதிப்புக் குறையாதிருக்கும்.

தல்ஸ்தோயின் மாபெரும் நூல்களைக் காலம் சோதித்தது. தல்ஸ்தோயின் முரண்பாடுகளும் அவருடைய சிக்கல் நிறைந்த வாழ்க்கையும் ஒரு மனிதனின் வாழ்க்கையைப் புதுமையான கோணங்களில் அவர் சித்தரிப்பதற்கு உதவின. இன்று நாம் தல்ஸ்தோயின் மாபெரும் கலைத்திறனை ரசிக்கிறோம். அவருடைய மாபெரும் படைப்புக்களில் குறைகளையும் பார்க்கிறோம். ஆனால் உண்மையைத் தேடுபவர்கள் அந்தக் குறைகளைக் கண்டு ஒதுங்க மாட்டார்கள். யாரும் உண்மையைப் பரிசுத்தமான வடிவத்தில் சந்திப்பதில்லை.

உலகம் தோன்றிய காலத்திலிருந்து பார்க்கும் பொழுது ஒரு டஜன் மிகச் சிறந்த படைப்புக் கலைஞர்களின் பட்டியலில் தல்ஸ்

தோய் இடம் பெறுகிருர். தல்ஸ்தோயின் சாதனே ஹெர்குலிஸின் சாதனேயை ஒத்தது. அவர் ஒரு மலே. அந்த மலேச் சிகரத்திலிருந்து பார்க்கும் பொழுது மனித சிந்தனே சுடர் விடுவதைப் பார்க்கிருேம். அது அழிவில்லாதது...*

**லியனீத் லியோனவ்**

---

* லேவ் தல்ஸ்தோய் மரணமடைந்த ஐம் பதாவது வருட அஞ்சலியாக போல்ஷாய் அரங்கத்தில் நடைபெற்ற நினேவுக் கூட்டத் தில் நிகழ்த்திய உரையிலிருந்து ஒரு பகுதி. (ப-ர்.)

# இரண்டு ஹுஸ்ஸார்கள்

## குறுநாவல்

கோமகள் ம.நி. தல்ஸ்தாயாவுக்குக் காணிக்கை *

...இமொமீனி, இமொமீனி என்று கதைக்கிறீர்கள்; ஆனால் வோட்கா வைப் பற்றி அரை வார்த்தை கூடப் பேசவில்லையே...**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்ப வருடங்களில், இரயில் பாதைகளோ அல்லது நெடுஞ்சாலைகளோ, வாயு விளக்குகளோ அல்லது கொழுப்பு விளக்குகளோ இல்லாதபொழுது, தணிவான, கம்பிச் சுருள் மெத்தை சோபாக்களோ அல்லது எண்ணெய் மெருகிடப் படாத நாற்காலிகள், மேசை, கட்டில்கள் இல்லாதபொழுது, கண்களில் ஒற்றைக் கண்ணாடி

---

* மரீயா நிக்கலாயெவ்னா தல்ஸ்தாயா — லேவ் தல்ஸ்தோயின் சகோதரி. (குறிப்புகள் பதிப்பாசிரியருடையவை.)

** ''பழைய ஹுஸ்ஸாரின் பாடல்'' என்ற பிரபலமான பாடலின் வரிகள். தெனீஸ் தவீதவ் *(1784—1839)* என்ற கவிஞர் எழுதியது. இமொமீனி அன்ரீ *(1779—1869)*—பிரெஞ்சு இராணுவ நிபுணராகவும் எழுத்தாளராகவும் இருந்தவர்.

களைச் சொருகிக் கொண்டிருக்கும் ஏமாற்ற மடைந்த இளைஞர்களோ, மிதவாத உணர்ச்சி யுடைய பெண் தத்துவஞானிகளோ இல்லாத பொழுது, இன்று நம் காலத்தில் ஏராளமான எண்ணிக்கையில் தோன்றியிருக்கும் பூச் சூடிய பெண்கள் இல்லாதபொழுது—மாஸ்கோவிலி ருந்து பீட்டர்ஸ்பர்குக்குப் பிரயாணம் செய் யும் எவரும் தன்னுடைய வண்டியிலோ அல் லது கோச்சிலோ சமைக்கப்பட்ட உணவு வகைகளைச் சமையலறை கொள்ளாத அள வுக்கு அடைத்துக் கொண்டு மென்மையான புழுதி நிறைந்த அல்லது சேறு நிரம்பிய பாதை களில் கறி வறுவல், சூடான புப்லிகி* மற்றும் வல்டாய் மாவட்டத்தில் செய்த வண்டி மணியின் ஓசையில் நம்பிக்கை வைத்து எட்டு பகல் மற்றும் இரவுகள் பிரயாணம் செய்த அந்த எளிமையான நாட்களில் — இலையுதிர் காலத்தின் நீண்ட மாலை நேரங்களில் மெழுகு வர்த்தி விளக்குகள் புகைந்து கொண்டிருந்த பொழுது, இருபது அல்லது முப்பது உறுப் பினர்களைக் கொண்ட குடும்பக் குழுக்களின் மீது பிரகாசித்தபொழுது, நடன அறைகளில் தொங்கும் சர விளக்குத் தண்டுகளில் மெழுகு மற்றும் திமிங்கிலக் கொழுப்பு விளக்குகள் நிறைந்திருந்தபொழுது, நாற்காலிகள் வரிசை யாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தபொழுது, நம் முன்னோர்களின் இளமை அவர்களுடைய

---

* ருஷ்ய சிற்றுண்டி வகை.

நெற்றிகளின் சுருக்கங்கள் மற்றும் வெள்ளை முடிகளால் மட்டுமின்றி பெண்களுக்காக அவர்கள் பங்கெடுத்துக்கொண்ட சண்டைகளினாலும் தற்செயலாகவோ அல்லது வேறுவிதமாகவோ கீழே போடப்பட்ட கைக்குட்டைகளை எடுப்பதற்காக அறையின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்குத் தாவிக் குதிக்கின்ற லாவகத்தாலும் சுட்டிக் காட்டப்பட்டபொழுது, நம்முடைய தாயார்கள் அகன்ற இடையும் தொளதொளவென்ற கைகளும் கொண்ட கவுன்களை அணிந்து வீட்டுப் பிரச்சினைகள் எல்லாவற்றையும் சீட்டுக் குலுக்கிப் போட்டு முடிவு செய்த பொழுது, அழகு நிறைந்த, மலர் சூடிய பெண்கள் சூரிய வெளிச்சத்தைக் கண்டு உள்ளே மறைந்தபொழுது—மேசனிக் சங்கங்களும் மார்ட்டினிஸ்டுகளும்* மற்றும் துகென்ட்புந்துகளும் ** இருந்த எளிமையான காலத்தில், மிலராதவிச்,*** தவீதவ் மற்றும் பூஷ்கின் காலத்தில்—அந்தக் காலத்தில் குபெர்

---

* **சென் மார்ட்டின்** *(1743 — 1803)* மற்றும் அவருடைய குருவான மார்ட்டினெஸ் பஸ்க்வாலிசைப் பின்பற்றிய மேசனிக் சங்கத்தின் பிரிவினர்.

** **துகென்ட்புந்து** — ஜெர்மனியின் தேசபக்தி மிக்க இளைஞர்களின் சங்கம். பிரான்ஸ் ஜெர்மனியை ஆக்கிரமித்த பொழுது 1808ல் நிறுவப்பட்டது.

*** **மி.இ. மிலராதவிச்** *(1771 — 1825)* இராணுவ தளபதி, 1812ம் வருட தேசபக்தப் போரில் பங்கெடுத்தவர்.

னியாவின் தலைநககரமான கே... என்ற நகரத்தில் பணக்கார நிலவுடைமையாளர்கள் கூடியிருந்தார்கள். பிரபுக்களின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்குக் கடைசிச் சுற்றுத் தேர்தல்கள் அப்பொழுதுதான் முடிந்திருந்தன.

# 1

''அது முக்கியமல்ல. அவசியமேற்பட்டால் நான் பொது அறையில் தங்கியிருக்கத் தயார்'' என்றார் பெரிய கோட்டும் ஹுஸ்ஸார் தொப்பியும் அணிந்த ஒரு இளம் ராணுவ அதிகாரி. அவர் பனிச்சறுக்கு வண்டியை விட்டு அப்பொழுதுதான் இறங்கி கே... நகரத்திலேயே மிகவும் சிறந்ததாகக் கருதப்படுகின்ற பயணிகள் விடுதிக்குள் நுழைந்து கொண்டிருந்தார்.

''மேன்மை தங்கிய கோமகன் அவர்களே! பெரிய கூட்டம்! இதற்கு முன்பு இப்படி வந்ததில்லை!'' என்றான் விடுதியில் ஊழியம் செய்கின்ற சிறுவன். அந்த அதிகாரி துர்பீன் கோமகன் என்பதை அவன் அதிகாரியின் வேலைக்காரனிடமிருந்து முன்பே அறிந்து கொண்டிருந்தான். எனவே அவரை ''மேன்மை தங்கிய கோமகன் அவர்களே!'' என்று விளித்தான். ''அஃப்ரேமவ்ஸ்கயா பண்ணையின் எசமானி தன் பெண் மக்களோடு மாலையில் காலி செய்வதாகச் சொல்லியிருக்கிறார்கள். நீங்கள் ஒத்துக் கொண்டால் தாங்கள் தங்குவதற்குப் பதினொன்றும் அறையைத் தயார் செய்கிறேன்''

என்று கோமகனுக்கு முன்னாலிருந்த பாதையில் மெதுவாக நடந்து கொண்டும் அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டும் அவன் கூறினான்.

பொது அறையில் காலத்தால் அழுக்கேறிப் போன ஜார் அலெக்ஸாந்தரின் முழு நீள உருவப்படத்தின் கீழ் ஒரு சிறு மேசைக்கு முன்னால் சிலர் உட்கார்ந்து ஷாம்பேன் மதுவருந்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அந்த ஊரைச் சேர்ந்த நிலவுடைமையாளர்கள் என்று தெரிந்தது. அவர்களுக்குப் பக்கத்தில் ஊர் ஊராகப் போகும் வணிகர்கள் கருநீல நிற மேலங்கிகளை அணிந்து உட்கார்ந்திருந்தார்கள்.

கோமகன் அறைக்குள் நுழைந்து பிளூஹர் என்று ஒரு பெரிய, பழுப்பு நிற நாயைக் கூப்பிட்ட பிறகு தன் கோட்டைக் கழற்றிப் போட்டார். அதன் காலரில் அப்பியிருந்த பனி இன்னும் உருகவில்லை. வோட்கா கொண்டு வருமாறு உத்தரவிட்டார். அவர் அணிந்திருந்த நீல நிற ஸாட்டின் சட்டையோடு மேசைக்கு முன்னால் உட்கார்ந்து அங்கேயிருந்தவர்களோடு பேசத் தொடங்கினார். அவருடைய அழகான தோற்றமும் ஒளிவுமறைவில்லாத தோரணையும் அவர்களை உடனே கவர்ந்தபடியால் அவரிடம் ஷாம்பேன் மதுவை நீட்டினார்கள். கோமகன் முதலில் வோட்காவை ஒரே மூச்சில் குடித்தார். பிறகு அங்கேயிருந்த புதிய நண்பர்களை உபசரிப்பதற்காக இன்னொரு பாட்டில் கொண்டுவருமாறு உத்தரவிட்டார். பனிச்

சறுக்கு வண்டி ஓட்டி குடிப்பதற்குப் பணம் கேட்பதற்காக அந்த நேரத்தில் உள்ளே நுழைந்தான்.

''ஸாஷா! அவனுக்குப் பணம் கொடு'' என்று உத்தரவிட்டார் கோமகன்.

வண்டியோட்டி ஸாஷாவுடன் வெளியே சென்முன். அவன் நீட்டிய கையில் பணத் தோடு உடனே திரும்பினுன்.

''மேன்மை தங்கிய அதிகாரி அவர்களே! இதைப் பாருங்கள்! உங்களுக்காக எவ்வளவு சிரமப்பட்டு ஓட்டிக் கொண்டு வந்தேன். அரை ரூபிள் தருவதாகச் சொன்னீர்கள். அவன் கால் ரூபிள் கொடுக்கிமுன்.''

''ஸாஷா! அவனுக்கு ஒரு ரூபிள் கொடு!''

ஸாஷா அந்த வண்டியோட்டியின் பூட்சுகளேப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''அவனுக்கு அது போதும்'' என்று கட்டைக் குரலில் சொன்னுன். ''மேலும் என்னிடம் அதற்கு மேல் பணம் கிடையாது.''

கோமகன் தன்னுடைய பர்சிலிருந்து இரண்டு ஐந்து ரூபிள் நோட்டுக்களே எடுத்து (அதிலிருந்த கடைசிப் பணம் அவையே)ஒரு நோட்டை வண்டியோட்டியிடம் நீட்டிஞர். அவன் அவர் கையை முத்தமிட்டுவிட்டுச் சென்முன்.

''கஷ்டமான நிலேமைக்கு வந்துவிட்டேனே! கடைசியாக ஐந்து ரூபிள் நோட்டுதான் மிச்சம்'' என்முர் கோமகன்.

''நீங்கள்தான் உண்மையான ஹுஸ்ஸார்'' என்று அங்கேயிருந்த கனவான்களில் ஒருவர்

சிரித்துக் கொண்டே கூறினர். அவருடைய மீசை, குரல், கால்களில் ஒருவகை சுறுசுறுப் பான விறைப்பற்ற நிலையையும் பார்க்கும் பொழுது அவர் குதிரைப் படையிலிருந்து ஒய்வுபெற்ற அதிகாரியாக இருக்க வேண்டும் என்று தோன்றியது. ''கோமகன் அவர்களே! இங்கே அதிகமான நாட்கள் தங்கியிருக்கப் போகிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஒருவரிடம் கொஞ்சம் பணம் வாங்க வேண்டும். இல்லையென்ருல் நான் இங்கே தங்க மாட்டேன். இந்தப் பாழாய்ப் போன விடுதியில் அறைகள் கூடக் கிடைக்கவில்லை. சனியன்!..''

''கோமகன் அவர்களே! என் அறையை உங்க ளோடு பகிர்ந்து கொள்ள அனுமதியுங்கள்'' என்ருர் குதிரைப் படை அதிகாரி. ''நான் ஏழாம் அறையில் இருக்கிறேன். என்னேடு தங்கு வதற்கு ஆட்சேபமில்லையென்ருல், நீங்கள் மூன்று நாட்களாவது இங்கே தங்கியிருக்க முயற்சி செய்ய வேண்டும். இன்று மேன் மக்கள் மார்ஷல் ஒரு நடனவிருந்தளிக்கிருர். நீங்கள் கலந்து கொண்டால் அவர் மிகவும் மகிழ்ச்சி அடைவார்!''

''ஆமாம், கோமகன் அவர்களே! தயவு செய்து தங்குங்கள்'' என்று அங்கேயிருந்த ஒரு அழகான இளைஞர் கூறினர். ''ஏன் அவசர மாகப் புறப்பட வேண்டும்? தேர்தல்கள் மூன்று வருடங்களுக்கு ஒரு முறைதானே நடை பெறுகின்றன. ஒன்றுமில்லாவிட்டாலும் எங் கள் ஊரின் இளம் பெண்களையாவது நீங்கள் பார்க்க முடியுமல்லவா?''

''ஸாஷா! என்னுடைய உள்ளாடைகளைக் கொண்டு வா. நான் குளிக்கும் விடுதிக்குப் போகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு எழுந்தார் கோமகன். ''குளித்த பிறகு யோசிப்போம். ஒருவேளை மார்ஷல் அளிக்கும் நடன விருந்துக்கு நான் வருவேன்.''

அவர் அங்கேயிருந்த பணியாட்களில் ஒருவனைக் கூப்பிட்டார். அவர் ஏதோ கூறிய பொழுது அவன் சிரித்துக் கொண்டே, ''எல்லாம் நடக்கும், மேன்மை தங்கிய கோமகன் அவர்களே!'' என்றான். பிறகு அவர் வெளியே சென்றார்.

''அப்படியானால் என் பெட்டியை உங்களுடைய அறையில் வைக்குமாறு சொல்கிறேன்'' என்று கோமகன் பாதையில் நடந்து கொண்டே கூறினார்.

''அதை எனக்குச் செய்யப்பட்ட பேருதவியாகக் கருதுவேன்'' என்று சொல்லிக் கொண்டு கதவை நோக்கி ஓடி வந்தார் குதிரைப் படை அதிகாரி. ''அறை எண் ஏழு! மறக்க வேண்டாம்.''

கோமகனின் காலடிச் சத்தம் மறைந்த பிறகு குதிரைப் படை அதிகாரி மேசைக்குத் திரும்பினார். அங்கேயிருந்த எழுத்தருக்குப் பக்கத்தில் தன்னுடைய நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அவருடைய கண்களை ஊடுருவிப் பார்த்துச் சிரித்துக் கொண்டு பேசினார்:

''இவர்தான் அந்த நபர்.''

''உண்மையாகவா?''

''அவரேதான். சண்டைகளில் பிரபலமடைந்த ஹுஸ்ஸார்—அவர்தான். அவர் பெயர் துர்பீன். எல்லோருக்கும் அவரைத் தெரியும். அவர் என்னை அடையாளம் கண்டு கொண்டார் என்று நான் பந்தயம் கட்டத் தயார். நிச்சயமாக அடையாளம் கண்டிருக்க வேண்டும். அவரும் நானும் லெபெத்யானில் ஒரு களியாட்டத்தில் ஈடுபட்டோம். அங்கே ஒரு முக்கிய வேலையாக நான் போயிருந்த மூன்று வாரங்களும் ஒரே குஷிதான். அங்கே ஒரு சிறு சம்பவம் நடை பெற்றது — அவரும் நானும் அதற்குக் காரணமாக இருந்தோம். அதனுல் தான் என்னைத் தெரியாதவர் போல அவர் நடித்தார். உற்சாகமான நண்பர்.''

''உண்மையிலேயே உற்சாகமான மனிதர். எவ்வளவு நயமான பழக்கவழக்கங்கள்! அப்படிப்பட்டவர் என்று யாருமே கற்பனை செய்யக்கூட மாட்டார்கள்'' என்றுர் அந்த அழகான இளைஞர். ''நாங்கள் வெகு சீக்கிரத்தில் நண்பர்களாகிவிட்டோம்... அவர் வயது இருபத்தைந்துக்கு அதிகமாக இருக்காது என்று நினைக்கிறேன், சரிதானு?''

''அவர் தோற்றம் அப்படி இல்லையே தவிர வயது அதிகமாகத்தான் இருக்க வேண்டும். ஆனுல் அவரைப் பாராட்டுவதென்றுல் அவரைப் பற்றி உண்மையிலேயே நன்றுகத் தெரிந்திருக்க வேண்டும். சீமாட்டி மிகுனேவாவுடன் ஓடிப் போனது யார்? அவர்தான். ஸாப்லினைக் கொன்றது யார்? மாதினெவைக் கால்களைத் தூக்கி சன்னல் வழியாக விட்டெறிந்தது

யார்? நேஸ்திரவ் கோமகனிடமிருந்து மூன்று லட்சம் வெற்றியடைந்தது யார்? அவர் ஒரு அசகாய சூரர். அதை உங்களால் கற்பனை செய்யக்கூட முடியாது. சூதாட்டக்காரர், சண்டைவீரர், பெண்களை மயக்குபவர். ஆனால் ஒரு ஹுஸ்ஸார், உண்மையான ஹுஸ்ஸாருடைய ஆன்மா அவரிடமிருக்கிறது. நம்மைப் பற்றி அவதூறு செய்வதென்றால் எல்லோருக்குமே மகிழ்ச்சி ஏற்படுகிறது. ஆனால் உண்மையான ஹுஸ்ஸார் எப்படிப்பட்டவர் என்பதை அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. அந்தக் காலத்தைப் போல உண்டா?''

அந்தக் குதிரைப் படை அதிகாரி கோமகனும் அவரும் லெபெத்யானில் ஈடுபட்ட களியாட்டங்களைப் பற்றி வர்ணித்தார். அவை ஒரு போதும் நடைபெறவில்லை என்பதோடு அப்படி நடை பெற்றிருக்கவும் முடியாது. ஏன் நடை பெற்றிருக்க முடியாதென்றால் முதன் முதலாக, அவர் அந்தக் கோமகனை அதற்கு முன்பு பார்த்ததே இல்லை, கோமகன் இராணுவத்தில் சேர்ந்ததற்கு இரண்டு வருடங்களுக்கு முன்பே அவர் இராணுவத்திலிருந்து ஓய்வு பெற்று விட்டார். இரண்டாவதாக, அந்தக் குதிரைப்படை அதிகாரி குதிரைப் படையில் சேவை செய்ததே கிடையாது. அவர் பெலெவ்ஸ்கி ரெஜிமென்டில் நான்கு வருட காலம் மிகச் சாதாரணமான படைவீரராக இருந்தார். என்சைனுகப் பதவி உயர்வு கிடைத்தவுடனே அவர் அதிலிருந்து விலகிவிட்டார். ஆனால் பத்து வருடங்களுக்கு முன்பு குடும்பச் சொத்து

அவருக்குக் கிடைத்த பொழுது அவர் லெபெத்யானுக்குப் பிரயாணம் செய்தது உண்மையே. அங்கே சில அதிகாரிகளோடு சேர்ந்து அவர் எழுநூறு ரூபிள் பணத்தை விரயம் செய்தார். ஈட்டிப் படையில் சேர வேண்டுமென்ற நோக்கத்தோடு இளஞ்சிவப்புக் கை முனைகளைக் கொண்ட உஹ்லான் இராணுவ உடையைத் தயாரிக்க உத்தரவு கொடுத்தார். குதிரைப் படையில் சேர வேண்டுமென்ற ஆசை அவரிடம் அதிகமாக இருந்தபடியால் குதிரைப் படை அதிகாரிகளோடு அவர் லெபெத்யானில் செல விட்ட மூன்று வாரங்களும் அவருடைய வாழ்க்கையிலேயே மிகவும் மகிழ்ச்சி நிரம்பிய நாட்களாக இருந்தன. அவர் மனதில் தன்னுடைய ஏக்கத்தை முதலில் யதார்த்தமாகவும் பிறகு நினைவுகளாகவும் மாற்றிக் கொண்டார். கடைசியில் தான் குதிரைப் படையில் இருந்ததாக அவரே உறுதியாக நம்பிக் கொண்டிருந்தார். ஆனால் நேர்மையையும் இனிமையாகப் பழகுவதையும் பொறுத்த வரை, அவர் உண்மையிலேயே தகுதி மிக்க கனவானாக இருப்பதை இது எவ்விதத்திலும் தடுக்கவில்லை.

''ஆமாம்! குதிரைப் படையில் இருந்தவர்களால் மட்டுமே நம்மைப் போன்றவர்களைப் பாராட்ட முடியும்.'' அவர் நாற்காலியில் காலைப் பரப்பி உட்கார்ந்து கொண்டார், கீழ் முகவாயை முன்னே நீட்டிக் கொண்டு கட்டைக் குரலில் தொடர்ந்து பேசினார்: ''ஒரு குதிரையின் மேல் உட்கார்ந்து என்னுடைய

பிரிவுக்குத் தலைமை தாங்கிப் போய்க் கொண்டிருப்பேன். அதைக் குதிரை என்று சொல்வதைக் காட்டிலும் பேய் என்று தான் சொல்லும்படியாக இருக்கும். அதன் மேல் நானும் ஒரு பேயைப் போல உட்கார்ந்து கொண்டிருப்பேன். அந்த நேரத்தில் தளபதி படையைப் பார்வையிடுவதற்கு வருவார். 'அதிகாரியே! நீங்கள் இல்லாமல் எங்களால் இதைச் சமாளிக்க முடியாது. தயவு செய்து உங்கள் பிரிவுக்குத் தலைமை தாங்கி அணிவகுப்பை நடத்துங்கள்' என்று கூறுவார். 'சரி, ஐயா!' என்று பதிலளிப்பேன். அப்படிச் சொன்னவுடனே அதை நிறைவேற்றுவேன்! அங்கிருந்து ஒரே சுழற்சியில் திரும்பி என்னுடைய மீசைக்கார வீரர்களைப் பார்த்து உத்தரவு போடுவேன். உடனே நாங்கள் புறப்படுவோம். அது ஒரு சிறந்த காலம்!'' என்று நினைவுகூர்ந்தார்.

கோமகன் குளிக்கும் விடுதியிலிருந்து சிவந்த முகத்தோடும் ஈரத் தலைமுடியோடும் திரும்பினார். நேரே ஏழாம் எண் அறைக்குச் சென்றார். அங்கே குதிரைப் படை அதிகாரி மேலங்கி அணிந்து, பற்களுக்கிடையே புகைக் குழாயைக் கடித்தபடி புகழ்மிக்க துர்பீனோடு தன் அறையைப் பகிர்ந்து கொள்ளும் அதிர்ஷ்டம் தனக்குக் கிடைத்ததைப் பற்றிக் கவலை தோய்ந்த மகிழ்ச்சியோடு சிந்தித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். ''ஆனால் என் உடைகளைப் பறித்துக் கொண்டு நிர்வாணமாக நிறுத்த, என்னை நகரத்துக்கு வெளியே துரத்த, பனியில் என்னைப் புதைக்க அல்லது என் உடல்

முழுவதும் தாரைப் பூச அல்லது ஏதாவது... ஒரு எண்ணம் திடீரென்று அவர் மூளையில் உதித்தால்?... இல்லை. ஒரு சக தோழனிடம் அப்படி நடந்து கொள்ள மாட்டார்'' என்று அவர் தனக்குத் தானே ஆறுதல் கூறிக்கொண்டார்.

''ஸாஷா! பிளூஹருக்கு உணவு கொடு!'' என்று உத்தரவிட்டார் கோமகன்.

ஒரு டம்ளர் வோட்காவைக் குடித்து அநேகமாக மயக்கத்தில் ஆழ்ந்திருந்த ஸாஷா உள்ளே வந்தான்.

''பொறுக்க முடியவில்லையோ! அதற்குள் குடித்து விட்டாயா? போக்கிரி!.. பிளூஹருக்கு உணவு கொடு!''

''உணவில்லாவிட்டால் அது செத்துப் போய் விட மாட்டாது. எவ்வளவு வழுவழுப்பாக இருக்கிறன் பாருங்கள்!'' என்று நாயைத் தடவிக் கொடுத்தபடியே பதிலளித்தான் ஸாஷா.

''உஸ்! திருப்பிப் பேச வேண்டாம்! அதுக்கு உணவு கொடு.''

''உங்கள் கவலையெல்லாம் நாயைப் பற்றித் தான். உங்கள் வேலைக்காரன் ஒரு டம்ளர் வோட்கா சாப்பிட்டால் கூட அவனைத் திட்டுகிறீர்கள்.''

''உன்னை உதைப்பேன்!'' என்று கோமகன் கத்தினர். அந்தச் சத்தத்தில் சன்னல் கண்ணாடிகள் கடகடத்ததோடு குதிரைப் படை அதிகாரிக்கும் லேசாகப் பயமேற்பட்டது.

''உங்கள் ஸாஷாவை இன்றைக்கு ஏதாவது சாப்பிட்டாயா என்று கேட்கிறீர்களா? ஒரு

மனிதனைக் காட்டிலும் நாயைப் பற்றியே அதிகமாக நினைப்பதாக இருந்தால் என்னை அடியுங்கள்'' என்றான் ஸாஷா. ஆனால் அவன் இப்படிப் பேசிக்கொண்டிருக்கும் நேரத்தில் அவன் மூக்கில் பலமான அடி விழுந்தது. அவன் கீழே விழுந்தான். தலை பக்கத்திலிருந்த சுவரில் மோதியது. அடுத்த வினாடியே மூக்கின் மீது கையைப் பொத்திக் கொண்டு துள்ளிக் குதித்தான். கதவைத் திறந்து கொண்டு வெளியே ஓடி அங்கே நடைபாதையில் கிடந்த டிரங்குப் பெட்டி மீது பொத்தென்று விழுந்தான்.

''அவர் என் பல்லை உடைத்து விட்டார்'' என்று அவன் ஒரு கையால் இரத்தம் கொட்டிக் கொண்டிருந்த மூக்கைத் துடைத்துக் கொண்டு மறு கையால் பிளூஹரின் முதுகைச் சொரிந்து கொண்டு அழுதான். அந்த நாய் தன் உடலை நாக்கால் தடவிக் கொண்டிருந்தது. ''அவர் என் பற்களையெல்லாம் உடைத்து விட்டார், பிளூஹர்! அதனாலென்ன? அவர் என் கோமகன். நான் அவருக்காக நெருப்பில் குதிப்பேன், வெள்ளத்தில் மூழ்குவேன். இது உண்மை. ஏனென்றால் அவர் என்னுடைய கோமகன். பிளூஹர்! உனக்குப் பசிக்கிறதா?''

அங்கே சில நிமிடங்கள் படுத்திருந்த பிறகு அவன் எழுந்து நாய்க்கு உணவு கொடுத்தான். பிறகு அநேகமாக நிதானமடைந்து கோமகனுக்கு உதவி செய்வதற்கும் தேநீர் கொடுப்பதற்கும் சென்றான்.

அங்கே கோமகன் குதிரைப் படை அதி

காரியின் படுக்கையில், காலைத் தூக்கிக் கட்டில் கம்பின் மீது வைத்துக் கொண்டு படுத்திருந் தார். ''என்னை அவமதிக்க விரும்புகிறீர்களா? நானும் பழைய படைவீரன், தோழன்தான். நீங்கள் வேருெருவரிடமிருந்து கடன் வாங்கு வதற்குப் பதிலாக நானே மகிழ்ச்சியோடு உங்களுக்கு இருநூறு ரூபிள்கள் கொடுப் பேன். என்னிடம் இந்த நேரத்தில் அவ்வளவு பணம் இல்லை. நூறு ரூபிள் மட்டும்தான் இருக்கிறது. மீதிப் பணத்தை இன்றைக்கே நான் ஏற்பாடு செய்கிறேன். கோமகன் அவர் களே! நீங்கள் வாங்கிக் கொள்ளாவிட்டால் என்னை அவமதிக்கிறீர்கள் என்று கருதுவேன்.''

''நன்றி, கிழவனே'' என்று கோமகன் அந்த அதிகாரியின் முதுகில் அன்போடு தட்டிக் கொண்டு கூறினுர். தங்கள் இருவருக்கிடையி லும் இனி நிச்சயமாக ஏற்படப் போகும் உறவு களை அவர் அப்பொழுதே புரிந்து கொண்டார். ''நன்றி. அப்படியாஞல் நாம் நடன விருந் துக்குப் போகலாம். ஆஞல் இப்பொழுது நேரத் தைப் போக்க என்ன செய்யலாம்? இந்த நகரத் தில் என்ன இருக்கிறதென்று சொல். இங்கே அழகான பெண்கள் இருக்கிருர்களா? பெண் பித்தர்கள், சீட்டாடுபவர்கள் இருக்கிருர் களா?''

''நடன விருந்துக்கு அழகான பெண்கள் அதிகமாக வருவார்கள், புதிதாகப் பதவியேற்றி ருக்கும் போலீஸ் காப்டன் கொல்கோவ்தான் ஊரிலேயே மிகப் பெரிய பெண்பித்தன், ஆஞல் அவன் ஒரு மாதிரி நல்லவனே தவிர

ஹுஸ்ஸார்களைப் போல எந்த விளைவைப் பற்றியும் கவலையில்லாமல் ஈடுபடக் கூடியவன் அல்ல; தேர்தல்கள் தொடங்கிய காலத்திலி ருந்தே இல்யூஷ்காவின் ஜிப்சி குழுவினர் இசை விருந்தளித்துக் கொண்டிருக்கிறார்கள். ஸ்தேஷ்கா தான் பாடகி, நடன விருந்து முடி வடைந்த பிறகு ஜிப்சிகளின் இசை விருந்துக்குப் போக வேண்டும் என்று எல்லோரும் திட்டம் போட்டிருக்கிறார்கள்'' என்று குதிரைப் படை அதிகாரி கூறினார்.

''சீட்டாட்டம் நிறைய இருக்கிறது. நகரத் துக்கு வந்திருக்கும் லுஹ்னோவ் என்ற பணக் காரன் எந்த நேரத்திலும் சீட்டாடிக் கொண் டேயிருக்கிறான். எட்டாம் அறையில் இருக் கிறானே உஹ்லான் படைப் பிரிவின் அதிகாரி யான இலியீன்—அவன் அதிகமான பணத்தை இழந்து விட்டான். அவர்கள் ஏற்கெனவே விளையாடத் தொடங்கி விட்டார்கள். ஒவ்வொரு நாள் மாலையிலும் விளையாடுகிறார்கள். கோ மகனே! அந்த இலியீன் எவ்வளவு நல்லவன் என்பதை நீங்கள் நம்பக் கூட மாட்டீர்கள். அற்பத்தனம் என்பது சிறிதுமில்லை. ஏன்? அவன் அணிந்திருக்கும் சட்டையைக் கூட உங்க ளிடம் கழட்டிக் கொடுத்து விடுவான்.''

''அப்படியா? அவனைப் பார்க்கப் போவோம். இங்கே யாரெல்லாம் இருக்கிறார்கள் என்பதை நாம் பார்க்க வேண்டும்'' என்றார் கோமகன்.

''போவோம். போவோம்! உங்களைச் சந்திப் பதில் அவர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவார் கள்.''

# 2

உஹ்லான் படைப்பிரிவின் அதிகாரியான இலியீன் அப்பொழுதுதான் தூக்கம் முடிந்து எழுந்திருந்தார். முந்திய இரவில் அவர் சீட்டாட்ட மேசைக்கு முன்னுல் எட்டு மணிக்கு உட்கார்ந்தார். மறு நாள் காலே பதிெைரு மணி வரை தொடர்ச்சியாகப் பதினேந்து மணி நேரம் சீட்டாடினுர். அவர் பெரிய தொகையைச் சீட்டாட்டத்தில் இழந்து விட்டார், ஆனுல் சரியாக எவ்வளவு பணத்தை இழந்தார் என்பதை அவரால் கூடச் சொல்ல முடியாது. ஏனென்ருல் அவரிடம் சொந்தப் பணம் மூவாயிரமும் இராணுவக் கருவூலத்தைச் சேர்ந்த பணம் பதினேயாயிரமும் இருந்தது. அவர் முன்பே இராணுவப் பணத்தைத் தன் பணத்தோடு சேர்த்து விட்டார். சீட்டாட்டத்தில் கருவூலப் பணத்தையும் இழந்து விட்டோம் என்ற பயம் நிரூபிக்கப் பட்டுவிடக் கூடாது என்பதற்காகப் பணத்தைக் கணக்கிடுவதற்கே அவர் பயந்தார். நண்பகல் நேரத்தில் அவர் ஆழமான, கனவுகளால் பாதிக்கப் படாத தூக்கத்திலிருந்தார். அம்மாதிரியான உறக்கம் இளேஞர்களுக்கு, அதுவும் சீட்டாட்டத்தில் அதிகமான பணத்தை இழந்த சமயங்களில்தான் வரக் கூடியது. மாலே ஆறு மணிக்கு, துர்பீன் கோமகன் அந்த விடுதிக்கு வந்த அதே நேரத்தில் அவர் விழித்துக் கொண்டார். தரையில் சிதறிக் கிடந்த சீட்டுக்களேயும் சாக்குக் கட்டிகளேயும் அறையின்

மத்தியிலிருந்த கறை படிந்த மேசைகளை யும் பார்த்தபொழுது அவர் முந்திய இரவில் நடைபெற்ற சீட்டாட்டத்தை அதிலும் குறிப் பாக அந்தக் கடைசிச் சீட்டில் — ஒரு ஜாக்கி — ஐநூறு ரூபிள் தோற்றதை நினைத்தபொ ழுது அவர் உடல் நடுங்கியது. ஆனால் தன் னுடைய உண்மையான நிலைமையைப் புரிந்து கொள்ள விரும்பாதபடியால் தலையணைக்குக் கீழே வைத்திருந்த பணத்தை வெளியே எடுத்து எண்ணத் தொடங்கினார். சீட்டாட்டத்தின் போது ஒருவரிடமிருந்து மற்றவருக்குக் கை மாறிய சில நோட்டுகளை அவர் அடையாளம் கண்டு கொண்டார். அதற்குப் பிறகு மொத்த சீட்டாட்டமுமே அவர் நினைவுக்கு வந்தது. அவருடைய மூவாயிரத்தை இழந்ததோடு மட்டுமல்லாமல் இராணுவப் பணம் இரண்டா யிரத்து ஐந்நூறையும் இழந்து விட்டார்.

அந்த உஹ்லான் நான்கு இரவுகளாகத் தொடர்ந்து விளையாடிக் கொண்டிருக்கிறார்.

அவர் மாஸ்கோவிலிருந்து வந்தவர். அங்கே இராணுவப் பணம் அவரிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது. கே... நகரத்தில் அஞ்சல் நிலைய மேலாளர் மாற்றுக் குதிரைகள் இல்லை என்ற சாக்கைச் சொல்லி அவரை நிறுத்தி வைத்தார். ஆனால் உண்மையில் எல்லாப் பிரயாணிகளையும் அந்த நகரத்தில் ஒரு இரவு தங்கவைப்பது விடுதி உடைமையாளருக்கும் அவருக்குமிடையே உள்ள இரகசிய ஒப்பந்த மாகும். அந்த உஹ்லான் உற்சாகம் நிறைந்த

இளைஞர். அவரை இராணுவத்தில் நியமித் ததைக் கொண்டாடுவதற்காக அவருடைய பெற்றோர்கள் அப்பொழுது தான் அவருக்கு மூவாயிரம் ரூபிள்கள் அன்பளிப்பாகக் கொடுத் திருந்தார்கள். எனவே கே... நகரத்தில் தேர்தல் கொண்டாட்டத்தின் போது சில நாட்கள் தங்கியிருப்பதைப் பற்றி அவருக்கு மகிழ்ச்சியே. ஏனென்றால் அங்கே தான் நன் றாக அனுபவிக்க முடியும் என்று அவர் நம் பினார். அந்த வட்டாரத்தில் அவருக்கு அறி முகமான நாட்டுப் புற கனவான்—குடும்பம் உள்ளவர்—வசித்து வந்தார். அவரைப் பார்ப் பதற்கும் அவருடைய பெண்களோடு காதல் மொழி பேசுவதற்கும் அவர் புறப்படத் தயாரான பொழுது குதிரைப்படை அதிகாரி அங்கே வந்து தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். அன்று மாலையிலேயே அவர்— எந்தக் கெட்ட எண்ணமும் இல்லாமல்—தன் னுடைய நண்பர் லுஹ்னோவையும் பொது அறையில் சீட்டாடுகின்ற வேறு சிலரையும் அவருக்கு அறிமுகம் செய்துவைத்தார். அந்த உஹ்லான் அப்பொழுது முதல் சீட்டாட்ட மேசைக்கு முன்னாலேயே உட்கார்ந்துவிட்டார். தன்னுடைய நண்பரான, நாட்டுப்புற கன வானைப் பற்றி மட்டுமல்லாமல், எல்லாவற்றை யுமே மறந்துவிட்டார். பிரயாணத்துக்குக் குதி ரைகள் வேண்டும் என்று கேட்டதைக் கூட மறந்துவிட்டார். உண்மை என்னவென்றால் அவர் தொடர்ச்சியாக நான்கு நாட்களாக அறையை விட்டே வெளிவரவில்லை.

அவர் உடையணிந்து சிற்றுண்டி அருந்திய பிறகு சன்னல் வழியாகப் பார்த்தார். சிறிது நேரம் உலாவச் சென்றால் சீட்டாட்டத்தைப் பற்றிய பிடிவாதமான சிந்தனைகளை மூளையை விட்டு விரட்டுவதற்கு உதவியாக இருக்கும் என்று நினைத்தார். அவர் கம்பளிக் கோட்டை அணிந்து கொண்டு வெளியே சென்றார். சிவப்புக் கூரைகளைக் கொண்ட வெள்ளை நிற வீடு களுக்குப் பின்னால் கதிரவன் முன்பே மறைந்து விட்டான். எங்கும் அந்திப் பொழுது வந்து விட்டது. காற்று சூடாக இருந்தது. அழுக்கு நிறைந்த தெருக்களின் மீது ஈரப்பனி மென் மையாக விழுந்துகொண்டிருந்தது. பொழுது மறைந்து கொண்டிருக்கிறது, அந்த நாளை உறக்கத்தில் கழித்துவிட்டோமே என்ற ஆழ மான வருத்தம் அவர் மனதில் நிறைந்திருந் தது.

''இந்த நாள் இனி திரும்பி வரப் போவ தில்லை'' என்று நினைத்தார்.

''நான் என்னுடைய இளமையை வீணாக்கி விட்டேனே'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார். அவர் இளமையை வீணாக்கிவிட்ட தாக உண்மையிலேயே நினைத்ததால் அப் படிச் சொல்லவில்லை. அதைப் பற்றி மெய் யாகவே அவரிடம் எம்மாதிரியான எண்ணமும் கிடையாது. அந்தச் சொற்றொடர் திடீரென்று நினைவுக்கு வந்ததால் அப்படிச் சொன்னார்.

''இப்பொழுது நான் என்ன செய்யலாம்? யாரிடமாவது கடன் வாங்கிக் கொண்டு புறப் பட்டுவிடலாமா?'' என்று அவர் சிந்தித்தார்.

ஒரு இளம் பெண் நடைபாதையில் அவரைக் கடந்து சென்ருள். ''எவ்வளவு அசட்டுத்தன மான தோற்றம்'' என்று ஏதோ விசித்திர மான காரணத்துக்காக நினைத்தார். ''எனக்குக் கடன் கொடுக்கக் கூடியவர்கள் ஒருவரும் இல்லையே. என் இளமையை வீணுக்கிவிட் டேனே''. அங்கே வரிசையாக இருந்த கடை களின் வழியாகச் சென்ருர். ஒரு வியாபாரி நரித் தோலில் தைக்கப்பட்ட கோட்டை அணிந்து கடைக்கு முன்னுல் நின்றுகொண்டு வாடிக்கைக்காரர்களை வாருங்கள் என்று கூப் பிட்டுக் கொண்டிருந்தார். ''அந்த எட்டாம் சீட்டை வீணுக்கியிராவிட்டால் என்னுடைய நஷ்டங்களை ஈடு செய்திருப்பேன்.'' ஒரு வயோதிகப் பிச்சைக்காரி அழுதுகொண்டே அவருக்குப் பின்னுல் வந்துகொண்டிருந்தாள். ''எனக்குக் கடன் கொடுக்கக் கூடியவர்கள் ஒருவருமில்லையே''. கரடித் தோல் கோட்டை அணிந்த ஒருவர் வண்டியில் அவரைக் கடந்து சென்ருர். ஒரு காவலன் அங்கே காவல் காத்துக் கொண்டு நின்ருன். ''ஒரு பரபரப்பை ஏற் படுத்தக் கூடிய வகையில் நான் என்ன செய்ய லாம்? இவர்களை நோக்கிச் சுடலாமா? அது சிறிதும் சுவாரசியமில்லாதது! என்னுடைய இளமையை வீணுக்கிவிட்டேன். எவ்வளவு அழகான துணிகள் காட்சியாகத் தொங்கிக் கொண்டிருக்கின்றன. மூன்று குதிரைகள் பூட்டிய சறுக்கு வண்டியில் வேகமாகப் போனுல் எவ்வளவு நன்ருக இருக்கும். விடுதிக்குத் திரும்ப வேண்டியது தான். சீக்கிரத்தில்

லுஹ்னேவ் வருவார். மறுபடியும் சீட்டாட்டத்தைத் தொடங்க வேண்டியது தான்.'' அவர் அறைக்குச் சென்று பணத்தை மறுபடியும் எண்ணினார். இல்லை, முதல் தடவை எண்ணிய பொழுது தவருக எண்ணிவிடவில்லை. இராணுவப்பணத்தில் இரண்டாயிரத்தைந்நூறு ரூபிள்கள் குறைந்திருந்தன. ''முதல் சீட்டில் இருபத்தைந்து ரூபிள்கள் வைக்க வேண்டும், பிறகு இரண்டாவதில் ஒரு 'மூலை' வைக்க வேண்டும். பிறகு பணயத் தொகையைப் போல ஏழு மடங்கு, பிறகு பதினைந்து, முப்பது, அறுபது மடங்கு, மூவாயிரம் ரூபிள்கள் வரை வைக்க வேண்டும். பிறகு அந்தக் கடையில் பார்த்த துணிகளை வாங்கிக் கொண்டு புறப்பட்டுவிட வேண்டும். ஆனல் என்னை ஜெயிக்க விடமாட்டேன் என்கிருனே, அந்தப் போக்கிரி! என்னுடைய இளமையை வீணக்கி விட்டேன்.'' உஹ்லான் மனதில் இத்தகைய சிந்தனைகள் ஏற்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் லுஹ்னேவ் அறைக்குள் நுழைந்தார்.

''மிஹாய்லோ வசீலியெவிச்! நீங்கள் விழித்துக் கொண்டு வெகு நேரமாகிவிட்டதா?'' என்று லுஹ்னேவ் கேட்டார். அவர் தன்னுடைய ஒல்லியான மூக்கின் மேலிருந்த தங்க மூக்குக் கண்ணுடியை மெதுவாக எடுத்து அதை ஒரு சிவப்புப் பட்டுக் கைக் குட்டையில் கவனமாகத் துடைத்துக் கொண்டிருந்தார்.

''இல்லை. இப்பொழுதுதான் விழித்துக் கொண்டேன். அருமையான தூக்கம்.''

''ஒரு ஹுஸ்ஸார் சற்று முன்பு வந்திருக்கிறார். அவர் ஸவல்ஷேவ்ஸ்கியோடு தங்கியிருக்கிறார்... நீங்கள் கேள்விப் பட்டீர்களா?''

''இல்லை. எனக்குத் தெரியாது... மற்றவர்கள் எங்கே?''

''அவர்கள் பிரியாஹினைப் பார்க்கப் போயிருக்கிறார்கள். சற்று நேரத்தில் வந்துவிடுவார்கள்.''

அவர் கூறியதைப் போலவே அவர்கள் சிறிது நேரத்தில் அங்கே வந்துவிட்டார்கள். எப்பொழுதும் லுஹ்னேவுடன் வருகின்ற ஸ்தல கோட்டை அதிகாரி, பெரிய, வளைந்த மூக்கும் பழுப்பு நிறத் தோலும் ஆழமான, கறுப்பு நிறக் கண்களும் உள்ள கிரேக்க வணிகர், பருமனை, சதை மடிப்புக்கள் தொங்கும் நில உடைமையாளர் — அவர் பகலில் சாராயத் தொழிலை கவனித்துக்கொள்வார், இரவில் எப்பொழுதுமே புள்ளிக்கு அரை ரூபிள் வைத்துச் சூதாடுவார்—அங்கே வந்தனர். சீக்கிரம் விளையாட்டை ஆரம்பிக்க வேண்டும் என்று எல்லோருமே துடித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் முக்கியமான சீட்டாட்டக்காரர்கள், குறிப்பாக லுஹ்னேவ் அதைச் சிறிது கூட வெளிக்காட்டவில்லை. மாஸ்கோவில் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்துவிட்டதைப் பற்றி அவர்கள் மிகவும் அமைதியாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''இதை நினைத்துப் பாருங்கள்! மாஸ்கோ நமது மாபெரும் நகரங்களில் ஒன்று. கோட்டை

நகரம். அங்கே போக்கிரிகள் இரவு நேரங்களில் கைகளில் அரிவாள்களோடு, பேய்களைப் போல உடையணிந்து கொண்டு மூடச் சனங்களைப் பயமுறுத்துகிறார்கள், பிரயாணிகளிடம் வழிப்பறி செய்கிறார்கள். அதைப் பற்றி ஒரு நடவடிக்கையும் இல்லை. போலீஸ்காரர்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்? நான் கேட்பது அது தான்.''

மாஸ்கோவில் சட்டம் சீரழிந்து போய்விட்டதைப் பற்றி அவருடைய வர்ணனையை உஹ்லான் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்து விட்டுக் கடைசியில் எழுந்துநின்று சீட்டுக் கட்டுகளைக் கொண்டு வருமாறு உத்தரவு கொடுத்தார். அந்தப் பருமனான நிலவுடைமையாளர்தான் முதலாவதாக அவர்களுடைய விருப்பத்தை வெளிப்படுத்தினார்.

''கனவான்களே! சரி, இந்தப் பொன்னான நேரத்தை ஏன் வீணாக்க வேண்டும்! நம் வேலையைத் தொடங்கலாமே'' என்றார்.

''நீங்கள் துடிப்பது ஏன் என்று எனக்குப் புரிகிறது. நேற்றிரவு அவ்வளவு பணத்தை வீட்டுக்குக் கொண்டு போனீர்களல்லவா!'' என்றார் கிரேக்கர்.

''ஆனால் உண்மையில் நேரம் வந்துவிட்டதல்லவா?'' என்றார் கோட்டை அதிகாரி.

இலியீன் லுஹ்னோவை ஏறிட்டுப் பார்த்தார். லுஹ்னோவ் அவருடைய முகத்தை நேருக்கு நேராகப் பார்த்துவிட்டு நீண்ட நகங்களைக் கொண்ட பேய்களைப் போன்ற மாறுவேடத்

தில் திரிகின்ற போக்கிரிகளைப் பற்றி நிதானமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

''சீட்டைக் கலைத்துப் போடவா?'' என்று கேட்டார் உஹ்லான்.

''அதற்குள்ளாகவா?''

''பெலோவ்!'' என்று உஹ்லான் கூப்பிட்டார். என்ன காரணத்தாலோ அவர் முகத்தில் சிவப்பேறியது. ''நான் சாப்பிட எதையாவது கொண்டுவா... கனவான்களே... நான் இன்னும் ஒரு ரொட்டித் துண்டைக் கூடக் கடிக்கவில்லை. ஷாம்பேன் கொண்டுவா. சீட்டுக் கட்டுகளை எடுத்துப் போடு'' என்ருர்.

அந்த நேரத்தில் கோமகனும் ஸவல்ஷேவ்ஸ்கியும் அறைக்குள் நுழைந்தார்கள். துர்பீனும் இலியீனும் ஒரே பிரிவைச் சேர்ந்தவர்கள் என்பது தெரியவந்தது. அவர்கள் சீக்கிரத்தில் நண்பர்களானுர்கள். ஒருவருக்கொருவர் வாழ்த்துக் கூறி ஷாம்பேன் மதுவைக் குடித்தார்கள். ஐந்தே நிமிடங்களில் ஆருயிர் நண்பர்களைப் போலப் பேசிக்கொண்டிருந்தார்கள். கோமகனுக்கு இலியீனை மிகவும் பிடித்துவிட்டது. அவரைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே இவ்வளவு இளமையாக இருக்கிருயே என்று கேலி செய்தார்.

''சரியான உஹ்லான்தான்! அருமையான மீசை! பயமுறுத்தக் கூடிய மீசை!'' என்ருர் கோமகன்.

இலியீனின் மேலுதட்டில் அரும்பியிருந்த மீசை முற்றிலும் வெள்ளை நிறத்தில் இருந்தது.

''சீட்டாடப் போகிருயா?'' என்று கேட்டார் கோமகன். ''சரி. இலியீன்! நீ வெற்றி பெறுவாய் என்று நம்புகிறேன். நீ முதல் தரமாக விளையாடக் கூடியவன் தானே?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

''நாங்கள் தயாராகிக் கொண்டிருக்கிருேம்'' என்று லுஹ்ஞேவ் சீட்டுக் கட்டைப் பிரித்தவாறு கூறிஞர். ''கோமகன் அவர்களே! நீங்களும் விளையாடலாமே?'' என்ருர்.

''இல்லை. இன்று மாலையில் நான் விளையாடப் போவதில்லை. நான் விளையாடிஞல் உங்கள் எல்லோரையும் அப்படியே சுத்தமாகத் துடைத்துவிடுவேன். நான் விளையாடிஞல் எந்த பாங்குமே வாயைப் பிளந்து விடும்! ஆஞல் இப்பொழுது விளையாட என்னிடம் எதுவுமே இல்லை. வோலசேக்குக்குப் பக்கத்திலுள்ள அஞ்சல் நிலையத்தில் எல்லாவற்றையும் இழந்துவிட்டேன். பீரங்கிப் படையைச் சேர்ந்த ஒருவன்—அவன் எல்லா விரல்களிலும் மோதிரங்கள் அணிந்து கொண்டிருந்தான் — என்னை சுத்தமாகத் துடைத்துவிட்டான். அவன் என்னை ஏமாற்றியிருக்க வேண்டும்.''

''அந்த அஞ்சல் நிலையத்தில் ஏன் அதிக நேரம் தங்கினீர்கள்?'' என்று இலியீன் கேட்டார்.

''இருபத்திரண்டு மணி நேரம். அந்தப் பாழாய்ப்போன அஞ்சல் நிலையத்தை நான் ஒருபோதும் மறக்க மாட்டேன்! அந்த அதிகாரியும் என்னை ஒருபோதும் மறக்க மாட்டான்.''

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?''

''நான் வண்டியில் போய் இறங்குகிறேன். அந்த அஞ்சல் நிலைய அதிகாரி தன்னுடைய கபடமான, அவலட்சணம் பிடித்த முகரையோடு துள்ளிக் குதித்துக் கொண்டு வருகிறான். 'குதிரைகள் இல்லை' என்கிறான். நான் ஒரு விதியைக் கடைப்பிடித்துவருகிறேன் என்பதை உங்களிடம் சொல்ல வேண்டும். குதிரைகள் இல்லை என்று சொல்லும் பொழுதெல்லாம் நான் கோட்டைக் கழற்றாமல் நேராக அந்த அதிகாரியின் வீட்டுக்குள் — பொதுப் பகுதிக்குள் அல்ல, அவனுடைய தனிப் பகுதிக்குள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் — நுழைந்து அந்த இடம் முழுவதும் அடுப்புப் புகை நிறைந்திருப்பதைப் போல எல்லாக் கதவுகளையும் சன்னல்களையும் திறக்குமாறு உத்தரவிடுவேன். இந்த உதாரணத்தின் போதும் அதையே செய்தேன். குளிர்! போன மாதத்தில் எப்படிப் பனி விழுந்தது என்பதை நினைத்துக் கொள். இருபது டிகிரி கீழே போய்விட்டது. அஞ்சல் நிலைய அதிகாரி என்னிடம் வாதாட முயற்சி செய்தான். அவன் மூக்கில் ஓங்கிக் குத்தினேன். ஒரு கிழவியும் சில சிறுக்கிகளும் பெண்களும் கத்திக்கொண்டே பானைகளை எடுத்துக் கொண்டார்கள். கிராமத்தை நோக்கி ஓடுவதற்குத் தயாரானார்கள்... நான் அவர்களுடைய வழியை மறைத்துக் கொண்டு 'குதிரைகளைக் கொண்டு வா, நான் போய்விடுகிறேன். இல்லாவிட்டால் நீங்கள் விறைத்துச்

சாக வேண்டியதுதான். ஒரு நபரைக் கூட வெளியே விட மாட்டேன்' என்று பலத்த குரலில் கூறினேன்.''

''குளிர்காற்றைத் திறந்துவிட்டுக் குளவிகளை விரட்டுவதைப் போல அப்படித்தான் அவர்களை நடத்த வேண்டும்!'' என்று சதை மடிப்புள்ள நிலவுடைமையாளர் கடகடவென்று சிரித்துக் கொண்டே கூறினார்.

''ஆனால் நான் அவர்களைக் கண்காணிக்கவில்லை — எங்கோ போய்விட்டேன் — அஞ்சல் நிலைய அதிகாரியும் அவனுடைய பெண்களும் தப்பி ஓடிவிட்டார்கள். அடுப்புக்கு மேலேயிருந்த பரணில் படுத்துக்கிடந்த கிழவிதான் ஒரே பணயக் கைதியாக மிஞ்சினாள். அவள் தும்மிக்கொண்டே தோத்திரங்களைச் சொல்லிக் கொண்டிருந்தாள். அதற்குப் பிறகு நாங்கள் பேச்சுவார்த்தைகளை ஆரம்பித்தோம். அஞ்சல்நிலைய அதிகாரி திரும்பி வந்து அந்தக் கிழவியை விட்டு விடுங்கள் என்று தூரத்தில் நின்று கொண்டே கெஞ்சினான். நான் பிளுஹரை அவன் மீது ஏவிவிட்டேன். பிளுஹர் அஞ்சல்நிலைய அதிகாரிகளை நன்றாக மோப்பம் பிடிக்கும். ஆனால் இதற்குப் பிறகும் அந்தப் போக்கிரி மறுநாள் காலை வரை எனக்குக் குதிரைகள் கொண்டு வரவில்லை. அதனால்தான் அந்தப் பாழாய்ப் போன பீரங்கிப் படை அதிகாரியைத் தெரிந்து கொண்டேன். நான் அடுத்த அறைக்குப் போய் அவனோடு சீட்டாடத் தொடங்கினேன். நீங்கள் பிளுஹரைப்

பார்த்திருக்கிறீர்களா?... பிளூஹர்! இங்கே வா.''

பிளூஹர் ஓடிவந்தது. சீட்டாட்டக்காரர்கள் கருணை காட்டுவதைப் போல அதைப் பார்த்தார்கள். ஆனால் வேறு காரியத்தில் ஈடுபட அவர்கள் துடித்துக் கொண்டிருப்பது தெளிவாகத் தெரிந்தது.

''கனவான்களே! நீங்கள் ஏன் விளையாடாமலிருக்கிறீர்கள்? எனக்காக சீட்டாட்டத்தை நிறுத்த வேண்டாம். நான் விடாமல் பேசிக் கொண்டிருப்பவன். **காதலி-காதலிக்காதே—** அது நல்ல விளையாட்டல்லவா?'' என்றார் துர்பீன்.

## 3

லுஹ்ரேவ் இரண்டு மெழுகுவர்த்தி விளக்குகளைத் தள்ளி வைத்துவிட்டு பழுப்பு நிறத்தில் ஒரு பெரிய பர்சை வெளியே எடுத்தார். அது நிறையப் பணம் இருந்தது. ஏதோ ஒரு மதச் சடங்கை நிறைவேற்றுவதைப் போல மிகவும் மெதுவாக அதிலிருந்து இரண்டு நூறு ரூபிள் நோட்டுக்களை எடுத்து சீட்டுக்களின் அடியில் வைத்தார்.

''மேசைப்பணம் இருநூறு ரூபிள், நேற்று மாதிரியேதான்'' என்று சொல்லிவிட்டு மூக்குக் கண்ணாடியை நேராக இருக்கும்படி சரிப்படுத்திக் கொண்டு ஒரு புதிய சீட்டுக் கட்டை எடுத்துப் பிரித்தார்.

''சரி'', இலியீன் அவரைப் பார்க்காமலே துர்பீனேடு தன்னுடைய உரையாடலைத் தொடர்ந்தபடியே பதிலளித்தார்.

சீட்டாட்டம் தொடங்கியது. லுஹ்னேவ் இயந்திரத்தைப் போன்ற துல்லியத்தோடு விளையாடினர். அவசரப்படாமல் ஏதாவதொரு விஷயத்தைச் சொல்வதற்கு அல்லது கண்ணுடியைக் கழற்றி கடுமையாகப் பார்த்து விட்டு ''உங்கள் ஆட்டம்'' என்று பலவீனமான குரலில் சொல்வதற்கு மட்டும் அவ்வப்பொழுது விளையாடுவதை நிறுத்திஞர். பருமனை நிலவுடைமையாளர் உரத்த குரலில் கணக்குப் போட்டுக் கொண்டு மூலைகளை மடக்கும்பொழுது மொத்தையான விரல்களால் சீட்டுக்கட்டுகளை அழுக்குப்படுத்தி மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாகச் சத்தம் போட்டுக் கொண்டிருந்தார். கோட்டை அதிகாரி தான் வெற்றியடைந்த புள்ளிகளை அழகான கையெழுத்தில் குறித்துக் கொண்டார். தன் சீட்டுக் கட்டுகளின் முனைகளை மிகவும் லேசாக மேசையின் கீழ் மறைத்துக் கொண்டார். மேசைப் பணத்தை வைத்துக் கொண்டிருந்த லுஹ்னேவுக்குப் பக்கத்தில் கிரேக்கர் உட்கார்ந்திருந்தார். அவருடைய ஆழமான, கறுப்பு நிறக் கண்கள் ஏதோ ஒன்று நடைபெறப் போகிறதென்று எதிர்பார்த்துக் காத்திருப்பதைப் போல வலிந்து விளையாட்டை கவனித்துக் கொண்டிருந்தன. மேசைக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஸவல்ஷேவ்ஸ்கி திடீரென்று சுறுசுறுப்பாகக் காட்சியளித்தார்.

அவர் தன் பையிலிருந்து சிவப்பு அல்லது நீல நிறத்தில் ஒரு நோட்டை எடுத்தார். அதன் மீது ஒரு சீட்டை வைத்துத் தன் கையால் மூடிக் கொண்டு ''ஏழு விழப் போகிறது'' என்று அதிர்ஷ்டக் குரல் கொடுப்பார், மீசையைக் கடிப்பார், ஒரு காலை மாற்றி அடுத்த காலில் நிற்பார். அவர் முகம் சிவப்படையும், உடல் முழுவதும் துடிக்கும். சீட்டு அவருக்கு விழுகின்ற வரை அவர் உடல் துடித்துக் கொண்டேயிருக்கும். இலியீனுக்குப் பக்கத்திலிருந்த குதிரைமுடி சோபாவில் ஒரு தட்டு வைக்கப்பட்டிருந்தது. அவர் அதிலிருந்து கன்றி றைச்சி மற்றும் வெள்ளரித் துண்டுகளைச் சாப்பிட்டு தன்னுடைய விரல்களை அவசரமாகத் தன்னுடைய கோட்டின் மீது துடைத்துக் கொண்டு ஒவ்வொரு சீட்டாக விளையாடிக் கொண்டிருந்தார். சீட்டாட்டம் தொடங்கியதிலிருந்து சோபாவின் மீது உட்கார்ந்திருந்த துர்பீன் அங்கே என்ன நடக்கிறதென்பதை உடனே புரிந்து கொண்டார். லுஹ்ஞேவ் அந்த உஹ்லானை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை. அவரோடு ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. தன்னுடைய மூக்குக்கண்ணாடியின் வழியாக அவர் கைகளை அவ்வப்பொழுது பார்த்துக் கொள்வார். உஹ்லான் கையில் வைத்திருந்த சீட்டுகளில் பெரும்பான்மையானவை தோல்வியைத் தருபவையே.

புள்ளிக்கு அரை ரூபிள் பந்தயப் பணத்துக்கு விளையாடிய பருமனான நிலவுடைமையாளர் ஒரு சீட்டைப் போட்டார்.

''இந்தச் சீட்டை நான் வெட்டட்டுமா?'' என்றார் லுஹ்னேவ்.

''நீங்கள் இலியீனுடைய சீட்டுக்களை வெட்டுங்கள். என்னுடைய சீட்டை எதற்காக வெட்ட வேண்டும்?'' என்றார் நிலவுடைமையாளர்.

அவர் சொன்னது உண்மைதான். இலியீன் போட்ட சீட்டுக்கள் வெட்டப்பட்டதைப் போல வேறு யாருடைய சீட்டுகளும் வெட்டப்படவில்லை. ஒவ்வொரு தடவை தோற்கும் பொழுதும் இலியீன் அந்தச் சீட்டை மேசைக்குக் கீழ் நடுங்கும் கைகளால் கிழித்துப் போட்டுவிட்டு இன்னொரு சீட்டை எடுப்பார். துர்பீன் சோபாவிலிருந்து எழுந்தார். மேசைப் பணத்தை வைத்திருக்கும் ஆட்டக்காரருக்குப் பக்கத்தில் தான் உட்கார அனுமதிக்குமாறு அந்த கிரேக்கரைக் கேட்டுக் கொண்டார். கிரேக்கர் இடம் மாறி உட்கார்ந்தார். கோமகன் அவருடைய நாற்காலியில் உட்கார்ந்து லுஹ்னேவின் கைகளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''இலியீன்!'' என்று அவர் திடீரென்று கூப்பிட்டார். அவர் தனக்கு வழக்கமான குரலில் பேசியபோதிலும் அது மற்ற எல்லாச் சத்தங்களையும் அமுக்கிவிட்டது. ''அந்தச் சீட்டு அதிர்ஷ்டத்தைக் கொடுக்கும் என்று எப்படி நினைக்கிறாய்? உனக்கு விளையாடத் தெரியவில்லை!'' என்றார்.

''நான் எப்படி விளையாடினாலும் முடிவு ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது.''

''அப்படி நினைத்தால் நீ தோல்வியடைவது நிச்சயம். இங்கே என்னிடம் கொடு. நான் விளையாடுகிறேன்.''

''இல்லை. மன்னியுங்கள். எனக்காக யாரையும் விளையாட நான் அனுமதிப்பதில்லை. உங்களுக்கு விருப்பமாக இருந்தால் விளையாட்டில் சேர்ந்து கொள்ளலாமே.''

''எனக்கு விருப்பமில்லை என்று உன்னிடம் சொன்னேனே. உனக்கு உதவி செய்வதற்காகவே விளையாடுகிறேன் என்று சொல்கிறேன். நீ இப்படித் தோற்பதைப் பார்க்க எனக்கு வருத்தமாக இருக்கிறது.''

''அது என் விதி என்று தோன்றுகிறது!''

கோமகன் மேலே எதுவும் பேசவில்லை. அவர் முழங்கைகளை மேசைமேல் வைத்துக் கொண்டார். மறுபடியும் லுஹ்ஞேவின் கைகளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''மிகவும் மோசம்!'' என்று அவர் திடீரென்று உரத்த குரலில் இழுத்துச் சொன்னார்.

லுஹ்ஞேவ் கோமகனைப் பார்த்தார்.

''ரொம்ப, ரொம்ப மோசம்!'' என்று லுஹ்ஞேவின் கண்களை உற்றுப் பார்த்துக் கொண்டு கோமகன் மறுபடியும் பலமாகச் சொன்னார்.

அவர்கள் தொடர்ந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

இலியீன் சீட்டுகளில் மற்றொன்றை லுஹ்ஞேவ் வெட்டியபொழுது ''கீழ்த்தரமான காரியம்!'' என்றார் துர்பீன்.

''கோமகன் அவர்களே! நீங்கள் எதைப் பற்றி அதிருப்தியடைகிறீர்கள்?'' என்று லுஹ்

ஞேவ் மரியாதை கலந்த அலட்சியக் குரலில் கேட்டார்.

''நீங்கள் இலியீனுடைய சீட்டுக்களை வெட்டுவதைத்தான் சொல்கிறேன். அது தான் மோசம்.''

லுஹ்ஞேவ் தன்னுடைய தோள்களையும் புருவங்களையும் லேசாக அசைத்தார். ஒருவருடைய விதியை ஒத்துக் கொள்ளத்தானே வேண்டும் என்று அவர் சொல்வதைப் போலத் தோன்றியது. அவர் தொடர்ந்து விளையாடிக் கொண்டிருந்தார்.

''பிளுஹர்! இங்கே வா!'' என்று கோமகன் எழுந்து நின்று நாயைக் கூப்பிட்டார். ''பிளுஹர்! அவனைப் பிடி!'' என்று வேகமாகச் சொன்ஞர்.

சோபாவுக்கு அடியில் படுத்துக் கிடந்த பிளுஹர் துள்ளிக் குதித்த வேகத்தில் கோட்டை அதிகாரியை அநேகமாக இடித்துக் கீழே தள்ளி விட்டுத் தன் எசமானரை நோக்கிப் பாய்ந்தது. அவருக்குப் பக்கத்தில் போய் உறுமிக் கொண்டும் வாலை ஆட்டிக்கொண்டும் ''இங்கே சேட்டை செய்வது யார்?'' என்று கேட்பதைப் போல அந்தக் கூட்டத்தை ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டும் நின்றது.

லுஹ்ஞேவ் சீட்டுகளை மேசையில் வைத்து விட்டு நாற்காலியைப் பின்ஞல் தள்ளிஞர்.

''இப்படிப்பட்ட சூழ்நிலையில் என்ஞல் விளையாட முடியாது'' என்ருர். ''எனக்கு நாய்களைப் பிடிக்காது. நாய்ப் பட்டியிலுள்ள அத்தனை நாய்களையும் இங்கே வைத்துக் கொண்டால்

நான் எப்படி விளையாட முடியும்?'' என்ருர்.

''அதிலும் எப்படிப்பட்ட நாய்கள்—இவைகளை அட்டைகள் என்று தான் சொல்ல வேண்டும்'' என்று ஒத்துப்பாடினுர் கோட்டை அதிகாரி.

''மிஹாய்லோ வசீலியெவிச்! நாம் விளையாட்டைத் தொடரலாமா அல்லது வேண்டாமா?'' என்று லுஹ்ஞேவ் கேட்டார்.

''கோமகன் அவர்களே! தயவு செய்து குறுக்கிடாதீர்கள்!'' என்று இலியீன் துர்பீனைக் கேட்டுக் கொண்டார்.

''ஒரு விஞடி. சற்று வெளியே வா'' என்று கூறிய துர்பீன் இலியீன் கையைப் பிடித்து அவரை அறைக்கு வெளியே இழுத்துக் கொண்டு போனுர்.

அங்கே கோமகன் சொன்ன ஒவ்வொன்றும் தெளிவாக எல்லோருக்கும் கேட்டது. ஏனென்ருல் அவர் தன்னுடைய குரலைத் தணிக்காமல் பேசினுர். அதிலும் எப்பொழுதுமே அவர் குரலை மூன்று அறைகளுக்கு அப்பாலும் தெளிவாகக் கேட்க முடியும்.

''உனக்குக் கிறுக்குப் பிடித்திருக்கிறதா? மூக்குக் கண்ணுடி அணிந்திருக்கும் நபர் மோசடி செய்பவர் என்பது உனக்குத் தெரியவில்லையா?''

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''நடிக்காதே. நீ பணத்தை இழப்பதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. வேறு சந்தர்ப்பமாக இருந்தால் நானே உன் பணத்தை மகிழ்ச்சியோடு பிடுங்கியிருப்பேன். ஆனுல் இன்

றிரவில் உன்னை அவர்கள் ஏமாற்றுவதைப் பார்க்க எனக்கு வருத்தமாக இருக்கிறது. அதற்கு என்ன காரணமென்று எனக்குத் தெரிய வில்லை. உன்னிடம் அதிகமான அரசாங்கப் பணம் இருக்கிறதா?..''

''இல்லை... ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?''

''நண்பனே! இதே பாதையில் நானும் நடந் திருக்கிறேன். அதனால் இந்த மோசடிக்காரர் களின் தந்திரங்கள் எல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். மூக்குக் கண்ணாடி போட்டிருக்கும் நபர் ஒரு மோசடிக்காரன். நான் சொல் வதைக் கேள். தோழமையோடு இந்த அறி வுரையைச் சொல்கிறேன்.''

''இன்னும் ஒரு ஆட்டம் மட்டுமே விளை யாடப் போகிறேன்.''

''ஒன்று மட்டும் என்பதற்கு என்ன அர்த்தம் என்பது எனக்குத் தெரியும். சரி. நான் சொல்லி விட்டேன்.''

அவர்கள் அறைக்குள் வந்தார்கள். ஒரு விளை யாட்டில் இலியீன் அதிகமான சீட்டுக்களைப் போட்டார். அவற்றில் மிக அதிகமானவை வெட்டப்பட்டு அவர் அதிகமான நஷ்டத்துக்கு ஆளானார்.

துர்பீன் மேசையின் மேல் கைகளை விரித்து வைத்தார்.

''போதும்! ஆட்டத்தை நிறுத்திவிட்டு எழுந் திரு'' என்று கத்தினார்.

''என்னால் இப்பொழுது நிறுத்த முடியாது. தயவு செய்து என்னை விட்டு விடுங்கள்'' என்று சங்கடத்தோடு கூறிய இலியீன் துர்பீனைப்

பார்க்காமலேயே சீட்டுகளைக் கலைத்துப் போட்டார்.

''அப்படியானால் தொலைந்து போ! பணத்தை இழப்பதில் உனக்கு இவ்வளவு மகிழ்ச்சியிருந்தால் தொடர்ந்து இழந்து கொண்டேயிரு. நான் புறப்படுகிறேன். ஸவல்ஷேவ்ஸ்கி! மார்ஷலின் விருந்துக்குப் போவோம், வாருங்கள்.''

அவர்கள் வெளியே சென்றார்கள். யாரும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அவர்களுடைய காலடிகள் மற்றும் பிளூஹரின் கால் நகங்களின் சத்தம் நடைபாதையில் தேய்ந்து மறைகின்ற வரை லுஹ்னேவ் சீட்டைக் கலைத்துப் போடவில்லை.

''இப்படியும் ஒரு நபரா!'' என்று சிரித்துக் கொண்டே கூறினார் நிலவுடைமையாளர்.

''சரி. இனிமேல் அவர் நம் விளையாட்டில் குறுக்கிட மாட்டார்'' என்று அவசரமாகச் சொன்னார் கோட்டை அதிகாரி. அவர் இன்னும் குசுகுசுவென்றுதான் பேசினார்.

அவர்கள் தொடர்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தார்கள்.

## 4

மார்ஷல் வீட்டுச் சமையலறை இந்த சந்தர்ப்பத்துக்காக சாமான்கள் அகற்றப்பட்டு சுத்தமாக வைக்கப்பட்டிருந்தது. அங்கே நின்று கொண்டிருந்த பாடகர்களும் மார்ஷலின் பண்ணையடிமைகளும் முன்பே தங்களுடைய

கோட்டுகளின் கைமுனைகளை உள்ளே திருப்பி விட்டிருந்தார்கள். சமிக்கை கொடுத்ததும் ''அலெக்ஸாந்தர், யெலிஸவேதா'' என்ற பழைய காலப் பாட்டைப் பாடத் தொடங்கினார்கள். மெழுகுவர்த்தி விளக்குகளின் குளுமையான பிரகாசத்தில் அந்தப் பெரிய அறையின் மரக் கட்டை தளத்தின் மீது ஜோடிகள் அழகாக நடனமாடத் தொடங்கினார்கள். முதலில் கவர்னர் — யெக்கதிரீனாவின் அரசவை ஜெனரல் — மார்பில் நட்சத்திரப் பதக்கம் அணிந்து மார்ஷலின் ஒல்லியான மனைவியின் கையைப் பிடித்துக்கொண்டு, பிறகு மார்ஷல் கவர்னர் மனைவியின் கையைப் பிடித்துக் கொண்டு பிறகு மற்றவர்கள் எல்லோரும்— குபெர்னியாவை ஆட்சி புரியும் குடும்பங்களின் உறுப்பினர்கள் வெவ்வேறு சேர்க்கைகளோடும் இணைகளோடும். ஸவல்ஷேவ்ஸ்கி தோள்களில் செண்டுகளும் பெரிய காலரும் வைத்த நீல நிற ஃபிராக் கோட், நீண்ட குழாயும் நடன பூட்சுகளும் அணிந்து மீசை, சட்டைக்கைகள், கைக்குட்டை ஆகியவற்றில் அதிகமாக ஊற்றப் பட்டிருந்த மல்லிகை வாசனைத் தைலத்தின் நறுமணத்தைப் பரப்பிக் கொண்டு வந்தார். அவருடன் ஒரு அழகான ஹுஸ்ஸார் வந்தார். அவர் நீல நிறத்தில் உடலை ஒட்டிய குதிரைச் சவாரி உடையும் தங்க நிறத்தில் சித்திர வேலை செய்த சிவப்புக் கோட்டும் அணிந்திருந்தார். அதில் விளதீமிர் சிலுவையும் 1812ம் வருட யுத்தப் பதக்கமும் தொங்கிக் கொண்டிருந்தன. கோமகன் நடுத்தரமான உயரமுடைய

வர்தான் என்றாலும் மிகவும் வாட்டசாட்ட மான உடலமைப்புக் கொண்டவர். அவருடைய கண்கள் தெளிவான நீல நிறமும் அதிகமான பிரகாசமும் கொண்டவை. அவருடைய சிவப்புத்தவிட்டு நிறத்தில் சுருள்சுருளான முடி அவருடைய அழகுக்கு அதிகமான மெருகூட்டியது. அவர் நடன விருந்துக்கு வந்ததை மற்றவர்கள் எதிர்பார்க்கவில்லை என்று சொல்ல முடியாது. விடுதியில் அவரைச் சந்தித்த அழகான இளைஞன் அவர் நடனவிருந்தில் கலந்து கொள்ள உத்தேசிக்கிறார் என்பதை மார்ஷலிடம் தெரிவித்திருந்தான். அந்தச் செய்தி வெவ்வேறு விதத்தில் பிரதிபலிப்பை ஏற்படுத்தியபோதிலும் மொத்தத்தில் அங்கே அதிகமான உற்சாகத்தை ஏற்படுத்தவில்லை. ''அவர் நம்மைப் பற்றி ஏளனமாக நினைப்பார்'' என்று ஆண்களும் வயதான பெண்களும் நினைத்தார்கள். ''அவர் என்னைக் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டால்'' என்று பெரும்பாலான பெண்களும் யுவதிகளும் நினைத்தார்கள்.

போலிஷ் நடனம் முடிந்து நடனஜோடிகள் ஒருவருக்கொருவர் வணக்கம் செலுத்திவிட்டுப் பெண்கள் பெண்களோடும் ஆண்கள் ஆண்களோடும் சேருவதற்காகப் பிரிந்த பிறகு ஸவல்ஷேவ்ஸ்கி பெருமிதத்தோடும் மகிழ்ச்சியோடும் கோமகனை விருந்தளிக்கும் தலைவியிடம் கூட்டிச் சென்றார். கோமகன் அவ்வளவு பேருக்கு முன்னால் தன்னை அவமானப் படுத்தி விடுவாரோ என்று மார்ஷல் மனைவிக்கு உள்ளூற பயமேற்பட்டது. எனினும் அவள் தலையைத் திருப்பிப்

பெருமை கலந்த கருணையோடு ''மிகவும் மகிழ்ச்சி; எங்களோடு நடனமாடுவீர்கள் என்று நம்புகிறேன்'' என்முள். இந்த வார்த்தைகளைக் கூறிய பிறகு அவள் அவநம்பிக்கையோடு பார்த்தது ''இதற்குப் பிறகும் ஒரு சீமாட்டியை நீ அவமதித்தால் நீ ஒரு போக்கிரியே'' என்று சொல்லுவது போலத் தோன்றியது. ஆனால் கோமகன் அவளுடைய தப்பெண்ணத்தைத் தன்னுடைய கவனிப்பாலும் குதூகலத்தாலும் அழகிய தோற்றத்தாலும் சீக்கிரத்திலேயே அகற்றி விட்டார். ஐந்து நிமிடங்களில் அந்தத் தலைவியின் முகபாவம் மாறிவிட்டது. ''இவரைப் போன்ற கனவான்களை எப்படி கவனித்துக் கொள்ள வேண்டுமென்பது எனக்குத் தெரியும். யாருடன் பேசிக் கொண்டிருக்கிறேம் என்பதை அவர் உடனடியாகப் புரிந்துகொண்டார். சற்றுப் பொறுங்கள்! இன்று மாலை முழுவதும் அவர் என்னையே சுற்றிக் கொண்டிருப்பார்'' என்று சொல்வதைப் போலத் தோன்றியது. ஆனல் இந்தக் கட்டத்தில் கோமகனின் தகப்பனுரை அறிந்தவரான கவர்னர் அவரிடம் வந்து அவரோடு பேசிக்கொண்டிருப்பதற்காகக் கூட்டிச் சென்றார். இது ஸ்தல கனவான்களின் மனதில் ஏற்பட்டிருந்த அச்சத்தை மேலும் அமைதிப்படுத்தியது. அவர்களிடம் கோமகனைப் பற்றிய மதிப்பு அதிகரித்தது. சிறிது நேரத்துக்குப் பிறகு ஸவல்ஷேவ்ஸ்கி தன் சகோதரியிடம் அவரை அறிமுகப்படுத்தினர். அந்தப் பருமனை இளம் விதவை கோமகன் அந்த அறைக்

குள் நுழைந்த வினுடியிலிருந்து தன்னுடைய பெரிய, கருநிறக் கண்களால் அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். இசைக் குழு வினர் அப்பொழுது வால்ட்ஸ் இசையை வாசித்துக் கொண்டிருந்தனர். கோமகன் அவளை நடனமாடக் கூப்பிட்டார். அவருடைய நடனத் திறமையைப் பார்த்த பிறகு அவரைப் பற்றி ஏற்பட்டிருந்த தப்பெண்ணங்களின் கடைசிச் சுவடுகளும் மறைந்துவிட்டன.

ஒரு நாட்டுப்புறக் கனவானின் பருமனுன மனைவி, நீல நிறத்தில் குதிரைச் சவாரி உடையணிந்த அந்தக் கால்கள் அறையைச் சுற்றி அழகாகச் சுழல்வதைப் பார்த்துக் கொண்டிருந்த பிறகு ''அவர் அற்புதமாக நடனமாடுகிருர்!'' என்று சொல்லிவிட்டு, ''ஒன்று, இரண்டு, மூன்று; ஒன்று, இரண்டு, மூன்று... —அற்புதம்'' என்று மனதில் எண்ணிக் கொண்டிருந்தாள்.

''என்ன அழகாகக் குதிக்கிருர்! என்ன அழகாகக் குதிக்கிருர்!'' என்று ஆச்சரியப்பட்டாள் இன்னொரு பெண். அவள் வெளியூரிலிருந்து வந்தவள். அவள் நாசூக்கில்லாதவள் என்று ஸ்தல வட்டாரங்கள் கருதின. ''தன்னுடைய குதிமுள்ளால் யாரையும் தட்டிவிடாமலிருக்கிருரே? அது எப்படி? அற்புதம்! எவ்வளவு வேகம்!'' என்ருள்.

அந்த நகரத்தின் மூன்று சிறந்த நடனக்காரர்களைக் கோமகன் நடனத்தில் மிஞ்சி விட்டார்: கவர்னரின் உதவியாளர் (aide-de-camp) சணற்காட்டைப் போன்ற தலையுடன் நடன

ஜோடியை நெருக்கமாக அணைத்துக் கொண்டு வேகமாக நடனமாடிப் பிரபலமடைந்தவர். அடுத்து ஒரு குதிரைப்படை அதிகாரி. வால்ட்ஸ் நடனத்தின் போது அவர் மிகச் சிறப்பாகச் சாய்ந்து ஆடக் கூடியவர், குதிகால்களை மென் மையாகவும் வேகமாகவும் தட்டக் கூடியவர். இன்னொருவர் இராணுவத்தில் இல்லாதவர், கனவான். அவர் மிகவும் அழகாக நடனமாடக் கூடியவர், அறிவாளியாக இல்லாவிட்டாலும் நடனவிருந்துகளின் போது களையூட்டக்கூடிய வர் என்று எல்லோரும் அவரைப் பற்றிச் சொன்னார்கள். அந்த நடன விருந்தின் தொடக் கத்திலிருந்து முடிவு வரை அந்த கனவான் ஒரு விநாடி கூட ஓய்வாக இருக்கவில்லை என்பது உண்மையே. அங்கேயிருந்த சீமாட்டிகள் அனை வரையும் அவர்கள் உட்கார்ந்த வரிசைக்கிர மப்படி அவர் நடனமாடுவதற்குக் கூப்பிட்டார். ஏதோ சில அபூர்வமான சந்தர்ப்பங்களில் தன் னுடைய ஈரக் கைக்குட்டையில் தன் களைத்துப் போன ஆனால் பிரகாசமான முகத்தைத் துடைப் பதற்கு மட்டுமே நடனத்தை நிறுத்துவார். கோமகன் அவர்கள் அனைவரையும் தோற் கடித்துவிட்டார்; அந்த நடனத்துக்கு வந்திருந் தவர்களில் மிக முக்கியமான மூன்று சீமாட்டி களோடும் நடனமாடினார். ஒரு பருமனான சீமாட்டி. அவள் பணக்காரி, அழகானவள், முட்டாள்தனம் நிறைந்தவள். அடுத்த பெண் நடுத்தரமான பருமன்—ஒல்லியானவள், மிக வும் அழகானவள் என்று சொல்ல முடியாது. ஆனால் கவர்ச்சியாக உடையணிந்திருப்பாள்.

மூன்ருவதாக ஒரு சிறு பெண்—மிகச் சாதாரண மான தோற்றம், ஆனல் மிகவும் புத்திசாலி. அவர் மற்ற பெண்களோடும் நடனமாடினர். உண்மையைச் சொல்வதென்ருல் அழகான எல்லாப் பெண்களோடும் அவர் நடனமாடி னர். அந்த நடனவிருந்துக்கு அழகான பெண் கள் அதிகமாக வந்திருந்தார்கள். ஆனல் ஸவல் ஷேவ்ஸ்கியின் சகோதரியான ஒரு விதவைதான் அவருக்கு அதிகமான மகிழ்ச்சியைக் கொடுத் தாள். அவளோடு அவர் குவாட்ரில், écossaise* மற்றும் மஸுர்க்கா நடனமாடினர். குவாட்ரில் நடனத்தின் போது அவளைப் பாராட்டிப் புகழத் தொடங்கினர். வீனஸ், டயானு, ரோஜா மற்றும் வேறு ஏதோ ஒரு மலரோடும் ஒப்பிட்டார். அந்த விதவை இந்தப் பாராட்டுக்களுக்கு நன்றி தெரிவிப்பதைப் போல தன் அழகான வெள்ளைக் கழுத்தை வளைத்தாள், கண்களைக் கீழே தாழ்த்தித் தன் னுடைய வெள்ளை மஸ்லின் உடையைப் பார்த் தாள். விசிறியை ஒரு கையிலிருந்து மற்ருெரு கைக்கு மாற்றினள். ''ஓ கோமகனே! நீங்கள் என்னைக் கேலி செய்கிறீர்கள்'' என்றும் அதைப் போன்ற வேறு சில சொற்களையும் அவள் கூறிய பொழுது வழக்கமாகக் கட்டையாக இருக்கும் அவள் குரல் குற்றமில்லாத வெகுளித்தனத்தையும் வேடிக்கையான எளி மையையும் அடைந்தது. அப்பொழுது அவளை கவனித்த கோமகன் உண்மையிலேயே அவளைப்

---

* பழங்கால ஸ்காட்லாந்திய நடனம்.

பெண் என்று சொல்வதைக் காட்டிலும் மலர் என்று கூறுவது—அதிலும் ரோஜா மலர் அல்ல வெகு தூரத்துக்கு அப்பாலிருக்கும் நாட்டில் பனிக்கரையின் மீது தாஞகவே வளர்ந்து முழு வளர்ச்சியடைந்த, வாசனையற்ற ஏதோ ஒரு பழுப்பு-வெள்ளைக் காட்டு மலர் என்று கூறு வது—அதிகப் பொருத்தமானது என்று அவரால் நினைக்காதிருக்க முடியவில்லை.

அவளுடைய கள்ளங்கவடில்லாத தன்மையும், வழக்கமான பகட்டுகள் இல்லாமையும் அவளு டைய புது மலர்ச்சியான அழகும் ஒன்று சேர்ந்து கோமகனிடம் ஒரு விசித்திரமான உணர்ச்சியை ஏற்படுத்தின. அவர்கள் பெசிக் கொண்டிருந்த பொழுது பல தடவைகள் அவளுடைய கண்களை ஊடுருவி அல்லது அவளுடைய கைகள் மற்றும் கழுத்தின் அழகிய தோற்றத்தை அவர் மௌன மாகப் பார்த்த பொழுது அவளைத் தன் கை களில் தூக்கி முத்தமிட வேண்டும் என்ற தீவிரமான ஆசை அவருக்கு ஏற்பட்டது. அவர் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்கு மிகவும் சிரமப்பட்டார். அவர் மீது தன்னுடைய தாக் கத்தைப் பற்றி அந்த விதவைக்கு மகிழ்ச்சி ஏற் பட்டாலும் கோமகனின் நடத்தையில் ஏதோ ஒன்று அவளிடம் கலவரத்தை ஏற்படுத்தி அவளைப் பயமுறுத்தத் தொடங்கியது. அவர் கெஞ்சுவதைப் போல அக்கறையோடு நடந்து கொண்டதோடு, அன்றைய வழக்க முறைகளின்படி பார்க்கும் பொழுது மிகவும் அதிகமான மரியாதையோடு நடந்து கொண் டார். அவளுக்காக ஓடிச் சென்று சிற்றுண்டி

களைக் கொண்டுவந்தார், கைக்குட்டையைப் பொறுக்கினர், அம்மை வடுக்கள் நிறைந்த முகத்தோடிருந்த ஒரு இளைஞன் அவரோடு போட்டியிட்டான். அவனிடமிருந்து அவளுடைய நாற்காலியைப் பறித்துக் கொண்டு வந்தார். இதைப் போன்று எண்ணற்ற சிறிய சேவைகளைச் செய்தார்.

அவளுடைய காதலனுகப் பழகுவதற்குத் தான் செய்த எல்லா முயற்சிகளும் அவளிடம் சிறிதுகூட மாற்றத்தை ஏற்படுத்தவில்லை என்பதைக் கண்டபிறகு அவளைச் சிரிக்க வைப்பதற்கு அவர் பல முயற்சிகளைச் செய்தார். நீ உத்தரவிட்டால் தலைகீழாக நிற்பேன், சேவலைப் போலக் கூவுவேன், சன்னலிலிருந்து கீழே குதிப்பேன் அல்லது நதியின் மேலிருக்கும் பனிக் கட்டித் துவாரத்தின் வழியாக உள்ளே குதிப்பேன் என்று அவளிடம் உறுதியளித்தார். அவர் இப்பொழுது முழு வெற்றி அடைந்தார். அவள் மிகவும் மகிழ்ச்சியடைந்தாள், தன்னுடைய அழகான வெள்ளைப் பற்களைக் காட்டிக் கலகல வெனச் சிரித்தாள். தன்னுடைய துணைவனைப் பற்றி அவள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள். ஒவ்வொரு நிமிடத்துக்குப் பிறகும் கோமகன் மேலும் அதிகமாகக் காதல் வயப்பட்டார். ஆகவே குவாட்ரில் நடனம் முடிவடைவதற்குள் அவர் உண்மையிலேயே காதலில் மூழ்கிவிட்டார்.

அந்தப் பிரதேசத்திலேயே மிகப் பெரிய பணக்காரரான ஒரு நிலவுடைமையாளரின் சோம்பேறி மகன் (அம்மை வடுக்கள் நிறைந்த

முகத்தைக் கொண்ட ஒரு இளைஞனிடமிருந்து துர்பீன் நாற்காலியைப் பிடுங்கியதாகக் கூறினாளே, அதே இளைஞன்) அந்த விதவையை நெடுங்காலமாக வழிபட்டு வருகிறான். குவாட்ரில் நடனம் முடிந்ததும் அவன் அவளை நெருங்கியபொழுது அவள் உற்சாகமில்லாமல் பேசினாள். கோமகனிடம் பேசிக் கொண்டிருந்த பொழுது அவளுக்கு ஏற்பட்ட பரவசத்தில் பத்தில் ஒரு பகுதிகூட இப்பொழுது அவளிடம் ஏற்படவில்லை.

''நல்ல ஆள்!'' என்று அவனிடம் கிண்டலாகப் பேசினாள். அதே சமயத்தில் அவளுடைய கண்கள் துர்பீனுடைய முதுகுப் புறத்திலேயே நிலைகுத்தியிருந்தன. அந்தக் கோட்டைத் தயாரிப்பதற்கு எத்தனை கஜம் தங்க நூல் செலவாகியிருக்கும் என்று அவள் தன்னையறியாமலே கணக்குப் போட்டுக் கொண்டிருந்தாள். ''நீ ரொம்ப நல்ல ஆள்தான்! சறுக்கு வண்டியில் கூட்டிக் கொண்டு போவதாகச் சொல்லியிருந்தாய். சாக்கலேட்டுகள் கொண்டு வருவதாக உறுதியளித்தாய்.''

''ஆன்னா ஃபியோதரவ்னா! உங்கள் வீட்டுக்கு நான் வந்தேன். நீங்கள் வீட்டில் இல்லை. ஒரு டப்பா மிக அருமையான சாக்கலேட்டுகளைக் கொடுத்து விட்டு வந்தேன்'' என்றான் அந்த இளைஞன். அவன் உயரமானவனாக இருந்த போதிலும் கீச்சுக் குரலில் பேசினான்.

''எப்பொழுதும் ஏதாவது சாக்குச் சொல். உன் சாக்கலேட்டுகள் எனக்கு வேண்டியதில்லை.

தயவு செய்து என்னைத் தொந்தரவு செய்ய வேண்டாம்...''

''ஆன்ன ஃபியோதரவ்ன! நீங்கள் எவ்வளவு மாறிவிட்டீர்கள் என்பது எனக்கு நன்ருகத் தெரிகிறது. அதற்குக் காரணமும் எனக்குப் புரிகிறது. இது மிகவும் தவறு'' என்ருன். அவன் மேலும் ஏதோ சொல்ல விரும்பியது போலத் தோன்றியது. ஆனல் அவன் உணர்ச்சி வசப்பட்டுவிட்டபடியால் உதடுகள் பலமாக அசைந்தன; அவனல் பேச முடியவில்லை.

ஆன்ன ஃபியோதரவ்ன அவன் பேச்சைக் கேட்கவில்லை; தொடர்ந்து துர்பீனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அன்றைய மாலைப் பொழுதில் நடனவிருந்துக்கு ஏற்பாடு செய்த மார்ஷல் பருமனவர், பற்கள் இல்லாதவர், மாட்சிமை பொருந்திய வயோதிக கனவான். அவர் கோமகனின் அருகில் சென்று அவர் கையை அன்புடன் பிடித்து, படிப்பறைக்குச் சென்று, புகை பிடிக்கலாம், நீங்கள் விரும்பினல் மதுவருந்தலாம் என்று அழைத்தார். துர்பீன் அவரோடு போனபிறகு ஆன்ன ஃபியோதரவ்னவுக்கு அந்த நடன அறையிலிருந்து எல்லாமே போய்விட்டதைப் போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அவள் நட்புக் கொண்டிருந்த ஒரு ஒல்லியான முதுகன்னியின் கையைப் பிடித்து அவளை ஒப்பனை அறைக்குள் கூட்டிக் கொண்டு சென்ருள்.

''என்ன, அவரைப் பிடிக்கிறதா?'' என்று அந்த முதுகன்னி கேட்டாள்.

''ஆனலும் இவ்வளவு துணிச்சல் இருக்கக்

கூடாது. மோசம்!'' என்று சொல்லிவிட்டு ஆன்ன ஃபியோதரவ்ன நிலைக் கண்ணாடிக்கு நேராகப் போய் நின்று தன் உருவத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவள் முகம் பிரகாசமாக இருந்தது, அவள் கண்கள் சிரித்தன. அவள் சற்று நாணமாகக் கூடத் தோன்றினாள். தேர்தல்களின் போது நடனமாடிய பெண்களைப் போல அவள் திடீ ரென்று ஒரு கால்விரலில் எழும்பிச் சுழன்று வட்டமடித்தாள். அவளுடைய அடித்தொண் டையிலிருந்து இனிமையாகச் சிரித்தாள். குதி கால்களைத் தட்டிக் கொண்டு மேலே எம்பிக் குதித்தாள்.

''அவர் என்ன சொன்னார் தெரியுமா? அன்புப் பரிசு வேண்டுமென்று கேட்டார்.'' என்று தன் னுடைய சிநேகிதியிடம் கூறினாள். ''ஆனால் நான் அவருக்கு ஒ-ன்-று-ம் கொ-டு-க்-க-மா-ட்-டே-ன்.'' அவள் கடைசி வார்த்தைகளைப் பேசவில்லை, மெல்லிய உறையணிந்த ஒரு கை விரலை நீட்டிக் கொண்டு பாடினாள்...

மார்ஷல் துர்பீனைக் கூட்டிக்கொண்டு சென்ற படிக்கும் அறையில் பல விதமான வோட்கா, மது மற்றும் ஷாம்பேன் பாட்டில்களும் தட்டு களில் சிற்றுண்டிகளும் இருந்தன. அங்கே யிருந்த புகைச் சுருளுக்கு நடுவில் உள்ளூர் கனவான்கள் தேர்தல்களைப் பற்றி விவாதித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள் அல்லது நடந்து கொண்டிருந்தார்கள்.

புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போலீஸ் காப்டன் ஏற்கெனவே குடி மயக்கத்திலிருந்

தார். ''நம் வட்டாரத்திலிருக்கும் பிரபுக்கள் அவரைத் தேர்ந்தெடுத்து கௌரவமளிக்கும் பொழுது அதை மறுக்க அவருக்கு உரிமையில்லை, ஆமாம், உரிமையில்லை...'' என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

கோமகன் வருகையினுல் அவர்களுடைய உரையாடல் தடைப்பட்டது. அங்கேயிருந்த எல்லோரையும் அவருக்கு அறிமுகப்படுத்தினுர்கள். போலீஸ் காப்டன் அதிகமான பிரியத்தோடு அவர் கையைக் குலுக்கினுர். நடன நிகழ்ச்சி முடிந்த பிறகு ஒரு மதுக்கடையில் எல்லோருக்கும் தான் விருந்தளிக்கப் போவதாகவும் அங்கே ஜிப்சி குழுவினருடைய இசை விருந்துக்கு ஏற்பாடு செய்திருப்பதாகவும் கூறி அதில் அவர் கலந்து கொள்ள வேண்டுமென்று மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார். கோமகன் அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டு அவரோடு சில கோப்பைகள் ஷாம்பேன் மது வருந்தினுர்.

அந்தப் படிப்பறையிலிருந்து புறப்படுகின்ற நேரத்தில் ''கனவான்களே! நீங்கள் ஏன் நடனமாடவில்லை?'' என்று கோமகன் கேட்டார்.

''எங்களால் அவ்வளவு நன்ருக நடனமாட முடியாது'' என்று போலீஸ் காப்டன் சிரித்துக் கொண்டே கூறினுர். ''கோமகனே! நாங்கள் நன்ருகக் குடிப்போம்... மேலும் இந்த இளம் பெண்கள் எல்லோருமே என் கண்களுக்கு முன்னுல் வளர்ந்தவர்கள்! கோமகனே! சில சமயங்களில் நான் ஒரு écossaise நடனமாடுவதுண்டு—இன்னும் என்னுல் முடியும், கோமகனே...''

''அப்படியானல் நடனமாடுவோம், ஜிப்சி களின் இசை விருந்தைக் கேட்கப் போவதற்கு முன்பு இங்கே நடனமாடி மகிழ்ச்சியடைவோம்'' என்ருர் கோமகன்.

''ஆமாம். நம் எசமானருக்குத் திருப்தியேற் படுத்துவதற்காக நாம் நடனமாடலாமே!''

நடன நிகழ்ச்சி தொடங்கியதிலிருந்து அங்கே உட்கார்ந்து குடித்துக் கொண்டிருந்த மூன்று பிரபுக்கள்—சிவந்த முகங்களைக் கொண்டவர் கள்—தங்களுடைய கையுறைகளை அணிந்து கொண்டார்கள். ஒருவர் கறுப்பு நிறத்தில் ஆட்டுக் குட்டியின் தோலில் செய்யப்பட்ட கையுறைகளை அணிந்து கொண்டார். மற்றவர் கள் பட்டு நூலினுல் பின்னப் பட்ட கையுறை களை அணிந்து கொண்டார்கள். அவர்கள் நடன அறைக்குள் நுழையப் போகும் நேரத்தில் அம்மை வடுக்கள் நிறைந்த முகத்தைக் கொண்ட அந்த இளைஞன் அவர்களைத் தடுத்து நிறுத்தினன். அவன் உதடுகள் வெளுத்துப் போயிருந்தன; கண்களிலிருந்து கண்ணீர் வடி வதை அவனுல் தடுக்க முடியவில்லை. அவன் துர்பீனிடம் போனன்.

''நீங்கள் கோமகன் என்பதால் சந்தையில் மக்களைப் பிடித்துத் தள்ளுவதைப் போல நடந்து கொள்ளலாம் என்று நினைக்கிறீர்களா?'' என்று மிகவும் சிரமத்தோடு மூச்சுவிட்டபடியே கேட்டான். ''அது திமிர்... மற்றும்... மற்றும்...''

மறுபடியும் அவன் உதடுகள் நடுங்கியபடி யால் அவன் பேச்சு தடைப்பட்டது.

''என்ன?'' திடீரென்று துர்பீன் முகத்தைச் சுளித்துக் கொண்டு கேட்டார். ''என்ன சொன்னாய்? நாய்க் குட்டியே!'' என்று சொல்லிக் கொண்டு அந்த இளைஞனின் கைகளைப் பிடித்து மிகவும் வலுவோடு இறுக்கியபொழுது அவமதிப்பைக் காட்டிலும் பயத்தினால் அவன் முகத்தில் இரத்தம் குப்பென்று பாய்ந்தது. ''என்னோடு வாட்சண்டை போட விரும்பு கிறாயா? அப்படியானால் நான் தயார்'' என்றார்.

துர்பீன் அந்த இளைஞனின் கைகளை விட்டதும் இரண்டு கனவான்கள் அந்த இளைஞனுடைய கைகளைப் பிடித்துப் பின்புறத்திலுள்ள கதவை நோக்கிக் கூட்டிக் கொண்டு சென்றார்கள்.

''உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? நீ அதிகமாகக் குடித்திருக்க வேண்டும். உன் தகப்பனாரிடம் சொல்ல வேண்டியதுதான். ஏன் இப்படி நடந்து கொண்டாய்?'' என்று அவனைக் கேட்டார்கள்.

''நான் குடிமயக்கத்தில் இல்லை. அவர்தான் ஆட்களைக் கண்டபடி பிடித்துத் தள்ளுகிறார். மன்னியுங்கள் என்று கூடச் சொல்லவில்லை. அந்த ஆள் ஒரு பன்றி! ஆமாம். பன்றி!'' என்று அந்த இளைஞன் புலம்பினான். அவன் கண்களில் கண்ணீர்த் துளிகள் திரண்டு நின்றன.

ஆனால் அவர்கள் அவனுடைய புகாரைப் புறக்கணித்து விட்டு அவனை வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு சென்றார்கள்.

''கோமகன் அவர்களே! அவனைப் பொருட்படுத்தாதீர்கள்'' என்று துர்பீனை சமாதானப் படுத்துவதில் முனைப்பாக இருந்த போலீஸ் காப்டனும் ஸவல்ஷேவ்ஸ்கியும் கூறினார்கள். ''அவன் சின்னப் பையன். இன்னும் அவன் அப்பா அவனை அடிக்கிறார். பதினறு வயது தான் ஆகிறது. அவனுக்கு என்ன நேர்ந்தது என்று தெரியவில்லை. பைத்தியம் பிடித்திருக்க வேண்டும். இத்தனைக்கும் அவன் தகப்பனார் மிகவும் மரியாதைக்குரிய கனவான் — அவர் தான் எங்களுடைய வேட்பாளர்.''

''அவன் வாட்சண்டை போட விரும்பினல் நான் தயார். இல்லையேல் தொலைந்து போகட்டும்...''

கோமகன் நடன அறைக்குள் நுழைந்து எப்பொழுதும் தன்னிடமுள்ள குதூகலத்தோடு அந்த அழமான விதவையுடன் écossaise நடனமாடினார். படிப்பறையிலிருந்து தன்னோடு வந்த கனவான்கள் நடனமாடுவதைப் பார்த்து அடக்கமுடியாமல் 'ஓ'வென்று சிரித்தார். அவருடைய சிரிப்பொலி அந்த அறை முழுவதும் எதிரொலித்த பொழுது போலீஸ் காப்டன் நடனமாடிக் கொண்டிருந்த ஜோடிகளுக்கு நடுவில் கால் தடுக்கிக் கீழே விழுந்தார்.

## 5

கோமகன் படிப்பறையில் இருந்தபொழுது ஆன்னு ஃபியோதரவ்னு அவரைத் தான்

அலட்சியமாக நினைப்பதைப் போல நடந்து கொள்ள வேண்டுமென்று எண்ணித் தன் சகோதரனிடம் போய் ''சகோதரனே! என்னோடு நடனமாடிய அந்த ஹுஸ்ஸார் யார்?'' என்று அக்கறையின்றிக் கேட்டாள். துர்பீன் எவ்வளவு பெரிய ஹுஸ்ஸார் என்பதை அவளுக்கு விளக்குவதற்கு அந்தக் குதிரைப் படை அதிகாரி சிறப்பாக முயன்றார். வரும் வழியில் அவரிடமிருந்த பணத்தை யாரோ திருடிக் கொண்டதனால்தான் அவர் நகரத்தில் தங்கியிருக்கிறார், நடனத்தில் கலந்து கொண்டார், நானே அவருக்கு நூறு ரூபிள் கடன் கொடுத்திருக்கிறேன், ஆனால் அந்தத் தொகை மிகவும் குறைவு. சகோதரி! நீ எனக்கு இருநூறு ரூபிள் கடன் கொடுக்க முடியுமா என்று கேட்டார். அதே சமயத்தில் அவள் இதை யாரிடமும் குறிப்பாகக் கோமகனிடம் சொல்லக் கூடாது என்று அவர் வற்புறுத்திக் கூறினார். ஆன்னா ஃபியோதரவ்னா மாலையிலேயே சகோதரனுக்குப் பணத்தைக் கொடுத்தனுப்புவதாக உறுதியளித்தாள். ஆனால் நடனமாடிக் கொண்டிருந்த பொழுது கோமகனுக்கு எவ்வளவு பணம் வேண்டுமானாலும் கொடுக்கத் தயாராக இருப்பதைத் தெரிவிக்க வேண்டுமென்ற அடக்க முடியாத ஆசை அவளிடம் ஏற்பட்டது. அதைச் சொல்லத் துணிவு வேண்டுமே. அதற்கே அவளுக்குச் சிறிது நேரம் தேவைப்பட்டது. அவள் நாணினாள், தயங்கினாள், கடைசியில், மாபெரும் முயற்சிக்குப் பிறகு அந்த விஷயத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள்.

''கோமகனே! வரும் வழியில் உங்களுக்கு விபத்து ஏற்பட்டதாகவும் தற்பொழுது உங்களிடம் பணம் இல்லையென்றும் என் சகோதரர் என்னிடம் கூறினர். உங்களுக்குப் பணம் தேவையாக இருந்தால் என்னிடம் வாங்கிக் கொள்ளலாமே. அது எனக்கு அதிகமான மகிழ்ச்சியைக் கொடுக்கும்.''

இந்த வார்த்தைகளைச் சொல்லி முடித்தவுடனே ஆன்னு ஃபியோதரவ்னு பயந்து விட்டாள். அவள் முகம் சிவந்துவிட்டது. கோமகன் முகத்திலிருந்த மகிழ்ச்சி உடனே மறைந்து விட்டது.

''உன் சகோதரன் ஒரு முட்டாள்'' என்று அவர் வெடுக்கென்று பதிலளித்தார். ''ஒரு ஆண் இன்னொரு ஆணை அவமதித்தால் அவரை வாட்சண்டைக்கு வருமாறு சவால் விடுவார்கள் என்பது உனக்குத் தெரியும். ஒரு பெண் ஒரு ஆணை அவமதித்தால் என்ன நடக்குமென்று உனக்குத் தெரியுமா?''

பாவம் ஆன்னு ஃபியோதரவ்னு! அவள் கழுத்தும் காதுகளும் வெட்கத்தால் எரிவதைப் போல உணர்ந்தாள்.

''அந்தப் பெண்ணை எல்லோர் முன்னிலையிலும் முத்தமிட வேண்டும்'' என்று கோமகன் குனிந்து அவள் காதுக்குள் முணுமுணுத்தார். ''உன் கையை முத்தமிட அனுமதிப்பாயா?'' என்று அவர் அந்தச் சீமாட்டிக்கு ஏற்பட்ட குழப்பத்தைக் கண்டு அனுதாபமடைந்து நீண்ட மௌனத்துக்குப் பிறகு இரகசியமாகச் சொன்னர்.

''ஓ! இப்பொழுது வேண்டாம்'' என்று ஆன்ஞ ஃபியோதரவ்ஞ நீண்ட பெருமூச்சோடு கூறிஞள்.

''எப்பொழுது? நாளேக்கு அதிகாலேயில் நான் புறப்படுகிறேன்... உன் தவறுக்கு தண்டனே கொடுக்க வேண்டுமே.''

''ஆஞல் இந்தச் சூழ்நிலேயில் என்ஞல் முடியாது'' என்று ஆன்ஞ ஃபியோதரவ்ஞ சிரித்துக் கொண்டே கூறிஞள்.

''இன்றிரவு உன்ஃனப் பார்க்க அனுமதித்தால் நான் உன் கையில் முத்தமிடுகிறேன். ஆஞல் அந்த சந்தர்ப்பத்தை நானே தேடிக் கொள்வேன்.''

''எப்படி உங்களால் முடியும்?''

''அதை நான் பார்த்துக்கொள்கிறேன். உன்னேப் பார்ப்பதற்காக நான் எதுவும் செய்வேன்... உனக்கு ஆட்சேபமில்லேயே?''

''இல்லே.''

அந்த நடனம் முடிவடைந்தது. அவர்கள் மறுபடியும் மஸுர்க்கா நடனமாடியபொழுது கோமகன் அற்புதங்களேச் செய்தார். அவர் கைக்குட்டைகளேத் தூக்கிப் போட்டுப் பிடித்தார், ஒரு முழங்காலில் நின்ருர், பிரத்யேகமான வார்சா பாணியில் குதிகால்களே ஒன்ருகச் சேர்த்துச் சப்தமெழுப்பிஞர். அங்கேயிருந்த கிழவர்கள் அவருடைய நடனத்தைப் பார்ப்பதற்காக சீட்டாட்ட மேசையை விட்டு ஓடி வந்தார்கள். மிகச் சிறந்த நடனக்காரர் என்று பிரபலமடைந்திருந்த குதிரைப் படை அதிகாரி கோமகன் தன்னேத் தோற்

கடித்துவிட்டதாக ஒத்துக்கொண்டார். இரவு உணவு பரிமாறப்பட்டது. கடைசியாகத் ''தாத்தா'' நடனத்தை முடித்துக் கொண்டு விருந்தினர்கள் புறப்படத் தொடங்கினர்கள். இவ்வளவு நேரமும் கோமகன் அந்த விதவையின் மீது வைத்த கண்களை எடுக்கவில்லை. அவளுக்காகப் பனிக்கட்டி துவாரத்திற்குள் குதிக்கத் தயார் என்று அவர் கூறியது மிகையல்ல. காதலோ, சபலமோ அல்லது வெறும் பிடிவாதமோ—அந்த மாலைப்பொழுதில் அவருடைய திறமைகள் அனைத்துமே அவளைத் தனியே சந்தித்துக் காதல் புரிய வேண்டும் என்ற ஒரே ஆசையில் திரண்டிருந்தன. விருந்தளித்த தலைவியிடம் ஆன்ன ஃபியோதரவ்ன விடைபெற்றுக் கொள்வதைப் பார்த்தவுடன் அவர் வேலைக்காரர்கள் இருக்கும் அறைக்கு வேகமாக ஓடினர். பிறகு அங்கிருந்து — கோட்டை அணியாமல் — கோச்சுவண்டிகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த சாலையோரத்துக்கு ஓடினர்.

''ஆன்ன ஃபியோதரவ்ன ஸாய்த்ஸெவாவின் வண்டியைக் கொண்டுவா!'' என்று அவர் கூப்பிட்டார். நான்கு இருக்கைகள் உள்ள, விளக்குகள் எரிந்து கொண்டிருந்த உயரமான கோச்சு வண்டி வாயிலை நோக்கி வந்தது. அவர் ஓடிக் கொண்டே ''நிறுத்து!'' என்று வண்டிக்காரனுக்கு உத்தரவிட்டார். பனிச் சேற்றில் முழங்கால் வரை அமுங்கினர்.

''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று வண்டிக்காரன் கேட்டான்.

''நான் வண்டியில் ஏற வேண்டும்'' என்று வண்டியோடு சேர்ந்து ஓடிக்கொண்டே கதவைத் திறந்து ஏறுவதற்கு முயற்சித்தவாறே கூறினர். ''நிறுத்து! முட்டாள்!''

''வாஸ்கா! வண்டியை நிறுத்து!'' என்று வண்டிக்காரன் குதிரையோட்டியிடம் கூறினன். அவன் குதிரைகளை இழுத்து நிறுத்தினன். ''இன்னெருவருடைய வண்டியில் நீங்கள் எதற்காக ஏற வேண்டும்? ஐயா! இந்த வண்டி ஆன்ன ஃபியோதரவ்னவுடையது, உங்களுடையதல்ல.''

''வாயை மூடு, முட்டாள்! இந்தா, இந்த ரூபிளை வாங்கிக் கொண்டு கீழே இறங்கிக் கதவை மூடு'' என்ருர் கோமகன். ஆனல் வண்டிக்காரன் சிறிதும் அசையாததால் அவரே படிகளைக் கீழே இறக்கிவிட்டு சன்னலைத் திறந்து எப்படியோ உள்ளே நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டார். பழைய காலத்தைச் சேர்ந்த எல்லா வண்டிகளையும், குறிப்பாக, தங்க இழைகளால் சித்திர வேலை செய்யப்பட்ட மெத்தைகளைக் கொண்ட வண்டிகளைப் போல அந்த வண்டியில் அவிசல் நாற்றமும் எரிந்துபோன முடியின் வீச்சமும் அடித்தது. கோமகன் லேசான பூட்சுகளும் குதிரைச் சவாரிக் காலணிகளுமே அணிந்து கொண்டு முழங்கால் வரை பனிச் சேற்றில் அமுங்கியிருந்தார். எனவே அவர் மிகவும் குளிர்ச்சியடைந்திருந்தார். உண்மையில் அவர் உடல் முழுவதுமே நடுங்கிக் கொண்டிருந்தது. வண்டிப் பெட்டியின் மீது உட்கார்ந்திருந்த

வண்டிக்காரன் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தான். அவன் கீழே இறங்கப் போவதைப் போலத் தோன்றியது. ஆனால் கோமகன் ஒன்றையும் கேட்கவில்லை, எதை யுமே உணரவில்லை. அவர் முகம் நெருப்பைப் போல எரிந்தது, அவர் இதயம், படபட வென்று துடித்துக் கொண்டிருந்தது. அவர் தன்னுடைய விறைத்துப் போன விரல்களில் மஞ்சள் நிறத்தோல் வளையத்தைப் பற்றிக் கொண்டு பக்கத்து சன்னல் வழியாக வெளியே தலையை நீட்டினார். அவர் ஜீவன் அந்தத் தருணத்தில் எதையோ எதிர்பார்த்து ஒன்று குவிந்திருப்பதைப் போலத் தோன்றியது. அவர் நெடு நேரம் காத்திருக்கவில்லை. ''சீமாட்டி ஸாய்த்ஸெவாவின் வண்டி!'' என்று வாயி லில் யாரோ கூப்பிட்டார்கள். வண்டிக்காரன் லகானை இழுத்தான். உயரமான விசைக் கம்பிகளில் வண்டி மேலும் கீழும் ஏறி இறங்கியது. மாளிகையின் விளக்குகள் எரிந்து கொண்டிருந்த சன்னல்கள் வண்டிச் சன்னல் கள் வழியாக ஒன்றுக்குப்பின் ஒன்றாகப் போய் கொண்டிருந்தன.

''ஏய் போக்கிரி! நான் இங்கே இருப்பதை வேலைக்காரனிடம் சொல்லக் கூடாது'' என்று கோமகன் வண்டிக்காரனோடு பேசுவதற்குப் பயன்படும் முன் சன்னல் வழியாகத் தலையை நீட்டிக் கொண்டு பேசினார். ''ஏதாவது சொன் னால் உன்னைச் சவுக்கால் அடிப்பேன். இல்லை யென்றால் பத்து ரூபிள் தருவேன்.''

அவர் சன்னலைச் சாத்திய உடனே வண்டி

திடீரென்று ஒரு பக்கமாகச் சாய்ந்து நின்றது. அவர் ஒரு மூலையில் உடலைச் சுருக்கிக் கொண்டு உட்கார்ந்தார்; மூச்சை அடக்கினூர்; கண்களைக் கூட மூடிக் கொண்டார்: தன்னுடைய உணர்ச்சி மிக்க நம்பிக்கைகளில் ஏதாவது குறுக்கிட்டுக் கெடுத்துவிடக் கூடாதே என்று அவ்வளவு அதிகமான பயம் அவருக்கு ஏற்பட்டது. கதவு திறந்தது, ஒவ்வொன்ருகப் படிகள் கீழே இறக்கிவிடப்பட்டன. ஒரு பெண்ணின் கவுன் சலசலத்தது. அந்த வண்டியின் நாற்றத்துக்கு மேலே மல்லிகைத் தைலத்தின் வாசனை மிதந்தது, சிறு கால்கள் படிகளின் மீது மென்மையாக ஏறின, கோமகனின் கால் மீது ஆன்ஞ ஃபியோதரவ்ஞவின் கவுன் நுனி பட்டது. அவருக்குப் பக்கத்திலிருந்த இடத்தில் அவள் மூச்சை அடக்கியபடியே அமைதியாக உட்கார்ந்தாள்.

அவள் அவரைப் பார்த்தாளா இல்லையா என்பதை யாருமே—ஆன்ஞ ஃபியோதரவ்ஞ கூட—சொல்ல முடியாது. ஆனல் அவர் அவளுடைய கையைத் தூக்கி ''நான் இப்பொழுது உன் கையை நிச்சயமாக முத்தமிடப் போகிறேன்'' என்று முணுமுணுத்தபொழுது அவள் சிறிதும் கலவரமடையவில்லை, ஒன்றும் சொல்லவில்லை. உடனே அவரிடம் ஒப்படைத்த கரத்தில், அவள் கையுறைக்கு மிகவும் மேலே ஒரு இடத்தில் அவர் முத்தங்களைச் சொரிந்தார். வண்டி புறப்பட்டது.

''ஏதாவது பேசு. உனக்குக் கோபமில்லையே? சொல்'' என்று அவர் அவளிடம் கேட்டார்.

அவள் உட்கார்ந்திருந்த மூலையில் இன்னும் பின்னே தள்ளிச் சென்ருள். ஆனல் திடீரென்று, எந்தக் காரணமும் இல்லாமல் அவள் விம்மி அழுதாள். அவள் தலை தாஞகவே அவர் மார்பின் மீது சாய்ந்தது.

## 6

புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போலீஸ் காப்டனும் அவருடைய நண்பர் குழாமும் குதிரைப் படை அதிகாரியும் மற்ற கனவான் களும் புதிய மதுபானக் கடையில் குடித்துக் கொண்டும் ஜிப்சிகளின் ஆடல்பாடலை ரசித்துக் கொண்டும் நேரத்தைக் கழித்துக் கொண் டிருந்த பொழுது கோமகன் அவர்களோடு சேர்ந்து கொண்டார். ஓரங்களில் கரடித் தோலினல் தைக்கப்பட்ட நீலநிற மேலங்கியை அவர் அணிந்திருந்தார். அது ஆன்ஞ ஃபி யோதரவ்ஞவின் கணவருக்குச் சொந்தமா னது.

''ஓ! கோமகன் அவர்களே! நீங்கள் வரு வீர்கள் என்ற நம்பிக்கையை நாங்கள் அநேகமாக இழந்து விட்டோம்!'' என்ருன் கறுப்புத் தலை முடியும் மாறுகண் பார்வையும் கொண்ட ஒரு ஜிப்சி. கோமகன் கோட்டைக் கழற்ற உதவி செய்வதற்காக வாயிலை நோக்கி ஓடி அவரை வரவேற்றபொழுது அவனுடைய வெண்மையான பற்கள் பளிச்சிட்டன. ''உங் களை லெபெத்யானுக்குப் பிறகு நாங்கள் பார்க்கவில்லையே... ஸ்தேஷ்கா உங்களையே

நினைத்து உருகிக் கொண்டிருக்கிறாள்... ''என்றான்.

ஸ்தேஷ்கா அவரைச் சந்திப்பதற்காக ஓடி வந்தாள். அவள் அழகு மிக்க இளம் ஜிப்சி. அவளுடைய கறுப்புக் கன்னங்கள் உணர்ச்சியால் சிவந்திருந்தன. அவளுடைய நீண்ட கண் புருவங்களின் அடர்த்தியால் ஆழம் நிறைந்த கறுப்புக் கண்களின் பளபளப்பு மென்மையடைந்திருந்தது.

''ஓ! கோமகன் அவர்களே! அன்பான கண்ணுளா! எவ்வளவு ஆனந்தம்!'' என்று மகிழ்ச்சியால் சிரித்துக் கொண்டே அவள் முணுமுணுத்தாள்.

இல்யூஷ்கா கூட அவரைப் பார்ப்பதில் மகிழ்ச்சி அடைந்ததைப் போலப் பாசாங்கு செய்து கொண்டு அவரைச் சந்திப்பதற்காக ஓடி வந்தான். கிழவிகள், நடுத்தர வயதான பெண்கள், இளம் பெண்கள் துள்ளிக் குதித்து அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். சிலர் தங்களுடைய குழந்தைகளுக்குக் கோமகன் ஞானத் தந்தையாக இருந்தார் என்றும் மற்றவர்கள் அவர் தங்களோடு சிலுவைகளைப் பரிமாறியிருப்பதாகவும் கூறி அவரோடு உறவு கொண்டாடினார்கள்.

துர்பீன் அங்கேயிருந்த இளம் ஜிப்சி பெண்கள் அனைவருடைய வாயிலும் முத்தமிட்டார். ஜிப்சி கிழவிகளும் ஆண்களும் அவருடைய தோளிலும் கையிலும் முத்தமிட்டார்கள். அவரைப் பார்த்ததில் பிரபுக்களும் மகிழ்ச்சியடைந்தார்கள். அவர்களுடைய களியாட்டம்

உச்ச கட்டத்தை அடைந்த பிறகு அப்பொழுது கீழிறங்கிவிட்ட படியால் அவர் வந்ததைப் பற்றி அவர்களுக்கு அதிகமான மகிழ்ச்சியே. களியாட்டம் மிதமிஞ்சிப் போய் ஒவ்வொருவரும் திகட்டலை உணரத் தொடங்கியிருந்தார்கள். அவர்களுடைய நரம்புகளுக்கு முறுக்கேற்படுத்தும் சக்தியை ஒயின் இழந்துவிட்டது, இப்பொழுது அது வயிற்றில் வெறும் சுமைதான். விருந்தினர்கள் தங்களால் முடிந்த அளவுக்கு ஆட்டம் போட்டுவிட்டு இப்பொழுது ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். எல்லாப் பாடல்களையுமே அவர்கள் பாடி முடித்துவிட்டார்கள். அந்தப் பாடல்களும் அவர்களுடைய மூளையில் ஒன்றோடொன்று சேர்ந்து எல்லாமே வெறும் சத்தம், வீண் என்ற உணர்ச்சி மட்டும்தான் எஞ்சி நின்றது. எவ்வளவுதான் புதுமையாக, துணிகரமாக வேடிக்கை செய்தாலும் அவற்றைப் பார்த்து யாருமே மகிழ்ச்சி அடையவில்லை. போலீஸ் காப்டன் தரையில் ஒரு கிழவியின் காலடியில் அவலட்சணமான முறையில் சுருண்டு கிடந்தார்.

''ஷாம்பேன்!..'' என்று அவர் கால்களை உதைத்துக் கொண்டு கத்தினர். ''கோமகன் வந்துவிட்டார்!... ஷாம்பேன்!.. அவர் வந்துவிட்டார்!.. ஷாம்பேன் கொண்டுவா!.. ஒரு குளியல் தொட்டி நிறைய ஷாம்பேனை ஊற்றி நான் அதில் குளிக்கப் போகிறேன்!... பிரபுக்களே! இவ்வளவு சிறந்த கனவான்களோடு இருப்பது எனக்கு எவ்வளவு ஆனந்தத்தைத்

தருகிறது!.. ஸ்தேஷ்கா! 'திறந்த பாதை' என்ற பாட்டைப் பாடு!''

குதிரைப் படை அதிகாரியும் அவரைப் போலவே மயக்கத்தில் இருந்தார். ஆனால் அவர் அதை வேறு வகையில் வெளிப்படுத்தினார். அவர் சோபா மூலையில் லியுபாஷா என்ற ஒரு உயரமான, அழகான ஜிப்சி பெண்ணுக்குப் பக்கத்தில் சுருண்டு கிடந்தார். அவர் குடிமயக்கத்தைப் போக்குவதற்காகக் கண்களை உருட்டிக் கொண்டும் தலையை ஆட்டிக் கொண்டுமிருந்தார். அந்த ஜிப்சி பெண்ணைத் தன்னோடு வந்து விடுமாறு ஒரே சொற்றொடரைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருந்தார். அவர் பேசுவது ஒரே சமயத்தில் மிக வேடிக்கையாகவும் ஓரளவுக்குப் பரிதாபமாகவும் இருப்பதைப் போல லியுபாஷா சிரித்தபடியே கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் தனக்கு எதிரே ஒரு நாற்காலிக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த தன் கணவன் மாறுகண் ஸாஷ்காவையும் அவ்வப்பொழுது பார்த்துக் கொண்டாள். குதிரைப் படை அதிகாரி தன் அடங்காக் காதலை வெளியிட்டதற்குப் பதிலளிப்பதைப் போல அவள் குனிந்து தனக்குச் சில ரிப்பன்களும் வாசனைத் தைலங்களும் வாங்கிக் கொடுக்க வேண்டும், ஆனால் ஒருவருக்கும் தெரியக் கூடாது என்று முணுமுணுத்தாள்.

கோமகன் உள்ளே நுழைந்தபொழுது குதிரைப் படை அதிகாரி ''ஹுர்ரா!'' என்று முழங்கினார்.

ஒரு அழகான இளைஞன் இப்பொழுது கவலை நிறைந்த தோற்றத்தோடு இயற்கைக்கு மாருக உறுதியாகக் காலடி வைத்து முன்னும் பின்னும் நடந்து கொண்டு, ''ஸெராலியோ வில் புரட்சி'' என்ற பாடலைச் சீட்டியடித்துக் கொண்டிருந்தான்.

பிரபுக்கள் குழாமைச் சேர்ந்த கனவான்களின் பிடிவாதமான வற்புறுத்தலினுல் ஒரு வயோதிகமான குடும்பத் தலைவரும் அங்கே வந்திருந்தார். அவர் வராவிட்டால் தங்களுடைய குதூகலம் குறைந்துவிடும், அவர் வராவிட்டால் தாங்கள் போக மாட்டோம் என்று சொல்லி அவர்கள் அவரை அங்கே அழைத்துக் கொண்டு வந்திருந்தார்கள். அவர் வந்தவுடன் அங்கேயிருந்த சோபாவில் காலை நீட்டிப் படுத்துக் கொண்டார். யாரும் அவரைப்பற்றி சிறிது கூட அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. ஒரு அரசாங்க அதிகாரி தன்னுடைய உள்கோட்டைக் கழற்றிப் போட்டு விட்டு ஒரு மேசையின் மேல் காலைத் தூக்கி வைத்து உட்கார்ந்திருந்தார். தான் எவ்வளவு மோசமான பரத்தன் என்று எடுத்துக் காட்டுவதற்காக அவர் தலையைக் கலைத்துப் போட்டு உட்கார்ந்திருந்தார். கோமகன் உள்ளே வந்ததும் அவர் சட்டைக் காலர் பொத்தான்களைத் திறந்து விட்டு மேசையில் இன்னும் பின்ஞல் தள்ளிப்பொய் உட்கார்ந்தார். மொத்தத்தில் கோமகன் வந்தவுடனே அங்கேயிருந்தவர்களிடம் அதிகமான உற்சாகம் ஏற்பட்டது.

அந்த அறையில் உலாவிக் கொண்டிருந்த

ஜிப்சிகள் மறுபடியும் தரையில் வட்டமாக உட்கார்ந்தார்கள். கோமகன் பாடகியான ஸ்தேஷ்காவைத் தன் முழங்காலில் உட்கார வைத்துக் கொண்டு இன்னும் ஷாம்பேன் கொடுக்குமாறு உத்தரவிட்டார்.

இல்யூஷ்கா பாடகனுக்கு முன்னுல் தன்னுடைய கித்தார் வாத்தியத்தோடு நின்று **பிலியாஸ்காவை** ஆரம்பி என்று சமிக்கை செய்தான். ''தெருவிலே நடக்கும்பொழுதெல்லாம்'', ''ஓ! ஹுஸ்ஸார்களே!..'' ''நன்ருகக் கேட்டுப் புரிந்துகொள்...'' என்பன போன்ற ஜிப்சி பாடல்களை ஒரு குறிப்பிட்ட வரிசைக் கிரமத்தில் பாடுவதை அந்த சமிக்கை குறிக்கும். ஸ்தேஷ்கா அழகாகப் பாடினுள். அவளுடைய இதயத்தின் ஆழத்திலிருந்து புறப்பட்ட கனமான, நெகிழ்ச்சி மிக்க சாரீரம், அவளுடைய கவர்ச்சிகரமான சிரிப்பு, சிரிப்போடு அவள் காட்டிய மோகப் பார்வை, பாட்டுக்குத் தகுந்தாற்போல அவள் தன்னையறியாமல் போட்ட காலடித் தாளம், ஒவ்வொரு கூட்டிசை தொடங்கு முன்னரும் அவள் எழுப்பிய கிளர்ச்சியூட்டும் ஒலிகள்—இவை அனைத்தும் நாதம் நிரம்பிய ஆனுல் அபூர்வமாகவே மீட்டப்படுகின்ற நரம்பைத் தொட்டு விளையாடின. அவள் எதைப் பாடினுலும் அதில் தன் இதயம் முழுவதையும் கொட்டிப் பாடினுள். இல்யூஷ்கா கித்தாரில் அவளோடு சேர்ந்து பாடினுன். அவன் தன் முதுகையும் கால்களையும் அசைத்ததில் அவனுடைய சிரிப்பில், அவனுடைய மொத்த ஆளுமையில் அந்தப் பாட்டோடு

இரண்டறக் கலந்ததை வெளிப்படுத்தினன். தாளத்துக்குத் தகுந்தாற் போலத் தலையை ஆட்டிக் கொண்டு அவளையே உற்றுப்பார்த்துக் கொண்டு அந்தப் பாட்டை அதற்கு முன்பு கேட்காததைப் போல உணர்ச்சியோடும் அக்கறையோடும் அதைக் கேட்டுக் கொண்டிருந்தான். கடைசிச் சுருதி மறைந்ததும் அவன் திடீரென்று உடம்பை நிமிர்த்தினன், உலகத்தில் எல்லோரையும் காட்டிலும் தான் உயர்ந்தவன் என்று உணர்ந்ததைப் போல ஆணவத்தோடு, வேண்டுமென்றே கித்தார் வாத்தியத்தை முழங்காலில் தட்டி வீசினன், அது சுழன்று பறந்தது. தரையில் குதிகால்களைத் தட்டினன், தலை முடியைப் பின்னல் தள்ளி விட்டு அந்த ஜிப்சி பாடகர் கோஷ்டியைக் கோபமாகப் பார்த்தான். பிறகு தன் உடலின் ஒவ்வொரு நரம்பும் புடைத்து நிற்க நடனமாடத் தொடங்கினன்... உடனே இருபது குரல்கள் கணீரென்று ஒலித்தன. மிகவும் சிறப்பான, ஒப்புவமையில்லாத வகையில் தனித்துவத்தோடு பாட்டைப் பாடுவதில் ஒவ்வொருவரும் மற்றவர்களோடு போட்டியிட்டார்கள். அங்கேயிருந்த கிழவிகள் எழுந்து நிற்காமலேயே துள்ளிக் குதித்தார்கள், கைக்குட்டைகளை ஆட்டினர்கள், முறுவலித்தார்கள்; அந்தப் பாட்டின் சுருதி, தாளம் தப்பாமல் ஒருவரை மிஞ்சி ஒருவர் சத்தம் போட்டார்கள். நாற்காலிகளுக்குப் பின்னல் நின்று கொண்டிருந்த ஆண்கள் தலையைச் சாய்த்து, கழுத்து நரம்புகள் புடைக்கத் தங்களுடைய கனத்த கட்டைக் குரலில் பாடினர்கள்.

ஸ்தேஷ்கா உச்ச ஸ்தாயியில் பாடும் பொழு தெல்லாம் இல்யூஷ்கா அவளுக்கு உதவி செய்வதைப் போல தன்னுடைய கித்தாரை அருகே கொண்டுவருவான். இப்பொழுது அவ ளுடைய உச்ச ஸ்தாயி 'சி' குரலைக் கேட்கலாம் என்று அந்த அழகான இளைஞன் பரவசத் தோடு அறிவிப்பான்.

நடன இசையைப் பாடியபொழுது துனியா ஷா தோள்களையும் மார்பகங்களையும் குலுக்கிக் கொண்டு முன்னே வந்தாள். கோமகனுக்கு முன்னால் வட்ட மடித்துவிட்டு அறையின் நடுவே மிதந்து சென்றாள். துர்பீன் துள்ளிக் குதித்தார், உள்கோட்டைக் கழற்றி எறிந்து விட்டு அவளோடு சேர்ந்து நடனமாடினார். அவர் கால்களைக் கொண்டு அற்புதங்களைச் செய் தார். ஜிப்சிகள் ஒருவரையொருவர் பார்த்து அங்கீகாரப் புன்சிரிப்புகளைப் பரிமாறிக் கொண்டார்கள்.

போலீஸ் காப்டன் ஒரு துருக்கியரைப் போல காலைக் குறுக்கே போட்டு உட்கார்ந் திருந்தார். முஷ்டியால் தன்னுடைய மார்பில் தட்டி, 'சபாஷ்' என்று ஆரவாரம் செய்வார். பிறகு கோமகன் காலைப் பிடித்துக் கொண்டு, இரண்டாயிரம் ரூபிள் கொண்டு வந்தேன், இப்பொழுது என்னிடம் ஐநூறு ரூபிள்தான் இருக்கிறது, கோமகன் அனுமதித்தால் நான் எதையும் செய்யத் தயார் என்று தெரிவித் தார். வயோதிகரான குடும்பத் தலைவர் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு நான் வீட்டுக்குப் போக வேண்டுமென்றார். ஆனால்

யாரும் அவரைப் போக விடவில்லை. அந்த அழகான இளைஞன் ஒரு ஜிப்சி பெண்ணைத் தன்னோடு வால்ட்ஸ் நடனமாடுமாறு நயந்து பேசி இணங்க வைத்தான். கோமகன் தனது நண்பர் என்பதை மற்றவர்களுக்குக் காட்ட விரும்பிய குதிரைப் படை அதிகாரி மூலையிலிருந்து வெளியே வந்து கோமகனின் கழுத்தைச் சுற்றிக் கைகளைப் போட்டுக்கொண்டார்.

''ஆ! அருமை நண்பரே! எங்களைவிட்டு எங்கே போனீர்கள்?'' என்று கேட்டார். கோமகன் பதிலளிக்கவில்லை. அவர் வேறு எதைப் பற்றியோ சிந்தித்துக் கொண்டிருந்தார் என்பது தெரிந்தது. ''எங்கே போனீர்கள்? கோமகனே! நீங்கள் தந்திரக்காரர்தான். எங்கே சென்றீர்கள் என்பது எனக்குத் தெரியும்'' என்றார்.

என்ன காரணத்தாலோ அந்த நெருக்கம் துர்பீனுக்கு அதிருப்தியைக் கொடுத்தது. அவர் சிரிக்காமல், ஒன்றும் பேசாமல் குதிரைப் படை அதிகாரியின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். திடீரென்று அவரை மட்டரகமாக, மனதில் உறுத்தும்படியாக சரமாரியாகத் திட்டினார். குதிரைப் படை அதிகாரி திடுக்கிட்டார். இது வேடிக்கையா அல்லது வினையா என்று அவரால் முடிவு செய்ய இயலவில்லை. கடைசியில் அவர் சிரித்துக் கொண்டே அந்த ஜிப்சி பெண்ணிடம் திரும்பிச் சென்று ஈஸ்டர் பண்டிகைக்குப் பிறகு அவளை நிச்சயம் திருமணம் செய்து கொள்வதாக உறுதியளித்தார். அங்கேயிருந்த எல்

லோரும் ஒரு பாட்டைப் பாடினார்கள், பிறகு இன்னொரு பாட்டைப் பாடினார்கள். மறு படியும் நடனமாடினார்கள், ஒருவரையொருவர் கௌரவிப்பதற்காகப் பாடினார்கள், அற்புத மாக நேரத்தைக் கழிப்பதாகக் கற்பனை செய்து கொண்டார்கள். ஷாம்பேன் மது ஆறாக ஓடியது. கோமகன் அதிகமாகக் குடித்தார். அவர் கண்கள் ஈரமடைந்தன. ஆனால் அவர் தள்ளாடவில்லை. முன் எப்போதுமில்லாத வகை யில் அவர் சிறப்பாக நடனமாடினார், உறுதி யான குரலில் பேசினார், ஜிப்சிகள் கூட் டாகப் பாடியபொழுது அவரும் சேர்ந்து கொண்டார். ஸ்தேஷ்கா ''காதற் சிறகுகளை மென்மையாக அசைத்தால்'' என்ற பாடலைப் பாடிய பொழுது அவரும் இணைந்து பாடினார். அவர்கள் பாடிக் கொண்டிருந்த ஒரு பாட் டின் மத்தியில் மதுக் கடையின் உரிமையாளர் குறுக்கிட்டார்; காலை சுமார் மூன்று மணி யாகி விட்டது, எனவே விருந்தினர்கள் எல் லோரும் போக வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

கோமகன் அவருடைய கழுத்துக் காலர் முனையைப் பிடித்துத் தூக்கி உட்கார்ந்து கொண்டே நடனமாடுமாறு உத்தரவிட்டார். அவர் மறுத்தார். கோமகன் ஒரு ஷாம்பேன் பாட்டிலைப் பிடுங்கினார். மதுக்கடை உரிமை யாளரைத் தலைகீழாக நிறுத்தி அவரை அப் படியே பிடித்துக் கொள்ளுமாறு மற்றவர் களைக் கேட்டுக் கொண்டார். அந்தப் பொது மகிழ்ச்சியாரவாரத்துக்கு நடுவே அந்த பாட்

டிலிருந்த மது முழுவதையும் அவர் மீது ஊற்றினர்.

வானத்தில் முன்பே வெளிச்சம் தோன்றி விட்டது. கோமகனைத் தவிர மற்ற எல்லோருமே வெளுத்துக் களைத்துவிட்டார்கள்.

''ஆனல் நான் மாஸ்கோவுக்குப் புறப்பட வேண்டும். தயாரிப்புகள் செய்ய நேரமாகிவிட்டது'' என்று துர்பீன் திடீரென்று எழுந்து நின்று கொண்டு கூறினர். ''கனவான்களே! என்னேடு பயணிகள் விடுதிக்கு வந்து என்னை வழியனுப்புங்கள்... அங்கே தேநீர் அருந்தலாம்'' என்றார்.

எல்லோரும் ஒத்துக் கொண்டார்கள். குடும்பத் தலைவர் மட்டும் தூங்கிக்கொண்டிருந்தார். எனவே அவரை அங்கேயே விட்டுவிட்டுப் புறப்பட்டார்கள். கதவுக்குப் பக்கத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மூன்று பனிச் சறுக்கு வண்டிகளில் எல்லோரும் நெருக்கியடித்து ஏறிக் கொண்டு பயணிகள் விடுதிக்குப் புறப்பட்டார்கள்.

## 7

கோமகன் தன் விருந்தினர்கள் மற்றும் ஜிப்சிகள் எல்லோருடனும் பயணிகள் விடுதியின் பொது அறைக்குள் நுழைந்த உடனே ''குதிரைகளைப் பூட்டுங்கள்!'' என்று உத்தரவு கொடுத்தார். ''ஸாஷா!—ஜிப்சி ஸாஷா அல்ல, என்னுடைய ஸாஷா! — மோசமான குதிரைகளைக் கொடுத்தால் தோலை உரித்துவிடுவேன் என்று அஞ்சல் நிலைய அதிகாரியிடம்

சோல். எங்களுக்குத் தேநீர் கொண்டு வா! ஸவல்ஷேவ்ஸ்கி! நீ தேநீரை கவனி. நான் இலியீனுடைய அறைக்குப் போய் அவர் எப்படி இருக்கிறுர் என்பதை கவனிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு அவர் உஹ்லானின் அறையை நோக்கிச் சென்றுர்.

அப்பொழுதுதான் இலியீன் சீட்டாட்டத்தை முடித்திருந்தார். கடைசி கோபெக் வரை தன்னிடமிருந்த எல்லாப் பணத்தையுமே அவர் தோற்றுவிட்டார். இப்பொழுது பிய்ந்து போன குதிரை முடி சோபாவில் படுத்துக் கொண்டு ஒவ்வொரு முடியாகப் பிய்த்து அதை வாயில் போட்டுக் கடிப்பதும் கீழே துப்புவதுமாக இருந்தார். மேசை முழுவதும் சீட்டுகள் குவியலாகக் கிடந்தன. அந்த மேசையின் மேலிருந்த இரண்டு மெழுகு வர்த்தி விளக்குகள்—ஒரு மெழுகுவர்த்தி அடியிலிருக்கும் காகிதம் வரை எரிந்து விட்டது—சன்னல் வழியாக வந்து கொண்டிருந்த காலைக் கதிரவனின் இளங் கதிர்களோடு பலவீனமாகப் போராடிக் கொண்டிருந்தன. அந்த உஹ்லானின் மனதில் எந்த சிந்தனையும் இல்லை. அவருடைய அறிவுத்திறன் முழுவதுமே சூதாட்டக் காய்ச்சல் என்ற அடர்த்தியான மூடுபனியில் மூழ்கிவிட்டது. அவர் சிறிது கூட வருத்தமடையவில்லை. ஒரு கட்டத்தில் அடுத்தபடியாக என்ன செய்வது, ஒரு கோபெக் கூட இல்லாமல் இந்த இடத்தை விட்டு எப்படிப் போவது, படைப் பிரிவுக்குச் சொந்தமான பதினைந்தையாயிரம் ரூபிள்களை எவ்வாறு

திருப்பிக் கட்டுவது, படைப் பிரிவின் தளகர்த்தர் என்ன சொல்வாரோ, தன்னுடைய தாயார் என்ன சொல்வாளோ, தன்னுடைய தோழர்கள் என்ன சொல்வார்களோ என்று அவர் சிந்திக்க முயற்சி செய்தது உண்மையே. உடனே தன்னைப் பற்றி அதிகமான கவலையும் அருவருப்பும் அவரைப் பீடித்தபடியால் எல்லாவற்றையுமே மறந்து விடுவதற்காகக் கீழே குதித்துத் தரையில் முன்னும் பின்னுமாக நடந்தார். அதிலும் தரையிலிருந்த மரப்பலகைகளுக்கு இடையே உள்ள விரிசல்களின் மீது மட்டுமே கவனத்தோடு நடந்தார். சீட்டாட்டத்தில் அவர் கலந்து கொண்ட எல்லா ஆட்டங்களைப் பற்றியும்—மிகவும் அதிகமான அளவுக்கு நுணுக்கமான விவரங்களைக் கூட—மறுபடியும் நினைத்துப் பார்த்தார். அவர் அநேகமாக வெற்றியடைந்த ஆட்டத்தை நினைவு கூர்ந்தார்—அவரிடம் ஒரு ஒன்பதும் ஆடுதன் ராஜாவும் இருந்தது, அதன் மீது இரண்டாயிரம் ரூபிள்களைக் கட்டினார். வலப் பக்கத்தில் — ராணி; இடப் பக்கத்தில் ஆசு; வலப் பக்கத்தில் டயமன் ராஜா மற்றும் எல்லாமே போய்விட்டது. வலப் பக்கத்தில் ஆறும் இடப் பக்கத்தில் டயமன் ராஜாவும் இருந்திருந்தால் அவர் இழந்த எல்லாப் பணத்தையும் திரும்பப் பெற்றிருப்பார். மறுபடியும் அந்தப் பணம் முழுவதையும் பந்தயமாகக் கட்டி சுத்தமாக இன்னொரு பதினையாயிரம் வெற்றியடைந்திருப்பார். அப்படி நடந்திருந்தால்—தன்னுடைய படையின் தளகர்த்தரிடமிருந்து

குதிரையை வாங்கியிருக்கலாம். அதோடு ஒரு வண்டியையும் ஒரு ஜோடிக் குதிரைகளையும் வாங்கியிருக்கலாம். வேறு எதை வாங்கியிருக்கலாம்? ஏன்... ஏன்... ஓ! அது அற்புதமாக, அற்புதமாக இருந்திருக்கும்.

அவர் மறுபடியும் சோபாவில் படுத்துக் கொண்டு குதிரை முடிகளைக் கடித்துக் கொண்டிருந்தார்.

''ஏழாவது அறையில் ஏன் பாடிக் கொண்டிருக்கிறார்கள்?'' என்று நினைத்தார். ''துர்பீன் விருந்தளிக்கிறார் போலும். நானும் அவர்களோடு சேர்ந்து நன்றாகக் குடித்தால் என்ன?''

அந்த நேரத்தில் கோமகன் உள்ளே வந்தார்.

''என்ன விஷயம்? உன்னை சுத்தமாகத் துடைத்து விட்டார்களா?'' என்று கேட்டார்.

''நான் தூங்குவதைப் போலப் பாசாங்கு செய்ய வேண்டும்'' என்று இலியீன் நினைத்தார். ''இல்லாவிட்டால் ஏதாவது பேச வேண்டும். எனக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது.''

ஆனால் துர்பீன் அவருக்குப் பக்கத்தில் வந்து தலை முடியைக் கோதினார்.

''அப்படியானால் உன்னை சுத்தமாக மொட்டையடித்துவிட்டார்களா? அருமை நண்பனே! எல்லாப் பணத்தையுமே தோற்றுவிட்டாயா? சொல்.''

இலியீன் பதில் சொல்லவில்லை.

கோமகன் அவருடைய சட்டைக் கையைப் பிடித்து இழுத்தார்.

''ஆமாம்! நான் தோற்றுவிட்டேன். அதைப் பற்றி உங்களுக்கென்ன?'' என்று இலியீன் தூக்கச் சடவோடு பதிலளித்தார். அவருடைய குரலில் அலட்சியம் தொனித்தது. அவர் புரண்டு கூடப் படுக்கவில்லை.

''எல்லாவற்றையுமா?''

''ஆமாம். அதற்கென்ன? எல்லாவற்றையுமே தான். அதைப் பற்றி உங்களுக்கென்ன?''

''சொல்வதைக் கேள். ஒரு தோழன் என்ற முறையில் என்னிடம் உண்மையைச் சொல்'' என்ருர் கோமகன். மது அவரிடம் கனிவான உணர்ச்சிகளை ஏற்படுத்தியிருந்தது. அவர் அந்த இளைஞரின் தலை முடியைக் கோதிவிட்டுக் கொண்டிருந்தார். ''எனக்கு உண்மையிலேயே உன்னைப் பிடித்துவிட்டது. உண்மையைச் சொல். நீ இராணுவத்துக்குச் சொந்தமான பணத்தைத் தோற்றுவிட்டாய் என்ருல் நான் உனக்கு உதவி செய்கிறேன்... கால தாமதமாவதற்குள் என்னிடம் செல்லி விடு. அது படைப் பிரிவின் பணமா?''

இலியீன் சோபாவிலிருந்து துள்ளிக் குதித்தார்.

''நான் உங்களிடம் சொல்ல வேண்டுமென்று உண்மையிலேயே நீங்கள் விரும்பினுல் தயவு செய்து அந்த மாதிரி... அந்த மாதிரி என்னிடம் பேசாதீர்கள். தயவு செய்து என்னிடம் பேசவே வேண்டாம். நான் செய்யக் கூடிய ஒரே காரியம் — துப்பாக்கியால் தலையில் சுட்டுக் கொள்வதுதான்!'' அவர் ஒரு கண நேரத்துக்கு முன்னர் குதிரையைப் பற்றிக்

கனவு கண்ட போதிலும் இப்பொழுது உண்மையாகவே எல்லா நம்பிக்கையையும் இழந்து கத்தினார், தலையைக் கைகளில் பிடித்துக் கொண்டு கண்ணீர் விட்டார்.

''இது என்ன? பெண்ணைப்போல நடந்து கொள்கிறாயே? நாங்கள் எல்லோருமே இப்படிப்பட்ட நிலைமைகளில் இருந்திருக்கிறோம். அதனால் பெரிய ஆபத்து ஒன்றும் ஏற்படாது. நாம் நிலைமையைச் சமாளித்துவிட முடியும் என்று நினைக்கிறேன். நான் வருகிறவரையிலும் இங்கே இரு.''

கோமகன் வெளியே புறப்பட்டார்.

''நிலவுடைமையாளர் லுஹ்னேவ் எந்த அறையில் தங்கியிருக்கிறார்?'' என்று அங்கே வேலை பார்க்கும் சிறுவனைக் கேட்டார்.

அந்தச் சிறுவன் அறையைக் காட்டுவதாக அவரைக் கூட்டிக் கொண்டு சென்றான். அந்த அறையில் தன்னுடைய எசமானர் இப்பொழுது தான் வந்தார், உடைகளைக் கழற்றிக் கொண்டிருக்கிறார் என்று அவருடைய பணியாள் எவ்வளவோ மறுப்புக் கூறிய போதிலும் கோமகன் உள்ளே சென்றார். லுஹ்னேவ் மேலங்கி அணிந்து மேசைக்கு முன்னால் அமர்ந்து தனக்கு முன்னால் குவியலாகக் கிடந்த நோட்டுகளை எண்ணிக் கொண்டிருந்தார். அந்த மேசையின் மேல் ரைன் பிரதேச ஒயின் ஒரு பாட்டில் வைக்கப்பட்டிருந்தது. அவர் அதை மிகவும் விரும்பிச் சாப்பிடுவார். அந்த விலையுயர்ந்த மதுவைக் குடிப்பதற்குச் சீட்டாட்டத்தில் அவரடைந்த வெற்றிகள் உதவி செய்தன.

உள்ளே வருவது யார் என்று தெரியாததைப் போல லுஹ்ஞேவ் கோமகனைத் தன்னுடைய மூக்குக் கண்ணுடியின் வழியாகக் கடுகடுப்பான, பாசமற்ற முறையில் பார்த்தார்.

''என்னைத் தெரியவில்லையா?'' என்று கோமகன் துணிவோடு மேசையை நோக்கி நடந்து கொண்டே கேட்டார்.

லுஹ்ஞேவ் கோமகனை அடையாளம் கண்டு கொண்டார்.

''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

''நான் உங்களோடு சீட்டாட விரும்புகிறேன்'' என்று சோபாவின் மீது உட்கார்ந்தவாறு கோமகன் கூறினர்.

''இப்பொழுதா?''

''ஆமாம்.''

''கோமகன் அவர்களே! இன்னெரு சமயத்தில் நான் மகிழ்ச்சியோடு விளையாடத் தயார். இப்பொழுது நான் களைப்படைந்திருக்கிறேன். நான் தூங்கப் போகிறேன். ஒயின் குடிக்கிறீர்களா? மிகவும் உயர்தரமான ஒயின்.''

''நான் இப்பொழுது விளையாட விரும்புகிறேன்.''

''இன்றிரவில் இதற்கு மேல் சீட்டாட எனக்கு உத்தேசமில்லை. ஒருவேளை மற்ற கனவான்களில் யாராவது உங்களோடு விளையாடுவதற்கு விரும்பலாம். கோமகன் அவர்களே! என்னல் முடியாது. என்னை மன்னிப்பீர்கள் என்று நம்புகிறேன்.''

''அப்படியானல் விளையாட மாட்டீர்களா?''

கோமகனின் விருப்பத்தை நிறைவேற்ற முடியாததற்குத் தன்னுடைய வருத்தத்தைத் தெரிவிப்பதற்காக லுஹ்றேவ் தன்னுடைய தோள்களை லேசாகக் குலுக்கினர்.

''எவ்வளவு கொடுத்தாலும்?''

அவர் மறுபடியும் தோளைக் குலுக்கினர்.

''நான் மிகவும் மனமாரக் கேட்கிறேன்... விளையாடுவீர்களா, மாட்டீர்களா?..''

அமைதி.

''விளையாடுவீர்களா?'' என்று கோமகன் திரும்பக் கேட்டார். ''கவனியுங்கள். இப்பொழுது!''

லுஹ்றேவ் இன்னும் அமைதியாகவே இருந்தார். கோமகனின் முகம் வேகமாக இருண்டது. லுஹ்றேவ் தன்னுடைய மூக்குக் கண்ணாடிக்கு மேலே அவர் முகத்தை வேகமாக ஏறிட்டுப் பார்த்தார்.

''விளையாடுவீர்களா?'' என்று கோமகன் பலமாகக் கத்தினர். அவர் தன் கையை மேசையின் மீது ஓங்கியடித்த வேகத்தில் ரைன் ஒயின் பாட்டில் மேசையின் மீது விழுந்து ஒயின் கீழே வழிந்தது. ''நீங்கள் ஏமாற்றி விளையாடியதால் வெற்றி பெற்றீர்கள், இல்லையா? அது உங்களுக்கே தெரியும். இப்பொழுது விளையாடுகிறீர்களா? நான் மூன்ருவது தடவையாக உங்களைக் கேட்கிறேன்.''

''நான் விளையாட மாட்டேன் என்று சொல்லிவிட்டேன். கோமகன் அவர்களே! உங்கள் நடத்தை மிகவும் விசித்திரமாக இருக்கிறது. கௌரவமான மனிதர்கள் அறைக்குள் திடுதிப்

பென்று நுழைவதில்லை, ஒரு மனிதனின் கழுத்துக்கு நேராகக் கத்தியை நீட்டுவதும் இல்லை'' என்று லுஹ்னேவ் தன்னுடைய கண் களை உயர்த்தாமலேயே கூறினார்.

அங்கே நிலவிய சிறிது நேர இடைவெளி யில் கோமகனின் முகம் மென்மேலும் வெறுப் பாக மாறியது. திடீரென்று தலையில் விழுந்த பயங்கரமான அடியில் லுஹ்னேவ் பொறிகலங் கினார். அவர் பணத்தை அள்ளிக்கொண்டே சோபாவின் மீது விழுந்தார். பைத்தியம் பிடித் ததைப் போல, உடல் சிலிர்க்கும் படியாகக் கூச்சல் போட்டார். எப்பொழுதும் அமைதியாக வும் கண்ணியமாகவும் இருக்கும் ஒரு நபரிட மிருந்து அத்தகைய கூச்சலை யாருமே எதிர் பார்த்திருக்க மாட்டார்கள். துர்பீன் பணத்தை வாரிக்கொண்டார். எசமானரின் கூக்குரலைக் கேட்டு ஓடிவந்த பணியாளைப் பிடித்துத் தள்ளி விட்டுக் கதவை நோக்கிச் சென்றார்.

''என்னை வாட்சண்டைக்குக் கூப்பிடுவதா னால் நான் அதற்குத் தயார். என் அறையில் இன்னும் அரை மணி நேரம்வரை இருப்பேன்'' என்று கதவுக்கருகே போன கோமகன் கூறினார்.

''திருடன்! போக்கிரி!..'' என்ற சத்தம் அறைக்குள்ளேயிருந்து வந்தது. ''உன்னை நீதிமன்றத்தில் கொண்டு போய் நிறுத்து வேன்!''

நிலைமையைச் சமாளித்துவிட முடியும் என்று கோமகன் உறுதியளித்ததை இலியீன் சிறி தும் நம்பவில்லையாதலால் அவர் இன்னும் சோபாவின் மீது படுத்திருந்தார். மனமுறிவின்

கண்ணீர் அவரைத் துன்புறுத்தியது. அவர் மூளையில் நிறைந்து நின்ற காட்சிகளின் விசித்திரமான கலவையில் கோமகனின் கனிவு நிறைந்த அனுதாபம் ஊடுருவி அவருடைய பரிதாபகரமான நிலைமையை அங்கீகரிக்கின்ற விழிப்பை ஏற்படுத்தியிருந்தது. அந்த விழிப்பு இன்னும் அவரிடம் நீடித்தது. வளமான நம்பிக்கைகளைக் கொண்டிருந்த அவருடைய இளமை, அவருடைய கௌரவம், நண்பர்களின் மரியாதை, பாசம் மற்றும் நட்பைப் பற்றிய கனவுகள்—எல்லாமே நிரந்தரமாக அழிந்து விட்டன. கண்ணீர் ஊற்றுக் கூட வற்றிவிடத் தொடங்கியிருந்தது. இனி ஒரு நம்பிக்கையுமே இல்லை என்ற உணர்ச்சி—மிகவும் நிதானமாக — மென்மேலும் உறுதியாக அவரைப் பிடித்துக் கொண்டிருந்தது. தற்கொலையைப் பற்றிய சிந்தனைகள் பீதியும் வெறுப்பும் கலந்த உணர்ச்சியை இனியும் அவரிடம் ஏற்படுத்தவில்லை; அவை அதிகமான வற்புறுத்தலோடு அவரிடம் தோன்றின. இந்தக் கட்டத்தில் கோமகன் உறுதியான காலடிகளோடு நடந்து வருகின்ற சத்தம் கேட்டது.

துர்பீனுடைய முகத்தில் சீற்றத்தின் அறிகுறிகள் இன்னும் தெரிந்தன. அவர் கரங்கள் லேசாக நடுங்கிக் கொண்டிருந்தன. ஆனால் அவருடைய கண்கள் அன்புநிறைந்த உற்சாகத்தாலும் திருப்தியாலும் பிரகாசித்தன.

''இதோ! நான் அந்தப் பணத்தைத் திரும்பக் கொண்டு வந்துவிட்டேன்!'' என்று கோமகன்

குவியலாக இருந்த நோட்டுக் கட்டுகளை மேசையின் மீது தூக்கிப் போட்டவாறு கூறினார். ''எல்லாம் சரியாக இருக்கிறதா என்று எண்ணிப் பார். நான் புறப்படப் போகிறேன். பொது அறைக்குச் சீக்கிரமாக வா'' என்று அந்த உஹ்லானின் முகத்தில் தோன்றிய ஆனந்தத்தையும் நன்றியையும் கவனிக்காததைப் போலப் பாசாங்கு செய்தபடியே கூறினார். ஒரு ஜிப்சி இசையைச் சீட்டியடித்தபடியே அந்த அறையிலிருந்து வெளியே சென்றார்.

## 8

ஸாஷா தன்னுடைய இடுப்பில் வாரை இறுக்கிக் கட்டிக் கொண்டு குதிரைகள் தயார் என்று அறிவித்தான். ஆனால் மார்ஷல் கொடுத்த நடன விருந்தின் போது யாரோ ஒரு போக்கிரி கோமகனுடைய நீண்ட கோட்டை (அதன் பர் காலரையும் சேர்த்து அதன் மதிப்பு முந்நூறு ரூபிள்கள் இருக்கும்) எடுத்துக் கொண்டு தன்னுடைய அசிங்கமான நீல நிற மேலங்கியை மாற்றி வைத்துவிட்டான். எனவே அந்தப் போக்கிரியை முதலில் கண்டுபிடித்து அந்தப் பெரிய கோட்டைத் திரும்ப வாங்க வேண்டுமென்று வற்புறுத்தினான். ஆனால் துர்பீனே அந்த நீண்ட கோட்டை வாங்க வேண்டிய அவசியமில்லை என்று சொல்லிவிட்டு உடை மாற்றிக் கொள்வதற்காகத் தன்னுடைய அறைக்குச் சென்றார்.

குதிரைப் படை அதிகாரி தன்னுடைய ஜிப்சி பெண்ணுக்குப் பக்கத்தில் மௌனமாக உட்கார்ந்து கொண்டு இடைவிடாமல் இருமிக் கொண்டிருந்தார். போலீஸ் காப்டன் வோட்கா கொண்டு வருமாறு உத்தரவிட்டார். அங்கேயிருந்த கனவான்கள் அனைவரையும் தன் வீட்டுக்கு வந்து காலைச் சிற்றுண்டி அருந்துமாறு அழைத்தார். தன் மனைவி கீழே இறங்கி வந்து ஜிப்சிகளோடு நடனமாடுவாள் என்றும் உறுதியளித்தார். பியானோ வாத்தியத்தில் அதிகமான ஆன்ம உணர்ச்சி இருக்கிறது, கித்தாரைக் கொண்டு அப்படி இசைக்க முடியாது என்று அந்த அழகான இளைஞன் இல்யூஷ்காவிடம் சொல்லிக் கொண்டிருந்தான். அரசாங்க அதிகாரி ஒரு மூலையில் உட்கார்ந்து தேநீர் அருந்திக் கொண்டிருந்தார். அப்பொழுது உதயமாகிவிட்டபடியால் தன்னுடைய களியாட்டத்தைப் பற்றி அவர் வெட்கமடைவதைப் போலத் தோன்றினார். ஜிப்சிகள் தங்களுக்கிடையே தங்கள் மொழியில் விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அங்கேயிருந்த கனவான்களை கௌரவிப்பதற்காக இன்னொரு பாட்டுப் பாட வேண்டும் என்று சிலர் வற்புறுத்தினார்கள். ஆனால் barorai (அதாவது ஜிப்சி மொழியில் ''கோமகன்'' அல்லது ''இளவரசர்'', இன்னும் துல்லியமாகச் சொல்வதென்றால், ''மாபெரும் பிரபு'') கோபமடைவார் என்று கூறி ஸ்தேஷ்கா மறுப்புத் தெரிவித்தாள். சுருக்கமாகச் சொல்வதென்றால் அங்கே குடி

மயக்கத்தின் கடைசி அறிகுறியும் மறைந்து கொண்டிருந்தது.

''சரி, நாம் பிரிவதை முன்னிட்டு ஒரு பாட்டுப் பாடுங்கள். பிறகு எல்லோரும் வீட்டுக்குப் போக வேண்டியதுதான்'' என்று பிரயாண உடையணிந்துகொண்டு அறைக்குள் நுழைந்த கோமகன் கூறினர். அவர் முன் எப்போதுமில்லாத அளவுக்குப் புதுமையாக, அழகாக, உற்சாகமாகத் தோன்றினர்.

ஜிப்சிகள் கடைசிப் பாட்டைப் பாடுவதற்காக வட்டமாக நின்று கொண்டிருந்தபொழுது இலியீன் கையில் ஒரு நோட்டுக் கத்தையோடு வந்து கோமகனைத் தனியாகக் கூப்பிட்டார்.

''என்னிடமிருந்த இராணுவப் பணம் பதினைந்தாயிரம் ரூபிள்கள் மட்டுமே. ஆனல் நீங்கள் பதினறுயிரத்து முந்நூறு ரூபிள்கள் கொடுத்திருக்கிறீர்கள். அதிகப் பணம் உங்களுடையதாக இருக்க வேண்டும்'' என்ருர்.

''சபாஷ்! அப்படியானல் பணத்தைக் கொடுங்கள்!''

இலியீன் கோமகனிடம் பணத்தைக் கொடுத்தபொழுது அவரை வெட்கத்தோடு ஏறிட்டுப் பார்த்தார். ஏதோ சொல்ல உத்தேசிப்பதைப் போல வாயைத் திறந்தார். ஆனல் பேச முடியாமல் வெட்கத்தோடு நின்ருர். கண்களில் கண்ணீர் முத்துக்கள் திரண்டன. கோமகனின் கையைப் பிடித்து பலமாக இறுக்கினர்.

''போடா! இல்யூஷ்கா!.. கேள்... இதோ கொஞ்சம் பணம். பாட்டுப் பாடிக் கொண்டு

நகரத்தின் எல்லை வரை வந்து என்னை வழி யனுப்புங்கள்'' என்று சொல்லிக்கொண்டு கோமகன் இலியீன் கொடுத்த ஆயிரத்து முந்நூறு ரூபிள்களையும் ஜிப்சியின் கித்தார் வாத்தியத்தின் மேல் போட்டார். ஆனால் முந்திய இரவில் குதிரைப் படை அதிகாரியிடம் கடனாக வாங்கிய நூறு ரூபிள்களைத் திருப்பிக் கொடுக்க மறந்துவிட்டார்.

காலை மணி பத்தாகிவிட்டது. ஜிப்சிகள் கூட்டம், போலீஸ் காப்டன், குதிரைப் படை அதிகாரி, அழகான இளைஞன், இலியீன், ஓரங்களில் கரடித் தோல் தைக்கப்பட்ட நீலநிற மேலங்கியை அணிந்த கோமகன் ஆகியோர் பயணிகள் விடுதியின் படிக்கட்டுகளில் இறங்கிவந்த பொழுது சூரியன் ஏற்கெனவே வீடுகளின் கூரைக்கு மேலே வந்துவிட்டது, தெருக்களில் மக்கள் ஏராளமாகப் போய்க் கொண்டிருந்தார்கள், கடைக்காரர்கள் கடைகளின் கதவுகளைத் திறந்து வைத்து வெகு நேரமாகிவிட்டது. பிரபுக்களும் அரசாங்க அதிகாரிகளும் சறுக்கு வண்டிகளின் மேல் உட்கார்ந்து போய்க் கொண்டிருந்தார்கள். கடைத் தெருவில் சீமாட்டிகள் ஒரு கடையிலிருந்து மற்றொரு கடைக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். பகற்பொழுது பிரகாசமாக இருந்தது. பனி உருகிக் கொண்டிருந்தது. மூன்று பனிச் சறுக்கு வண்டிகள் பயணிகள் விடுதியின் முன்னால் வந்து நின்றன. ஒவ்வொரு வண்டியிலும் வால் மடக்கிக் கட்டப்பட்ட மூன்று குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன. அந்த

குதூகலமான கோஷ்டியினர் எல்லோரும் வண்டிகளில் ஏறிக் கொண்டார்கள். கோமகன், இலியீன், ஸ்தேஷ்கா, இலியூஷ்கா மற்றும் கோமகனின் பணியாளான ஸாஷா முதல் வண்டியில் உட்கார்ந்தார்கள். பிளூஹர் பரபரப்பில் தன்னை மறந்து வாலை ஆட்டிக் கொண்டு குதிரையைப் பார்த்துக் குரைத்தது. மற்ற கனவான்களும் ஜிப்சிகளும் மற்ற வண்டிகளில் ஏறிக் கொண்டார்கள். பயணிகள் விடுதியை விட்டுப் புறப்பட்ட உடனே வண்டிகள் இணையாக ஓடின. ஜிப்சிகள் கூட்டாகப் பாடத் தொடங்கினார்கள்.

அவர்கள் இப்படிப் பாடிக்கொண்டும் சிறிய மணிகளை ஆட்டிக் கொண்டும் அந்த நகரம் பூராவிலும் வண்டிகளில் சென்று எல்லைக் கதவுகளை அடைந்தார்கள். போகும் வழியில் எதிரே வந்த எல்லா வண்டிகளையும் தங்கள் பாதையிலிருந்து விலகி நடைபாதைக்கு ஓடுமாறு விரட்டினார்கள்.

கௌரவமிக்க கனவான்கள் ஜிப்சி கூட்டத்தைச் சேர்ந்த பெண்களோடும் குடிமயக்கத்திலிருந்த ஜிப்சி ஆண்களோடும் சேர்ந்து பாடிக் கொண்டு நகரத் தெருக்களில் பட்டப் பகலில் சறுக்கு வண்டிகளில் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்த கடைக்காரர்கள் மற்றும் பாதசாரிகள்—குறிப்பாக அவர்களை நன்றாகத் தெரிந்தவர்கள் — மிகவும் வியப்படைந்தார்கள்.

நகரத்தின் எல்லைக் கதவுகளின் வழியாகச் சென்றதும் சறுக்கு வண்டிகள் நின்றன. எல்

லோரும் கோமகனிடம் விடைபெற்றுக் கொண்டார்கள்.

இலியீன் புறப்படுவதற்கு முன்பு அதிகமாகக் குடித்திருந்ததோடு வண்டிக் குதிரைகளைத் தானே ஓட்டிக் கொண்டு வந்தார். அவருக்கு திடீரென்று வருத்தமேற்பட்டது. இன்னொரு நாள் தங்கியிருக்குமாறு கோமகனுடைய மனதை மாற்ற அவர் முயற்சி செய்தார். அது நடைபெறாது என்பதைப் புரிந்து கொண்டதும் அவர் கண்களில் கண்ணீர் வடிய சிறிதும் எதிர்பாராத வகையில் தன் புதிய நண்பரைக் கட்டிப் பிடித்துக் கொண்டார். தன்னுடைய படைக்குத் திரும்பிய உடனே துர்பீன் இருக்கும் ஹுஸ்ஸார் படைக்குத் தன்னை மாற்ற வேண்டுமென்று மனுச் செய்யப் போவதாக வாக்குறுதியளித்தார். கோமகன் குறிப்பிடத்தக்க வகையில் மிகவும் உற்சாகத்தோடிருந்தார். காலையிலிருந்து தன்னோடு நெருக்கமாக இருந்த குதிரைப் படை அதிகாரியை அவர் ஒரு பனிக்குவியலுக்குள் தள்ளினார். பிளூஹரை போலீஸ் காப்டன் மீது ஏவினார். ஸ்தேஷ்காவைத் தன் கைகளில் வாரித் தூக்கி அவளை மாஸ்கோவுக்குக் கொண்டு போகப் போவதாக பயமுறுத்தினார். கடைசியில் வண்டியில் தாவிக்குதித்து உட்கார்ந்தார். பிளூஹரைத் தனக்குப் பக்கத்தில் உட்காரவைத்துக் கொண்டார். ஆனால் அந்த நாய் வண்டியின் நடுவில் நிற்பதற்கே விரும்பியது. கோமகனின் நீண்ட கோட்டைக் கண்டு பிடித்து அதைத் தங்களிடம் அனுப்பி வைக்கு

மாறு மறுபடியும் குதிரைப் படை அதிகாரி யைக் கேட்டுக் கொண்ட பிறகு ஸாஷா வண்டி யோட்டியின் இருக்கை மீது தாவி உட்கார்ந் தான். ''போய் வருகிறோம்!'' என்று கோம கன் கத்தினார். தன் தொப்பியைத் தூக்கித் தலைக்கு மேலே ஆட்டினார். குதிரைகளைப் பார்த்து சறுக்கு வண்டியோட்டியைப் போல சீட்டியடித்தார். மூன்று சறுக்கு வண்டிகளும் வெவ்வேறு திசைகளில் புறப்பட்டன.

பனிமூடிய சமவெளிப் பிரதேசம் சலிப்பூட்டு கின்ற முறையில் நெடுந்தொலைவு வரை நீண் டிருந்தது. அதன் குறுக்கே அழுக்குப் பிடித்த மஞ்சள் நிற நாடாவைப் போலப் பாதை அமைந்திருந்தது. உருகிக் கொண்டிருக்கும் பனியின் மேல் தகட்டின் மீது நடனமாடிப் பளிச் சிட்ட சூரிய ஒளி முகத்திலும் முதுகிலும் பட்ட பொழுது வெப்பத்தினால் சுகமான உணர்ச்சி ஏற்பட்டது. வியர்வை வழிந்து கொண்டிருந்த குதிரைகளின் பின்புறத்திலிருந்து நீராவி மேலே வந்தது. சறுக்கு வண்டியின் மணி கண கணத்தது. அதிகமாகச் சரக்கு ஏற்றப்பட்ட சறுக்கு வண்டிக்குப் பக்கத்தில் ஓடிவந்து கொண்டிருந்த விவசாயி கோமகனுக்கு வழி விடுவதற்காகக் கடிவாளத்துக்குப் பதிலாக உப யோகப்படுத்தியிருந்த கயிற்றை அவசரமாக இழுத்தான். பாதையின் ஓரத்தில் கிடந்த பனிச் சேற்றில் அவனுடைய மரக்கட்டைச் செருப்புகள் அழுந்தின. சிவப்பு முகத்தைக் கொண்ட பருமனான விவசாயப் பெண், தான்

அணிந்திருந்த ஆட்டுத் தோல் கோட்டின் மார்புக்குள் ஒரு குழந்தையைத் திணித்துக் கொண்டு இன்னொரு சறுக்கு வண்டியில் உட்கார்ந்திருந்தாள். அந்த வண்டியில் பூட்டப்பட்டிருந்த வெள்ளைக் குதிரையைக் கடிவாளத்தின் நுனிகளால் அடித்துக் கொண்டிருந்தாள். கோமகன் திடீரென்று ஆன்னா ஃபியோதரவ்னாவை நினைத்துக் கொண்டார்.

''வண்டியைத் திருப்பு!'' என்று உத்தரவிட்டார்.

வண்டியோட்டிக்கு உடனே புரியவில்லை.

''வண்டியைத் திருப்பு! நகரத்துக்குத் திருப்பி ஓட்டு! சீக்கிரம்!''

சறுக்கு வண்டி எல்லைக் கதவுகளின் வழியாக மறுபடியும் நகரத்துக்குள் திரும்பி திருமதி ஸாய்த்ஸெவாவின் வீட்டின் மர வாயிலுக்கு முன்னால் வேகமாக ஓடிவந்து நின்றது. கோமகன் படிகளில் விரைவாக ஏறி முன்புற ஹாலையும் வரவேற்பு அறையையும் கடந்து ஓடினார். அந்த விதவை இன்னும் படுக்கையில் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவர் தன் கைகளில் அவளை வாரித் தூக்கினார். தூக்கமயக்கத்திலிருந்த அவளுடைய கண்களில் முத்தமிட்டுவிட்டு வெளியே ஓடினார். இன்னும் துயில் கலையாத ஆன்னா ஃபியோதரவ்னா தன் உதடுகளைச் சப்பிக்கொண்டு ''என்ன நடக்கிறது?'' என்று முணுமுணுக்க மட்டுமே முடிந்தது. கோமகன் சறுக்கு வண்டியில் தாவி உட்கார்ந்து வண்டியோட்டிக்கு உத்தரவிட்டார். அவர் அதற்குப் பிறகு மேலும் எந்தத் தாமதமும் இல்லாமல், லுஹ்னேவ் அல்லது

விதவை அல்லது ஸ்தேஷ்காவைப் பற்றி எவ்விதமான சிந்தனையும் இல்லாமல், மாஸ்கோவில் தனக்காகக் காத்திருப்பவற்றை மட்டுமே சிந்தித்தவராகக் கே...நகரத்தை விட்டு நிரந்தரமாகப் பிரிந்தார்.

## 9

இருபது வருடங்கள் உருண்டோடின. இடைக்காலத்தில் எவ்வளவோ சம்பவங்கள் நடைபெற்றிருந்தன. பலர் இறந்துவிட்டார்கள், பலர் பிறந்திருந்தார்கள், இன்னும் பலர் வளர்ந்து கொண்டிருந்தார்கள் அல்லது வயோதிகர்களாகிக் கொண்டிருந்தார்கள். கருத்துக்கள் மக்களைக் காட்டிலும் அதிகமான எண்ணிக்கையில் தோன்றி அழிந்து போயிருந்தன. பழைய கால வாழ்க்கையில் இருந்த நல்லவைகளில் பலவும் தீயனவற்றில் பலவும் மறைந்து போயிருந்தன. புதியனவற்றில் நல்லவை பல முதிர்ச்சி அடைந்திருந்தன, தீயவை பலவும் தலைகாட்டத் தொடங்கியிருந்தன.

ஃபியோதர் துர்பீன் கோமகன் இறந்து பல வருடங்களாகிவிட்டன. வெளிநாட்டுக்காரர் ஒருவரைத் தெருவில் சாட்டையால் அடித்த பொழுது ஏற்பட்ட வாட்சண்டையில் அவர் உயிரிழந்தார். அவர் மகன் — தகப்பனுரைப் போன்ற அதே உருவம்—இப்பொழுது இருபத்து மூன்று வயது நிரம்பிய அழகான இளைஞுக, குதிரைப் படையின் அதிகாரியாக இருந்தார். ஆனுல் இளம் துர்பீன் கோமகன்

குணத்தில் தகப்பனுரைச் சிறிதும் ஒத்திருக்க வில்லே. பழைய காலத்தைச் சேர்ந்த கெட்டுப்போன தலே முறையின் அடையாளமான, விளேவைப் பற்றிக் கவலேப்படாத, உணர்ச்சியில் மூழ்கிய, (பச்சையாகச் சொல்ல வேண்டுமென்ருல் ஒழுக்கக் கேடான) குணங்களின் சிறு சுவடு கூட அவரிடம் இல்லே. மதிநுட்பம், நல்ல முறையில் வளர்க்கப் பட்டிருத்தல் மற்றும் தன் முன்ஞேர்களிடமிருந்து பெற்றிருந்த இயற்கைத் திறம் ஆகியவற்ருேடு கௌரவத்தையும் வசதிகளேயும் விரும்புதல், மக்களேயும் சந்தர்ப்பங்களேயும் சரியாக மதிப்பிடக்கூடிய காரியவாதமான முறை, வாழ்க்கையைப் பற்றிய கவனம் நிறைந்த, அறிவு பூர்வமான அணுகு முறை ஆகியவை அவரிடமிருந்த சிறப்பான குணங்களாகும். இளம் கோமகன் இராணுவப் பணியில் வேகமான முன்னேற்றத்தை அடைந்திருந்தார். இருபத்து மூன்று வயதில் அவர் ஏற்கெனவே லெப்டினென்டாக இருந்தார்... யுத்தம் தொடங்கிய பொழுது போர்முனேயில் சேவை செய்தால் பதவி உயர்வுக்கான வாய்ப்புக்கள் அதிகமுண்டு என்று முடிவு செய்து அவர் தன்னே ஹுஸ்ஸார் படைப்பிரிவுக்கு மாற்றிக் கொண்டார். அதில் அவர் காப்டனுகப் பணியாற்றிஞர்; சீக்கிரத்திலேயே ஒரு பிரிவுக்குத் தலேமை வகிக்கும் பொறுப்பைப் பெற்ருர்.

1848 மே மாதத்தில் ஹுஸ்ஸார்களின் எஸ். படைப்பிரிவு கே. குபெர்னியாவின் வழியாகப் போய்க் கொண்டிருந்தது. இளம் துர்பீன்

கோமகன் தலைமையிலிருந்த படைப்பிரிவு ஆன்னு ஃபியோதரவ்னுவுக்குச் சொந்தமான மரோஸவ்கா கிராமத்தில் இரவில் தங்க வேண்டும். ஆன்னு ஃபியோதரவ்னு இன்னும் உயிரோடிருந்தாள்; ஆனல் அதிகமான வயதாகி விட்டபடியால் அவள் இப்பொழுது தன்னை ஒரு இளம் பெண்ணுகக் கருதுவதில்லை. பெண்களிடம் அதுவே ஆச்சரியம் தானே! அவள் மிகவும் அதிகமாகப் பெருத்துவிட்டாள். பெண்கள் இளமையாகத் தோன்றுவதற்கு அது உதவுவதாகச் சொல்வதுண்டு. ஆனல் ஆழமான சுருக்கங்கள் அவளுடைய மென்மையான, வெள்ளைச் சருமத்தின் அழகைக் குறைத்துவிட்டன. அவள் இப்பொழுதெல்லாம் நகரத்துக்குள் குதிரைச் சவாரி செய்வதில்லை. உதவியில்லாமல் கோச்சுவண்டியில் கூட அவளால் ஏற முடியாது. ஆனல் அவள் எப்பொழுதும் போலவே இனிய சுபாவத்தோடிருந்தாள், வழக்கம் போலவே அசடாக இருந்தாள். உண்மையைப் பார்க்க முடியாதபடி கண்களை மறைப்பதற்கு அவள் இனியும் அழகியல்ல என்பதால் இதை ஒத்துக் கொள்வோம். அவளோடு மகள் லீஸா — இருபத்து மூன்று வயதான நாட்டுப்புற அழகி—வசித்தாள். அவளுடைய சகோதரனும் அவளோடுதான் வசித்தார். அவர் சுகவாசியாக இருந்து எல்லோரையும் நம்பித் தன்னுடைய பங்காகக் கிடைத்த பரம்பரைச் சொத்தை இழந்துவிட்டார். தன்னுடைய வயோதிகக் காலத்தில் சகோதரியைச் சார்ந்திருந்தார். அவர் தலை முடி முற்றிலும்

வெள்ளையாக மாறிவிட்டது. மேலுதடு உள்ளே வளைந்துவிட்டது. ஆனால் அதன் மீது முளைத்த மீசையில் மட்டும் கவனமாகக் கறுப்பு மை தடவியிருந்தார். சுருக்கங்கள் அவருடைய கன்னங்களிலும் நெற்றியிலும் மட்டுமல்லாமல் மூக்கிலும் கழுத்திலும் கூட இருந்தன. அவருடைய முதுகு கூனலாகிவிட்டது. என்றாலும் பழைய குதிரைப் படை அதிகாரிக்குச் சொந்தமான ஏதோ ஒன்று அவருடைய பலவீனமான, வளைந்த கால்களில் இன்னும் இருந்தது.

அன்றைய மாலை நேரத்தில் ஆன்னா ஃபியோதரவ்னா தன் குடும்பத்தினர் மற்றும் வீட்டு வேலைக்காரர்கள் எல்லோருடனும் தன் பழமையான வீட்டின் சிறிய வரவேற்பு அறையில் உட்கார்ந்திருந்தாள். அந்த வரவேற்பு அறையின் வராந்தாக் கதவு மற்றும் சன்னல்களுக்கு வெளியே பழைய பாணியில் நட்சத்திர வடிவத்தில் அமைக்கப்பட்டிருந்த தோட்டம் தெரிந்தது. அங்கே எலுமிச்சை மரங்கள் வளர்ந்திருந்தன. ஆன்னா ஃபியோதரவ்னா நரைத்த தலை முடியோடு நறுமணம் தரும் செடிக் காம்புகள் அடைக்கப்பட்ட உடையணிந்து கொண்டு ஒரு வட்ட மேசைக்குப் பின்னால் சோபாவில் உட்கார்ந்து தனியாகச் சீட்டு விளையாடிக்கொண்டிருந்தாள். அவளுடையமுதிய சகோதரர் இடையில் சுத்தமான வெள்ளை நிற உடையணிந்து சன்னல் சுவரில் உட்கார்ந்து வெள்ளை நூலினால் எதையோ பின்னிக் கொண்டிருந்தார். அவருடைய சகோதரி மகள்

அதைக் கற்றுக் கொடுத்திருந்தாள். அவரால் வேறு எந்த முக்கியமான வேலையையும் செய்ய முடியாது; கண் பார்வை குறைந்து விட்டபடியால் அவருக்கு மிகப் பிரியமான பொழுது போக்காகிய பத்திரிகை வாசிப்பதிலும் அவரால் ஈடுபட முடியவில்லை. எனவே அந்தப் பின்னல் வேலையை அவர் மிகவும் விரும்பினார். பீமொச்கா என்ற சிறுமியை ஆன்னா ஃபியோதரவ்னா வளர்த்து வந்தாள். அவள் அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து லீஸாவின் மேற்பார்வையில் பாடங்களைப் படித்துக் கொண்டிருந்தாள். லீஸா ஆட்டுக் கம்பளி நூலில் தன் மாமாவுக்கு ஒரு ஜோடிக் காலுறைகளைப் பின்னிக் கொண்டிருந்தாள். எப்பொழுதும் நடைபெறுவதைப் போல அந்த நேரத்தில் அஸ்தமன சூரியனின் கடைசிக் கதிர்கள் எலுமிச்சை மரங்களின் வழியாகச் சாய்வாக விழுந்து, மிகக் கடைசியிலிருந்த சன்னல் மற்றும் அதற்குப் பக்கத்திலிருந்த அலமாரிகள் மீது பிரகாசித்தன. அந்த அறையும் தோட்டமும் மிகவும் அமைதியாக இருந்தபடியால் சன்னலுக்கு வெளியே ஒரு புறா சிறகுகளை ஆட்டினால், ஆன்னா ஃபியோதரவ்னா அறையில் மெதுவாகப் பெருமூச்சு விட்டால், அந்தக் கிழவர் காலை மடக்கி உட்காரும்பொழுது முனகினால், அவற்றைக் கூட அவர்கள் தெளிவாகக் கேட்க முடியும்.

''இதை எந்தச்சீட்டோடு சேர்க்க வேண்டும்? லீஸா! தயவு செய்து எனக்குச் சொல்லிக் கொடு. எனக்கு அடிக்கடி மறந்து விடுகிறது''

என்று ஆன்னு ஃபியோதரவ்னு விளையாட்டைச் சற்று நிறுத்திவிட்டுக் கூறினுள்.

லீஸா தன் பின்னலை நிறுத்தாமலேயே தாயாருக்கு அருகில் சென்று சீட்டுகளைப் பார்த்தாள்.

''ஓ! நீங்கள் எல்லாவற்றையும் கலந்துவிட்டீர்கள், அம்மா!'' என்று சீட்டுகளைத் திரும்ப அடுக்கிக் கொண்டு அவள் கூறினுள். ''இப்படி வைக்க வேண்டும். ஆனுல் உங்கள் ஊகம் சரியானதுதான். அப்படியே வரும்'' என்று சொல்லிக் கொண்டு தாயார் கவனிக்காத பொழுது ஒரு சீட்டைத் தனியே உருவி எடுத்துக் கொண்டாள்.

''அது சரியாக வந்துவிடும் என்று எப்பொழுதும் சொல்லி என்னை ஏமாற்றுவதே உனக்கு வழக்கம்.''

'உண்மையாகவே அது சரியாக வரும். பார்த்தாயா? சரியாக வந்துவிட்டது.''

''சரி, ரொம்ப சரி, வம்புக்காரியே! நாம் தேநீர் சாப்பிட நேரமாகவில்லையா?''

''சமவாரைச் சூடாக்கும்படி அவர்களிடம் ஏற்கெனவே சொல்லிவிட்டேன். நான் போய்ப் பார்க்கிறேன். தேநீரை இங்கே கொண்டுவரச் சொல்லட்டுமா?.. பீமொச்கா! உன் பாடங்களை வேகமாக முடி. நாம் உலாவப் போகவேண்டும்'' என்ருள்.

லீஸா கதவு வழியாக மறைந்தாள்.

''லீஸா! லீஸச்கா!'' என்று மாமா அவளைக் கூப்பிட்டார். அவர் கண்கள் பின்னலிலேயே இருந்தன. ''மறுபடியும் எங்கோ ஒரு இடத்தில் நான் தையலை விட்டுவிட்ட மாதிரித்

தோன்றுகிறது. அருமைப் பெண்ணே! அதைக் காட்டு.''

''ஒரு நிமிடம்! இதோ ஒரு நிமிடத்தில் வருகிறேன். அவர்களிடம் இந்த சீனிக்கட்டியைத் தூளாக்கிப் போடுமாறு கொடுத்துவிட்டு வருகிறேன்.''

அவள் கூறியதைப் போலவே மூன்று நிமிடங்களில் அந்த அறைக்குள் ஓடி வந்தாள். மாமாவுக்குப் பக்கத்தில் சென்று அவர் காதைப் பிடித்துக் கிள்ளினுள்.

''தையலில் தப்புச் செய்தால் இது தான் தண்டனே'' என்று சிரித்துக் கொண்டே சொன்ஞள். ''இன்றைக்குக் கொடுத்த பாடத்தைக் கூட நீங்கள் முடிக்கவில்லேயே!''

''இதைச் சரி செய்து கொடு. எங்கோ ஒரு இடத்தில் சிக்குப் பட்டு விட்டது.''

லீஸா பின்னல் கொக்கியை எடுத்தாள். அப்பொழுது சன்னல் வழியாக வீசிய காற்றில் சிறிது திறந்திருந்த கைக்குட்டையிலிருந்து ஒரு ஊசியை எடுத்தாள். பின்னலில் ஊசியைக் கொடுத்து இரண்டு அல்லது மூன்று தடவைகள் சுருக்குப் போட்டு இழுத்தாள். பிறகு அதை மாமாவிடம் நீட்டினுள்.

''இதோ என்னுடைய உதவிக்காக ஒரு முத்தம்'' என்று சொல்லி கைக்குட்டையை மறுபடியும் அதன் இடத்தில் வைத்தபடியே அவரை நோக்கித் தன் இளஞ் சிவப்புக் கன்னத்தை நீட்டினுள். ''இன்று உங்களுக்குத் தேநீரோடு ரம் மதுவும் கிடைக்கும். இன்று வெள்ளிக்கிழமை. தெரியுமா?''

அவள் மறுபடியும் தேநீர் அறைக்குச் சென்ருள்.

''மாமா! இங்கே வந்து பாருங்கள்! ஹுஸ்ஸார்கள் வந்து கொண்டிருக்கிருர்கள்!'' என்று தெளிவாக பலமாகக் கத்திஞள்.

தேநீர் அருந்தும் அறையின் சன்னல்கள் கிராமத்தை நோக்கி அமைந்திருந்தன. ஹுஸ்ஸார்கள் போய்க் கொண்டிருப்பதைப் பார்ப்பதற்காக ஆன்ஞ ஃபியோதரவ்ஞவும் அவளுடைய சகோதரரும் அந்த அறைக்குள் சென்ருர்கள். அவர்கள் சன்னல் வழியாக ஒன்றையும் பார்க்க முடியவில்லை. புழுதி மேகத்துக்கு நடுவே ஒரு கூட்டம் போய்க் கொண்டிருப்பதை மட்டுமே அவர்கள் பார்க்க முடிந்தது.

''சகோதரியே! என்ன பரிதாபம்! நம் வீடு மிகவும் சிறியதாக இருக்கிறது. புதுப் பகுதியை இன்னும் கட்டி முடிக்கவில்லை. இல்லையென்ருல் சில அதிகாரிகளை நம் வீட்டில் தங்க வைக்கலாம். ஹுஸ்ஸார் அதிகாரிகள் எப்பொழுதுமே மிகச் சிறப்பான, மகிழ்ச்சி நிறைந்த இளைஞர்கள். அவர்களைப் பார்ப்பதில் எனக்கு ஆசை அதிகம்'' என்று லீஸாவின் மாமா ஆன்ஞ ஃபியோதரவ்ஞவிடம் கூறிஞர்.

''அவர்கள் நம்மோடு தங்கிஞல் எனக்கும் அதிகமான ஆனந்தமாக இருக்கும். ஆஞல் அவர்கள் தங்குவதற்கு நம் வீட்டில் இடம் இல்லை என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே; என்னுடைய படுக்கை அறை, லீஸாவின் சிறிய அறை, வரவேற்பு அறை உங்கள் அறை—

இவ்வளவுதானே நம் வீடு. அவர்களை எங்கே இருக்கச் சொல்ல முடியும்? நீங்களே முடிவு சொல்லுங்கள். மிஹாய்லோ மத்வேயிவ் பெரியவர் குடிசையைத் தயாராக வைத்திருக் கிறார். அது சுத்தமாக இருக்கிறதென்று சொன்னார்.''

''லீஸச்கா! ஹுஸ்ஸார்களிலிருந்து ஒரு வீரமான நபரை உனக்குக் கணவனாகத் தேர்ந்தெடுத்திருக்கலாம்!'' என்றார் லீஸாவின் மாமா.

''எனக்கு ஹுஸ்ஸார் வேண்டாம். உஹ்லானைத்தான் எனக்குப் பிடிக்கும். மாமா! நீங்கள் உஹ்லான் படைப்பிரிவில்தானே சேவை செய்தீர்கள்?.. இந்த ஹுஸ்ஸார்களோடு நான் ஒரு சம்பந்தமும் வைத்துக்கொள்ள மாட்டேன். அவர்கள் விளைவைப் பற்றிக் கவலைப் படாத துடுக்குக்காரர்கள் என்று சொல்கிறார்கள்.''

லீஸாவின் கன்னங்களில் லேசாக நாணம் படர்ந்தது. ஆனால் அவள் மறுபடியும் கலகலவென்று சிரித்தாள். ''இதோ உஸ்தியூஷ்கா ஓடி வருகிறாள். அவள் என்ன பார்த்தாள் என்று விசாரிக்கலாம்'' என்றாள்.

ஆன்னா ஃபியோதரவ்னா உஸ்தியூஷ்காவைக் கூப்பிடுமாறு உத்தரவிட்டாள்.

''வீட்டில் இவ்வளவு வேலை கிடக்கிறது. ஒரு வேலையும் இல்லாததைப் போல நீ படை வீரர்களைப் பார்க்க ஓடிப்போய் விட்டாயா?'' என்றாள் ஆன்னா ஃபியோதரவ்னா. ''சரி. அதி

காரிகள் எங்கே தங்கப் போகிருர்களாம்?''

''யெரோம்கினுடைய குடிசையில் தான் தங்கப் போகிருர்கள், அம்மா. இரண்டு பேர்கள் வந்திருக்கிருர்கள். ரொம்ப அழகாக இருக் கிருர்கள். அதில் ஒருவர் கோமகன் என்று பேசிக் கொண்டார்கள்.''

''அவர் பெயர் என்ன?''

''கஸாரவோ அல்லது துர்பீனே அல்லது அந்த மாதிரி வேறு எந்தப் பெயரோ—எனக்குச் சரியாக நினைவில்லை. என்னை மன்னித்துவிடுங் கள்.''

''நீ ஒரு முட்டாள். ஒன்றும் தெரியாது. அவர் பெயரையாவது தெரிந்து கொண்டு வந்திருக்கக் கூடாதா?''

''நான் ஓடிப் போய்க் கேட்டுக் கொண்டு வரட்டுமா?''

''ஓ! உன் சமத்து எனக்குத் தெரியாதா, என்ன? இல்லை. தனீலோ போகட்டும். சகோ தரரே! அவனை அனுப்பி அதிகாரிகளுக்கு ஏதாவது வேண்டுமா என்று கேட்டு வருமாறு சொல்லுங்கள். நாம் அவர்களுக்கு எல்லா மரி யாதையுமளிக்க வேண்டும். தன் எசமானி தன்னை அனுப்பியதாகச் சொல்லுமாறு அவ னிடம் கூறுங்கள்.''

வயதானவர்கள் மறுபடியும் தேநீர் அறை யில் உட்கார்ந்தார்கள். லீஸா சீனியை வைத்து விட்டு வருவதற்காகப் பணிப் பெண்களின் அறைக்குள் சென்ருள்.

''எசமானியம்மா! அந்தக் கோமகன் எவ் வளவு அழகாக இருந்தார் தெரியுமா? அடர்த்தி

யான புருவங்களும் தலை முடியும்—தேவதூதன் மாதிரியே இருந்தார். அவரைப் போல உங்களுக்குக் கணவர் கிடைத்தால் இரண்டு பேரும் பொருத்தமான ஜோடியாக இருப்பீர்கள். ஆமாம்'' என்ருள் உஸ்தியூஷ்கா.

மற்ற வேலைக்காரிகள் அதை அங்கீகரிக்கும் வகையில் சிரித்தார்கள். சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து காலுறையில் ஒட்டுப் போட்டுக் கொண்டிருந்த வயோதிக செவிலிப் பெண் ஆழமாகப் பெருமூச்சுவிட்டாள்; உள்ளே மூச்சிழுத்துக் கொண்டே ஒரு தோத்திரப் பாடலை முணுமுணுத்தாள்.

''ஹுஸ்ஸார்களைப் பார்த்து மயங்கி விட்டாயாக்கும்'' என்ருள் லீஸா. ''மற்றவற்றைக் காட்டிலும் இப்படிப்பட்ட விஷயங்களைப் பற்றிப் பேசுவதென்ருல் உனக்கு மிகவும் பிடிக்கும். உஸ்தியூஷ்கா! பழச்சாறு கொண்டுவா. ஹுஸ்ஸார்களுக்குக் கொடுப்பதற்குப் புளிப்பாக ஏதாவது கொண்டுவா''.

லீஸா சீனி டப்பியோடு வெளியே போனுள்.

''அந்த ஹுஸ்ஸாரைப் பார்க்க வேண்டும் போல இருக்கிறது'' என்று அவள் நினைத்தாள். ''அவர் சிவப்பா அல்லது கறுப்பா? நம்மோடு பழக்கம் வைத்துக் கொள்வதில் அவர் மகிழ்ச்சி அடைவார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனுல் நான் இங்கே இருகிறேன், அவரைப் பற்றி நினைத்தேன் என்பதை ஒரு போதும் தெரிந் துகொள்ளாமலே அவர் இவ்வூரைவிட்டுப் போகலாம். அவரைப் போல எத்தனை பேர்கள் என்னைப் பொருட்

படுத்தாது போய்விட்டார்கள். மாமாவையும் உஸ்தியூஷ்காவையும் தவிர யார் என்னைப் பார்க்கிறார்கள்! நான் எப்படித் தலையை அலங் கரித்திருக்கிறேன், எவ்விதமான கைகளைக் கொண்ட சட்டையை அணிந்திருக்கிறேன் என் பது முக்கியமா? என்னைப் போற்ற ஒருவரும் இல்லை'' என்று பெருமூச்சு விட்ட படியே தன் தடித்த கையைப் பார்த்துக் கொண்டு நினைத் தாள். ''அவர் உயரமாக இருப்பார்; அகன்ற, பெரிய விழிகள். சின்னக் கறுப்பு மீசை இருக் கும். எனக்கும் இருபத்து மூன்று வயதாகி விட்டது. அம்மை வடுக்கள் உள்ள இவான் இபாதிச்சைத் தவிர வேறு யாரும் இதுவரை என்னைக் காதலிக்கவில்லை. நாலு வருடங்க ளுக்கு முன்பு இப்போதிருப்பதைக் காட்டிலும் அதிகமான அழகோடு இருந்தேன். என்னுடைய யுவதிப்பருவம் அநேகமாக முடிந்துவிட்டது. யாரும் அதன் இனிமையைச் சுவைக்கவில்லை. ஓ! நான் எவ்வளவு துரதிர்ஷ்டசாலி! வெறும் நாட்டுப்புறப் பெண்!''

தேநீரைக் கோப்பையில் ஊற்றுமாறு அவள் தாயார் அதட்டிய பொழுது தான் அந்த நாட்டுப்புறப் பெண் தன்னுடைய சிந்தனை களிலிருந்து விடுபட்டாள். அவள் தன் தலையை லேசாக ஆட்டி விட்டுத் தேநீர் அறைக்குள் சென்றாள்.

நல்ல காரியங்கள் அனைத்துமே தற்செயலா கத்தான் நடைபெறுகின்றன. நாம் அதிகமாக முயற்சி செய்தால் அந்த அளவுக்கு அதிகமாக அவை கெட்டுப் போய்விடுகின்றன. கிராமவாசி

கள் குழந்தைகளின் கல்வியைப் பற்றி சிறிது கூட அக்கறை எடுத்துக் கொள்வதில்லை. பெரும்பாலும் அந்தக் கல்வி மிகச் சிறப்பான தாக அமைந்து விடுகிறது. லீஸாவின் உதாரணத்திலும் அப்படியே நடந்தது. ஆன்ஞ ஃபியோதரவ்ஞ மிகக் குறைவான அறிவுடையவள், சோம்பலோ மிக அதிகம். எனவே லீஸாவுக்குக் கல்வி கற்பிக்கவில்லை. அவளுக்கு இசைப் பயிற்சி கொடுக்கவில்லை, மிகவும் முக்கியமான பிரெஞ்சு மொழியைக் கற்றுக் கொடுக்கவில்லை. அவள் தன் காலஞ்சென்ற கணவருக்குத் தற்செயலாக மிகவும் அழகான ஆரோக்கியமான குழந்தையை, பெண் மகவைப் பெற்றுக் கொடுத்தாள். அந்தக் குழந்தையை ஒரு தாதியிடம் (அவளே செவிலித் தாயாகவும் இருந்தாள்) ஒப்படைத்தாள். அவள் குழந்தைக்கு உணவூட்டிவிட்டாள், பருத்தி உடைகளையும் ஆட்டுத் தோல் காலணிகளையும் அணிவித்தாள், வீட்டுக்கு வெளியே போய் விளையாடு, பழங்களையும் காளான்களையும் பொறுக்கிக் கொண்டுவா என்று அனுப்பினுள். அவள் எழுத, படிக்க, கணக்குப் போடக் கற்றுக் கொடுப்பதற்கு ஒரு இளம் மாணவனை அமர்த்தினுள். இதற்குப் பதினறு வருடங்களுக்குப் பிறகு லீஸா—முற்றிலும் தற்செயலாகவே—ஒரு நல்ல தோழியாகவும் உற்சாகமான, பாசம் நிறைந்த, சுறுசுறுப்பான இளம் குடும்பத் தலைவியாகவும் மாறியிருந்தாள். ஆன்ஞ ஃபியோதரவ்ஞ மிகவும் இரக்கமானவள். எனவே அவள் ஒரு பண்ணையடிமையின்

குழந்தையை அல்லது ஒரு அனாதையை எப்பொழுதும் வீட்டில் வளர்த்து வந்தாள். லீஸா—தனக்குப் பத்து வயதான பொழுதிருந்தே—தாயாரின் வளர்ப்புக் குழந்தைகளை கவனித்து வளர்த்தாள். அவர்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தாள், உடையணிவித்தாள், மாதாகோவிலுக்கு கூட்டிக் கொண்டு போனாள், அவர்கள் அதிகமாகச் சேட்டை செய்யும்பொழுது கண்டித்தாள். அடுத்தபடியாக பலவீனமான, நல்ல குணமுள்ள வயோதிகரான மாமா வந்தார். ஒரு குழந்தையைப் போல அவரை கவனிக்க வேண்டும். பிறகு வீட்டு வேலைக்காரர்கள் மற்றும் கிராமத்தைச் சேர்ந்த பண்ணையடிமைகள்—அவர்களுக்கு உடல் வலி மற்றும் வேதனை ஏற்படும் பொழுது அந்த இளம் எசமானியிடம் வந்துவிடுவார்கள். அவள் அவர்களுக்கு மூலிகை மருந்துகள் மற்றும் சூடத்தைலம் ஆகியவற்றைக் கொடுப்பாள். பிறகு வீட்டை கவனிக்க வேண்டும். இந்தப் பொறுப்பு முழுவதும் தற்செயலாகவே அவள் தோள்களில் விழுந்து விட்டது. பிறகு அவளுடைய காதல் ஏக்கம் நிறைவேறாதபடியால் இயற்கையை ரசிப்பதிலும் மதத்திலும் ஒரு வடிகாலைத் தேடிக் கொண்டிருந்தது. ஆகவே லீஸா—முற்றிலும் தற்செயலாகவே—சுறுசுறுப்பான, உற்சாகமான, இனிய சுபாவமுள்ள, சுதந்திரமான, தூய்மையான, ஆழமான மதப் பற்றுடைய பெண்ணாக வளர்ந்திருந்தாள். மாதாகோவிலில் தனக்குப் பக்கத்தில் நிற்பவர்கள் கே... நகரத்தில்

வாங்கிய புதுரகமான தொப்பிகளை அணிந் திருப்பதைப் பார்க்கும் பொழுது அவளிடம் பொருமை என்னும் சிறு வலி ஏற்படுவது உண் மையே. அவளுடைய முதிய தாயார் சிடுசிடுப் பானவள். அவளுடைய திடீர்ப் போக்குகள் அவளைக் கண்ணீர் வடிக்கச் செய்வதுண்டு என்பதும் உண்மையே. அவளுடைய காதற் கனவுகள் பொருத்தமில்லாத — சில சமயங்க ளில் நயமில்லாத—வடிவங்களை அடைந்தன; ஆனால் இவை அனைத்துமே அவள் அவசிய மாகச் செய்ய வேண்டியிருந்த பயனுள்ள வேலையினால் விரட்டப் பட்டன. இருபத்து மூன்று வயதில் உடல் மற்றும் ஆன்ம அழகில் செழிப்பாக வளர்ச்சியடைந்து கொண்டிருந்த அந்தப் பெண்ணின் மிகப் பிரகாசமான, தூய் மையான ஆன்மாவில் ஒரு கறை கிடையாது, ஒரு வருத்தம் கிடையாது. லீஸா நடுத்தரமான உயரம், சதைப் பிடிப்பான உடல்; அவள் கண்கள் பழுப்பு நிறமானவை, அவ்வளவு பெரி யவை அல்ல; கீழ் இமைகளுக்கு அடியில் லேசான கருநிறம் காணப்படும், நீண்ட, அழ கான தலைமுடி. அவள் கைகளை ஆட்டிக் கொண்டு அழகாக நடப்பாள். அவள் மன தில் எந்தக் கவலையும் இல்லாமல் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருக்கும் பொழுது அவள் முகத்தோற்றம் தெளிவான மனச்சாட்சி உடையவர்களுக்கு, யாராவது ஒருவரை நேசிப் பவர்களுக்கு வாழ்க்கை நலமாக, ஆனந்தமாக இருக்கும் என்ற செய்தியைத் தெரிவித்தது. அவளுக்கு எரிச்சல், கடுங்கோபம், பயம் அல்

லது துயரம் ஏற்படும் தருணங்களில்—அவள் விருப்பத்துக்கு விரோதமாக நடந்து கொள்வதைப் போல—கண்களில் கண்ணீர் திரண்டு நிற்கும்பொழுது அவள் உதடுகள் அசையாமல் விறைப்பாக இருக்கும், இடது கண்புருவம் துடிக்கும். அப்பொழுதுகூட நாகரிகத்ததால் கெட்டுப்போகாத பாசமிக்க, கள்ளமில்லாத இதயத்தின் ஒளியை அவளுடைய கன்னங்களின் குழிகளில், உதடுகளின் ஓரங்களில், பிரகாசமான கண்களில் காண முடியும்.

# 10

படைப் பிரிவு மரோஸவ்கா கிராமத்துக்குள் நுழைந்த பொழுது கதிரவன் மறைந்துவிட்ட போதிலும் இன்னும் வெப்பமாகவே இருந்தது. கிராமப் பாதையில் கறுப்புப் புள்ளிகளைக் கொண்ட ஒரு பசு கூட்டத்திலிருந்து பிரிந்து தனியாகப் போய்க் கொண்டிருந்தது. அது பயத்தோடு அடிக்கடி பின்னால் பார்த்தது; குதிரைகளின் பாதையிலிருந்து விலகிக் கொண்டால் போதும் என்பது தெரியாமல் அவ்வப்பொழுது நின்று குரல் கொடுத்தது. ஹுஸ்ஸார்கள் குட்டையான கடிவாளங்களைக் கொண்ட, சீறிக் கொண்டிருக்கும் கறுப்புக் குதிரைகள் மீது உட்கார்ந்து அடர்த்தியான புழுதிப் படலத்தைக் கிளப்பிக் கொண்டு வந்தார்கள். பாதையின் இரண்டு பக்கங்களிலும் வயோதிக விவசாயிகள், கிராமப் பெண்கள்,

குழந்தைகள், வீட்டு வேலைக்காரர்கள் கூட்டமாகத் திரண்டு நின்று அவர்கள் வருவதை ஆச்சரியத்தோடு பார்த்தார்கள். படைப் பிரிவின் வலது பக்கத்தில் இரண்டு அதிகாரிகள் குதிரைச் சேணத்தின் மீது சொகுசாக உட்கார்ந்து வந்தார்கள். அந்த இரண்டு அதிகாரிகளில் ஒருவர் தளபதியான துர்பீன் கோமகன். அடுத்தவர் போலஸவ் என்ற இளைஞர், அவர் சமீப காலத்தில்தான் அதிகாரியாகப் பதவி உயர்வு பெற்றிருந்தார்.

அந்தக் கிராமத்திலேயே மிகவும் நல்ல குடிசையொன்றிலிருந்து வெள்ளை உடையணிந்த ஹுஸ்ஸார் வெளியே வந்தான். அவன் தன் தொப்பியைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டு அதிகாரிகளிடம் சென்றான்.

''நாங்கள் தங்கியிருப்பதற்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது?'' என்று கோமகன் அவனைக் கேட்டார்.

''மேன்மை தங்கிய தளபதி அவர்களுக்காக இந்தக் குடிசையைச் சுத்தம் செய்து வைத்திருக்கிறோம்'' அந்த அதிகாரி விறைப்பாக நின்றுகொண்டு பதிலளித்தான். ''இது கிராமத் தலைவரின் குடிசை. பெரிய வீட்டில் இடம் தர வேண்டுமென்று கேட்டோம். ஆனால் முடியாதென்று சொல்லிவிட்டார்கள். அந்த வீட்டு எசமானி அற்பத்தனமானவள்.''

''சரி!'' என்று சொல்லிக் கொண்டு கோமகன் குதிரையை விட்டுக் கீழே இறங்கினார். குதிரைச் சவாரி செய்த களைப்பைப் போக்குவதைப் போல காலை எட்டிப் போட்டுக் குடி

சையை நோக்கி நடந்தார். ''என்னுடைய கோச்சுவண்டி வந்து விட்டதா?'' என்று கேட்டார்.

''மேன்மை தங்கிய தளபதி அவர்களே! வண்டி வந்துவிட்டது'' என்று கதவுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த வண்டியைத் தொப்பியினால் சுட்டிக் காட்டியபடியே அந்த ஹுஸ்ஸார் பதிலளித்தார். அதிகாரிகளை வேடிக்கை பார்ப்பதற்காக அந்தக் குடிசை வாசலில் ஒரு விவசாயக் குடும்பம் கூடி நின்றது. அவன் தளபதியை முந்திக்கொண்டு வாயிலை நோக்கி ஓடினான். புதிதாகக் கழுவி விடப்பட்ட அந்தக் குடிசையின் கதவை வேகமாகத் திறந்தபொழுது ஒரு கிழவியை அநேகமாகக் கீழே புரட்டித் தள்ளினான். பிறகு கோமகன் உள்ளே நுழைவதற்காக ஒதுங்கி நின்று கொண்டான்.

அந்தக் குடிசை பெரியதாகவும் அகன்றதாகவும் இருந்தது, ஆனால் முற்றிலும் சுத்தமாக இருக்கவில்லை. கனவானைப் போல உடையணிந்த ஒரு ஜெர்மானியப் பணியாள் இரும்புக் கட்டிலைப் பிரித்துப் போட்ட பிறகு ஒரு பிரயாணப் பையிலிருந்து போர்வைகளை எடுத்துக் கொண்டிருந்தான்.

''சே! எவ்வளவு அசிங்கமான இடம்!'' என்று கோமகன் சிடுசிடுப்போடு கூறினார். ''தியதேன்கோ! பெரிய வீட்டில் எங்காவது ஒரு இடத்தில் நாங்கள் தங்கியிருக்க ஏற்பாடு செய்ய உண்மையாகவே முடியாதா?''

''மேன்மை தங்கிய தளபதி அவர்கள் உத்

தரவிட்டால் நான் யாரையாவது அங்கே அனுப்புகிறேன். ஆனுல் அந்தப் பெரிய வீடும் மோசமாகத்தான் இருக்கிறது—இந்தக் குடிசையைக் காட்டிலும் ஒது வசதியானதல்ல'' என்றுன் தியதேன்கோ.

''இப்பொழுது மிகவும் நேரமாகிவிட்டது. சரி. நீ போகலாம்.''

கோமகன் தலேக்குக் கீழ் கைகளே மடித்து வைத்துக் கொண்டு படுத்தார்.

''யோஹன்!'' என்று தன் பணியாளேக் கூப்பிட்டார். ''மறுபடியும் படுக்கை நடுவில் மொத்தையாகச் செய்திருக்கிருய். படுக்கையை ஒழுங்காக விரித்துப் போடக் கூட உனக்குத் தெரியாதா?'' என்று கோமகன் அவனே அதட்டிஞர்.

யோஹன் படுக்கையிலிருந்த மொத்தையை அகற்றுவதற்கு வந்தான்.

''வேண்டாம். இப்பொழுது மிகவும் நேரமாகிவிட்டது... என்னுடைய மேலங்கி எங்கே?'' என்று கோமகன் கடுகடுப்போடு கேட்டார்.

பணியாள் மேலங்கியைக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தான்.

அதை அணிந்து கொள்வதற்கு முன்பு அவர் ஓரங்களே கவனமாகப் பார்த்தார்.

''நான் எதிர்பார்த்தபடி நீ அந்தக் கறையைப் போக்கவில்லே. உன்னேக் காட்டிலும் மோசமாக யாராவது வேலே செய்ய முடியுமா என்று எனக்குத் தெரியவில்லே!'' என்று அவன் கையிலிருந்து மேலங்கியைப் பறித்து அணிந்து கொண்டே கூறிஞர். ''வேண்டுமென்றே இப்

படிச் செய்கிருயா அல்லது வேறு காரணமா?.. தேநீர் தயாரா?..''

''தேநீர் தயாரிக்க என்ஞல் முடியவில்லே.''

''முட்டாள்!''

கோமகன் இத்தகைய சந்தர்ப்பங்களில் படிப்பதற்காகக் கொண்டு வந்திருந்த பிரெஞ்சு நாவலே எடுத்தார்; சற்று நேரம் அமைதியாக நாவலேப் படித்தார். யோஹன் சமவார் பாத்திரத்தில் தண்ணீரைக் கொதிக் கவைப்பதற்காக நடைபாதைக்குப் போஞன். கோமகன் கோபமாக இருக்கிருர் என்பது தெளிவாகத் தெரிந்தது. பிரயாணக் களேப் பும் அழுக்கடைந்த முகமும் இறுக்கமான உடைகளும் காலி வயிறும் அதற்குக் காரணம் என்பதில் சந்தேகமில்லே.

''யோஹன்!'' என்று அவர் மறுபடியும் கூப் பிட்டார். ''நான் கொடுத்த பத்து ரூபிளுக்குக் கணக்கு எங்கே? நகரத்தில் என்ன வாங்கி ஞய்?''

அவன் எழுதிவைத்திருந்த கணக்கைக் காட் டிஞன். கோமகன் அதைப் பார்த்து விட்டு அதிகமான விலேக்குச் சாமான்களே வாங்கி யிருப்பதாக அதிருப்தியோடு கூறிஞர்.

''தேநீரோடு ரம்மைக் கலந்து கொண்டு வா.''

''நான் ரம் வாங்கவில்லே'' என்ருன் யோ ஹன்.

''பிரமாதம்! எப்பொழுதும் ரம் வைத் திருக்க வேண்டும் என்று நான் உன்னிடம் எத்தனே தடவை சொல்லியிருக்கிறேன்?''

''ரம் வாங்கப் பணமில்லை.''

''போலஸவ் ஏன் வாங்கவில்லை? அவருடைய பணியாளிடமிருந்து நீ எடுத்துக் கொண்டிருக்கலாமே.''

''போலஸவா? எனக்குத் தெரியாது. அவருடைய பணியாள் தேயிலையும் சீனியும் மட்டும்தான் வாங்கினுன்.''

''முட்டாள்!... வெளியே போ!... உன்னைப் போல என் பொறுமையைச் சோதிப்பவர்கள் யாருமில்லை... போர் நடைப் பயணம் போகும் பொழுது நான் தேநீரோடு ரம் குடிப்பேன் என்பது உனக்கு நன்ருகத் தெரிந்த விஷயம் தானே.''

''தலைமையகத்திலிருந்து இரண்டு கடிதங்கள் வந்திருக்கின்றன'' என்ருன் பணியாள்.

கோமகன் படுக்கையில் படுத்துக்கொண்டே உறைகளைக் கிழித்துக் கடிதங்களைப் படிக்கத் தொடங்கினுர். படைவீரர்கள் தங்குமிடங்களுக்கு ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்பிய போலஸவ் அந்த நேரத்தில் உற்சாகமான முகத்தோடு உள்ளே நுழைந்தார்.

''துர்பீன்! இந்த இடம் அவ்வளவு மோசமில்லை என்று தோன்றுகிறது. ஆனுல் எனக்கு ஒரே களைப்பாக இருக்கிறது. என்ன வெப்பம்!''

''மோசமில்லையா? அழுக்குப் பிடித்த, நாற்றமடிக்கும் குடிசை. உன்னுல் எனக்கு தேநீரோடு குடிக்க ரம்மும் இல்லை. உன்னுடைய வேலைக்கார முட்டாள் ரம் வாங்க மறந்துவிட்டான். என் வேலைக்காரனும்

மறந்து விட்டான். நீ வேலைக்காரனிடம் சொல்லி யனுப்பவில்லையா?''

அவர் கடிதங்களைத் திரும்பப் படிக்க ஆரம்பித்தார். முதல் கடிதத்தைப் படித்து முடித்ததும் அதைக் கசக்கிக் கீழே எறிந்தார்.

இதற்கிடையில் போலஸவ் தன் பணியாளிடம் நடைபாதையில் பேசிக்கொண்டிருந்தார். ''நீ ஏன் ரம் வாங்கவில்லை? உன்னிடம் தான் பணம் இருந்ததே.''

''நாமே எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டிருக்க வேண்டுமா? எல்லாச் செலவும் நான் தான் செய்கிறேன். அவருடைய ஜெர்மன் புகை பிடிப்பதைத் தவிர ஒன்றுமே செய்வதில்லை.''

இரண்டாவது கடிதம் அதிருப்தியளிக்கவில்லை என்று தெரிந்தது. ஏனென்றால் கோமகன் அதைப் படித்துக் கொண்டிருக்கும் பொழுது சிரித்தார்.

''யாரிடமிருந்து வந்திருக்கிறது?'' அறைக்குள் திரும்பிவந்து போலஸவ் கேட்டார். அவர் கணப்புக்குப் பக்கத்தில் பல கைகளை வைத்துத் தனக்குப் படுக்கையைத் தயாரித்துக் கொண்டிருந்தார்.

''மீனுவிடமிருந்து வந்திருக்கிறது'' என்று கடிதத்தை அவரிடம் நீட்டியபடியே கோமகன் மகிழ்ச்சியோடு கூறினார். ''நீ படிக்க விரும்புகிருயா? அவ்வளவு கவர்ச்சியான பெண்!.. நம் பக்கத்துப் பெண்களைக் காட்டிலும் மிகச் சிறந்தவள்... இந்தக் கடிதத்தில் எவ்வளவு அறிவும் உணர்ச்சியும் இருக்

கிறது என்பதைப் பார்... ஒரே ஒரு விஷயம் தான் மோசம்—அவள் பணம் அனுப்பச் சொல்லியிருக்கிறாள்.''

''ஆமாம். அது மோசமானதுதான்'' என்று போலஸவ் ஒத்துக்கொண்டார்.

''நான் பணம் அனுப்புவதாகச் சொன்னது உண்மைதான். ஆனால் இந்தப் பயணத்தில் புறப்பட்டுவிட்டோம்... சரி... இன்னும் மூன்று மாதங்கள் இந்தப் படைக்குத் தளபதியாக இருந்தால் நான் அவளுக்குப் பணம் அனுப்பி விட முடியும். அதைப் பற்றி எனக்கு வருத்த மில்லை. இனிமையாக எழுதியிருக்கிறாள் அல்ல வா?''.. என்று கடிதத்தைப் படித்துக் கொண் டிருந்த போலஸவின் முகத்தைப் பார்த்துப் புன்சிரிப்போடு கேட்டார்.

''இவளுக்கு நிச்சயமாக எழுதப் படிக்கத் தெரியாது. ஆனால் கடிதம் இனிமையாக இருக் கிறது. அவள் உன்னை உண்மையாகவே காத லிக்கிறாள் என்று தோன்றுகிறது.''

''நிச்சயமாக! பெண்கள் காதலிக்க முடி யும் என்றால் இவளைப் போன்ற பெண்கள்தான் உண்மையிலேயே காதலிக்கிறார்கள்.''

''அந்தக் கடிதம் யாரிடமிருந்து வந்திருக் கிறது?'' என்று தான் படித்து முடித்த கடிதத் தைத் திருப்பிக் கொடுத்தபடியே போலஸவ் கேட்டார்.

''ஓ! அதுவா?.. ஒரு கனவான். கொஞ்சம் மட்டரகம். ஒரு முறை சீட்டாடியபொழுது நான் அவரிடம் தோற்றுவிட்டேன். மூன்றாவது தடவையாக அதை நினைவுபடுத்திக் கடிதம்

எழுதியிருக்கிறார்... இந்த சமயத்தில் என்னால் பணம் கொடுக்க முடியாது... அர்த்தமில்லாத கடிதம்!'' என்று அந்த சம்பவத்தை நினைத்த பொழுது ஏற்பட்ட எரிச்சலோடு கோமகன் கூறினார்.

இதற்குப் பிறகு இரண்டு அதிகாரிகளும் சிறிது நேரம் பேசவில்லை. கோமகனுடைய எரிச்சலைக் கண்ட போலஸவ் மௌனமாகத் தேநீரை அருந்தினார். அவர் துர்பீனுடைய அழகிய முகத்தை அவ்வப்பொழுது பார்த்தார். ஆனால் அவர் சன்னலுக்கு வெளியே உற்றுப் பார்த்துக் கொண்டு ஆழமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

''ஓ! கடைசியில் எல்லாம் சரியாகி விடும்'' என்று திடீரென்று கோமகன் போலஸவைத் திரும்பிப் பார்த்துக் கொண்டு தலையை லேசாக ஆட்டியபடியே கூறினார். ''இந்த வருடத்தில் நம் படையில் நெடுகிலும் பதவி உயர்வுகள் இருந்தால்—அதோடு நாம் போரிலும் ஈடுபட்டால்—மற்ற படைகளில் காப்டன்களாக இருக்கும் என்னுடைய நண்பர்களை நான் முந்தி விடுவேன்.''

அவர்கள் இரண்டாம் தடவையாகத் தேநீர் அருந்தியவாறு இப்படி உரையாடிக் கொண்டிருந்த பொழுது ஆன்னா ஃபியோதரவ்னாவின் செய்தியோடு தனீலோ உள்ளே நுழைந்தான்.

''தாங்கள் ஃபியோதர் இவானவிச் துர்பீன் கோமகனுடைய மகனா என்பதை விசாரிக்குமாறு என்னுடைய எசமானி தெரிவித்தார்கள்'' என்று தனீலோ தானாகவே கூறினான்.

அந்த அதிகாரியின் பெயரை அவன் கேள்விப் பட்டிருக்கிறான், கே... நகரத்துக்குக் காலஞ் சென்ற கோமகன் வருகையளித்தது அவனுக்கு நினைவிருந்தது. ''எங்கள் எசமானி ஆன்னு ஃபியோதரவ்னுவுக்கு அவரை நன்றாகத் தெரியும்.''

''அவர்தான் என்னுடைய தகப்பனுர். உன் எசமானியின் அன்புக்கு எங்கள் நன்றியைத் தெரிவி. எங்களுக்கு ஒன்றும் வேண்டாம். ஆனுல் எங்காவது—பெரிய வீட்டில் அல்லது வேறு எங்கேயாவது—இன்னும் சுத்தமான அறை எங்களுக்குக் கிடைத்தால் நாங்கள் மிகவும் நன்றியுடையவர்களாக இருப்போம் என்று சொல்.''

''நீ ஏன் அப்படிச் சொன்னுய்?'' என்று தனீலோ போன பிறகு போலஸவ் கேட்டார். ''அது அவ்வளவு அவசியமானதா? நாம் இங்கே ஒரு இரவு மட்டும்தான் தங்கப் போகிறோம். அவர்களுக்கு ஏன் இவ்வளவு தொந்தரவைக் கொடுக்க வேண்டும்?''

''நீயும் உன்னுடைய மனச்சாட்சியும்! நல்ல ஆள்! கோழிக் கூடுகளில் ஏற்கெனவே நிறையத் தூங்கிவிட்டோம்!... நீ காரியவாதியல்ல என்பது தெளிவாகத் தெரிகிறது... ஒரே ஒரு இரவுக்குத்தான் என்ருலும் வசதியாகத் தூங்குகின்ற வாய்ப்பை நாம் ஏன் இழக்க வேண்டும்? அவர்களுக்கும் மிகவும் அதிகமான மகிழ்ச்சி ஏற்படும். ஒரே ஒரு விஷயம்தான் எனக்குப் பிடிக்கவில்லை. அவர்களுக்கு என் தகப்பனுரைத் தெரியும்'' என்று கோமகன்

தன் அழகான வெள்ளைப் பற்களைக் காட்டி மெதுவாகச் சிரித்துக் கொண்டே கூறினார். ''என் தகப்பனாரைப் பற்றி நினைக்கும்பொழுது நான் வெட்கப்படுகிறேன்—எப்பொழுதும் ஏதாவதொரு வம்பு அல்லது கடன் பிரச்சினை. அதனால் அவருடைய பழைய நண்பர்களைச் சந்திப்பதற்கே நான் விரும்புவதில்லை. ஆனால் அது வேறு விதமான காலம்'' என்று சிந்தனையோடு கூறினார்.

''உன்னிடம் தெரிவிப்பதற்கு நான் மறந்து விட்டேன். உஹ்லான் படைத் தளபதியான இலியீன் என்பவரை நான் சந்தித்தேன். அவர் உன்னுடைய தகப்பனாரைப் போற்றினார்'' என்றார் போலஸவ்.

''அந்த இலியீன் ஒரு உதவாக்கரையாக இருந்திருக்க வேண்டும். ஒரு வேடிக்கை என்ன வென்றால் என்னோடு பழகுவதற்காக என் தகப்பனாரைத் தெரியும் என்று சொல்பவர்கள் எல்லோருமே அவரைப் பற்றிச் சொல்லும் கதைகளைக் கேட்பதற்குக் கூட எனக்கு அவமானமாக இருக்கிறது. ஆனால் அவற்றைச் சுவையான சம்பவங்கள் என்று அவர்கள் நினைக்கிறார்கள். நான் எப்பொழுதுமே விஷயங்களை நிதானமாக, யதார்த்தமாகப் பார்க்கக் கூடியவன். அவர் மிகவும் ஆத்திரக்காரர், சில சமயங்களில் செய்யக் கூடாத காரியங்களைச் செய்து விடுவார். ஆனால் அந்தக் காலம் அப்படிப்பட்டது. தம்முடைய காலத்தில் அவர் மிகவும் வெற்றிகரமானவராக இருந்திருப்பார்.

ஏனென்ருல்—உண்மையை ஒத்துக் கொள்ள வேண்டும்—அவர் திறமை மிக்கவர்.''

கால் மணி நேரத்துக்குப் பிறகு தனீலோ திரும்பிஞன். தன் வீட்டில் இரவில் தங்கியிருக்கலாம் என்ற எசமானியின் அழைப்பைக் கொண்டு வந்தான்.

## 11

அந்த இளம் ஹுஸ்ஸார் அதிகாரி ஃபியோதர் துர்பீன் கோமகனுடைய மகன் என்று தெரிந்து கொண்டபொழுது ஆன்ஞ ஃபியோதரவ்ஞவுக்குப் பரபரப்பு ஏற்பட்டது.

''அட கடவுளே! தனீலோ!.. வேகமாகப் போய் எசமானி இங்கே வரச் சொன்ஞர்கள் என்று சொல்.'' அவள் குதித்துக்கொண்டு பணிப் பெண்களுடைய அறைக்கு ஓடிஞள். ''லீஸச்கா! உஸ்தியூஷ்கா! உன் அறையைத் தயார் செய்ய வேண்டும். லீஸா! நீ மாமாவின் அறையில் படுத்துக் கொள். சகோதரரே!.. நீங்கள் வரவேற்பு அறையில் படுத்துக் கொள்ளுங்கள். ஒரு இரவு அங்கே தூங்குவதால் ஒன்றும் ஏற்பட்டுவிடாது.''

''சகோதரியே! அதஞலென்ன. நான் தரையில் படுத்துக் கொள்கிறேன்.''

''அவர் தகப்பஞரைப் போல உருவம் என்ருல் மிகவும் அழகாகத்தான் இருப்பார். ஓ! அருமையான மனிதர்! அவர் மகனை அவசியம் பார்க்க வேண்டும். பெண்ணே! லீஸா! சற்றுப்

பொறுத்திருந்து பார்! அவருடைய தகப்பஞர் எவ்வளவு அழகாக இருந்தார், தெரியுமா?.. அந்த மேசையை எங்கே தூக்கிக் கொண்டு போகிருய்? அது இங்கேயே இருக்கட்டும்'' என்று சுறுசுறுப்பாக இங்குமங்கும் போய்க்கொண்டிருந்த ஆன்ஞ ஃபியோதரவ்ஞ உத்தரவிட்டாள். ''இரண்டு கட்டில்களைக் கொண்டு வாருங்கள். கடைக்காரரிடமிருந்து ஒன்றை வாங்கி வா. என் பிறந்த நாளன்று சகோதரர் பரிசளித்த கண்ணுடி மெழுகுவர்த்தி விளக்கைக் கொண்டு வா. அதில் கொழுப்பு மெழுகு வர்த்தியை வை.''

கடைசியில் எல்லாம் தயாராகிவிட்டது. தாயார் தலையிட்ட போதிலும் லீஸா தன் விருப்பம் போலவே அந்த இரண்டு அதிகாரிகளுக்கும் அறையைத் தயாரித்தாள். அவள் வாசனைத் தைலம் தெளிக்கப்பட்ட புதுப் போர்வைகளைக் கொண்டு வந்து தானே படுக்கைகளை விரித்தாள். படுக்கைகளுக்குப் பக்கத்தில் மேசையில் ஒரு வடி கலத்தில் தண்ணீரும் மெழுகுவர்த்தியும் வைத்தாள். பணிப்பெண்களின் அறையில் வாசனைக் காகிதங்களை எரித்தாள். மாமாவின் அறையில் தன் படுக்கையைப் போட்டாள். ஆன்ஞ ஃபியோதரவ்ஞ சற்று நிம்மதியடைந்த பிறகு தன் வழக்கமான இடத்தில் உட்கார்ந்து சீட்டுக்கட்டை எடுத்தாள். சீட்டுகளைக் கலைப்பதற்கு முன்பு வீங்கிப் போன முழங்கையை மேசையின் மீது வைத்துக் கனவில் லயித்தாள். ''காலம் எப்படி ஓடி விட்டது. எவ்வளவு வேகமாக மறைந்து

விட்டது'' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டாள். ''நேற்றுப் போல இருக்கிறது. இப்பொழுது கூட என் கண்களுக்கு முன்ஞ லிருக்கிறுர். ஓ! அவர் எவ்வளவு துணிச்சல் நிறைந்தவர்!'' அவள் கண்களில் கண்ணீர் முத் துக்கள் திரண்டன. ''இப்பொழுது லீஸச்கா வுக்குச் சந்தர்ப்பம் வந்திருக்கிறது... ஆனல் அவள் வயதில் நான் இருந்ததைப் போல அவள் இல்லேயே—அழகான குழந்தைதான், ஆனல்... அந்தக் காலத்தில் நான் இருந்த மாதிரி இல்லேயே...''

''லீஸச்கா! இன்று மாலேயில் நீ மஸ்லின் உடையை அணிந்து கொண்டால் நன்ருக இருக் கும்.''

''அவர்களுக்கு விருந்தளிக்கப் போகிறீர் களா, அம்மா? அது வேண்டாம் என்று நினேக் கிறேன்'' என்ருள் லீஸா. அதிகாரிகளேச் சந் திக்கப் போவதை நினேத்தவுடன் அவளிடம் ஏற்பட்ட பரபரப்பை அவளால் அடக்க முடிய வில்லே. ''உண்மையாகவே வேண்டாம் என்று நினேக்கிறேன், அம்மா!''

அவர்களேச் சந்திக்கும் விருப்பத்தைக் காட் டிலும் பய உணர்ச்சியே அவளிடம் அதிகமாக இருந்தது என்பது உண்மையே. ஏதோ ஒரு பெரிய கவலே நிறைந்த மகிழ்ச்சி தனக்கு ஏற் படப் போகிறது என்பதை அவள் உணர்ந் தாள்.

''அவர்களே நம்மைச் சந்தித்துப் பழக விரும்பலாம், லீஸச்கா'' என்று ஆன்ஞ ஃபியோதரவ்ஞ தன் மகளின் தலே முடியைக்

கோதியவாறு கூறினாள். ''அவள் வயதில் என் தலைமுடி இருந்த மாதிரி இல்லையே... ஓ! லீஸச்கா! என்னுடைய விருப்பத்தின்படி நடந்துவிட்டால்...'' தன் மகளுக்கு ஏதாவது நல்லது நடக்க வேண்டுமென்று அவள் உண்மையாகவே விரும்பினாள். ஆனால் அந்த இளம் கோமகனுக்கும் அவளுக்கும் திருமணம் நடைபெறக் கூடுமென்று அவள் நம்ப முடியவில்லை. ஆனால் மூத்த கோமகனோடு அவளுக்கு ஏற்பட்ட உறவு இளம் கோமகனோடு லீஸாவுக்கு ஏற்பட வேண்டுமென்று அவள் சிறிதும் விரும்ப முடியாது. ஆனால், ஏதாவது நடக்க வேண்டுமென்று அவள் விரும்பினாள். அதை மிகவும் ஆர்வத்தோடு விரும்பினாள். ஒரு வேளை காலஞ்சென்ற கோமகனிடம் தனக்கேற்பட்ட உணர்ச்சிகளுக்குத் தன் மகள் மூலமாகப் புத்துயிர் கொடுக்க அவள் விரும்பியிருக்கலாம்.

முன்னாள் குதிரைப்படை அதிகாரியும் கோமகனின் வருகையினால் பரபரப்படைந்தார். அவர் தன்னுடைய அறைக்குள் சென்று கதவைப் பூட்டிக் கொண்டார். கால் மணி நேரத்துக்குப் பிறகு இராணுவ மேல்கோட்டும் நீல நிறத்தில் குதிரைச் சவாரி உடையும் அணிந்து கொண்டு வெளியே வந்தார். முதல் தடவையாக நடன கவுனை அணிந்து கொள்ளும் பொழுது ஒரு இளம் பெண்ணுக்கு ஏற்படுகின்ற பரவசமான சுய உணர்ச்சித் தோற்றமளித்தபடியே விருந்தினர்களுக்காகத் தயாரிக்கப்பட்டிருந்த அறைக்குள் அவர் நுழைந்தார்.

''சகோதரியே! புதிய தலைமுறையைச் சேர்ந்த ஹூஸ்ஸார்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதைப் பார்ப்போம்! உண்மையான ஹூஸ் ஸார் என்று ஒருவர் இருந்தால் அது காலஞ் சென்ற கோமகன்தான். பார்ப்போம், பார்ப் போம்.''

அதிகாரிகள் தமக்காகத் தயாரிக்கப்பட் டிருந்த அறைக்குள் பின்வாயில் வழியாக நுழைந்தார்கள்.

''நான் சொன்னேன் அல்லவா?'' என்று கோமகன் சுத்தமாக இருந்த படுக்கையில் தன் னுடைய அழுக்கான பூட்சுகளோடு படுத்த படியே கூறினார். ''குளவிகள் நிறைந்த அந்தக் குடிசைக்கு இது மிகவும் மேலானதல்லவா?''

''சந்தேகமென்ன, அதைக் காட்டிலும் மேலானதே. ஆனால் வீட்டுக்காரர்களுக்கு நாம் நன்றிக் கடன் பட்டிருக்கிறோம்...''

''தப்பு! எப்பொழுதுமே ஒரு விஷயத்தைப் பற்றிக் காரியவாதத்தோடு சிந்திக்க வேண் டும். அவர்களுக்கு அட்டகாசமான மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கும் போல எனக்குத் தோன்று கிறது... பையா!'' என்று பலமாகக் கூப்பிட் டார். ''இரவில் குளிர் காற்று உள்ளே வராமல் தடுப்பதற்கு அந்த சன்னலின் மீது எதை யாவது தொங்க விடுமாறு சொல்.''

இந்தக் கட்டத்தில் அந்தக் கிழவர் அதி காரிகளைச் சந்திப்பதற்காக உள்ளே வந்தார். காலஞ்சென்ற கோமகனின் நெருங்கிய தோ ழன், அவருடைய அன்பான உபசரிப்பில் நான் திளைத்திருக்கிறேன், அவர் அன்போடு எனக்குச்

செய்த சில உதவிகளுக்காக அவருக்குக் கடன் பட்டிருக்கிறேன் என்று தன்னைப் பற்றிக் கூறு திருக்க அவரால் முடியவில்லை என்பது இயற் கையே. அதைக் கூறும்பொழுது அவர் சற்று வெட்கமடைந்தார். கோமகன் தன்னிடம் கட னுகப் பெற்ற நூறு ரூபிள்களைக் கொடுக்க மறந்ததை அல்லது பணிக்குவியலுக்குள் தன்னைப் பிடித்துத் தள்ளியதை அல்லது தன்னை மோசமாகத் திட்டியதை அந்த ''அன்பான உதவிகளில்'' சேர்த்திருந்தாரா என்பதைச் சொல்வது கடினமே—அந்தக் கிழவர் விளக் கம் அளிக்கவில்லை. இளம் கோமகன் அந்த முதிய குதிரைப் படை அதிகாரியிடம் மிகவும் மரியாதையோடு நடந்துகொண்டார். தங்கு வதற்கு இடமளித்ததற்காக அவருக்கு நன்றி கூறினுர்.

''கோமகன் அவர்களே! (''மேன்மை தங் கிய'' என்று சொல்ல வாயெடுத்தார், அந்தஸ் துள்ள மனிதர்களிடம் எப்படிப் பேச வேண் டும் என்பதே அவருக்கு மறந்துவிட்டது). என் சகோதரியின் வீடு மிகவும் சிறியதுதான். அந்த சன்னலில் எதையாவது தொங்கவிடு வோம். பிறகு எல்லாம் நன்ருக இருக்கும்'' என்ருர். திரைத்துணியை எடுத்து வருவதற் காகப் போவதைப் போல—ஆனுல் உண்மை யில் அந்த அதிகாரிகளை வர்ணிக்க வேண்டும் என்பதற்காக—அவர் புறப்பட்டார்.

அழகான பணிப் பெண்ணுகிய உஸ்தியூஷ்கா சன்னலில் தொங்கவிடுவதற்காகத் தன் எச மானியின் சால்வையை எடுத்துக் கொண்டு

வந்தாள். அந்தக் கனவான்களைத் தேநீர் அருந்தக் கூப்பிடுமாறு எசமானி அவளிடம் சொல்லியிருந்தாள்.

சுத்தமான அறை அந்தக் கோமகனுடைய மனதில் உற்சாகத்தை ஏற்படுத்தியிருந்தது. அவர் உஸ்தியூஷ்காவிடம் சிரித்துக் கொண்டு வேடிக்கையாகப் பேசிக் கேலி செய்தார். அவள் அவரைப் பொல்லாதவர் என்று கூறினாள். அவளுடைய இளம் எசமானி அழகான பெண்ணா என்று அவர் கேட்டார். தேநீர் அருந்தக் கூப்பிட்டபொழுது இங்கே கொண்டு வரலாமே என்று அவர் கூறினார். தன்னுடைய பணியாள் இன்னும் இரவு உணவைத் தயாரிக்கவில்லை என்பதால் முடியுமானால் வோட்காவும் சாப்பிடுவதற்கு ஏதாவது கொண்டுவருமாறும் கைவசமிருந்தால் ஷெர்ரியும் கொண்டுவருமாறும் அவர் கூறினார்.

இளம் கோமகனின் பண்புகளைப் பற்றி லீஸாவின் மாமா பரவசமடைந்து பேசினார். இளம் தலைமுறையைச் சேர்ந்த அதிகாரிகளை வானளாவப் புகழ்ந்தார். தங்கள் பெற்றோர்களோடு ஒப்பிட முடியாத அளவுக்கு அவர்கள் உயர்வானவர்கள் என்றார்.

ஆன்னா ஃபியோதரவ்னா அதை மறுத்தாள்—ஃபியோதர் இவானவிச் கோமகனைக் காட்டிலும் சிறந்தவராக யாருமே இருக்க முடியாது என்றாள். கடைசியில் அவள் எரிச்சலடைந்து வெறுப்பாகச் சொன்னாள். ''சகோதரரே! உங்களிடம் கடைசியாக யார் அன்பாக நடந்து கொள்கிறாரோ அவர் தான் உங்களுக்கு மிக

வும் சிறந்த மனிதர். அந்தக் காலத்தைக் காட்டிலும் இப்பொழுது மக்கள் அதிக புத்தி சாலிகளாக இருக்கிருர்கள் என்பது எல்லோ ருக்கும் தெரிந்ததே. ஆனுல் ஃபியோதர் இவா னவிச் கோமகன் மிகவும் மரியாதையாக நடந்து கொண்டார், மிக அழகாக écossaise நடனமாடினுர், அதைப் பார்த்து எல்லோருமே மயங்கி விட்டார்கள் என்று கூடச் சொல்ல லாம். எனினும் அவர் என்னைத் தவிர வேறு யார் மீதும் அக்கறை காட்டவில்லை. அந்தக் காலத்திலும் நல்லவர்கள் இருந்தார்கள் என் பதை இது காட்டவில்லையா?''

அதிகாரிகள் வோட்கா, உணவு மற்றும் ஷெர்ரி கேட்டார்கள் என்ற செய்தி அந்த நேரத்தில் தெரிவிக்கப்பட்டது.

''சகோதரரே! பார்த்தீர்களா! நீங்கள் எதையும் சரியாகச் செய்வதில்லை. இரவு உணவுக்கு ஏற்பாடு செய்திருக்க வேண்டும்'' என்ருள் ஆன்ஞ ஃபியோதரவ்ஞ. ''லீஸா! எல்லாவற்றையும் நீயே கவனித்துச் செய், அருமைப் பெண்ணே!''

லீஸா காளான்களும் புது வெண்ணெயும் கொண்டுவருவதற்காகப் பண்ட அறைக்குள் நுழைந்தாள். கறித்துண்டங்களை வாட்டுமாறு சமையற்காரருக்கு உத்தரவிட்டாள்.

''சகோதரரே! உங்களிடம் ஷெர்ரி மிச்ச மிருக்கிறதா?''

''இல்லை, சகோதரியே! என்னிடம் எப்பொ ழுதுமே கிடையாது.''

''அதெப்படி? நீங்கள் தேநீரோடு ஏதாவது சேர்த்துக்கொள்வீர்களே, அது என்ன?''

''ரம், ஆன்ஞ ஃபியோதரவ்ஞ.''

''அப்படியானல் அதை... ரம்மையே... கொடுங்கள். வித்தியாசம் பெரிதல்ல. சகோதரரே! அவர்களை உள்ளே கூப்பிடுவதுதானே சிறப்பாக இருக்கும். எது சரியென்று உங்களுக்குத்தான் தெரியும். அவர்கள் கோபித்துக் கொள்ள மாட்டார்களே, அல்லது கோபமடைவார்களா?''

கோமகன் மிகவும் பெருந்தன்மையானவர், தங்கள் அழைப்பை மறுக்க மாட்டார், இருவரும் நிச்சயமாக வருவார்கள் என்று குதிரைப்படை அதிகாரி கூறினுர். ஆன்ஞ ஃபியோதரவ்ஞ தன்னுடைய அழகான உடையையும் புதிய தொப்பியையும் அணிந்து கொள்வதற்காக உள்ளே சென்ருள். ஆனுல் லீஸா சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்தபடியால் தான் அணிந்திருந்த அகன்ற கைகளைக் கொண்ட இளஞ்சிவப்பு லினன் உடையை மாற்ற அவளுக்கு நேரமில்லை. அவள் மிக பயங்கரமாக நடுங்கிக் கொண்டிருந்தாள். ஏதோ மிகப் பெரிய ஒன்று நடைபெறப் போகிறது என்று உணர்ந்தாள். அந்தக் கோமகன், அழகான ஹுஸ்ஸார் புதுமையும் மர்மமும் நிறைந்த அற்புதமான பிறவியாக இருப்பாரென்று அவள் கருதினுள். அவருடைய பழக்க வழக்கங்களும் பேச்சும், அவர் சம்பந்தப்பட்ட ஒவ்வொன்றுமே அவள் இதற்கு முன்பு பார்த்திராத முறையில் இருக்கும். அவருடைய நினைப்பு,

பேச்சு எல்லாவற்றிலும் அறிவும் உண்மையும் பிரகாசிக்கும். அவர் செய்கை அனைத்துமே நேரானதாக இருக்கும். அவருடைய தோற்றத்தின் ஒவ்வொரு அம்சமும் அழகு நிறைந்ததாக இருக்கும். அதைப் பற்றி அவளுக்கு சந்தேகமே இல்லை. அவர் உணவு, ஷெர்ரி மட்டுமல்லாமல் குளிப்பதற்குப் பன்னீர் வேண்டுமென்று கேட்டிருந்தால் கூட அவள் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டாள், அவரைப் பற்றிக் குறைவாக நினைத்திருக்க மாட்டாள், அது மட்டுமே மிகச் சரியானது, பொருத்தமானது என்று உறுதியாக நம்பியிருப்பாள்.

ஆன்ஞ ஃபியோதரவ்ஞவின் அழைப்பைக் குதிரைப் படை அதிகாரி தெரிவித்த நிமிடத்திலேயே கோமகன் அதை ஏற்றுக்கொண்டார். அவர் தலையைச் சீவிக் கொண்டு கோட்டை அணிந்தார், சுருட்டுப்பெட்டியையும் கையில் எடுத்தார்.

''புறப்படுங்கள்'' என்று போலஸவிடம் கூறினர்.

''நாம் போவது சரியல்ல என்று நினைக்கிறேன்'' என்ருர் அந்த அதிகாரி. “Ils feront des frais pour nous recevoir.”*

''பிதற்றல்! அவர்கள் நிச்சயமாக மகிழ்ச்சி அடைவார்கள். நான் ஏற்கெனவே விசாரித்ததில் இந்த சீமாட்டிக்கு ஒரு அழகான மகள் இருப்பதாகத் தெரிகிறது... புறப்படுங்கள்''

---

* நம்மை உபசரிப்பதற்காக அவர்கள் அதிகமான பணம் செலவழிப்பார்கள் (**பிரெஞ்சு**).

என்று கோமகன் பிரெஞ்சு மொழியில் கூறினுர்.

"Je vous en prie, messieurs!"* எனக்கு பிரெஞ்சு மொழி தெரியும், உங்கள் பேச்சைப் புரிந்து கொண்டேன் என்று அவர்களிடம் தெரிவிப்பதற்காகக் குதிரைப் படை அதிகாரியும் பிரெஞ்சு மொழியில் பேசினுர்.

## 12

லீஸா நாணமடைந்த முகத்தோடும் கீழ் நோக்கிய பார்வையோடும், கோப்பையில் தேநீரை ஊற்றுவதில் முற்றிலும் ஈடுபட்டிருப்பதைப் போலப் பாசாங்கு செய்து கொண்டிருந்தாள். ஏனென்றுல் அதிகாரிகள் அறைக்குள் நுழைந்தபொழுது அவர்களுடைய முகத்தைப் பார்க்க அவளுக்குப் பயமாக இருந்தது. ஆன்ஞ ஃபியோதரவ்ஞ இதற்கு மாருக நடந்து கொண்டாள். அவள் உடனே துள்ளிக் குதித்தாள். உடலே லேசாக வளேத்து வரவேற்ருள். கோமகன் முகத்தை விட்டுத் தன் பார்வையை எடுக்காமல், அவர் தன் தகப்பனுரைப்போல அப்படியே இருக்கிருர் என்றும் தன் மகளே அறிமுகப்படுத்தியும் தேநீர். பழப்பாகு, பழக் கூட்டு முதலியவற்றைச் சாப்பிடுமாறு வற்புறுத்தியும் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தாள்.

---

* கனவான்களே! தயவு செய்து உள்ளே வாருங்கள் **(பிரெஞ்சு).**

அவரோடு வந்த அதிகாரியின் தோற்றம் மிகவும் அடக்கமாக இருந்தபடியால் யாரும் அவரைப் பற்றிச் சிறிது கூட அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் அவர் அதற்காக அவர்களுக்கு நன்றி செலுத்தினார். ஏனென்றால் லீஸாவின் அழகு அவரைக் கிறங்கச் செய்திருந்தது. அவர் லீஸாவின் அழகின் ஒவ்வொரு அம்சத்தையும்—இயன்ற அளவுக்கு நாகரிகமான முறையில் — ஆராய்வதற்கு வாய்ப்புக் கிடைத்தது. தன் சகோதரி கோமகனோடு பேசிக்கொண்டிருப்பதை எப்பொழுது முடிப்பாள் என்று ஆர்வத்தோடு மாமாகாத்துக் கொண்டிருந்தார். குதிரைப் படை வாழ்க்கையைப் பற்றிய தன்னுடைய நினைவுகளைச் சொல்ல வேண்டும் என்று அவர் துடித்த காரணத்தால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள அவரால் முடியவில்லை. கோமகன் ஒரு சுருட்டைப் பற்ற வைத்தார். அதன் நெடி மிகவும் அதிகமாக இருந்தபடியால் லீஸாவினால் தன்னுடைய இருமலை அடக்க முடியவில்லை. அவர் தொணதொணவென்று பேசினார், மிகவும் மரியாதையோடு நடந்து கொண்டார். அவர் முதலில் அருவியைப் போல வந்து கொண்டிருந்த ஆன்னா ஃபியோதரவ்னாவின் பேச்சுக்கு நடுவில் அவ்வப்பொழுது ஒரு வார்த்தையைச் சொல்லிக்கொண்டிருந்தார்; பிறகு அவர் ஒருவரே ஓயாமற் பேசினார். அவர் பேச்சைக் கேட்டவர்களுக்கு ஒரு அம்சம்—அவர் உபயோகித்த சொற்கள்—சற்று விசித்திரமாகத் தோன்றின. அவர் பழகிவரும்

வட்டாரங்களில் அவை தவருகக் கருதப்படா திருக்கலாம். ஆனுல் இங்கே அவை அதிர்ச்சியைக் கொடுத்தன. அவற்றைக் கேட்டு ஆன்ன ஃபியோதரவ்ன சற்று பயந்து விட்டாள், லீஸாவோ காது நுனிகள் சிவக்கும் அள வுக்கு வெட்கமடைந்தாள். ஆனுல் கோமகன் இவற்றை கவனிக்கவில்லை. அவர் வழக்கம் போலவே அமைதி நிறைந்தவராக மரியாதை மிக்கவராக உட்கார்ந்திருந்தார். லீஸா மௌ னமாகக் குவளைகளில் தேநீரை ஊற்றினுள். விருந்தினர்களின் கைகளில் குவளைகளைக் கொடுப்பதற்குப் பதிலாக அவர்கள் கைகளை நீட்டி எடுக்கக்கூடிய இடத்தில் அவற்றை வைத்தாள். அவளிடம் இன்னும் அதிகமான பரபரப்பு இருந்தது, கோமகன் பேசிய ஒவ் வொரு சொல்லையும் அவள் பேரார்வத்தோடு கேட்டுக் கொண்டிருந்தாள். அவர் எத்தனை யோ தடவைகள் கேட்டு அலுத்துப் போன கதைகளைத்தான் சொல்லிக் கொண்டிருந் தார். மேலும் அவர் பேச்சிலிருந்த திக்கல் அவள் மறுபடியும் நிதானமடைய உதவியது. அவர் பேசுவார் என்று எதிர்பார்த்த அறிவு மிக்க கருத்துக்களை அவள் கேட்கவில்லை. அது மட்டுமல்ல. எல்லா விஷயங்களிலும் ஒரு பண்பு நயத்தை அவர் வெளிக் காட்டுவார் என்று அவள் துல்லியமற்ற வகையில் எதிர் பார்த்தாளே, அதையும் அவள் காண முடிய வில்லை. மூன்ருவது தடவையாகத் தேநீரைக் கொடுக்கும்பொழுது அவள் வெட்கத்தோடு தன் கண்களை உயர்த்தினுள், அவர் தன்

பார்வையால் அவள் கண்களைச் சிறைப்படுத்தி அவளை உற்றுப் பார்த்துக் கொண்டே மிகவும் லேசான புன்சிரிப்போடு சிறிது கூடப் பரபரப்பில்லாமல் பேச்சைத் தொடர்ந்தார். அந்த நேரத்தில் தன்னுடைய இதயத்தில் ஒரு வகையான வெறுப்பு பொங்கியெழுவதை அவள் உணர்ந்தாள். அவரிடம் அசாதாரணமான அம்சம் எதுவுமே இல்லை என்பதோடு அவளுக்குத் தெரிந்தவர்களிடமிருந்து அவர் எவ்வகையிலும் வித்தியாசமானவர் அல்ல, எனவே அவரைக் கண்டு அஞ்ச வேண்டியதில்லை என்பதையும் அவள் சீக்கிரத்திலேயே உணர்ந்து கொண்டாள். அவர் தன் விரல் நகங்களை நீளமாக, கவனமாக வளர்த்திருந்தார் என்பது உண்மையே. ஆனால் அவர் குறிப்பிடத்தக்க அழகுடையவராகக் கூட இல்லை. தன் கனவுகள் பொய்யானவை என்பதைத் திடீரென்று வருத்தத்தோடு கண்டு பிடித்த பிறகு லீஸா நிதானமடைந்தாள். அவளுக்கு இப்பொழுது கலவரத்தைக் கொடுத்த ஒரே விஷயம் அங்கே அமைதியாக உட்கார்ந்திருந்த அதிகாரியின் பார்வைதான். அவர் தன்னையே உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறார் என்பதை அவள் உணர்ந்தாள். ''இவரில்லாவிட்டாலும் ஒருவேளை அவராக இருக்குமோ!'' என்று நினைத்தாள்.

## 13

தேநீருக்குப் பிறகு அந்த முதிய சீமாட்டி விருந்தினர்களை அடுத்த அறைக்குள் கூட்டிக் கொண்டு சென்றுள், அங்கே தன்னுடைய வழக்கமான இடத்தில் உட்கார்ந்தாள்.

''கோமகன் அவர்களே! நீங்கள் ஓய்வெடுக்க விரும்புகிறீர்களா?'' என்று கேட்டாள். அவர் இல்லையென்று பதிலளித்தார். ''அன்பு மிக்க விருந்தினர்களே! உங்களுக்கு என்ன வேடிக்கை காட்டலாம்? கோமகன் அவர்களே நீங்கள் சீட்டாடுவீர்களா? சகோதரரே! இதை கவனியுங்கள், சீட்டாட்டத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்...''

''ஆனுல் நீங்கள் 'முன்னுரிமை' ஆட்டத்தைத் தானே விளையாடுவதுண்டு. அதை விளையாடலாமா? கோமகன் அவர்களே! நீங்கள் சேர விரும்புகிறீர்களா?'' என்று அவளுடைய சகோதரர் கேட்டார்.

உங்களுக்கு எது பிடிக்குமோ அதைச் செய்ய நாங்கள் தயார் என்று அதிகாரிகள் பதிலளித்தார்கள்.

லீஸா ஒரு பழைய சீட்டுக்கட்டை எடுத்துக் கொண்டுவந்தாள். அவள் குறி சொல்வதற்கும் ஆன்ஞ ஃபியோதரவ்ஞவின் பல்வலி சீக்கிரத்தில் போய்விடுமா, நகரத்துக்குப் போன மாமா எப்பொழுது வீட்டுக்குத் திரும்புவார், அன்றைய தினத்தில் பக்கத்து வீட்டுக்காரர் தங்கள் வீட்டுக்கு வருகையளிப்பாரா மற்றும் இவை போன்றவற்றை ஊகிப்பதற்கும் அந்த சீட்டுக்கட்டை உபயோகித்து வந்தாள். இர

ண்டு மாத காலமாக அவள் அந்தச் சீட்டுகளை உபயோகித்து வந்த போதிலும் ஆன்னு ஃபியோதரவ்னு குறிசொல்லப் பயன்படுத்திய சீட்டுகளைக் காட்டிலும் அவை சுத்தமாக இருந்தன.

''நீங்கள் குறைந்த பந்தயத்துக்கு விளையாட விரும்ப மாட்டீர்களோ, என்னவோ?'' என்று மாமா கேட்டார். ''ஆன்னு ஃபியோதரவ்னுவும் நானும் ஒரு புள்ளிக்கு அரை கோபெக் பந்தயம் வைத்து விளையாடுவோம்... அப்படியும் அவள் எங்களிடமிருந்து பணத்தைப் பிடுங்கிவிடுகிறுள்.''

''உங்கள் விருப்பம் போல பந்தயத்தை முடிவு செய்துகொள்ளுங்கள். என்ன வைத்தாலும் எனக்கு மகிழ்ச்சிதான்'' என்ருர் கோமகன்.

''அப்படியானுல் காகிதப் பணத்தில் ஒரு கோபெக் வைத்துக் கொள்வோம். இவ்வளவு சிறந்த விருந்தினர்கள் வந்திருக்கும்பொழுது எவ்வளவு பந்தயம் வைத்தால் என்ன? அவர்கள் என்னைப் போன்ற ஒரு கிழவியிடமிருந்து எல்லாவற்றையும் பறித்துக்கொண்டு ஏழைகள் விடுதிக்கு வேண்டுமாஞல் விரட்டட்டும்'' என்று ஆன்னு ஃபியோதரவ்னு நாற்காலியில் வசதியாக உட்கார்ந்து தன்னுடைய சால்வையைத் தடவிக்கொண்டு கூறினுள்.

''ஒருவேளை நான் அவர்களிடமிருந்து ஒரு ரூபிள் வெற்றி அடையலாமே'' என்று அவள் மனதில் சொல்லிக் கொண்டாள். வயோதிகப் பருவத்தில் அவளிடம் லேசான சூதாட்டக் காய்ச்சல் ஏற்பட்டிருப்பது போலத் தோன்றியது.

''நீங்கள் விரும்பினுல் 'கௌரவம்' என்ற ஆட்டத்தை எப்படி விளையாட வேண்டுமென்று சொல்லித் தருகிறேன்'' என்ருர் கோமகன். '' 'துன்பம்' என்ற ஆட்டத்தையும் கூட சொல்லித் தருகிறேன். அது மிகவும் வேடிக்கையாக இருக்கும்.''

பீட்டர்ஸ்பர்க்கின் புது முறையில் சீட்டாடுவது எல்லோருக்கும் மகிழ்ச்சியைத் தந்தது. ஒரு காலத்தில் தனக்கு அந்த விளையாட்டுத் தெரியும், அது ''போஸ்டன்'' என்ற விளையாட்டைப் போன்றதுதான், ஆனல் தனக்குக் கொஞ்சம் மறந்து போய் விட்டது என்று மாமா கூறினர். ஆன்ன ஃபியோதரவ்னுவுக்கு ஒன்றுமே புரியவில்லை, நெடு நேரம் வரையிலும் அவளுக்கு எதுவுமே புரியவில்லையாதலால் அவள் புன்சிரிப்போடு தலையை ஆட்டிக் கொண்டு இப்பொழுது எல்லாம் தெளிவாகப் புரிந்துவிட்டது என்று கூறுவதே உத்தமமானது என்று முடிவு செய்தாள். ஆட்டத்தின் நடுவில் ஆசையும் ராஜாவையும் கையில் வைத்துக்கொண்டு ஆன்ன ஃபியோதரவ்னு 'துன்பம்' என்று கேள்வி கேட்டுக் கடைசியில் ஆறு மட்டும் அவளிடம் மிஞ்சியபொழுது அங்கே பலத்த சிரிப்புக் கிளம்பியது. அவள் திகைப்படைந்தாள். பிறகு பலவீனமாகச் சிரித்துவிட்டு இந்தப் புது விளையாட்டு முறை இன்னும் எனக்குச் சரியாகப் பிடிபடவில்லை என்றுஅவசரமாக விளக்கினுள். ஆனுல்அவளுக்கு எதிராகப் புள்ளிகள் குறித்துக் கொள்ளப்பட்டன; கோமகன் பெருந் தொகைகளைப் பந்

தயம் கட்டி விளையாடுகின்ற பழக்கமுடைய வராதலால் ஜாக்கிரதையாக விளையாடினார், துல்லியமாகக் கணக்குகளைக் குறித்துக் கொண்டார், மேசைக்குக் கீழே போலஸவ் தன் காலை அடிக்கடி மிதித்ததையும் விளையாடும் போது அவர் வெளிப்படையாகச் செய்த தவறுகள் ஆகியவற்றின் உட்பொருளையும் புரிந்து கொள்ளத் தவறினார். எனவே ஆன்னு ஃபியோதரவ்னுவுக்கு எதிராக அதிகமான புள்ளிகள் குறித்துக் கொள்ளப் பட்டன.

லீஸா பழக்கூட்டு, மூன்று வகையான பழப்பாகு, விசேஷமான வகையில் ஊறவைக்கப் பட்ட ஆப்பிள்கள் ஆகியவற்றை மேலும் கொண்டு வந்தாள். தன்னுடைய தாயாரின் நாற்காலிக்குப் பின்னுலிருந்த படியே ஆட்டத்தைக் கவனித்தாள், அவ்வப்பொழுது அதிகாரிகளை கவனித்தாள். கோமகன் திறமை, கவர்ச்சி மற்றும் நம்பிக்கையோடு சீட்டுகளைப் போட்டுச் சீட்டுகளை எடுக்கும் பொழுது அவருடைய இளஞ்சிவப்பான நகங்களையும் வெள்ளைக் கைகளையும் கவனித்தாள்.

ஆன்னு ஃபியோதரவ்னு மறுபடியும் பரபரப்படைந்தாள். மற்றவர்களை ஜெயித்துவிட வேண்டுமென்று அசட்டுத் துணிச்சலோடு முயற்சி செய்த பொழுது மிகவும் அதிகமாக ஏழைக் கேட்ட பிறகு நான்கை எடுத்த பொழுது, அவள் சகோதரர் கோரிக்கையின் படி ஏதோ சில புரியாத எண்களை வெற்றியடைந்த புள்ளிகளைக் குறிக்கும் தாளில்

குறித்துக் கொண்டபொழுது அவள் முற்றி லும் நிதானமிழந்தாள்.

''பயப்படாதீர்கள், அம்மா! இழந்த எல்லா வற்றையுமே மறுபடியும் வெற்றி அடைவீர் கள்!''... என்று முட்டாள்தனமான நிலைமை யை அடைந்திருந்த தாயாரைக் காப்பாற்று வதற்காக லீஸா புன்சிரிப்போடு கூறினாள். ''மாமாவின் சீட்டுகளை வாங்கி விளையாடுங் கள். அவர் மாட்டிக் கொள்வார்.''

''லீஸச்கா! நீ எனக்கு உதவி செய்யலாமே!'' என்று ஆன்னு ஃபியோதரவ்னு அவளைப் பயத்தோடு பார்த்துக்கொண்டே கூறினாள். ''எனக்குத் தெரியவில்லை...''

''இந்தப் புது விதிகளின்படி எப்படி விளை யாடுவதேன்று எனக்கும் தெரியவில்லை'' என்று தாயார் தோற்ற பணத்தை வேகமாக மன தில் கணக்குப் போட்டுக் கொண்டே லீஸா கூறினாள். ''இப்படியே போனால் எல்லாவற் றையுமே நீங்கள் தோற்றுவிடுவீர்கள், அம்மா! பீமொச்காவுக்குக் கவுன் வாங்கக்கூட உங்க ளிடம் பணம் மிஞ்சாது'' என்று வேடிக்கை யாகக் கூறினாள்.

''இப்படியே போனால் பத்து வெள்ளி ரூபிள் களை நீங்கள் சுலபமாக இழந்துவிடுவீர்கள் என் பது உண்மை தான்'' என்று அதிகாரி லீஸாவை உற்றுப் பார்த்துக் கொண்டு அவளோடு பேச வேண்டும் என்ற ஏக்கத்தோடு கூறினார்.

''ஏன்? காகித ரூபிள் பணத்துக்குத்தானே நாம் விளையாடுகிறோம்?'' என்று ஆன்னு ஃபியோதரவ்னு ஆட்டக்காரர்களை நோக்கிப்

பார்வையைச் சுழலவிட்டவாறு கேட்டாள்.

''இருக்கலாம். ஆனால் காகிதப் பணத்தில் கணக்குப் போட எனக்குத் தெரியாது. இது எப்படி? அதாவது இந்தக் காகிதப் பணம் என்றால் என்ன?'' என்று கேட்டார் கோமகன்.

''இப்பொழுதெல்லாம் காகிதப் பணத்தை வைத்து யாரும் சீட்டாடுவதில்லை'' என்றார் மாமா. அவர் இப்பொழுது ஜெயித்துக் கொண்டிருந்தார்.

அந்த வயோதிகச் சீமாட்டி பழரசம் கொண்டு வருமாறு கூறினாள். இரண்டு டம்ளர் பழரசம் குடித்தாள். அவள் முகத்தில் சிவப் பேறியது. அவள் நம்பிக்கையிழந்த நிலையை அடைந்து விட்டாள் என்று தோன்றியது. தொப்பியின் கீழிருந்து வெளியே தப்பிவிட்ட நரைமுடிச் சுருளை மறுபடியும் தொப்பிக்குள் திணிப்பதைக் கூட அவள் புறக்கணித்தாள். லட்சக் கணக்கில் பணத்தைத் தோற்று விட்டதாகவும் எல்லாமே போய்விட்டதைப் போலவும் அவள் உணர்ந்தாள் என்பதில் சந்தேகமில்லை. அதிகாரி திரும்பத் திரும்ப மேசைக்குக் கீழே கோமகன் காலை மிதித்தார். வயோதிகச் சீமாட்டியின் இழப்புக்கள் எல்லாவற்றையும் கோமகன் முறையாகக் குறித்துக் கொண்டிருந்தார். கடைசியில் சீட்டாட்டம் முடிவடைந்தது. ஆன்னா ஃபியோதரவ்னா தன் கணக்கில் எதையாவது கூடுதலாகச் சேர்க்க, தன் கணக்கில் ஏதோ தவறு ஏற்பட்டிருப்பதாகப் பாசாங்கு செய்ய—பொதுவாகவே அவளுக்குக் கணக்குப்

போடத் தெரியாது — தன் மனச்சாட்சியை ஒதுக்கிச் செய்த எல்லா முயற்சிகளையும் தான் இழந்த மொத்தத் தொகையைப் பார்த்து அவள் பயந்து போனதையும் மீறி கடைசியில் அவள் தொள்ளாயிரத்து இருபது புள்ளிகள் தோற்றுவிட்டதாகக் கணக்கு காட்டியது. ''அப்படியானல் காகிதப் பணத்தில் ஒன்பது ரூபிள்களா?'' என்று அவள் பல தடவை கேட்டாள், தன்னுடைய இழப்பின் முழு அளவையும் அவளால் முற்றிலும் புரிந்து கொள்ள முடியவில்லை. அவள் காகிதப் பணத்தில் முப்பத்திரண்டரை ரூபிள்கள் இழந்திருப்பதாகவும் பணத்தை உடனே கொடுக்க வேண்டுமென்றும் அவளுடைய சகோதரர் விளக்கிக் கூறினர். இதைக் கேட்டு அவள் நடுங்கி விட்டாள். சீட்டாட்டம் முடிந்ததும் கோமகன் தான் வெற்றியடைந்த தொகையைக் கணக்குப் போடுவதைப் பற்றிக் கவலைப்படாமல் எழுந்து சன்னலுக்குப் பக்கத்தில் சென்றார். அங்கே லீஸா இரவு உணவுக்காக ஒரு தட்டில் காளான்களையும் சுவை நீர் வகைகளையும் வைத்துக்கொண்டிருந்தாள். போலஸவ் அன்று மாலை முழுவதும் செய்ய விரும்பிய ஆனல் செய்ய முடியாதிருந்த காரியத்தை அவர் நேரடியாக மிகச் சுபாவமான முறையில் செய்தார்; அவர் லீஸாவுடன் பருவநிலையைப் பற்றிப் பேசத் தொடங்கினர்.

போலஸவ் அந்த நேரத்தில் மிகவும் தர்மசங்கடமான நிலைமையில் இருந்தார். கோமகனும் குறிப்பாக ஆன்னு ஃபியோதரவ்னுவின்

உணர்ச்சிகளை அடக்கி வைத்த லீஸாவும் போன பிறகு அந்த முதிய சீமாட்டியால் இனியும் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடிய வில்லை.

''உங்கள் பணத்தை நாங்கள் ஜெயித்த தைப் பற்றி நான் மிகவும் வருத்தப்படு கிறேன்'' என்று போலஸவ் — ஏதாவது பேச வேண்டுமென்பதற்காகக் — கூறினர். ''அது அவ்வளவு நாகரிகமான செயல் அல்ல.''

'' 'கௌரவம்', 'துன்பம்' என்று நீங்கள் புது மாதிரியான விளையாட்டுக்களையெல்லாம் கண்டு பிடித்திருக்கிறீர்கள். எனக்கு இம்முறை யில் விளையாடத் தெரியவில்லை. காகிதப் பணத் தில் எவ்வளவு பணம் தர வேண்டும் என்று சொன்னீர்கள்?'' என்று அவள் கேட்டாள்.

''முப்பத்திரண்டு ரூபிள்; முப்பத்திரண்டரை ரூபிள்'' என்று முன்னுள் குதிரைப் படை அதி காரி கூறினர். அவர் சீட்டாட்டத்தில் ஜெயித்த படியால் உற்சாகமாக இருந்தார். ''சகோத ரியே! பணத்தைக் கொடுங்கள்... எடுங்கள். பணத்தைக் கொடுங்கள்.''

''என்னல் உங்களுக்குப் பணம் கொடுக்க முடிவது இதுதான் கடைசித் தடவையாக இருக்கும். இனிமேல் கொடுப்பதற்கு எதுவு மிருக்காது! இவ்வளவு பணத்தை மறுபடியும் ஜெயிக்க முடியும் என்று நான் ஒருக்காலும் நம்ப முடியாது.''

ஆன்ன ஃபியோதரவ்ன உருண்டு போவ தைப் போன்ற நடையில் வேகமாகப் போய்

ஒன்பது காகித ரூபிள்களோடு திரும்பினாள். அந்தக் கிழவர் பிடிவாதமாக வற்புறுத்திய பிறகுதான் அவள் முழுப் பணத்தையும் கொடுத்தாள்.

ஆன்னா ஃபியோதரவ்னாவிடம் பேசினால் அவள் சரமாரியாகத் திட்ட ஆரம்பித்து விடலாம் என்று ஒரு லேசான பயம் போலஸவுக்கு ஏற்பட்டிருந்தது. எனவே அவர் மெதுவாக நழுவிச் சென்று திறந்திருந்த சன்னலுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு உரையாடிக் கொண்டிருந்த கோமகனோடும் லீஸாவோடும் சேர்ந்து கொண்டார்.

இரவு உணவு மேசையின்மேல் வைக்கப்பட்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் இரண்டு மெழுகுவர்த்தி விளக்குகள் இருந்தன. மே மாத இரவு நேரத்தின் புதிய, வெப்பமான காற்றில் அவற்றின் ஜ்வாலைகள் அவ்வப்பொழுது அசைந்தன. தோட்டத்தை நோக்கித் திறந்திருந்த சன்னலுக்குப் பக்கத்தில் வெளிச்சமாக இருந்தது. ஆனால் அறைக்குள்ளே இருந்த வெளிச்சத்திலிருந்து அது முற்றிலும் வேறு விதமாக இருந்தது. அநேகமாக முழுமையானது என்று சொல்லப்படக் கூடிய நிலா —அது இப்பொழுது தன் பொன்னிறச் சாயலை இழந்துவிட்டது — எலுமிச்சை மரங்களின் உயர்ந்த முனைகளுக்கு மேலே மிதந்து அதன் குறுக்கே போய்க் கொண்டிருந்த மென்மையான வெள்ளை மேகங்களின் மேல் மென் மேலும் அதிகமான ஒளியைக் கொட்டியது. கீழே குளத்தில் தவளைகள் ஒன்றாகச் சத்தம்

போட்டுக் கொண்டிருந்தன. மரங்களுக்கு இடையே நிலாவின் வெளிச்சத்தில் வெள்ளியைப் போலப் பிரகாசித்த தண்ணீர் சிறிதளவு தெரிந்தது. நறுமணம் நிறைந்த மலர்கள் பூத்திருந்த புதர்க் காட்டுக்குப் பக்கத்தில் சிறு பறவைகள் சில இங்குமங்கும் நடந்து தங்கள் இறகுகளைக் கோதிக்கொண்டிருக்கும் சத்தம் கேட்டது. சன்னல் அருகே புதர்க் காட்டின் ஈர மலர்க் கொத்துகள் தலையை அசைத்துக் கொண்டிருந்தன.

''அற்புதமான பருவநிலை!'' என்று கோமகன் லீஸாவுக்குப் பக்கத்தில் சென்று தாழ்வான சன்னல் சுவரில் உட்கார்ந்துகொண்டு கூறினார். ''நீங்கள் அடிக்கடி வெளியே உலாவச் செல்வீர்கள் என்று நினைக்கிறேன்.''

''ஆம்'' என்று லீஸா பதிலளித்தாள். என்ன காரணத்தாலோ கோமகனோடு பேசுவதில் அவளுக்குச் சிறிதும் சங்கடம் ஏற்படவில்லை. ''காலையில் ஏழு மணிக்கு வீட்டு வேலைகளுக்காக நான் வெளியே போவேன், அம்மா வளர்க்கும் பீமொச்கா என்ற சின்னப் பெண்ணோடு உலாவப் போவதுமுண்டு.''

''நாட்டுப் புறத்தில் வசிப்பது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும்'' என்றார் கோமகன். அவர் தன் ஒற்றைக் கண்ணுடியைக் கண்ணில் சொருகிக் கொண்டு தோட்டத்தையும் லீஸாவையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தார். ''எப்பொழுதாவது நிலா வெளிச்சத்தில் உலாவப் போவதுண்டா?''

''இப்பொழுது போவதில்லை. மூன்று வரு

டங்களுக்கு முன்பு மாமாவும் நானும் நிலா பிரகாசிக்கும் ஒவ்வொரு இரவிலும் உலாவப் போவோம். அப்போழுது அவருக்கு ஒரு விசித்திரமான நோய் ஏற்பட்டிருந்தது—அவரால் தூங்க முடியவில்லை. முழு நிலவு பிரகாசிக்கும் இரவுகளில் பௌர்ணமி இரவுகளில் அவருக்குத் தூக்கம் வராது. அதோ தெரிகிறதே அதுதான் அவருடைய அறை. அது தோட்டத்துக்குப் பக்கத்தில் இருக்கிறது, தாழ்வான சன்னல். நிலா வெளிச்சம் அவர் முகத்தின் மேல் விழும்.''

''அதுவா? விசித்திரமாக இருக்கிறதே. அது உங்களுடைய அறை என்றல்லவா நினைத்தேன்'' என்றார் கோமகன்.

''நான் இன்றிரவு மட்டும்தான் அங்கே தூங்குகிறேன். என்னுடைய அறையில்தான் நீங்கள் தூங்கப் போகிறீர்கள்.''

''உண்மையாகவா?.. அடடே!.. உங்களுக்குத் தொல்லை கொடுத்துவிட்டேன். அதற்கு என்னை ஒருக்காலும் மன்னிக்க மாட்டேன்.'' கோமகனுடைய கபடின்மையை எடுத்துக் காட்டுவதைப் போல ஒற்றைக் கண்ணாடி கீழே விழுந்தது. ''நாங்கள் இங்கே வந்தது உங்களுக்கு இவ்வளவு தொல்லையாக இருக்கும் என்பது எனக்குத் தெரிந்திருந்தால்...''

''தொல்லை சிறிது கூடக் கிடையாது! அதற்குப் பதிலாக எனக்கு மிகவும் மகிழ்ச்சிதான். மாமாவின் அறை அழகானது. மிகவும் உற்சாகமூட்டக் கூடியது. அங்கே சன்னல் தாழ்வாக இருக்கும். எனக்குத் தூக்கம் வருகின்ற

வரையிலும் அதில் உட்கார்ந்து கொண்டிருப்பேன், அல்லது ஒருவேளை தோட்டத்தில் இறங்கி தூங்கப் போவதற்கு முன்பு சிறிது நேரம் உலாவிக் கொண்டிருப்பேன்.''

''என்ன அழகான பெண்!'' என்று கோமகன் அவளை நன்ருகப் பார்ப்பதற்காக ஒற்றைக் கண்ணுடியை மறுபடியும் கண்ணில் சொருகிக் கொண்டு நினைத்தார். அந்த சன்னல் சுவரில் உட்கார்ந்த பொழுது தன் காலால் அவள் காலைத் தொடுவதற்கு முயற்சி செய்தார். ''நான் விரும்பினுல் சன்னல் ஓரமாக வந்து அவளைப் பார்க்கலாம் என்பதை எவ்வளவு தந்திரமாக எனக்குத் தெரிவித்து விட்டாள்.'' அவள் மீது தன்னுடைய வெற்றி மிகவும் சுலமாக ஏற்பட்டுவிட்டதாக அவருக்குத் தோன்றியதால் அவள் மீது முதலில் அவருக்கு ஏற்பட்டிருந்த கவர்ச்சியில் பெரும் பகுதியை அவள் இழந்துவிட்டாள்.

''நீ விரும்புகின்ற பெண்ணுேடு தோட்டத்தில் இப்படிப்பட்ட இரவைக் கழிப்பது எவ்வளவு ஆனந்தமாக இருக்கும்'' என்று அந்த இருண்ட பாதையைச் சிந்தனையோடு பார்த்துக் கொண்டே அவர் கூறினுர்.

இந்த வார்த்தைகளும் தற்செயலாக ஏற்பட்டதைப் போல் அவர் கால் தன்னுடைய கால் மீது மறுபடியும் பட்டதும் லீஸாவுக்கு ஓரளவு சங்கடத்தைக் கொடுத்தன. தன் சங்கடத்தை மறைப்பதற்காக அவள் சிந்திக்காதபடி அவசரத்தில் எதையோ சொன்னுள்: ''ஆம். நிலா வெளிச்சத்தில் உலாவுவது

ஆனந்தமாக இருக்கும்.'' அவள் மனம் குழப்ப மடைந்திருந்ததால் அவள் காளான் ஜாடியை வேகமாகக் கட்டிஞள். அதை எடுத்துக்கொண்டு புறப்பட்டபொழுது போலஸவ் அங்கே வந்தார். இவர் எப்படிப்பட்டவர் என்று கண்டு பிடிக்க வேண்டும் என்ற ஆசை திடீரென்று அவளுக்கு ஏற்பட்டது.

''என்ன அழகான இரவு!'' என்ருர் போலஸவ்.

இவர்கள் பருவநிலையைப் பற்றி மட்டுமே பேசுகிருர்கள் என்று லீஸா நினைத்தாள்.

''எவ்வளவு கவர்ச்சியான காட்சி!'' என்று அவர் தன் பேச்சைத் தொடர்ந்தார். ''ஆனல் உங்களுக்கு இது ஏற்கெனவே அலுத்துப் போயிருக்கும்!'' தனக்கு மிகவும் பிடித்த மானவர்களிடம் அவர்கள் விரும்பாத எதை யாவது பேசுவது எப்பொழுதுமே அவரிட மிருந்த விசித்திரமான பழக்கம். அதன்படி இவ்வாறு கூறிஞர்.

''ஏன் அப்படி நினைக்கிறீர்கள்? ஒரே உணவுப் பொருளை அடிக்கடி சாப்பிடுவது அல்லது ஒரே உடையை அணிவது அலுப்பைக் கொடுக்கும். ஆனல் அழகான தோட்டம், அதிலும் வானத்தின் உச்சியில் நிலா பவனி வரும் பொழுது ஒருபோதும் அலுப்பை ஏற்படுத்தாது. மாமாவின் அறையிலிருந்து பார்த்தால் குளம் முழுவதுமே நன்ருகத் தெரியும். இன்றிரவில் அதைப் பார்ப்பேன்.''

''இங்கே வானம்பாடிகள் இல்லை என்று நினைக்கிறேன்'' என்ருர் கோமகன். போலஸவ்

அந்த நேரத்தில் வந்துவிட்டபடியால் இரவில் லீஸாவைச் சந்திப்பதற்கு இன்னும் திட்ட வட்டமான ஏற்பாடுகளைச் செய்ய முடியாமற் போய்விட்டது அவருக்கு அதிகமான அதிருப் தியைக் கொடுத்தது.

''கிடையாது. முன்பு வானம்பாடிகள் இருந் தன. இந்த வருடம்—சரியாகச் சொல்வதென் ருல் சென்ற வாரத்தில்—ஒரு வானம்பாடி அழகாகப் பாடிக் கொண்டிருந்ததைக் கேட் டேன். ஆனல் அந்த நேரத்தில் கான்ஸ்டபின் வண்டி மணிகள் கலகலக்க அங்கே வந்தபடி யால், அது பயத்தில் பறந்து போய்விட்டது. மூன்று வருடங்களுக்கு முன்பு நானும் மாமா வும் பாதையில் இருக்கும் மரங்களின் கீழ் உட்கார்ந்து அவை பாடுவதை மணிக் கணக் காகக் கேட்டுக் கொண்டிருப்போம்.''

''இந்த வாயாடிப் பெண் உங்களிடம் என்ன சொல்லிக்கொண்டிருக்கிருள்?'' என்று மாமா அவர்களை நோக்கி வந்து கேட்டார். ''கனவான்களே! நீங்கள் ஏதேனும் உண வருந்த விரும்பவில்லையா?''

இரவு உணவருந்தும் பொழுது கோமகன் உணவைப் பாராட்டியதும் விரும்பிச் சாப் பிட்டதும் ஆன்ஞ ஃபியோதரவ்ஞவின் எரிச் சலை ஓரளவுக்குத் தணிப்பதற்கு உதவியது. பிறகு அதிகாரிகள் விடை பெற்றுக்கொண்டு தங்கள் அறைக்குச் சென்ருர்கள். கோமகன் மாமாவின் கையைக் குலுக்கினுர், ஆன்ஞ ஃபியோதரவ்ஞவின் கையை முத்தமிடாமல் குலுக்கியது அவளுக்கு ஆச்சரியத்தைக்

கொடுத்தது. அவர் லீஸாவின் கையைக்கூடக் குலுக்கினுர். அவள் கண்களை உற்றுப் பார்த்த படியே லேசாக, ஆனுல் இனிமையோடு சிரித் தார். அவருடைய பார்வை மறுபடியும் அவ ளுக்குச் சங்கடத்தைக் கொடுத்தது.

''அவர் அழகாக இருக்கிருர். ஆனுல் அவர் தன்னைப் பற்றி மிகவும் பெருமையாக நினைக் கிருர்'' என்று அவள் கருதினுள்.

## 14

''உங்களுக்கு வெட்கம் ஏற்படவில்லையா?'' என்று அதிகாரிகள் தங்களுடைய அறைக்குச் சென்றதும் போலஸவ் கேட்டார். ''நாம் தோற்க வேண்டும் என்று என்னுல் முடிந்த வரை முயற்சி செய்தேன். மேசையின் கீழ் உங்கள் காலை மிதித்துக் கொண்டே இருந் தேன். உங்களுக்கு மனச்சாட்சியே இல்லை. அந்தக் கிழவி மிகவும் வருத்தப்பட்டாள்.''

கோமகன் பலமாகச் சிரித்தார்.

''அவள் அசந்து போய்விட்டாள்! அதை நினைத்து எவ்வளவு வருத்தப்பட்டாள்!''

அவர் மறுபடியும் பலமாகச் சிரித்தார். அவர்களுக்கு முன்னுல் நின்றுகொண்டிருந்த யோஹன் கூட அந்தச் சிரிப்பினுல் கவரப்பட்டு தன் கண்களைக் கீழே தாழ்த்திக் கொண்டு இரகசியமான முறையில் லேசாகச் சிரித்தான்.

''குடும்பத்தின் பழைய நண்பருடைய மகன்!.. ஹா! ஹா! ஹா!'' கோமகன் தொடர்ந்து சிரித்தார்.

''ஆனால் உண்மையில் அது சரியான காரியமல்ல. நான் அவளுக்காக வருத்தப் பட்டேன்'' என்றார் அதிகாரி.

''பேத்தல்! நீ இன்னும் இளைஞனாக இருக்கிறாய்! நான் தோற்பேன் என்று நீ எதிர்பார்த்தாயா? எதற்காக நான் தோற்க வேண்டும்? விளையாட்டைக் கற்றுக்கொள்வதற்கு முன்பு நானும் தோற்றதுண்டு. நண்பனே! அந்தப் பத்து ரூபிள் எனக்கு உபயோகமாக இருக்கும். வாழ்க்கையைப் பற்றிக் காரிய சாத்தியமாக சிந்திக்கத் தெரிய வேண்டும். இல்லையென்றால் முட்டாள்கள் கூட்டத்தில் சேர வேண்டியது தான்.''

போலஸவ் மௌனமாக இருந்தார். யாருடனும் பேசாமல் லீஸாவைப் பற்றிச் சிந்திக்க விரும்பினார். அவள் விசேஷமான தூய்மையும் அழகும் நிறைந்த பிறவி என்று கருதினார். அவர் உடைகளை மாற்றிக்கொண்டு தனக்காகத் தயாரிக்கப்பட்டிருந்த மென்மையான, சுத்தமான படுக்கையில் படுத்தார்.

''இராணுவ வாழ்க்கையின் கௌரவம், புகழ்! என்ன பிதற்றல்!''—சன்னலின் மீது தொங்கிக் கொண்டிருந்த சால்வையின் வழியாக வந்து கொண்டிருந்த நிலவின் வெளிறிய பிரகாசத்தைப் பார்த்தபடியே அவர் நினைத்தார். ''ஏதாவது ஒரு அமைதியான இடத்தில் அழகான, அறிவுள்ள, எளிமையான மனைவியோடு வாழ்ந்தால்—அதுவல்லவா மகிழ்ச்சி! அதுதான் உண்மையான, நிரந்தரமான மகிழ்ச்சி!''

ஆனால் என்ன காரணத்தாலோ அவர் தன்னுடைய சிந்தனைகளைத் தன்னுடைய நண்பரிடம் தெரிவிக்கவில்லை. கோமகனும் அந்த நாட்டுப் புறப்பெண்ணைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறார் என்று அவர் உறுதியாகக் கருதினாலும் அவள் பெயரைக் கூட அவர் சொல்லவில்லை.

''நீ ஏன் உடைகளை மாற்றாமலிருக்கிறாய்?'' என்று தரையில் குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்த கோமகனைக் கேட்டார்.

''என்னவோ எனக்குத் தூங்க விருப்பமில்லை. வேண்டுமென்றால் விளக்கை அணைத்துவிடு. எனக்கு வெளிச்சம் வேண்டாம்.''

அவர் மறுபடியும் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார்.

''தூக்கம் வரவில்லையா'' என்றார் போலஸவ். அன்று மாலையில் நடைபெற்ற சம்பவங்களின் காரணமாக அவர் தன் மீது கோமகனின் ஆதிக்கத்தை முன் எப்போதுமில்லாத அளவுக்கு வெறுத்தார். அதைத் தூக்கியெறிய வேண்டும் என்ற மனோபாவம் அவரிடம் ஏற்பட்டிருந்தது. ''உன்னுடைய வழவழப்பான தலையில் எத்தகைய எண்ணங்கள் உருவாகிக் கொண்டிருக்கின்றன என்று ஊகிப்பது கடினமல்ல! நீ அவளைக் கண்டு பிரமித்துப் போனதை நான் பார்த்தேன். ஆனால் அவளைப் போல எளிமையும் நேர்மையும் நிறைந்த பிறவியை உன்னால் புரிந்து கொள்ள முடியாது. உனக்கு மீனா வேண்டும், கர்னலின் பதவிச் சின்னங்கள் தான் வேண்டும். சரி. அவருக்கு

அவளைப் பிடித்திருக்கிறதா என்று கேட்கி றேன்'' என்று மனதில் நினைத்துக் கொண்டார்.

ஆனால் போலஸவ் புரண்டு படுத்து கோமக னிடம் பேச நினைத்தபொழுது அவர் முடிவை மாற்றிக் கொண்டார். கோமகன் லீஸாவைப் பற்றி தான் எதிர்பார்த்தது போலவே அபிப்பிராயம் கூறினால் தன்னால் அதை மறுத்துப் பேச முடியாது என்பதோடு அதைத் தான் ஒத்துக்கொள்ள வேண்டிய நிலை கூட ஏற்படும் என்று நினைத்தார். அவர் அந்த அள வுக்குக் கோமகனின் ஆதிக்கத்துக்குப் பணிந்து வருகிறார். ஆனால் ஒவ்வொரு நாள் மறையும் பொழுதும் அது அதிகமான அளவுக்கு அநீதி யாக, தாங்க முடியாததாகிக் கொண்டு வரு கிறது.

கோமகன் தொப்பியை அணிந்து கொண்டு கதவை நோக்கிச் சென்ற பொழுது, ''நீ எங்கே போகிறாய்?'' என்று கேட்டார்.

''குதிரை லாயத்துக்கு. எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்க்க வேண்டும்.''

''விசித்திரமாக இருக்கிறதே!'' என்று அதி காரி நினைத்தார். ஆனால் அவர் மெழுகுவர்த்தி விளக்கை அணைத்துவிட்டுத் தன்னுடைய முன் னாள் நண்பர் தன்னிடம் ஏற்படுத்திய அர்த்த மற்ற பொறாமை மற்றும் விரோதமான கருத்துக்களை மனதிலிருந்து வெளியேற்ற முயற்சி செய்து கொண்டே புரண்டு படுத்தார்.

இதற்கிடையில் ஆன்னா ஃபியோதரவ்னா வழக்கம் போல தன் சகோதரர், மகள், வளர்ப்புக் குழந்தை ஆகியோரை அன்போடு

முத்தமிட்டு அவர்கள் மேல் சிலுவைக்குறி போட்டுவிட்டுத் தன் அறைக்குச் சென்றுவிட்டாள். ஒரே நாளில் இவ்வளவு கூர்மையான பல உணர்ச்சிகளை அவள் அனுபவித்து நெடுங்காலமாகிவிட்டது. அவளால் தன்னுடைய தோத்திரங்களைக் கூட நிதானமாகச் சொல்ல முடியவில்லை. காலஞ்சென்ற கோமகன் மற்றும் அவளிடமிருந்து வெட்கமில்லாமல் பணத்தைப் பிடுங்கிய இந்த இளம் பகட்டனைப் பற்றி வருத்தமான, தத்ரூபமான நினைவுகள் அவளை அந்த அளவுக்குப் பாதித்திருந்தன. எனினும் அவள் உடை மாற்றிக் கொண்டு படுக்கைக்குப் பக்கத்திலிருக்கும் சிறிய மேசையில் அவளுக்காக எப்பொழுதும் வைக்கப்பட்டிருக்கும் அரை டம்ளர் க்வாஸ் பானத்தைக் குடித்துவிட்டு வழக்கம் போல படுக்கையில் படுத்தாள். அவள் அன்போடு வளர்க்கும் பூனை அந்த அறைக்குள் மெதுவாக நுழைந்தது. ஆன்னு ஃபியோதரவ்னுவுக்குத் தூக்கம் வரவில்லை. அவள் பூனையைக் கூப்பிட்டு அதைத் தடவிக்கொடுத்தாள், அதன் உறுமல் சத்தத்தைக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

''இந்தப் பூனையால்தான் எனக்குத் தூக்கம் வரவில்லை'' என்று அவள் நினைத்துக் கொண்டு பூனையைத் தள்ளிவிட்டாள். அந்தப் பூனை மெதுவாகத் தரையில் விழுந்தது, பிறகு தன் அடர்த்தியான வாலைச் சுருட்டிக் கொண்டு அடுப்புச் சுவர் மீது தாவி ஏறியது. எசமானியின் அறையில் தரையில் வழக்கமாகத் தூங்குகின்ற பணிப் பெண் இந்த சமயத்தில்

தன்னுடைய பாயை எடுத்துக் கொண்டு வந்தாள். அவள் பாயை விரித்துவிட்டு மெழுகு வர்த்தி விளக்கை அணைத்தாள்; தெய்வ வடிவத்தில் இருந்த விளக்கை ஏற்றினுள். சற்று நேரத்தில் அவள் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள். ஆனுல் ஆன்ஞ ஃபியோதரவ்ஞவின் துன்பப்பட்ட இதயத்துக்கு அமைதியைக் கொடுப்பதற்கு உறக்கம் வரவில்லை. அவள் கண்களை மூடியதும் அந்த ஹுஸ்ஸாரின் முகம் அவளுக்கு முன்னுல் தோன்றியது. அவள் கண்களைத் திறந்ததும் அந்த அறையிலிருந்த எல்லாப் பொருள்களும்—படுக்கை அறைக் கழிவுக் கலம், மேசை, தெய்வ வடிவத்திலிருந்த விளக்கின் லேசான வெளிச்சத்தில் அங்கே தொங்கிக் கொண்டிருந்த வெள்ளை கவுன்—அவரை விசித்திரமான உருவங்களில் சித்தரிப்பதைப் போலத் தோன்றின. ஒரு சமயத்தில் அந்த இறகு மெத்தை அவளை மூச்சுத்திணற வைப்பதைப் போல உணர்ந்தாள். மறு சமயத்தில் கடிகாரத்தின் மணிச் சத்தம் அல்லது பணிப் பெண்ணின் குறட்டைச் சத்தம் அவளுக்கு எரிச்சலைத் தந்தது. அவள் பணிப் பெண்ணை எழுப்பிக் குறட்டையை நிறுத்துமாறு உத்தரவிட்டாள். தன் மகள், முதிய கோமகன் மற்றும் இளம் கோமகன், ''முன்னுரிமை'' ஆட்டம் ஆகியவற்றைப் பற்றிய எண்ணங்கள் அவள் மனதில் விசித்திரமாகக் கலந்து வெளிப்பட்டன. காலஞ்சென்ற கோமகனேடு தான் வால்ட்ஸ் நடனமாடிக் கொண்டிருப்பதை, தன்னுடைய

மொத்தையான வெள்ளைத் தோள்களை அவள் கண்டாள், அவற்றின் மீது யாரோ தன் உதடுகளைப் பதிப்பதை உணர்ந்தாள், பிறகு அந்த இளம் கோமகனின் கரங்கள் தன் மகளை அணைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். மறுபடியும் உஸ்தியூஷ்கா குறட்டைவிடத் தொடங்கினாள்...

''இல்லை. அந்தக் காலத்தில் இருந்த மாதிரி இப்பொழுது யாரும் இல்லை. அவர் எனக்காக எந்தச் சோதனையையும் சந்திப்பதற்குத் தயாராக இருந்தார். அதற்குத் தக்க காரணமும் இருந்தது. ஆனால் அவர் மகன் காதலிக்க விருப்பமில்லாமல் சீட்டாட்டத்தில் வெற்றியடைந்த பணத்தைப் பற்றி அற்பத்தனமான மகிழ்ச்சியில் மடையனைப் போல—அவர் முட்டாள்தான்—தூங்கிக் கொண்டிருப்பார் என்று நிச்சயமாக நம்பலாம். அவருடைய தகப்பனார் முழங்காலை மடக்கிக் கொண்டு என்னிடம் எவ்வளவு வாக்குறுதிகளைக் கொடுத்தார். 'நான் என்ன செய்ய வேண்டும்? சொல். தற்கொலை செய்துகொள்ள வேண்டுமா? உனக்காக நான் மகிழ்ச்சியோடு தற்கொலை செய்து கொள்வேன்'. நான் விரும்பியிருந்தால் அவர் அதைச் செய்திருப்பார்.''

திடீரென்று ஹாலில் யாரோ வெறுங்காலோடு ஓடிவரும் சத்தம் கேட்டது. லீஸா வெளுத்துப் போய், நடுங்கிக் கொண்டு, மேற்சட்டைக்கு மேல் ஒரு சால்வையை மட்டும் போர்த்திக் கொண்டு அந்த அறைக்குள் ஓடி

வந்து தாயாரின் படுக்கை மேல் விழுந்தாள்...

லீஸா தாயாருக்கு இரவு வணக்கம் சொன்ன பிறகு தனியாக மாமாவின் அறைக்குச் சென்ருள். வெள்ளே மேற்சட்டையை அணிந்து கொண்டு, தன்னுடைய நீண்ட கூந்தலே ஒரு கைக் குட்டையில் சுற்றி முடிச்சுப் போட்ட பிறகு அவள் மெழுகுவர்த்தி விளக்கை அணேத் தாள். சன்னல் கதவுகளேத் திறந்துவைத்து ஒரு நாற்காலியில் கால்களே மடக்கிக் கொண்டு வருத்தத்தோடு குளத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். குளத்தின் மேற்பரப்பு முழுவதிலும் வெள்ளியைப் போலப் பிரகாசம் தெரிந்தது.

அவளுடைய வழக்கமான விருப்பார்வங் களும் வேலேகளும் திடீரென்று ஒரு புதிய வெளிச்சத்தில் அவளுக்குத் தோன்றின. அவ ளுடைய வயோதிக, சபலங்கள் கொண்ட தாயார்—சிறிதும் சிந்திக்காதபடி அவளே நேசிப்பது லீஸாவின் உயிரின் ஒரு பகுதியாக இருந்தது — அவளுடைய அன்பு நிறைந்த ஆனல் பலவீனமான மாமா, இளம் எசமானி யைப் போற்றிய வீட்டு வேலேக்காரர்கள், பால் மாடுகளும் கன்றுகளும்—அவை அனேத் தும், எண்ணற்ற பல இலேயுதிர் காலங்கள் மறைந்து எண்ணற்ற பல வசந்தகாலங்கள் மறு பிறவியடைந்து தோன்றுவதை அறிந்தி ருக்கும் அந்த இயற்கைச் சூழல் அனேத்தும்— —அதன் மத்தியில் நேசத்தோடு, நேசிக்கப் பட்டு அவள் வளர்க்கப்பட்டிருக்கிருள்— இவையனேத்தும் இப்பொழுது ஒன்றுமில்லா

ததைப் போலத் தோன்றியது, சலிப்பூட்டு வதாகவும் வேண்டாததாகவும் தோன்றியது. ''அழகான முட்டாளே! இருபது வருடங்க ளாக மற்றவர்களுக்கு ஊழியம் செய்து உண் மையான வாழ்க்கையும் மகிழ்ச்சியும் என்ன வென்று தெரிந்து கொள்ளாமலே காலத்தை வீணாக்கிவிட்டாய்!'' என்று யாரோ அவளுடைய காதில் முணுமுணுத்ததைப் போல இருந் தது. இப்பொழுது அந்தப் பிரகாசமான, அமைதியான தோட்டத்தின் ஆழத்தை ஊடு ருவிப் பார்த்துக் கொண்டு அவள் உட்கார்ந் திருந்த பொழுது இத்தகைய சிந்தனைகள் அவ ளிடம் வன்மையோடு முன் எப்போதுமில்லாத வன்மையோடு வெடித்தன, அச்சிந்தனைகள் எப்படி ஏற்பட்டன? திடீரென்று கோமகன் மேல் காதல் ஏற்பட்டதால் என்று ஒருவர் கருதலாம். அதற்கு மாறாக அவளுக்கு அந்தக் கோமகனைப் பிடிக்கவில்லை. அவள் அந்த அதி காரியை சுலபமாகக் காதலித்திருப்பாள். ஆனால் அவர் பணக்காரரல்ல, அதிகமாகப் பேசாதவராக இருந்தார். அவள் முன்பே அவரை மறந்துவிட்டாள். ஆனால் அவள் கோமகனைப் பற்றி நினைத்தபொழுது கோப மும் ஆத்திரமும் அடைந்தாள். ''இல்லை. நான் எதிர்பார்த்த நபர் அவரல்ல'' என்று தனக் குள் சொல்லிக் கொண்டாள். முழு நிறைவான அழகுடைய ஒருவரே அவளுடைய இலட்சி யம்—இம்மாதிரியான இரவில், இப்படிப்பட்ட சூழலில் சுற்றிலும் இருக்கின்ற அழகைச் சிதைக்காமலே அவரைக் காதலிக்க முடியும்—

கரடு முரடான யதார்த்தத்துக்குப் பொருந்து கின்ற வகையில் அந்த இலட்சியம் ஒருபோதும் வெட்டப்படவில்லை.

முதலில் அவளுடைய தனிமையான வாழ்க்கையும் அவள் அக்கறையெடுத்துக் கொள்ளக் கூடிய நபர்கள் அங்கே இல்லாததும், கடவுள் நம் ஒவ்வொருவருடைய இதயத்திலும் சமமான அளவில் விதைத்திருக்கும் காதல் என்ற மாபெரும் சக்தியை அவளுடைய இதயத்தில் முழுமையாகவும் சிதைவுறாமலும் பாதுகாத்து வைத்திருந்தது. எனினும் இப்பொழுது தனக்குள் அந்த ஏதோ ஒன்று இருப்பதை உணரக் கூடிய வேதனையான மகிழ்ச்சியோடு தன்னுடைய இதயம் என்ற மர்மப்பேழையில் புதைத்து வைக்கப்பட்டிருக்கும் செல்வத்தைப் பற்றிச் சிந்தித்துப் பரவசமடைவதற்காக அவள் சில சமயங்களில் இரகசியமாகத் தன் இதயத்தைத் துழாவுவாள். அவள் நெடுங் காலம் வாழ்ந்து விட்டாள், முதன் முதலாக அங்கே வந்திருக்கும் நபரிடம் முன்யோசனை இல்லாமல் அதைக் குவிக்க விரும்பாத அளவுக்கு நெடுங்காலம் வாழ்ந்துவிட்டாள். இந்தக் குறைவான மகிழ்ச்சியை அவள் கடைசிவரை அனுபவிக்குமாறு கடவுள் அருள் புரிவாராக! இது மிகவும் சிறந்த, மிகப் பெரிய மகிழ்ச்சி அல்ல என்று யார் சொல்ல முடியும்? அது ஒன்று மட்டுமே உண்மையான, சாத்தியமான மகிழ்ச்சி என்று கூற முடியுமா?

''அன்புள்ள தந்தையே! இளமையும் மகிழ்ச்சியும்என்னை ஒதுக்கிவிட்டுப் போய்விட்டனவா...

நான் ஒரு போதும் அவற்றை அறிய முடியாதா? அது உண்மையா?'' அவள் உயர்ந்த பிரகாசமான வானத்தை நோக்கிக் கண்களை உயர்த்தினாள். அங்கே பஞ்சு போன்ற வெள்ளை மேகங்கள் நட்சத்திரங்களை மறைத்துக் கொண்டு நிலவை நோக்கிப் போய்க்கொண்டிருந்தன. ''உச்சியிலிருக்கும் அந்த மேகம் நிலவைத் தொட்டுவிட்டால் அது உண்மை தான்'' என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள். அந்தப் பிரகாசமான தகட்டின் கீழ்ப்பாதியில் மூடுபனி போன்ற புகை கலந்த கோடு குறுக்கே போய்க் கொண்டிருந்தது. புல்வெளியின் மேல், எலுமிச்சை மரங்களின் உச்சிகளின் மேல், குளத்தின் மேல் பிரகாசித்த ஒளி சிறிது சிறிதாக மங்கலாயிற்று, மரங்களின் கறுப்பு நிழல்கள் மறைந்தன. சோகம் நிறைந்த நிழல்கள் இயற்கையைக் கறுப்பாக்கியதைத் தொடர்வதைப் போல இலைகளின் மேல் வீசிய தென்றல் காற்றில் பனிதூங்கும் இலைகள், ஈர மண், மலர்களின் நறுமணம் சன்னலை நோக்கி மிதந்து வந்தது.

''இல்லை. அது உண்மையல்ல'' என்று அவள் தனக்கு ஆறுதலாகச் சொல்லிக் கொண்டாள். ''இன்றிரவில் ஒரு வானம்பாடி பாடினால், இந்த வருத்தமான எண்ணங்கள் அனைத்தும் முட்டாள்தனமானவை, நம்பிக்கை இழக்க வேண்டிய அவசியமில்லை'' என்று அவள் நினைத்தாள். அவள் யாருக்காகவோ காத்திருப்பதைப் போல நெடுநேரம் வரை அமைதி

யாக உட்கார்ந்திருந்தாள். மேகங்களுக்குப் பின்ஞலிருந்து நிலா வெளியே வந்தது, அங்கே பிரகாசமான காட்சி ஏற்பட்டது; அது மறு படியும் மேகங்களுக்குப் பின்ஞல் சென்றதும் பூமி இருளில் மூழ்கியது. தூக்கம் அவள் கண் களைத் தழுவியபொழுது குளத்தின் அருகில் ஒரு வானம்பாடி பாடுவதைத் தெளிவாகக் கேட்டாள். அந்த நாட்டுப்புறப்பெண் கண்களைத் திறந்தாள். அவளைச் சுற்றிலும் பிரகாசமாக, மாசுமறுவற்றதாக இருந்த இயற்கையோடு அவளுடைய ஆன்மா மறுபடியும் புதிய பர வசத்தோடு மர்மமாக இணைந்து புத்துயிர் பெற்றது. அவள் தன் இரண்டு முழங்கைகளை யும் ஊன்றிக் குனிந்தாள். அவள் இதயத்தில் ஒரு இனிமையான வருத்தம் நிறைந்தது. ஈடேற்றத்துக்காக ஏங்கிய பரந்த, பரிசுத்த மான கண்ணீர்—நன்மை தருகின்ற, ஆறுதல ளிக்கும் கண்ணீர் — கண்களில் திரண்டது. அவள் சன்னல் அடிக்கட்டையின் மீது கைகளை மடக்கிவைத்துத் தலையை அவற்றின் மேல் வைத்தாள். அவளுக்கு மிகவும் பிடித்தமான தோத்திரப் பாடல் அவள் இதயத்திலிருந்து தாஞகவே எழுந்தது. கண்கள் நீர்த்துளிகளால் இன்னும் ஈரமாக இருக்கும் பொழுது, அவள் அப்படியே உறக்கத்திலாழ்ந்தாள்.

ஒரு கை அவளைத் தொட்டதும் அவள் விழித்துக் கொண்டாள். அவள் தூக்கம் கலைந் தது;அந்த ஸ்பரிசம் மென்மையாக, இனிமை யாக இருந்தது. அந்தக் கையின்பிடி அவளுடைய கரத்தை இறுக்கியது. திடீரென்று எங்கே

இருக்கின்ருேம் என்பதை அவள் உணர்ந்தாள், அவள் அலறினுள், துள்ளிக்குதித்தாள். சன்னலுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருப்பது கோமகனுக இருக்காது என்று தனக்குள் சொல்லிக் கொண்டு நிலவு வெளிச்சத்தில் ஒளிமயமாக இருந்த அறையை விட்டு ஓடினுள்.

## 15

ஆனுல் கோமகன்தான் அங்கே நின்று கொண்டிருந்தார். அந்தப் பெண்ணின் கூக்குரலேயும், அதைக் கேட்டதும் வேலியின் மறு பக்கத்திலிருந்து இரவுக் காவலாளி ஓடிவரும் பொழுது இருமியதையும் கேட்டவுடன் அவர் திருடும்பொழுது பிடிபட்ட திருடனைப் போல உணர்ந்து பனியில் ஈரமடைந்திருந்த புல் வெளியிலிருந்து தோட்டத்துக்குள் ஓடினுர். ''நான் ஒரு முட்டாள்!'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டார். ''நான் அவளே பயமுறுத்திவிட்டேன். நான் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொண்டிருக்க வேண்டும். அவளிடம் மெதுவாகப் பேசி அவளே எழுப்பியிருக்க வேண்டும். நான் ஒரு திறமையில்லாத மிருகம்!'' அவர் சற்று நின்று உற்றுக் கேட்டார். இரவுக் காவலாளி கதவு வழியாகத் தோட்டத்துக்குள் நுழைந்து மணற் பாதையின் வழியாகத் தன் தடியை இழுத்துக் கொண்டு வரும் சத்தம் கேட்டது. அவர் ஒளிந்து கொள்ள வேண்டும். அவர் குளத்தின்

கரை மேல் ஓடினர். தவளைகள் பயந்து போய் அவர் காலடியின் கீழேயிருந்து தண்ணீருக்குள் குதித்த சத்தத்தைக் கேட்டு அவர் திடுக்கிட்டார். அவர் கால்கள் ஈரமடைந்திருந்த போதிலும் அவர் கீழே உட்கார்ந்து தான் செய்த எல்லாவற்றையும் மறுபடியும் நினைத்துப் பார்த்தார். வேலியின் மீது ஏறிக் குதித்ததும், அவளுடைய அறையின் சன்னலைத் தேடியதும், கடைசியில் அவளுடைய வெண்மையான நிழலைப் பார்த்ததும், சிறு சப்தம் கூட ஏற்படுத்திவிடக் கூடாது என்று பயந்து அவளருகில் பல தடவை போனதும், உடனே பின்வாங்கியதும், ஒரு நிமிடத்தில் அவள் தனக்காகக் காத்துக் கொண்டிருக்கிருள் என்ற உறுதி ஏற்பட்டதும், அவளை அதிக நேரம் தாமதிக்கச் செய்ததற்காக அவள் எரிச்சலடைந்திருப்பதாகக் கூடத்தோன்றியதும் மறு நிமிடத்தில் அப்படிப்பட்ட ஒரு சந்திப்புக்கு அவள் உடனடியாக இசைந்திருப்பாளா என்ற சந்தேகம் தோன்றியதும், கடைசியில் ஒரு நாட்டுப் புறப் பெண்ணின் நாணம் அவள் தூங்குவதைப் போலப் பாசாங்கு செய்ய வைத்திருக்கிறது என்று முடிவு செய்து அவளருகில் சென்றதும் அவள் உண்மையாகவே தூங்கிக் கொண்டிருக்கிருள் என்பதைத் தெளிவாகப் பார்த்ததும்—ஏதோ ஒரு காரணத்தால் அவர் உடனே ஓடிவிட்டார். ஆனல் தன்னுடைய கோழைத்தனத்துக்காக அவமானமடைந்து மறுபடியும் திரும்பிவந்து

துணிச்சலோடு அவள் கையைத் தொட்டார். இரவுக் காவலாளி மறுபடியும் இருமினுன்; அவன் தோட்டத்தை விட்டு வெளியே சென்றபொழுது கதவு கிரீச்சிட்டது. அந்த இளம் பெண்ணின் அறைச் சன்னல் படீரென்று சாத்தப்பட்டது. அதன் மீது உள்பக்கத்தாள் போடப்பட்டது. கோமகனுக்கு இது மிகவும் எரிச்சலைக் கொடுத்தது. எல்லாவற்றையும் மறுபடியும் முதலிலிருந்து தொடங்கும் சந்தர்ப்பம் கிடைத்தால் அவர் எதையும் கொடுப்பதற்குத் தயாராக இருந்தார். ஓ! இரண்டாவது தடவை அவ்வளவு முட்டாள் தனமாக நடந்துகொள்ள மாட்டேன்!.. ''அழகான பெண்! எவ்வளவு மலர்ச்சி! வழி பாட்டுக்குரிய பெண்! அப்படிப்பட்ட பெண்ணை என் விரல்களின் இடுக்கின் வழியாகத் தப்பிச் செல்ல விட்டு விட்டேனே... நான் ஒரு முட்டாள்தனமான மிருகம்!'' தூங்க வேண்டும் என்ற விருப்பமே அவருக்கு இல்லாமற் போய்விட்டது. மிகவும் மோசமாக எரிச்சலடைந்த ஒருவரின் உறுதியான காலடியோடு எலுமிச்சை மரங்களடர்ந்த பாதை வழியே அவர் நடந்து சென்ருர்.

ஆனுல் அவருக்கும் கூட அந்த இரவு அமைதிப்படுத்துகின்ற வருத்தத்தையும் காதல் ஏக்கத்தையும் ஒரு சமாதானக் காணிக்கையைப் போலக் கொடுத்தது. அங்குமிங்கும் சிறிதளவு புல் அல்லது உலர்ந்த குச்சிகள் நீட்டிக்கொண்டிருந்த அந்தக் களிமண் பாதை எலுமிச்சை மரங்களின் அடர்த்தியான இலை

களின் வழியாக நேரடியாக விழுந்த வெளி றிய நிலாவெளிச்சத்தில் கறும் புள்ளிகள் நிறைந்து காணப்பட்டது. சில சமயங்களில் ஒரு வளைந்த கிளையின் ஒரு பக்கத்தில் மட்டுமே வெளிச்சம் பட்டு அதன் மேல் வெள்ளைப் பாசி அதிகமாகப் படர்ந்திருப்பது போலத் தோன்றியது. வெள்ளி இலைகள் அவ்வப்பொழுது ஒன்றுகூடி ரகசியம் பேசின. வீட்டில் எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டிருந்தன. எல்லா சத்தங்களும் நின்றுவிட்டன. இந்தப் பிரகாசமான, அமைதியான, சூழ்ந்து கொள்ளப்பட முடியாத பரப்பை ஒரு வானம் பாடி தன்னுடைய பாடலால் நிரப்பியது. ''கடவுளே, எப்படிப்பட்ட இரவு! எவ்வளவு அற்புதமான இரவு!'' என்று தோட்டத்திலிருந்து வீசிய, புது நறுமணங்கமழும் காற்றைத் தன் நுரையீரல்களுக்குள் ஆழமாக இழுத்துக் கொண்டே கோமகன் நினைத்தார். ''ஆனால் இங்கே ஏதோ குறை இருக்கிறது. எனக்கு என்னிடத்திலும் மற்றவர்களிடத்திலும் அதிருப்தி, வாழ்க்கையிடத்திலுமே அதிருப்தி ஏற்பட்டிருப்பது போலத் தோன்றுகிறது. அவள் எவ்வளவு இனிமையான பெண்! ஒருவேளை அவள் கோபமடைந்து விட்டாளோ...'' இங்கே அவருடைய சிந்தனைகள் புதிய திருப்பத்தை அடைந்தன. தோட்டத்தில் தானும் அந்த நாட்டுப் புறப் பெண்ணும் மிகவும் விசித்திரமான வேறுபட்ட நிலைமைகளில் இருப்பதாக அவர் இப்பொழுது நினைத்தார். பிறகு அந்த நாட்டுப் புறப் பெண்ணின் இடத்

தில் மீண்டு தோன்றினாள். ''எவ்வளவு முட்டாள் தனமாக நடந்து கொண்டேன்! அவளை அப் படியே இடையை வளைத்துத் தூக்கி முத்தமிட் டிருக்க வேண்டும்!'' கோமகன் இந்த வருத்த உணர்ச்சியோடு தன் அறைக்குத் திரும்பினார்.

போலஸவ் இன்னும் தூங்காமலிருந்தார். அவர் கோமகனைப் பார்ப்பதற்காக உடனே படுக்கையில் புரண்டு திரும்பினார்.

''நீ தூங்கவில்லையா?'' என்று கோமகன் கேட்டார்.

''இல்லை.''

''என்ன செய்தேன் என்று சொல்லட்டுமா?''

''சொல்.''

''ஒருவேளை நான் சொல்லக் கூடாது—ஆனால் சொல்கிறேன். தள்ளிக்கொள்.''

கெட்டுப் போன சந்தர்ப்பத்தைப் பற்றிய எண்ணங்களை உதறித்தள்ளிவிட்டு முகத்தில் உற்சாகமான சிரிப்போடு அவர் நண்பருடைய படுக்கையின் மேல் உட்கார்ந்தார்.

''நீ நம்புகிறாயோ என்னவோ, அந்த இளம் பெண் என்னை ஒரு இடத்துக்கு வரச் சொல்லி யிருந்தாள்.''

''என்ன சொல்கிறாய்?'' என்று போலஸவ் துள்ளிக் குதித்துக் கொண்டு கேட்டார்.

''சொல்கிறேன், கேள்.''

''எப்படி? எப்பொழுது? நான் நம்ப முடி யாது!''

''சீட்டாட்டத்தில் வெற்றியடைந்த தொ கையை நீ கணக்கிட்டுக் கொண்டிருந்தாய்.

அப்பொழுது சன்னலுக்குப் பக்கத்தில் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பேன், நான் அந்தச் சன்னல் வழியாக அறைக்குள் வரலாம் என்று அவள் சொன்னாள். காரியவாதியாக இருப்பதால் கிடைக்கும் பலன் இது! நீ அந்தக் கிழவியோடு உட்கார்ந்து கணக்குப் போட்டுக் கொண்டிருந்த நேரத்தில் நான் இந்த விவகாரத்தை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தேன். இரவில் சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து குளத்தைப் பார்த்துக் கொண்டிருப்பேன் என்று அவள் சொன்னதை நீயும் தானே கேட்டாய்.''

''அவள் பொதுவாகச் சொன்னாள். அதற்கு வேறு அர்த்தம் கிடையாது.''

''அதுதானே விவகாரம். அவள் தற்செயலாகச் சொன்னாளா இல்லையா என்பதை என்னால் முடிவு செய்ய முடியவில்லை. ஒருவேளை உண்மையிலேயே அவளிடம் அந்த எண்ணம் இல்லாமலிருந்திருக்கலாம். ஆனால் வெளித் தோற்றங்கள்] அவளுக்கு விரோதமாகவே இருக்கின்றன. கடைசியில் எல்லாம் விசித்திரமாக முடிந்தன. நான் சரியான முட்டாளைப் போல நடந்து கொண்டேன்!'' என்று அவர் இகழ்ச்சியாகச் சிரித்துக் கொண்டே கூறினார்.

''எப்படி? நீ எங்கே போயிருந்தாய்?''

கோமகன் நடந்த எல்லாவற்றையும் விவரித்தார். சன்னலை நெருங்குவதற்கு முன்பு அவருக்கு ஏற்பட்ட தயக்கங்களைத் தவிர வேறு எதையுமே அவர் மறைக்கவில்லை,

''நானே எல்லாவற்றையும் கெடுத்து விட்டேன். நான் இன்னும் துணிச்சலாக நடந்து கொண்டிருக்க வேண்டும். அவள் அலறிக் கொண்டு ஓடிவிட்டாள்.''

''அவள் அலறிக் கொண்டு ஓடிவிட்டாள்'' என்று போலஸவ் திருப்பிச் சொன்னுர். கோமகன் சிரித்த பொழுது அவரும் சங்கடத்தோடு சிரித்தார். கோமகன் அவரிடம் மிகவும் வன்மையான செல்வாக்கை மிக நெடுங்காலமாகக் கொண்டிருக்கிருரே.

''ஆம். தூங்குவதற்கு நேரமாகிவிட்டது.''

போலஸவ் மறுபடியும் கதவை நோக்கி முதுகைத்திருப்பிக் கொண்டு படுத்தார். சுமார் பத்து நிமிடங்கள் அமைதியாகப் படுத்திருப்பார். அந்த நேரத்தில் அவருடைய ஆன்மாவின் ஆழத்தில் என்ன நடந்தது என்று சொல்வது கடினம். ஆனுல் அவர் புரண்டு திரும்பிய பொழுது அவருடைய முகத்தில் வேதனையும் உறுதியும் தோன்றின.

''துர்பீன் கோமகனே!'' என்று அவர் பலமாகக் கூப்பிட்டார்.

''உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?'' என்று கோமகன் அமைதியாகக் கேட்டார். போலஸவ்! என்ன விஷயம், சொல்!''

''துர்பீன் கோமகனே! நீ ஒரு கழிசடை!'' என்று போலஸவ் படுக்கையிலிருந்து குதித்துக் கொண்டு கத்தினுர்.

# 16

மறுநாள் அந்த படைப் பிரிவு அந்த ஊரிலிருந்து புறப்பட்டது. புறப்படும் பொழுது அதிகாரிகள் தமக்கு விருந்து கொடுத்தவர்களைப் பார்க்கவில்லை. அவர்களிடம் விடைபெற்றுக் கொள்வதற்காக அவர்களைத் தேடவுமில்லை. அவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளவும் இல்லை. போகும் வழியில் முதல் தங்குமிடத்தில் வாட்சண்டை போடுவதென்று அவர்கள் முடிவு செய்திருந்தார்கள். ஆனால் கோமகன் தன்னுடைய துணைவராகத் தேர்ந்தெடுத்திருந்த காப்டன் ஷுல்த்ஸ் நல்ல தோழர், சிறந்த குதிரைச் சவாரி வீரர். எல்லா ஹுஸ்ஸார்களும் விரும்பக் கூடியவர். அவர் அந்த வாட்சண்டையைத் தவிர்த்ததோடு அந்தப் பட்டாளத்தில் ஒருவருக்குக் கூட அதைப் பற்றி செய்தி எட்டிவிடாமலும் பார்த்துக் கொண்டார். துர்பீனும் போலஸவும் முன்னர் தங்களுக்கிடையே இருந்த நெருக்கமான நட்பை ஒரு போதும் தொடராவிட்டாலும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளும் பொழுது நெருங்கிய நண்பர்களுடைய பாணியில் தொடர்ந்து பேசிக்கொண்டார்கள். சில சமயங்களில் விருந்துகளிலும் கேளிக்கை நிகழ்ச்சிகளிலும் சந்தித்துக் கொண்டார்கள்.

*1856*

# குடும்ப மகிழ்ச்சி

## முதல் பகுதி

### I

காதியாவும் ஸோனியாவும் நானும் குளிர் காலம் முழுவதும் எங்களுடைய கிராமத்தில் தனியாக வசித்துக் கொண்டிருந்தோம். இலையுதிர் காலத்தில் மரணமடைந்து விட்ட எங்கள் தாயாருக்காகத் துக்கத்தில் இருந்தோம்.

காதியா நெடுங்காலமாக எங்கள் குடும்பத்தின் நண்பர், எங்கள் எல்லோரையும் வளர்த்த ஆசிரியை. எனக்கு நினைவு தெரிந்த காலத்திலிருந்து நான் அவளை மிகவும் நேசித்தேன். ஸோனியா என்னுடைய தங்கை. அந்தக் குளிர் காலம் வருத்தமளிப்பதாகவும் இருளடர்ந்ததாகவும் இருந்தது. அதைப் பக்ரோவ்ஸ்கயேயில் எங்களுடைய பழைய வீட்டில் கழித்தோம். பருவநிலை குளிர்ச்சியாகவும் ஒரே காற்று வீச்சாகவும் இருந்தது. காற்று பனியை சன்னல்களுக்கும் உயரமாகக் கூட விசிறியடித்தது. சன்னல்கள் அநேகமாக எப்பொழுதும் பனி உறைந்தே காணப்பட்டன,

குளிர்காலம் முழுவதும் நாங்கள் அநேகமாக வெளியில் போகவில்லை, யாரையும் பார்க்க வில்லை. எங்களைப் பார்க்க அபூர்வமாகத்தான் யாராவது வந்தார்கள்; அப்படி வந்த ஒரு சிலரும் எங்களுக்கு மகிழ்ச்சியான செய்தியைக் கொண்டுவரவில்லை. அவர்கள் அனைவரும் வருத்தமான முகங்களோடு வந்தார்கள். யாரையாவது எழுப்பிவிடக் கூடாது என்று பயப்படுவதைப் போலத் தணிந்த குரலில் பேசினார்கள். அவர்கள் ஒருபோதும் சிரிக்க வில்லை, பெருமூச்செறிந்தார்கள். என்னைப் பார்க்கும் பொழுது அவர்கள் அடிக்கடி கண்ணீர் விட்டார்கள். கறுப்பு நிறத்தில் கவுன் அணிந்திருந்த ஸோனியாவைப் பார்க்கும் பொழுது இன்னும் அதிகமாகவே கண்ணீர் விட்டார்கள். அந்த வீட்டில் மரணம் தயங்கி நின்றுகொண்டிருப்பது போலத் தோன்றியது. அந்தக் காற்றில் துயரமும் மரணத்தின் ஆவியும் கலந்திருந்தன. அம்மாவின் அறை பாசமின்றிக் காலியாக இருந்தது. என் படுக்கை அறைக்குப் போகும் வழியில் அதைக் கடந்து செல்லும் பொழுது அதன் பூட்டப்பட்டிருக்கும் கதவு எனக்குப் பயங்கரமான கவர்ச்சியைக் கொண்டிருந்தது.

அப்பொழுது எனக்குப் பதினேழு வயதாகியிருந்தது. என்னை நகரத்துக்குக் கொண்டு போய் வெளியுலகத்தில் பழக விட வேண்டும் என்று அம்மா மரணமடைந்த அந்த வருடத்தில்தான் உத்தேசித்திருந்தாள். அவளுடைய மரணம் எனக்கு அதிகமான துயரத்தைக்

கொடுத்தது. ஆனால் அந்தத் துயரத்தின் அடியில், நான் இளம் பெண், எல்லோரும் சொல்வதைப் போல அழகானவள், இந்த நாட்டுப் புறத்தில், தனிமையில் இரண்டாவது குளிர் காலத்தை வீணே போக்கிக் கொண்டிருக்கிறேன் என்றும் நினைத்தேன். குளிர்காலத்தின் கடைசியில் தனிமையிலும் சொல்ல முடியாத அலுப்பிலும் பிறந்த இந்தக் கவலை மிகவும் அதிகரித்த படியால் நான் அறையை விட்டே வெளியில் வரவில்லை. நான் ஒருபோதும் பியானோ வாத்தியத்தைத் திறக்கவில்லை. ஒரு புத்தகத்தைக் கூடத் தொடவில்லை. என்னை ஏதாவதொரு வேலையில் ஈடுபடும் படி செய்வதற்குக் காதியா முயற்சி செய்த பொழுது நான் அதை விரும்பவில்லை அல்லது என்னால் முடியாது என்று பதிலளித்தேன். ஏன் செய்ய வேண்டும்? என் வாழ்க்கையின் மிகச் சிறந்த பகுதி வீணாகிக் கொண்டிருக்கும் பொழுது நான் மற்ற காரியங்களை ஏன் செய்ய வேண்டும்? ஏன்? என்று என் மனதிற்குள் என்னைக் கேட்டுக் கொண்டேன். ''**ஏன்?**'' என்ற கேள்விக்கு பதில் கிடைக்கவில்லை. இதற்கு என் பதில் கண்ணீரே.

நான் மெலிந்து, சாதாரணமாகிவிட்டேன் என்று எல்லோரும் கூறினார்கள். ஆனால் அதைப் பற்றியும் கூட எனக்கு அக்கறை ஏற்படவில்லை. ஏன்? யாருக்காக வாழ வேண்டும்? என் வாழ்க்கை முழுவதுமே தொலை தூரத்திலுள்ள இந்த கிராமத்தில், நம்பிக்கையே சிறிதுமில்லாத அலுப்பில்—அதைத் தூக்கியெறிய

எனக்கு பலமும் இல்லை, விருப்பமும் இல்லை —கழியும் என்று எனக்குத் தோன்றியது. குளிர்காலம் முடிவடைகின்ற சமயத்தில் காதியா என் உடல் நலத்தைப் பற்றிக் கவலைப்படத் தொடங்கினுள், எப்படியாவது என்னை வெளி நாட்டுக்குக் கூட்டிக் கொண்டு போவதென்று முடிவு செய்தாள். ஆனுல் அதற்குப் பணம் அவசியம். அம்மாவின் மரணத்துக்குப் பிறகு எங்களுக்கு என்ன மிஞ்சியிருக்கிறது என்பது எங்களுக்குத் தெரியாது. எங்களுடைய பாதுகாவலர் வந்துதான் எங்கள் விவகாரங்களை முடிவு செய்ய வேண்டும். அவர் வருகையை நாங்கள் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்தோம்.

அவர் மார்ச் மாதத்தில் வந்தார்.

நான் ஒன்றும் செய்யாமல், எதிலும் சிந்தனையோ அல்லது விருப்பமோ இல்லாமல் நிழலைப் போல வீட்டைச் சுற்றி வந்துகொண்டிருந்த பொழுது ''நல்ல வேளை!'' என்று காதியா ஒரு நாள் கூறினுள். ''ஸெர்கேய் மிஹாய்லவிச் திரும்பிவிட்டார். அவர் நம்மைப் பற்றி விசாரித்து ஆளனுப்பியிருந்தார். மதிய உணவு சாப்பிடுவதற்கு வர விரும்புகிறுர். மாஷா! நீ இந்த மனேபாவத்தைத் தூக்கியெறிய வேண்டும். அவர் உன்னைப் பற்றி என்ன நினைப்பார்? அவருக்கு எப்பொழுதுமே உங்கள் அனைவரிடமும் அதிகமான பிரியம்.''

ஸெர்கேய் மிஹாய்லவிச் எங்கள் பக்கத்து வீட்டுக்காரர். மிகவும் குறைந்த வயது என்றுலும் காலஞ்சென்ற என் தகப்பனுருக்கு நண்

பராக இருந்தார். அவர் வருகை எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஏனென்றால் அது எங்கள் திட்டங்களில் மாற்றங்களைக் குறித்தது, நாங்கள் அந்த கிராமத்தை விட்டுப் போவதற்கு உதவியாக இருக்கும். ஆனால் இதைத் தவிர, என்னுடைய குழந்தைப் பருவத்திலிருந்து நான் அவரிடம் அன்பும் மரியாதையும் கொண்டிருந்தேன். என் கவலையைக் கைவிடுமாறு காதியா கூறிய பொழுது என்னுடைய நண்பர்கள் எல்லோருடனும் ஒப்பிடும் பொழுது ஸெர்கேய் மிஹாய்லவிச்சுக்கு முன்னால் உற்சாகமில்லாதவளாகத் தோன்றுவதை நான் நிச்சயமாக விரும்ப மாட்டேன் என்பதை அவள் சரியாக ஊகித்தாள். காதியா மற்றும் ஸோனியா (அவள் அவருடைய வளர்ப்பு மகள்) முதல் கடைசி வண்டிக்காரன் வரை வீட்டில் எல்லோரும் அவரை நேசித்ததைப் போல நானும் அவரை நேசித்து வந்தேன். ஆனால் அதைத் தவிர, ஒரு சமயத்தில் நான் பக்கத்திலிருக்கும் பொழுது என் தாயார் சொன்ன ஒரு வார்த்தையின் காரணமாக அவர் என்னுடைய இதயத்தில் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தார். என் கணவர் அவரைப் போல இருக்க வேண்டும் என்று தான் விரும்புவதாக அவள் கூறினாள். அந்த சமயத்தில் இது எனக்கு ஆச்சரியமாக —அதிருப்தியளிப்பதாகக் கூட — இருந்தது. நான் வரித்திருந்த கதாநாயகர் முற்றிலும் வேறு விதமான மனிதர். ஒல்லியாகவும் மெலிவாகவும், வெளுத்து, வருத்தமான முகத்தை

உடைய ஒரு மனிதரைப் பற்றி நான் கனவு கண்டுவந்தேன். அதற்கு மாருக ஸெர்கேய் மிஹாய்லவிச் இளைஞர் அல்ல. அவர் உயர மானவர், கட்டுமஸ்தான உடல்; அதோடு எப் பொழுதுமே கலகலப்பாக இருப்பவராகவும் எனக்குத் தோன்றியது. ஆனால் அது எப்படி யும் போகட்டும். என் தாயார் சொன்னது என் கற்பனையைத் தூண்டிவிட்டது. ஆறு வரு டங்களுக்கு முன்பு—எனக்குப் பதினொரு வயது மட்டுமே ஆகியிருந்த பொழுது—அவர் என் னோடு விளையாடுவார், என்னை மொட்டு என்று அன்போடு அழைப்பார். அப்பொழுது அவர் என்னைத் திருமணம் செய்துகொள்ள விரும் பினால் என்ன செய்வதென்று நான் சில சம யங்களில்—அநேகமாக பீதியோடு—என்னைக் கேட்டுக் கொள்வேன்.

ஸெர்கேய் மிஹாய்லவிச் மதிய உணவுக்கு முன்னதாகவே வந்துவிட்டார். காதியா கொத்த மல்லிப் பச்சடியையும் சர்க்கரை தூவிய கேக் கையும் மதிய உணவுடன் வைத்திருந்தாள். அவர் ஒரு சிறு சறுக்கு வண்டியில் வருவதை நான் சன்னல் வழியாகப் பார்த்தேன். ஆனால் அவர் வீட்டுத் திருப்பத்தைக் கடந்ததும் நான் உள்பகுதிக்கு ஓடிவிட்டேன். அவரை நான் எதிர்பார்க்காததைப் போல நடிக்க வேண் டும் என்று நினைத்தேன். ஆனால் முன் கூடத் தில் அவர் நடக்கின்ற பலமான காலடிச் சத் தத்தையும் அவருடைய உற்சாகமான குரலை யும், காதியா அவரை வரவேற்க ஓடிப்போ வதையும் கேட்ட பிறகு எனக்கு இருப்புக்

கொள்ளவில்லை. நானும் கூடத்துக்குள் ஓடி னேன். அவர் காதியாவின் கையைப் பிடித்துக் கொண்டு தன்னுடைய பலமான, அன்பு நிறைந்த குரலில் பேசிச் சிரித்துக் கொண்டிருந் தார். என்னைப் பார்த்ததும் அவர் சிரிப்பை நிறுத்தினர். சில விஞடிகள் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். எனக்கு அது சங்கடமாக இருந்தது. வெட்கம் ஏற்படுவதை உணர்ந்தேன், என் முகம் சிவந்தது.

''ஆ! இது நீயா?'' என்று துணிச்சலான, நேரடியான முறையில் கூறிவிட்டுத் தன்னு டைய கரங்களை அகலமாக விரித்துக் கொண்டு என்னிடம் வந்தார். ''நீ எவ்வளவு மாறிவிட் டாய்! எவ்வளவு வளர்ந்துவிட்டாய்! என் னுடைய மொட்டு ரோஜாவாக மலர்ந்துவிட் டது'' என்ருர்.

அவர் என்னுடைய சிறு கையைத் தன் னுடைய பெரிய கையினுல் பற்றி அதைப் பாச மாகவும் உறுதியாகவும் இறுக்கிய பொழுது எனக்கு வலிக்காவிட்டாலும் கஷ்டமாக இருந் தது. அவர் என் கையை முத்தமிடப் போ கிருர் என்று எண்ணி அவரை நோக்கிச் சாய் வதற்குப் போன பொழுது அவர் மறுபடியும் என் கையை அழுத்த மட்டுமே செய்தார். அவருடைய கூர்மையான சிரிக்கும் விழிகள் என் கண்களை நேருக்கு நேராகச் சந்தித்தன.

நான் அவரை ஆறு வருடங்களாகப் பார்க்க வில்லை. அவர் மிகவும் மாறிப் போய்விட்டார். அவர் அதிக வயதானவராகவும் நிறம் மங்க லாகவும் இருந்தார். அவர் கன்னத்தில் வளர்த்

திருந்த மீசை அவருக்கு அழகாகவே இல்லை. ஆனால் அவருடைய எளிமையான பழக்கங்கள், பெரிய அங்கங்கள், அறிவுமிக்க, பளபளப்பான விழிகள், அன்புமிக்க—அநேகமாகக் குழந்தைத் தனமான சிரிப்புத் தவழ்கின்ற திறந்த, நேர்மையான முகம் இன்னும் அப்படியே இருந்தன.

ஐந்து நிமிடங்களில் அவர் விருந்தினர் என்ற நிலை மறைந்துவிட்டது. அவர் எங்கள் எல்லோரிடமும்—வேலைக்காரர்களிடமும் கூட—நன்கு பழகினார். அவருக்குத் திருப்தியளிக்க வேலைக்காரர்கள் செய்த முயற்சிகளிலிருந்து அவரைப் பார்க்க அவர்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள் என்பது விளங்கியது.

அம்மா இறந்த பிறகு எங்களைப் பார்க்க வந்த பக்கத்து வீட்டுக்காரர்கள் மௌனமாக இருப்பதும் கண்ணீர் விடுவதும் அவசியம் என்று கருதினார்கள். அவர்களைப் போல அவர் நடந்து கொள்ளவில்லை. அதற்கு மாறாக அவர் அதிகமாகப் பேசினார், குதூகலமாக இருந்தார். எங்களுக்கு நேர்ந்த இழப்பைப் பற்றி ஒரு வார்த்தை கூட ஒரு சமயத்திலும் பேசவில்லை. அவருடைய அலட்சியம் முதலில் எனக்கு விசித்திரமாக—நயமில்லாததாகக் கூடத் தோன்றியது. ஏனென்றால் அவர் எங்களுக்கு மிகவும் நெருங்கிய நண்பர். ஆனால் அது அலட்சியபாவமல்ல, கபடின்மையே என்பதை நான் பிறகு உணர்ந்தபடியால் அவரிடம் நன்றி கொண்டேன்.

அன்று மாலையில் நாங்கள் வரவேற்பு அறை

யில் உட்கார்ந்து தேநீர் அருந்தினோம். அம்மா உயிரோடிருந்த பொழுது செய்வதைப் போல காதியா தேநீரைக் கோப்பைகளில் ஊற்றினாள். ஸோனியாவும் நானும் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தோம். வயோதிகரான கிரிகோரி அப்பாவின் புகைக்குழாயைத் தேடியெடுத்துக் கொண்டு வந்து ஸெர்கேய் மிஹாய்லவிச்சிடம் கொடுத்தார். அவர் பழைய காலத்தைப் போல அதில் புகை பிடித்துக் கொண்டு முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார்.

''எத்தனை துயரமான மாற்றங்கள் இந்த வீட்டில் ஏற்பட்டு விட்டன!'' என்று சிறிது தயங்கிக் கொண்டே அவர் கூறினார்.

''ஆமாம்'' என்று காதியா பெருமூச்சோடு பதிலளித்தாள். அவள் தேநீர்ச் சட்டியின் மேல் மூடியை வைத்துவிட்டு அவரைப் பார்த்தாள். அவள் கண்களில் நீர்த்துளிகள் திரண்டன.

''உன் தகப்பனாரை உனக்கு நினைவிருக்கிறதல்லவா?'' என்று என்னிடம் கேட்டார்.

''மிகக் குறைவாகவே'' என்று நான் ஒத்துக் கொண்டேன்.

''அவர் இப்பொழுது உங்களோடிருந்தால் அது எவ்வளவு நன்மையாக இருக்கும்!'' என்று அவர் சிந்தனையோடு என் தலைக்கு மேலே பார்த்துக் கொண்டே மெதுவாகக் கூறினார். ''உன் தகப்பனாரை நான் மிக அதிகமாக நேசித்தேன்'' என்று அவர் இன்னும் அதிகமான மென்மையோடு பேசினார். அவருடைய கண்

கள் என்றுமில்லாதபடி அதிகமாகப் பிரகாசிப் பதைப் போல எனக்குத் தோன்றியது.

''இப்பொழுது கடவுள் அவளையும்அழைத்துக் கொண்டார்!'' என்று காதியா முணுமுணுத் தாள். அவள் அவசரமாகத் துணியை எடுத்து தேநீர்க் கெட்டிலின் மீது வைத்து விட்டு அழத் தொடங்கினாள். தன்னுடைய கண்ணீ ரைத் துடைப்பதற்காகக் கைக் குட்டையை எடுத்தாள்.

''ஆம். இந்த வீட்டில் பல துயரமான மாற் றங்கள் ஏற்பட்டுவிட்டன'' என்று அவர் மறு படியும் சொல்லிவிட்டுத் தலையைத் திருப்பிக் கொண்டார். ''ஸோனியா! உன்னுடைய பொம்மைகளைக் காட்டு'' என்று சில வினாடி களுக்குப் பிறகு கூறிக் கொண்டு வரவேற்பு அறைக்குள் சென்றார். அவர் போன பிறகு நான் காதியாவைப் பார்த்தேன். என்னுடைய கண்களில் கண்ணீர் மல்கியிருந்தது.

''எவ்வளவு உயர்ந்த நண்பர்!'' என்று அவள் கூறினாள்.

இந்த நல்ல மனிதர் எங்களுடைய உற வினர் அல்ல. ஆனால் அவருடைய அனுதாபம் உண்மையாகவே எங்களுக்கு இரக்கத்தையும் பாதுகாப்பையும் கொடுத்தது.

வரவேற்பு அறையில் ஸெர்கேய் மிஹாய் லவிச் ஸோனியாவுடன் விளையாடுவதையும் அவளை 'ஓ' வென்று சிரிக்கவைப்பதையும் நாங்கள் கேட்க முடிந்தது. நான் அவருக்குச் சிறிது தேநீர் அனுப்பிவைத்தேன். பிறகு அவர் பியானோவுக்கு முன்னால் உட்கார்ந்து

ஸோனியாவின் பிஞ்சு விரல்களை எடுத்து பியா னேக் கட்டைகளை அழுத்தத் தொடங்குகின்ற ஒலி எனக்குக் கேட்டது.

''மரீயா அலெக்ஸாந்திரவ்னு!'' என்று அவர் கூப்பிட்டார். ''இங்கே வந்து ஏதாவதொரு பாட்டை வாசித்துக் காட்டு'' என்ருர்.

அவர் எனக்கு உத்தரவிட்ட குடும்பப் பாங் கான, தோழமை கலந்த முறை இனிமையாக இருந்தது. நான் அவரை நோக்கி உள்ளே சென் றேன்.

''இந்தா! இதை வாசி'' என்று என்னுடைய பீத்தோவன் புத்தகத்தில் Adagioவைத் திறத்து quasi una fantasia* என்ற சொனுட் டாவைக் காட்டினுர். ''நீ எப்படி வாசிக்கிருய் என்று பார்ப்போம்'' என்ருர். அவர் தேநீர்க் கோப்பையை எடுத்துக் கொண்டு பியானே விலிருந்து தள்ளி ஒரு மூலைக்குப் போனுர்.

எனக்கு நன்ருக வாசிக்கத் தெரியாது என்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வாசிக்கத் தொடங்குவதோ அல்லது மறுப்பதோ சரி யல்ல என்று எனக்கு ஏனே தோன்றியது. எனவே ஒரு வார்த்தை கூடப் பேசாமல் நான் கீழ்ப்படிந்தேன். அவருக்கு இசையார்வமுண்டு, அதை நன்ருக ரசிக்கத் தெரிந்தவர் என்பது எனக்குத் தெரியும். எனவே அவருடைய விமர் சனம் எனக்கு அச்சமூட்டிய போதிலும் என் னுலியன்ற வரை சிறப்பாக அந்தப் பாடலை வாசித்தேன். தேநீர் அருந்திய பொழுது எங்

---

* கற்பனை முறையில். (மொ-ர்.)

களிடம் ஏற்பட்ட நினைவு அலைகளின் பாவம் adagioவில் இருந்தது. நான் நன்ருகவே வாசித்ததாக எனக்குத் தோன்றியது. ஆனுல் நான் scertzoவை முடிக்க அவர் விடவில்லை. ''உன்னுல் அதை சரியாக வாசிக்க முடியாது'' என்று என் பக்கத்தில் வந்து கூறினுர். ''அது வேண்டாம். ஆனுல் அந்த முதல் பாட்டு மோசமல்ல. உன்னுல் இசையைப் புரிந்து கொள்ள முடியும் என்று தோன்றுகிறது.'' இது அளவோடு சொல்லப்பட்ட பாராட்டு என்ருலும் நான் மகிழ்ச்சியினுல் நாணமடைந் தேன். அவர் என் தகப்பனுருடைய நண்பர், அவருக்குச் சமமானவர்; அப்படிப்பட்டவர் குழந்தையிடம் பேசுவதைப் போலன்றி பெரிய வர்களிடம் பேசுவதைப் போல என்னிடம் பேசியது எனக்கு மிகப் புதுமையாக, மிக இனிமையாக இருந்தது. காதியா ஸோணியா வைத் தூங்கவைப்பதற்காக மாடிக்குச் சென் ருள். நாங்கள் இருவரும் வரவேற்பு அறை யில் தனியாக இருந்தோம்.

அவர் என் தகப்பனுரைப் பற்றி என்னிடம் பேசத் தொடங்கினுர். அவருடைய அறிமுகம் எப்படி ஏற்பட்டது, நான் படப்புத்தகங்களி லும் பொம்மைகளிலும் மட்டுமே இன்னும் ஆர்வங்கொண்டிருந்த அந்தப் பழைய நாட் களில் அவர்கள் இருவரும் எவ்வளவு இனி மையாகப் பொழுது போக்கினுர்கள் என் பதைக் கூறினுர். என் தகப்பனுரைப் பற்றி நான் கற்பனை செய்ததற்கு மாருக, அவரை ஒரு எளிமையான அன்புமிக்க மனிதராக அவ

ருடைய கதைகளிலிருந்துதான் நான் முதலில் தெளிவாகத் தெரிந்து கொண்டேன். பிறகு என் விருப்பத்தைப் பற்றி, நான் என்ன படித்தேன், என்ன செய்ய உத்தேசிக்கிறேன் என்று கேட்டார். அவற்றைப் பற்றி எனக்கு அறிவுரை கூறினர். என்னைக் கேலி செய்து, எனக்கு பொம்மைகள் செய்து கொடுத்த குதூகலமான விளையாட்டுத் தோழனுக அவர் இருக்கவில்லை. கருத்தாழ மிக்கவராக, அன்பும் நேரடிப் பண்பும் உடையவராக இருந்தார். எனக்கு அவர் மீது மரியாதையும் பற்றுதலும் என்னையறியாமலே ஏற்பட்டது. அவரோடு பேசுவது சுலபமாக இருந்தது. எனினும் இறுக்கமும் நடுக்க உணர்ச்சியும் எனக்கு ஏற்படுவதைத் தடுக்க முடியவில்லை. நான் ஒவ்வொரு வார்த்தையையும் கவனமாகப் பொறுக்கியெடுத்துப் பேசினேன். ஏனென்ருல் நான் அவருடைய நன்மதிப்பைப் பெற மிகவும் விரும்பினேன். இது வரை அவர் என்னிடம் பிரியமாக இருந்தது என் தகப்பனுருடைய மகள் என்ற முறையில்தான்.

ஸோனியாவைத் தூங்கவைத்த பிறகு காதியா எங்களிடம் திரும்பி வந்தாள். நான் மிகவும் சோர்வாக இருப்பதாக அவள் அவரிடம் புகார் செய்தாள். அதைப் பற்றி நான் அதுவரை அவரிடம் சொல்லவில்லை.

''மிக முக்கியமான இந்த விஷயத்தைப் பற்றி அவள் என்னிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லையே'' என்று ஸெர்கேய் மிஹாய்லவிச் புன்சிரிப்போடு, கண்டிக்கின்ற பாவனை

யில் தலையை அசைத்துக் கொண்டு கூறினார்.

''சொல்வதற்கு என்ன இருக்கிறது?'' என்று நான் பதிலளித்தேன். ''அது மிகவும் அலுப்பூட்டுகின்ற விஷயம். சீக்கிரத்தில் மறைந்து விடும்.'' (என்னுடைய வருத்தம் ஏற்கெனவே மறைந்துவிட்டது போல — உண்மையைச் சொல்வதென்றால் அப்படிப்பட்ட வருத்தமே எனக்கு ஏற்படாததைப் போல — அந்தக் கணத்தில் எனக்குத் தோன்றியது.)

''தனிமையைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை என்றால் அது மோசம்தான். நீ உண்மையாகவே அவ்வளவு சாதாரணமான இளம் பெண்தானா?'' என்று அவர் கேட்டார்.

''ஆமாம். நான் அப்படிப்பட்டவள்தான்'' என்று நான் சிரித்துக் கொண்டே கூறினேன்.

''இல்லை, சொகுசாக வளர்ந்த இளம்பெண் என்று கூடச் சொல்லலாம். யாராவது பாராட்டுகின்ற பொழுதுதான் உயிர்க்களை ஏற்படுகிறது, தனியாக விடப்பட்ட உடனே துவண்டு விடுகிறது, வாழ்க்கையில் இன்பத்தைப் பார்க்க முடியாது தத்தளிக்கிறது. எல்லாமே மற்றவர்கள் பார்த்துப் பாராட்டுவதற்குத்தான். தனக்கென்று எதுவுமில்லை.''

''என்னைப் பற்றி மிகவும் நல்ல அபிப்பிராயம் வைத்திருக்கிறீர்கள் போலிருக்கிறதே!'' என்று ஏதாவது பேச வேண்டுமென்பதற்காக நான் கூறினேன்.

''ஆமாம். நல்ல அபிப்பிராயம் தான்'' என்றார். சிறிது இடை வெளிக்குப் பிறகு மறுபடியும் பேசினார்: ''நீ அப்பாவின் மகள்தான்.

உன்னிடம் சிறப்பான அம்சங்கள் இருக்கின்றன.'' அவருடைய அன்பான, கருத்து நிறைந்த கவனிப்பு மறுபடியும் எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது; என்னிடம் இனிமையான குழப்பத்தை ஏற்படுத்தியது.

அவருடைய முகத்தில் தவழ்ந்த குதூகலத்துக்குக் கீழே அவருக்கே உரிய பிரத்யேகமான பார்வை இருப்பதை இப்பொழுது தான் நான் கவனித்தேன். முதலில் அது பிரகாசமானதாகவும் மனப் பூர்வமானதாகவும் தோன்றியது. ஆனல் படிப்படியாக அது அதிகக் கருத்தாழமுடையதாகவும் சிறிதளவு துயரமானதாகவும் மாறியது.

''நீ அலுப்படையக் கூடாது. அலுப்பு ஏற்பட நீ அனுமதிக்கக் கூடாது'' என்ருர். ''உனக்கு இசையில் ஆர்வமிருக்கிறது, புரிந்து கொள்கிருய். புத்தகங்கள், படிப்பு இருக்கின்றன. உனக்கு முன்ஞல் உன் வாழ்க்கை முழுவதுமே இருக்கிறது. அதற்கு உன்னைத் தயாரித்துக் கொள்ள இதுதான் சரியான நேரம். அப்பொழுதுதான் பிற்காலத்தில் நீ கவலைப்படாமல் இருக்கலாம். அடுத்த வருடம் பார்த்துக் கொள்ளலாம் என்ருல் கூட அது மிகவும் காலந் தாழ்த்திச் செய்வதாகும்.''

அவர் என்னிடம் ஒரு தகப்பஞரைப் போல அல்லது ஒரு மாமாவைப் போலப் பேசிஞர். என் தரத்துக்குப் பொருத்தமாகப் பேசுவதற்கு அவர் தொடர்ச்சியாக முயற்சி செய்ய வேண்டியிருந்தது என்பதை நான் உணர்ந்தேன். கீழே இறங்கிப் பேசிஞல் தான் நான்

புரிந்து கொள்ள முடியும் என்று அவர் கருதியது எனக்கு எரிச்சலூட்டியது. ஆனால் அவர் வேறுவிதமாக இருக்க முயற்சி செய்தது என் ஒருத்திக்காக மட்டுமே என்பதைத் தெரிந்து கொள்வது இனிமையாக இருந்தது.

அந்த மாலைப் பொழுதில் எஞ்சியிருந்த நேரத்தில் அவர் காதியாவுடன் பண்ணை விவகாரங்களைப் பற்றிப் பேசினார்.

''சரி, அன்புள்ள நண்பர்களே. போய்வருகிறேன்'' என்று கூறிக் கொண்டு அவர் எழுந்து என் அருகில் வந்து என் கையைப் பிடித்துக் கொண்டார்.

''உங்களை மறுபடியும் எப்பொழுது பார்க்கலாம்?'' என்று காதியா கேட்டாள்.

''வசந்த காலத்தில்'' என்று என் கையைப் பிடித்துக் கொண்டே அவர் பதிலளித்தார். ''நான் இப்பொழுது தனீலவ்காவுக்கு (எங்களுடைய இரண்டாவது கிராமம்) போகிறேன். அங்கே எல்லாம் எப்படி இருக்கின்றன என்று பார்க்க வேண்டும். என்னாலியன்ற அளவுக்கு ஒழுங்குபடுத்த வேண்டும். பிறகு என்னுடைய சொந்த அலுவலாக மாஸ்கோவுக்குப் போக வேண்டும். ஆனால் இந்தக் கோடை காலத்தில் நாம் அதிகம் பார்த்துக் கொள்ள முடியும்.''

''அவ்வளவு நீண்ட காலத்துக்குப் பிறகு தான் வர முடியுமா?'' என்று நான் மிகவும் வாட்டத்தோடு கேட்டேன். அவரை தினமும் சந்திக்க முடியும் என்று நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என்னுடைய கவலை திரும்பி விடும் என்று எனக்கு வருத்தமும் அச்சமும்

ஏற்பட்டது. அது என்னுடைய பார்வையிலும் குரலிலும் வெளிப்பட்டிருக்க வேண்டும்.

''ஆம். நீ சுறுசுறுப்பாக இருக்க வேண்டும். சோர்வுக்கு இடமளிக்காதே'' என்றார். அவர் குரல் மிகவும் பாசமின்றியும் ஏனோதானோ வென்றுமிருப்பதாக எனக்குத் தோன்றியது. ''வசந்தகாலத்தில் உனக்கு நான் ஒரு சோதனை வைப்பேன்'' என்று என் கையை விடுவித்து விட்டு என்னைப் பார்க்காமலேயே கூறினார்.

முன் கூடத்தில் நாங்கள் அவருக்கு விடை கொடுக்கும் பொழுது அவர் என்னை ஒரு தடவை கூட ஏறிட்டுப் பார்க்காமல் அவசர மாகக் கோட்டை மாட்டிக் கொண்டார். ''அவர் இவ்வளவு சிரமப்பட வேண்டியதில்லை'' என்று நான் நினைத்தேன். ''அவர் என்னைப் பார்ப்பது எனக்கு அதிகமான மகிழ்ச்சியைக் கொடுப்பதாக அவர் உண்மையிலேயே நினைக் கிறாரா? அவர் நல்லவர், மிகவும் நல்லவர்... அவ்வளவுதான்.''

எனினும் அன்றிரவில் காதியாவும் நானும் நெடு நேரம் வரை தூங்கவில்லை. நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம்—அவரைப் பற்றி யல்ல. கோடை காலத்தையும் அதனைத் தொடர்ந்து வரும் குளிர் காலத்தையும் எப் படிக் கழிப்பதென்று நாங்கள் பேசிக் கொண் டிருந்தோம். ''ஏன்?'' என்ற பயங்கரமான கேள்வி அதற்குப் பின்னர் ஒருபோதும் எனக்குத் துயரத்தைக் கொடுக்கவில்லை. ஒருவர் மகிழ்ச்சியோடு இருக்க வேண்டுமென்றால் அவர் உயிர்த் துடிப்புடனிருக்க வேண்டும் என்பது

தெளிவாகப் புரிந்தது. என்னுடைய எதிர் காலத்தில் அதிகமான மகிழ்ச்சியை நான் எதிர் பார்த்தேன். பக்ரோவ்ஸ்கயேயிலிருந்த எங்களுடைய இருளடர்ந்த பழைய வீட்டில் திடீரென்று வாழ்க்கையும் ஒளியும் நிறைந்துவிட்ட மாதிரி இருந்தது.

## 2

இதற்கிடையில் வசந்தகாலம் தொடங்கியது. எனக்கு முன்பு ஏற்பட்டிருந்த துயரத்துக்குப் பதிலாக வசந்த காலத்தில் எப்பொழுதுமே தோன்றுகின்ற குழப்பமான நம்பிக்கைகளும் விருப்பங்களும் என்ற தெளிவில்லாத துயரம் ஏற்பட்டது. குளிர்காலத்தின் தொடக்கத்தில் இருந்ததைப் போல அதற்குப் பிறகு நான் இருக்கவில்லை; ஸோனியாவோடு சுறுசுறுப்பாக ஏதாவது செய்வதிலும் இசைப் பயிற்சியிலும் படிப்பதிலும் ஈடுபட்டேன். அடிக்கடி தோட்டத்துக்குச் சென்றேன்; அந்தப் பாதைகளில் மணிக் கணக்காக நடந்து கொண்டிருப்பேன் அல்லது ஒரு பெஞ்சின் மேல் தனியாக உட்கார்ந்து சிந்தித்துக் கொண்டிருப்பேன். நான் எதை விரும்புகிறேன் அல்லது எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். சில சமயங்களில்—குறிப்பாக நிலா பிரகாசமாக இருக்கும் பொழுது—இரவு முழுவதும் சன்னலுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்திருப்

பேன். அபூர்வமாகச் சில சமயங்களில் காதியாவுக்குத் தெரியாமல் கோட்டை அணிந்து கொள்ளாமலேயே தோட்டத்துக்குள் செல்வேன், பனித்துளி படிந்திருக்கும் புல்வெளியின் வழியாகக் குளத்தை நோக்கி ஓடுவேன்; ஒரு சமயத்தில் வயல்களுக்குக் கூடச் சென்றேன். வேருெரு சமயத்தில் நள்ளிரவில் தோட்டத்தின் ஒரு கோடியிலிருந்து மற்ருெரு கோடிவரை நடந்து சென்றேன்.

அந்த நாட்களின் போது என் மனதில் நிறைந்திருந்த கனவுகளை இப்பொழுது நினைவு படுத்துவது அல்லது புரிந்து கொள்வது எனக்குக் கடினம். அப்படியே அவற்றை நினைவு படுத்திக் கொண்டால் கூட அவை உண்மையிலேயே என்னுடையவை என்று நான் நம்ப முடியவில்லை. அந்த அளவுக்கு அவை மிகவும் புதுமையாக, மிகவும் போலியாக இருந்தன.

ஸெர்கேய் மிஹாய்லவிச் தன்னுடைய வாக்குறுதிப்படி மே மாதக் கடைசியில் பிரயாணத்தை முடித்துக் கொண்டு திரும்பினுர்.

அவர் முதல் தடவை ஒரு மாலை நேரத்தில் எங்களைப் பார்க்க வந்தார். நாங்கள் அவர் வருகையைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. நாங்கள் வராந்தாவில் உட்கார்ந்து தேநீர் அருந்தத் தொடங்கும் சமயம். தோட்டத்தில் மரங்கள் முழுவதும் ஏற்கெனவே இலைகள் வளர்ந்துவிட்டன. வானம்பாடிகள் வெட்டி விடப்படாத செடிகளுக்குள் போய்விட்டன. அவை கோடை காலம் முழுவதிலும் செடிகளுக்குள்தான் இருக்கும். அங்குமிங்கும் புதர்ச்

செடிகளில் மொட்டுக்கள் மலர்ந்து இளநீல அல்லது வெள்ளை நிறத்தைக் காட்டின பாதை ஓரங்களிலிருந்த புர்ச் மரங்களின் இலை கள் மாலைக் கதிரவன் ஒளியைப் பிரதிபலித் தன. திரை போடப்பட்டிருந்த வராந்தாவில் புதிய குளிர்ச்சி இருந்தது; இனி பசும் புற்ற ரையில் அதிகமான பனித்துளி இருக்கும். தோட்டத்துக்கு அப்பாலிருந்த திறந்த வெளி யிலிருந்து அன்றைய வேலை முடிந்துவிட்டதை அறிவிக்கின்ற கடைசி ஓசைகளும் வீட்டை நோக்கிப் போகும் கால்நடையின் தாழ் குரலும் வந்து கொண்டிருந்தன. அரைக் கிறுக்கனை நீக்கன் வீட்டுக்கு முன்னாலிருந்த பாதையில் தண்ணீர் வண்டியை ஓட்டிக் கொண்டு வந்து கொண்டிருந்தான். அவன் பூச்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தான். பூவாளி யிலிருந்து வந்த குளிர்ந்த நீர் கொத்திப் போடப்பட்ட மண்ணில் செடிகளின் அடிப் பகுதிகளையும் அவற்றுக்கு ஆதரவாக ஊன்றப் பட்டிருக்கும் குச்சிகளையும் சுற்றி இருண்ட வளையங்களை ஏற்படுத்தியது. நாங்கள் உட் கார்ந்திருந்த வராந்தாவிலிருந்த மேசையின் மேல் வெண்மையான துணி விரிக்கப்பட்டிருந் தது. அதன் மேல் பளபளப்பாகத் தேய்க்கப் பட்ட சமோவார் பாத்திரம் வைக்கப்பட் டிருந்தது. அது பளபளப்பாக இருந்தது; நீராவிப் புகையை வெளிவிட்டுக் கொண்டிருந் தது. தட்டுகளில் பிஸ்கோத்துகளும் ரொட்டி களும் ஒரு கூஜாவில் பாலும் வைக்கப்பட் டிருந்தன. காதியா தன்னுடைய மொத்தை

யான விரல்களினுல் கோப்பைகளைச் சுத்த மாகத் தேய்த்துக் கழுவிக் கொண்டிருந்தாள். குளித்துவிட்டு வந்த படியால் எனக்குப் பசி யெடுத்தது. தேநீருக்காகக் காத்துக் கொண்டி ராமல் ரொட்டியைப் பாலில் முக்கியெடுத்துச் சாப்பிடத் தொடங்கினேன். நான் சலவை செய்யப்படாத லினன் துணியில் தைக்கப்பட்ட சட்டையை அணிந்திருந்தேன். கைகள் அகல மாகத் தொங்கின. ஈரமாக இருந்த தலைமுடி யை ஒரு கைக்குட்டையில் சுற்றிக் கட்டியிருந் தேன். காதியாதான் அவரை முதலில் பார்த் தாள்.

''ஸெர்கேய் மிஹாய்லவிச்! இப்பொழுது தான் உங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந் தோம்'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறிஞள்.

நான் உடையை மாற்றிக் கொள்வதற்காக உள்ளே போவதற்கு எழுந்தேன். ஆனுல் அவர் கதவுக்குப் பக்கத்தில் வந்து என்னைப் பிடித்துக் கொண்டார்.

''நாட்டுப் புறத்தில் இருக்கும் பொழுதும் இந்த சம்பிரதாயமெல்லாம் அவசியமா?'' என்று கைக்குட்டை சுற்றப்பட்டிருந்த என் தலைமுடியைப் பார்த்துக் கொண்டே கூறிஞர். ''கிழவன் கிரிகோரிக்கு முன்னுல் இப்படித் தோன்றுவதற்கு நீ வெட்கப்படுவதில்லையே? அவனைப் போன்றவன்தான் நானும்'' என்ருர். ஆனுல் அவர் கிரிகோரி என்னைப் பார்க்கின்ற முறையில் இல்லாமல் வேறு விதமாகப் பார்க் கிருர் என்று உடனே எனக்குத் தோன்றியது. நான் வெட்கமடைந்தேன்.

''ஒரு நிமிடத்தில் திரும்பிவிடுகிறேன்'' என்று அவரிடமிருந்து ஓடிக் கொண்டே கூறினேன்.

''அந்தச் சட்டைக்கென்ன? ஒரு இளம் விவசாயப் பெண்ணைப் போன்ற தோற்றத்தை அது ஏற்படுத்துகிறது'' என்று அவர் கூறினார்.

''எவ்வளவு புதுமையாக என்னைப் பார்த்தார்'' என்று மேல்மாடியில் உடையை மாற்றிக் கொண்டிருந்த பொழுது நான் நினைத்தேன். ''நல்ல வேளை! அவர் வந்துவிட்டார். இனிமேல் அவ்வளவு அலுப்பாக இருக்காது!'' கண்ணுடியில் என் தோற்றத்தை லேசாக ஒரு முறை பார்த்துவிட்டு நான் மகிழ்ச்சியோடு படிகளில் வேகமாக இறங்கி ஓடினேன். என்னுடைய அவசரத்தை மறைக்க முயற்சிக்காமல் மூச்சிரைத்துக் கொண்டு வராந்தாவுக்கு ஓடி வந்தேன். அவர் மேசைக்கு முன்னல் உட்கார்ந்து காதியாவிடம் எங்கள் விவகாரங்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் என்னைப் பார்த்தார், இளநகை புரிந்தார், பிறகு தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார். எங்கள் விவகாரங்கள் மிகவும் நல்ல நிலைமையில் இருப்பதாகக் கூறினர். அந்தக் கோடை காலத்தில் மட்டும் நாங்கள் கிராமத்திலிருந்தால் போதும். பிறகு ஸோனியாவின் கல்விக்காக பீட்டர்ஸ்பர்குக்குப் போகலாம் அல்லது வெளிநாட்டுக்குப் போகலாம்.

''எங்களோடு நீங்களும் வர வேண்டும். நீங்கள் வரவில்லையென்ருல் காட்டிலே தடுமாறி

நின்ற குழந்தைகளின் கதியே எங்களுக்கு ஏற்படும்'' என்ருள் காதியா.

''உங்களோடு நானும் உலகத்தைச் சுற்றினுல் எவ்வளவு நன்ருக இருக்கும்'' என்று அவர் பாதி மனப்பூர்வமாகவும் பாதி வேடிக்கையாகவும் கூறினுர்.

''ஆமாம். நாம் எல்லோரும் உலகத்தைச் சுற்றிப் பார்ப்போம்'' என்றேன் நான்.

அவர் புன்சிரிப்போடு தலையை அசைத்தார்.

''என் தாயாரையும் மற்ற வேலைகளையும் யார் கவனிப்பது?'' என்று அவர் கேட்டார். 'ஆனுல் அது கிடக்கட்டும். நீ எப்படிப் பொழுதைக் கழித்தாய் என்று சொல். நீ மறுபடியும் சோர்வடையவில்லையே?''

அவர் போனதிலிருந்து சுறுசுறுப்பாக இருந்தேன், சோர்வுக்கு இடம் கொடுக்கவில்லை என்று நான் கூறிய பொழுது, காதியா அது உண்மையென்று அங்கீகரித்த பொழுது அவர் என்னைப் பாராட்டினுர். அவருடைய பேச்சிலும் பார்வையிலும் அப்படி ஒரு உரிமை அவருக்கு இருப்பதைப் போல—ஒரு குழைவு இருந்தது. நான் அவரிடம் முற்றிலும் சிறந்த மனதுடையவளாக, பாசாங்கில்லாதவளாக இருக்க வேண்டும், நான் செய்த நற்காரியங்கள் ஒவ்வொன்றையும் அவரிடம் தெரிவிக்க வேண்டும், அவருக்கு அதிருப்தியளிக்கக் கூடிய ஒவ்வொன்றையும் ஒத்துக்கொள்ள வேண்டும். அவர் என்னுடைய பாவங்களுக்கு மன்னிப்பு அருளுகின்ற புனிதர். அந்த மாலை நேரம் இனிமையாக இருந்ததால் தேநீர்க்

கோப்பைகளை எடுத்துச் சென்ற பிறகும் நாங்கள் அந்த வராந்தாவிலேயே உட்கார்ந்திருந்தோம். உரையாடல் மிகவும் சுவாரசியமாக இருந்த படியால் வீட்டிலும் வெளியிலும் மனிதர்களுடைய ஓசை படிப்படியாகக் குறைந்து விட்டதை நான் கவனிக்கவில்லை. மலர்களின் நறுமணம் அதிகரித்தது. புல்தரை பனித்துளிகளால் ஈரமடைந்தது. பக்கத்திலிருந்த புதரிலிருந்து ஒரு வானம்பாடி பாடத் தொடங்கியது; ஆனால் எங்களுடைய குரல்களைக் கேட்டவுடன் நிறுத்திக் கொண்டது. நட்சத்திரங்கள் நிறைந்த வானம் கீழே இறங்கி எங்களை மூடிக் கொண்டிருப்பதைப் போலத் தோன்றியது.

ஒரு வண்டு சப்தமில்லாமல் உள்ளே நுழைந்து என் தலைமுடியைக் கட்டியிருந்த வெள்ளைக் கைக்குட்டையைச் சுற்றிச் சிறகடித்த பொழுது தான் சுற்றிலும் இருட்டிவிட்டதை நான் கவனித்தேன். நான் சுவரோரமாகச் சாய்ந்து அலறப் போன பொழுது அது எவ்வளவு வேகமாகவும் சப்தமில்லாமலும் வந்ததோ அதைப் போலவே பறந்து சென்று தோட்டத்தின் அந்திநேர இருளில் மறைந்துவிட்டது.

''உங்கள் பக்ரோவ்ஸ்கயே எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது'' என்று ஸெர்கேய் மிஹாய்லவிச் உரையாடலில் இடைவெளி ஏற்பட்ட பொழுது கூறினார். ''என் வாழ்க்கையின் எஞ்சிய காலம் முழுவதும் உங்கள் வராந்தாவிலேயே

உட்கார்ந்து கொண்டிருக்க நான் விரும்பு கிறேன்.''

''அப்படியே செய்யுங்களேன்'' என்ருள் காதியா.

''அது நல்லதுதான். ஆனுல் வாழ்க்கை நமக்காக உட்கார்ந்து காத்துக் கொண்டிருப்ப தில்லையே'' என்று அவர் முணுமுணுத்தார்.

''நீங்கள் ஏன் திருமணம் செய்து கொள்ளாமலிருக்கிறீர்கள்?'' என்று காதியா கேட்டாள். ''நீங்கள் மிகவும் சிறப்பான பண்புகளைக் கொண்ட கணவராக இருப்பீர்கள்.''

''நான் உட்கார்ந்து கொண்டிருக்க ஆசைப் படுவதால்தான்'' என்று அவர் சிரித்துக் கொண்டே கூறினுர். ''இல்லை கதெரீனு கார் லவ்னு! உங்களுக்கும் எனக்கும் திருமண வயது முடிந்து போய்விட்டது. என்னைத் திருமணத்துக்குரிய இளைஞுகப் பார்ப்பதை மக்கள் நெடுங்காலத்துக்கு முன்பே நிறுத்தி விட்டார்கள். நானும் அந்த எண்ணத்தை விட்டு விட்டேன். அதிலிருந்து உற்சாகமாக இருக்கிறேன். இது உண்மை.''

அவர் குரலில் வழக்கத்துக்கு மாருன குதூகலம் இருப்பதாக எனக்குத் தோன்றியது.

''நல்ல வேடிக்கை! அவருக்கு முப்பத்தாறு தான் இருக்கும். ஆனுல் வாழ்க்கை முடிந்து விட்டதாம்'' என்று காதியா ஆச்சரியத்தோடு கூறினுள்.

''என் வாழ்க்கை முடிந்துவிட்டது. சும்மா உட்கார்ந்திருப்பதைத்தான் நான் விரும்பு கிறேன். திருமணம் ஆக வேண்டுமென்ருல் உட்

கார்ந்திருந்தால் போதுமா? ஏதாவது முயற்சி செய்ய வேண்டுமே! நீங்கள் அவளிடம் இந்தக் கேள்வியைக் கேளுங்கள்'' என்று என்னை நோக்கித் தலையை அசைத்துக் கொண்டு கூறினார். ''அவளைப் போன்ற யுவதிகள் திருமணம் செய்து கொள்ள வேண்டும். அவர்களைப் பார்த்துக் கொண்டிருப்பதே உங்களுக்கும் எனக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்கும்.''

அவருடைய குரலில் வருத்தமும் இறுக்கமும் இருப்பதை நான் கவனித்தேன். அவர் ஒரு விநாடி மௌனமாக இருந்தார். காதியாவோ நானோ ஒன்றும் பேசவில்லை.

''இப்படிக் கற்பனை செய்யுங்கள்'' என்று நாற்காலியைத் திருப்பிக் கொண்டு பேசினார். ''ஒரு பதினேழு வயதுப் பெண்ணை—இந்த மாஷா... அதாவது மரீயா அலெக்ஸாந்திரவ்னா என்று வைத்துக் கொள்ளுங்கள்—நான் திருமணம் செய்து கொள்வதாக—இது நல்ல உதாரணம் தான். இப்படி வெளிவந்ததும் மகிழ்ச்சியே... இது மிகவும் சிறந்த உதாரணமே.''

நான் சிரிக்கத் தொடங்கினேன். அவர் ஏன் மகிழ்ச்சி அடைய வேண்டும் அல்லது எது ''இப்படி வெளிவந்தது'' என்று எனக்குப் புரியவில்லை...

''சரி. நீ சிலுவைக் குறிபோட்டுக் கொண்டு என்னிடம் உண்மையைச் சொல்'' என்று குதூகலம் நிறைந்த குரலில் என்னிடம் பேசினார். ''உன்னுடைய சின்னத்தலையில் பலவிதமான விஷயங்கள், பல வகையான விருப்பங்கள் மறைந்திருக்கும் பொழுது தன் காலம் முடிந்து

போன, சும்மா உட்கார்ந்திருக்க மட்டுமே விரும்புகின்ற ஒரு கிழவரோடு உன் வாழ்க்கையை முடிச்சுப் போட்டு கொள்வது உனக்குத் துர்ப்பாக்கியமானது தானே.''

எனக்குச் சங்கடமாக இருந்தது. என்ன பதில் சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை.

''என்னைத் திருமணம் செய்துகொள் என்று நான் சொல்லவில்லை'' என்று அவர் சிரித்துக் கொண்டே கூறினர். ''மாலை நேரத்தில் நீ தனியாகத் தோட்டத்தில் சுற்றும் பொழுது கனவு காண்கின்ற ரகத்தைச் சேர்ந்த கணவனல்ல நான். சரிதானே? அது துர்ப்பாக்கியம்தானே? அப்படித்தானே?''

''அது துர்ப்பாக்கியமல்ல...'' என்று நான் தொடங்கினேன்.

''ஆனல் நல்ல விஷயமும் அல்ல'' என்று அவர் முடித்தார்.

''இல்லை. ஆனல் நான் தவருன...''

ஆனல் அவர் மறுபடியும் குறுக்கிட்டார்.

''பார்த்தீர்களா—அவள் சொல்வது முற்றிலும் சரி. அவள் மனந்திறந்து பேசியதற்கும் நமக்கிடையே நடைபெற்ற இந்தப் பேச்சுக்கும் அவளுக்கு என் நன்றியைத் தெரிவிக்கிறேன். மேலும் எனக்கு அது பெரும் துரதிர்ஷ்டமாகத்தான் இருக்கும்'' என்ருர்.

''என்ன விேனுதமான மனிதர்—எப்பொழுதும் நீங்கள் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறீர்கள்'' என்ருள் காதியா. இரவு உணவை மேசைக்கு எடுத்துக் கொண்டு வருவதற்காக அவள் வீட்டிற்குள் சென்ருள்.

காதியா போன பிறகு நாங்கள் இருவரும் மௌனமாக இருந்தோம். எங்களைச் சுற்றி எங்கும் அமைதி நிலவியது. ஒரு வானம்பாடி மட்டும் பாடத் தொடங்கியது; உணர்ச்சியும் நடுக்கமும் இழைகின்ற மாலை நேரப் பாடல் அல்ல, அமைதியும் நிதானமும் நிறைந்த இரவு நேரப் பாடலைப் பாடியது. அந்த இசை தோட்டம் முழுவதிலும் நிறைந்திருந்தது. பிறகு மலையிடுக்கிலிருந்தும் தூரத்திலிருந்தும் இன்னொரு வானம்பாடி அதற்குப் பதிலளித்தது. அந்த மாலை நேரத்தில் அங்கே முதல் தடவையாகப் பாடியது. தோட்டத்துப் பறவை இசையைக் கேட்பதில் மூழ்கிவிட்டதைப் போல ஒரு கண நேரம் பாட்டை நிறுத்திக் கொண்டது. பிறகு அதன் பாட்டு இன்னும் பலமாகவும் கூர்மையாகவும் கேட்டது. நமக்கு ஒன்றுமே தெரியாத அந்தப் பறவைகளின் இரவு உலகத்தில் அந்தப் பாடல்கள் கம்பீரமான அமைதியோடு ஒலித்தன. உறங்குவதற்காகத் தோட்டக் குடிசைக்குப் போய்க் கொண்டிருந்த தோட்டக்காரன் எங்களைக் கடந்து சென்றான்; அவனுடைய கனமான காலணிகள் ஏற்படுத்திய சத்தம் அந்தப் பாதையில் படிப் படியாகக் குறைந்தது. மலையின் அடிவாரத்திலிருந்து 'கிறீச்' என்ற ஒலி இரண்டு தடவை கேட்டது. பிறகு மறுபடியும் எங்கும் அமைதி நிலவியது. நறுமணம் கலந்த காற்று குப்பென்று எங்கள் மீது அடித்த பொழுது இலைகள் லேசாக அசைந்தன; வராந்தாவின் மேலேயிருந்த பந்தல் சலசலத்தது. அந்த உரையாடலுக்குப்

பிறகு மௌனமாக இருப்பது எனக்குச் சங்கடமாக இருந்தது. ஆனால் உரையாடலை எப்படித் தொடங்குவதென்று எனக்குத் தெரியவில்லை. நான் அவரை ஏறிட்டுப் பார்த்தேன். அரை வெளிச்சத்தில் பிரகாசமாக இருந்த அவருடைய கண்கள் என் மேல் நிலைகுத்தி நின்றன.

''உயிர்க்களையோடிருப்பது நல்லது!'' என்று அவர் முணுமுணுத்தார்.

ஏதோ காரணத்துக்காக நானும் பெருமூச்சு விட்டேன்.

''என்ன?'' என்று அவர் கேட்டார்.

''உயிர்க்களையோடிருப்பது நல்லது!'' என்று நான் அதை மறுபடியும் சொன்னேன்.

மறுபடியும் நாங்கள் அமைதியாக உட்கார்ந்திருந்தோம். மறுபடியும் எனக்குச் சங்கடமாக இருந்தது. தனக்கு வயதாகிவிட்டது என்று அவர் கூறிய பொழுது அதை ஒத்துக் கொண்டதன் மூலம் அவர் மனதைப் புண்படுத்திவிட்டதாக நினைத்துக் கொண்டிருந்தேன். அவரிடம் ஆறுதலாகப் பேசுவதற்கு விரும்பினேன். ஆனால் என்ன சொல்ல வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை.

''சரி. போய் வருகிறேன்'' என்று கூறிக் கொண்டு அவர் எழுந்தார். ''என் தாயார் இரவு உணவுக்கு என்னை எதிர்பார்ப்பார்கள். இன்று முழுவதும் அம்மாவைப் பார்க்கவில்லை.''

''உங்களிடம் புதிய சொனட்டாவை வாசித்துக் காட்டலாம் என்று நினைத்தேன்'' என்றேன் நான்.

''இன்னொரு சமயம் பார்க்கலாம்.'' அவர் பதில் பாசமில்லாதிருப்பதாக எனக்குத் தோன்றியது.

''வணக்கம்.''

அவரைப் புண்படுத்திவிட்டேன் என்பது இப்பொழுது எனக்கு நிச்சயமாகத் தெரிந்தது. அதற்காக நான் வருத்தப்பட்டேன். காதியாவும் நானும் அவரோடு வீட்டைச் சுற்றி நடந்தோம். நடைபாதையில் அவர் குதிரைமேல் போய்க் கொண்டிருந்த பொழுது அவரைப் பார்த்துக் கொண்டு நின்றோம். குதிரையின் குளம்பொலி மறைந்த பிறகு நான் வராந்தாவுக்குத் திரும்பினேன். மறுபடியும் தோட்டத்துக்குள், இரவு ஒலிகளைச் சுமந்து கொண்டிருந்த ஈரம் நிறைந்த வெள்ளை மூடுபனிக்குள் நெடுநேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன். கனவு கண்டபடியே வெகுநேரம் வரை அங்கே தங்கியிருந்தேன். என்னுடைய கனவு நனவாகிவிட்டதைப் போலத் தோன்றியது.

அவர் இரண்டாவது, மூன்றாவது தடவை வந்தார். எங்களுடைய விசித்திரமான உரையாடலின் பலனாக ஏற்பட்டிருந்த சங்கடம் முற்றிலும் மறைந்துவிட்டது. அந்தச் சங்கடம் மறுபடியும் ஏற்படவில்லை. கோடை காலம் முழுவதிலும் அவர் வாரத்துக்கு இரண்டு, மூன்று தடவைகள் எங்களைப் பார்க்க வந்தார். அவருடைய வருகை மிகவும் வாடிக்கையாகிவிட்ட படியால் அவர் சில சமயங்களில் வராதிருந்த பொழுது அவரைப் பார்க்

காமல் எனக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. அவர் என்னைப் புறக்கணித்து மோசமாக நடந்து கொள்கிறார் என்று நினைப்பேன். அதற்காக அவரிடம் கோபமடைவேன். அவர் என்னைத் தன் அன்புக்குரிய இளைய தோழனைப் போல நடத்தினார். அவர் என்னிடம் கேள்விகள் கேட்டார், இரகசியங்களைச் சொல்லத் தூண்டினார், எனக்கு அறிவுரைகள் கூறினார், உற்சாகமூட்டினார்; சில சமயங்களில் என்னைக் கடிந்து கொண்டார். நான் தவறாக எதுவும் செய்யாமல் தடுத்தார். அவர் தனக்குச் சமமாக என்னை நடத்த எல்லா முயற்சிகளையும் செய்தபோதிலும், அவரைப் பற்றி எனக்குத் தெரிந்தவைகளுக்குப் பின்னால், எனக்குத் தெரியாத ஒரு உலகத்துக்குள் என்னை அனுமதிப்பது அவசியமென்று அவர் கருதவில்லை என்பதை நான் உணர்ந்தேன். அவரிடமிருந்த இந்த குணம் என்னை அதிகமாகக் கவர்ச்சித்தது, அவரை மதிக்குமாறு என்னைத் தூண்டியது. அவர் தன்னுடைய வயோதிகத் தாயாரோடு வசித்தார். தாயாரைக் கவனித்துக் கொள்வது, தன்னுடைய சொந்தப் பண்ணையை நிர்வகிப்பது, எங்களுக்குப் பாதுகாவலராக இருப்பது ஆகியவற்றைத் தவிர வேறு பொதுப் பொறுப்புகளும் அவருக்கு இருந்தன, அவை அவருக்கு அதிகமான தொல்லைகளைக் கொடுத்தன என்று காதியாவிடமிருந்தும் பக்கத்து வீட்டுக்காரர்களிடமிருந்தும் நான் அறிந்து கொண்டிருந்தேன். எனினும் இவற்றைப் பற்றி அவர் என்ன நினைக்கிறார்

அல்லது அவருடைய கருத்துக்கள், திட்டங்கள், நம்பிக்கைகள் என்ன என்பதைப் பற்றி அவரிடமிருந்து எதையாவது தெரிந்து கொள்வதற்கு என்னுல் சிறிதும் முடியவில்லை. அவருடைய விவகாரங்களைப் பற்றி பேச்சைத் திருப்பிஞல் ''இம்மாதிரியான விஷயங்களைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிருய்?'' என்று சொல்வதைப் போல அவருக்கே உரிய முறையில் முகத்தைச் சுளிப்பார்; உடனே பேச்சை மாற்றிவிடுவார். இது முதலில் என்னை அவமதிப்பதைப் போல இருந்தது. பிறகு என்னைப் பற்றிய விஷயங்களைப் பற்றி மட்டுமே நாங்கள் உரையாடுவது எனக்கு மிகவும் பழகிப் போய் விட்டபடியால் அதை இயற்கையானதாகவே பார்க்கத் தொடங்கினேன்.

முதலில் எனக்குப் பிடிக்காமலிருந்த, ஆனுல் பிறகு எனக்கு இனிமையாகத் தோன்றிய இன்னெரு விஷயமுமிருந்தது. அவர் என்னுடைய தோற்றத்தைப் பற்றிச் சிறிதும் அக்கறை காட்டவில்லை, இகழ்ச்சியாகக் கூட நடந்து கொண்டார். நான் அழகாக இருப்பதாக அவர் வார்த்தையில் அல்லது பார்வையில் கூட சுட்டிக் காட்டியதில்லை. அதற்கு மாருக, அவருக்கு முன்னுல் யாராவது நான் அழகாக இருக்கிறேன் என்று சொல்லும் பொழுது அவர் முகத்தைச் சுருக்கிக் கொண்டு சிரிப்பார். என் தோற்றத்தில் குறைகளைக் கண்டுபிடிக்க, அவற்றைப் பேசி என்னைக் கேலி செய்வதற்குக் கூட அவர் விரும்பினுர். விசேஷ நாட்களின் போது காதியா நாகரிகமான உடைகளை

எனக்கு அணிவிப்பாள், புதுமையான முறைகளில் என் தலைமுடியை அலங்காரம் செய்வாள். ஆனால் அவர் இவற்றைக் கேலி செய்வார். இது பாவம், காதியாவைப் புண்படுத்தும். முதலில் இது எனக்கு அதிகமான குழப்பத்தைக் கொடுத்தது. அவருக்கு என்னிடம் கவர்ச்சி ஏற்பட்டிருப்பதாகக் காதியா முடிவு செய்தாள். ஆனால் ஒருவர் காதலிக்கின்ற பெண் மிகச் சிறப்பாக உடையணிந்து தோன்றுவதை அவர் எப்படி விரும்பாதிருக்க முடியும் என்பது அவளுக்குச் சிறிதும் புரியவில்லை. அவர் எதை விரும்பினர் என்பதை நான் சீக்கிரத்தில் தெரிந்து கொண்டேன். நான் போலிக்காதல் செய்பவள் அல்ல என்று நம்புவதற்கு அவர் விரும்பினர். இதை நான் புரிந்து கொண்டதும் என்னுடைய உடைகளிலிருந்த போலிக்காதலின் சுவடுகள், என்னுடைய தலையலங்காரமும் பழக்கங்களும் வெகு சீக்கிரத்திலேயே முற்றிலும் மறைந்தன. அதற்குப் பதிலாக இப்பொழுது என்னிடம் எளிமை என்ற ஊடுருவிப் பார்க்கக் கூடிய போலிக்காதல் ஏற்பட்டது—இன்னும் நான் உண்மையாகவே எளிமையைக் கடைப்பிடிக்க முடியவில்லை. அவர் என்னைக் காதலிப்பது எனக்குத் தெரியும். அது குழந்தை என்ற முறையிலா அல்லது பெண் என்ற முறையிலா என்று நான் அந்த நேரத்தில் என்னைக் கேட்டுக் கொள்ளவில்லை. நான் அந்தக் காதலை மதித்தேன். அவர் என்னை உலகத்திலேயே மிகவும் சிறந்த இளம் பெண்ணைக் கருதினர்

என்பது எனக்குத் தெரியும். அந்த எண்ணத்தில் அவர் ஏமாற்றமடைய வேண்டுமென்று நான் விரும்பினேன். ஆகவே என்னையறியாமலே அவரை ஊக்குவித்தேன். ஆனால் அவரை ஏமாற்றிய பொழுது என்னிடம் முன்னேற்றம் ஏற்பட்டது. அவரிடம் என்னுடைய உடலின் கவர்ச்சியைக் காட்டிலும் ஆன்மாவின் அழகை எடுத்துக் காட்டுவது எவ்வளவு சிறப்பானது, எவ்வளவு தகுதிமிக்கது என்பதை நான் உணர்ந்தேன். என்னுடைய தலைமுடி, கைகள், முகம், என்னுடைய செயல் முறைகள் (அவை நல்லவையாகவோ அல்லது தீங்கானவையாகவோ எப்படி இருந்தாலும்) ஆகியவற்றை அவர் ஒரே பார்வையில் புரிந்து கொண்டு, பாராட்டக் கூடியவராகத் தோன்றினார். அதிலும் அவர் நன்கு பாராட்டக் கூடியவராக இருந்த காரணத்தால் அவருடைய பாராட்டுக்கு மேல் கூடுதலாக நான் சொல்லக் கூடியது உண்மையிலேயே ஒன்றுமில்லை. ஆனால் அவருக்கு என்னுடைய ஆன்மாவைத் தெரியாது. ஏனென்றால் அவர் அதை நேசித்தார், அது இன்னும் வளர்ச்சியடைந்து கொண்டிருந்தது. இங்கேதான் நான் அவரை ஏமாற்ற முடியும். நான் அதைச் செய்தேன். நான் கடைசியாக இதை உணர்ந்த பொழுது அவரோடிருப்பது எனக்கு மிகவும் சுலபமானதாயிற்று. என்னிடமிருந்த அவசியமில்லாத சங்கடமும் கட்டுப்படுத்தப்பட்ட பாவனைகளும் முற்றிலும் மறைந்துவிட்டன. அவர் என்னை முழுத் தோற்றத்தில் அல்லது பக்கவாட்டில்,

உட்கார்ந்திருக்கும் நிலையில் அல்லது நின்று கொண்டிருக்கும் நிலையில், உயரமாக அல்லது தணிவாகத் தலையலங்காரம் செய்திருப்பதை —எப்படிப் பார்த்தாலும் என்னை முழுமை யாகப் பார்த்தார், அப்பொழுது என் தோற் றத்தைப் பற்றி திருப்தி அடைந்தவராகத் தோன்றினர். அவர் தன்னுடைய பழக்கத்தை மாற்றிக் கொண்டு அவரும் (மற்றவர்களைப் போல) என் முகம் அழகாக இருப்பதாக திடீ ரென்று என்னிடம் சொல்லியிருந்தால் நான் சிறிதளவு கூட மகிழ்ச்சி அடைந்திருக்க மாட் டேன் என்று நினைக்கிறேன். ஆனல் நான் ஏதாவதொன்றைச் சொன்ன பிறகு அவர் என்னை கவனமாகப் பார்த்துக் கொண்டு மனப் பூர்வமான குரலில்—அதற்கு அவர் ஒரு கேலி யான தொனியைக் கொடுப்பார்— ''ஆம். உன்னிடம் ஏதோ இருக்கிறது. நீ நல்ல பெண் என்பதை நான் ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும்'' என்று கூறும் பொழுது நான் எவ்வளவு ஆனந்தமடைந்தேன்! என் இதயம் எவ்வளவு இலேசாகிவிடும்!

இந்த வெகுமதிகளை எனக்குத் தந்து, என் இதயத்தைப் பெருமிதத்திலும் மகிழ்ச்சியி லும் நிரப்பியவை எவை? தன் பேத்தியிடம் வயோதிக கிரிகோரி வைத்திருக்கும் அன்பு என் மனதை உருக்கிவிட்டதாகச் சொன்னதா? அல்லது ஏதோ ஒரு கவிதை அல்லது நாவலைப் படித்துவிட்டு நான் கண்ணீர் வடித்ததாலா? ஷுல்ஹாஃபைக் காட்டிலும் மோஸார்ட்டை எனக்கு அதிகம் பிடிக்கிறது என்று சொன்

னதா? எது நல்லது எது காதலிக்கப்பட வேண்டியது என்பதைப் பற்றி உண்மையில் எனக்குக் கடுகளவு அபிப்பிராயம் கூட இல்லாவிட்டாலும் நல்லவை, காதலிக்கப்பட வேண்டிய ஒவ்வொன்றையும் ஊகித்துக் கொள்வதற்கு என்னிடமிருந்த திறமை குறிப்பிடத்தக்கதாக எனக்குத் தோன்றியது. என்னுடைய ரசனைகள், பழக்கங்கள் பலவற்றின் மீது ஸெர்கேய் மிஹாய்லவிச்சுக்கு அதிருப்தி உண்டு. நான் ஏதாவது பேசத்தொடங்கும் பொழுது அது அவருக்குப் பிடிக்கவில்லை என்பதை அவர் தன் பார்வையால் அல்லது தன்னுடைய புருவத்தை அசைப்பதன் மூலம் காட்டினுல் போதும்; என் மீது பரிதாபப்படுகின்ற, இலேசான ஏளனத்தைக் காட்டுகின்ற அந்த பாவம் அவர் முகத்தில் தோன்றிவிட்டால் போதும். நான் எப்பொழுதுமே விரும்பியவற்றை உண்மையில் நான் விரும்பவில்லை என்று கற்பனை செய்து கொள்வேன். சில சமயங்களில் அவர் எனக்கு அறிவுரை சொல்ல ஆரம்பிக்கும் பொழுது அவர் என்ன சொல்லப் போகிறுர் என்பதை நான் ஊகித்துவிடுவேன். அல்லது சில சமயங்களில் என் கண்களை உற்றுப் பார்த்துக் கொண்டே அவர் விரும்பிய அபிப்பிராயத்தை என்னிடமிருந்து வரவழைத்து விடுவார். அந்த சமயத்தில் என்னுடைய சிந்தனைகள், உணர்ச்சிகளில் ஒன்று கூட எனக்குச் சொந்தமானவை அல்ல — அக்காலத்தில் அவை அனைத்துமே அவருடையவைதான். ஆனுல் அவை திடீரென்று என்னுடையவை ஆகிவிட்டன. அவை

என் வாழ்க்கையில் நுழைந்து பிரகாசத்தை ஏற்படுத்திவிட்டன. நான் எல்லாவற்றையும் —காதியாவையும் எங்களுடைய வேலைக்காரர் களையும், சோனியாவையும் என்னையும் என் னுடைய நடவடிக்கைகளையும் — முற்றிலும் வேறு கண்களோடு பார்க்கத் தொடங்கினேன். ஆனால் அது எனக்குத் தெரியவில்லை. இது வரையிலும் அலுப்பு ஏற்படுகின்ற பொழுது மட்டுமே புத்தகங்களைப் படிப்பது என் னுடைய பழக்கம். இப்பொழுது புத்தகங்கள் எனக்கு [ மிக அதிகமான மகிழ்ச்சியைக் கொடுத்தன. நாங்கள் ஒன்ருகப் புத்தகங்களைப் படித்தோம், அவற்றைப் பற்றிப் பேசினேம், அவர் புதிய புத்தகங்களை எனக்காகக் கொண்டு வந்தார் என்பவை இதற்குக் காரணம். இதற்கு முன்பு ஸோனியாவுக்காக நான் செலவிட்ட நேரம், நான் அவளுக்குப் பாடங்களைக் கற் பித்தது ஆகியவை எனக்குக் கடினமான பணி யாக இருந்தன. கடமை உணர்ச்சியினுல் மட்டுமே நான் அவற்றை நிறைவேற்றினேன். ஒரு நாள் ஸோனியாவுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த பொழுது அவரும் உட்கார்ந்திருந்தார். ஸோனியாவின் முன்னேற்றத்துக்கு உதவுவதில் நான் மகிழ்ச்சியடையத் தொடங்கினேன். அதற்கு முன்பு ஒரு பாடல் முழுவதையும் பியானே வாத்தியத்தில் வாசிப்பது எனக்கு இயலாததாகத் தோன்றியது. ஆனல் இப் பொழுது அவர் பாட்டைக் கேட்பார், ஒரு வேளை என்னைப் பாராட்டவும் செய்வார் என் பது எனக்குத் தெரிந்திருந்ததால் ஒரே

பாட்டை நாற்பது தடவைகளுக்கு மேல் வாசித்தேன். பாவம் காதியா! அவள் தன் காதுகளுக்குள் பஞ்சைத் திணித்துக் கொண் டாள். எனினும் அது எனக்கு அலுப்பைத் தரவில்லை. பழைய சோனட்டாக்களின் சொல் லமைப்பு இப்பொழுது வேறுவிதமாக இருப் பதைப் போலத் தோன்றியது—அவை பாட் டில் மிகவும் நன்முக வெளிவந்தன. காதி யாவை என் உயிரைப்போலவே நான் நன்முக அறிந்து நேசித்தேன். ஆனல் அவளும் என் பார்வையில் மாற்றமடைந்தாள். அவள் எங் களுக்குத் தாயாராகவும், தோழியாகவும் அடி மையாகவும் இருக்க வேண்டுமென்பது அவ சியமல்ல என்பதை இப்பொழுதுதான் நான் உணர்ந்தேன். அவள் எவ்வளவு தன்னலமில் லாதவள், தன்னை அர்ப்பணித்துக் கொண்ட வள், அன்பு நிறைந்தவள் என்பதை நான் உணர்ந்தேன், அவளுக்கு நான் எவ்வளவு கட மைப் பட்டிருக்கிறேன் என்பதை உணர்ந்தேன். அவளை மேலும் அதிகமாக நேசிக்கத் தொடங் கினேன். எங்களுடைய விவசாயிகளையும் பண் ணையடிமைகளையும், வீட்டிலிருக்கும் வேலைக் காரர்களையும் பணிப் பெண்களையும் முன்பிருந் ததற்கு மாமுன முறையில் பார்க்க அவரே எனக்குக் கற்றுக் கொடுத்தார். இது வேடிக் கையாகக் கூடத் தோன்றலாம்: எனக்குப் பதி னேழு வயதாகின்ற வரையிலும் நான் யாரோடு வசித்தேனே, அவர்கள் எனக்குப் புத்தகத்தில் மட்டுமே படித்தவர்களைக் காட்டிலும் புதிய வர்களாக இருந்தார்கள். அவர்களுக்கும்

என்னைப் போலவே காதலைப் பற்றித் தெரியும், அவர்களுக்கும் விருப்பங்களும் வருத்தங்களும் உண்டு என்று நான் ஒருபோதும் சிந்தித்ததில்லை. நெடுங்காலமாக நான் பார்த்துக் கொண்டிருக்கும் எங்களுடைய தோட்டமும் சோலைகளும் வயல்களும் திடீரென்று புதுமையும் அழகும் நிறைந்திருப்பதாக எனக்குத் தோன்றின. வாழ்க்கையில் ஒரே ஒரு ஆனந்தம் தான் இருக்கிறது—அது மற்றவர்களுடைய நன்மைக்காகப் பாடுபடுவதே—என்று ஸெர்கேய் மிஹாய்லவிச் கூறுவது சரியானதே. அப்பொழுது அது எனக்கு விசித்திரமாகத் தோன்றியது—அதை நான் புரிந்து கொள்ளவில்லை. ஆனால் எனக்குத் தெரியாமலேயே இந்தக் கருத்து என் மனதில் ஏற்கெனவே வேரூன்றிவிட்டது. அவர் என்னுடைய வாழ்க்கையின் போக்கில் எதையும் மாற்றாமல், ஒவ்வொரு காட்சிப் பதிவிலும் தன்னைத் தவிர வேறு எதையும் கூடுதலாகச் சேர்க்காமல் என்னைச் சுற்றியுள்ள ஆனந்தமயமான முழு உலகத்தையும் காட்டினார். என்னுடைய குழந்தைப் பருவந்தொட்டே இவை என்னைச் சூழ்ந்திருக்கின்றன. ஆனால் அவை ஊமையாக இருந்தன. அவர் வந்தவுடன் அவை அனைத்தும் பேச, என்னுடைய ஆன்மாவை மகிழ்ச்சியினால் நிரப்பி அதற்குள் நுழைவதற்கு அனுமதி கேட்கத் தொடங்கிவிட்டன.

அந்தக் கோடை காலத்தின் போது நான் அடிக்கடி என்னுடைய அறைக்குச் சென்று படுத்துக் கொள்வேன். வசந்த காலத்தின் போது எதிர்காலத்தைப் பற்றி ஏற்படுகின்ற

முந்திய ஏக்கங்களுக்கும் விருப்பங்களுக்கும் பதிலாக நிகழ்கால ஆனந்தத்தின் படபடப்பில் என் இதயம் நிறைந்திருக்கும். என்ஞல் தூங்க முடியாது. நான் எழுந்து காதியாவின் படுக்கை மேல் உட்கார்ந்து எனக்குப் பரிபூரணமான மகிழ்ச்சி ஏற்பட்டிருப்பதாகக் கூறுவேன். இப்பொழுது அதை நினைத்துப் பார்க்கும் பொழுது நான் அதைப் பற்றி அவளிடம் பேசியிருக்க வேண்டியதில்லை என்று உணர்கிறேன். அவளே அதைக் கண்டிருப்பாள். நான் விரும்பிய அனைத்தும் எனக்குக் கிடைத்துவிட்டன, நானும் மிகவும் மகிழ்ச்சியோடிருக்கிறேன் என்று அவள் என்னிடம் கூறிவிட்டு என்னை முத்தமிடுவாள். அவள் வார்த்தைகளை நான் நம்பினேன். எல்லோரும் ஆனந்தமாக இருக்க வேண்டும். அது தான் சரியானது, நியாயமானது என்று நான் கருதினேன். ஆஞல் காதியா தூங்கிவிடுவாள். சில சமயங்களில் அவள் கோபமடைந்து விட்டதாகக் கூடப் பாசாங்கு செய்வாள்; தான் தூங்க வேண்டுமென்பதற்காக என்னைத் தன் படுக்கையிலிருந்து விரட்டிவிடுவாள். பிறகு எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்த எல்லாவற்றையும் பற்றி நான் நெடுநேரம் வரை நினைத்துக் கொண்டிருப்பேன். சில சமயங்களில் நான் எழுந்து உட்கார்ந்து இரண்டாவது முறையாகத் தோத்திரங்களைச் சொல்வேன். எனக்கு எல்லா மகிழ்ச்சியையும் கொடுத்ததற்காகக் கடவுளுக்கு என்னுடைய சொந்த வார்த்தைக

ளில் நன்றி கூறிப் பிரார்த்தனை செய்வேன்.

எங்களுடைய சிறிய அறையில் காதியா சீராக மூச்சு விடுகின்ற சத்தத்தையும் அவளுக்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருக்கும் கடிகாரத்தின் 'டிக்டிக்' என்ற ஒலியையும் தவிர வேறு சத்தமே இருக்காது. எனினும் எனக்குத் தூக்கம் வராது. நான் புரண்டு படுத்துக் கொள்வேன். தோத்திரங்களை முணுமுணுப்பேன், சிலுவைக் குறியிட்டுக் கொள்வேன், என் கழுத்தைச் சுற்றித் தொங்கும் சிலுவையை முத்தமிடுவேன். கதவுகள் தாளிடப்பட்டு சன்னல்கள் மூடப்பட்டிருக்கும்; ஏதாவதொரு மூலையில் ஈ அல்லது கொசு ரீங்காரத்தோடு பறந்து கொண்டிருக்கும். அந்தஅறையை விட்டுப் போக நான் ஒருபோதும் விரும்பவில்லை, பொழுது புலர்வதை ஒருபோதும் விரும்பவில்லை, என்னைச் சுற்றிலும் உள்ள ஆன்மிகத்தனிமை என்ற இந்தச் சூழல் மறைவதை ஒருபோதும் விரும்பவில்லை. என்னுடைய கனவுகளும் சிந்தனைகளும் தோத்திரங்களும் அந்தி இருளில் என்னோடிருக்கின்ற, என் படுக்கையைச் சுற்றிப் படபடக்கின்ற,என் மேல் வட்டமிடுகின்ற உயிருள்ள பிறவிகள் என்று நான் நினைத்தேன். ஒவ்வொரு சிந்தனையும் அவருடைய சிந்தனை, ஒவ்வொரு உணர்ச்சியும் அவருடைய உணர்ச்சி. இதுதான் காதல் என்று நான் அப்பொழுது உணரவில்லை. அது தானாகவே எந்த நேரத்திலும் வரக் கூடிய சாதாரண உணர்ச்சி தான் என்று நினைத்தேன்.

# 3

அறுவடை நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஒரு நாள் மதிய உணவுக்குப் பிறகு காதியாவும் நானும் ஸோனியாவைக் கூட்டிக் கொண்டு தோட்டத்துக்குள் சென்றோம். எலுமிச்சை மரங்களின் நிழலில் போடப்பட்டிருந்த எங்களுக்குப் பிரியமான பெஞ்சின் மீது நாங்கள் உட்கார்ந்திருந்தோம். சற்றுத் தொலைவிலுள்ள காடும் வயலும் அருமையான காட்சியாகத் தோன்றின. ஸெர்கேய் மிஹாய்லவிச் மூன்று நாட்களாக எங்களைப் பார்க்க வரவில்லை. அன்று நாங்கள் அவரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். மேலும் எங்கள் வயலைப் பார்ப்பதற்காக அவர் வர உத்தேசித்திருப்பதாக எங்கள் மணியக்காரரிடம் தெரிவித்ததை அவரும் எங்களிடம் கூறியிருந்தார். ஒரு மணிக்குப் பிறகு அவர் குதிரை மீது சவாரி செய்து கொண்டு ரை வயலின் வழியே வருவதை நாங்கள் பார்த்தோம். காதியா அவர் மிகவும் விரும்புகின்ற பீச் மற்றும் செர்ரிப் பழங்களை எடுத்துத் தட்டில் வைத்தாள். பிறகு அவள் என்னைப் பார்த்து லேசாகச் சிரித்து விட்டு பெஞ்சின் மீது படுத்துக் கொண்டு சிறிது நேரத்தில் தூங்கிவிட்டாள். நான் ஒரு தட்டையான, வளைந்த எலுமிச்சைக் கிளையை ஒடித்தேன். அதன் தடிமனான இலைகளும் பட்டையும் தொடுவதற்கு ஈரமாக இருந்தன. காதியாவுக்கு மேல் அந்தக் கிளையை ஆட்டிக் கொண்டு தொடர்ந்து படித்துக்

கொண்டிருந்தேன். வயல்களுக்கு நடுவிலுள்ள பாதையில் அவர் தலை தெரிகிறதா என்று அவ்வப்பொழுது பார்த்துக் கொண்டிருந்தேன். ஸோனியா ஒரு நாள்பட்ட எலுமிச்சை மரத்தின் வேர்களில் தன்னுடைய பொம்மைகளுக்கு ஒரு வீடு கட்டிக் கொண்டிருந்தாள். அன்று வெப்பமும் புழுக்கமும் அதிகமாக இருந்தது. காற்று வீசவில்லை. காலையில் கறுப்பு நிற, இடி-மேகங்கள் அதிகமாகத் தோன்றி பலத்த மழை பெய்யப் போவதாக பயமுறுத்தின. எனக்கு நடுக்கமாக இருந்தது. இடி-புயலுக்கு முன்னால் எனக்கு எப்பொழுதும் நடுக்கம் ஏற்படுவது வழக்கம். ஆனால் நண்பகலுக்குப் பிறகு மேகங்கள் அடிவானத்தை நோக்கிக் கீழே இறங்கிவிட்டன. தெளிவான வானத்தில் கதிரவன் பவனி வந்து கொண்டிருந்தது. ஆனால் இப்பொழுது ஒரு பக்கத்திலிருந்து இடியோசை கேட்டது. அடிவானத்திலிருந்த வயல்களின் தூசியோடு கலந்துவிட்ட கறுப்பு நிற மேகங்களுக்கு நடுவே வெளிறிப் போன மின்னல் கோலங்கள் அவ்வப்பொழுது ஏற்பட்டன. அன்று—குறைந்த பட்சம் எங்களைச் சுற்றியிருந்த பகுதியில்—புயலடிக்காது என்பது தெளிவாயிற்று. நான் அங்கே உட்கார்ந்து தோட்டத்துக்கு அப்பால் பாதையில் தெரியக் கூடிய சிறு பகுதிகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். தானியக் கதிர்களை உயரமாக அடுக்கிக் கொண்டு வண்டிகள் கிறீச்சிட்டுக் கொண்டு வீடுகளை நோக்கித் தொடர்ச்சியாகப் போய்க் கொண்டிருந்தன. எதிர்த்

திசையில் காலிவண்டிகள் கடகடவென்று போய்க் கொண்டிருந்தன. அந்தக் காலி வண்டிகளில் உட்கார்ந்திருந்தவர்கள் இங்கு மங்கும் சாய்ந்து கொண்டிருந்தார்கள்; அவர் களுடைய கால்கள் ஆடிக் கொண்டிருந்தன; சட்டைகள் படபடவென்று பறந்தன. வண் டிகள் கிளப்பிய அடர்த்தியான தூசியைக் காற்று அடித்துக் கொண்டு போகவில்லை; அது தரையில் விழவுமில்லை, அது வேலிக்கு அப்பா லும் தோட்டத்திலிருந்த இலைகளின் நடுவிலும் தணிவாக மிதந்து கொண்டிருந்தது. சற்றுத் தள்ளியிருந்த போரடிக்குமிடத்திலிருந்து குரல்களும் வண்டிகள் கிறீச்சிடும் அதே சத் தமும் கேட்டன. அதே மஞ்சள் தானியக் கதிர் களும் தெரிந்தன. அவை முதலில் வேலியை ஒட்டி மெதுவாக நகர்ந்தன, பிறகு ஆகாயத் தில் துள்ளிக் குதித்தன. வீடுகளைப் போல சரி வான கூரைகளோடு முட்டை வடிவத்தில் போர்கள் என் கண்களுக்கு முன்னால் வடிவ மெடுத்தன. அவற்றின் மேல் விவசாயிகள் நின் ருர்கள். எனக்கு முன்னுலிருந்த தூசி படிந்த வயலில் வண்டிகள் இங்குமங்கும் போய்க் கொண்டிருந்தன. நான் மறுபடியும் மஞ்சள் நிற தானியக் கதிர்களைப் பார்க்க முடிந்தது; வண்டிகளையும் குரல்களையும் பாடல்களையும் கேட்க முடிந்தது. ஒரு பக்கத்தில் வயல்களுக்கு இடையிலுள்ள வரப்புகளைக் காட்டுகின்ற செடிகள் வளர்ந்திருக்கும் மேடுகளும் அறுவ டையான நிலமும் மென்மேலும் அதிகமாகத் தெரிந்தன. கீழே வலது பக்கத்தில் பிரகாச

மான நிறங்களில் உடைகள் அணிந்திருந்த விவசாயப் பெண்கள் அறுவடை நடைபெற்ற வயலில் தானியக் கதிர்களைச் சேர்த்துக் கட்டுவதைப் பார்த்தேன். அவர்கள் குனிந்து வேலை செய்து கொண்டிருந்தார்கள்; அவர்களுடைய கைகள் தொடர்ச்சியாக முன்னும் பின்னும் போய்க் கொண்டிருந்தன. அவர்கள் முன்னே சென்ற பொழுது தானியக் கட்டுகள் ஒழுங்கான வரிசைகளில் வைக்கப்பட்டு வயல் சுத்தமாக இருந்தது. என் கண்களுக்கு முன்பாகவே கோடை காலம் இலையுதிர் காலமாக மாறிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. அந்தத் தோட்டத்தில் எங்களுக்குப் பிடித்தமான அந்த ஒரு இடத்தைத் தவிர மற்ற எல்லா இடங்களும் வெப்பமாக, தூசியாக இருந்தன. எங்களைச் சுற்றி எல்லா இடங்களிலுமிருந்த தூசிக்கும் வெப்பத்துக்கும் நடுவில் கொளுத்துகின்ற வெய்யிலில் பாடுபட்டுக் கொண்டிருக்கும் விவசாயிகளின் சத்தமும் பேச்சமும் நடமாட்டமும் கேட்டன.

அந்தக் குளிர்ச்சியான பெஞ்சின் மீது முகத்தை வெள்ளையான கைக்குட்டையினுல் மூடிக் கொண்டு காதியா மிகவும் இனிமையாகக் குறட்டைவிட்டுக் கொண்டிருந்தாள். தட்டின் மேல் செர்ரிப் பழங்கள் சுவை நிரம்பியனவாகவும் பளபளப்பான கறுப்பு நிறத்திலும் தோன்றின. எங்கள் உடைகள் புத்தம் புதியனவாகவும் சுத்தமாகவும் இருந்தன. கூஜாவிலிருந்த தண்ணீர் சூரிய ஒளியில் பிரகாசமாகவும் உற்சாகமூட்டுவதாகவும் இருந்தது.

நான் மிகவும் பரவசமடைந்தேன்! ''இதற்கென்ன செய்ய முடியும்? நான் அதிகமான மகிழ்ச்சி அடைவது என்னுடைய தப்பா? ஆனால் என்னுடைய மகிழ்ச்சியை எப்படிப் பகிர்ந்து கொள்வேன்? என்னை அப்படியே, என் மகிழ்ச்சியை அப்படியே யாரிடம் நான் ஒப்படைக்க முடியும்?..'' என்று நினைத்தேன்.

சூரியன் ஏற்கெனவே பாதையிலிருந்த புர்ச் மரங்களின் உச்சிகளுக்குக் கீழே பதுங்கிவிட்டது. அதன் சாய்வான கதிர்கள் பட்டு தூரத்திலிருந்த பொருள்கள் அதிகமான பிரகாசத்துடனும் தெளிவுடனும் தோன்றின. வயல்களில் தூசி படிந்து கொண்டிருந்தது. இடிமேகங்கள் முற்றிலும் சிதறிப் போய்விட்டன. கிராமத்துக்கு அப்பாலிருந்த போரடிக்கும் இடத்தில் மூன்று புதிய போர்களின் உச்சிகள் என் கண்களில் பட்டன. அவற்றின் மேல் நின்றுகொண்டிருந்த விவசாயிகள் ஏற்கெனவே கீழே இறங்கிவிட்டார்கள். வண்டிகளில் உட்கார்ந்திருந்தவர்களின் ஆரவாரமான சத்தத்துக்கு நடுவே அவை வேகமாகப் போய்விட்டன. அதுதான் கடைசித் தடவையாக இருக்க வேண்டும். பெண்கள் தங்களுடைய வாருகோலைத் தோளின் மேல் சாய்வாக வைத்துக் கொண்டு வைக்கோலைக் கட்டும் பிரியை இடைகளில் சொருகிக் கொண்டு உச்ச ஸ்தாயியில் பாடிக் கொண்டு வீடுகளுக்குப் போய்விட்டார்கள். ஸெர்கேய் மிஹாய்லவிச் மலையின் சரிவில் இறங்கிவந்து கொண்டிருப்பதை நான் பார்த்து நெடு நேரமாகிவிட்

டது. ஆனால் அவர் இன்னும் வந்து சேரவில்லை. அவருடைய உருவம் திடீரென்று நான் சிறிதும் எதிர்பாராத திசையில் (அவர் மலையிடுக்கின் வழியாகச் சுற்றி வந்திருக்க வேண்டும்) தோன்றியது. அவர் தொப்பியைக் கையில் வைத்துக் கொண்டு மகிழ்ச்சி நிறைந்த முகத்தோடு, புன்சிரிப்போடு என்னை நோக்கி வேகமாக வந்தார். காதியா தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவர் உதட்டைக் கடித்தார், கண்களைச் சுழற்றினார், அடிமேலடி வைத்து நடக்கத் தொடங்கினார். அவர் விவரிக்க முடியாத குதூகல உணர்ச்சியில் இருக்கிறார் என்பதை நான் தெரிந்து கொண்டேன். அதை நாங்கள் ''கட்டுக்கடங்காத பரவசம்'' என்று கூறினோம். அவரிடம் அந்த உணர்ச்சியை நான் மிகவும் ரசித்தேன். பள்ளிக்கூடத்திலிருந்த தப்பியோடி வந்த சிறுவனைப் போல அவர் இருந்தார். அவர் உடலில் ஆனந்தம், மகிழ்ச்சி, சிறு பிள்ளைத்தனமான சுறுசுறுப்பு தளும்பி நின்றது.

''ஹலோ! இள நீல மொட்டே! நீ எப்படி இருக்கிறாய்? உற்சாகமாக இருக்கிறாயல்லவா? என்று அவர் என் கையை அழுத்திய படியே மெதுவாகக் கேட்டார்... ''நான் முதல் தரமாக இருக்கிறேன்'' என்று என்னுடைய கேள்விக்கு அவர் பதிலளித்தார். ''எனக்குப் பதிமூன்று வயது. ஓடிப் பிடித்தும் மரங்களில் ஏறியும் விளையாட ஆசைப்படுகிறேன்'' என்றார்.

''கட்டுக்கடங்காத பரவசமா?'' என்று

அவருடைய சிரிக்கும் விழிகளைப் பார்த்துக் கொண்டே நான் கேட்டேன். இந்தக் கட்டுக் கடங்காத பரவசம் என்னிடமும் பரவிக் கொண்டிருப்பதை நான் உணர்ந்தேன்.

''ஆமாம்'' என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டு, சிரிக்காமலிருக்க முயற்சி செய்த படியே அவர் கூறினார். ''கதெரீனு கார்லவ்னுவின் மூக்கில் ஏன் அடிக்கிருய்?''

நான் அவரைப் பார்த்துக் கொண்டே அந்த எலுமிச்சைக் கிளையை ஆட்டிக் கொண்டிருந்தேன். காதியாவின் முகத்தை மூடியிருந்த கைக் குட்டையைத் தள்ளிவிட்டதையும் இலைகளால் அவள் முகத்தில் அடித்துக் கொண்டிருப்பதையும் நான் கவனிக்கவில்லை. நான் சிரிக்கத் தொடங்கினேன்.

''நான் தூங்கிக் கொண்டிருக்கவில்லை என்று அவள் சொல்லுவாள்'' என்று அவளை எழுப்பி விடாதிருக்க வேண்டும் என்பதைப் போல அவர் காதுக்குள் முணுமுணுத்தேன். ஆனல் உண்மையான காரணம் அதுவல்ல. அவர் காதில் முணுமுணுக்கின்ற இன்பத்தை அனுபவிப்பதற்காகவே பேசினேன்.

நான் மிகவும் தாழ்ந்த குரலில் பேசியதால் தனக்கு எதுவுமே கேட்கவில்லை என்று சொல்வதைப் போல அவர் என்னை அமைதியாகக் கேலி செய்து உதடுகளை அசைத்தார். பிறகு தட்டிலிருந்த செர்ரிப் பழங்களைப் பார்த்ததும் அதைத் திருடுவதைப் போல நடித்தார். எலுமிச்சை மரத்தடியில் விளையாடிக் கொண்டிருந்த ஸோனியாவிடம் அவற்றை எடுத்துக்

கொண்டுபோய் அவளுடைய பொம்மைகளின் மேல் அவர் உட்கார்ந்தார். ஸோனியா முதலில் கோபமடைந்தாள். ஆனால் அவளைத் தன்னோடு விளையாடச் செய்ததன் மூலம் அவர் அவளோடு சமாதானம் செய்து கொண்டார். செர்ரிப் பழங்களை வேகமாகச் சாப்பிடுவது யார் என்று அவர்கள் விளையாடினார்கள்.

''இன்னும் கொஞ்சம் கொண்டுவரச் சொல்லட்டுமா?'' என்று நான் கேட்டேன். ''அல்லது நீங்கள் விரும்பினால் நாமே போய் செர்ரிப் பழங்களைச் சேகரிக்கலாம்.''

அவர் பொம்மைகளை எடுத்துத் தட்டின் மேல் வைத்தார். நாங்கள் தோட்டத்துக்குள் சென்றோம். பொம்மைகளைக் கொடுத்துவிடுங்கள் என்று ஸோனியா அவருடைய கோட்டைப் பிடித்து இழுத்தபடியே சிரித்துக் கொண்டு அவருக்குப் பின்னால் ஓடினாள். அவர் பொம்மைகளை அவளிடம் கொடுத்து விட்டுக் கருத்தாழமான பார்வையோடு என்னை நோக்கித் திரும்பினார்.

''நீ உண்மையிலேயே ஒரு இள நீல மொட்டுத்தான்''. அங்கே யாரையும் உறக்கத்திலிருந்து எழுப்பிவிடக் கூடிய ஆபத்து இல்லாதபோதிலும் அவர் இன்னும் மெதுவாகவே பேசினார். ''ஒரே தூசி, வெப்பம், வேலை! அவற்றிடமிருந்து விடுபட்டு உன்னிடம் வந்த பொழுது இள நீல மொட்டுக்களை முகர்வது போல எனக்குத் தோன்றியது—நறு மணமிக்க தோட்ட மொட்டுக்கள் அல்ல. உருகிக் கொண்டிருக்கும் பனியையும் வசந்த காலப் புல்லை

யும் நினைவு படுத்துகின்ற முதல் மொட்டுக் கள், சிறிய கறும் பச்சை மொட்டுக்கள்.''

''அறுவடை எப்படி?'' அவருடைய சொற் கள் என்னிடம் ஏற்படுத்திய இன்பம் நிறைந்த குழப்பத்தை மறைப்பதற்காக நான் இப்படிக் கேட்டேன்.

''பிரமாதமாக இருக்கிறது! இந்த விவசா யிகள் எந்தக் காரியத்தையும் சிறப்பாகச் செய்யக் கூடியவர்கள். அவர்களை நீ எவ்வளவு நன்ருகத் தெரிந்து கொள்கிருயோ அந்த அளவுக்கு அதிகமாக நேசிப்பாய்.''

''ஆம்'' என்று நான் கூறினேன். ''நீங்கள் வருவதற்கு முன்பு தோட்டத்தில் உட்கார்ந்த படியே அவர்களைப் பார்த்துக் கொண்டிருந் தேன். திடீரென்று எனக்கு அவமான உணர்ச்சி ஏற்பட்டது. அவர்கள் உழைத்துக் கொண் டிருக்கிருர்கள். ஆனல் நான்...''

''சும்மா அளக்காதே'' என்று அவர் குறுக் கிட்டுப் பேசினர். அவர் அன்போடு என் கண் களை ஊடுருவிப் பார்த்தபோதிலும் அவர் முகம் மாறியிருந்தது.''விவசாயியின் உழைப்பை மதிப் பது ஒரு புனிதமான விஷயம். நீ எந்த சந் தர்ப்பத்திலும் அதைக் கேலி செய்யாதபடி கட வுள் உன்னைக் காப்பாராக!'' என்ருர்.

''ஆனல் உங்கள் ஒருவரிடம் தானே அதைச் சொன்னேன்.''

''ஆம். அது எனக்குத் தெரியும். சரி. செர்ரிப் பழங்கள் வேண்டாமா?''

தோட்டக் கதவு பூட்டியிருந்தது. ஒரு தோட்டக்காரனைக் கூட அங்கே பார்க்க முடிய

வில்லை (அறுவடையில் உதவி செய்யும்படி அவர்கள் எல்லோரையுமே அவர் அனுப்பியிருந்தார்). சாவியை வாங்கிவருவதற்காக ஸோனியா ஓடினாள். ஆனால் அவள் வருகின்றவரை காத்திருக்காமல் அவர் சுவரின் மேல் ஏறினார்; வேலியை மேலே தூக்கிவிட்டு மறுபக்கத்தில் குதித்தார்.

''உனக்கு செர்ரிப் பழங்கள் வேண்டுமா? தட்டைக் கொடு'' என்று உரத்த குரலில் பேசினார்.

''இல்லை. நானே அவற்றைப் பறிக்க விரும்புகிறேன். நான் போய் சாவியைக் கொண்டு வருகிறேன். ஸோனியாவினால் ஒருக்காலும் சாவியைக் கண்டு பிடிக்க முடியாது...''

ஆனால் அதே சமயத்தில் அவர் உள்ளே என்ன செய்து கொண்டிருக்கிறார்—யாரும் தன்னைப் பார்க்கவில்லை என்று நினைக்கும் சமயத்தில் அவர் எப்படித் தோன்றுகிறார், எப்படி நடந்து கொள்கிறார்—என்பதைப் பார்க்க நான் விரும்பினேன். உண்மையில், அவர் ஒரு கணம் கூட என் பார்வையிலிருந்து மறைவதை நான் விரும்பவில்லை. நான் முட்புதர்களைக் கடந்து அந்தச் சுவரின் மறு பக்கத்துக்கு ஓடினேன். அங்கே அதன் உயரம் குறைவாக இருந்தது. ஒரு காலித் தொட்டியின் மேல் ஏறி நின்று—சுவர் என் மார்பளவுக்குக் கூட வரவில்லை—மறுபக்கத்தில் குனிந்து உள்ளே பார்த்தேன். அங்கே வளைவான, முதுமையடைந்த மரங்களின் அகன்ற, முனையான இலைகளின் கீழ் சாறு நிறைந்த செர்ரிப் பழங்கள்

அதிகமாகத் தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டேன். வேலியின் கீழ் தலையை நீட்டிப் பார்த்த பொழுது முடிச்சுப் போன்ற கிளை யின் கீழ் ஸெர்கேய் மிஹாய்லவிச் உட்கார்ந் திருந்தார். நான் போய்விட்டேன், யாரும் தன் னைப் பார்க்க முடியாது என்று அவர் நினைத் திருக்க வேண்டும். அவர் தொப்பியைக் கழற் றிவிட்டு ஒரு பழைய மரத்தின் கவட்டில் கண் களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். கையில் செர்ரி மரப் பிசினை ஒரு பந்தாக உருட்டிக் கொண்டிருந்தார். திடீரென்று அவர் தோள்களைக் குலுக்கினார், கண்களைத் திறந்து இளநகை புரிந்த படியே ஏதோ ஒரு வார்த் தையை முணுமுணுத்தார். அந்த வார்த்தை யும் அவருடைய சிரிப்பும் அவருடைய வழக் கத்துக்கு மாறான முறையில் முற்றிலும் இருந்த படியால் அவரை வேவு பார்ப்பதைப் பற்றி நான் வெட்கமடைந்தேன். அவர் ''மாஷா'' என்று சொன்னதைப் போல எனக்குத் தோன் றியது. ''அப்படி இருக்க முடியாது'' என்று நான் நினைத்தேன். அவர் மறுபடியும் அந்த வார்த்தைகளை—''அன்பே! மாஷா!'' —அதிக மான மென்மையோடும் கனிவோடும் உச் சரித்தார். இந்தத் தடவை அந்த இரண்டு வார்த்தைகளும் எனக்குத் தெளிவாகக் கேட் டன. என் இதயம் படபடவென்று துடிக்க ஆரம்பித்தது, அநேகமாகத் தடுக்கப்பட்ட ஆனந்தம் மிக அதிகமாக ஏற்பட்டு என்னை மூழ்கடித்த படியால் நான் கீழே விழுந்து என் னைக் காட்டிக் கொள்ளக் கூடாது என்பதற்

காக இரண்டு கைகளாலும் அந்தச் சுவரை கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன். அவர் காதுக்குக் கேட்டுவிட்டது. அவர் திடுக்கிட்ட வராகச் சுற்றிலும் பார்த்தார். தன் கண் களைக் கீழே தாழ்த்திக் கொண்டார்; இளம் பெண்ணைப் போல அவருடைய முகம் சிவந் தது. அவர் என்னிடம் ஏதோ சொல்ல விரும் பினுர், ஆனுல் அவரால் பேச முடியவில்லை. மறுபடியும் அவருடைய முகம் சிவந்தது. எனி னும் அவர் என்னைப் பார்த்துப் புன்னகைத் தார். நானும் புன்னகை செய்தேன். அவரு டைய முகம் முழுவதுமே மகிழ்ச்சியினுல் பிரகா சமடைந்தது. நான் பெரியவர் என்று நினைக் கின்ற, எனக்குக் கற்பிக்கின்ற, வயதான, குடும்ப நண்பராக அவர் இருக்கவில்லை. அவர் எனக்குச் சமமானவர். அவர் என்னைக் காதலிக்கிருர், என்னைக் கண்டு அஞ்சுகிருர். நான் அவரைக் காதலிக்கிறேன், அவரைக் கண்டு அஞ்சுகிறேன். நாங்கள் ஒன்றுமே பேச வில்லை. ஒருவரையொருவர் பார்த்துக் கொண் டிருந்தோம். ஆனுல் அவர் திடீரென்று முகத் தைச் சுளித்தார், அவருடைய புன்சிரிப்பும் கண்களின் பிரகாசமும் மறைந்தன. அவர் என் னிடம் தன்னுடைய பழைய குரலில், தகப்ப னுரைப் போன்ற குரலில் மறுபடியும் பேசினுர். ஏதோ தவருன ஒரு காரியத்தைச் செய்தவ ரைப் போல, இப்பொழுது தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டவராக, எனக்கும் அதே அறிவுரையைக் கூறுபவரைப் போலப் பாச மில்லாத குரலில் பேசினுர்.

''கீழே இறங்கிவிடு—இல்லாவிட்டால் விழுந்துவிடுவாய். தலைமுடியைச் சரி செய்து கொள். பார்க்கச் சகிக்கவில்லை'' என்றார்.

''அவர் ஏன் இப்படிப் பாசாங்கு செய்கிறார்? என்னைப் புண்படுத்த விரும்புவது ஏன்?'' என்று நான் வேதனைப்பட்டேன். அவரை மறுபடியும் சங்கடப்படுத்த வேண்டும், அவர் மீது என்னுடைய சக்தியைப் பரிசோதிக்க வேண்டும் என்ற அடக்க முடியாத ஆசை அக்கணத்தில் என்னைப் பற்றியது.

''நான் செர்ரிப் பழங்களைப் பறிக்க வந்தேன்'' என்று சொல்லிவிட்டு எனக்குப் பக்கத்திலிருந்த கிளையைப் பிடித்துக் கொண்டு சுவரின் மேல் குதித்தேன். அவர் கையை நீட்டி உதவி செய்வதற்குள் நான் தோட்டத்துக்குள் குதித்துவிட்டேன்.

''என்ன முட்டாள்தனம்!'' என்று அவர் ஆச்சரியத்தோடு கூறினார். அவர் முகம் மறுபடியும் சிவந்தது. தன்னிடம் ஏற்பட்ட குழப்பத்தை மறைப்பதற்காகக் கோபமடைந்ததைப் போலப் பாசாங்கு செய்தார். ''உனக்குக் காயமேற்பட்டிருந்தால்? இப்பொழுது இங்கேயிருந்து எப்படிப் போவாய்?''

அவர் முன்னைக் காட்டிலும் அதிகச் சங்கடப்பட்டார். ஆனால் அந்தச் சங்கட உணர்ச்சி இப்பொழுது எனக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. அது எனக்கு பயத்தைக் கொடுத்தது. இப்பொழுது நான் சங்கடப்பட்டேன், வெட்கமடைந்தேன். அவருடைய கண்களைப் பார்ப்பதைத் தவிர்த்தேன். என்னுடைய குழப்பத்

தில் செர்ரிப் பழங்களைப் போடுவதற்குக் கூடை இல்லாயலே அந்தப் பழங்களைப் பறிக்கத் தொடங்கினேன். நான் என்னையே திட்டிக் கொண்டேன். நான் செய்த காரியத்தை நினைத்து வருத்தப்பட்டேன். இந்தக் குறும்புத் தனத்தின் மூலம் அவருடைய கருத்தில் நிரந்தரமான அவப் பெயரைப் பெற்றுவிட்டதாக அஞ்சினேன். நாங்கள் இருவரும் மௌனமாக இருந்தோம், வெட்கப்பட்டோம். ஸோனியா சாவியை எடுத்துக் கொண்டு ஓடி வந்தாள். அது எங்களைச் சங்கடமான நிலைமையிலிருந்து விடுவித்தது. வெகு நேரம் வரையிலும் நாங்கள் ஒருவருக்கொருவர் எதுவுமே பேசவில்லை. நாங்கள் ஸோனியாவுடன் மட்டுமே பேசிக்கொண்டிருந்தோம். நாங்கள் காதியாவிடம் திரும்பினோம். நான் தூங்கவில்லை, எல்லாமே எனக்குக் கேட்டது என்று காதியா எங்களிடம் சொன்ன பொழுது என் மனம் மிகவும் நிம்மதியடைந்தது. எங்களைப் பாதுகாக்கின்ற தகப்பனார் தோரணையை மறுபடியும் மேற்கொள்வதற்கு அவர் முயற்சி செய்தார். ஆனால் அது அவருக்குக் கடினமாக இருந்தது. என்னை ஏமாற்ற முடியவில்லை. சில நாட்களுக்கு முன்பு எங்களிடையே நடைபெற்ற உரையாடல் அப்படியே எனக்கு நினைவுக்கு வந்தது.

காதலிப்பதும் தன் காதலை எடுத்துக் கூறுவதும் ஒரு பெண்ணைக் காட்டிலும் ஆணுக்கு எளிது என்று காதியா கூறினாள்.

''நான் காதலிக்கிறேன் என்று ஒரு ஆண்

சொல்ல முடியும், ஆனால் ஒரு பெண்ணால் சொல்ல முடியாது'' என்று அவள் சொன்னாள்.

''ஆனால் தான் காதலிப்பதாக ஒரு ஆணும் கூடச் சொல்ல முடியாது, சொல்லக் கூடாது'' என்று அவர் பதிலளித்தார்.

''ஏன் கூடாது?'' என்று நான் கேட்டேன்.

''ஏனென்றால் அது எப்பொழுதுமே பொய் தான். ஒரு ஆண் காதலிப்பதாகச் சொல்லிட்டால் அது ஒரு வியப்புக்குரிய செய்தியா? அதைச் சொன்னவுடன் ஏதோ ஒன்று 'கிளிக்' என்று ஒலிப்பதைப் போலவும் அவர் உடனே காதலிப்பதைப் போல. அப்படிச் சொல்லி விட்டால் உடனே பிரளயம் வந்துவிடுகிறதா அல்லது ஆயிரம் பீரங்கிகளிலிருந்து குண்டுகள் வெடிப்பதைப் போன்ற விளைவு ஏற்பட்டு விடுகிறதா? 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று பெருமிதத்தோடு சொல்பவர்கள் தங்களை ஏமாற்றிக் கொள்கிறார்கள் அல்லது (அதைக் காட்டிலும் மோசம்) மற்றவர்களை ஏமாற்றுகிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்றார்.

''ஆண் சொல்லாவிட்டால் அவர் தன்னைக் காதலிப்பது அந்தப் பெண்ணுக்கு எப்படித் தெரியும்?'' என்று காதியா கேட்டாள்.

''எனக்குத் தெரியவில்லை'' என்று அவர் பதிலளித்தார். ''ஒவ்வொரு நபரிடமும் அவருக்கே உரிய சொற்கள் இருக்கின்றன. உணர்ச்சிகளினால்தான் அதைப் புரிந்துகொள்ள முடியும். நான் நாவல்களைப் படிக்கும் பொழுது

லெப்டினென்ட் ஸ்திரேல்ஸ்கிய் அல்லது அல் ஃபிரேத் ஏதோ அசாதாரணமான ஒன்று நடை பெறப்போவதாக நினைத்துக் கொண்டு 'எலியனேரா, நான் உன்னைக் காதலிக்கிறேன்!' என்று சொல்லிய பிறகு, அவருக்கோ அல்லது அவளுக்கோ ஒன்றும் நடக்காதிருக்கும் பொழுது—அவர்களுடைய கண்களும் மூக்கும் மற்ற எல்லாமே ஏற்கெனவே இருந்த இடத்தில்தான் இருக்கின்றன—அவர் முகத்தில் எத்தகைய புதிரான தோற்றம் இருக்கும் என்று நான் எப்பொழுதும் கற்பனை செய்கிறேன்.''

அவருடைய கேலிப் பேச்சுக்குப் பின்னல் ஏதோ ஆழமான ஒன்று இருக்கிறது, அது என்னைப் பற்றியது என்று அப்பொழுதே நான் உணர்ந்தேன். ஆனல் காதியா நாவல்களின் கதாநாயகர்களைப் பற்றி அவமதிப்பாகப் பேச ஒருவரையும் அனுமதிக்க மாட்டாள்.

''எப்பொழுதுமே முரணகத்தான் பேச வேண்டுமா?'' என்று அவள் கேட்டாள். ''உன்னைக் காதலிக்கிறேன் என்று ஒரு பெண்ணிடம் நீங்கள் ஒருபோதும் சொன்னதில்லையா?''

''ஒருபோதும் இல்லை. முழந்தாளிட்டுக் கெஞ்சியதும் இல்லை'' என்று அவர் சிரித்துக் கொண்டே கூறினர். ''இனிமேல் அப்படி ஒருபோதும் கெஞ்ச மாட்டேன்.''

இந்த உரையாடல் என் நினைவுக்கு வந்தது. ''என்னைக் காதலிப்பதாக அவர் என்னிடம் சொல்வது அவசியமல்லவே'' என்று நான் நினைத்தேன். ''அவர் என்னைக் காதலிக்கிருர்—

அது எனக்குத் தெரியும். அவர் அலட்சியமாக இருப்பதைப் போல நடித்தால் அதை நான் வேறுவிதமாகப் புரிந்துகொள்ள மாட்டேன்.''

அந்த மாலைப் பொழுது முழுவதிலும் அவர் என்னிடம் அநேகமாகப் பேசவில்லை. ஆனால் அவர் காதியாவிடமும் ஸோனியாவிடமும் பேசிய ஒவ்வொரு வார்த்தையிலும் அவருடைய ஒவ்வொரு அசைவிலும் பார்வையிலும் காதல் இருப்பதை நான் கண்டேன், சிறிதும் ஐயத்துக்கு இடமில்லாதபடிக் கண்டேன். தன் உணர்ச்சிகளை மறைக்க வேண்டும் என்றுஅவர் நினைப்பதற்காக, எல்லாம் ஏற்கெனவே தெளிவாகத் தெரிந்த பிறகு, நம்ப முடியாத மகிழ்ச்சியை அடைவது மிகச் சுலபமானதாகவும் எளிதானதாகவும் இருக்கும் பொழுது தனக்குப் பாசமில்லை என்று அவர் நடிப்பதற்காக, நான் மனங்கலங்கி அவருக்காக வருத்தப்பட்டேன். ஆனால் தோட்டத்துக்குள் நான் குதித்தது ஒரு குற்றத்தைச் செய்துவிட்டதைப் போல என்னைத் துன்புறுத்தியது. அவர் இனி என்னை மதிக்க மாட்டார், என்னிடம் கோபமாக இருக்கிறார் என்று எனக்குத் தோன்றியது.

மாலையுணவுக்குப் பிறகு நான் பியானோவை நோக்கிச் சென்றேன். அவர் என்னைப் பின் தொடர்ந்தார்.

''ஏதாவதொரு பாட்டை வாசி'' என்று நடைக் கூடத்தில் என்னை முந்திக் கொண்டு கூறினார். ''உன் பாட்டைக் கேட்டு நெடுங் காலமாகிவிட்டது.''

''ஸெர்கேய் மிஹாய்லவிச்... நான் பாட

விரும்புகிறேன்'' என்று நான் அவரை நேருக்கு நேராகப் பார்த்துக் கொண்டு திடீரென்று கூறினேன். ''என் மீது உங்களுக்குக் கோபமில்லையே?''

''நான் எதற்காகக் கோபமடைய வேண்டும்?''

''ஏனென்றால் மதிய உணவுக்குப் பிறகு உங்கள் பேச்சை நான் கேட்கவில்லை'' என்று நான் நாணத்தோடு கூறினேன்.

அவர் என்னைப் புரிந்து கொண்டார், சிரித்தபடியே தலையை அசைத்தார். உன்னைத் திட்ட வேண்டும், ஆனால் அதைச் செய்ய எனக்கு மனமில்லை என்று அவர் பார்வை கூறியது.

''அப்படியானால் எல்லாம் சரியாகிவிட்டது. நாம் மறுபடியும் நண்பர்களாகிவிட்டோம்'' என்று பியானோவுக்கு முன்னால் உட்கார்ந்து கொண்டு நான் கூறினேன்.

''அப்படித்தான் நினைக்கிறேன்'' என்று அவர் பதிலளித்தார்.

அந்தப் பெரிய, உயரமான உட்கூரையைக் கொண்ட உபசரிப்பு அறையில் பியானோ வாத்தியத்தின் மேல் மட்டும் இரண்டு மெழுகு வர்த்திகள் எரிந்து கொண்டிருந்தன. அந்த அறையின் மற்ற எல்லாப் பகுதிகளும் அரை-இருளில் மூழ்கியிருந்தன. தெளிவான, ஒளிமயமான கோடைக்கால இரவு திறந்த சன்னல்களின் வழியாக எட்டிப் பார்த்தது. இருண்ட நடைக் கூடத்தில் மரப்பலகைகள் காதியாவின் காலடியில் கிறீச்சிட்டன. சன்ன

லுக்கு வெளியே ஸெர்கேய் மிஹாய்லவிச்சின் குதிரை கனைத்துக் கொண்டும் தரையில் கால்களை ஓங்கி உதைத்துக் கொண்டும் இருந்தது. இவற்றைத் தவிர எங்கும் அமைதியாக இருந்தது. அவர் எனக்குப் பின்னால் உட்கார்ந்திருந்தபடியால் நான் அவரைப் பார்க்க முடியவில்லை. ஆனால் நிழலுருவங்களைக் கொண்ட அந்த அறையில் எங்குமே—இசையில், என்னிடத்தில்—அவர் நிறைந்திருப்பதை நான் உணர்ந்தேன். அவருடைய ஒவ்வொரு பார்வைக்கும் அசைவுக்கும்—நான் அவற்றைப் பார்க்க முடியவில்லை என்ற போதிலும்—என் இதயம் பதிலளித்தது. நான் பியானோவில் மோஸார்த்தின் ஃபான்டாஸியா சொனாட்டாவை வாசித்தேன். அவர்தான் அதை எனக்காகக் கொண்டு வந்து கொடுத்தார். அவர் திரும்பியதிலிருந்து அவருக்காகவே நான் அதைப் பழகிக் கொண்டிருந்தேன். என்னுடைய வாசிப்பைப் பற்றி நான் நினைக்கவேயில்லை. ஆனால் நான் நன்றாக வாசித்ததாகத் தோன்றுகிறது. அவர் மகிழ்ச்சியோடிருப்பதாக எனக்குத் தோன்றியது. அவருக்கு ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியை நான் உணர்ந்தேன். அவர் என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறார் என்பதை அவரைப் பார்க்காவிட்டாலும் நான் புரிந்து கொண்டேன். முற்றிலும் தற்செயலாக, சுய உணர்வு இல்லாமல் பியானோவின் மேல் என் விரல்களைத் தொடர்ந்து அசைத்துக் கொண்டிருக்கும் பொழுது நான் தானாகவே திரும்பி அவரைப் பார்த்தேன். நிலவு பிரகாசமாக

இருந்த இரவின் பின்னணியில் அவர் தலை எடுப்பாகத் தெரிந்தது. முகவாயைக் கைகளில் தாங்கிக் கொண்டு அவர் என்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய கண்கள் பிரகாசமாகத் தெரிந்தன. வாசிப்பை நிறுத்திவிட்டு அவரைப் பார்த்துப் புன்னகை செய்தேன். அவரும் இளநகை புரிந்தார். பிறகு இசைப் புத்தகத்தைச் சுட்டிக் காட்டித் தொடர்ந்து வாசிக்கும்படி தலையை ஆட்டினர். நான் அந்த ராகத்தை வாசித்து முடித்த பொழுது நிலா வானத்தில் மேலே ஏறியிருந்தது. மெலிதான மெழுகுவர்த்தி வெளிச்சத்துக்குத் துணையாக வெள்ளியை உருக்கிக் கொட்டியதைப் போன்ற வேறு விதமான பிரகாசம் சன்னல் வழியாக உள்ளே வந்து மரப்பலகை மீது விழுந்தது. நான் முக்கியமான இடத்தில் வாசிப்பை நிறுத்தியது தப்பு என்றும் மோசமாக வாசித்ததாகவும் காதியா கூறினள். அதற்கு மாருக, நான் அதற்கு முன்பு அவ்வளவு சிறப்பாக வாசித்ததில்லை என்று அவர் கூறினர். அவர் அறைகளுக்குள் சுற்றிவரத் தொடங்கினர்; இருண்டிருந்த நடைக் கூடத்துக்கும் உபசரிப்பு அறைக்குமிடையே முன்னும் பின்னும் போய்க் கொண்டிருந்தார், அவ்வப்பொழுது நின்று என்னைப் பார்த்துச் சிரிப்பார். நானும் புன்னகை செய்தேன். இன்று நடைபெற்ற ஒன்று (அது இன்று மட்டும், இப்பொழுது மட்டும் இந்தக் கணத்தில் மட்டும் நடைபெற்றது) எனக்கு அதிகமான மகிழ்ச்சியைக் கொடுத்த

படியால் நான் சிரிக்க விரும்பினேன் என்பது உண்மையே. அவர் வெளியே சென்றவுடனே காதியாவின் கழுத்தைச் சுற்றி என் கைகளைப் போட்டுக் கொண்டு (நாங்களிருவரும் பியானோவுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தோம்) அவளுடைய மென்மையான முகவாயின் கீழ் எனக்குப் பிரியமான அந்த இடத்தில் முத்தமிடத் தொடங்குவேன். அவர் திரும்பியவுடன் நான் சிந்திப்பது போல முகத்தை மாற்றிக் கொள்ள முயற்சி செய்வேன். ஆனால் சிரிக்காமலிருக்க நான் இவ்வளவு தான் செய்ய முடியும்.

''இன்று ஏன் இப்படி இருக்கிறாள்?'' என்று காதியா அவரிடம் கேட்டாள்.

அவர் பதிலளிக்கவில்லை. என்னைப் பார்த்துச் சிரித்தார்—என்ன நடந்தது என்று அவருக்குத் தெரியும்.

''என்ன அழகான இரவு!'' என்று தோட்டத்தை நோக்கியிருந்த பால்கனியின் திறந்த கதவுக்கு முன்னால் நடைக்கூடத்தில் நின்று கொண்டு ஆச்சரியமாகச் சொன்னார்...

நாங்கள் அவரை நோக்கிச் சென்றோம். அது உண்மையிலேயே அற்புதமான இரவு. அதற்குப் பிறகு அப்படிப்பட்ட இரவை நான் ஒரு போதும் பார்க்கவில்லை. எங்களுக்குப் பின்னால், நாங்கள் பார்க்க இயலாதபடி முழு நிலா வீட்டின் மேல் பிரகாசித்தது. கூரை, தூண்கள், வராந்தாப் பந்தல் ஆகியவற்றின் நிழல்கள் மணற்பாதைகளிலும் மலர்ப்படுகைகளிலும் சரிவாக விழுந்தன. மற்ற எல்லா இடங்களிலும்

பனித்துளியும் நிலாக் கதிர்களும் சேர்ந்து வெள்ளியைப் போலத் தோன்றிய ஒளி வெள்ளம் பாய்ந்தது. தாஹ்லியா செடிகள் மற்றும் அதற்கு ஆதரவாக, ஒரு பக்கச் சாய் வாக நடப்பட்டிருந்த குச்சிகளின் நிழல்கள் விழுந்து கொண்டிருந்த பூச்செடிகளுக்கு நடுவி லிருந்த அகன்ற பாதை நிலா ஒளியில் மினு மினுத்துக் கொண்டிருந்த அதன் சமதளமில் லாத சரளைப் பரப்பை வெகு தூரத்துக்கு அப்பாலிருந்த, பளபளப்பும் குளிர்ச்சியும் கலந்த மூடுபனிக்குள் அனுப்பியது. மரங் களின் வழியாகத் தோட்டவீட்டின் பளபளப் பான கூரை தெரிந்தது. மலையிடுக்கிலிருந்து மூடுபனி பரவிக் கொண்டிருந்தது. ஏற்கென வே இலைகள் உதிர்ந்து கொண்டிருந்த மலர்ப் புதர்களிலிருந்த ஒவ்வொரு குச்சியும் பள பளப்பாக இருந்தது. தோட்டத்திலிருந்த, மூடு பனியில் நனைந்த ஒவ்வொரு மலரும் தனியாகத் தெரிந்தது. பாதைகளில் ஒளியும் நிழலும் கூடிக் கலந்தபடியால் மரங்கள் அதிசயமான வீடுகளைப் போலத் தோன்றின. வலது பக்கத் தில் வீட்டு நிழல் கறுப்பாக, ஒதுக்கமாக, அச்சமூட்டுவதாகத் தெரிந்தது. இந்த நிழலில் உயரமாக நீட்டிக் கொண்டிருந்த போப் லார் மரத்தின் இலைகளடர்ந்த உச்சி மிகவும் பிர காசமாகத் தோன்றியது. ஏதோ ஒரு விசித்திர மான காரணத்துக்காக அது வானத்தின் நீல நிறத்தில் கலந்துவிடாமல் வீட்டுக்கு மேலேயி ருந்த பிரகாசமான வெளிச்சத்தில் தனியாகத் தொங்கியது.

''நாம் உலாவிவிட்டு வரலாமா?'' என்று நான் கேட்டேன்.

காதியா சரி என்றுள். ஆனுல் நான் உயர்ந்த ரப்பர் காலணிகளே அணிந்து கொள்ள வேண்டும் என்றுள்.

''எனக்கு அவை அவசியமல்ல. ஸெர்கேய் மிஹாய்லவிச்சின் கையைப் பிடித்துக் கொள் வேன்'' என்று நான் கூறினேன்.

அவர் கையைப் பிடித்துக் கொண்டால் என் கால்கள் ஈரமாகாமல் தடுத்துவிட முடியுமா? என் பேச்சு விசித்திரமானதே. ஆனுல் நாங் கள் மூவரும் அதைப் புரிந்து கொண்டோம். என் பேச்சில் விசித்திரமாக எதுவும் இருப்ப தாக நினைக்கவில்லே. அவர் அதற்கு முன்பு நான் பிடித்துக் கொள்ளுமாறு என்னிடம் கையைக் கொடுத்ததில்லே. ஆனுல் இன்று மாலேயில் நானே அவர் கையைப் பிடித்துக் கொண்டேன், அவர் அதைப் புதுமையாகக் கருதவில்லே. நாங்கள் மூவரும் வராந்தாவிலி ருந்து கீழே இறங்கினேம். வானம், தோட் டம், காற்று—இந்த உலகம் முழுவதுமே அது வரை எனக்குத் தெரிந்த எல்லாவற்றிலிருந் தும் வேறுவிதமாகத் தோன்றின.

நாங்கள் நடந்து போய்க் கொண்டிருந்த பாதையின் முன்னுல் பார்த்த பொழுது அந்தப் பாதையில் இனி மேலும் போக முடியாது, சாத் தியமான உலகம் இங்கே முடிந்துவிட்டது, அதற்கு அப்பாலிருப்பது அதன் சௌந்தரியத் தில் நிரந்தரமாகப் பூட்டி வைக்கப்பட்டிருப் பது உறுதியே என்று நான் உணர்ந்தேன்.

ஆனால் நாங்கள் முன்னே நடந்த பொழுது சௌந்தரியத்தின் மந்திரச் சுவர்கள் திறந்து எங்களை அனுமதித்துக் கொண்டன. எங்களுக்கு மிகவும் அறிமுகமான தோட்டமும் அதன் மரங்களும் பாதைகளும் காய்ந்து போன இலைகளும் அங்கேயும் இருக்கின்றன எனத் தோன்றியது. நாங்கள் உண்மையிலேயே அந்தப் பாதைகளில் நடந்துகொண்டிருக்கிறோம், ஒளி மற்றும் நிழல் வட்டங்களைத் தாண்டு கிறோம், காய்ந்து போன இலைகள் எங்கள் காலடிகளுக்குக் கீழ் உண்மையிலேயே சல சலக்கின்றன, இப்பொழுது என் முகத்தில் உர சியது உண்மையிலேயே ஒரு குளிர்ச்சியான மரக் கிளைதான். என் கையை கவனமாகப் பிடித்துக் கொண்டு எனக்குப் பக்கத்தில் மென்மையான, நிதானமான காலடிகளோடு நடந்து வரு வது உண்மையிலேயே அவர்தான். எனக்குப் பக்கத்தில் மணற்பாங்கான பூமியைக் கால் களால் நெரித்து நடப்பது உண்மையிலேயே காதியாதான். அசைவே இல்லாதிருந்த மரக்கிளை களின் ஊடே எங்கள் மீது பிரகாசித்தது வானத்திலிருக்கும் நிலாவாக மட்டுமே இருக்க முடியும்...

ஆனால் ஒவ்வொரு காலடிக்குப் பிறகும் மந் திரச் சுவர்கள் எங்களுக்கு முன்னாலும் பின் னாலும் மறுபடியும் மூடிக் கொண்டன. நாங் கள் மேலும் தொடர்ந்து நடக்க முடியும் என்று நான் நம்பிக்கொண்டிருந்ததைக் கைவிட்டேன், எல்லா நம்பிக்கைகளையும் கைவிட்டேன்.

''ஐயோ! ஒரு தேரை!'' என்று காதியா கத்தினுள்.

''யார் பேசினுர்கள், ஏன்?'' என்று நான் அதிசயித்தேன். காதியாதான் பேசினுள், அவள் தேரைகளைக் கண்டால் பயப்படுவாள் என்று பிறகு நினைவுபடுத்திக் கொண்டேன். ஒரு சிறிய தேரை எனக்கு முன்னுல் துள்ளிக்குதித்து அந்த இடத்திலேயே உட்கார்ந்திருந்தது. பாதையிலிருந்த பிரகாசமான மணலில் அது சிறிய, கறுப்பு நிழலை ஏற்படுத்தியது.

''உனக்கு பயமில்லையா?'' என்று அவர் கேட்டார்.

நான் அவரை ஏறிட்டுப் பார்த்தேன். அந்த இடத்தில் மரங்களின் வரிசையில் இடைவெளி இருந்த படியால் அவர் முகம் எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. எவ்வளவு அழகான முகம்! எவ்வளவு மகிழ்ச்சி!..

''உனக்கு பயமில்லையா?'' என்று தான் அவர் கேட்டார். ஆனுல் ''அன்பே! நான் உன்னைக் காதலிக்கிறேன்!'' என்று அவர் சொன்னதைப் போல எனக்குக் கேட்டது. அவருடைய பார்வையும் கரமும் ''நான் உன்னைக் காதலிக்கிறேன்!'' என்று திரும்பக் கூறின. ஒளியும் நிழலும் காற்றும், அனைத்துமே அந்த வார்த்தைகளை மறுபடியும் உச்சரித்தன.

நாங்கள் தோட்டம் முழுவதையும் சுற்றினேம். காதியா சிரமத்தோடு மூச்சு விட்டபடியே எங்களுக்குப் பக்கத்தில் மெதுவாக நடந்து வந்தாள். அவள் களைப்படைந்துவிட்டாள். நேரமாகிவிட்டது, திரும்புவோம் என்

ருள். நான் அவளுக்காக வருத்தப்பட்டேன். ''நம்மைப் போல அவள் உணரவில்லையே, அது ஏன்?'' என்று வியந்தேன். ''இந்த இரவைப் போல அவரையும் என்னையும் போல, நாம் எல்லோரும் இளமையாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்க முடியாதது ஏன்?''

நாங்கள் வீட்டுக்குத் திரும்பினோம். ஆனால் வெகு நேரம் வரையிலும் அவர் போகவில்லை. காகங்கள் கரைந்தன; வேலைக்காரர்கள் எல்லோரும் தூங்கப் போய்விட்டார்கள்; சன்னலுக்குக் கீழே கட்டப்பட்டிருந்த அவருடைய குதிரை தரையை ஓங்கிமிதித்துக் கொண்டும் கோபத்தோடு சீறிக் கொண்டுமிருந்தது. காதியா எங்களிடம் நேரத்தை நினைவுபடுத்தவில்லை. நாங்கள் மிகச் சாதாரணமான விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். இரண்டு மணியாகின்ற வரை நேரத்தை கவனிக்கவில்லை. காகங்கள் மூன்றாவது முறையாகக் கரைந்தன. அவர் புறப்பட்டுச் சென்ற பொழுது கதிரவன் கீழ்வானத்தில் உதயமாகி விட்டான். அவர் எப்பொழுதும் போலவே அன்றும் விடைபெற்றுக் கொண்டார். அவருடைய வார்த்தைகளுக்குக் குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் எதுவுமில்லை. ஆனால் அன்று முதல் அவர் என்னுடையவர், அவரை நான் ஒருக்காலும் இழக்க மாட்டேன் என்பதை நான் புரிந்து கொண்டேன். அவரைக் காதலிப்பதாக நான் என் மனதில் ஒத்துக் கொண்ட உடனே காதியாவிடம் எல்லாவற்றையும் சொல்லி விட்டேன். அவள் மகிழ்ச்சியடைந்தாள். நான்

காட்டிய நம்பிக்கை அவளை நெகிழச் செய்தது. ஆனால், பாவம், அவள் அந்த இரவில் தூங்கினாள். நானோ வெகு நேரம் வரை வராந்தாவில் நடந்து கொண்டிருந்தேன். பிறகு தோட்டத்துக்குச் சென்றேன். நாங்களிருவரும் நடந்து சென்ற பாதைகளில், அவருடைய ஒவ்வொரு வார்த்தையையும் அசைவையும் நினைவு கூர்ந்தபடியே நான் நடந்து சென்றேன். அன்றிரவு முழுவதும் நான் தூங்கவில்லை. என் வாழ்க்கையில் முதல் தடவையாகப் புலர் காலையைப் பார்த்தேன். அப்படிப்பட்ட இரவை, அத்தகைய புலர்காலையை நான் அதற்குப் பிறகு ஒருபோதும் பார்க்கவில்லை. ''நான் உன்னைக் காதலிக்கிறேன் என்று அவர் சொல்லாமலிருப்பது ஏன்?'' என்று வியந்தேன். ''எல்லாமே சுலபமாகவும் அழகாகவும் இருக்கக்கூடிய சமயத்தில் அவர் கஷ்டங்களைப் பற்றி ஏன் நினைக்க வேண்டும், தன்னைக் கிழவர் என்று ஏன் சொல்ல வேண்டும்? இந்தப் பொன்னான நேரத்தை அவர் இழப்பது ஏன்? இது மறுபடியும் வரப்போவதில்லையே. 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று அவர் சொல்லட்டும். அவருடைய வார்த்தைகளில் அதைச் சொல்லட்டும். என் கையைப் பிடித்துக் கொண்டு, அவர் தலையைக் கைகளின் மேல் குனிவாக வைத்து 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று சொல்லட்டும். அவர் என்னிடம் வெட்கமடைந்து, கண்களைக் கீழே தாழ்த்திக் கொள்ளட்டும். அதற்குப் பிறகு நான் அவரிடம் எல்லாவற்றையும் சொல்வேன். அல்லது

ஒன்றுமே பேச மாட்டேன். என் கைகளால் அவரைத் தழுவி என் உடலோடு அணைத்துக் கொண்டு கதறியழுவேன்.'' இந்த சமயத்தில் திடீரென்று ஒரு எண்ணம் எனக்கு ஏற்பட்டது: ''நான் அவரைத் தவருகப் புரிந்து கொண்டிருந் தால்? அவர் என்னைக் காதலிக்கவில்லையோ என்னவோ?''

இந்த எண்ணம் எனக்கு பயத்தைக் கொடுத் தது. ஐயோ! எத்தகைய துன்பங்கள் எனக்கு ஏற்படப் போகின்றனவோ? நான் தோட்டச் சுவரின் மேலிருந்து கீழே குதித்த பொழுது அவருக்கும் எனக்கும் ஏற்பட்ட சங்கடத்தை நினைவுபடுத்திக் கொண்டேன். என் இதயம் கனத்தது; என் கண்களில் நீர்த்துளிகள் திரண் டன. நான் பிரார்த்தனை செய்யத் தொடங் கினேன். பிறகு ஒரு விசித்திரமான, ஆறுத லான எண்ணம், ஒரு நம்பிக்கை எனக்கு ஏற் பட்டது. உண்ணு நோன்பிருப்பது, என் பிறந்த நாளின் போது யூகரிஸ்தைப் பெறுவது, அதே நாளன்று அவருக்குத் திருமணம் நிச்சயிக்கப் பட்ட பெண்ணுவது என்று நான் முடிவு செய் தேன்.

அந்தத் தருணத்திலிருந்து அது தான் சரி யென்று நான் நம்பினேன், அவ்வாறே அறிந் தேன். அது ஏன் என்று எனக்குத் தெரியாது. நான் என்னுடைய அறைக்குத் திரும்பிய பொழுது ஏற்கெனவே காலைப் பொழுது தொடங்கிவிட்டது, வேலைக்காரர்கள் எழுந்து வந்து கொண்டிருந்தார்கள்.

# 4

அது உஸ்பேன்ஸ்கி விழாக்காலம் என்பதால் நான் உண்ணு நோன்பிருக்க முடிவு செய்ததைப் பற்றி யாரும் ஆச்சரியமடையவில்லை.

அந்த வாரம் முழுவதுமே அவர் ஒரு தடவை கூட எங்களைப் பார்க்க வரவில்லை. ஆனால் நான் அதைப் பற்றி ஆச்சரியப்படவில்லைஅல்லது கவலைப்படவில்லை. அவர் மீது ஆத்திரப்படவு மில்லை. அதற்கு மாறாக, அவர் வராததைப் பற்றி மகிழ்ச்சி அடைந்தேன். என்னுடைய பிறந்த நாள் விழாவுக்கு மட்டுமே அவருடைய வருகையை எதிர்பார்த்தேன். அந்த வாரம் முழுவதுமே ஒவ்வொரு நாளும் அதிகாலையில் நான் எழுந்தேன். அவர்கள் குதிரைகளைத் தயார் செய்து கொண்டிருக்கும் பொழுது நான் தனியாகத் தோட்டத்தில் உலாவுவேன். முந்திய நாளன்று என்னுடைய பாவச் செயல் களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டும் ஒரு பாவம் கூடச் செய்யாமல் புதிய நாளைக் கழிப் பது எப்படி, முற்றிலும் அதில் திருப்தியடை வது எப்படி என்றும் சிந்திப்பேன். முற்றிலும் பாவம் செய்யாமல் இருப்பது அந்த சமயத்தில் எனக்குச் சுலபமாகத் தோன்றியது. ஒருவர் சிறிதளவு முயற்சி செய்தால் போதும், அப்படி இருக்க முடியும் என்று நினைத்தேன். குதிரை வண்டியைக் கொண்டு வந்து நிறுத்தியதும் நான் காதியா அல்லது வேறு யாராவதொரு பெண்ணுடன் வண்டியில் ஏறி உட்காருவேன். நாங்கள் மூன்று வெர்ஸ்டாக்கள் தூரத்தில்

உள்ள மாதாகோவிலுக்குச் செல்வோம். ஒவ் வொரு தடவை நான் உள்ளே நுழைகின்ற பொழுதும் ''தங்கள் இதயங்களில் கடவுளைப் பற்றிய அச்சத்தோடு நுழைபவர்கள் ஆசி பெறுவார்கள்'' என்று என்னுடைய மனதுக் குள் சொல்லிக் கொள்வேன். புல் வளர்ந்திருக் கும் இரண்டு படிகளில் அந்த உணர்ச்சியோடு கால் வைக்க முயற்சி செய்வேன். அந்த நேரத் தில் மாதாகோவிலைச் சுற்றியுள்ள விவசாயி கள் மற்றும் பண்ணையடிமைகளில் ஒரு டஜனுக் கும் அதிகமில்லாத கடவுள் பக்தியுள்ள பெண் கள் தான் அங்கே வந்திருப்பார்கள். அவர்களு டைய வணக்கங்களை அடக்கத்தோடு திருப்பிச் செலுத்த நான் முயற்சி செய்தேன். மாதா கோவிலின் மூப்பரான வயோதிகப் படைவீர ரிடம் மெழுகுவர்த்திகளை வாங்குவதற்காக அந்தக் கூண்டுக்கு நானே செல்வேன் (இது மிகவும் பாராட்டுக் குரியது என்று கருதினேன்). அந்த மெழுகுவர்த்திகளைத் தெய்வ வடிவங் களுக்கு முன்னால் ஏற்றி வைப்பேன். என் தாயார் சித்திர வேலைப்பாடு செய்த பலி பீடத் துணி புனிதக் கதவுகளின் வழியாகத் தென் படும். அங்கே தெய்வ வடிவங்கள் தொங்க விடப்பட்டிருக்கும் இடத்தில் மரக்கட்டையி னால் செய்யப்பட்ட இரண்டு தேவதைகள்—அவற்றின் தலைகளுக்கு மேல் நட்சத்திரங்கள் ஒளி வீசும்—இருந்தன. நான் சிறுமியாக இருந்த பொழுது அந்த தேவதைகள் மிகவும் பெரிய வை என்று நினைத்தேன். மஞ்சள் ஒளிவட்டத் தோடு கூடிய புறு எப்பொழுதும் என்னுடைய

கவனத்தை ஈர்த்திருக்கிறது. சிறுவர் இசைக் குழுவுக்கு அப்பால் எங்கள் பண்ணையடிமைகளின் குடும்பங்களைச் சேர்ந்த ஏராளமான குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் செய்வதற்குப் பயன்படுகின்ற நெளிந்து போன புனிதக்கலம் என் கண்களில் தென்பட்டது. எனக்கும் அதில் தான் ஞானஸ்நானம் நடைபெற்றது. முதியவரான போதகர் என் தகப்பனுருடைய சவப் பெட்டியைப் போர்த்தியிருந்த துணியில் தைக்கப்பட்ட மேலங்கியை அணிந்து கொண்டுவந்தார். எங்கள் வீட்டில் நடைபெற்ற தோத்திரங்களைப் படிக்கும் நிகழ்ச்சிகளில் (ஸோனியாவுக்குப் பெயர் சூட்டல், என் தகப்பனுருடைய ஆவி அமைதியடைவதற்கான வழிபாடு மற்றும் என் தாயாரின் சவ அடக்கம்) அவர் எப்பொழுதும் உபயோகிக்கும் அதே குரலில் வழிபாட்டை நடத்தினார். இசைக் குழுவிலிருந்து மாதா கோவில் அலுவலரின் அதே ஒடுங்கிய குரல் கேட்டது. அதே கூனலான கிழவி சுவருக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள். ஒவ்வொரு வழிபாட்டின் போதும் அவள் மாதா கோவிலில் இருப்பது என் நினைவுக்கு வந்தது. அவள் தன் கண்ணீர் மல்கிய கண்களால் தெய்வவடிவத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்; மூன்று விரல்களால் கைக்குட்டையை அழுத்திக் கொண்டு சிலுவைக் குறியிட்டாள். பற்களே இல்லாத அவளுடைய வாய் இடைவிடாமல் அசைந்து கொண்டிருந்தது. இவையனைத்தும் இனிமேல் எனக்குப் புதுமையானவை அல்ல. அவை என்னிடம் ஏற்படுத்திய நினைவுகளுக்

காக மட்டும் நான் அவற்றை நேசிக்கவில்லை. அவை என் கண்களுக்கு முன்னால் மிகவும் பெரிய, புனிதமான ஏதோ ஒன்றாக, ஆழமான முக்கியத்துவம் உடையவையாகத் தோன்றின. வழிபாட்டுத் தோத்திரங்களின் ஒவ்வொரு வார்த்தையையும் நான் கவனமாகக் கேட்டு அவற்றின் உணர்ச்சியில் ஒன்றி விட முயற்சி செய்தேன். எனக்குப் புரியாத இடங்களில் அறிவு புகட்டுமாறு கடவுளைக் கேட்டுக் கொண்டேன். தோத்திரங்கள் என் காதுக்குக் கேட்காத பொழுது சொந்தமாக நானே தோத்திரங்களை அமைத்துக் கொண்டேன். தவறுகளுக்கு மன்னிப்புக் கோரும் தோத்திரங்களை வாசித்த பொழுது என்னுடைய கடந்த காலத்தை நான் நினைவுபடுத்திக் கொண்டேன். குழந்தைத் தனமான, குற்றமில்லாத அந்தக் கடந்த காலம் தற்பொழுது என்னுடைய அருட்பேற்றுடன் ஒப்பிடும் பொழுது மிகவும் மோசமானதாகத் தோன்றிய பொழுது நான் என்னைப் பற்றி அருவருப்படைந்தேன். அதே சமயத்தில் எல்லாமே மன்னிக்கப்படும், இன்னும் அதிகமான பாவங்களைச் செய்திருந்தால் கூட அவற்றுக்காக வருந்தி மன்னிப்புக் கோருவது மேலும் இனிமையாக இருக்கும் என்று நான் உணர்ந்தேன். வழிபாட்டின் முடிவில் ''கடவுள் உம்மை ஆசீர்வதிக் கட்டும்'' என்று போதகர் கூறிய பொழுது அது எனக்கு ஒரு வகையான உடல் நல உணர்ச்சியைத் தெரிவிப்பதைப் போலத் தோன்றியது. ஒளியும் சுகமும் என் இதயத்துக்குள் நுழைந்த மாதிரித் தோன்றியது. வழிபாடு

முடிந்ததும் போதகர் என்னிடம் வந்து மாலே நேர வழிபாட்டுக்கு வீட்டுக்கு வர வேண்டுமா, எந்த நேரத்துக்கு வர வேண்டும் என்று கேட்டார். அவருடைய அன்புக்கு மிகவும் நன்றி தெரிவித்துவிட்டு நானே அவரிடம் வருவதாக பதிலளித்தேன்.

''இங்கே வருகின்ற சிரமத்தை எடுத்துக் கொள்ள விரும்புகிறீர்களா?'' என்று அவர் கேட்டார்.

பெருமையின் மூலம் பாவஞ் செய்யாதபடி அவருக்கு எப்படி பதிலளிப்பதென்று எனக்குத் தெரியவில்லே.

இறுதியுணவு வழிபாட்டுக்குப் பிறகு—காதியா என்னேடு இல்லேயென்முல்—நான் குதிரைகளே வீட்டுக்கு அனுப்பிவிட்டுத் தனியாக நடந்து திரும்புவேன். வழியில் பார்க்கின்ற ஒவ்வொருவரையும் பணிவோடு குனிந்து வணங்குவேன்; பிறகு, உதவி செய்ய வேண்டும், அறிவுரை கூற வேண்டும், யாருக்காகவாவது என்னேத் தியாகம் செய்ய வேண்டும் என்று என்னிடம் ஏற்பட்ட பேரார்வம் வழியில் பாரத்தைத் தூக்க அல்லது ஒரு குழந்தையைத் தாலாட்ட அல்லது மற்றவர்களுக்கு வழி விடுவதற்காகச் சேற்றிலே இறங்கும்படி என்னே இட்டுச் சென்றது. ஒரு நாள் எங்களுடைய விவசாயிகளில் ஒருவஞன ஸெமியோன் தன் மகளுக்கு சவப்பெட்டி செய்வதற்குச் சில பல கைகளும் சவ அடக்கச் செலவுக்கு ஒரு ரூபிள் பணமும் கேட்டதாக மணியக்காரர் காதியாவிடம் சொல்லிக் கொண்டிருப்பதை நான்

கேட்டேன். அவனுக்குப் பலகையும் பணமும் கொடுத்ததாக அவர் கூறினர். ''அவர்கள் அவ் வளவு ஏழைகளா?'' என்று நான் கேட்டேன். ''மிகவும் ஏழைகள், அம்மா! அவர்களால் உப்புக் கூட வாங்க முடியாது'' என்று அவர் பதிலளித்தார். என் இதயத்தில் வலி ஏற்படு வதை நான் உணர்ந்தேன். ஆனல் ஒரு வகை யில் அது எனக்கு மகிழ்ச்சியையும் கொடுத்தது. காதியாவை ஏமாற்றுவதற்காக உலாவப் போவதாகச் சொல்லிவிட்டு நான் மாடிக்கு ஓடினேன். என்னிடமிருந்த பணம் முழுவதை யும் எடுத்துக் கொண்டேன் (என்னிடம் அதிக மான பணம் கிடையாது, எனினும் இருந்ததை யெல்லாம் எடுத்துக் கொண்டேன்). சிலுவைக் குறியிட்டுக் கொண்டு யாருடைய கண்ணிலும் படாமல் வராந்தாவுக்கு வந்து தோட்டத்தின் வழியாக கிராமத்துக்குச் சென்றேன். ஸெமி யோனுடைய குடிசை கிராமத்தின் கடைசியி லிருந்தது. நான் சன்னலுக்கருகே போவதை யும் சன்னல் பலகையின் மீது பணத்தை வைப் பதையும் பிறகு கதவைத் தட்டுவதையும் ஒரு வரும் பார்க்கவில்லை. குடிசையிலிருந்து யாரோ வெளியே வந்த பொழுது கதவு கிறீச்சிட்டது. என் உடல் குளிர்ந்து, பயமேற்பட்டு நான் நடுங்கிக் கொண்டே குற்றவாளியைப் போல வீட்டுக்கு ஓடிவந்தேன். நான் எங்கே போயிருந் தேன், ஏன் இப்படி ஓடி வருகிறேன் என்று காதியா என்னைக் கேட்டாள். ஆனல் அவள் என்ன சொல்லிக் கொண்டிருக்கிருள் என்பதை என்னல் புரிந்து கொள்ளக் கூட முடியவில்லை.

பதிலும் சொல்லவில்லை. மற்ற எல்லாமே திடீ ரென்று மிகச் சாதாரணமாக, அற்பமாகத் தோன்றின. அறைக்குள் சென்று கதவைப் பூட்டிக் கொண்டு வெகு நேரம் வரை நடந் தேன். என்னுல் ஒன்றுமே செய்ய முடியவில்லை, சிந்தனைகளை ஒருங்கே சேர்க்க முடியவில்லை அல்லது எனக்கு என்ன ஏற்பட்டுக் கொண்டி ருக்கிறது என்பதை உணரக் கூட முடியவில்லை. ஸெமியோனுடைய குடும்பம் எவ்வளவு மகிழ்ச்சி அடையும், பணம் வைத்துவிட்டுப் போன நபரிடம் எவ்வளவு நன்றி பாராட்டும் என்று நினைத்தேன். என் கைகளாலேயே அவர் களிடம் பணத்தைக் கொடுக்கவில்லையே என்று வருந்தினேன். நான் செய்த காரியம் ஸெர்கேய் மிஹாய்லவிச்சுக்குத் தெரிந்தால் அவர் என்ன கூறுவார் என்று சிந்தித்தேன். யாருமே தெரிந்து கொள்ள முடியாது என்பதைப் பற்றி ஆனந்தமடைந்தேன். எனக்கு அதிகமான மகிழ்ச்சி ஏற்பட்டது, என்னையும் சேர்த்து எல் லோருமே மோசமானவர்களாகத் தோன்றினர் கள். நான் என்னைப் பற்றி, மற்ற எல்லோரை யும் பற்றி மிகவும் அடக்கத்தோடு நினைத்த படியால் மரணத்தைப் பற்றிய சிந்தனை எனக்கு ஒரு ஆனந்தமான கனவாக வந்தது. நான் சிரித்தேன், பிரார்த்தனை செய்தேன், கண்ணீர் வடித்தேன். அந்தக் கணத்தில் உலகத்திலுள்ள எல்லோரையும்—என்னையும் கூட—எவ்வளவு தீவிரத்தோடு, எவ்வளவு உணர்ச்சியோடு நான் நேசித்தேன்! வழிபாட்டுக்கு நடுவில் விவிலிய நூலைப் படித்தேன். நான் அதைக் கூடுதலாகப்

புரிந்து கொள்ள முடிந்தது. அந்த தெய்விக வாழ்க்கையின் கதை முன்னைக் காட்டிலும் எளிமையானதாகவும் அதிகமாக உள்ளத்தை உருக்குவதாகவும் மாறியது. அவருடைய போதனைகளில் நான் கண்ட ஆழமான சிந்தனையும் அன்பும் அதிகமான அளவுக்கு அச்சத்தைத் தூண்டுவதாக, ஆழம் காண முடியாததாக இருப்பதைக் கண்டேன். ஆனால் விவிலிய நூலை வைத்துவிட்டு என்னைச் சுற்றியுள்ள வாழ்க்கையை நான் மறுபடியும் ஆராய்ந்த பொழுது, அதைப்பற்றிச் சிந்தித்த பொழுது எல்லாமே எவ்வளவு சாதாரணமாகவும் எளிமையாகவும் எனக்குத் தோன்றியது. அறத்துக்கு மாறான முறையில் வாழ்க்கை நடத்துவது மிகவும் கடினமானதாகவும் எல்லோரையும் நேசிப்பதும் எல்லோராலும் நேசிக்கப் படுவதும் மிகச் சுலபமானதாகவும் தோன்றியது. எல்லோரும் என்னிடம் மிகவும் நன்றாக, அன்பாக நடந்து கொண்டார்கள். நான் தொடர்ந்து பாடம் சொல்லிக் கொடுத்துவந்த ஸோனியா கூட முற்றிலும் மாறிவிட்டாள். அவள் புரிந்து கொள்வதற்கு, எனக்குச் சங்கட மேற்படுத்தாமல் நான் விரும்பியதைச் செய்வதற்கு முயற்சி செய்தாள். நான் மற்றவர்களிடம் எப்படி நடந்து கொண்டேனோ அதே முறையில் ஒவ்வொருவரும் என்னிடம் நடந்து கொண்டார்கள். குறை ஏற்புக்கு முன்பாக நான் மன்னிப்புக் கேட்க வேண்டிய விரோதிகளைப் பற்றி நினைத்த பொழுது எங்கள் குடும்பத்துக்கு வெளியே ஒரே ஒரு நபரைப் பற்றித்தான்

நினைக்க முடிந்தது. அந்த நபர் ஒரு இளம் பெண், அடுத்த வீட்டில் வசிப்பவள். ஒரு வருடத்துக்கு முன்பு மற்ற விருந்தினர்களுக்கு முன்னால் நான் அந்தப் பெண்ணை ஏளனம் செய்து சிரித்தேன். அதன் காரணமாக அவள் எங்களைப் பார்க்க வருவதை நிறுத்திக் கொண்டாள். என்னுடைய தவறை ஒத்துக் கொண்டு மன்னிப்பளிக்குமாறு கேட்டு அவளுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அவளிடமிருந்து பதில் வந்தது. என்னை மன்னித்துவிட்டதாகவும் அது போலத் தன்னையும் மன்னிக்கும்படி கேட்டு அவள் எழுதியிருந்தாள். அந்தச் சாதாரண மான வரிகளைப் படிக்கும் பொழுது நான் ஆனந்தப் பெருக்கில் கண்ணீர் வடித்தேன்—அந்த சமயத்தில் அவை மிகவும் உருக்கமான வையாக எனக்குத் தோன்றின. என்னை மன்னிக்கும்படி என்னுடைய வயோதிகத் தாதியிடம் கூறிய பொழுது அவள் கண்ணீருகுத்தாள். ''இவர்கள் எல்லோரும் என்னிடம் ஏன் இவ்வளவு அன்பாக இருக்கிறார்கள்? இந்த அன்புக்குத் தகுதி உடையவளாவதற்கு நான் என்ன செய்திருக்கிறேன்?'' என்று என்னைக் கேட்டுக் கொண்டேன். பிறகு ஸெர்கேய் மிஹாய்லவிச்சை நினைத்துக் கொள்வேன். அவரைப் பற்றிச் சேர்ந்தாற் போல மணிக் கணக்காக நினைத்துக் கொண்டிருப்பேன். அப்படி நினைக்காதிருக்க என்னால் முடியவில்லை. அது பாவச் செயல் என்றும் நான் கருதவில்லை. ஆனால் அவரை நான் காதலிக்கிறேன் என்பதைத் தெரிந்து கொண்ட அந்த இரவில் அவரைப்

பற்றிச் சிந்தித்த முறையில் நான் நினைக்கவில்லை —நான் என்னைப் பற்றி நினைப்பதைப் போலவே அவரைப் பற்றிச் சிந்தித்தேன். என்னுடைய எதிர்காலத்தைப் பற்றிய ஒவ்வொரு சிந்தனையிலும் தானாகவே அவரைச் சேர்த்துக் கொண்டேன். அவரோடு நான் இருக்கும் பொழுது அவர் என்னிடம் ஏற்படுத்திய சர்வ வல்லமையான தாக்கம் இந்த சமயங்களின் போது முற்றிலும் மறைந்துவிட்டது. அவருக்குச் சமமாக என்னைக் கருதினேன். என்னுடைய ஆன்மிக எழுச்சியின் சிகரத்திலிருந்து அவரை முற்றிலும் சரியாகப் புரிந்து கொண்டேன். முன்பு எனக்கு விசித்திரமாகத் தோன்றியவை இத்தகைய தருணங்களில் தெளிவடைந்தன. மற்றவர்களுக்காக வாழ்க்கை நடத்துவது ஒன்றே உண்மையான மகிழ்ச்சி என்று அவர் கூறியது ஏன் என்பதைப் புரிந்து கொண்டேன். நான் அவரோடு முற்றிலும் உடன்பட்டேன். நாங்களிருவரும் நிரந்தரமாக அமைதியான மகிழ்ச்சியோடிருப்போம் என்பது எனக்கு உறுதியாகத் தெரிந்தது. நான் வெளிநாட்டுப் பயணங்களைப் பற்றி, உல்லாசத்தையும் பகட்டையும் பற்றிக் கனவு காணவில்லை. முற்றிலும் வேறுவிதமான வாழ்க்கையைப் பற்றியே கனவு கண்டேன். அது நாட்டுப் புறத்தில் அமைதியான குடும்ப வாழ்க்கை, ஒருவர் மற்றவருக்காகத் தொடர்ச்சியாக தியாகம் செய்கின்ற, அன்பு நிறைந்த வாழ்க்கை. அன்பும் உதவியும் நிறைந்த கடவுள் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்ற உணர்வு எப்பொழுதுமே இருக்கும் வாழ்க்கை.

என் பிறந்த நாளன்று நான் திட்டமிட்ட படியே யூகரிஸ்தைப் பெற்றேன். மாதாகோவிலிலிருந்து திரும்பிய பொழுது என்னுடைய இதயம் அதிகமான மகிழ்ச்சியில் திளைத்தபடியால்—என்னுடைய மகிழ்ச்சியை ஏதாவது குலைத்துவிடுமோ என்ற அச்சம் எனக்கு ஏற்பட்டது. நாங்கள் எங்கள் வீட்டு வாயிலில் வண்டியிலிருந்து இறங்கிய உடனே பாலத்தின் மீது வண்டி வந்து கொண்டிருக்கும் பழக்கமான சத்தம் கேட்டது. நான் ஸெர்கேய் மிஹாய்லவிச்சைப் பார்த்தேன். அவர் எனக்குப் பிறந்த நாள் வாழ்த்துக் கூறினார். நாங்கள் இருவரும் ஒன்றாகக் கூடத்துக்குள் சென்றோம். அன்று காலையில் அவருக்கு முன்பாக நான் அமைதியோடும் தன்னம்பிக்கையோடும் இருந்ததைப் போல அதற்கு முன்பு ஒருபோதும் இருந்ததில்லை. எனக்குள் ஒரு புதிய உலகமே இருக்கிறது, அதை அவர் புரிந்து கொள்ளவில்லை, அது அவருடைய உலகத்தைக் காட்டிலும் உயர்வானது என்பதை நான் உணர்ந்தேன். எனக்குக் கடுகளவுகூட சங்கட உணர்ச்சி ஏற்படவில்லை. இதன் காரணத்தை அவர் புரிந்து கொண்டிருக்க வேண்டும். ஏனென்றால் அவர் வழக்கத்துக்கு மாறான மென்மையோடும் அதிகமான மரியாதையோடும் என்னிடம் நடந்து கொண்டார். நான் பியானோவுக்கு முன்னால் இருந்தேன். அவர் அதைப் பூட்டி, சாவியைத் தன் பையில் வைத்துக் கொண்டார்.

''உன்னுடைய மனநிலையைக் கெடுத்து

விடாதே. இந்தத் தருணத்தில் உன்னுடைய ஆன்மாவில் நிறைந்திருக்கும் இசை உலகத்தில் வேறு எதைக் காட்டிலும் மிகச் சிறப்பானது'' என்றார்.

நான் நன்றி பாராட்டினேன். ஆனால் என்னுடைய ஆன்மாவிலிருக்கும் விஷயங்களை (அவை எல்லோரிடமிருந்தும் மறைக்கப் பட்டிருக்க வேண்டும்) அவர் மிகவும் சுலபமாகவும் சரியாகவும் புரிந்து கொண்டிருந்தது எனக்குச் சிறிது கவலையைத் தந்தது. விருந்தின் போது, எனக்குப் பிறந்த நாள் வாழ்த்துக் கூறுவதற்காக வந்ததாகவும் மறு நாள் மாஸ்கோவுக்குப் புறப்பட வேண்டியிருப்பதால் விடைபெற்றுக் கொள்வதாகவும் அவர் கூறினார். அவர் காதியாவைப் பார்த்துக் கொண்டு இதைக் கூறினார். பிறகு என்னைப் பார்த்தார். என் முகம் கவலையைக் காட்டும் என்று அஞ்சினார் என்று நான் புரிந்து கொண்டேன். ஆனால் நான் ஆச்சரியமடையவில்லை, நிலை குலையவில்லை. அவர் திரும்புவதற்கு நெடு நாட்களாகுமா என்று கூட நான் கேட்கவில்லை. அவர் இப்படிச் சொல்லுவார் என்று எனக்குத் தெரியும், அவர் போக மாட்டார் என்பதும் எனக்குத் தெரியும். அது எனக்கு எப்படித் தெரியும்? அதை எனக்குக் கூட விளக்குவதற்கு என்னால் முடியாது. ஆனால் இது வரை நடைபெற்றிருக்கின்ற எல்லாவற்றையும் அல்லது நடைபெறப் போகின்ற எல்லாவற்றையும் நான் அறிந்திருக்கிறேன் என்ற உணர்ச்சி அன்று என்னிடமிருந்தது. இது வரை நடந்த எல்லாமே ஏற்கெனவே நெடுங்காலத்

துக்கு முன்பே நடைபெற்று முடிந்துவிட்டது, நெடுங்காலத்துக்கு முன்பே அது எனக்குத் தெரியும், அவை அனைத்துமே மறுபடியும் நடைபெறும். அது எப்படி நடக்கும் என்பதும் எனக்குத் தெரியும் என்ற அற்புதமான கனவில் நான் வசிப்பது போலத் தோன்றியது.

அவர் விருந்து முடிவடைந்த உடனே போக விரும்பினர். ஆனல் இறுதி உணவு வழிபாட்டுக்குப் பிறகு காதியா களைப்பாக இருந்த படியால் அவள் படுக்கப் போய்விட்டாள். எனவே அவளிடம் விடைபெற்றுக் கொள்வதற்காக அவள் தூங்கியெழுந்திருக்கின்ற வரை அவர் காத்திருக்க நேர்ந்தது. உபசரிப்பு அறைக்குள் சூரிய ஒளி அதிகமாக வந்து கொண்டிருந்தது. எனவே நாங்கள் வராந்தாவுக்குப் போனேம். நாங்கள் உட்கார்ந்தவுடனே என்னுடைய காதலின் விதியை முடிவு செய்யப் போகின்ற விஷயங்களைப் பற்றி நான் மிகவும் நிதானமாகப் பேசத் தொடங்கினேன். நாங்கள் உட்கார்ந்த அதே விளுடியில்—முன்னதாகவோ, பின்னதாகவோ அல்ல—நான் பேசத் தொடங்கினேன். நான் அவரிடம் சொல்ல விரும்பியவற்றுக்குக் குந்தகம் ஏற்படுத்தக் கூடிய வகையில் இதற்கு முன்பு ஒன்றும் பேசப்படவில்லை, அத்தகைய தொனி உபயோகிக்கப்படவில்லை, அத்தகைய தலைப்பு தொடங்கப்படவில்லை. அத்தகைய அடக்கச் சிறப்பும் உறுதியும் சொற்களைத் தேர்ந்தெடுப்பதில் அத்தகைய துல்லியமும் நான் எங்கிருந்து பெற்றேன் என்பது எனக்குத் தெரியாது. நான் பேசவில்லை—எனக்

குள் ஏதோ ஒரு குரல், என் சித்தத்துக்குக் கட்டுப்படாது பேசுவதைப் போல இருந்தது. அவர் கிராதியின் மேல் சாய்ந்து கொண்டு எனக்கு எதிரில் உட்கார்ந்திருந்தார். அவர் ஒரு பவளக் குறிஞ்சிப் பூக்கிளையைத் தனக்குப் பக்கத்தில் இழுத்துக் கொண்டு அதன் இலை களைக் கிள்ளிப் போட்டுக் கொண்டிருந்தார். நான் பேச ஆரம்பித்த பொழுது அவர் பூக்கிளை யை விட்டுவிட்டுத் தன் தலையை ஒரு கையின் மேல் சாய்த்துக் கொண்டார். அது முற்றிலும் அமைதியானவருடைய அல்லது அதிகமான பட படப்புக்கு ஆளானவருடைய நிலையாகும்.

''நீங்கள் ஏன் புறப்பட்டுப் போகிறீர்கள்?'' என்று நான் அவரை நேருக்கு நேராகப் பார்த் துக் கொண்டு மெதுவாக, வேண்டுமென்றே கேட்டேன்.

அவர் உடனே பதிலளிக்கவில்லை.

பிறகு கண்களைக் கீழே தாழ்த்திக் கொண்டு ''வேலை!'' என்று முணுமுணுத்தார்.

என்னிடம்—அதிலும் இப்படி ஒரு வெளிப் படையான கேள்வியைக் கேட்கும் பொழுது —பொய் சொல்வது அவருக்கு எவ்வளவு கஷ் டமாக இருக்கிறது என்பதை நான் கண்டேன்.

''இன்றைய தினம் எனக்கு எவ்வளவு முக் கியமானது என்பது உங்களுக்குத் தெரியும். பல காரணங்களால் அது மிகவும் முக்கியமாக இருக்கிறது. நீங்கள் ஏன் போகிறீர்கள் என்று நான் கேட்டது போலித்தனமான அக்கறை யினால் அல்ல. நான் உங்களை விரும்புவது, உங் களைக் காதலிப்பது உங்களுக்குத் தெரியும்.

நான் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதால் கேட்கிறேன். நீங்கள் ஏன் போகிறீர்கள்?''

''நான் போவதன் உண்மையான காரணத்தை உன்னிடம் சொல்ல எனக்குக் கஷ்டமாக இருக்கிறது'' என்று அவர் பதிலளித்தார். ''இந்த வார முழுவதும் உன்னைப் பற்றியும் என்னைப் பற்றியும் நான் அதிகமாகச் சிந்தித்திருக்கிறேன். நான் போக வேண்டும் என்ற முடிவுக்கு நான் வந்திருக்கிறேன். அது ஏன் என்பது உனக்குப் புரியும். என் மீது உனக்கு ஏதாவது அக்கறை இருந்தால் இன்னும் அதிகமாகச் சொல்ல வேண்டும் என்று நீ வற்புறுத்த மாட்டாய்!'' அவர் நெற்றியைத் தேய்த்துக் கொண்டு கண்களை மூடிக் கொண்டார். ''அது எனக்குக் கஷ்டமானதே... ஆனல் உனக்குத் தெரிந்திருக்கும்.''

என்னுடைய இதயம் படபடவென்று துடித்துக் கொண்டிருந்தது.

''எனக்குப் புரியவில்லை'' என்று நான் கூறினேன். ''என்னல் புரிந்து கொள்ள **முடியவில்லை.** எனக்காக, எனக்கு அதிகமான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கும் இந்த தினத்துக்காக நீங்கள் சொல்ல வேண்டும். சொல்லுங்கள். எதைக் கேட்டாலும் என்னல் தாங்கிக் கொள்ள முடியும்.''

அவர் உட்கார்ந்திருந்த நிலையை மாற்றிக் கொண்டார். என்னை ஏறிட்டுப் பார்த்தார். மறுபடியும் அந்தப் பூக்கிளையைத் தன்னிடம் இழுத்தார்.

''சரி'' என்ருர். அதன் பிறகும் அவர் ஒரு கணம் தயங்கிவிட்டு நடுங்கும் குரலில் பேசத் தொடங்கிஞர். தன் குரலே உறுதியாக வைத்துக் கொள்வதற்கு அவர் வீண் முயற்சி செய்தார். ''வார்த்தைகளில் அதை எடுத்துக் கூறுவது முட்டாள்தனம், அது இயலாத காரியம், அது எனக்கு வேதனே தரும். எனினும் நான் விளக்குவதற்கு முயற்சி செய்கிறேன்.'' உடலில் வலி ஏற்பட்டதைப் போல அவர் துடித்தார்.

''சொல்லுங்கள்!'' என்று நான் கூறினேன்.

''அ என்ற பெயரில் ஒரு நபர் இருந்ததாக வைத்துக் கொள். அவர் வயதானவர், தன் வாழ்க்கையை வாழ்ந்து முடித்துவிட்டார். இ என்ற பெயரில் ஒரு பெண் இருந்தாள். அவள் இளமையானவள், மகிழ்ச்சியோடிருப்பவள். மக்கள் அல்லது வாழ்க்கையைப் பற்றி அவளுக்கு ஒன்றுமே தெரியாது. குடும்பச் சூழ்நிலே காரணமாக அவர் அந்தப் பெண்ணைத் தன் மகளேப் போல நேசித்தார். அவளே வேறு விதத்தில் தான் நேசிக்கக் கூடும் என்ற பயம் அவரிடமில்லே.''

அவர் நிறுத்திஞர். அவர் தொடர்வதற்காக நான் காத்துக் கொண்டிருந்தேன்.

''இ இளம் பெண், அவளுக்கு வாழ்க்கை இன்னும் உல்லாசமாகவே இருந்தது என்பதை அவர் மறந்துவிட்டார்.'' இதற்குப் பிறகு அவர் வேகமாகவும் பிடிவாதமாக என்னேப் பார்க்காமலும் பேசிஞர். ''அவளே வேறு வகையில் நேசிப்பது சுலபமானது, ஆஞல் இது

அவளுக்கு வெறும் விளையாட்டே என்பதை மறந்து விட்டார். அவர் ஒரு தவறு செய்தார். உடனே திடீரென்று வேறுவிதமான உணர்ச்சி, கழிவிரக்கத்தைப் போல வேதனையளிக்கும் உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது. தங்களிடையே முன்பிருந்த நட்பு பாதிக்கப்படும் என்று அவர் அஞ்சினார். அப்படி ஏற்படுவதற்கு முன்னால் போய்விட விரும்பினார்.'' இப்படிச் சொன்ன பிறகு அவர் சாவதானமாகக் கண்களைத் துடைத்தார், பிறகு மறுபடியும் கண்களை மூடிக் கொண்டார்.

''அந்தப் பெண்ணை வேறுவிதமாக நேசிப்பதற்கு அவர் ஏன் அஞ்சினார்?'' என்று நான் மிகவும் மெதுவாக, என்னுடைய படபடப்பை அடக்கிக் கொண்டு என் குரலைக் கட்டாயமாக நிதானப்படுத்திக் கொண்டு கேட்டேன். அது கிண்டல் செய்வதைப் போல இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் அவருடைய பதிலில் புண்பட்ட அறிகுறி லேசாக இருந்தது.

''நீ இளம் பெண். நான் அப்படியல்ல. நீ விளையாட விரும்புகிறாய். ஆனால் நான் வேறொன்றை விரும்புகிறேன். நீ தொடர்ந்து விளையாடு, ஆனால் என்னோடு விளையாட வேண்டாம். ஏனென்றால் நீ மனப்பூர்வமாக அப்படி நடந்து கொள்கிறாய் என்று நான் நினைத்து விடலாம். அது என்னைப் புண்படுத்தும். உனக்கும் அவமானத்தைக் கொடுக்கும். அ இதைத் தான் கூறினார்'' என்று சொல்லிவிட்டு அவர் மேலும் பேசினார். ''இவை எல்லாமே பிதற்றல் தான். ஆனால் நான் ஏன் போகிறேன் என்பது

உனக்குப் புரிகிறதல்லவா? அதைப் பற்றி இதற்கு மேல் நாம் பேச வேண்டாம். தயவு செய்து வேண்டாம்!''

''இல்லை! இல்லை! அதைப் பற்றி சற்று அதிகமாக நாம் பேசத்தான் வேண்டும்!'' என்று நான் உரத்த குரலில் கூறினேன். கண்ணீர்த் துளிகள் என் குரலில் நடுக்கத்தை ஏற்படுத்தின. ''அவர் அவளைக் காதலித்தாரா, இல்லையா?''

அவர் பதிலளிக்கவில்லை.

''அவர் அவளைக் காதலிக்கவில்லை என்றால் அவளோடு ஏன் விளையாடினார்? அவளென்ன சிறு குழந்தையா?'' என்று நான் கேட்டேன்.

''ஆமாம். ஆமாம். அ செய்தது தவறுதான்'' என்று அவர் அவசரமாகக் குறுக்கிட்டார். ''ஆனால் அதோடு எல்லாம் முடிந்துவிட்டது. அவர்கள்... நண்பர்களாகப் பிரிந்தார்கள்.''

''ஆனால் அது மிக பயங்கரம். இதைத் தவிர வேறு முடிவு கிடையாதா?'' என்று என்னுடைய பேச்சில் நானே பயமடைந்து லேசாக முணுமுணுத்தேன்.

''ஆம். இருக்கிறது'' என்று அவர் தன் முகத்திலிருந்து கையை எடுத்துக் கொண்டு என்னை நேரடியாகப் பார்த்துக் கொண்டு கூறினார். ''இரண்டு விதமான முடிவுகள் இருக்கின்றன. நீ குறுக்கே பேசக் கூடாது என்று மட்டும் உன்னைக் கேட்டுக் கொள்கிறேன். அமைதியாகக் கேள்.'' அவர் எழுந்து நின்று கொண்டு வேதனையோடு சிரித்தபடியே பேசத் தொடங்கினார். ''அ பைத்தியமானார், இ மீது

அடங்காக் காதல் கொண்டார், அவளிடம் அதைத் தெரிவித்தார் என்று சிலர் கூறுகிறார்கள்... அவள் அவரைப் பார்த்துச் சிரித்தாள். அவளுக்கு அது வேடிக்கை, அவருக்கு அது வாழ்வா, சாவா என்ற பிரச்சினை.''

நான் குறுக்கிட்டுப் பேச, என் சார்பில் பேசத் துணிய வேண்டாம் என்று சொல்லப் போன சமயத்தில் அவர் தன் கையை என் மீது வைத்து என்னைக் கட்டுப்படுத்தினார்.

''பொறு.'' அவர் குரலில் நடுக்கம் கலந்திருந்தது. ''அவர் மீது அவளுக்கு அனுதாபம் ஏற்பட்டது. பாவம். அவள் தன்னுடைய அனுபவமின்மையினால் அவரை உண்மையாகவே காதலிக்க முடியும் என்று கற்பனை செய்தாள். அவருடைய மனைவியாவதற்கு இசைந்தாள். அவரும் (முட்டாள்தானே!) தன்னுடைய வாழ்க்கை மறுபடியும் முதலிலிருந்து தொடங்கப் போவதாக நம்பினார்—ஆமாம்! அவர் அப்படி உண்மையாகவே நம்பினார். ஆனால் அவரைத் தான் ஏமாற்றிவிட்டதையும் தன்னை அவர் ஏமாற்றிவிட்டதையும் அவள் சீக்கிரத்திலேயே புரிந்து கொண்டாள்... ஆனால் நாம் அதைப் பற்றி இதற்கு மேல் பேச வேண்டாம்'' என்று சொல்லி முடித்தார். அவரால் அதற்கு மேல் பேச முடியவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. அவர் மௌனமாக எனக்கு முன்னால் முன்னும் பின்னும் நடக்கத் தொடங்கினார்.

''நாம் அதைப் பற்றிப் பேச வேண்டாம்'' என்று அவர் சொல்லிவிட்டார். ஆனால் நான்

பேசுவதற்காக மிக அதிகமான எதிர்பார்ப் போடு அவர் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். நான் ஏதோ சொல்ல விரும்பினேன். ஆனல் என் தொண்டையில் ஏற்பட்ட அழுத் தம் அதைத் தடுத்தது. நான் அவரைப் பார்த் தேன்—அவர் வெளுத்துப் போயிருந்தார். அவ ருடைய கீழுதடு துடித்துக் கொண்டிருந்தது. நான் அவருக்காக வருத்தப்படத் தொடங்கி னேன். நான் சிரமப்பட்டு, என்னைக் கட்டுப் படுத்திய மௌனத்தைக் கிழித்துக் கொண்டு உருக்கமான குரலில் மெதுவாகப் பேசத் தொடங்கினேன். என் குரல் எந்த விஞடியிலும் வெடித்துவிடும் என்று அஞ்சினேன்.

''மூன்ருவது முடிவு'' என்று சொல்லிவிட்டு நிறுத்திக் கொண்டேன். ஆனல் அவர் மௌன மாக இருந்தார். ''அவர் அவளைக் காதலிக்க வில்லை, அவள் மனதை மிகவும் புண்படுத் திஞர். தான் செய்தது சரி என்று நினைத்துக் கொண்டு புறப்பட்டுப் போஞர். ஏதோ கார ணத்துக்காக அதைப் பற்றிப் பெருமையாகக் கூட நினைத்தார். அது உங்களுக்கு வேடிக்கை, எனக்கல்ல. நான் முதலிலிருந்தே உங்களைக் காதலித்தேன். ஆம். நான் உங்களைக் காதலித் தேன்'' என்று திருப்பிக் கூறினேன். இதைக் கூறிய பொழுது தணிவாகவும் உருக்கமாகவும் இருந்த என்னுடைய குரல் காட்டுக் கூச்சலாக மாறி எனக்கே பயமூட்டியது.

அவர் மிகவும் வெளுத்துப் போய் எனக்கு எதிரில் நின்று கொண்டிருந்தார். அவருடைய உதடு மென்மேலும் அதிகமாகத் துடித்தது.

அவருடைய கன்னங்களிலிருந்து இரண்டு கண்ணீர்த் துளிகள் கீழே உருண்டன.

''நீங்கள் செய்தது மிகவும் மோசம்!'' என்று ஆத்திரமான, கொட்டப்படாத கண்ணீர் என் தொண்டையை அடைக்க நான் அநேகமாகக் கத்திவிட்டேன். ''ஏன் அப்படிச் செய்தீர்கள்?'' என்று கேட்டுவிட்டு அவரைவிட்டுப் பிரிவதற்காக எழுந்தேன்.

ஆனால் அவர் என்னைக் கட்டுப் படுத்தினர். என் முழங்கால்களின் மேல் அவர் தலையை வைத்தார். அவருடைய உதடுகள் நடுங்கிக் கொண்டிருந்த என் கரங்களை முத்தமிட்டன. அவருடைய கண்ணீரால் அவை ஈரமாக இருந்தன.

''கடவுளே! இப்படியாகும் என்பது மட்டும் எனக்குத் தெரிந்திருந்தால்'' என்று அவர் முணுமுணுத்தார்.

''ஏன் செய்தீர்கள்? ஏன் செய்தீர்கள்?'' என்று நான் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தேன். ஆனல் என் இதயம் ஆனந்தத்தை அனுபவித்தது. அந்த ஆனந்தம் நிரந்தரமாக மறைந்துவிட்டது, இனி என்றும் திரும்பாது.

ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு மாஷா ஸெர்கேய் மிஹாய்லவிச்சைத் திருமணம் செய்து கொள்ளப் போகிருள் என்று ஸோனியா அந்த வீடு முழுவதுமே கேட்கும்படி உரத்த குரலில் சத்தம் போட்டுக் கொண்டு காதியாவிடம் சொல்வதற்காக மாடிக்கு ஓடினள்.

## 5

எங்கள் திருமணத்தைத் தள்ளிப் போடுவதற்கு ஒரு காரணமும் இல்லை. அவரோ, நானோ அதை விரும்பவுமில்லை. மணப் பெண்ணுக்குத் தேவையான உடைகளை வாங்குவதற்காக மாஸ்கோவுக்குப் போனால் நல்லது என்று காதியா நினைத்ததும், திருமணம் நடக்கு முன்பு ஸெர்கேய் மிஹாய்லவிச் புதிய வண்டியும் புதிய சோபாக்களும் வாங்க வேண்டும், வீட்டின் உட்பகுதியில் புதிய காகிதம் ஒட்ட வேண்டும் என்று அவர் தாயார் எண்ணியதும் உண்மையே. இவை உண்மையாகவே மிக அத்தியாவசியமானவை என்றால் பிறகு கவனித்துக் கொள்ளலாம் என்று நாங்களிருவரும் வற்புறுத்தினோம். இதற்கிடையில் என்னுடைய பிறந்த நாளுக்கு இரண்டு வாரங்களுக்குப் பிறகு அமைதியான முறையில், மணப் பெண் உடைகள் இல்லாமல், மணப் பெண்ணின் தோழிகள் அல்லது மணமகனின் உயிர் நண்பர் இல்லாமல், இரவு விருந்தோ அல்லது ஷாம்பேன் மதுவோ அல்லது திருமணங்களில் சம்பிரதாயமாக இடம் பெறுகின்ற இதர ஜோடனைகளோ இல்லாமல் திருமணத்தை நடத்திவிட வேண்டும். அவருடைய திருமணம் இசை விருந்து இல்லாமல், ஏராளமான டிரங்குப் பெட்டிகள், வீடு முழுவதையும் புதுப்பித்தல் இல்லாமல், முப்பதாயிரம் ரூபிள்கள் செலவில் நடைபெற்ற அவளுடைய திருமணத்தைப் போல இல்லாமலிருக்கும் என்பதைப் பற்றி அவருடைய தாயார் எந்த அள

வுக்கு ஏமாற்றமடைந்திருக்கிருள் என்பதை அவர் என்னிடம் கூறினர். பழைய சாமான்கள் வைக்கப்பட்டிருக்கும் அறையிலுள்ள டிரங்குப் பெட்டிகளை அவள் சோதித்துக் கொண்டிருக் கிருள், எங்களுடைய ஆனந்தமான வாழ்க் கைக்கு அவசியமான கம்பளங்கள், திரைகள் மற்றும் தட்டுகளைப் பற்றி வீட்டு நிர்வாகியான மார்யுஷ்காவை இரகசியமாகக் கலந்து கொண்டு வருகிருள் என்றும் அவர் என்னிடம் கூறினர். எங்கள் வீட்டிலும் காதியா முதிய செவிலிப் பெண்ணை குஸ்மீனிஷ்ணுவிடம் அதைத்தான் செய்து கொண்டிருந்தாள். அதைப் பற்றி அவளைக் கேலி செய்யக் கூட முடியவில்லை. நாங்கள் இருவரும் எங்களுடைய எதிர்கால வாழ்க்கையைப் பற்றிப் பேசிய பொழுது அன்புச் சொற்களையே பேசிக் கொண் டோம், அற்பமான விஷயங்களில் கவனம் செலுத்திளேம் (எங்கள் நிலைமையில் உள்ள வர்களிடம் அதைத் தானே எதிர்பார்க்க முடி யும்), ஆனல் உண்மையான மகிழ்ச்சி சட்டை களைச் சரியாக வெட்டித்தைப்பதிலும் மேசை விரிப்புக்களிலும் குட்டைத் துண்டுகளிலும் சித் திரத் தையல் செய்வதிலுமே இருக்கிறது என்று அவள் உறுதியாக நம்பினள். திருமணத் தயாரிப்புகளைப் பற்றி இரகசியச் செய்திகள் நாள்தோறும் பல தடவைகள் அனுப்பப்பட்ட தோடு அதே மாதிரி வந்து கொண்டுமிருந்தன. காதியாவுக்கும் அவருடைய தாயாரான ததி யாஞ ஸெமியோனவ்ஞவுக்கும் இடையில் உறவு கள் மிகவும் நெருக்கமாக இருப்பதைப் போலத்

தோன்றியது. ஆனால் ஓரளவுக்குப் பகைமை யான, மிகவும் சாமர்த்தியமான இராஜ தந் திரம் அங்கே ஏற்கெனவே இடம்பெற்றிருப் பதை நான் உணர்ந்தேன். நான் ததியானா ஸெமியோனவ்னாவை இப்பொழுது முன்னைக் காட்டிலும் நன்றாக அறிய முடிந்தது. அவள் கடுகடுப்பான, கறாரான குடும்பத் தலைவி. மறைந்து போய்விட்ட காலத்தைச் சேர்ந்த சீமாட்டி. ஸெர்கேய் மிஹாய்லவிச் அவளை நேசித்தார்—அது மகன் என்ற முறையில் தன் கடமையைச் செய்வதற்காக மட்டுமல்ல, உல கத்திலேயே மிகச் சிறந்த, மிகவும் அன்பு நிறைந்த, அதிகமான அறிவுடைய, அன்பான பெண் என்று அவளைக் கருதியதனாலும் அப்படிச் செய்தார். அவள் எங்களிடம்—குறிப்பாக என்னிடம்—எப்பொழுதுமே அன்பாக நடந்து கொண்டாள். தன் மகன் திருமணம் செய்து கொள்வதைப் பற்றி மகிழ்ச்சியடைந்தாள். எனினும் அவள் மகன் திருமணம் செய்வதற்கு நிச்சயித்திருக்கும் பெண் என்ற முறையில் நான் அவளைப் பார்க்கச் சென்ற பொழுது, தன் மகன் இதைக் காட்டிலும் நல்ல பெண்ணைத் தேர்ந்தெடுத்திருக்கலாம், அதை நான் எப் பொழுதும் மறக்காமலிருப்பது நல்லது என்று அவள் விரும்பியதை நான் உணர முடிந்தது. அவளை நான் மிக நன்றாகப் புரிந்து கொண்டு அதை ஒத்துக் கொண்டேன்.

கடைசி இரண்டு வாரங்களின் போது ஸெர் கேய் மிஹாய்லவிச்சும் நானும் ஒவ்வொரு நாளும் சந்தித்துக் கொண்டோம். அவர் மதிய

உணவுக்கு வந்து நள்ளிரவு வரையிலும் எங்களோடிருப்பார். ஆனால் நான் இல்லாமல் தன்னால் வாழ முடியாது என்று கூறினாலும் (அவர் உண்மையாகச் சொல்கிறார் என்று எனக்குத் தெரியும்) ஒரு நாள் பொழுது முழுவதையும் என்னோடு கழித்ததில்லை, தன்னுடைய விவகாரங்களில் முன் போலவே சுறுசுறுப்பாக இருக்க முயற்சித்தார். வெளித் தோற்றத்தில் எங்களுடைய உறவுகள் மாறவில்லை. அவர் இன்னும் என்னை மரீயா அலெக்ஸாந்திரவ்னு என்றுதான் கூப்பிட்டார்; என் கையைக் கூட அவர் முத்தமிடுவதில்லை. என்னோடு தனியாக இருப்பதற்கு சந்தர்ப்பங்களைத் தேடாததோடு அத்தகைய சூழ்நிலையை அவர் தவிர்த்தார். தன்னுடைய மிகையான அன்பைக் காட்ட அவர் அஞ்சியதைப் போலவும் அது ஆபத்தானதென்று கருதியதாகவும் தோன்றியது. மாறிவிட்டது அவரா அல்லது நானா என்பது எனக்குத் தெரியாது, ஆனால் இப்பொழுது அவருக்கு முற்றிலும் சமமானவளாக நான் உணர்ந்தேன். முன்பு செயற்கையான எளிமை என்று கருதியதை அதன் பிறகு நான் அவரிடம் பார்க்கவில்லை. எனக்கு முன்னால் இருப்பவர் என்னிடம் மரியாதையையும் அச்சத்தையும் தூண்டுபவரல்ல, மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருக்கும் குழந்தையே என்பது இப்பொழுது எனக்கு அதிகமான மகிழ்ச்சியைக் கொடுத்தது. ''ஓ! இவர் உண்மையில் இப்படிப்பட்டவரா?'' என்று நான் நினைத்தேன். ''என்னைப் போல அப்படியே இருக்கிறார்—அதி

கமாக ஒன்றுமில்லை.'' அவரை ஆதி யோடந்தம் அறிந்துவிட்டதாக, முழுமையாக அறிந்துவிட்டதாக இப்பொழுது நான் உணர்ந் தேன். அவரிடம் நான் கண்டவை அனைத்தும் அழகு நிறைந்த எளிமையோடிருந்தன, எனக்கு ஏற்றவையாக இருந்தன. நாங்கள் ஒன்ருக எப்படி வசிக்க வேண்டும் என்பதைப் பற்றி அவருடைய திட்டங்கள் கூட என் திட்டங் களைப் போலவே இருந்தன—அவை மிகவும் தெளிவாகவும் சிறப்பான முறையிலும் எடுத்துக் கூறப்பட்டதுதான் எங்களுக்கிடையே வேறு பாடாகும்.

பருவநிலை மோசமாக இருந்தது. நாங்கள் பெரும்பாலான நேரம் வீட்டுக்குள்ளேயே இருந்தோம். எங்களுடைய மிகச் சிறந்த, மிக வும் நெருக்கமான உரையாடல்கள் உபசரிப்பு அறையில் பியானேவுக்கும் சன்னலுக்கும் இடையே இருந்த மூலையில் நடைபெற்றன. மெழுகு வர்த்தியின் வெளிச்சம் கறுப்பு நிற சன்னல் கண்ணுடியில் பிரதிபலித்தது. அவ்வப் பொழுது ஒரு மழைத்துளி பிரகாசமான சன்னல் கண்ணுடி மீது பட்டுத் தெறித்துக் கீழே வழியும். கூரையின் மேல் மழை சடசட வென்று விழுகின்ற சத்தமும் நீர்க் குழாய் வழியே மழைத் தண்ணீர் வழிந்தோடும் சத்த மும் கேட்டது. சன்னல் இடுக்குகளின் வழியாக மழையின் பிசுபிசுப்பு அறைக்குள் வந்துகொண் டிருந்தது. இவை அத்தனையும் சேர்ந்து நாங் கள் உட்கார்ந்திருந்த மூலையைச் சொகுசாக, பிரகாசமாக, குதூகலம் நிறைந்ததாகச் செய் தன.

ஒரு பின் மாலைப் பொழுதில் நாங்களிருவரும் தனியாக எங்களுடைய மூலையில் உட்கார்ந்திருந்த பொழுது ''நீண்ட காலமாகவே உன்னிடம் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்பினேன்'' என்று அவர் பேசத் தொடங்கினார். ''நீ பியானோ வாசித்துக் கொண்டிருந்த பொழுது நான் அதைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன்.''

''நீங்கள் ஒன்றும் சொல்ல வேண்டாம். நீங்கள் என்னிடம் சொல்லாமலே எனக்கு எல்லாம் தெரியும்'' என்று நான் கூறினேன்.

அவர் புன்சிரிப்போடு பேசினார். ''ஆம். நீ சொல்வது உண்மையே. நாம் அதைப் பற்றிப் பேச வேண்டாம்.''

''இல்லை. சொல்லுங்கள். அது என்ன?''

''சரி. சொல்கிறேன். அ, இ என்ற இருவரைப் பற்றி நான் சொன்னது உனக்கு நினைவிருக்கிறதா?''

''அவ்வளவு அசட்டுத்தனமான ஒன்றை நான் எப்படி மறக்க முடியும்? நல்ல வேளையாக அதன் முடிவு...''

''ஆமாம். இன்னும் சிறிதளவு பேசியிருந்தாலும் என் மகிழ்ச்சியை நானே அழித்துக் கொண்டிருப்பேன். நீ என்னைக் காப்பாற்றினாய். ஆனால் நான் சொன்னது உண்மையல்ல. அது தான் எனக்குச் சங்கடமாக இருக்கிறது. அன்று நான் தொடங்கியதை இப்பொழுது முடிக்க விரும்புகிறேன்,''

''ஓ! தயவு செய்து வேண்டாம்.''

''பயப்படாதே!'' என்று அவர் புன்சிரிப்

போடு கூறினர். ''என்னைப் பற்றி விளக்கமளிக்கவே நான் விரும்புகிறேன். நான் பேசத் தொடங்கிய பொழுது எல்லாவற்றையும் நன்கு சிந்தித்துப் பார்க்கவே விரும்பினேன்.''

''எதற்காகச் சிந்திப்பது? அதனல் எந்தப் பயனும் இல்லை.''

''அப்படி இல்லை. நான் சரியாகச் சிந்திக்கவில்லை. இந்தக் கோடைகாலத்தில் நான் இங்கே வந்த பொழுது, வாழ்க்கையில் இதுவரை எனக்கு ஏற்பட்டிருக்கும் ஏமாற்றங்களுக்கும் நான் செய்த தவறுகளுக்கும் பிறகு இனி எனக்குக் காதல் ஏற்படப் போவதில்லை, என் வாழ்க்கையை எப்படியாவது கழிக்க வேண்டிய பொறுப்பைத் தவிர வேறு எதுவும் எனக்கு எஞ்சவில்லை என்று மிகவும் தீர்க்கமான முடிவுக்கு நான் வந்தேன். உன்னிடம் எனக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளின் தன்மையையும் அவை எங்கே இட்டுச் செல்லும் என்பதையும் நெடுங்காலம் வரை நான் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் எந்த ஆதாரமும் இல்லாமலேயே தொடர்ந்து நம்பிக்கை வைத்துக் கொண்டிருந்தேன். நீ போலியாகக் காதல் புரிவதாக ஒரு நாள் நினைப்பேன். மறு நாள் அது மனப்பூர்வமானதே என்று நம்புவேன். என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. ஆனல் அந்த இரவு — அது உனக்கு நினைவிருக்கிறதா? —அதற்குப் பிறகு நாமிருவரும் தோட்டத்துக்குள் நடந்து சென்ருேம். எனக்கு பயமேற்பட்டது. தற்பொழுது என்னுடைய மகிழ்ச்சி நான் எதிர்பார்க்க முடியாத அளவுக்கு மிகப் பெரிய

தாக—உண்மையில் நடக்க முடியாததாகத்—தோன்றியது. நான் நம்பிக்கையை வளர்த்துக் கொள்ள என்னை அனுமதித்த பிறகு அது வீணு கியிருந்தால் என்ன நடைபெற்றிருக்கும்? ஆனுல் நான் என்னைப் பற்றித் தான் நினைத்துக் கொண்டிருந்தேன் என்பது உண்மை. நான் பரிதாபத்துக்குரிய தற்புகழ்ச்சிக்காரன்.''

அவர் பேச்சை நிறுத்திவிட்டு என்னைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

''எனினும் நான் அன்று சொன்ன அனைத்துமே பிதற்றல் அல்ல. நான் அஞ்சுவதற்குக் காரணம் இருந்தது—நான் அஞ்சியிருக்க வேண்டும். உன்னிடமிருந்து நான் பெறுவது மிக அதிகம். ஆனுல் நான் உனக்குத் திருப்பித் தரக் கூடியது மிகக் குறைவே. நீ இன்னும் ஒரு குழந்தை—மலரப் போகின்ற மொட்டு. நீ முதல் தடவையாகக் காதல் வயப்பட்டிருக்கிருய். ஆனுல் நானே...''

''என்னிடம் உண்மையைச் சொல்லுங்கள். நீங்கள்...'' என்று நான் தொடங்கினேன். ஆனுல் அவர் பதில் எப்படி இருக்குமோ என்று எனக்குப் பயமேற்பட்டது. ''இல்லை. ஒன்றும் சொல்ல வேண்டாம்'' என்றேன்.

''நான் இதற்கு முன்பு காதலித்திருக்கிறேனு? உன் கேள்வி அதுதானே?'' அவர் என் உணர்ச்சியை உடனடியாகப் புரிந்து கொண்டு கேட்டார். ''நான் அதற்கு பதிலளிக்க முடியும். இல்லை. இப்பொழுது நான் அடைந்திருக்கும் உணர்ச்சிப் பரவசம் ஒருபோதும் எனக்கு ஏற்பட்டதில்லை...'' ஏதோ ஒரு வேதனையான

நினைவு அவர் மனதில் திடீரென்று பளிச்சிட்டது போலத் தோன்றியது. ''ஆனாலும் நான் உன்னைக் காதலிப்பதென்றால் உன்னுடைய இதயம் எனக்குச் சொந்தம் என்ற உறுதி எனக்கு ஏற்பட வேண்டும்'' என்று வருத்தத்தோடு கூறினார். ''உன்னைக் காதலிக்கிறேன் என்று சொல்வதற்கு முன்பு நான் நன்றாகச் சிந்தனை செய்வது அவசியமல்லவா? நான் உனக்கு எதைக் கொடுக்க முடியும்? காதல் —அது உண்மைதான்.''

''அது குறைவானதா?'' என்று அவருடைய கண்களைக் கூர்ந்து நோக்கியபடி நான் கேட்டேன்.

''மிகவும் குறைவானது, அன்பே! உனக்கு அது மிக, மிகக் குறைவு'' என்று அவர் பதிலளித்தார். ''உன்னிடம் இளமையும் அழகும் இருக்கிறது! இரவு நேரங்களில் அடிக்கடி என்னால் தூங்க முடியவில்லை. அதிக மகிழ்ச்சி எனக்கு ஏற்பட்டிருக்கிறது. நாம் ஒன்று சேர்ந்து நடத்தப் போகும் வாழ்க்கையைப் பற்றியே நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். நான் அதிகமான காலம் வாழ்ந்திருக்கிறேன். மகிழ்ச்சிக்கு எவை அவசியம் என்பதை நான் கண்டுபிடித்துவிட்டதைப் போலத் தோன்றுகிறது. நாட்டுப் புறத்தில் அமைதியான, தனிமையான வாழ்க்கை, மற்றவர்களுக்கு உதவி செய்யக் கூடிய சந்தர்ப்பம் இருக்க வேண்டும் —மற்றவர்களிடமிருந்து எந்த உதவியும் பெறாதவர்களுக்கு உதவி செய்வது மிகவும் சுலபமானதே; பிறகு பயன் தருவது மாதிரியான

உழைப்பு; பிறகு ஓய்வு, இயற்கை, புத்தகங்கள், இசை, உற்ருர் உறவினர்கள் மீது பாசம்—இதுதான் இன்பம். இதைக் காட்டிலும் சிறப்பான ஒன்றை நான் கற்பனை செய்ய முடியாது. இவை அனைத்துக்குமே சிகரமாக—உன்னைப் போன்ற ஒரு துணைவி; முடிந்தால் குடும்பம். ஒரு மனிதன் இதைக் காட்டிலும் அதிகமாக வேறு எவற்றை விரும்ப முடியும்?''

''ஆமாம்'' என்று நான் ஒத்துக் கொண்டேன்.

''அதிலும் என்னைப் போல இளமைப் பருவத்தைக் கடந்த ஒருவனுக்கு இவை போதும்'' என்று அவர் தொடர்ந்து பேசினர். ''ஆனல் உனக்கு அல்ல. நீ இன்னும் வாழ்க்கையைத் தொடங்கவில்லை—வேறு ஏதாவதொன்றில் மகிழ்ச்சியைக் காண நீ விரும்பலாம், அப்படியே வேறு ஏதாவதொன்றில் நீ மகிழ்ச்சியை அடையவும் முடியலாம். நீ என்னைக் காதலிப்பதனுல் தான் இப்பொழுது இதை மகிழ்ச்சி என்று நினைக்கிருய்.''

''இல்லை. நான் எப்பொழுதுமே அமைதியான குடும்ப வாழ்க்கையை விரும்பியிருக்கிறேன். எந்தக் காலத்திலும் அது ஒன்றை மட்டுமே நான் நேசித்தேன். நான் எப்பொழுதுமே நினைத்துக் கொண்டிருப்பதைத்தான் நீங்கள் சொன்னீர்கள்'' என்று நான் கூறினேன்.

அவர் சிரித்தார்.

''அன்பே! உனக்கு மட்டும் அப்படித் தோன்றுகிறது. அது உனக்குப் போதுமானதல்ல. உன்

னிடம் இளமையும் அழகும் இருக்கிறது'' என்று அவர் சிந்தித்தபடியே திருப்பிக் கூறி ஞர்.

அவர் என்னை நம்பவில்லை என்பதும் என்னுடைய இளமைக்காகவும் அழகுக்காகவும் என்னைக் குறை சொல்வது போலப் பேசியதும் எனக்கு வேதனையாக இருந்தது.

''அப்படியாஞல் என்னை ஏன் காதலிக்கிறீர் கள்?'' என்று கோபத்தோடு கேட்டேன். ''அது என்னுடைய இளமைக்காகவா, அல்லது எனக் காகவா?''

''எனக்குத் தெரியாது, ஆனால் நான் உன்னைக் காதலிக்கிறேன்'' என்று அவர் தன்னுடைய கூர்மையான, கண்டிப்பு நிறைந்த விழிகளால் என்னைப் பார்த்துக் கொண்டே பதிலளித்தார்.

நான் ஒன்றும் பதிலளிக்கவில்லை. ஆனால் என்னுடைய பார்வை நேரடியாக அவருடைய பார்வைக்குள் ஈர்க்கப்பட்டது. திடீரென்று எனக்கு ஒரு விசித்திரமான உணர்ச்சி ஏற்பட்டது. முதலில் என்னைச் சுற்றிலும் இருப்பவைகளை நான் பார்க்க முடியவில்லை. பிறகு அவருடைய முகம் மறைந்தது. அவருடைய கண்கள் மட்டும் என் கண்களுக்குப் பக்கத்தில் பிரகாசித்தன. பிறகு அவர் கண்கள் என் கண்களோடு கலந்தன. எல்லாமே இருட்டாகத் தோன்றின—அவருடைய பார்வை ஏற்படுத்திய பேரானந்தம் மற்றும் அச்ச உணர்ச்சியைப் போக்குவதற்காக நான் என்னுடைய கண்களை இறுக்கமாக மூடிக் கொள்ள வேண்டியிருந்தது...

எங்களுடைய திருமணத்துக்கு முந்திய

நாளன்று பருவநிலை தெளிவாக மாறியது. கோடைக் காலத்தின் மழைக்குப் பதிலாக இலையுதிர்காலத்தின் முதல் மாலைப் பொழுது தெளிவாகவும் குளிர்ச்சியாகவும் இருந்தது. எங்கும் ஈரம், குளிர்ச்சி, சூரிய ஒளி. முதல் தடவையாகத் தோட்டத்தில் பரந்த, பிரகாசமான, ஆனால் மொட்டையான இலையுதிர்காலத் தோற்றம் ஏற்பட்டது. வானம் தெளிவாக, குளிர்ச்சியாக, வெளுப்பாக இருந்தது. நாளைக்கு —எங்கள் திருமணம் நடைபெறப் போகும் நாளன்று—அருமையான பருவநிலை இருக்கும் என்ற எண்ணத்தில் நான் மகிழ்ச்சியோடு படுத்துக் கொண்டேன்.

கதிரவன் உதித்த பொழுது நான் எழுந்தேன். என் எதிர்காலத்தைப் பற்றி நினைத்த பொழுது ஓரளவுக்குத் திகைப்பும் அச்சமும் எனக்கு ஏற்பட்டது... தோட்டத்துக்குள் நடந்து சென்றேன். கதிரவன் அப்பொழுது தான் உதித்திருந்தது. எலுமிச்சை மரங்களின் மஞ்சள் நிறக் கிளைகளின் வழியாகத் தன் ஒளியைச் சிதறிக் கொண்டிருந்தது. பாதை முழுவதும் உதிர்ந்த இலைகள் கிடந்தன. காட்டுச் செர்ரி புதர்களின் சுருக்கம் விழுந்த பழங்கள் கிளைகளில் நெருப்புப் போலச் சிவப்பு நிறத்தில் தோற்றமளித்தன. அந்தக் கிளைகளில் எஞ்சி நின்ற ஒரு சில இலைகள் மூடுபனியால் உருக்குலைக்கப்பட்டு வளைந்திருந்தன. பூக்கள் துவண்டு போய்க் கறுப்பு நிறத்தில் இருந்தன. வெளிறித் தோன்றிய பசும் புல்வெளியிலும் வீட்டுக்குப் பக்கத்தில் காலடிகள் பட்டுச்

சிதைந்திருந்த புல்தரையிலும் மூடுபனியின் வெள்ளி முதல் தடவையாகப் பூத்திருந்தது. வானம் தெளிவாக, குளிர்ச்சியாக இருந்தது. அதில் ஒரு மேகம் கூட இல்லை; அங்கே அது இருக்கவும் முடியாது.

''உண்மையில் அது இன்றுதானு?'' என்று என் மகிழ்ச்சியை நம்ப முடியாமல் என்னையே நான் கேட்டுக் கொண்டேன். ''நாளைக்குத் தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளும் பொழுது நான் இங்கேயிருக்க மாட்டேன், நிகோல்ஸ்கயேயில், தூண்கள் உள்ள அந்த விநோதமான வீட்டில் இருப்பேன். இது உண்மையா? இனி அவருக்காக ஒருபோதும் காத்திருக்க மாட்டேனு, அவரைச் சந்திப்பதற்குப் போக மாட்டேனு, காதியாவுடன் இரவில் அவரைப் பற்றிப் பேச மாட்டேனு? இந்த உபசரிப்பு அறையில் அவர் என் அருகிலிருக்க, என்னுடைய வீட்டில் பியானோவுக்கு முன்னுல் ஒருபோதும் உட்கார மாட்டேனு? அல்லது அவரை வழியனுப்பிவிட்டு இருண்ட இரவில் அவர் பத்திரமாகப் போய்ச் சேர வேண்டுமே என்று கவலைப்பட மாட்டேனு?'' ஆனுல் நான் கடைசித் தடவையாக இங்கே வந்திருக்கிறேன் என்று நேற்று அவர் கூறியதையும் பிறகு காதியா என்னைத் திருமண உடையை அணிந்து பார்க்குமாறு செய்து ''நாளைத் திருமணத்துக்கு'' என்று கூறியதையும் நினைத்துக் கொண்டேன். பிறகு ஒரு கண நேரம் நம்பிக்கையும் அதற்குப் பிறகு சந்தேகமும் ஏற்பட்டது. ''நாளை முதல் நான் அவருடைய தாயாருடன்—நடேஷ்தா, வயோதிகர்

கிரிகோரி அல்லது காதியா இல்லாமல்—வசிக்கப் போவது உண்மையா? இரவில் என்னுடைய வயோதிகத் தாதியை முத்தமிடாமல், அவள் என் மீது சிலுவைக் குறியிடும் பொழுது தவருமல் சொல்கின்ற 'செல்வியே, இரவு வணக்கம்' என்ற வார்த்தைகளைக் கேட்காமல் இருக்கப் போகிறேனு? இனிமேல் ஸோனியாவுக்குப் பாடம் கற்பிக் முடியாதா, அல்லது அவளோடு விளையாட முடியாதா, அல்லது காலையில் அவள் அறைச் சுவரில் தட்டி அவளுடைய கணீரென்ற சிரிப்பொலியைக் கேட்க முடியாதா? இன்று நான் எனக்கே அந்நியமாகப் போவது உண்மையா? என்னுடைய நம்பிக்கைகளும் கனவுகளும் நிறைவேறுகின்ற புதிய வாழ்க்கை எனக்கு ஆரம்பமாகப் போகிறது என்பது உண்மையா? இந்தப் புதிய வாழ்க்கை உண்மையிலேயே நன்மையாக இருக்குமா?'' ஸெர்கேய் மிஹாய்லவிச் வருவார் என்று நான் பொறுமையில்லாமல் துடித்துக் கொண்டிருந்தேன். என் சிந்தனைகளோடு நான் மட்டும் தனியாக இருப்பது கஷ்டத்தைக் கொடுத்தது. அவர் சீக்கிரமாகவே வந்துவிட்டார், அன்றிலிருந்து நான் அவருடைய மனைவியாகப் போகிறேன் என்பதை அதற்குப் பிறகே நான் நம்பத் தொடங்கினேன்; அதற்குப் பிறகே அந்த எண்ணம் என்னை பயமுறுத்தவில்லை.

மதிய விருந்துக்கு முன்பு என் தகப்பனுருடைய நினைவுப் பிரார்த்தனையில் கலந்து கொள்வதற்காக நாங்கள் மாதாகோவிலுக்குச் சென்றோம்.

''அவர் இப்பொழுது உயிரோடிருந்தால்!'' —அவருடைய மிகச் சிறந்த நண்பருடைய கை மேல் என் கையை வைத்துக் கொண்டு நாங்கள் வீட்டுக்குத் திரும்பிய பொழுது இப்படி நான் சிந்தித்தேன். வழிபாட்டின் போது மாதாகோவிலின் குளிர்ச்சியான கல் தரையைத் தொடும்படியாக என் தலையைக் குனிந்த பொழுது என் தகப்பனுரை அப்படியே தத்ரூபமாக நான் உருவகப் படுத்தினேன். அவருடைய ஆன்மா என்னை நன்ருகப் புரிந்து கொண்டிருக்கிறது, நான் தேர்ந்தெடுத்திருப்பவரை அவர் ஆசீர்வதித்தார், இப்பொழுது கூட அவருடைய ஆன்மா எங்கள் மீது வட்டமிட்டுக் கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றியது, அவருடைய ஆசிகள் எனக்குக் கேட்கின்றன என்று நான் மிக முழுமையாக நம்பினேன். அங்கே வீசிய அமைதியான, புதிய காற்று, மௌனம், மொட்டை வயல்கள், வெளுத்திருந்த நீல வானம்—அதிலிருந்து வந்த பிரகாசமான ஒளிக் கதிர்கள் கன்னத்தைச் சுடுகின்ற அளவுக்கு வெப்பமாக இனியும் இல்லை—ஆகியவற்ருேடு பொருந்திய வகையில் வீறமைதியான, இனிமையான ஒரே உணர்ச்சியை ஏற்படுத்தக் கூடிய வகையில் நினைவுகளும் நம்பிக்கைகளும் மகிழ்ச்சியும் துயரமும் ஒன்று கலந்தன. என் பக்கத்திலிருப்பவர் என் உணர்ச்சியைப் புரிந்து கொண்டார், பகிர்ந்து கொண்டார் என்று எனக்குத் தோன்றியது. அவர் எதுவும் பேசாமல் அமைதியாக நடந்தார். அவர் முகத்தை நான் அவ்வப்பொழுது ஏறிட்டுப்

பார்த்தேன். அவர் முகம் என் இதயத்திலும் என்னைச் சுற்றி எல்லாவற்றிலுமிருந்த அதே வீறமைதியான உணர்ச்சியை—பகுதியளவு மகிழ்ச்சி, பகுதியளவு துயரம்—வெளிக் காட்டியது.

அவர் திடீரென்று என்னை நோக்கித் திரும்பினார். அவர் ஏதோ சொல்லப் போகிறார் என்பதைப் புரிந்து கொண்டேன். ''நான் நினைத்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு ஏதாவதொன்றைப் பற்றிப் பேசுவாரோ?'' என்ற எண்ணம் என் மனதில் பளிச்சிட்டது. ஆனால் அவர் என் தகப்பனாரைப் பற்றியே பேசினார். பெயரைச் சொல்லவில்லை. '' 'என் மாஷாவைத் திருமணம் செய்து கொள்!' என்று அவர் ஒரு சமயத்தில் கூறினார். அவர் வேடிக்கையாகத் தான் சொன்னார்.''

''இப்பொழுது அவர் எவ்வளவு மகிழ்ச்சியடைவார்!'' என்று நான் அவருடைய கையை அழுத்திக் கொண்டு கூறினேன்.

''ஆம். நீ அப்பொழுது குழந்தை'' என்று என் கண்களுக்குள் ஊடுருவிப் பார்த்துக் கொண்டு அவர் தொடர்ந்து பேசினார். ''நான் உன் கண்களை முத்தமிடுவேன். ஆனால் அவை அவருடைய கண்களைப் போலவே இருந்ததனால் மட்டுமே அவற்றை விரும்பினேன். அவை உன்னுடைய கண்கள் என்ற காரணத்துக்காக நான் மிகவும் நேசிப்பேன் என்று நினைக்கவில்லை. உன்னை மாஷா என்று நான் அப்பொழுது கூப்பிடுவேன்.''

''இப்பொழுது மாஷா என்று என்னைக் கூப்பிடுங்கள்.''

''நான் அப்படித்தான் கூப்பிடப் போகிறேன்'' என்ருர் அவர். ''நீ உண்மையிலேயே என்னுடையவள் என்று இப்பொழுதுதான் நான் நினைக்கத் தொடங்கியிருக்கிறேன்.'' அவருடைய அமைதியான, ஆனந்தமயமான, கவர்ச்சிமிக்க பார்வை என் மீது நிலை குத்தியது.

தானியம் அறுவடை செய்யப்பட்ட வயலில் ஒற்றையடிப் பாதையின் வழியாக நாங்கள் நடந்து போய்க் கொண்டிருந்தோம். அங்கே கேட்ட ஒரே சத்தங்கள்—எங்கள் காலடிகளும் பேச்சுமே. ஒரு பக்கத்தில் மலைக் கணவாயின் குறுக்கே பழுப்பு நிறத்தில் அரிதாள் வெகு தூரத்தில் ஒரு மொட்டைப் புதரைப் போல நீண்டு சென்றது. ஒரு விவசாயி மரக் கட்டைக் கலப்பையைப் பிடித்துக் கொண்டு மௌனமாக ஒரு கறுப்புப் பகுதியில் அடையாளக் குறி போட்டுக் கொண்டிருந்தான். அதன் பரப்பு மென்மேலும் அதிகரித்துக் கொண்டிருந்தது. மலையின் அடிவாரத்தில் மேய்ந்து கொண்டிருந்த குதிரைக் கூட்டம் மிகவும் அருகிலிருப்பதைப் போலத் தோன்றியது. மறு பக்கத்தில் தோட்டம் வரை வயல் உழுது விதைக்கப்பட்டிருந்தது. அந்தத் தோட்டத்துக்குப் பின்ஞல் எங்களுடைய வீடு தெரிந்தது. இப்பொழுது பனி உருகிவிட்டபடியால் பூமி கறுப்பாக இருந்தது; அங்குமிங்கும் குளிர்காலக் கோதுமையின் பச்சை நிறத்தாள் தென்படத் தொடங்

கியது. இவை அனைத்தின் மீதும் குளிர்ச்சியான சூரியன் பிரகாசமான ஒளியைக் கொட்டியது. சிலம்பி இழைகள் எங்கும் பறந்து கொண்டிருந்தன. அவை எங்களைச் சுற்றிக் காற்றில் பறந்தன. சூரிய ஒளியில் ஏற்கெனவே உலர்ந்து போயிருந்த அரிதாளில் சிக்கிக் கொண்டன. அவை எங்கள் கண்களிலும் தலைமுடியிலும் உடைகளின் மேலும் ஒட்டிக் கொண்டன. சூரியன் இனி வெப்பமாக இல்லாவிட்டாலும் துடித்துக் கொண்டும் நெருப்பைக் கக்கிக் கொண்டுமிருந்த அந்த நீல விதானத்தின் கீழ் உலகத்திலேயே நாங்கள் முழுத் தனிமையாக இருப்பதைப் போல—நாங்கள் பேசும் பொழுது எங்கள் குரல்கள் அசைவே இல்லாதிருந்த காற்றில் தொங்கின.

நானும் அவருடைய **செல்லப் பெயரை** உபயோகித்து அவரைக் கூப்பிட விரும்பினேன். ஆனால் அது எனக்குக் கடினமாக இருந்தது. ''ஸெர்யோஷா! நீங்கள் ஏன் வேகமாக நடக்கிறீர்கள்?'' என்று மிகவும் தணிந்த குரலில் முணுமுணுத்தேன். என்னையறியாமலே என் முகம் சிவந்துவிட்டது.

அவர் தன் வேகத்தைக் குறைத்துக் கொண்டு இன்னும் அதிகமான அன்போடு என்னைப் பார்த்தார். அவர் முகத்தில் என்றுமே இல்லாத மகிழ்ச்சி பிரகாசித்தது.

நாங்கள் வீட்டுக்குத் திரும்பிய பொழுது ஸெர்கேய் மிஹாய்லவிச்சின் தாயாரும் மற்ற விருந்தினர்களும் (அவர்களை அழைக்காதிருக்க முடியுமா?) எங்களுக்காகக் காத்துக் கொண்

டிருந்தார்கள். எனவே மாதாகோவிலிருந்து திரும்பி நிகோல்ஸ்கயேவுக்குப் போவதற்காக வண்டியில் ஏறுகின்ற வரையில் நான் அவரோடு தனியாக இருக்க முடியவில்லை.

மாதாகோவில் அநேகமாகக் காலியாக இருந்தது. ஒரு கம்பளத்தின் மேல் அவருடைய தாயார் மிக விறைப்பாக நின்று கொண்டிருப்பதையும் காதியா பழுப்பு நிற நாடாக்களால் அழகு படுத்தப்பட்ட தொப்பியை அணிந்து கொண்டு முகத்தில் கண்ணீர் வழிந்தோட நின்று கொண்டிருப்பதையும் நான் ஓரக் கண்ணுல் பார்த்தேன். இரண்டு அல்லது மூன்று பண்ணையடிமைகள் ஆச்சரியத்தோடு என்னை உற்றுப் பார்த்தபடியே நின்ருர்கள். நான் அவரைப் பார்க்கவில்லை, ஆனுல் எனக்குப் பக்கத்தில் அவர் இருப்பதை உணர்ந்தேன். தோத்திர வார்த்தைகளைக் கவனமாகக் கேட்டேன், அவற்றைத் திருப்பிச் சொன்னேன். ஆனுல் என் இதயத்தில் எந்த பதிலும் இல்லை. என்னுல் பிரார்த்தனை செய்ய முடியவில்லை; நான் தெய்வ வடிவங்களையும், மெழுகு வர்த்திகளையும் போதகரின் அங்கியின் பின்புறத்தில் சித்திர வேலைப்பாடு செய்யப்பட்டிருந்த சிலுவையையும் தெய்வ வடிவங்கள் தொங்கிக் கொண்டிருக்கும் சட்டத்தையும் சன்னல்களையும் அசட்டுத்தனமாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனுல் எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் சம்பந்தப்பட்ட ஏதோ ஒரு சடங்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதை மட்டுமே நான் உணர்ந்தேன். பிறகு போதகர்

கையில் சிலுவையோடு எங்களை நோக்கித் திரும்பினார். அவர் எங்களுக்கு வாழ்த்துக் கூறினார். எனக்கு ஞானஸ்நானம் செய்ததை அவர் நினைவு கூர்ந்தார். இப்பொழுது எனக்குத் திருமணம் செய்விக்கின்ற பேற்றைக் கடவுள் தந்திருக்கிறார் என்றார். காதியாவும் ஸெர்கேய் மிஹாய்லவிச்சின் தாயாரும் எங்களை முத்தமிட்டார்கள். கிரிகோரி வண்டியைக் கூப்பிடுகின்ற குரல் எனக்குக் கேட்டது. எல்லாம் ஏற்கெனவே முடிந்துவிட்டதைப் பற்றி எனக்கு முதலில் ஆச்சரியமும் பிறகு அச்சமும் ஏற்பட்டது. ஆனால் என் இதயத்தில் அசாதாரணமான எந்த மாற்றமும் அங்கே எனக்குச் செய்யப்பட்ட சடங்குக்குப் பொருத்தமான ஒன்றுமே ஏற்படவில்லை. அவரும் நானும் முத்தமிட்டோம். எங்கள் காதலுக்கு அது மிகவும் விசித்திரமாக, அந்நியமானதாக இருந்தது. ''இவ்வளவுதானா?'' என்று நான் நினைத்துக் கொண்டேன். நாங்கள் முன்வாயிலுக்கு வந்தோம். முகப்பிலிருந்த வளைவுகளில் வண்டிச் சக்கரங்களின் சத்தம் எதிரொலித்தது. என் முகத்தில் புதிய காற்று பலமாக அடித்தது. அவர் தொப்பியை அணிந்து கொண்டு நான் வண்டியில் ஏற உதவி செய்வதற்காக என் கையைப் பிடித்தார். வண்டிச் சன்னல் வழியே மூடுபனி உறைந்திருந்த நிலாவையும் அதைச் சுற்றியிருந்த ஒளி வட்டத்தையும் நான் பார்த்தேன். அவர் எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு கதவைச் சாத்தினார். வலி மாதிரியான ஏதோ ஒன்று என் இதயத்தைத் துளைத்

தது. அவர் செய்கையிலிருந்த தன்னம்பிக்கை எனக்கு அவமானமாக இருந்தது. தலையை மூடிக் கொள் என்று காதியா உரத்த குரலில் சொன்னது எனக்குக் கேட்டது. வண்டிச் சக்கரங்கள் கற்களின் மேல் கடகடத்துக் கொண்டு சென்றன, பிறகு மென்மையான சாலையின் மேல் ஓடின. நாங்கள் புறப்பட்டுவிட்டோம். நான் மூலையில் குறுக்கிக் கொண்டு உட்கார்ந்து வெகு தூரத்துக்கு அப்பால் தெரிந்த வயல்களையும் குளிர்ச்சியான நிலவொளியில் வளைந்து தெரிந்த பாதையையும் சன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். நான் அவரைப் பார்க்கவில்லை. ஆனால் அவர் எனக்குப் பக்கத்திலிருப்பதை உணர்ந்தேன். ''இந்தத் தருணத்தைப் பற்றி நான் எவ்வளவோ எதிர் பார்த்துக் கொண்டிருந்ததற்கு எனக்குக் கிடைத்தவை இவைதான்?'' என்று நான் நினைத்தேன். அவருக்கு மிகவும் பக்கத்தில் தனிமையில் உட்கார்ந்திருப்பது ஏனோ அவமானமாகவும் அவமதிப்பாகவும் இருந்தது. ஏதாவது பேச வேண்டுமென்று நான் அவரை நோக்கித் திரும்பினேன். ஆனால் எனக்கு வார்த்தைகளே வரவில்லை. நான் அவரிடம் கொண்டிருந்த அன்பான உணர்ச்சி மறைந்து விட்டதைப் போலவும், அதற்குப் பதிலாக அவமானமும் அச்சமும் இடம் பெற்றிருப்பதாகவும் தோன்றியது.

''இந்த வினாடி வரையிலும் இது உண்மை தான் என்று என்னால் நம்ப முடியவில்லை''

என்று என் பார்வைக்கு பதிலளிப்பதைப் போல அவர் மெதுவாகச் சொன்னார்.

''ஆமாம். ஆனால் என்ன காரணத்தாலோ எனக்கு பயமாக இருக்கிறது'' என்று நான் கூறினேன்.

''அன்பே! என்னைக் கண்டு பயமாக இருக்கிறதா?'' என்று கேட்ட படியே என் கையை எடுத்து அதில் தன்னுடைய தலையைப் புதைத்தார்.

அவருடைய கரத்தில் என் கரம் உயிரில்லாமல் கிடந்தது; என் இதயம் பூரிப்படையவில்லை.

''ஆமாம்'' என்று நான் முணுமுணுத்தேன்.

ஆனால் நான் சொன்னதைப் போல, என் இதயம் முன்னைக் காட்டிலும் பலமாகத் துடித்தது, என் கரம் நடுங்கி அவர் கரத்தைப் பிடித்துக் கொண்டது. என் உடல் முழுவதும் வெப்ப அலை குப்பென்று பரவியது. அந்த அரை வெளிச்சத்தில் என்னுடைய கண்கள் அவருடைய கண்களைத் தேடின. அவரைக் கண்டு நான் அஞ்சவில்லை என்பதைச் சட்டென்று உணர்ந்தேன். இந்த அச்சம்தான் காதல்—புதிய காதல். இது முன்னைக் காட்டிலும் அன்பான, ஆழமான காதல். நான் முழுவதுமே அவருக்குச் சொந்தமானவள் என்று உணர்ந்தேன். அவர் என் மீது கொண்டிருக்கும் சக்தியினால் நான் மகிழ்ச்சியடைந்தேன்.

## இரண்டாம் பகுதி

## 6

நாட்களும் வாரங்களும் உருண்டோடின. கடைசியில் இரண்டு மாத கால அமைதியான நாட்டுப்புற வாழ்க்கை போனதே தெரியவில்லை என்று அப்பொழுது தோன்றியது. அதே சமயத்தில் அந்த இரண்டு மாதங்களிலிருந்த காதலும் பரபரப்பும் மகிழ்ச்சியும் வாழ்க்கைக் காலம் முழுவதற்குமே போதுமானதாக இருந்தது. நாட்டுப்புறத்தில் நாங்கள் எப்படி வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதைப் பற்றி அவரும் நானும் கொண்டிருந்த கனவுகள், நாங்கள் எதிர்பார்த்ததிலிருந்து முற்றிலும் வேறுவிதமாக—ஆனால் மோசமாக இல்லாதபடி—வெளிப்பட்டன. நான் அவருடைய மணப்பெண்ணாக இருந்த பொழுது கற்பனை செய்த கடுமையான உழைப்பு, தியாகம் மற்றும் பிறருக்காகப் பாடுபடும் வாழ்க்கையாக அது இருக்கவில்லை என்பது உண்மையே. அதற்கு மாறாக, ஒருவருக்கொருவர் கொண்டிருந்த சுயநலம் நிறைந்த காதல் உணர்ச்சியும் காதலிக்கப்பட வேண்டும் என்ற விருப்பமும் சிந்தனையில்லாத தொடர்ச்சியான குதூகலமும் உலகத்தில் மற்ற எல்லாவற்றையுமே மறந்துவிடுவதும் இருந்தன. அவர் ஏதாவதொரு காரியத்தில் சுறுசுறுப்பாக ஈடுபடுவதற்காக எப்பொழுதாவது படிப்பறைக்குள் செல்வார். சில சமயங்களில் அவர் முக்கிய அலுவலை முன்னிட்டு நகரத்துக்குப் போவார் அல்லது பண்ணையைச்

சுற்றிப் பார்த்துவிட்டு வருவார். ஆனால் என்னைப் பிரிந்து செல்வது அவருக்கு எவ்வளவு கடினமானதாக இருந்தது என்பதை நான் பார்த்தேன். நீ இல்லாவிட்டால் உலகத்திலுள்ள அனைத்துமே எனக்கு மிகவும் வெறுமையாகத் தோன்றுகின்றன, எனவே உன்னைப் பிரிவதை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை என்று அவர் என்னிடம் ஒத்துக் கொள்வார். எனக்கும் அதே உணர்ச்சியே ஏற்பட்டது. நான் படித்தேன்; இசைப் பயிற்சியில், என் மாமியாருடன் பேசிக் கொண்டிருப்பதில், பள்ளிக்கூடப் பணிகளில் நேரத்தைக் கழித்தேன். இந்த வேலைகளெல்லாம் ஏதாவதொரு வகையில் அவரோடு தொடர்பு கொண்டிருந்தபடியால் அவருடைய அங்கீகாரத்தைப் பெறும் என்ற காரணத்தால் மட்டுமே நான் இவற்றில் ஈடுபட்டேன். அவரைப் பற்றிய சிந்தனைகளோடு சம்பந்தப்பட்டிராத ஏதாவதொரு வேலையை நான் செய்யத் தொடங்கியவுடனே அதில் முற்றிலும் அக்கறையிழந்தேன்; அவர் இல்லாமல் உலகத்தில் ஏதேனும் இருக்க முடியும் என்பது எனக்கு மிக விசித்திரமாகத் தோன்றியது. இது அற்பமான, சுயநலமான உணர்ச்சியாக இருந்திருக்கலாம்; ஆனால் அது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது, மொத்த உலகத்துக்கும் மேலாக என்னை உயர்த்தியது. என்னைப் பொறுத்தவரை, உலகத்திலேயே அவரைத் தவிர வேறு எதுவும் கிடையாது. எனக்கு அவர்தான் உலகத்திலேயே தவறு செய்ய முடி

யாத, மிகப் பெரிய மனிதர். நான் அவருக்காகவே, அவருடைய பார்வையில் என்னைப் பற்றி அவர் கொண்டிருக்கும் கருத்துக்குப் பொருத்தமாக இருப்பதற்காகவே வாழ்ந்தேன். அவர் என்னைப் பற்றி உலகத்திலேயே மிக அருமையான, மிகச் சிறந்த பெண்ணாக, சாத்தியமான நற்பண்புகள் அனைத்தும் கொண்டிருப்பவளாக நினைத்தார். உலகத்திலேயே மிக அருமையான, மிகச் சிறந்த மனிதருக்காக நான் அப்படிப்பட்ட பெண்ணாக இருக்க முயற்சி செய்தேன்.

ஒரு நாள், நான் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கும் பொழுது அவர் என்னுடைய அறைக்குள் வந்தார். நான் அவரைப் பார்த்து விட்டுத் தொடர்ந்து பிரார்த்தனை செய்து கொண்டிருந்தேன். அவர் என் பிரார்த்தனையில் குறுக்கிட விரும்பாமல் மேசைக்கு முன்னால் உட்கார்ந்து ஒரு புத்தகத்தைத் திறந்தார். ஆனால் அவர் என்னைப் பார்ப்பது போல எனக்குத் தோன்றிய படியால் நான் திரும்பிப் பார்த்தேன். அவர் புன்னகை புரிந்தார். நானும் உடனே சிரித்துவிட்டேன். என்னால் பிரார்த்தனையைத் தொடர முடியவில்லை.

''நீங்கள் பிரார்த்தனை செய்தீர்களா?'' என்று அவரைக் கேட்டேன்.

''ஆம். ஆனால் உன்னுடைய பிரார்த்தனையில் குறுக்கிடுவதற்கு நான் விரும்பவில்லை. வெளியே போகிறேன்'' என்றார்.

''நீங்கள் உண்மையிலேயே தினமும் பிரார்த்தனை செய்வதுண்டா?''

அவர் ஒன்றும் பதிலளிக்கவில்லை. அவர் வெளியே போக விரும்பினார். ஆனால் நான் அவரைத் தடுத்தேன்.

''அன்பே! தயவு செய்து, எனக்காக—என்னோடு சேர்ந்து பிரார்த்தனை செய்யுங்கள்.''

அவர் எனக்குப் பக்கத்தில் முழந்தாளிட்டு உட்கார்ந்து தடுமாற்றத்தோடு தன் கைகளை ஒன்று சேர்க்கத் தொடங்கினார். அவர் முகம் ஆழமான சிந்தனையைக் காட்டியது. அவர் வார்த்தைகளைச் சொல்ல முடியாமல் தடு மாறினார். அவ்வப்பொழுது என்னுடைய அங்கீகாரத்தையும் உதவியையும் வேண்டு வதைப்போல என்னை நோக்கித் திரும்புவார்.

அவர் பிரார்த்தனையை முடித்த பிறகு நான் சிரித்துக் கொண்டு அவரைக் கட்டிக் கொண் டேன்.

அவர் வெட்கத்தோடு என் கைகளை முத்த மிடத் தொடங்கினார். ''எப்பொழுதும் நீதான்! எப்பொழுதும் நீதான்! எனக்குப் பத்து வயது குறைந்து விட்டதைப் போல மறுபடியும் உணரச் செய்கிறாய்.''

சில தலைமுறைகளைச் சேர்ந்தவர்கள் ஒரு வருக்கொருவர் நேசத்தோடும் மரியாதை யோடும் ஒன்றாக வசித்து வருகின்ற பழைய நாட்டுப்புற வீடுகளில் எங்களுடைய வீடும் ஒன்றாக இருந்தது. அதில் ஒவ்வொரு இடமும் குடும்ப நினைவுகளைக் கொண்டிருந்தன; நான் அங்கே வசிக்கத் தொடங்கியதும் அந்த நினைவு கள் எனக்கும் சொந்தமானவை போலத் தோன்றின. ததியானா ஸெமியோனவ்னா அந்த

வீட்டைப் பழைய முறையில் அமைத்திருந்த தோடு அப்படியே நடத்தியும் வந்தாள். அங்கே அழகு நிறைந்திருந்ததாகச் சொல்ல முடியாது; ஆனால் வேலைக்காரர்களிலிருந்து நாற்காலி, சோபாக்கள் மற்றும் உணவு வரை எல்லாமே ஏராளமாக இருந்தன. எல்லாமே கனமாக, சுத்தமாக, நேர்த்தியாக இருந்தன. அவற்றைப் பார்த்த மாத்திரத்திலேயே மரியாதை உணர்ச்சி ஏற்படும். உபசரிப்பு அறையில் சோபாக்கள் ஒழுங்கான வரிசை யில் போடப்பட்டிருந்தன. சுவர்களில் உரு வப்படங்கள் தொங்கின. வீட்டில் நெசவு செய் யப்பட்ட விரிப்புக்களும் கம்பளங்களும் தரை களின் மேல் விரிக்கப்பட்டிருந்தன. நடைக் கூடத்தில் ஒரு பழைய பியானோவும், இரண்டு வெவ்வேறான பாணிகளைச் சேர்ந்த பீரோக் களும் சோபாக்களும் சித்திர வேலைப் பாட மைந்த சிறிய மேசைகளும் போடப் பட்டிருந் தன. என் அறையில் மிகச் சிறந்த நாற்காலி கள், படுக்கை முதலியன இருந்தன. ததியானா ஸெமியோனவ்னாவே அந்த அறையை அரும் பாடு பட்டு அலங்கரித்திருந்தாள். வெவ்வேறு காலங்களையும் பாணிகளையும் சேர்ந்த பல பொருள்கள் அறையிலிருந்தன. அவற்றில் ஒரு பழைய நிலைக் கண்ணாடியும் ஒன்றாகும். ஆரம்பத்தில் அதில் முகம் பார்க்க எனக்கு வெட்கமாக இருந்தது. ஆனால் பிறகு அந்தக் கண்ணாடி எனக்கு உற்ற நண்பனாக மாறிவிட் டது. ததியானா ஸெமியோனவ்னா ஒருபோதும் உரத்த குரலில் உத்தரவு போடவில்லை; ஆனால்

அந்த வீட்டில் வேலைக்காரர்கள் மிகையான எண்ணிக்கையில் இருந்த போதிலும்—எல்லாமே கடிகாரத்தின் துல்லியத்தோடு நடைபெற்றன. ஆனால் மென்மையான, குதியில்லாத காலணிகளை அணிந்திருந்த வேலைக்காரர்கள் (காலணிகள் கிறீச்சிடுவதும் குதிகால்கள் டக் டக்கென்று ஒலிப்பதும் உலகத்திலேயே மிக மோசமான விஷயம் என்று ததியானா ஸெமியோனவ்னா நினைத்தாள்) எல்லோருமே தங்களுடைய பதவிகளைப் பற்றி மிகப் பெருமையாக நினைத்ததாகத் தோன்றியது. அவர்கள் அந்த வயோதிக எசமானிக்கு முன்னால் நடுங்கினார்கள். ஆனால் என் கணவரையும் என்னையும் ஆதரவு காட்டுகின்ற அன்போடு பார்த்தார்கள். அவர்கள் தங்கள் வேலையை அசாதாரணமான மகிழ்ச்சியோடு செய்வதாகத் தோன்றியது. வாரந்தோறும் ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் தரையை நன்றாகத் தேய்த்துக் கழுவினார்கள், கம்பளங்களைத் தூசி போகுமாறு அடித்தார்கள். மாதந்தோறும் முதல் தேதியன்று பிரார்த்தனைகள் நடைபெற்றன, தண்ணீர் ஆசிர்வதிக்கப்பட்டது. ததியானா ஸெமியோனவ்னா மற்றும் அவளுடைய மகனின் பெயர் சூட்டிய நாட்களின் போது (முதல் தடவையாக அந்த இலையுதிர்காலத்தில் என்னுடைய பெயர் சூட்டிய நாளன்றும் கூட) விருந்துகள் நடைபெற்றன. அக்கம் பக்கத்திலிருந்த எல்லோரும் விருந்தில் கலந்து கொள்ளும்படி அழைக்கப்பட்டனர். இவை அனைத்துமே ததி

யானு ஸெமியோனவ்னுவுக்கு நினைவு தெரிந்த காலத்திலிருந்து நடைபெற்று வந்தன.

வீட்டை நிர்வாகம் செய்வதில் என் கணவர் குறுக்கிடவில்லை. அவர் வயல் வேலைகளையும் விவசாயிகளைப் பற்றியும் கவனித்தார். இந்த விவகாரங்களில் அவர் கடுமையாகப் பாடுபட்டார். அவர் குளிர்காலத்தில் கூட மிகவும் சீக்கிரமாக எழுந்துவிடுவார். நான் விழித்துக் கொள்ளும் பொழுது அவர் ஏற்கெனவே வெளியே போயிருப்பார். அவர் காலைச் சிற்றுண்டி சாப்பிட வழக்கமாக வீட்டுக்கு வந்துவிடுவார். நாங்களிருவரும் தனியாக உணவருந்துவோம். அப்படிப்பட்ட சமயங்களில்—பண்ணையைப் பற்றிய கவலைகளுக்கும் உழைப்புக்கும் பிறகு—அநேகமாக எப்பொழுதுமே அவர் குதூகலமாக இருப்பார். நாங்கள் அந்த மனேபாவத்தைக் கட்டுக்கடங்காத பரவசம் என்று கூறுவோம். அன்று காலையில் என்ன செய்தீர்கள் என்று நான் பெரும்பாலும் கேட்பேன். அவர் ஏதாவது இட்டுக் கட்டிச் சொல்வார். நாங்கள் வயிறு புண்ணுகின்றவரை சிரிப்போம். சில சமயங்களில் இதைக் காட்டிலும் அக்கறையோடு சொல்லுங்கள் என்று நான் வற்புறுத்துவேன். அவர் தன்னுடைய சிரிப்பை அடக்க முயற்சி செய்து கொண்டு அப்படிப்பட்ட வர்ணனையைக் கூறுவார். நான் அவருடைய கன்களையும் அசைகின்ற உதடுகளையும் பார்த்துக் கொண்டு எதையும் புரிந்து கொள்ளாமல் உட்கார்ந்திருப்பேன்—அவரைப் பார்ப்பதும் அவருடைய

குரலைக் கேட்பதும் எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது.

''இப்பொழுது என்ன சொன்னேன்? திருப்பிச் சொல்'' என்று அவர் கேட்பார். என்னால் ஒரு விஷயத்தைக் கூட நினைவுபடுத்திக் கொள்ள முடியாது. அவர் என்னிடம் தன்னைப் பற்றியும் என்னைப் பற்றியும் பேசாமல் முற்றிலும் வேறு ஏதோ ஒன்றைப் பற்றிப் பேசுவது பொருளில்லாததாகத் தோன்றியது. அந்த வெளியுலகத்தில் என்ன நடந்தால் நமக்கென்ன? இதற்கு வெகு காலத்துக்குப் பிறகு தான் நான் அவருடைய விவகாரங்களைப் புரிந்து கொண்டு அக்கறை எடுத்துக் கொள்ளத் தொடங்கினேன். ததியானு ஸெமியோனவ்னு மதிய உணவு நேரம் வருகின்ற வரை தன் அறையிலேயே இருப்பாள். அவள் காலையில் தனியாகத் தேநீர் அருந்துவாள். நாங்கள் காலை வாழ்த்துக்களைத் தூதர்கள் மூலமாகப் பரிமாறிக் கொள்வோம். அவளுடைய பணிப்பெண் எனக்கு முன்பாகக் கைகளை மடக்கியபடி நின்று கொண்டு, நேற்று உலாவித் திரும்பிய பிறகு நாங்கள் நன்ருகத் தூங்கினேமா என்று ததியானு ஸெமியோனவ்னு தெரிந்து கொள்ள விரும்புவதாகவும், அவளைப் பொறுத்தவரை இரவு முழுவதும் விலாவில் வலி ஏற்பட்டதாகவும் இரவில் ஒரு பட்டிக்காட்டு நாய் குரைத்து அவள் தூக்கத்தைக் கெடுத்துவிட்டதாகவும் கம்பீரமாகத் தெரிவிக்கும் பொழுது எங்களுடைய தனியான, பைத்தியக்காரத்தனமான, மகிழ்ச்சி நிறைந்த உல

கத்தில் அவளுடைய கௌரவமிக்க, ஒழுங்கு நிறைந்த மூலையிலிருந்து வந்த ஒரு குரல் மிகவும் வினோதமாக ஒலித்த காரணத்தால், பெரும்பாலும் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் நான் பலமாகச் சிரித்து விடுவேன். ''மேலும் பிஸ்கட்டுகள் எப்படி இருந்தன என்று கேட்டுவருமாறு உத்தர விட்டிருப்பதாகவும், தராஸ் அவற்றைத் தயாரிக்கவில்லையென்றும் ஒரு பயிற்சி என்ற முறையில் நிக்கலாஷா முதல் தடவையாக அவற்றைத் தயாரித்ததாகவும், பிஸ்கட்டுகள் —குறிப்பாக கிரெண்டெல்கி*—அவ்வளவு மோசமல்ல, ஆனால் ரொட்டியை அவன் கருக வைத்துவிட்டான்'' என்று தனக்குத் தோன்று வதாகவும் அவள் எங்களுக்குத் தகவல் தெரி வித்திருப்பாள். மாலையுணவுக்கு முன்பு என் கணவரும் நானும் பெரும்பாலும் ஒன்றாக இருப் பதில்லை. நான் பியானோ வாசிப்பேன் அல்லது படித்துக் கொண்டிருப்பேன். அவர் எழுதுவார் அல்லது மறுபடியும் வெளியே செல்வார். ஆனால் நான்கு மணிக்கு நாங்கள் எல்லோரும் நடைக்கூடத்துக்குள் செல்வோம். அத்தை தன் அறையிலிருந்து புறப்பட்டு வருவாள். பிரபுக் குடும்பங்களில் பிறந்த ஆனால் நொடித் துப்போன பெண்கள் மற்றும் கடவுள் பக்தி யுள்ள யாத்ரிகர்கள்—இந்த ரகங்களைச் சேர்ந்த இரண்டு அல்லது மூன்று பேர்கள் வீட்டில்

* கோதுமை மாவில் செய்யப்படும் பிஸ் கட்டு.

எப்பொழுதுமே இருப்பார்கள்—அங்கே தலை காட்டுவார்கள். ஒவ்வொரு நாளும் முறை பிசகாமல் என் கணவர் தன் தாயாருக்குக் கைலாகு கொடுத்து உணவருந்த அழைத்துச் செல்வார். அவர் அடுத்த கையை எனக்குத் தர வேண்டுமென்று அவள் வற்புறுத்துவாள். எனவே ஒவ்வொரு தடவையும் நாங்கள் கதவு வழியாகக் கூட்டமாக நெருக்கிக் கொண்டு ஒருவர் பாதையில் மற்றவர் குறுக்கிட்டவாறு உள்ளே நுழைவோம். அத்தை மாலையுணவு நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்குவார்கள். உரையாடல் மிகவும் முறையானதாக, உணர்ச்சிவேகமில்லாததாக —ஓரளவுக்கு வீறமைதி கொண்டதாகக் கூட இருக்கும். ஆனால் என் கணவருக்கும் எனக்குமிடையே நடக்கும் சாதாரண உரையாடல் இந்த கம்பீரத்தைக் குலைக்கும். அல்லது சில சமயங்களில் தாயாருக்கும் மகனுக்குமிடையே விவாதமேற்படும் அல்லது அவர்கள் ஒருவரையொருவர் கேலி செய்து கொள்வார்கள். அவர்கள் விவாதிப்பதையும் கேலியாகப் பேசுவதையும் கேட்பதில் எனக்கு விருப்பம் அதிகம். ஏனென்றால் அவர்கள் இருவரையும் இணைக்கின்ற அன்பின் ஆழத்தையும் மென்மையையும் இவற்றில் நான் மிகவும் வன்மையாக உணர்ந்தேன். உணவருந்திய பிறகு அத்தை உபசரிப்பு அறையில் ஒரு பெரிய சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு புகையிலையைப் பொடியாக அரைப்பாள் அல்லது புதிய புத்தகங்களில் ஒட்டிக் கொண்டிருக்கும் பக்கங்களைப் பிரித்தெடுப்பாள். என் கணவர் உரத்த

குரலில் படிப்பார் அல்லது பியாஞே வாசிக்க நடைக் கூடத்துக்குள் செல்வார். அந்த சமயத்தில் நாங்கள் இருவரும் அதிகமாகப் படித்தோம். ஆனுல் இசைதான் எங்களுடைய மிகச் சிறந்த, மிகப் பிரியமான பொழுது போக்குச் சாதனமாக இருந்தது. எங்களுடைய இதயங்களில் இசை புதிய நரம்புகளை மீட்டியது. எங்களை ஒருவருக்கொருவர் இன்னும் சிறந்த முறையில் வெளிக்காட்டுவதாகத் தோன்றியது. அவருக்கு மிகவும் பிரியமான பாடல்களை நான் வாசிக்கும் பொழுது அவர் சற்றுத் தள்ளியிருந்த சோபாவில் உட்கார்ந்து கொள்வார். என்ஞல் அவரை மிகக் சிறிதே பார்க்க முடிந்தது. இசை தன்னிடம் ஏற்படுத்தும் மாற்றங்களை நான் பார்த்துவிடுவேஞே என்ற வெட்கம் அவரிடத்திலிருந்தது. எனவே அதை மறைக்க முயற்சி செய்வார். ஆனுல் பெரும்பாலும் அவர் எதிர்பார்க்காத நேரங்களில் நான் பியாஞேவிலிருந்து எழுந்து அவர் மறைப்பதற்காக மிகவும் பாடுபடுகின்ற அவருடைய உணர்ச்சியின் சுவடுகளை, முகத்தில் அதிகரித்திருக்கும் பளபளப்பை, அவருடைய கண்களில் ஏற்பட்டிருக்கும் ஈரத்தைப் பார்ப்பதற்காக அவருக்குப் பக்கத்தில் போவேன். நாங்கள் நடைக் கூடத்தில் உட்கார்ந்திருக்கும் பொழுது பார்க்க வேண்டும் என்று அத்தை அடிக்கடி விரும்புவாள். ஆனுல் எங்களுக்குச் சங்கடத்தை உண்டாக்கிவிடக் கூடாது என்றும் அஞ்சுவாள். ஏதோ சிந்தனையிலிருப்பதைப் போன்ற, அலட்சியமான முகத்தோற்றத்தோடு எங்களு

டைய அறையின் வழியாக நடந்து செல்வாள். ஆனால் அவள் தன் அறைக்குள் போய்விட்டு சீக்கிரத்திலேயே திரும்பி வருவதற்கு ஒரு காரணமும் கிடையாதென்பது எனக்குத் தெரியும். மாலையில் உபசரிப்பு அறையில் நான் தேநீரைக் கலந்து கோப்பைகளில் ஊற்றுவேன். மறுபடியும் அங்கே வீட்டிலுள்ள எல்லோரும் கூடியிருப்பார்கள். பளபளப்பான சமோவார் பாத்திரத்தைச் சுற்றி அவர்கள் அமைதியாகக் குழுமியிருப்பது கோப்பைகளையும் டம்ளர்களையும் ஒவ்வொருவராக வாங்கி அடுத்தவரிடம் கொடுப்பது எனக்கு நெடுங்காலம் வரை மன உலைவைக் கொடுத்தது. இந்த கௌரவத்துக்கு நான் தகுதி உடையவளல்ல; நான் மிகவும் இளமையானவள், விளையாட்டுத்தனமானவள், எனவே அவ்வளவு பெரிய சமோவார் பாத்திரத்தின் வடிகுழாயைத் திருப்புவதற்கு நிக்கீதாவின் தட்டில் டம்ளர்களை வைத்து ''பியோத்தர் இவானவிச்சுக்கும் மரீயா மீனிச்னாவுக்கும்'' என்று சொல்லிவிட்டுப் பிறகு ''இன்னும் ஜீனி வேண்டுமா?' என்று கேட்பதற்குத் தகுதி உடையவளல்ல என்று நினைத்தேன். மேலும் தாதிக்கும் அதிகமான சலுகைகளை அனுபவித்துக் கொண்டிருக்கும் முக்கியமான வேலைக்காரர்களுக்கும் ஜீனிக் கட்டிகளைத் தட்டில் விட்டுவைக்க வேண்டும். ''மிகப் பிரமாதம்! மிகப் பிரமாதம்! உண்மையான விருந்தளிக்கும் பெண்ணைப் போலவே இருக்கிறது'' என்று என் கணவர் அடிக்கடி

கூறுவார். அது என் குழப்பத்தை மேலும் அதிகப்படுத்தும்.

தேநீர் அருந்திய பிறகு அத்தை ''பொறுமை'' என்ற சீட்டாட்டத்தை விளையாடுவதற்காகச் சீட்டுகளை எடுத்து வைப்பாள். அல்லது மரீயா மீனிச்னுவை ஜோசியம் பார்க்கச் சொல்லுவாள். பிறகு அவள் எங்களிருவரையும் முத்தமிட்டு எங்கள் மீது சிலுவைக் குறி போடுவாள். நாங்கள் எங்கள் அறைக்குப் போவோம். நாங்கள் வழக்கமாக நள்ளிரவு வரை விழித்துக் கொண்டிருப்போம். ஒரு நாளில் அது தான் சிறப்பான, மிகவும் இனிமையான நேரம். அவர் தன்னுடைய முந்திய வாழ்க்கையைப் பற்றி என்னிடம் கூறுவார் அல்லது நாங்கள் திட்டங்கள் தயாரிப்போம், சில சமயங்களில் நாங்கள் தத்துவஞான விவாதங்களிலும் ஈடுபடுவோம். மாடியில் உள்ளவர்களுக்குக் கேட்கக்கூடாதென்று மெதுவாகப் பேசுவதற்கு நாங்கள் முயற்சி செய்வோம்—நாங்கள் சீக்கிரமாகத் தூங்கிவிட வேண்டுமென்று ததியானு ஸெமியோனவ்னு வற்புறுத்தினுள். சில சமயங்களில் எங்களுக்குப் பசியெடுக்கும். சமையலறைக்குப் போய் நிக்கீதாவின் தயவில் குளிர்ந்து போன இரவு உணவை எடுத்துக் கொண்டு வந்து என்னுடைய அறையில் உட்கார்ந்து சாப்பிடுவோம். அந்தப் பெரிய, பழைய வீட்டில் கடந்த காலத்தின் மற்றும் ததியானு ஸெமியோனவ்னுவின் கண்டிப்பு ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தது. அவள் மட்டுமல்ல, முதுமையடைந்த வேலைக்காரர்களும் நாற்காலி,

சோபாக்களும்—திரைகள் கூட—மரியாதையையும் ஒரு வகையான அச்சத்தையும் என்னிடம் ஏற்படுத்தின. இது உண்மையில் எங்களுக்குச் சொந்தமான இடமல்ல, அவரும் நானும் அங்கே வசிக்கின்றவரை மிகவும் ஜாக்கிரதையாகவும் கவனத்தோடும் இருக்க வேண்டும் என்ற உணர்வை ஏற்படுத்தின. இன்று அதை நினைக்கும் பொழுது, எல்லோரையும் கட்டுப்படுத்திய அந்த வீட்டின் மாற்றமில்லாத ஒழுங்குமுறை, எங்கு பார்த்தாலும் இருக்கின்ற சோம்பேறித்தனமான, மற்றவர்களுடைய விவகாரங்களில் தலையிடுகின்ற நபர்களைக் கொண்ட பட்டாளம் ஆகியவற்றினுல் அந்த வீட்டின் பெரும் பகுதியும் புழுக்கமாக, வசதியில்லாததாகத் தோன்றுகிறது. ஆனுல் அப்பொழுது இந்தக் கட்டுப்பாடு எங்கள் காதலை அதிகப்படுத்தியது. என்னைப் போலவே அவரும் தன்னுடைய அதிருப்தியை வெளிக் காட்டியதில்லை. அதற்கு மாருக, அதிருப்தியளிக்கக் கூடியனவற்றைப் பார்க்காமலிருக்க அவர் முயற்சி செய்தார் என்று தோன்றுகிறது. அத்தையின் வேலைக்காரனுன திமீத்ரி ஸீதரவுக்குப் புகை பிடிக்கின்ற பழக்கம் உண்டு. ஒவ்வொரு நாளும் மாலையுணவுக்குப் பிறகு—நாங்கள் நடைக்கூடத்தில் உட்கார்ந்திருக்கும் பொழுது—அவன் என் கணவருடைய படிப்பு அறைக்குள் சென்று செருகுபெட்டியைத் திறந்து புகையிலையை எடுத்துக் கொள்வான். ஸெர்கேய் மிஹாய்லவிச் அடிமேலடிவைத்து நடந்து என்

னருகில் வந்து, கண்ணைச் சிமிட்டிக் கொண்டு, உதடுகளில் விரலை வைத்துக் கொண்டு, கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டு திமீத்ரி ஸீதரவைப் பார் (தன்னை யாரும் பார்த்திருப்பார்கள் என்று அவன் ஒருக்காலும் சந்தேகித்ததில்லை) என்று சைகை காட்டுவதைப் பார்க்க வேடிக்கையாக இருக்கும். எல்லாம் நன்றாக முடிந்துவிட்டது என்ற திருப்தியில் திமீத்ரி ஸீதரவ் எங்களை கவனிக்காமல் மகிழ்ச்சியோடு போகும் பொழுது என் கணவர் என்னை மிகவும் அன்போடு பாராட்டுவார்; சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் செய்வதைப் போல என்னை முத்தமிடுவார். சில சமயங்களில் அவருடைய பற்றற்ற தன்மை, சகிப்புத் தன்மை, எல்லாவற்றையுமே அலட்சியமாகக் கருதுவதாக நடந்து கொள்வது ஆகியவை எனக்கு அதிருப்தியைக் கொடுத்தன. அது அவருடைய பலவீனம் என்று நான் நினைத்தேன்; ஆனால் நானும் துல்லியமாக அப்படிப்பட்டவளே என்பதைச் சிறிதுகூட நினைக்கவில்லை. ''அவர் ஒரு குழந்தையைப் போல இருக்கிறாரே?'' என்று நான் நினைத்துக் கொண்டேன்.

ஒரு சமயத்தில் அவருடைய பலவீனத்தைப் பற்றி என்னுடைய வியப்பைத் தெரிவித்த பொழுது ''அன்பே! நான் மிகவும் மகிழ்ச்சியை அனுபவிக்கும் பொழுது எதைப் பற்றியாவது எப்படி அதிருப்தியடைவேன்? மற்றவர்களைத் திருத்துவதைக் காட்டிலும் நாமே திருந்திவிடுவது நல்லது—நெடுங்காலத்துக்கு முன்பே நான் இதைப் புரிந்து கொண்டேன். மகிழ்ச்சி

யாக இருக்க முடியாத நிலைமை என்று எதுவு மில்லை. நாம்—நீயும் நானும்—மிகவும் மகிழ்ச் சியாக இருக்கிறோம்! என்னுல் கோபமடைய முடியாது. இப்பொழுது எனக்குக் கெட்டதே கிடையாது—எல்லாம் பரிதாபமானவை அல் லது வேடிக்கையானவைதான். எல்லாவற்றி லும் முக்கியமானது—le mieux est l'ennemi du bien.* மணி அடிக்கும் பொழுது அல்லது ஒரு கடிதம் வருகின்ற பொழுது அல்லது நான் காலையில் விழிக்கின்ற பொழுது கூட எனக்கு பயம் ஏற்படுகிறது. வாழ்க்கை தொடர்ந்து போய்க் கொண்டே இருக்கிறது. விஷயங்கள் மாற்றமடைய வேண்டும், இந்தக் கணத்திலி ருப்பதைக் காட்டிலும் வேறு எதுவுமே சிறப் பாக இருக்க முடியாது என்பதால் நான் பய மடைகிறேன்'' என்று அவர் சொல்வார்.

அவர் கூறியவை எனக்குப் புரியவில்லை என் ருலும் அவரை நான் நம்பினேன். நான் மகிழ்ச்சி யோடிருந்தேன். எல்லாமே எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருப்பதாக, எல்லோரி டமும் எப்படி இருக்கிறதோ அப்படியே இருப் பதாக ஆனுல் எங்கோ ஓரிடத்தில் வேருெரு மகிழ்ச்சி—இதைக் காட்டிலும் அதிகமான தல்ல, ஆனுல் வேறு விதமானது—இருப்பதாக எனக்குத் தோன்றியது.

இவ்விதமாக இரண்டு மாதங்கள் கழிந் தன. குளிர்காலம் அதன் குளிர்ச்சியோடும் பனி யோடும் வந்தது. என் கணவர் என்னுேடிருந்த

---

* மிக நல்லவைக்கு (better) எதிரி சிறந்த வையே (best) **(பிரெஞ்சுப் பழமொழி.)**

போதிலும் நான் தனிமையை உணரத் தொடங்கினேன். வாழ்க்கை ஒரே மாதிரியாகத் திரும்பவும் நடைபெறுகிறது, என்னிடத்திலோ அல்லது அவரிடத்திலோ புதுமையாக ஒன்று மில்லை, நாங்கள் பழைய வாழ்க்கைக்குத் திரும் பிக் கொண்டிருக்கிறோம் என்று நான் உணரத் தொடங்கினேன். அவர் நானில்லாமல் தன் னுடைய சொந்த விவகாரங்களில் முன்னைக் காட்டிலும் மும்முரமாக ஈடுபட்டார். அவரி டம் ஒரு ரகசிய உலகம் இருக்கிறது, அதற் குள் என்னை அனுமதிக்க அவர் விரும்பவில்லை என்று நான் கற்பனை செய்தேன். அவரிடமிருந்த நிரந்தரமான நிதானம் எனக்கு எரிச்சலேற் படுத்தியது. நான் முன்னைக் காட்டிலும் குறை வாக அவரைக் காதலிக்கவில்லை, அவருடைய காதலில் நான் பெற்ற மகிழ்ச்சியும் குறைய வில்லை. ஆனால் என் காதல் இருந்த இடத்தி லேயே நின்றுவிட்டது, அது வளர்ச்சியடைய வில்லை. நிம்மதியின்மை என்ற புதிய உணர்ச்சி என் இதயத்திற்குள் நுழைந்தது. அவரைக் காதலிக்கின்ற கூர்மையான மகிழ்ச்சியை நான் அனுபவித்த பிறகு வெறும் காதலைத் தொடர் வது எனக்குப் போதுமானதாக இருக்கவில்லை. நிதானமான வாழ்க்கை நீரோட்டத்தில் இருந் ததைக் காட்டிலும் அதிகமான இயக்கத்தை நான் விரும்பினேன். நான் ஆபத்தையும் பர பரப்பையும் விரும்பினேன். என்னுடைய காத லுக்காக என்னை தியாகம் செய்து கொள்ள விரும்பினேன். என்னிடம் அபரிமிதமான சக்தி இருந்தது. எங்களுடைய அமைதியான

வாழ்க்கையில் அதற்குப் போக்கிடம் இல்லை. எனக்கு மனச் சோர்வு ஏற்பட்டது. நான் அவரிடமிருந்து அதை மறைக்க முயற்சி செய் தேன். சில சமயங்களில் என்னிடம் ஏற்பட்ட கட்டுப் பாடில்லாத மோகமும் குதூகலமும் அவரை பயமுறுத்தின. அவர் முன்பே என் னுடைய நிலையை கவனித்துவிட்ட படியால் நகரத்துக்குப் போகலாம் என்று யோசனை கூறினர். ஆனல் நான் அதற்கு எதிராக இருந் தேன். நம்முடைய வாழ்க்கை முறையை மாற்ற வேண்டாம், நம்முடைய மகிழ்ச்சி யைக் கெடுக்க வேண்டாம் என்று நான் அவ ரைக் கேட்டுக் கொண்டேன். நான் உண்மை யிலேயே மகிழ்ச்சியாகத்தான் இருந்தேன். ஆனல் எந்த முயற்சியும், எப்படிப்பட்ட தியாகமும் செய்யாமலே, எனக்கு மகிழ்ச்சி ஏற்படுவது என்னைத் துன்புறுத்தியது. உழைக்க வேண்டும், தியாகம் செய்ய வேண்டும் என்ற எண்ணமும் எனக்குத் துன்பத் தைக் கொடுத்தது. நான் அவரைக் காதலித் தேன், அவருக்கு நான்தான் அனைத்துமாக இருப்பதைக் கண்டேன். ஆனல் எல்லோரும் எங்களுடைய காதலைப் பார்க்க வேண்டு மென்று விரும்பினேன். நான் அவரைக் காத லிக்காமல் தடுக்க அவர்கள் முயற்சி செய்ய வேண்டும், ஆனல் தங்களுடைய எல்லா முயற் சிகளும் வீணுவதை அவர்கள் பார்க்க வேண் டும் என்று நான் விரும்பினேன். என்னுடைய மனம், என்னுடைய பாசங்கள் கூடக் காதலில் மூழ்கியிருந்தன. ஆனல் என்னிடம் இன்னெரு

உணர்ச்சி, இளமை உணர்ச்சி, வாழ்க்கையில் பரபரப்பு அவசியம் என்ற உணர்ச்சி இருந்தது. எங்களுடைய அமைதியான வாழ்க்கையில் அது நிறைவேறவில்லை. நான் விரும்பும் பொழுது நாங்கள் நகரத்துக்குப் போகலாம் என்று அவர் ஏன் கூறினர்? அவர் அதைச் சொல்லியிராவிட்டால், என்னைத் துன்புறுத்திக் கொண்டிருக்கும் உணர்ச்சி தவறானது, தீங்கானது என்பதை நான் உணர்ந்திருப்பேன். நான் விரும்பிக் கொண்டிருந்த தியாகத்தைச் செய்வதற்குரிய சந்தர்ப்பம் இந்த உணர்ச்சியை நசுக்குவதில் தான் இருக்கிறது என்பதை நான் உணராதது என்னுடைய தவறுதான். நாங்கள் நகரத்துக்குப் போவதன் மூலம் எனக்கு ஏற்பட்ட அலுப்புணர்ச்சியிலிருந்து தப்பிவிட முடியும் என்ற எண்ணம் தொடர்ந்து எனக்கு ஏற்பட்டது. ஆனல் அதே சமயத்தில் அவர் நேசித்த எல்லாவற்றிடமிருந்தும்—எனக்காக—அவரைப் பிரித்துக் கொண்டு போவது எனக்கு வருத்தமாகவும் வெட்கமாகவும் இருந்தது.

நாட்கள் மெதுவாக நகர்ந்தன. வீட்டைச் சுற்றிலும் பனி மென்மேலும் உயரமாக விழுந்தது. நாங்களிருவரும் எப்பொழுதும் சேர்ந்தே இருந்தோம், ஒருவர் பார்வையிலிருந்து அடுத்தவர் ஒருபோதும் மறையவில்லை. நகரத்தில் அதன் பளபளப்புக்கும் கூட்டத்துக்கும் நடுவே ஏராளமானவர்கள் எங்களையும் எங்களுடைய கணப் பொழுதில் மறைகின்ற வாழ்க்கையையும் பற்றிக் கடுகளவு கூடச் சிந்திக்காமல் பர

பரப்பையும் துன்பத்தையும் மகிழ்ச்சியையும் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். எங்களு டைய பழக்கங்கள் எங்கள் வாழ்க்கையை வரை யறுக்கப்பட்ட கட்டுக்கோப்புக்குள் திணித்துக் கொண்டிருக்கின்றன, எங்களுடைய காதல் சுதந்திரமாக இருப்பதற்குப் பதிலாகக் காலத் தின் பாசமில்லாத, ஒட்டுறவில்லாத நீரோட் டத்துக்குக் கீழ்ப்பட்டுவிட்டது என்ற உணர்ச்சி, எனக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. காலை யில் நாங்கள் குதூகலமாக இருப்போம், மதிய உணவு நேரத்தின் போது மரியாதையாக இருப் போம், மாலையில் கனிவாக இருப்போம். ''நன் மையைச் செய்!..'' என்று நான் எனக்குள் சொல்லிக் கொள்வேன். ''நன்மையே செய்ய வேண்டும், நேர்மையாக வாழ்க்கை நடத்த வேண்டும் என்று அவர் வற்புறுத்துகிறார். நல்ல காரியங்களைச் செய்ய பின்னால் போதுமான காலம் இருக்கும், பார்த்துக் கொள்ளலாம். இப்பொழுதே—என் உடலில் பலம் இருக்கும் பொழுதே—செய்ய வேண்டிய காரியங்கள் இருக்கின்றன. அவற்றை உடனே செய்ய வேண்டும்.'' நன்மை செய்வதை நான் விரும் பவில்லை. பரபரப்பை நான் விரும்பினேன். காதல் எங்களுடைய வாழ்க்கையை ஆள வேண்டும் என்று நான் விரும்பினேன்; வாழ்க் கை எங்களுடைய காதலைக் கட்டுப்படுத்துவ தை நான் விரும்பவில்லை. நான் அவரோடு செங் குத்தான மலைச்சரிவின் விளிம்புக்குப் போய் ''ஒரு காலடி வைத்தால் இந்த விளிம்பிலிருந்து கீழே விழுந்து விடுவேன், ஒரு கணம், பிறகு

எனக்கு மரணம்'' என்று சொல்ல விரும்பி னேன். அவர் மரணத்தைப் போல வெளுப் படைந்து போய் தன் பலமான கரங்களால் என்னைத் தூக்கி அந்த விளிம்புக்கு மேலே ஒரு கண நேரம் வைத்திருந்துவிட்டு (அப்பொழுது என் இதயம் அப்படியே நின்றுவிடும்) என்னை எங்கோ கொண்டு போவார்.

இந்த மனநிலை என் உடல் நிலையைக் கெடுத்து என் உணர்ச்சி நரம்புகளை பாதித்தது. ஒரு நாள் காலையில் நான் வழக்கத்தைக் காட்டி லும் மோசமான மனநிலையில் இருந்த பொழுது, அவர் அலுவலகத்திலிருந்து முகத்தைச் சுளித் துக் கொண்டு வந்தார். அவரைப் பொறுத்த வரை அது மிகவும் அபூர்வமானதாகும். நான் உடனே இதை கவனித்தேன், என்ன நடந்தது என்று கேட்டேன். ஆனல் அவர் அதை என் னிடம் சொல்ல விரும்பவில்லை. அதைப் பற்றிப் பேசுகின்ற அளவுக்கு அது முக்கியமானதல்ல என்று அவர் பதிலளித்தார். அந்த விவகாரத் தைப் பற்றி நான் பின்னல் தெரிந்து கொண் டேன். மாவட்டப் போலீஸ் அதிகாரிக்கு என் கணவரைப் பிடிக்காது. அவர் எங்களுடைய விவசாயிகள் சிலரைக் கூப்பிட்டனுப்பி அவர் களிடம் சட்டவிரோதமான கோரிக்கைகளைத் தெரிவித்து அவர்களை பயமுறுத்தியிருக்கிருர். இதை ஒரு அற்பவிஷயம் என்று என் கணவரால் ஒதுக்க முடியவில்லை. எனவே அவர் ஆத்திரம டைந்தார். என்னேடு பேசுவதற்கும் அவர் விரும்பவில்லை. அவருடைய கவலையைப் புரிந்து கொள்ள இயலாத குழந்தையாக என்னைக்

கருதுவதால்தான் அப்படி நடந்து கொண்டார் என்று நான் கற்பனை செய்தேன். நான் முகத்தைத் திருப்பிக் கொண்டு மௌனமாக இருந்தேன். அப்பொழுது மரீயா மீனிச்னு எங்களோடு தங்கியிருந்தாள். தேநீர் அருந்த வருமாறு நான் அவளைக் கூப்பிட்டனுப்பினேன். நான் வேகமாகத் தேநீரைக் குடித்தேன். பிறகு மரீயா மீனிச்னுவை நடைக் கூடத்துக்குள் கூட்டிச் சென்று ஏதோ ஒரு அற்பமான விஷயத்தைப் பற்றி (உண்மையில் எனக்கு அதைப் பற்றி சிறிது கூட அக்கறை கிடையாது) உரத்த குரலில் பேசத் தொடங்கினேன். அவர் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார், அவ்வப்பொழுது என்னை ஏறிட்டுப் பார்த்தார். அது அதிகமாகப் பேசுமாறு—சிரிக்குமாறுகூட —என்னைத் தூண்டியது. எல்லாமே—நான் கூறியவை, மரீயா மீனிச்னு கூறியவை அனைத்துமே—எனக்கு வேடிக்கையைப் போலத் தோன்றின. கடைசியில் அவர் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் தன் படிப்பறைக்குள் சென்று கதவைச் சாத்திக் கொண்டார். அவர் போன உடனே என் குதூகலம் மிகவும் வேகமாக மறைந்தது மரீயா மீனிச்னுவுக்குக் குழப்பத்தைக் கொடுத்தது. அவள் ஏதேனும் தவறு நடந்துவிட்டதா என்று கேட்டாள். நான் பதில் சொல்லாமல் சோபாவின் மீது உட்கார்ந்தேன். எனக்கு அழுகை வந்தது. ''அவர் எதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்?'' என்று நான் சிந்தித்தேன். ''ஏதோ ஒரு குப்பை. அது அவருக்கு முக்கியமாகத் தோன்

றுகிறது. ஆனால் அது அற்ப விஷயம் என்பதை நான் எடுத்துக் காட்டிவிடுவேன். ஆனால் நான் புரிந்து கொள்ள மாட்டேன் என்று அவர் நினைக் கிறார். தன்னுடைய உயர்வினாலும் மேன்மை யினாலும் எப்பொழுமே சரியாக இருப்பதனா லும் என்னை அவமதிக்கிறார். ஆனால் எனக்கு அலுப்பு ஏற்படுகின்ற பொழுது, என்னுடைய வாழ்க்கை சூனியமாக இருப்பதைக் காணும் பொழுது, வாழ்வதற்கு, முன்னே செல்வதற்கு விரும்புகின்ற பொழுது நானும் சரியாகவே நினைக்கிறேன். ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணியும் புதிதாக ஏதாவதொன்றை நான் விரும்புகிறேன். ஆனால் அவர் இருந்த இடத்தி லேயே இருக்க விரும்புகிறார். நானும் அந்த இடத்திலேயே அவருடன் சேர்ந்து நிற்க வேண் டுமென்று விரும்புகிறார். இது அவருக்கு எவ் வளவு சுலபமாக இருக்கும்! அவர் என்னை நகரத்துக்குக் கூட்டிக் கொண்டு போக வேண் டியதில்லை. அவர் என்னைப் போல சாதாரண மாக, தடையுணர்ச்சிகள் இல்லாமல், பாசாங் குகள் இல்லாமலிருந்தால் போதுமே. அவர் என்னை எளிமையாக இருக்கச் சொல்கிறார், ஆனால் அவர் எளிமையானவராக இருக்கவில் லையே. அது தான் உண்மை!''

நான் மிகவும் ஆழமாகப் புண்பட்டதாக உணர்ந்தேன். எனக்கு அவரிடம் எரிச்சல் ஏற் பட்டது. அது எனக்கு பயத்தைக் கொடுத்த படியால் நான் அவரிடம் சென்றேன். அவர் தன்னுடைய படிப்பறையில் உட்கார்ந்து எழுதிக் கொண்டிருந்தார். என் காலடிச் சத்தம்

கேட்டதும், அவர் ஒரு கண நேரம் என்னை—அமைதியாக, சலனமில்லாமல்—ஏறிட்டுப் பார்த்தார். பிறகு தொடர்ந்து எழுதிக் கொண்டிருந்தார். அவருடைய பார்வை எனக்குப் பிடிக்கவில்லை. எனவே அவரை நெருங்காமல் மேசைக்குப் பக்கத்திலேயே நான் நின்றுகொண்டிருந்தேன். நான் ஒரு புத்த கத்தை எடுத்து அதன் பக்கங்களைப் புரட்டத் தொடங்கினேன். அவர் மறுபடியும் என்னைப் பார்த்தார்.

''மாஷா! உன் மனம் சரியில்லையா?'' என்று கேட்டார்.

''ஏன் கேட்கிறீர்கள்? இவ்வளவு மரியாதை எதற்கு?'' என்று சொல்வதைப் போல நான் அவரைப் பாசமில்லாமல் பார்த்தேன். அவர் தலையை ஆட்டிக் கொண்டு வெட்கத்தோடும் கனிவோடும் இளநகை புரிந்தார். முதல் தடவையாக நான் பதிலுக்குச் சிரிக்கவில்லை.

''இன்று என்ன நடந்தது? என்னிடம் சொல்லாமலிருப்பது ஏன்?'' என்று நான் கேட்டேன்.

''முக்கியமாக ஒன்றுமில்லை. ஒரு சின்ன விவகாரம்தான்'' என்று அவர் பதிலளித்தார். ''ஆனால் அதைப் பற்றி இப்பொழுது உன்னிடம் சொல்கிறேன். நம்முடைய விவசாயிகளில் இரண்டு பேர் நகரத்துக்குப் போனபொழுது...''

ஆனால் நான் அவரை முடிக்கவிடவில்லை.

''தேநீர் அருந்திய பொழுது நான் உங்களைக் கேட்டேன். நீங்கள் ஏன் என்னிடம் சொல்லவில்லை?''

''நான் எதையாவது சொல்லிவிடுவேனோ என்று நினைத்தேன். அதற்காக நான் பின்னால் வருத்தப்படக் கூடாதல்லவா? அப்பொழுது நான் கோபமாக இருந்தேன்.''

''அப்பொழுதுதான் நான் அதைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்பினேன்.''

''ஏன்?''

''நான் உங்களுக்கு எவ்விதமான உதவியும் ஒருபோதும் செய்ய முடியாது என்று நீங்கள் நினைப்பது ஏன்?''

''நான் அப்படி நினைக்கிறேனா?'' என்று அவர் பேனாவைக் கீழே எறிந்த படியே கேட்டார். ''நீ இல்லாமல் நான் வாழ முடியாது என்று நான் நினைக்கிறேன். நீ எல்லாவற்றிலும், எல்லாவற்றிலுமே எனக்கு உதவி செய்கிறாய். நீ எனக்கு உதவி செய்வது மட்டுமல்ல, நீயே எல்லாவற்றையும் செய்து விடுகிறாய். அசட்டுப் பெண்ணே!'' என்று சொல்லிவிட்டு அவர் சிரித்தார். ''என் முழு வாழ்க்கையும் நீயே! நீ இருப்பதனால்தான் எல்லாமே எனக்கு நல்லவையாகத் தோன்றுகின்றன. ஏனென்றால் நீ எனக்கு அவசியமாக இருக்கிறாய்...''

''ஆம். அது எனக்குத் தெரியும். நான் சாந்தப்படுத்தப்பட வேண்டிய அழகான, பிரியமான குழந்தை.'' இதைச் சொன்ன பொழுது என் குரலின் தொனி அவர் என்னை முதல் தடவையாகப் பார்ப்பதைப் போல ஆச்சரியமாகப் பார்க்கும்படி செய்தது. ''எனக்கு அமைதி வேண்டியதில்லை. அது உங்களிடம் போதுமான அளவுக்கு இருக்கிறது—போதுமான அளவுக்

கும் அதிகமாகவே இருக்கிறது'' என்றேன்.

''சரி. அது இப்படி நடந்தது'' என்று அவர் குறுக்கிட்டு அவசரமாகப் பேசத் தொடங்கினர். என் பேச்சை முடிக்க விடக் கூடாது என்று அவர் அஞ்சுவதைப் போலத் தோன்றியது. ''நீ என்ன செய்திருப்பாய்?''

''அதைப் பற்றி இப்பொழுது நான் கேட்க விரும்பவில்லை'' என்று நான் கூறினேன். உண்மையில் அதைக் கேட்க நான் விரும்பினேன். ஆனல் அவருடைய அமைதியைக் குலைப்பதில் எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. ''வாழ்வது போல நடிக்க நான் விரும்பவில்லை. உங்களைப் போல நானும் வாழ விரும்புகிறேன்.''

அவருடைய கூருணர்ச்சி நிறைந்த முகத்தில் வேதனையும் வலிந்து மேற்கொள்ளப்பட்ட கவனத்தின் சாயல்களும் தெரிந்தன.

''என்னை உங்களுக்குச் சமமாக நீங்கள் நடத்த வேண்டுமென்று நான் விரும்புகிறேன். நான் விரும்புவது...''

என்னுல் அந்த வாக்கியத்தை முடிக்க இயலவில்லை. ஏனென்ருல் அவரிடம் அதிகமான வருத்தம், மிகவும் ஆழமான வருத்தம் தோன்றியது. அவர் ஒரு விஞடி மௌனமாக இருந்தார்.

''நான் எந்த வகையில் உன்னைச் சமமாக நடத்தவில்லை?'' என்று அவர் கேட்டார். ''அந்தப் போலீஸ் அதிகாரியோடும் குடிமயக்கத்திலிருந்த விவசாயிகளோடும் வாதிடுவது நீயல்ல—நானே என்பதாலா?..''

''அது மட்டுமல்ல'' என்று நான் கூறினேன்.

''அன்பே! தயவு செய்து என்னைப் புரிந்து கொள்'' என்று அவர் தொடர்ந்து பேசினார். ''கவலை எப்பொழுதுமே வேதனைகளைக் கொடுக்கும் என்பது எனக்குத் தெரியும். அதைத் தெரிந்து கொள்ளும் அளவுக்குப் போதுமான காலம் வாழ்ந்துவிட்டேன். நான் உன்னை நேசிப்பதால் உன்னைக் கவலைகளிலிருந்து காப்பாற்ற விரும்புகிறேன். நான் உன்னிடம் வைத்திருக்கும் காதல்தான் எனக்கு மொத்த வாழ்க்கையுமாகும். அந்த வாழ்க்கையை என்னிடமிருந்து பறிக்காதே.''

''எப்பொழுதும் நீங்கள் சொல்வது தானே சரி!'' என்று நான் அவரைப் பார்க்காமலே கூறினேன்.

அவருடைய இதயத்தில் எல்லாமே மறுபடியும் தெளிவாகவும் அமைதியாகவும் இருக்கிறது, ஆனால் என் இதயத்தில் இந்த எரிச்சலும்—கழிவிரக்கத்தைப் போன்ற ஒன்றும் எவ்வளவு தொல்லை தருகின்றன என்பதை நினைத்து எரிச்சலடைந்தேன்.

''மாஷா! எதற்காகக் கலங்குகிறாய்? நம்மில் யார் சரி என்பது பிரச்சினையல்ல. அது முற்றிலும் வேறு. நீ என் மீது கோபப்படுவது ஏன்? இதைப் பற்றி நன்றாகச் சிந்திக்கும் வரை நீ எதுவும் சொல்ல வேண்டாம். அதன் பிறகு எல்லாவற்றையும் என்னிடம் சொல். உனக்கு என் மீது அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது. ஒரு வேளை அது நியாயமாகவும் இருக்கலாம். ஆனால் நான் என்ன தவறு செய்தேன் என்பதைத் துல்

லியமாக என்னிடம் சொல்'' என்று அவர் கூறினர்.

ஆனல் நான் எப்படி என் இதயம் முழுவதையும் அவரிடம் திறந்து காட்ட முடியும்? அவர் உடனடியாக என்னைப் புரிந்து கொண்டதும் மறுபடியும் அவருக்கு நான் அறியாக் குழந்தையாகவே இருந்ததும் அவர் பார்க்காத, முன் கூட்டி அறியாத எதையும் நான் செய்ய முடியாததும் எனக்கு அதிகமான வேகத்தை ஏற்படுத்தின.

''உங்களிடம் எனக்குக் கோபமில்லை. எனக்குச் சலிப்பாக இருக்கிறது. நான் சலிப்படைய விரும்பவில்லை. ஆனல் அப்படித்தான் இருக்க வேண்டும் என்று நீங்கள் சொல்கிறீர்கள். நீங்கள் சொல்வதுதானே மறுபடியும் சரியாக இருக்கும்!'' என்றேன்.

இதைச் சொல்லும் பொழுது நான் அவரைக் கவனித்தேன். நான் விரும்பிய பலன் கிடைத்து விட்டது. அவருடைய அமைதி ஓடிவிட்டது. அவருடைய முகத்தில் வேதனையும் கலவரமும் தோன்றின.

''மாஷா!'' என்று அவர் தணிந்த, படபடப்பான குரலில் பேசத் தொடங்கினர். ''இப்பொழுது நாம் பேசிக் கொண்டிருப்பது விளையாட்டு விஷயம் அல்ல. நம்முடைய எதிர்காலத்தை இப்பொழுது முடிவு செய்கிறோம். நீ பதிலளிக்காமல் நான் சொல்வதை கவனமாகக் கேட்க வேண்டும். நீ ஏன் என்னைச் சித்திரவதை செய்ய விரும்புகிருய்?''

ஆனல் நான் குறுக்கிட்டுப் பேசினேன்.

''நீங்கள் எதைச் சொன்னாலும் அதுதான் சரியானது. அது எனக்குத் தெரியும். எனவே நீங்கள் ஒன்றும் சொல்லாமலிருப்பதுதான் நல்லது.'' அங்கே நான் பேசவில்லை, ஏதோ ஒரு பேய் என் உடலில் புகுந்து பேசியதைப் போல சிறிதும் பாசமில்லாமல் நான் பதிலளித்தேன்.

''நீ என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாய் என்பது உனக்குத் தெரியுமா?'' என்று அவர் கேட்டார்.

நான் குலுங்கி அழுதேன். அதற்குப் பிறகு தான் என் மனம் இலேசாயிற்று. அவர் எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு மௌனமாக இருந்தார். நான் அவருக்காக வருத்தப் பட்டேன். என்னை நினைத்து வெட்கப்பட்டேன். நான் செய்த காரியத்துக்காக எரிச்சலடைந்தேன். நான் அவர் முகத்தைப் பார்க்கவில்லை. அவர் என்னைக் கண்டிப்போடு அல்லது குழப்பத்தோடு பார்த்துக் கொண்டிருப்பார் என்று நினைத்தேன். நான் தலையை உயர்த்தினேன். என்னை மன்னிப்பாயா என்று கேட்பதைப் போன்ற மென்மையான, கனிவான பார்வை என்னை நோக்கித் திரும்பியது. நான் அவர் கையைப் பிடித்துக் கொண்டேன்.

''என்னை மன்னியுங்கள்! நான் தெரியாமல் பேசிவிட்டேன்.''

''இல்லை. எனக்குப் புரிகிறது. நீ சொன்னது சரியே.''

''என்ன?''

''நாம் பீட்டர்ஸ்பர்குக்குப் போக வேண்டும். இங்கே நமக்கு ஒரு வேலையுமில்லை.''

''உங்கள் விருப்பப்படியே செய்யுங்கள்'' என்று நான் கூறினேன்.

அவர் என்னை அணைத்து முத்தமிட்டார்.

''என்னை மன்னித்துவிடு. நான் தவறு செய்து விட்டேன்'' என்று அவர் கூறினார்.

அன்றைய மாலை நேரத்தில் நான் அவருக்காக வெகு நேரம் பியானோ வாசித்தேன். அவர் தனக்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டு அறையைச் சுற்றி நடந்து கொண்டிருந்தார். அப்படி முணுமுணுப்பது அவருடைய பழக்கம். என்ன பேசிக் கொண்டிருக்கிறீர்கள் என்று நான் அடிக்கடி அவரைக் கேட்பதுண்டு. அவர் முதலில் சிந்திப்பார், பிறகு துல்லியமாகத் தன் கருத்துக்களை எடுத்துக் கூறுவார். அவர் கவிதை வரிகளை ஒப்பித்துக் கொண்டிருப்பார், அல்லது சில சமயங்களில் அர்த்தமில்லாத உளறலை முணுமுணுத்துக் கொண்டிருப்பார். ஆனால் அந்த உளறல் கூட அவருடைய மன நிலையை எனக்கு எடுத்துக் காட்டும்.

''இன்று எதை முணுமுணுத்துக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று நான் கேட்டேன்.

அவர் நின்று, ஒரு வினாடி நேரம் சிந்தித்த பிறகு புன்சிரிப்போடு லேர்மந்தவ் எழுதிய இரண்டு வரிகளை ஒப்பித்தார்:

...அவன் புயலைத் தேடும் பைத்தியக்காரன்
புயல் அவனுக்கு நிம்மதியளிக்குமா?

''அவர் ஒரு ஆண் மகன் என்பதைக் காட்டிலும் உயர்வானவர்—அவருக்கு எல்லாமே

தெரிந்திருக்கிறது!'' என்று நான் நினைத்தேன். ''இவரை நான் காதலிக்காமலிருக்க முடியுமா?''

நான் எழுந்து நின்று அவர் கையைப் பிடித்துக் கொண்டு அவருடைய காலடிகளுக்குத் தகுந்தவாறு அவரோடு சேர்ந்து நடக்கத் தொடங்கினேன்.

''இது உண்மையா?'' என்று அவர் என் கண்களைப் பார்த்துப் புன்சிரிப்போடு கேட்டார்.

''ஆம்'' என்று நான் முணுமுணுத்தேன். எங்கள் இருவரிடமும் குதூகலம் பொங்கியது. எங்களுடைய கண்கள் சிரித்துக் கொண்டிருந்தன. நாங்கள் கால்விரல்களில் நடந்து மென் மேலும் காலடிகளை நீளமாகப் போட்டோம். இப்படியே எல்லா அறைகளின் வழியாகவும் நடந்து சென்றோம். இதைப் பார்த்த கிரிகோரி மிகவும் கோபமடைந்தான். உபசரிப்பு அறையில் ''பொறுமை'' என்ற சீட்டாட்டத்தை விளையாடிக் கொண்டிருந்த அத்தை திகைப்படைந்தாள். உணவருந்தும் அறைக்குப் போனதும் நாங்கள் நின்று ஒருவரையொருவர் பார்த்தோம். உடனே படீரென்று சிரித்தோம்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு, விழாவுக்குச் சற்று முன்பாக நாங்கள் பீட்டர்ஸ்பர்கில் இருந்தோம்.

## 7

பீட்டர்ஸ்பர்குக்கு எங்கள் பிரயாணம் (போகும் வழியில் மாஸ்கோவில் ஒரு வாரம்

தங்கினேம்), புதிய பாதை, நகரங்கள், நபர்கள்—அவருடைய, என்னுடைய உறவினர்களின் சந்திப்பு, புதிய இருப்பிடத்தில் வசித்தல்—இவை அனைத்துமே கனவைப் போல வேகமாக மறைந்தன. எல்லாமே மிக வித்தியாசமாக, மிகவும் புதியதாகவும் குதூகலமாகவும், அவருடைய ஆளுமையாலும் காதலாலும் ஒளி பாய்ச்சப்பட்டு இதமாகவும் பிரகாசமாகவும் இருந்தபடியால் எங்களுடைய அமைதியான, நாட்டுப்புற வாழ்க்கை எங்கோ வெகு தூரத்துக்குத் தள்ளிப் போய்விட்டதைப் போல, அற்பமானதைப் போலத் தோன்றியது. நாகரிகம் நிறைந்த மனிதர்களிடம் நான் அகம்பாவத்தையும் அக்கறையின்மையையும் எதிர்பார்த்தேன். ஆனல் எல்லோருமே—உறவினர்களைப் போலவே புதியவர்களும்—என்னை உண்மையான அன்புடனும் பிரியத்துடனும் வரவேற்றது எனக்கு மிகவும் ஆச்சரியத்தைக் கொடுத்தது. அவர்களனைவரும் என்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்ததைப் போல, அவர்களுக்கு ஆனந்தமளிக்க நான் எப்பொழுது வருவேன் என்று காத்துக் கொண்டிருந்ததைப் போல இருந்தது. மேலும் நாகரிகமான வட்டாரங்களில் (அவை மிகச் சிறந்த வட்டாரங்கள் என்று எனக்குத் தோன்றின) என் கணவருக்கு அதிகமான நண்பர்கள் இருப்பதை நான் அறிந்து கொண்ட பொழுது நான் ஆச்சரியமடைந்தேன். ஏனென்ருல் அவர் இந்த நண்பர்களைப் பற்றி ஒருபோதும் சொன்னதில்லை. அவர்கள் மிகவும் அன்போடு நடந்து

கொள்வதாக எனக்குத் தோன்றியது. ஆனல் அவர்களில் சிலரைப் பற்றி என் கணவருடைய கூர்மையான விமர்சனம் எனக்குப் பெரும் பாலும் புதுமையாக, அதிருப்தியளிப்பதாக இருந்தது. அவர் அந்த நண்பர்களிடம் ஏன் பாசமில்லாமல் நடந்து கொண்டார் அல்லது அவர்களோடு பழகினல் நமக்குப் பெருமை என்று நான் கருதிய பல நண்பர்களைச் சந்திக் காமலிருக்கஅவர் ஏன் முயற்சி செய்தார் என்பது எனக்குப் புரியவில்லை. அன்பு நிறைந்த மனி தர்களை எவ்வளவு அதிகமாகத் தெரிந்து கொள் கிறோமோ அவ்வளவு நல்லது, அவர்கள் அனைவருமே அன்பு நிறைந்தவர்கள் என்று நான் கருதினேன்.

நாங்கள் நாட்டுப்புறத்திலிருந்து புறப்படு கின்ற பொழுது அவர் என்னிடம் பின்வருமாறு கூறினர்: ''நாம் எப்படி வாழ்க்கையை அமைத் துக் கொள்ளப் போகிறோம் என்று பார். இங்கே நாம் குட்டிக் குபேரர்களாக இருக்கிறோம். ஆனல் அங்கே, நகரத்தில் செல்வந்தர்கள் என்ற நிலைக்கு நாம் வெகு தூரம் தள்ளியே இருப்போம். எனவே ஈஸ்டர் பண்டிகை வரைக்குமே நாம் நகரத்தில் இருக்க முடியும். உயர்ந்த வட்டாரங்களோடு அதிகமாக ஒன்றி விடக் கூடாது. அப்படி ஒன்றிவிட்டால் நமக்குக் கடன் ஏற்படும். உன்னைப் பொறுத்தவரை...''

''உயர்ந்த வட்டாரங்களுக்கு நாம் ஏன் போக வேண்டும்? நம்முடைய உறவினர்களை மட்டும் சந்திப்போம். நாடகங்களுக்கும் இசை நாடகங்களுக்கும் போவோம். நல்ல இசையைக்

கேட்போம். ஈஸ்டர் பண்டிகைக்கு முன்பே கூட கிராமத்துக்குத் திரும்பி விடுவோம்'' என்று நான் பதிலளித்தேன்.

ஆனால் நாங்கள் பீட்டர்ஸ்பர்குக்கு வந்து சேர்ந்த உடனே இந்தத் திட்டங்கள் கைவிடப் பட்டன. ஒரு புதிய, கவர்ச்சிகரமான உலகத் தினுள் நான் நின்று கொண்டிருப்பதை திடீ ரென்று கவனித்தேன். பலவிதமான இன்பங் கள் என்னைச் சூழ்ந்து கொண்டன, பல புதிய அக்கறைகள் எனக்கு ஏற்பட்டன. நான் உடனே—சுய உணர்வு இல்லாமலேயே—என் னுடைய கடந்த காலம் அனைத்தையும் அந்தக் கடந்த காலத்தில் போடப்பட்ட எல்லாத் திட் டங்களையும் கைவிட்டேன். ''அது ஒன்றுமே இல்லை—வெறும் ஆரம்பமே. இதுதான் உண் மையான வாழ்க்கை! எனக்கு முன்னால் இன்னும் எவ்வளவோ இருக்கிறது!'' என்று நான் நினைத் தேன். கிராமத்தில் எனக்குத் துன்பத்தைக் கொடுத்த சஞ்சலமும் சலிப்பும் திடீரென்று மாயமாக மறைந்தன. என் கணவரிடம் நான் கொண்டிருந்த காதல் அமைதியானதாக மாறிற்று. அவருடைய காதல் குறைந்துவிட் டதா என்ற எண்ணமே எனக்கு ஒருபோதும் ஏற்படவில்லை. அவருடைய காதலை என்னால் சந்தேகிக்க முடியவில்லை. என்னுடைய ஒவ் வொரு சிந்தனையையும் அவர் உடனே புரிந்து கொண்டார், ஒவ்வொரு உணர்ச்சியையும் பகிர்ந்து கொண்டார், ஒவ்வொரு விருப்பத் தையும் நிறைவேற்றினார். அவருடைய கலங் காத்தன்மை மறைந்துவிட்டதைப் போல

எனக்குத் தோன்றியது, அல்லது குறைந்த பட்சம் அது எனக்கு இனி எரிச்சலைக் கொடுக்கவில்லை. மேலும் பழைய காதலுக்குத் துணையாக இப்பொழுது என் மீது ஒரு புதிய போற்றுதலும் சேர்ந்திருப்பதை நான் உணர்ந்தேன். ஒரு நண்பருடைய வீட்டுக்குப் போய்விட்டுத் திரும்பும் பொழுது, புதிதாக ஒருவரோடு பழகும் பொழுது அல்லது எங்கள் இருப்பிடத்தில் விருந்தளிப்பவருடைய மனைவியின் கடமைகளை (ஏதேனும் தவறு செய்து விடுவேனோ என்று உள்ளூற நடுங்கிக் கொண்டு) நான் நிறைவேற்றிய மாலை விருந்துக்குப் பிறகு "கெட்டிக்காரி! இந்தக் கடமைகளைக் கண்டு பயப்படாதே. நீ முதல் தரமாகச் செய்கிறாய்" என்றார். இதைக் கேட்டு நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். நாங்கள் அங்கே வந்த உடனே அவர் தன்னுடைய தாயாருக்கு ஒரு கடிதம் எழுதினார். கடிதத்தின் முடிவில் என்னையும் ஏதாவது எழுதுமாறு கேட்டுக் கொண்ட பொழுது அவர் எழுதிய பகுதியை நான் படிக்காமல் மறைப்பதற்கு முயற்சி செய்தார். நான் அதைப் படிக்க வேண்டும் என்று வற்புறுத்தினேன். "மாஷாவை நீங்கள் ஒருபோதும் அறிய முடியாது. அவளை நன்றாக அறிய என்னால் கூட முடியவில்லை. இவ்வளவு இனிமையான, அழகுமிக்க நளினத்தையும் எழிலையும் —நாகரிகமான நகைச் சுவையையும் கவர்ச்சியையும் கூட — அவள் எங்கேயிருந்து பெறுகிறாளோ? அவை மிகவும் பகட்டில்லாதவை, பாராட்டுக் குரியவை, இனியவை. எல்லோரும்

(நானும்தான்) அவளைப் பற்றி அதிகமான மகிழ்ச்சி அடைகிறார்கள். அவளை இன்னும் அதிகமாகக் காதலிக்க (அது முடியுமானால்) நான் விரும்புகிறேன்'' என்று அவர் எழுதியிருந்தார்.

''ஓ! நான் இப்படியா இருக்கிறேன்!'' என்று நான் நினைத்தேன். அது எனக்கு அதிகமான மகிழ்ச்சியைக் கொடுத்தது, நான் அவரை இன்னும் அதிகமாகக் காதலிப்பதாகக் கூடத் தோன்றியது. எங்கள் நண்பர்கள் மத்தியில் எனக்கு அவ்வளவு புகழ் ஏற்படும் என்று நான் முற்றிலும் எதிர்பார்க்கவில்லை. அதைப் பற்றி எல்லாப் பக்கங்களிலிருந்தும் நான் கேள்விப் பட்டேன். ஒரு வீட்டில் அந்த மாமாவுக்கு என் மீது அதிகமான பிரியம் ஏற்பட்டது. இன்னொரு வீட்டில் ஒரு அத்தைக்கு என்னிடம் அடங்காப் பிரியம் ஏற்பட்டது. என்னோடு ஒப்பிடக் கூடிய விதத்தில் பீட்டர்ஸ்பர்கிலேயே வேறொரு பெண் கிடையாது என்று யாராவதொரு ஆண் கூறுவார். நான் விரும்பினால் உயர்ந்த வட்டாரங்களிலேயே அழகிற் சிறந்த பெண்ணாக இருக்க முடியுமென்று யாராவது ஒரு பெண் என்னிடம் உறுதியாகச் சொல்லுவாள். இளவரசி டி. நாகரிகமான முதிய சீமாட்டி, என் கணவரின் அத்தை மகள். குறிப்பாக, அந்தச் சீமாட்டிக்கு திடீரென்று என் மீது அதிகமான பிரியம் ஏற்பட்டது. அவள் மற்ற எல்லோரையும் காட்டிலும் என்னை அதிகமாகப் புகழ்ந்தாள். அது என்னைக் கிறங்கும்படி செய்தது. ஒரு நடனவிருந்துக்கு அவள் என்னை முதல் தடவை கூப்பிட்ட பொழுது,

உங்களுக்கு ஆட்சேபமில்லையே என்று என் கண வரைக் கேட்டாள். அவர் என்னை நோக்கித் திரும்பினார். தன் முகத்தில் தோன்றிய நாணங் கலந்த புன்சிரிப்பை லேசாக மறைத்தபடியே நான் போக விரும்புகிறேனா என்று என்னைக் கேட்டார். நான் ஆமாமென்று தலையை அசைத் தேன். என்னிடம் நாணம் ஏற்பட்டதை உணர்ந் தேன்.

''போக விரும்புவதாக ஒத்துக் கொள்வ தைக் குற்றம் செய்வதைப் போல நீ நினைக் கிறாயா?'' என்று அவர் களங்கமில்லாமல் கேட் டார்.

''உயர்ந்த வட்டாரங்களுக்குள் நாம் போக வேண்டாம் என்று நீங்கள் கூறினீர்கள். மேலும் உங்களுக்கு அதில் உற்சாகமில்லையே'' என்று அவரை ஆதரிப்பதைப் போல நான் பேசி னேன்.

''நீ மிகவும் விரும்பினால் நாம் கலந்து கொள் வோம்'' என்றார் அவர்.

''நாம் அவசியம் போக வேண்டும் என்று நான் நினைக்கவில்லை.''

''ஆனால் நீ போக விரும்புகிறாயல்லவா? அதிகமாக?''

நான் பதிலளிக்கவில்லை.

''உயர்ந்த வட்டாரங்களை மோசம் என்று சொல்ல முடியாது. ஆனால் நிறைவேறாத உல கியல் ஆசைகள் மோசமானவை, அவலட்சண மானவை. நாம் கலந்து கொள்வோம்—கண் டிப்பாக'' என்று அவர் தீர்மானமாகக் கூறி னார்.

''உண்மையைச் சொல்வதென்றால் உலகத்திலேயே வேறு எதையும் நான் மிகவும் அதிகமாக விரும்பவில்லை.''

நாங்கள் நடனவிருந்தில் கலந்து கொண்டோம். எனக்கு அளவில்லாத மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்த நடனத்தில் அவை சுற்றிச் சுழல்கின்ற அச்சாணி நானே, எனக்காகவே அந்தக் கூடத்தில் விளக்குகள் பிரகாசமாக எரிந்து கொண்டிருக்கின்றன, இசைக்குழு பாடிக் கொண்டிருக்கிறது, இவர்கள் அனைவரும் கூடியிருக்கிறார்கள், அங்கே இருக்கும் எல்லோரும் என்னைப் போற்றுகிறார்கள் என்று — முன்பு நினைத்ததைக் காட்டிலும் இன்னும் அதிகமாகவே—நான் சிந்தித்தேன். நடனமாடும் பெண்களுக்கு முடியலங்காரம் செய்பவர் மற்றும் பணிப் பெண்ணிலிருந்து அந்தக் கூடத்தில் நடந்து கொண்டிருக்கின்ற கிழவர்கள் வரை எல்லோருமே என்னைக் காதலிப்பதாக என்னிடம் சொல்வதாக அல்லது அப்படி உணர்த்துவதாக எனக்குத் தோன்றியது. அந்த நடனத்தில் என்னைப் பற்றிப் பேசப்பட்ட பொதுவான கருத்தை என் கணவரின் அத்தை மகள் என்னிடம் தெரிவித்தாள். மற்ற பெண்களிடமிருந்து நான் முற்றிலும் வேறு விதமாக இருந்தேன்—அசாதாரணமான ஏதோ ஒன்று, கிராமப் பாங்கும் எளிமையும் அழகும் கலந்த ஏதோ ஒன்று என்னிடமிருப்பதாக அவர்கள் பேசிக் கொண்டனர். இந்த வெற்றி எனக்குப் பெருமையாக இருந்தது. அந்த வருடத்தில் இரண்டு அல்லது மூன்று நடனங்களுக்குப் போக விரும்புவ

தாக என் கணவரிடம் மறைக்காமற் கூறினேன். ''அதற்குப் பிறகு அலுத்துவிடும்'' என்று என் கணவரிடம் போலித்தனமாகக் கூறினேன்.

என் கணவர் மனப்பூர்வமாக ஒப்புதல் அளித்தார். ஆரம்பத்தில் அவர் வெளிப்படையான மகிழ்ச்சியோடு என்னோடு எல்லா இடங்களுக்கும் வந்தார், என்னுடைய மகிழ்ச்சியில் அவரும் ஆனந்தமடைந்தார். முன்பு தான் கூறியதை அவர் முற்றிலும் மறந்துவிட்டார் அல்லது திரும்பப் பெற்றுக் கொண்டார் என்று தோன்றியது.

பிறகு அவர் சலிப்படைந்தார், நாங்கள் நடத்திய வாழ்க்கையின் சுமையில் அவர் களைப்படைந்தார். ஆனால் நான் அதைப் பொருட்படுத்தவில்லை. சில சமயங்களில் அவர் தன்னுடைய அறிவார்ந்த, சிந்தனையான பார்வையை என் மீது திருப்பிக் கேள்வி கேட்பதைப் போல என்னைப் பார்த்த பொழுது அதன் அர்த்தத்தை நான் புரிந்து கொள்ளவில்லை. இந்தப் புதிய மனிதர்களின் அன்பு (அப்படி நான் நினைத்தேன்), அங்கே நான் முதல் தடவையாக சுவாசித்த நுண்ணயம், இன்பம், புதுமை ஆகியவற்றின் சூழல் என்னை பிரமிக்கச் செய்தது. அவருடைய தார்மிகப் பிடிப்பின் ஆதிக்கத்திலிருந்து நான் திடீரென்று விடுவிக்கப்பட்டேன். இந்த வட்டாரங்கள் என்னை அவருக்குச் சமமாக மட்டுமன்றி அவரைக் காட்டிலும் உயர்ந்தவளாகவும் கருதியதனுல் (நான் அவரை இன்னும் அதிகமாகவும் விருப்ப பூர்வமாகவும்

காதலிப்பதற்கு அது உதவியது) உயர்ந்த வட்டாரங்களில் பழகுவதால் எனக்கு ஆபத்தேற்படும் என்று அவர் கூறியதை என்னுல் புரிந்து கொள்ள முடியாமற் போயிற்று. நடனக் கூடத்துக்குள் நான் நுழைந்தவுடன் எல்லோருடைய கண்களும் என்னை நோக்கித் திரும்பும் பொழுது என்னிடம் அதுவரை இல்லாத அகந்தை, சுய-திருப்தி என்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. ஆனுல் அவர்—நான் அவருடைய மனைவி என்பதை எல்லோரிடமும் ஒத்துக் கொள்ள வெட்கப்படுவதைப் போல—அவசரமாக என்னைப் பிரிந்து போய் மாலை நேரக் கறுப்பு உடை அணிந்திருப்பவர்களின் கூட்டத்தில் மறைந்து விடுவார். அவர் நடனக் கூடத்தின் கடைசியில் தன்னந்தனியாக, உதாசீனம் செய்யப்பட்டவராக, மிகவும் அலுப்படைந்த அறிகுறிகளோடு நிற்பதை நான் பார்க்கும் பொழுது ''சற்றுப் பொறுங்கள்'' என்று அடிக்கடி நினைத்துக் கொள்வேன். ''நாம் வீட்டுக்குத் திரும்பும் வரை பொறுத்துக் கொள்ளுங்கள். பிறகு நீங்களாகவே புரிந்து கொள்வீர்கள். நான் அழகாகவும் கவர்ச்சியோடும் தோன்றியது யாருக்காக, எல்லோரையும் காட்டிலும் நான் யாரைக் காதலிக்கிறேன் என்பதை நீங்களே தெரிந்து கொள்வீர்கள்.'' என்னுடைய வெற்றிகள் அவருக்காக மட்டுமே, என்னை அவருக்காக அர்ப்பணிப்பதற்கு மட்டுமே மகிழ்ச்சியைக் கொடுப்பதாக எனக்கு உண்மையிலேயே தோன்றியது. இந்த வட்டாரங்களில் நான் சந்திக்கின்ற யாராவது ஒருவரிடம் எனக்

குக் கவர்ச்சி ஏற்படுமானுல், அதன் காரண மாக என் கணவருக்கு வேதனை ஏற்படுமானுல் —அது ஒன்று தான் தீமை என்று நான் நினைத் தேன். ஆனுல் அவருக்கு என்னிடம் அதிகமான நம்பிக்கை இருந்தது, அவர் மிகவும் அமைதி யாகவும் அலட்சியமாகவும் நடந்துகொண்டார். அவரோடு ஒப்பிடும் பொழுது அந்த இளைஞர் கள் அனைவரும் மிகவும் அற்பமானவர்களாகத் தோன்றினுர்கள்; எனவே இந்த ஆபத்தைக் கண்டு நான் அஞ்சவில்லை. இத்தனை பேர்களு டைய கவனமும் எனக்கு மகிழ்ச்சியைத் தந்து, என்னை முகஸ்துதி செய்தது. என் கணவரிடம் நான் கொண்டிருந்த காதலில் ஏதோ ஒரு சிறப்பான அம்சம் இருப்பதாக என்னை நினைக்கச் செய்தது. அவரிடம் நான் அதிகமான அளவுக்குத் தற்செயலாகவும் சுயநம்பிக்கை யோடும் நடந்து கொண்டேன்.

''சீமாட்டி என். என்... ளேடு நீங்கள் மிக வும் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தீர் களே'' என்று ஒரு இரவில் நடனவிருந்துக்குப் பிறகு நாங்கள் வீட்டுக்குத் திரும்பும் பொழுது, என் விரலை அவருக்கு முன்பாக நீட்டிக் கொண்டு கூறினேன். நான் குறிப்பிட்ட பெண் பீட்டர்ஸ் பர்கில் மிகவும் பிரபலமானவள். அன்று மாலை யில் அவர் உண்மையிலேயே அவளோடு பேசிக் கொண்டிருந்தார். அவர் வழக்கத்தைக் காட் டிலும் அதிகமான அளவுக்கு மௌனமாகவும் சலிப்படைந்தும் இருந்தபடியால், நான் அவ ருக்குக் கோபமேற்படுத்துவதற்காக இதைச் சொன்னேன்.

''நீ ஏன் இப்படிப் பேசுகிருய்? மாஷா! இப்படிப் பேசுவது நீதாஞ?'' என்று சொல்லி விட்டு அவர் உடலில் வலி ஏற்பட்டதைப் போலத் துடித்தார். ''நீயும் நானும் எவ்வளவு மாறிவிட்டோம். இப்படிப்பட்ட பேச்சுக்களை மற்றவர்களிடம் விட்டுவிடு. இப்படிப்பட்ட போலித்தனம் நமக்கிடையே உள்ள மனப்பூர்வமான உறவுகளைக் கெடுத்துவிடும்—அவை மறுபடியும் ஏற்படும் என்று நான் இன்னும் நம்புகிறேன்.''

நான் அவமானமடைந்து அமைதியாக இருந்தேன்.

''மாஷா! அவை மறுபடியும் ஏற்படுமல்லவா? நீ என்ன நினைக்கிருய்?'' என்று அவர் கேட்டார்.

''அவை ஒருபோதும் கெட்டுவிடவில்லை, ஒருபோதும் கெட்டுப் போகவும் இல்லை'' என்று நான் கூறினேன். அந்த சமயத்தில் உண்மையிலேயே எனக்கு அப்படித்தான் தோன்றியது.

''அப்படியே நானும் மனப்பூர்வமாக நம்புகிறேன். நாம் கிராமத்துக்குத் திரும்ப வேண்டிய நேரம் வந்துவிட்டது'' என்று அவர் கூறினர்.

அவர் ஒரே ஒரு தடவை மட்டுமே இப்படி என்னிடம் பேசினர். அவர் என்னைப் போலவே மகிழ்ச்சியோடு இருப்பதாக எஞ்சிய காலம் முழுவதும் நான் கற்பனை செய்து கொண்டேன். நானே அதிகமான குதூகலத்திலும் மகிழ்ச்சியிலும் திளைத்துக் கொண்டிருந்தேன். ''அவருக்குச் சில சமயங்களில் சலிப்பு ஏற்படலாம்.

நாட்டுப்புறத்தில் அவருக்காக நான் சலிப்பை ஏற்றுக் கொண்டேன். எங்களுடைய உறவு களில் சிறிதளவு மாற்றம் ஏற்பட்டிருந்தாலும் மறுபடியும் நிகோல்ஸ்கயேக்குச் சென்று ததி யாஞ ஸெமியோனவ்ஞவுடன் நாங்கள் தனி யாக உட்கார்ந்தவுடனே எல்லாம் சரியாகி விடும்'' என்று எனக்கு நானே மறுபடியும் உறுதியளித்துக் கொள்வேன்.

ஆகவே குளிர்காலம் கழிந்துவிட்டதை நான் கவனிக்கவே இல்லை. எங்களுடைய ஆரம்பத் திட்டங்களுக்கு மாருக நாங்கள் ஈஸ்டர் பண் டிகையை பீட்டர்ஸ்பர்கில் கொண்டாடினேம். புனித திமோத்தி வாரம் தொடங்கிய பொழுது நாங்கள் கிராமத்துக்குப் புறப்படுவதற்குத் தயாரிப்புகளைச் செய்து கொண்டிருந்தோம். என் கணவர் அன்பளிப்புகளையும் வீட்டுக்கு வேண்டிய பொருள்களையும் எங்கள் நாட்டுப் புற வாழ்க்கையில் உல்லாசத்துக்காக மலர் களையும் ஏற்கெனவே வாங்கிவிட்டார். அவர் குறிப்பிடத்தக்க விதத்தில் அன்பான, ஆனந்த மான மனநிலையில் இருந்தார். அப்பொழுது அவருடைய அத்தை மகள் திடீரென்று எங் களுடைய வீட்டுக்கு வந்தாள். கோமகள் ஆர். நடத்தவிருக்கும் வரவேற்பு விருந்தில் நாங்கள் பங்கு கொள்வதற்காகப் பிரயாணத்தை சனிக் கிழமை வரை தள்ளி வைக்க வேண்டும் என்று எங்களிடம் வற்புறுத்தத் தொடங்கினள். நான் வர வேண்டும் என்று கோமகள் ஆர். மிகவும் விரும்புகிருள். பீட்டர்ஸ்பர்குக்கு வந்திருக்கும் இளவரசர் எம். சென்ற நடனவிருந்திலிருந்தே

என்னுடைய நட்பைப் பெற வேண்டுமென்று விரும்புகிறார். அந்த ஒரே நோக்கத்துடன் தான் அவர் வரவேற்பு விருந்தில் கலந்து கொள்ளப் போகிறார், ருஷ்யாவிலேயே நான்தான் மிகவும் அழகான பெண் என்று சொல்லிக் கொண்டிருக் கிறார் என்றும் கூறினாள். அங்கே நகரமே வந் திருக்கும். சுருக்கமாகச் சொல்வதென்றால், நான் கண்டிப்பாகக் கலந்து கொள்ள வேண் டும்.

என் கணவர் உபசரிப்பு அறையின் மறு கோடியில் யாரோ ஒருவரோடு பேசிக் கொண் டிருந்தார்.

''Marie!'' நீ வருகிறாயல்லவா?'' என்று அவள் என்னிடம் கேட்டாள்.

''நாளைக்கு மறு நாளன்று கிராமத்துக்குப் புறப்படுவதற்கு ஏற்பாடுகள் செய்திருந்தோம்'' என்று என் கணவரைப் பார்த்தபடியே நான் தயக்கத்தோடு பேசினேன். எங்கள் கண்கள் சந்தித்துக் கொண்டன; அவர் அவசரமாக முகத் தைத் திருப்பிக் கொண்டார்.

''அவரைத் தங்கியிருக்கும் படி நான் செய் கிறேன். நாம் சனிக்கிழமையன்று அங்கே போய் எல்லோரையும் கிறங்கவைப்போம். சரிதானா?'' என்று அவள் கூறினாள்.

''எங்களுடைய ஏற்பாடுகள் கெட்டுப் போய் விடும். ஏற்கெனவே மூட்டை, முடிச்சுகளைக் கட்டிவிட்டோம்'' என்று சரணாகதிப் படலத் தைத் தொடங்கியபடி நான் பதிலளித்தேன்.

''அவள் இன்றிரவே இளவரசருக்கு முன்னால் சென்று தன் வணக்கத்தைத் தெரிவிக்கட்டும்''

என்று என் கணவர் அந்தக் கூடத்தின் மறு கோடியிலிருந்து அதிகமான எரிச்சலைக் காட்டு கின்ற தொனியில் கூறினார். அதற்கு முன்பு அவர் அத்தகைய தொனியில் பேசி நான் கேட்டதில்லை.

''பார்த்தாயா? அவர் பொறாமைப்படுகிறார். இது வரை நான் இதை கவனிக்கவில்லையே'' என்று சொல்லிக் கொண்டு அவருடைய அத்தை மகள் சிரித்தாள். ''ஸெர்கேய் மிஹாய்லவிச்! நான் அவளைக் கூப்பிடுவது இளவரசருக்காக அல்ல, நம் எல்லோருக்காகவுமே. அவளை நான் எப்படியாவது கூட்டிக் கொண்டு வர வேண்டும் என்று கோமகள் ஆர். என்னைக் கெஞ்சியதை நீங்கள் கேட்டிருக்க வேண்டும்!''

''அவளே முடிவு செய்து கொள்ளட்டும்'' என்று என் கணவர் சொல்லிவிட்டு அறையிலிருந்து போய்விட்டார்.

அவர் வழக்கத்தைக் காட்டிலும் அதிகமாகக் கோபமடைந்திருக்கிறார் என்பது எனக்குத் தெரிந்தது. அவருடைய அத்தை மகளிடம் நான் எவ்விதமான உறுதியும் கொடுக்கவில்லை. அவள் போனவுடனே நான் அவரிடம் சென்றேன். அவர் ஆழமாகச் சிந்தித்துக் கொண்டு முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார். நான் ஓசையில்லாமல் அறைக்குள் நுழைந்ததை அவர் கவனிக்கவில்லை.

''அவர் நிகோல்ஸ்கயேயில் நம்முடைய இனிய, பழைய வீட்டை நினைத்துக் கொண்டிருக்கிறார்'' என்று அவரைப் பார்த்தவுடன் நான் நினைத்தேன். ''பிரகாசமான, கதிரவன் ஒளி விழுகின்ற நடைக் கூடத்தில் உட்கார்ந்து

காலையில் காபி அருந்துவதையும், அவருடைய வயல்களையும் விவசாயிகளையும் உபசரிப்பு அறையில் கழித்த மாலை நேரங்களையும் நள்ளிர வில் யாருக்கும் தெரியாமல் உணவருந்துவதை யும் நினைத்துக் கொண்டிருக்கிறார். வேண் டாம். அவருடைய ஆனந்தமான குழப்பத்துக் காகவும் கனிவான விருப்பத்துக்காகவும் பூமியில் நடைபெறும் எல்லா நடனவிருந்து களையும் இந்த பூமியிலுள்ள எல்லா இளவரசர் களின் முகஸ்துதியையும் நான் விட்டுக் கொடுப் பேன்'' என்று முடிவு செய்தேன். நான் வர வேற்பு விருந்துக்குப் போகப் போவதில்லை, அங்கே போக எனக்கு விருப்பமுமில்லை என்று அவரிடம் சொல்வதற்கு நான் விரும்பினேன். அந்த சமயத்தில் அவர் திடீரென்று தலையை உயர்த்தி என்னைப் பார்த்தார். அவர் முகத் தைச் சுளித்தார். அவருடைய அடக்கமான, கவலை நிறைந்த பார்வை மாறியது. அவரு டைய பார்வை மறுபடியும் உள்நோக்கையும் அறிவையும் ஆதரவளிக்கும் தலைமையையும் எடுத்துக் காட்டியது. என் கண்களுக்கு முன் ஞல் அவர் சாதாரண மனிதராக இருக்க விரும் பவில்லை. அவர் பாதிக்-கடவுளாக இருக்க விரும் பினுர், எனக்கு முன்ஞல் உயர்ந்த பீடத்தில் நிற்பதற்கே அவர் விரும்பினுர்.

''அன்பே! என்ன விஷயம்?'' என்று அமை தியாக என்னை நோக்கி வந்தபடியே அவர் அலட் சியமாகக் கேட்டார்.

நான் பதிலளிக்கவில்லை. நான் காதலிக்கின்ற நபரை அவர் காட்ட விரும்பாதது— என்னிட

மிருந்து 'அவரை' மறைத்துக் கொண்டது எனக்கு வேதனையாக இருந்தது.

''சனிக்கிழமையன்று வரவேற்பு விருந்துக்குப் போக விரும்புகிருயா?'' என்று அவர் கேட்டார்.

''நான் போக விரும்பினேன். ஆனால் உங்களுக்குப் பிடிக்கவில்லை. எல்லாவற்றையும் கட்டியாகிவிட்டது'' என்று நான் பதிலளித்தேன்.

அவர் ஒருபோதும் அவ்வளவு வெறுப்போடு என்னைப் பார்த்ததுமில்லை, அவ்வளவு வெறுப்போடு என்னிடம் பேசியதுமில்லை.

''செவ்வாய்க் கிழமை வரை நான் காத்திருக்க முடியும். எல்லாவற்றையும் பிரிக்குமாறு அவர்களிடம் சொல்கிறேன். நீ விரும்பினுல் போ. நீ அவசியம் வரவேற்புக்குப் போக வேண்டும். நான் ஊருக்குப் புறப்படவில்லை'' என்ருர்.

அவர் உணர்ச்சி வசப்படும் பொழுது வழக்கமாகச் செய்வதைப் போல என்னைப் பார்க்காமல் வேகமாக முன்னும் பின்னும் நடக்கத் தொடங்கினுர்.

''என்னுல் உங்களைச் சிறிதும் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்று அந்த இடத்திலேயே நின்று கொண்டு அவரைக் கண்களால் தொடர்ந்தபடியே நான் கூறினேன். ''நீங்கள் எப்பொழுதுமே மிகவும் அமைதியாகச் சொல்கிறீர்கள் (அவர் அப்படி ஒருபோதும் சொன்னதில்லை)—அப்படியானுல் என்னிடம் இப்படி விசித்திரமான முறையில் ஏன் பேசுகிறீர்கள்?

இந்த மகிழ்ச்சியை உங்களுக்காக தியாகம் செய்ய நான் தயாராக இருக்கிறேன். ஆனால் நான் போக வேண்டும் என்று நீங்கள் சொல்கிறீர்கள். அதிலும் என்னிடம் இதற்கு முன்பு உபயோகித்திராத கிண்டலான குரலில் பேசுகிறீர்கள்.''

''அது சரி நீ **தியாகம் செய்கிறாய்** (அவர் இந்த வார்த்தைகளை அழுத்திச் சொன்னார்), நானும் அதைத் தான் செய்கிறேன். இதைக் காட்டிலும் சிறப்பானது உண்டா? யார் அதிகப் பெருந்தன்மையானவர் என்று போட்டியா? குடும்பத்தின் மகிழ்ச்சிக்கு இதற்கு மேல் என்ன வேண்டும்?''

இவ்வளவு கசப்பான ஏளனத்தை நான் அவரிடம் இப்பொழுதுதான் முதன் முறையாகக் கேட்டேன். ஆனால் அவருடைய ஏளனம் என்னைத் தலைகுனியச் செய்யவில்லை. அது எனக்கு ஆத்திர மூட்டியது. அவருடைய உணர்ச்சியின் தீவிரம் எனக்கு பயத்தைக் கொடுக்கவில்லை. ஆனால் அது என்னிடம் பரவியது. இது அவர்தானா? எங்களுடைய உறவுகளில் போலியான அம்சம் இருக்கக் கூடாதென்று எப்பொழுதுமே சொல்கின்ற அவர்தானா? எப்பொழுதுமே மிகவும் எளிமையாகவும் மனப்பூர்வமாகவும் நடந்து கொள்கின்றவர் —அவரா இப்படிப் பேசுகிறார்? ஏன்? அவருக்காக இந்த மகிழ்ச்சியை நான் உண்மையிலேயே தியாகம் செய்ய விரும்பியதற்காக — அதிலும் இந்த மகிழ்ச்சியில் எந்தத் தீமையும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லையே. ஒரு

நிமிடத்துக்கு முன்பு நான் அவரை மிகவும் நன்ருகப் புரிந்து கொண்டு அவரை மிக ஆழ மாகக் காதலித்ததற்காகவா? எங்களுடைய பாத்திரங்கள் தலைகீழாக மாறிவிட்டன. எளி மையான, நேரடியான வார்த்தைகளை இப் பொழுது அவர்தான் தவிர்க்கிருர்—நான் அவற்றைத் தேடிக் கொண்டிருக்கிறேன்.

''நீங்கள் மிக அதிகமாக மாறிவிட்டீர்கள்'' என்று நான் பெருமூச்சோடு கூறினேன். ''உங் களுக்கு எந்த வழியில் நான் தீமை செய்திருக் கிறேன்? இந்த வரவேற்பு விருந்து ஒரு காரண மாக இருக்க முடியாது. வேறு எதையோ நினைத்துக் கொண்டு நீங்கள் என் மீது கோப மடைந்திருக்கிறீர்கள். ஏன் இந்தக் கபடம்? நீங்கள் அதைப் பற்றி எப்பொழுதும் எச்சரிக் கை செய்வீர்களே. என் மீது ஆத்திரப்படு கின்ற காரணத்தை நேரடியாக என்னிடம் சொல்லுங்கள்'' என்றேன். ''அவர் இப்பொ ழுது எதையாவது சொல்லத்தானே வேண்டும்'' என்று நான் நினைத்தேன். குளிர்காலம் முழு வதிலும் அவர் என்னிடம் ஆத்திரப்படுவதற்கு ஒரு காரணமும் ஏற்படவில்லை என்பதை நினைவுபடுத்திக் கொண்டேன்.

நான் அறையின் மத்தியில் போய் நின்றேன். இப்பொழுது அவர் எனக்குப் பக்கமாகத்தான் நடக்க வேண்டும் என்று நினைத்தபடியே அவ ரைப் பார்த்தேன். ''அவர் என் அருகே வரு வார். என்னைத் தழுவுவார். இந்த விவகாரம் அதோடு முடிந்துவிடும்'' என்று நினைத்தேன். அவர் எவ்வளவு தவருக நடந்து கொண்டு

விட்டார் என்பதை எடுத்துக்காட்டக் கூடிய சந்தர்ப்பத்தை இழப்பது எனக்கு வருத்தமாகக் கூட இருந்தது. ஆனால் அவர் அறையின் கடைசியிலேயே நின்று கொண்டு என்னைப் பார்த்தார்.

''இன்னும் உன்னால் புரிந்து கொள்ள முடியவில்லையா?'' என்று அவர் கேட்டார்.

''ஆமாம்.''

''அப்படியானால் நான் விளக்கிச் சொல்கிறேன். என் வாழ்க்கையில் முதல் தடவையாக நான் ஒரு உணர்ச்சிக்கு ஆளாகியிருக்கிறேன். அது வெறுக்கத்தக்கது என்பதை நான் அறிவேன். ஆனால் அந்த உணர்ச்சியை என்னால் தடுக்க முடியவில்லை.'' அவர் பேச்சை நிறுத்தினார். அவருடைய குரலிலிருந்த கடுமை அவருக்கே திகைப்பாக இருந்திருக்க வேண்டும்.

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கண்களில் கோபக் கண்ணீரோடு நான் கேட்டேன்.

''நீ அழகாக இருப்பதாக அந்த இளவரசர் நினைத்ததும், அதற்காக உன்னுடைய கணவரையும் உன்னையும், பெண் என்ற முறையில் உன்னுடைய கௌரவத்தையும் மறந்துவிட்டு அவரைச் சந்திக்க நீ ஓடுவதும், உனக்கு கௌரவ உணர்ச்சி இல்லாவிட்டாலும் உன் கணவர் என்ன நினைக்கிறார் என்பதை நீ புரிந்து கொள்ள விரும்பாததும் வெறுக்கத்தக்கவை. அதற்கு மாறாக, நீ உன் கணவருக்கு முன்னால் வந்து நான் **தியாகம் செய்கிறேன்** என்று சொல்கிறாய். வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால், 'மேன்மை தங்கிய இளவரசரிடம் என் உடலைக்

காட்டுவது எனக்கு மகிழ்ச்சியைத் தரும். ஆனால் உங்களுக்காக அந்த மகிழ்ச்சியை நான் தியாகம் செய்கிறேன்.' ''

அவர் தொடர்ந்து பேசினர். அவர் மிகவும் ஆத்திரமடைந்திருப்பதை அவருடைய குரல் காட்டியது. அவருடைய குரல் கடுமையாக, காட்டுத்தனமாக, கடிக்கிறாற் போல இருந்தது. அவரை அப்படிப்பட்ட நிலையில் நான் ஒருபோதும் பார்த்ததில்லை, ஒருபோதும் எதிர்பார்க்கவுமில்லை. என் முகத்தில் ரத்தம் குப்பென்று பாய்ந்தது. எனக்கு பயமேற்பட்டது. ஆனால் அதே சமயத்தில் காரணமில்லாத அவமதிப்பும் அவமதிக்கப்பட்ட அகம்பாவமும் எனக்குள்ளாக மேலோங்கின. நான் அவரைப் பழிவாங்க விரும்பினேன்.

''நான் இதை நெடுங்காலமாக எதிர்பார்த்திருந்தேன். சொல்லுங்கள். என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள்'' என்றேன்.

''நீ எதை எதிர்பார்த்தாய் என்று எனக்குத் தெரியாது. இப்படிப்பட்ட முட்டாள்தனமான உயர் குடும்பங்களின் குப்பையிலும் சோம்பேறித்தனத்திலும் வசதியான வாழ்க்கையிலும் நாள்தோறும் நீ மூழ்கியதைப் பார்த்த பிறகு நான் மிகவும் மோசமான ஒன்றைத் தான் எதிர்பார்த்திருக்க வேண்டும். அது இப்பொழுது வந்துவிட்டது... ஒரு போதும் நடந்திராத அளவுக்கு நான் அவமதிக்கப்பட்டுப் புண்படுத்தப்பட்ட பிறகும் இன்று வரை நடப்பவை நடக்கட்டும் என்று நான் இருந்தேன். உன்னுடைய சிநேகிதி தன்னுடைய அழுக்குப் பிடித்த

கைகளை என் இதயத்துக்குள் குத்தி பொருமை யைப் பற்றி — என்னுடைய பொருமையைப் பற்றி—பேசத் தொடங்கிய பொழுது என் மனம் புண்ணுயிற்று. அதிலும் யாரைப் பற்றிப் பொருமை? அந்த நபரை உனக்கும் தெரியாது, எனக்கும் தெரியாது. உன்ஞல் சிறிதும் புரிந்து கொள்ள முடியவில்லை. நீ தியாகம் செய்ய விரும்புகிருய் — எப்படி?.. நான் உன்னை நினைத்து வெட்கப்படுகிறேன்—நீ இவ்வளவு கேவலமான நிலைமைக்குப் போனதற்காக வெட் கப்படுகிறேன்!.. எப்படிப்பட்ட தியாகம்!'' என்று அவர் திருப்பிக் கூறிஞர்.

''ஓ! இது ஒரு கணவரின் அதிகாரமோ?'' என்று நான் நினைத்தேன். ''எந்தக் குற்றமும் செய்யாத ஒரு பெண்ணைத் திட்டி அவமதிக் கலாம். அது ஒரு கணவரின் உரிமை. ஆனுல் நான் அதற்குப் பணிய மாட்டேன்.''

''இல்லை. உங்களுக்காக நான் எதையும் தியா கம் செய்யப் போவதில்லை'' என்று நான் கூறி னேன். என்னுடைய நாசித் துவாரங்கள் விரி வதையும் என் முகத்திலிருந்து இரத்தம் கீழே இறங்குவதையும் நான் உணர்ந்தேன். ''சனிக் கிழமையன்று வரவேற்பு விருந்துக்கு நான் போகிறேன்—நான் நிச்சயமாகப் போகிறேன்.''

''நன்ருகப் போ. உல்லாசமாக இரு. ஆனுல் உனக்கும் எனக்குமிடையே எல்லாம் முடிந்து விட்டது'' என்று அவர் கட்டுக்கடங்காத கோபத்தோடு கத்திஞர். ''நீ என்னைத் தொடர்ந்து சித்திரவதை செய்வதை நான் அனுமதிக்கப் போவதில்லை. நான் ஒரு முட்

டாளாக...'' என்று அவர் மறுபடியும் தொடங்கினுர். அவருடைய உதடுகள் வேகமாகத் துடித்தன. அவர் சொல்லவந்ததை முடிக்கவில்லே. மிகவும் அதிகமான முயற்சிக்குப் பிறகுதான் அவர் தன்னேக் கட்டுப்படுத்திக் கொள்ள முடிந்தது என்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

அந்த விஞடியில் நான் அவரைக் கண்டு அஞ்சினேன், வெறுத்தேன். அவருடைய அவமதிப்புகளுக்குப் பழிவாங்குவதற்காக நான் எவ்வளவோ திருப்பிச் சொல்ல விரும்பினேன். ஆனுல் நான் வாயைத் திறந்திருந்தால் கண்ணீரைக் கொட்டியிருப்பேன். அவருடைய கண்களுக்கு முன்பாகத் தாழ்ந்து போயிருப்பேன். நான் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அறையை விட்டு வெளியே போனேன். ஆனுல் அவருடைய காலடிச் சத்தங்கள் நின்ற உடனே என் செயலேப் பற்றி எனக்கு பயமேற்பட்டது. எனது மகிழ்ச்சி முழுவதையும் உள்ளடக்கிய அந்த இணைப்பு நிரந்தமாக அறுந்துவிடும் என்பதை நினேத்த பொழுது எனக்கு அதிகமான பயம் ஏற்பட்டது. ''நான் அவரிடம் சென்று மௌனமாக என் கையை நீட்டி அவர் கண்களுக்குள் பார்த்தால் என்னேப் புரிந்து கொள்கின்ற அளவுக்கு அவர் நிதானமடைந்திருப்பாரா?'' என்று நான் நினேத்தேன். ''என் பெருந்தன்மையை அவர் புரிந்து கொள்வாரா? என் வருத்தம் போலியானது என்று அவர் கூறிஞல் என்ன செய்வது? தான் செய்ததே சரி என்ற நம்பிக்கையில் என் மன வருத்தத்தை ஏற்றுக் கொண்டு கீழானவர்களே மன்னிக்கின்ற அகம்

பாவத்தோடு என்னை மன்னிப்பாரா? அவர்—நான் மிகவும் காதலித்த மனிதர்—இவ்வளவு குரூரமாக என்னை அவமதித்தது ஏன்?..''

நான் அவரிடம் போகவில்லை. என்னுடைய அறைக்குச் சென்று அங்கே நீண்ட நேரம் தனிமையில் உட்கார்ந்து கண்ணீர் வடித்தேன். அவர் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் எனக்கு பயங்கரமாக நினைவுக்கு வந்தது. இந்த வார்த்தைகளுக்குப் பதிலாக மற்ற வார்த்தைகளை நினைத்தேன், அவற்றுக்கு பதிலாக நல்ல வார்த்தைகளை உபயோகப்படுத்தினேன். மறுபடியும் அவர் சொன்ன எல்லா வார்த்தைகளையும் பீதியோடும் அவமதிக்கப்பட்ட உணர்ச்சியோடும் நினைத்துக் கொண்டேன். அன்று மாலையில் தேநீர் அருந்துவதற்காக அறையை விட்டுச் சென்ற பொழுது வீட்டுக்கு வந்திருந்த எஸ். முன்னிலையில் என் கணவரைச் சந்தித்தேன். எங்களுக்கிடையே பிளவு ஏற்பட்டுவிட்டது, அது நிரந்தரமாக இருக்கும் என்று உணர்ந்தேன். எப்பொழுது புறப்படப் போகிறீர்கள் என்று எஸ். என்னைக் கேட்டார். நான் பதில் கூறுவதற்குத் தாமதித்தேன்.

''செவ்வாய்க்கிழமை'' என்று என் கணவர் என்னை முந்திக் கொண்டு பதிலளித்தார். ''முதலில் கோமகள் ஆர். நடத்தும் வரவேற்பு விருந்துக்குப் போகிறோம். நீ போகிறாயல்லவா?'' என்று என்னைப் பார்த்துக் கேட்டார்.

அவருடைய குரலிலிருந்த அலட்சியம் எனக்கு பயத்தைக் கொடுத்தது. நான் அவரை ஏறிட்டுப் பார்த்தேன். அவர் கண்கள் என் மேல்

நிலே குத்தி நின்றன. அவை கோபத்தையும் ஏளனத்தையும் வெளிப்படுத்தின; அவர் குரல் பாசமில்லாமல் முரட்டுத்தனமாக இருந்தது.

''ஆமாம்'' என்று நான் பதிலளித்தேன்.

மாலேயில் நாங்கள் தனியாக இருந்த பொழுது அவர் என்னிடம் வந்து தன் கையை நீட்டினுர்.

''தயவு செய்து நான் பேசியவற்றை மறந்து விடு'' என்று அவர் முணுமுணுத்தார்.

நான் அவருடைய கையைப் பிடித்தேன். என் உதடுகளில் நடுங்கியபடியே ஒரு புன்சிரிப்பு தோன்றியது. என் கண்கள் கண்ணீரைக் கொட்டத் தொடங்கின. ஆனுல் அவர் கையை வெடுக்கென்று பின்னுல் இழுத்துக் கொண்டார்; உணர்ச்சிமிக்க காட்சியை விரும்பாதவரைப் போல ஒரு நாற்காலியில் சற்றுத் தள்ளி உட்கார்ந்து கொண்டார். ''அவர் செய்தது சரி என்று இதற்கு மேலும் நினேக்கிருரா?'' என்று நான் சிந்தித்தேன். என் விளக்கமும் வரவேற்பு விருந்துக்குப் போக வேண்டாம் என்ற என்னுடைய வேண்டுகோளும் என் நாக்கில் நின்றுவிட்டன; அவை சொல்லப்படவில்லே.

''நாம் பிரயாணத்தைத் தள்ளிவைத்து விட்டதாக அம்மாவுக்கு எழுத வேண்டும். இல்லேயென்ருல் அம்மாவுக்குக் கவலே ஏற்படும்'' என்று அவர் கூறிஞர்.

''எப்பொழுது புறப்படலாம் என்று நினேக்கிறீர்கள்?'' என்று நான் கேட்டேன்.

''வரவேற்பு விருந்து முடிந்த பிறகு செவ்வாய்க்கிழமையன்று.''

''நீங்கள் எனக்காக இந்த மாற்றத்தைச் செய்யவில்லை என்று நம்புகிறேன்'' என்று அவர் கண்களைப் பார்த்தபடியே நான் கூறினேன். ஆனால் அவர் கண்கள்—அவை திரையால் மறைக்கப்பட்டிருப்பதைப் போல—ஒன்றுமே பேசாமல் என்னைப் பார்த்தன. அவர் முகம் திடீரென்று முதுமையாகவும் கடுமையாகவும் எனக்குத் தோன்றியது.

நாங்கள் வரவேற்பு விருந்துக்குச் சென்றோம். எங்களுக்கிடையே உறவுகள் மறுபடியும் நேசமாக இருப்பதைப் போலத் தோன்றியது. ஆனால் முன்பு இருந்த நிலைமைக்கு அவை முற்றிலும் வேறுவிதமாக இருந்தன.

வரவேற்பு விருந்தின் போது இளவரசர் என்னைப் பார்க்க வந்த சமயத்தில் நான் பெண்களுக்கு நடுவில் உட்கார்ந்திருந்தேன். எனவே அவரோடு பேசுவதற்காக நான் எழுந்து நிற்க வேண்டியிருந்தது. நான் எழுந்து நின்ற பொழுது என் கண்கள் தற்செயலாக என் கணவரைத் தேடின. அந்தக் கூடத்தின் மறு கோடியிலிருந்து அவர் என்னைப் பார்த்துவிட்டு உடனே முகத்தைத் திருப்பிக் கொள்வதை நான் கவனித்தேன். திடீரென்று என்னிடம் அவமானமும் புண்படுத்தப்பட்ட உணர்ச்சியும் அதிகமாக ஏற்பட்டபடியால் நான் வேதனையான சங்கடத்துக்கு ஆளானேன். இளவரசர் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே என் முகத்திலும் கழுத்திலும் இரத்தம் குப்பென்று பரவியது. அவர் உயரமானவர் என்பதால்

நான் நின்று கொண்டு அவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தேன். நாங்கள் மிகக் குறுகிய காலமே உரையாடினேம். எனக்கு பக்கத்தில் அவர் உட்காருவதற்கு இட மில்லே. அவரோடு பேசிக் கொண்டிருப்பது எனக்கு மிகவும் சங்கடமாக இருப்பதை அவர் உணர்ந்திருக்க வேண்டும். நாங்கள் அதற்கு முந்திய நடன விருந்தைப் பற்றி, கோடை காலத்தில் நான் எங்கே வசித்தேன் என்பதைப் பற்றி இன்னும் இதர விஷயங்களேப் பற்றிப் பேசினேம். என்னிடமிருந்து பிரிகின்ற பொழுது என் கணவரையும் சந்திக்க விரும்புவதாக அவர் கூறினர். அந்தக் கூடத்தின் மறு கோடியில் அவர்களிருவரும் சந்தித்துக் கொள்வதையும் பேசத் தொடங்குவதையும் நான் பார்த்தேன். இளவரசர் என்னேப் பற்றி ஏதோ சொல்லி யிருக்க வேண்டும்; ஏனென்ருல் அவர்களுடைய உரையாடலுக்கு நடுவில் அவர் நான் உட் கார்ந்திருந்த திசையில் திரும்பிப் பார்த்துச் சிரித்தார்.

திடீரென்று என் கணவர் விறைப்பாக நின் ருர்; அவர் முகம் சிவந்தது. அவர் குனிந்து வணக்கம் செலுத்திவிட்டு இளவரசரிடமிருந்து தள்ளிப் போய்விட்டார். நானும் வெட்கி நின் றேன். என்னேப் பற்றி—அதற்கும் மேலாக, என் கணவரைப் பற்றி—இளவரசர் என்ன நினேப்பார் என்று வெட்கப்பட்டேன். இளவர சரோடு பேசிக் கொண்டிருந்த பொழுது எனக்கு ஏற்பட்ட சங்கடமான வெட்கத்தை யும் என் கணவருடைய விசித்திரமான நடத்

தையையும் எல்லோரும் கவனித்திருப்பார்கள் என்று கற்பனை செய்து கொண்டேன். அதை அவர்களால் எப்படி விளக்க முடியும்? அல்லது என் கணவருக்கும் எனக்கும் நடைபெற்ற உரையாடல் அவர்களுக்குத் தெரிந்திருக்குமா? அவருடைய அத்தை மகள் என்னுடன் வீட்டுக்கு வந்தாள். வழியில் நாங்கள் அவரைப் பற்றிப் பேசிக் கொண்டோம். என்றல் என்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள முடியவில்லை. அந்தக் கேடான வரவேற்பு விருந்தைப் பற்றி, எங்களுக்கிடையே நடைபெற்ற சச்சரவின் எல்லா விவரங்களையும் அவளிடம் கூறினேன். ஏதோ தப்பெண்ணத்தினல் அது ஏற்பட்டிருக்க வேண்டும், எந்தச் சுவடும் இல்லாமல் அது மறைந்து விடும் என்று கூறி அவள் என்னைச் சமாதானப் படுத்தினள். என் கணவரின் குணத்தை அவள் புரிந்து கொண்ட வகையில் எனக்கு விளக்கினள். அவரிடம் அதிகமான அகம்பாவம் ஏற்பட்டிருக்கிறது, அவர் பழக முடியாதவராக மாறிவிட்டார் என்று அவள் கூறினள். அதை நான் ஒத்துக் கொண்டேன். நான் அவரை இன்னும் சிறப்பான முறையில், உணர்ச்சிக்கு இடங் கொடுக்காமல் புரிந்து கொள்ளத் தொடங்கியிருப்பதாக எனக்குத் தோன்றியது.

ஆனல் என் கணவரோடு நான் தனியாக இருந்த பொழுது நான் அவரைப் பற்றிச் செய்த இந்த முடிவு என் மனச் சாட்சிக்குக் குற்றமாகத் தோன்றியது. எங்களைப் பிரிக்கின்ற பிளவு இன்னும் பெரிதாக வளர்ந்து விட்டதை உணர்ந்தேன்.

## 8

அன்று முதல் எங்களுடைய வாழ்க்கையும் உறவுகளும் முற்றிலும் மாறிவிட்டன. நாங்கள் ஒருவருக்கொருவர் பழகுவதில் அதிகமான மகிழ்ச்சி அடையவில்லை. நாங்கள் சில விஷயங் களைப் பற்றிப் பேசுவதைத் தவிர்த்தோம். நாங்கள் தனியாகப் பேசுவதைக் காட்டிலும் மூன்றுவது மனிதர் இருக்கும் பொழுது பேசு வது எங்களுக்கு சுலபமாக இருந்தது. கிராம வாழ்க்கையைப் பற்றி அல்லது நடன விருந்து களைப் பற்றி நாங்கள் உரையாடத் தொடங் கியவுடன் குட்டிப் பேய்கள் தம் பொந்துகளி லிருந்து தலையை நீட்டிப் பார்க்கத் தொடங் கும். நாங்கள் ஒருவரையொருவர் பார்க்கும் பொழுது எங்களுக்குச் சங்கடமாக இருந்தது. எங்களைப் பிரித்திருந்த பிளவை நாங்கள் இரு வருமே உணர்ந்தோம்; இருவருமே அதை அணு குவதற்கு அஞ்சினேம். அவர் அகம்பாவமான வர், விரைவில் கோபமடையக் கூடியவர், அவ ருக்குக் கோபம் ஏற்படாத படி ஜாக்கிர தையாக நடந்து கொள்ள வேண்டும் என்று நான் விரும்பினேன். நவ நாகரிக வட்டாரங் களுக்குப் போகாமல் என்னுல் வாழ முடியாது, கிராம வாழ்க்கையை நான் வெறுத்தேன், என் னுடைய கீழான ரசனைக்குத் தன்னைச் சரிப் படுத்திக் கொள்ள வேண்டும் என்று அவர் நம் பிஞர். ஆகவே நாங்களிருவரும் இந்த விஷயங் களைப் பற்றிப் பேசுவதைத் தவிர்த்தோம், ஒரு

வரையொருவர் தவருன முறையில் குற்றஞ் சாட்டிக் கொண்டோம். நாங்கள் குறையில்லா தவர்களாக ஒருவருக்கொருவர் தோன்றியது நெடுங்காலத்துக்கு முன்பே முடிந்துவிட்டது. ஒருவரையொருவர் மற்றவர்களோடு ஒப் பிட்டுக் கொண்டோம், இரகசியமாக மதிப்பீடு செய்து கொண்டோம். புறப்படுவதற்கு முன்பு எனக்கு நோய் ஏற்பட்டது. எனவே நிகோல்ஸ் கயேயுக்குப் போகாமல் நகரத்துக்கு வெளியே ஒரு வாடகைக் குடிசையில் தங்கினேம். என்னை அங்கே விட்டுவிட்டு ஸெர்கேய் மிஹாய்லவிச் மட்டும் தன் தாயாரிடம் சென்ருர். அவர் புறப்பட்ட பொழுது அவரோடு பிரயாணம் செய்யப் போதுமான அளவுக்கு என் உடல் நிலை குணமடைந்திருந்தது. ஆனல் அவர் என் உடல் நிலையைப் பற்றிக் கவலைப்பட்டவரைப் போல நான் அங்கேயே தங்கியிருக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். அவர் என் உடல் நலத் தைப் பற்றிக் கவலைப்படவில்லை, நாட்டுப்புறத் தில் எங்கள் வாழ்க்கை மகிழ்ச்சியாக இருக் காது என்பது அவருடைய கவலை என்று நான் உணர்ந்தேன். நானும் வருவதாகச் சொல்ல வில்லை. அங்கேயே தங்கியிருந்தேன். அவர் இல் லாமல் நான் தனிமையை உணர்ந்தேன். என்னு டைய வாழ்க்கை வெறுமையாக இருந்தது. ஆனல் அவர் திரும்பிவந்ததும் அவரோடு இருப்பது ஒரு காலத்தில் என்னுடைய வாழ்க் கையை மாற்றியதைப் போல இப்பொழுது நடைபெறவில்லை. அது எனக்கு வியப்பாக

இருந்தது. நாங்கள் காதலிக்கத் தொடங்கிய காலத்தில் என்னுடைய ஒவ்வொரு சிந்தனை அல்லது காட்சிப்பதிவையும் அவர் பகிர்ந்து கொள்ளாவிட்டால் எனக்கு ஏற்பட்ட வருத்தம், அவருடைய ஒவ்வொரு செயலும் வார்த்தையும் பரிபூரணத்துவத்தின் மாதிரியாக எனக்குத் தோன்றியது, ஒருவருக்கொருவர் கண்களுக்குள் ஒரு தடவை பார்த்துக் கொள்வதே எங்களிடம் குதூகலமான சிரிப்பை ஏற்படுத்தியது—அனைத்தும் மறைந்தன. அந்தக் காலம் போய்விட்டது. எங்கள் உறவுகள் எங்களுக்குத் தெரியாமலேயே மாறிக் கொண்டிருந்த படியால் எங்கள் பழைய காதல் மறைந்து விட்டதை நாங்கள் உணரவில்லை. நாங்கள் தனியாக சொந்த அக்கறைகளையும் கவலைகளையும் கொண்டிருந்தோம்; அவற்றைப் பகிர்ந்து கொள்வதற்கு நாங்கள் முயற்சி செய்யவில்லை. ஒவ்வொருவருக்கும் தனியாக ஒரு உலகம் இருந்ததும் அதற்கும் அடுத்தவருடைய உலகத்துக்கும் சம்பந்தமில்லாதிருந்ததும் எங்களுக்குக் கவலையளிக்கவில்லை. இந்த நிலைமை படிப்படியாக எங்களுக்குப் பழகிவிட்டது. சுமார் ஒரு வருட காலத்துக்குள் நாங்கள் ஏமாற்ற உணர்ச்சியின்றி ஒருவரையொருவர் பார்க்கப் பழகி விட்டோம். என்னோடிருக்கும் பொழுது அவரிடமிருந்த குதூகலம் முற்றிலும் மறைந்துவிட்டது. அதைப் போல அவருடைய சிறு பிள்ளைத்தனமும் எதையும் மன்னிக்கத் தயாராக உள்ள குணமும் ஒரு காலத்தில் எனக்கு எரிச்சலேற்படுத்திய அவருடைய

அலட்சியப் போக்கும் மறைந்துவிட்டன. அவருடைய கூர்மையான பார்வை எனக்குச் சங்கடத்தையும் மகிழ்ச்சியையும் தந்ததுண்டு. இப்பொழுதெல்லாம் அவர் என்னை அப்படிப் பார்ப்பதில்லை. நாங்கள் சேர்ந்து பிரார்த்தனை செய்வதும் நின்றுவிட்டது. கட்டுக் கடங்காத பரவசங்கள் முடிந்துவிட்டன. அவர் அலுவல்களை முன்னிட்டுத் தொடர்ச்சியாக வெளியூர் சென்றபடியால் நாங்கள் ஒருவரையொருவர் அபூர்வமாகவே பார்த்துக் கொண்டோம். என்னைத் தனியே விட்டுப் போவதைப் பற்றி அவர் வருத்தமடையவில்லை, அச்சமடையவுமில்லை. நான் தொடர்ச்சியாக உயர்ந்த வட்டாரங்களில் பழகிக் கொண்டிருந்தேன். அங்கே எனக்கு அவர் தேவைப்படவில்லை.

எங்களிடையே அதற்குப் பிறகு தகராறுகள் அல்லது கருத்து மாறுபாடுகள் ஏற்படவில்லை. நான் அவரைத் திருப்தி செய்ய முயற்சி செய்தேன். அவர் என்னுடைய விருப்பங்கள் எல்லாவற்றையும் நிறைவேற்றினர். நாங்கள் ஒருவரையொருவர் காதலிப்பதாகத் தோன்றியது.

நாங்கள் தனியே இருந்த பொழுது (அந்த வாய்ப்பு அடிக்கடி ஏற்படவில்லை) என்னிடம் மகிழ்ச்சியோ, பரபரப்போ, குழப்பமோ ஏற்படவில்லை. நான் என்னேடு தனியாக இருப்பதைப் போலவே இருந்தது. அவர் யாரோ அந்நியரல்ல, என்னுடைய கணவர், நல்ல மனிதர், என்னைப் போலவே நான் நன்றாக அறிந்து வைத்திருக்கும் என்னுடைய கணவர் என்பதை நான் மிகவும் நன்றாகவே உணர்ந்தேன். அவர்

செய்யக் கூடிய, சொல்லக் கூடிய ஒவ்வொன் றையுமே அவர் என்னை எப்படிப் பார்ப்பார் என்பதையும் நான் நன்றாக அறிந்திருப்பதாக நம்பினேன். அவர் வேறு எதையாவது செய் தால் அல்லது நான் எதிர்பார்த்தபடி இல்லா மல் வேறுவிதமாக என்னைப் பார்த்தால் அவர் தவறு செய்ததாக எனக்குத் தோன்றியது. நான் அவரிடமிருந்து எதையும் எதிர்பார்க்க வில்லை. ஒரு வார்த்தையில் சொல்வதென்றால் அவர் என்னுடைய கணவர்—அதற்கு மேல் எதுவுமில்லை. இது வழக்கமானதே, கணவர் களும் மனைவிகளும் எப்பொழுதுமே இப்படித் தான் இருந்திருக்கிறார்கள், எங்களுக்கிடையே வேறு எந்த விதமான உறவுகளும் இல்லை என்று எனக்குத் தோன்றியது. அவர் வெளியூருக்குப் போகும் பொழுது—குறிப்பாக, முதல் தட வையின் போது—தனிமையை உணர்ந்தேன். அவர் இல்லாததனால் எனக்கு பயமேற்பட்டது. அவருடைய துணையின் அவசியத்தை நான் மிக அதிகமாக உணர்ந்தேன். அவர் திரும்பி வந்த தும் நான் அதிகமான மகிழ்ச்சியோடு அவரைத் தழுவிக் கொள்வேன். ஆனால் இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு இந்த மகிழ்ச்சியை முற்றி லும் மறந்துவிடுவேன். அவரிடம் பேசுவதற்கு ஏதாவதொரு விஷயத்தைக் கூட என்னால் கண்டு பிடிக்க முடியாதிருப்பேன். அமைதி யான, அடக்கமான அன்பு நிறைந்த தருணங் களின் போதுதான் ஏதோ தவறு ஏற்பட்டிருக் கிறது என்பதை உணர்வேன். என் மனச் சுமை அதிகரிக்கும். அவரும் அதே நிலையில் தான்

இருக்கிருர் என்பதை அவருடைய கண்களி லிருந்து தெரிந்து கொள்வேன். அன்பின் குறிப் பிட்ட எல்லேகளுக்கு அப்பால் அவர் போக மாட்டார், என்ருலும் அது முடியாது. அந்த எல்லேகளே நான் உணர்ந்தேன். சில சமயங் களில் இது எனக்கு மனச் சோர்வை ஏற்படுத் தும். ஆனல் அதைப் பற்றி நினேத்துப் பார்க்க முடியாத அளவுக்கு நான் சுறுசுறுப்பாக மற்ற வேலேகளில் ஈடுபட்டேன். ஏதோ மாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று தெளிவில்லாமற் புரிந்து கொள்ளப்பட்ட உணர்விலிருந்து தோன்றிய துயரத்தை என்னே எதிர்பார்த்துக் கொண்டிருந்த பொழுது போக்குகளில் மூழ் கடிக்க முயற்சி செய்தேன். நவநாகரிக வாழ்க் கை, அதன் பளபளப்பிஞலும் முகஸ்துதியிஞ லும் முதலில் என்னே பிரமிக்கச் செய்தது. ஆனல் அது சீக்கிரத்தில் என்னே முற்றிலும் பற்றிக் கொண்டு வாடிக்கையாக மாறிவிட் டது. அது என் மீது தன்னுடைய விலங்குகளே மாட்டியது. காதலுக்காக ஏங்கிக் கொண்டி ருந்த என் இதயத்தின் ஒரு பகுதியை அது பிடித்துக் கொண்டது. தனிமை என்ருல் என்ன என்பதை நான் மறந்துவிட்டேன். என் நிலே மையைப்பற்றி சிந்திப்பதற்கு எனக்குத் துணி வில்லே. அதிகாலேயிலிருந்து இரவில் நெடு நேரம் வரை எனக்கு வேலேயிருந்தது. நான் வெளியே போகாவிட்டால் கூட அந்த நேரம் இனி எனக்குச் சொந்தமல்ல. இவை அனேத் துமே எனக்கு உல்லாசமாக இருக்கவில்லே; சலிப்பாகவும் இருக்கவில்லே. என் வாழ்க்கை

இப்படியே நிரந்தரமாகப் போய்க் கொண்டிருக்கும் என்று கருதினேன்.

இப்படி மூன்று வருடங்கள் முடிந்தன. எங்களுக்கிடையே உறவுகள் பழைய மாதிரியே இருந்தன. அவை உறைந்துவிட்டதைப் போல, அச்சில் பதிக்கப்பட்டதைப் போல இனிமேல் திருந்தவோ அல்லது கெட்டுப் போகவோ முடியாது என்பதைப் போல இருந்தன. அந்த மூன்று வருடங்களின் போது எங்கள் குடும்பத்தில் இரண்டு முக்கியமான சம்பவங்கள் நடைபெற்றன. ஆனால் அவற்றில் ஒன்று கூட என் வாழ்க்கையை மாற்றவில்லை. எனக்கு முதல் குழந்தை பிறந்ததும் ததியானு ஸெமியோனவ்னு மரணமடைந்ததுமே அந்த இரண்டு சம்பவங்களுமாகும். முதலில் குழந்தை மீது எனக்கு ஏற்பட்ட அதிகமான தாய்ப்பாசம் நான் சிறிதும் எதிர்பாராத பரவசத்தைக் கொடுத்தபடியால் ஒரு புதிய வாழ்க்கை தொடங்கும் என்று நான் நினைத்தேன். எனினும் இரண்டு மாதங்களில் உயர்ந்த வட்டாரங்களில் நான் மறுபடியும் தோன்றத் தொடங்கிய பிறகு இந்த உணர்ச்சி குறைந்து கொண்டே வந்து கடைசியில் அது வெறும் பழக்கமாக, என் கடமையைப் பெயரளவில் நிறைவேற்றுவதாக முடிந்தது. இதற்கு மாருக என் கணவர் எங்களுக்கு மகன் பிறந்ததும் முன்பிருந்த மாதிரியே அமைதியோடும் மன நிறைவோடும் வீட்டிலேயே தங்கியிருக்கலானுர். முன்பு தன்னிடம் ஏற்பட்ட அன்பையும் குதூகலத்தையும் குழந்தைக்கு மாற்றினுர்.

நான் என்னுடைய நடன உடையோடு குழந்தையின் அறைக்குச் சென்று அதன் மீது சிலுவைக் குறியிடும் பொழுது என் கணவர் அங்கே இருப்பதைப் பார்ப்பதுண்டு. அவர் என்னைக் கண்டிப்பதைப் போல, கேள்விக் குறியோடு என்னைப் பார்ப்பதைப் போல எனக்குத் தோன்றும். அது எனக்கு அவமானத்தைக் கொடுத்தது. குழந்தையை கவனிக்காமலிருப்பதைப் பற்றி திடீரென்று எனக்கு மன உறுத்தல் எற்படும். ''மற்ற பெண்களைக் காட்டிலும் உண்மையிலேயே நான் மிகவும் மோசமாகப் போய் விட்டேனு?'' என்று என்னையே கேட்டுக் கொள்வேன். ''ஆனல் நான் என்ன செய்ய முடியும்? என் மகன் மீது எனக்கு அன்பு இருக்கிறது. ஆனல் நாள் முழுவதும் குழந்தைக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்க என்னுல் குடியாது. அது எனக்குச் சலிப்பாக இருக்கும். நான் பாசாங்கு செய்ய மாட்டேன்—எதற்காகவும் செய்ய மாட்டேன்'' என்று நினைப்பேன். ஸெர்கேய் மிஹாய்லவிச்சின் தாயாருடைய மரணம் அவருக்கு மிகவும் அதிகமான துயரத்தைக் கொடுத்தது. தன் தாயார் போன பிறகு நிகோல்ஸ்கயேயில் வசிப்பது தனக்கு மிகவும் கஷ்டமாக இருப்பதாக அவர் கூறினர். அவளுடைய மரணத்துக்காக நான் வருத்தப்பட்டாலும் என் கணவரைப் பற்றி அனுதாபப்பட்டாலும், என்னைப் பொறுத்தவரை அவள் இல்லாததனுல் நாட்டுப்புற வாழ்க்கை அதிக மகிழ்ச்சியாகவும் அமைதியாகவும் இருந்தது. அந்த மூன்று வருடங்களில் பெரும் பகுதியும் நாங்கள் நகரத்

திலேயே வசித்தோம். ஒரு தடவை நான் நாட்டுப்புறத்தில் இரண்டு மாதங்கள் தங்கியிருந்தேன். மூன்ருவது வருடம் நாங்கள் வெளி நாட்டுக்குச் சென்ருேம்.

அந்தக் கோடை காலத்தை ஒரு ஆரோக்கிய ஸ்தலத்தில் கழித்தோம்.

அப்பொழுது என்னுடைய வயது இருபத்தொன்று. எங்களுடைய குடும்பத்தின் பொருளாதார நிலே வளங்கொழிப்பதாக நான் நினேத்தேன். குடும்ப வாழ்க்கை எனக்குக் கொடுத்ததைக் காட்டிலும் கூடுதலாக நான் எதையும் கோரவில்லே. எனக்குத் தெரிந்த எல்லோருமே என்னே நேசிப்பதாகத் தோன்றியது. என் உடல் நலம் சிறப்பாக இருந்தது. நான் அணிந்த கவுன்கள் அந்த ஆரோக்கிய ஸ்தலத்திலேயே மிகவும் அருமையானவையாகக் கருதப்பட்டன. நான் அழகுடையவள் என்பது எனக்குத் தெரியும். பருவநிலே மிகவும் சிறப்பாக இருந்தது. அழகு மற்றும் நவநாகரிகச் சூழல் என்னேச் சூழ்ந்திருந்தது. அது எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. நிகோல்ஸ்கயே வாழ்க்கையில் நாளுக இருப்பதே எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. நான் மகிழ்ச்சியடைவதற்குத் தகுதி உடையவள், என் மகிழ்ச்சி எவ்வளவு அதிகமாக இருந்தாலும் அது இன்னும் கூடுதலாக இருக்க வேண்டும் என்று அப்பொழுது நான் நினேத்தேன், மென்மேலும் அதிகமான மகிழ்ச்சிக்காகத் துடித்தேன். அதைப் போலக் கவலேயில்லாமல் இப்பொழுது நான் இருக்கவில்லே. அது வேறுவிதமான மகிழ்ச்சி. ஆனல்

இந்தக் கோடைகாலத்திலும் எனக்கு மனநிறைவு இருந்தது. நான் எதையும் விரும்பவில்லை, எதையும் எதிர்பார்க்கவில்லை, எதற்கும் அஞ்சவில்லை. என்னுடைய வாழ்க்கை முழுமையாக இருப்பதைப் போல, என் மனச்சாட்சி நிம்மதியாக இருப்பதைப் போலத் தோன்றியது. அந்தப் பருவத்தின்போது அங்கே பொழுது போக்க வருகின்ற இளைஞர்கள் எல்லோருமே ஒரே மாதிரியாகத்தான் இருந்தார்கள். முதியவரும் தூதருமான இளவரசர் கே. என்னிடம் பிரியமாக நடந்து கொண்டார். அவரைக் காட்டிலும் சுவாரசியமான வேறொருவரை அங்கே தங்கியிருந்த இளைஞர்களிடம் நான் பார்க்க முடியவில்லை. ஒருவர் இளைஞர், இன்னொருவர் அவரைக் காட்டிலும் வயதானவர். ஒருவர் பொன் மேனியான ஆங்கிலேயர்; அடுத்தவர் குறுந்தாடி வைத்திருந்த பிரெஞ்சுக்காரர். அவர்கள் அனைவரும் சமமானவர்கள். ஆனால் அதே சமயத்தில் எல்லோருமே எனக்கு சம அளவில் அவசியமாக இருந்தார்கள். அவர்கள் அனைவரும் வெவ்வேறு முகங்களைக் கொண்டிருந்தாலும் எனக்கு ஒரே மாதிரியாகத்தான் தோன்றினார்கள். அவர்கள் என்னைச் சுற்றி குதூகலமான சூழ்நிலையை ஏற்படுத்தினார்கள். அவர்களில் ஒரு நபர் மட்டும்—மார்க்விஸ் டி. என்ற இத்தாலியர்—என்னைப் பற்றித் தனது போற்றுதலைத் துணிச்சலாக எடுத்துக் கூறிய காரணத்தால் மற்றவர்களைக் காட்டிலும் என்னை அதிகமாகக் கவர்ந்தார். என்னோடிருக்க, என்னோடு நடனமாட அல்லது குதி

ரைச் சவாரி செய்ய, சூதாடுமிடத்தில் என்னேடிருக்க, நான் எவ்வளவு அழகாக இருக்கிறேன் என்று என்னிடம் சொல்லக் கிடைக்கும் சந்தர்ப்பத்தை அவர் ஒருபோதும் நழுவ விட்டதில்லை. என் வீட்டுக்கு முன்னுல் அவர் நின்று கொண்டிருப்பதை நான் சன்னல் வழியாகச் சில தடவைகள் பார்த்திருக்கிறேன். அவருடைய பிரகாசமான கண்கள் நயமில்லாமல் உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பது எனக்கு வெட்கத்தைத் தந்து திரும்புமாறு செய்யும். அவர் இளைஞர், அழகானவர், நேர்த்தியானவர். ஆனுல் முக்கியமான விஷயம் என்னவென்ருல் அவருடைய சிரிப்பும் நெற்றியும் என் கணவரை எனக்கு நினைவூட்டியது. இத்தனைக்கும் என் கணவரைக் காட்டிலும் அவர் அழகானவராக இருந்தார். இந்த ஒற்றுமை எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனுல் என் கணவரிடமிருந்த இனிமைக்கும் அமைதிக்கும் பதிலாக இந்த இளைஞருடைய உதடுகளில், பார்வையில், நீளமான மோவாயில் அருவருப்பான, மிருகத்தனமான ஏதோ ஒன்று இருந்தது. அவர் என் மீது காதல் கொண்டிருந்தார் என்று அப்பொழுது நான் நம்பினேன். சில சமயங்களில் அவரைப் பற்றி அகம்பாவமான இரக்கத்தோடு நினைத்துக் கொள்வேன். அவரை சாந்திப்படுத்தி, பாதி நட்பும் நெருக்கமான நம்பிக்கையும் கொண்ட தொனியில் அவரை வழிக்குக் கொண்டு வருவதற்கு நான் சில சமயங்களில் விரும்பினேன். ஆனுல் அவர் என் முயற்சிகளை மூர்க்கத்தனமாக நிராகரித்தார்.

எந்த நிமிடத்திலும் அவருடைய உதடுகளி லிருந்து கொட்டத் தயாராக இருந்த உணர்ச்சி யின் மூலம் என்னிடம் தொடர்ச்சியாக மன உலைவு ஏற்படுத்தி வந்தார். நான் இந்த நபரைக் கண்டு அஞ்சினேன் (ஆனால் அதை எனக்குள் ஒத்துக் கொண்டதில்லை); என்னுடைய விருப் பத்துக்கு விரோதமாக அவரைப் பற்றி அடிக் கடி நினைத்துக் கொள்வேன். என் கணவர் அங் கேயிருந்த மற்ற நண்பர்களைக் காட்டிலும் (அவர்களுக்கு அவர் தன் மனைவியின் கணவராக மட்டுமே இருந்தார்) இந்த நபரோடு பழகும் பொழுது இன்னும் கூடுதலான வெறுப்போடும் அகம்பாவத்தோடும் நடந்து கொள்வார். அந்தப் பருவம் முடிவடைகின்ற சமயத்தில் நான் நோய்வாய்ப்பட்டேன். இரண்டு வாரங் கள் வீட்டை விட்டுப் போக முடியவில்லை. என் உடல் குணமடைந்த பிறகு ஒரு நாள் மாலையில் ஒரு இசை நிகழ்ச்சியைக் கேட்பதற்காக முதல் தடவையாக நான் வெளியே சென்ற பொழுது நெடுங்காலமாக எதிர்பார்க்கப்பட்ட பிரபல மான அழகி, சீமாட்டி எஸ். வந்துவிட்டாள் என்று அறிந்தேன். என்னை மகிழ்ச்சியோடு வர வேற்றார்கள். உடனே என்னைச் சுற்றி நண்பர் கள் கூடினார்கள். ஆனால் அந்தப் புதிய அழகியைச் சுற்றி இதைக் காட்டிலும் பெரிய கூட்டம் நின்றது. அவளுடைய அழகைத் தவிர வேறு எதைப் பற்றியும் யாரும் பேசுவதில்லை. அவர்கள் அவளை எனக்குச் சுட்டிக் காட்டினார் கள். அவள் உண்மையிலேயே அழகி என்ப தைக் கண்டேன். ஆனால் அவளுடைய தோற்

றத்திலிருந்த சுயதிருப்தி எனக்குப் பிடிக்க வில்லை. நான் அதை அங்கேயிருந்தவர்களிடம் கூறினேன். ஒரு காலத்தில் அங்கே எனக்கு அதிகமான குதூகலம் ஏற்படும். ஆனால் அன்றைய தினம் எனக்கு எல்லாமே அலுப்பாகத் தோன்றியது. மறு நாள் சீமாட்டி எஸ். ஒரு கோட்டைக்குப் போய் வருவதற்கு ஏற்பாடு செய்திருந்தாள். ஆனால் நான் அதில் கலந்து கொள்ளவில்லை. அநேகமாக ஒருவர் கூட என்னோடு சேரவில்லை. எல்லாமே முற்றிலும் மாறி விட்டதாக எனக்குத் தோன்றியது. எல்லோரும் முட்டாள்தனமாக நடந்து கொள்வதாகவும் ஒவ்வொன்றுமே அலுப்பூட்டுவதாகவும் எனக்குத் தோன்றியது. எனக்கு அழுகை வந்தது. என்னுடைய உடல் குணமடைந்தவுடன் ருஷ்யாவுக்குத் திரும்பிவிட விரும்பினேன். என் இதயத்தில் ஏதோ கெட்ட உணர்ச்சி இருந்தது. ஆனால் நான் அதை என்னிடமே கூட ஒத்துக் கொள்ள மறுத்தேன். என் உடல் பலவீனமாக இருப்பதாகக் காரணம் சொல்லி உயர்ந்த வட்டாரங்களில் பழகுவதை நிறுத்திக் கொண்டேன். சில சமயங்களில் காலை நேரங்களில் மட்டும் நீரூற்றுத் தண்ணீரைக் குடிப்பதற்காக அல்லது சுற்றுப் புறங்களைப் பார்ப்பதற்காக என் சிநேகிதியான எல். எம். என்ற ருஷ்யச் சீமாட்டியுடன் வண்டியில் போய் வருவேன். என் கணவர் அப்பொழுது சில நாட்களுக்கு ஹெய்டல்பர்குக்குப் போயிருந்தார். என்னுடைய சிகிச்சை முடிந்தவுடன் நாங்கள் ருஷ்யாவுக்குத் திரும்புவதற்காக என்னை எதிர்

பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார். அவர் எப்பொழுதாவது என்னைப் பார்க்க வருவார்.

ஒரு நாள் சீமாட்டி எஸ். எல்லோரையும் வேட்டையாடுவதற்காகக் கூட்டிக் கொண்டு போயிருந்தாள். மதிய உணவுக்குப் பிறகு எல். எம். மும் நானும் கோட்டைக்குச் சென்றோம். நாங்கள் மெதுவாகக் குதிரை வண்டியில் போய்க் கொண்டிருந்த பொழுது நாங்களிருவரும் அதற்கு முன்பு இல்லாத முறையில் நெருக்கமாகப் பேசிக் கொண்டோம். நெடுஞ்சாலை பழமையான செஸ்ட்நட் மரங்களுக்கிடையே வளைந்து சென்றது. பாடேனைச் சுற்றியிருந்த ஆழகான, நன்கு பராமரிக்கப்பட்ட நாட்டுப்புறப்பகுதிகள் அஸ்தமன சூரியனின் ஒளியில் பிரகாசமாகத் தெரிவதை அந்த மரங்களின் வழியாக நாங்கள் பார்த்தோம். எனக்கு எல். எம்.ஐ நெடுங்காலமாகத் தெரிந்திருந்தாலும் அவள் அன்பும் அறிவுத்திறனும் உடைய பெண், நான் அவளிடம் மனம் திறந்து பேசலாம், அவளுடைய நட்பைப் பெறுவது இனிமையானது என்பதை அதற்கு முன்னர் ஒரு போதும் நான் உணர்ந்ததில்லை. எங்கள் குடும்பங்களையும் குழந்தைகளையும் அந்த ஆரோக்கிய ஸ்தலத்தில் எங்களுடைய வாழ்க்கை சிறுதரமாக இருப்பதைப் பற்றியும் நாங்கள் பேசினோம். ருஷ்யாவில், நாட்டுப்புறத்துக்குத் திரும்ப வேண்டுமென்று விரும்பினோம். வருத்தம் நிறைந்த ஆனால் இனிமையான பழங்கால நாட்டம் எங்களிடம் ஏற்பட்டது. நாங்கள் கோட்டைக்குள் நுழைகின்ற வரையிலும் அந்த

உணர்ச்சி எங்களிடம் நீடித்தது. கோட்டைச் சுவர்களுக்குள் குளிர்ச்சியாகவும் நிழலாகவும் இருந்தது. இடிபாடுகள் மீது சூரிய வெளிச்சம் விழுந்து கொண்டிருந்த மேற்பகுதியிலிருந்து காலடிகளின் ஓசையும் பேச்சுக் குரல்களும் கேட்டன. வாயிலில் பாடேன் நிலப்பரப்புக் காட்சி சட்டத்தில் மாட்டிய படத்தைப் போலத் தோன்றியது. அது கவர்ச்சியாக இருந் தாலும் ஒரு ருஷ்யர் மனதுக்கு எழுச்சியூட்ட வில்லை. நாங்கள் ஓய்வெடுப்பதற்காகக் கீழே உட்கார்ந்து சூரியன் மறைவதை மௌன மாகப் பார்த்துக் கொண்டிருந்தோம். அந்தக் குரல்கள் முன்னைக் காட்டிலும் தெளிவாகக் கேட்டன. என் பெயரை யாரோ உச்சரித் ததைக் கேட்டதைப் போல எனக்குத் தோன்றி யது. நான் கவனமாகக் கேட்கத் தொடங் கினேன். ஒவ்வொரு வார்த்தையும் தானகவே தெளிவாகக் கேட்டது. குரல்கள் அறிமுகமான வையே. மார்க்விஸ் டி.யும் அவருடைய நண் பரான ஒரு பிரெஞ்சுக்காரரும் (அவரும் எனக்குத் தெரிந்தவர்தான்) பேசிக் கொண்டி ருந்தார்கள். அவர்கள் என்னையும் சீமாட்டி எஸ். ஸைப் பற்றியும் பேசிக் கொண்டிருந் தார்கள். பிரெஞ்சுக்காரர் எங்களிருவரையும் ஒப்பிட்டு எங்கள் அழகு எந்த ரகங்களைச் சேர்ந் தவை என்று ஆராய்ந்து கொண்டிருந்தார். அவர் தவருக ஒன்றும் சொல்லிவிடவில்லை. ஆனல் அவர் கூறியதைக் கேட்ட பொழுது என் முகத்தில் குப்பென்று ரத்தம் பாய்ந் தது. எங்களுடைய நல்ல அம்சங்களை அவர்

நுணுக்கமாக விவாதித்தார். எனக்கு ஏற்கெனவே ஒரு குழந்தை இருந்தது. ஆனால் சீமாட்டி எஸ்.ஸுக்குப் பத்தொன்பது வயதுதான் ஆகிறது. என்னுடைய தலைமுடி அடர்த்தியாக இருக்கிறது. ஆனால் சீமாட்டி எஸ்.ஸின் உடலமைப்பு அதிக வாளிப்பாக இருக்கிறது. சீமாட்டி எஸ். அபூர்வமான ரகம். ஆனால் ''உங்களுடைய சிநேகிதி சுமார்தான்—இங்கே அடிக்கடி வரத் தொடங்கியிருக்கும் முக்கியமில்லாத ஏராளமான ருஷ்ய இளவரசிகளில் அவளும் ஒருத்தி. அவ்வளவுதான்'' என்று அவர் சொன்னார். சீமாட்டி எஸ்.ஸுடன் நான் போட்டி போட முயற்சிக்காதது புத்திசாலித்தனமானது. பாடேனைப் பொறுத்தவரை நான் செத்துப் போய் குழியில் புதைக்கப்பட்ட மாதிரிதான் என்று சொல்லி அவர் முடித்தார்.

''நான் அவளுக்காக வருத்தப்படுகிறேன்.''

''அவள் உங்களிடம் ஆறுதல் பெற முயற்சிப்பது நல்லது'' என்று செயற்கையான, அரக்கத்தனமான சிரிப்போடு கூறினார்.

''அவள் போனால் நானும் அவளைப் பின்தொடர்வேன்'' என்று ஒருவர் இத்தாலிய உச்சரிப்போடு கரகரப்பான குரலில் பேசினார்.

''கவலையில்லாத மனிதர்! உங்களால் இன்னும் காதலிக்க முடிகிறது!'' என்று அந்த பிரெஞ்சுக்காரர் சிரித்துக் கொண்டே கூறினார்.

''காதல்!'' என்று அடுத்த குரல் எதிரொலித்தது. சிறிது இடைவெளிக்குப் பிறகு தொடர்ந்து பேசியது. ''என்னால் காதலிக்காமல் இருக்க முடியாது! அதற்காகத்தானே வாழ்க்

கையே இருக்கிறது. நாம் செய்யக் கூடியது வாழ்க்கையை ஒரு புனைவியற்காவியமாக மாற்றுவதுதான். என்னுடைய காதல் முயற்சிகள் நடுவில் முறிந்துவிடுவதில்லை. இதையும் கடைசி வரை பார்க்கப் போகிறேன்.''

"Bonne chance, mon ami"* என்றார் அந்த பிரெஞ்சுக்காரர்.

அவர்கள் திருப்பத்தைக் கடந்து சென்று விட்டதால் இதற்கு மேல் எங்களுக்குக் கேட்கவில்லை. அவர்களுடைய காலடியோசை மறு பக்கத்திலிருந்து கேட்டது. அவர்கள் படிகளில் இறங்கி சில நிமிடங்களில் பக்கத்துச் சுவரிலிருந்த கதவு வழியாக வெளியே வந்தார்கள். எங்களை அங்கே பார்த்தவுடன் அவர்கள் திகைப்படைந்தனர். மார்க்விஸ் டி. என்னை நோக்கி வந்த பொழுது நான் வெட்கமடைந்தேன். நாங்கள் கோட்டையை விட்டு வந்த பொழுது அவர் என்னிடம் கையை நீட்டிய பொழுது எனக்கு பயமாக இருந்தது. ஆனால் என்னால் மறுக்க முடியவில்லை. அவருடைய நண்பருக்கும் எல். எம்.முக்கும் பின்னால் நாங்கள் நடந்தோம். பிரெஞ்சுக்காரருடைய பேச்சு எனக்கு ஆத்திரத்தைக் கொடுத்தது. ஆனால் நான் ஏற்கெனவே யூகித்ததைத்தான் அவர் கூறினார் என்பதை என்னுடைய இதயத்தின் ஆழத்தில் ஒத்துக் கொண்டேன். அந்த மார்க்விஸ் பண்

---

* நண்பரே! நீங்கள் வெற்றி பெற என் வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறேன்'' (**பிரெஞ்சு**).

பில்லாமல் பேசியதுதான் எனக்கு ஆச்சரியத்தையும் அதிர்ச்சியையும் கொடுத்தது. அவர்களுடைய பேச்சு எங்களுக்குக் கேட்டிருக்கும் என்று அவருக்குத் தெரிந்திருந்தும் என்னிடம் அவருக்கு சிறிது கூட பய உணர்ச்சி ஏற்படாதது எனக்கு வேதனையாக இருந்தது. எனக்கு மிகவும் அருகில் அவர் வந்து கொண்டிருந்ததைப் பற்றி அருவருப்படைந்தேன். அவரை ஏறிட்டுப் பார்க்காமல், அவரோடு பேசாமல், அவருடைய ஸ்பரிசத்தை உணராதபடி அவருடைய கையைப் பிடித்துக் கொள்ள முயற்சித்தபடியே நான் எல். எம்.மையும் அந்த பிரெஞ்சுக்காரரையும் நோக்கி வேகமாக நடந்தேன். இயற்கைக் காட்சி அற்புதமாக இருக்கிறது என்றும் என்னைச் சந்தித்தது எதிர்பாராத மகிழ்ச்சியைக் கொடுத்ததைப் பற்றியும், இன்னும் இதே தோரணையில் மற்ற விஷயங்களைப் பற்றியும் மார்க்விஸ் ஏதோ பேசிக் கொண்டு வந்தார். ஆனால் நான் அவர் பேச்சைக் கேட்கவில்லை. நான் என்னுடைய கணவரைப் பற்றியும் என் மகனைப் பற்றியும் ருஷ்யாவைப் பற்றியும் நினைத்துக் கொண்டிருந்தேன். எனக்கு அவமானமாக இருந்தது, எதற்காகவோ வருத்தமடைந்தேன், எதையோ விரும்பினேன். Hôtel de Badeயில் என்னுடைய சிறிய அறையில் தனியாக, யாரும் குறுக்கிடாமல் உட்கார்ந்து எல்லாவற்றையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்பதற்காக அங்கே உடனே திரும்பிப் போக வேண்டுமென்று அவசரப்பட்டேன். ஆனால் எல்.எம்.

மெதுவாக நடந்து போய்க் கொண்டிருந்தாள். வண்டி இன்னும் வெகு தூரத்திலிருந்தது. என்னுடன் வந்தவரோ என்னைத் தாமதப்படுத்துவதற்காக வேண்டுமென்றே மெதுவாக நடப்பதைப் போலத் தோன்றியது. ''அப்படி இருக்காது!'' என்று நினைத்தேன். நான் வேகமாக மன உறுதியுடன் நடந்தேன். ஆனால் அவர் மெய்யாகவே என்னைப் பின்னால் இழுத்தார். என் கையைக் கூட அழுத்தினார். சாலையில் ஒரு வளைவைச் சுற்றி எல்.எம். போய்விட்டாள். நாங்கள் தனியாக இருந்தோம். எனக்கு அச்சமேற்பட்டது.

''என்னை மன்னியுங்கள்'' என்று நான் வெறுப்போடு சொல்லிவிட்டு என் கையை அவரிடமிருந்து விடுவித்துக் கொள்ள முயற்சி செய்தேன். ஆனால் என் சட்டைக் கையின் லேஸ் அவருடைய பொத்தானில் சிக்கிக் கொண்டது. அவர் குனிந்து லேஸை எடுக்க முயற்சித்த பொழுது அவருடைய மார்பு எனக்கு மிகவும் பக்கத்தில் வந்தது. அவருடைய விரல்கள் என் கையைத் தொட்டன. ஏதோ ஒரு புதிய உணர்ச்சி—அது பயமாகவும் இருக்கலாம், மகிழ்ச்சியாகவும் இருக்கலாம்—என் முதுகெலும்பின் மேலும் கீழும் நடுக்கத்தை ஏற்படுத்தியது. அவர் மீது எனக்கு ஏற்பட்ட அருவருப்பைத் திரட்டி அவரை வெறுப்போடு பார்க்க முயற்சித்து ஏறிட்டுப் பார்த்தேன். ஆனால் என்னுடைய பார்வை இதைக் காட்டவில்லை. அது பயத்தையும் பரபரப்பையுமே காட்டியது. அவருடைய ஈரமான, நெருப்பு

விழிகள் என் முகத்துக்கு மிகவும் அருகில், என்னை — என் கழுத்தையும் மார்பையும் — விழுங்கிக் கொண்டிருந்தன. அவருடைய இரண்டு கைகளும் என் கையைத் தடவின. அவருடைய உதடுகள் திறந்து எதையோ முணு முணுத்தன—அவர் என்னைக் காதலிப்பதாக, நான்தான் அவருக்கு சகலமும் என்று கூறிக் கொண்டிருந்தார். அவருடைய உதடுகள் என்னை நெருங்கிக் கொண்டிருந்தன. அவரு டைய வெப்பமான கரங்கள் என் கைகளை மேலும் இறுக்கிப் பிடித்தன. என்னுடைய இரத்த நாளங்களில் நெருப்புப் பாய்ந்தது. எல்லாம் இருண்டன. நான் நடுங்கினேன். எந்த வார்த்தைகளைச் சொல்லி அவரைத் தடுக்க விரும்பினேனோ அவை என் தொண்டையிலேயே நின்றுவிட்டன. திடீரென்று அவருடைய உதடு கள் என் கன்னத்தில் உரசுவதை உணர்ந்தேன். என் உடல் குளிர்ந்து போய் நடுங்கிக் கொண் டிருந்தது. நான் அவரை ஏறிட்டுப் பார்த் தேன். பேசவோ, நகர்ந்து போகவோ எனக்கு பலமில்லை—அந்த அளவுக்கு நான் பயந்து போயிருந்தேன். நான் எதற்காகவோ காத் திருந்தேன், எதையோ விரும்பினேன். அது ஒரு விநாடி நேரம் மட்டுமே நீடித்தது, ஆனால் அது பயங்கரமான விநாடியாக இருந்தது! அந்த விநாடி மட்டுமே நான் அவரை மிக முழுமை யாகப் பார்த்தேன். அவர் முகத்தை, ஓலைத் தொப்பியின் விளிம்பின் கீழே தெரிந்த, என் கணவருடைய முகத்தைப் போலவே இருந்த அந்த நெற்றியை, பெரிய நாசித்துவாரங்

களோடிருந்த அந்த அழகான, நேரான மூக்கை, வாசனைத்தைலம் தடவி முறுக்கிவிடப்பட்ட மீசையையும் தாடியையும் நன்கு சவரம் செய்யப்பட்ட கன்னங்களேயும் சூரிய ஒளியில் கறுத்துப் போன கழுத்தையும் நான் நன்ருகப் புரிந்து கொண்டேன். நான் அவரை வெறுத்தேன். அவரைக் கண்டு பயந்தேன். அவர் எனக்கு அந்நியமானவர். ஆனுல் அதே சமயத்தில் இந்த அந்நியர், வெறுக்கத்தக்க மனிதர் எவ்வளவு பரபரப்பையும் உணர்ச்சியையும் என்னிடம் எழுப்பிவிட்டார்! அந்தத் தடிப்பான, அழகான உதடுகளின் முத்தங்களுக்காக, அழகான நரம்புகளும் விரல்களில் மோதிரங்களும் அணி செய்த அந்தக் கரங்களின் அணேப்புக்காக என்னிடம் தடுக்க முடியாத ஆசை கிளர்ந்தெழுந்தது. விலக்கப்பட்ட ஆனந்தம் என்ற சேற்றுக் குழி திடீரென்று எனக்கு முன்னுல் வாயைப் பிளந்து இங்கே வா என்று என்னே அழைத்தது. அந்தச் சேற்றுக் குழிக்குள் தலேகுப்புற விழுவதற்கு நான் எவ்வளவு துடித்தேன்.

''நான் எவ்வளவு பரிதாபமான நிலேயில் இருக்கிறேன்! இன்னும் அதிகமான துன்பங்கள் என்னேச் சூழ்ந்து கொண்டால் அது பெரிய விஷயமா?'' என்று நினேத்தேன்.

அவர் ஒரு கையால் என் உடலே அணேத்துக் கொண்டு என்னே நோக்கிக் குனிந்தார். ''இன்னும் அதிகமான அவமானமும் பாவமும் எனக்கு ஏற்பட்டால் அது பெரிய விஷயமா?''

"Je vous aime"* என்று அவர் முணு முணுத்தார். அவர் குரல் என் கணவருடைய குரலைப் போலவே இருந்தது. என் கணவரையும் குழந்தையையும் ஒரு காலத்தில் எனக்கு மிகவும் பிரியமாக இருந்து, இப்பொழுது என்னைப் பொறுத்தவரை மறைந்துவிட்ட பிறவிகளாக நினைத்தேன். திடீரென்று வளைவின் மறு பக்கத்திலிருந்து எல்.எம். என்னைக் கூப்படுகின்ற குரல் கேட்டது. எனக்கு சுய உணர்வு வந்தது, என் கையை வெடுக்கென்று பிடுங்கினேன், அவரைப் பார்க்காமலே அவளை நோக்கி ஓடினேன். நாங்கள் வண்டிக்குள் ஏறி உட்கார்ந்தோம். அதன் பிறகுதான் நான் அவரை லேசாகப் பார்த்தேன். அவர் தொப்பியைக் கையில் வைத்துக் கொண்டு சிரித்தபடியே ஏதோ கேட்டுக் கொண்டிருந்தார். அந்த விஞடியின் போது அவர் மீது எனக்கேற்பட்ட சொல்ல முடியாத அருவருப்பை அவர் அறிந்திருக்க முடியாது.

என்னுடைய வாழ்க்கை மிகவும் துன்பமானதாக, என்னுடைய எதிர்காலம் மிகவும் நம்பிக்கையில்லாததாக, என்னுடைய கடந்த காலம் மிகவும் கறை படிந்ததாகத் தோன்றியது! எல்.எம். என்னிடம் பேசிக் கொண்டிருந்தாள். ஆனுல் அவள் என்ன சொல்கிருள் என்பதை என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. அவள் எனக்காக வருத்தப்படுவதனுல்

---

* நான் உங்களைக் காதலிக்கிறேன் (பிரெஞ்சு).

என் மீது அவளுக்கேற்பட்ட இகழ்ச்சியை மறைப்பதற்காகவே அவள் பேசிக் கொண்டிருக்கிருள் என்று எனக்குத் தோன்றியது. அவளுடைய ஒவ்வொரு வார்த்தையிலும் பார்வையிலும் இந்த இகழ்ச்சியும் அவமதிப்பும் இருப்பதாக எனக்குத் தோன்றியது. அவர் என் கன்னத்தில் முத்தமிட்ட இடம் அவமானத்திஞல் நெருப்பாகச் சுட்டது. என் கணவரையும் குழந்தையையும் பற்றிய நினைவு எனக்குத் தாங்க முடியாததாயிற்று. என்னுடைய நிலையைப் பற்றி என் அறையில் தனியாக உட்கார்ந்து சிந்திக்க வேண்டும் என்று நினைத்தேன். ஆஞல் அறையில் தனியாக இருப்பதற்கு எனக்கு அச்சமாக இருந்தது. அவர்கள் கொடுத்த தேநீரைக் கூடக் குடித்து முடிக்காமலே, அவசர அவசரமாக—எதற்காக என்று சிந்திக்காமல் கூட—நான் மூட்டை கட்டினேன். என் கணவரைச் சந்திப்பதற்காக மாலை ரயில் வண்டியில் ஹெய்டல்பர்குக்குப் புறப்பட்டேன்.

காலியாக இருந்த ரயில்பெட்டியில் என் பணிப் பெண்ணேடு ஏறி உட்கார்ந்தேன். ரயில் வண்டி புறப்பட்ட பொழுது சன்னல் வழியாகப் புதிய காற்று என் மீது வீசிய பொழுது நான் மயக்கத்திலிருந்து விடுபட்டேன், என்னுடைய கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் பற்றி தெளிவாகப் பார்க்கத் தொடங்கினேன். பீட்டர்ஸ்பர்குக்குப் போனது முதல் என் குடும்ப வாழ்க்கை முழுவதையும் ஒரு புதிய ஒளியில் பார்த்தேன். என்னுடைய மனச்

சாட்சி என்னைத் துன்புறுத்தியது. திருமணமான வுடன் நாட்டுப்புறத்தில் நாங்கள் நடத்திய வாழ்க்கை, அப்பொழுது நாங்கள் போட்ட திட்டங்கள் முதல் தடவையாக எனக்குத் தத்ரூபமாகத் தோன்றின. இந்தக் காலகட்டம் முழுவதிலும் அவருக்கு என்ன மகிழ்ச்சி இருந்தது என்ற கேள்வியை முதல் தடவையாக நான் கேட்டுக் கொண்டேன். என் மனதில் குற்ற உணர்ச்சி ஏற்பட்டது. ''அப்படியானால் அவர் ஏன் என்னைத் தடுக்கவில்லை?'' என்று என்னைக் கேட்டுக் கொண்டேன். ''இந்தப் போலித்தனம் ஏன்? அவர் விளக்கமாகப் பேசாதது ஏன்? என்னை அவமதித்தது ஏன்? என்மேல் அவருடைய காதலின் அதிகாரத்தை உபயோகப் படுத்தாதது ஏன்? அல்லது அவர் என்னைக் காதலிக்கவில்லையா?'' ஆனால் அவருடைய தவறு எவ்வளவு பெரியதாக இருந்தாலும் ஒரு அந்நியர் என் கன்னத்தில் முத்தமிட்டுவிட்டார். அது இன்னும் அங்கே இருப்பதாக நான் உணர்ந்தேன். ஹெய்டல்பர்கை நெருங்கிக் கொண்டிருந்த பொழுது நான் என் கணவரை இன்னும் அதிகத் தெளிவாகப் பார்த்தேன். அவரைப் பார்க்கப் போகிறேன் என்பதை நினைக்கும் பொழுது எனக்கு அதிகமான பயமேற்பட்டது. ''நான் அவரிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டும். என் தவறுக்கு வருந்தி நான் கண்ணீர் வடிப்பேன். அவர் என்னை மன்னிப்பார்'' என்று நினைத்தேன். ஆனால் ''எல்லாவற்றையும்'' என்பது என்ன என்று எனக்கே தெரியாது; அவர் என்னை மன்

னிப்பார் என்பதையும் என்னுல் நம்ப முடிய வில்லே.

ஆனல் நான் அறைக்குள் நுழைந்தவுடன் அவருடைய அமைதியான ஆனல் வியப்பைக் காட்டுகின்ற முகத்தைப் பார்த்தவுடன் அவரிடம் சொல்வதற்கு ஒன்றுமில்லே, உண்மையைக் கூற ஒன்றுமில்லே, மன்னிப்புக் கோர ஒன்றுமில்லே என்பதை உணர்ந்தேன். என்னுடைய வெளியே சொல்ல முடியாத வருத்தமும் அதற்காக நான் மனமுருகி வேதனேப்படுவதும் எனக்குள்ளாகப் பூட்டிவைக்கப்பட வேண்டியவையே.

''ஏன் வந்துவிட்டாய்? என்ன நடந்தது? நாளேக்கு நான் அங்கே வருவதாக இருந்தேன்'' என்று அவர் கூறினர். பிறகு என் முகத்தை இன்னும் நெருங்கிப் பார்த்தார். அவர் பயந்துவிட்டதைப் போலத் தோன்றியது. ''என்ன விஷயம்? அங்கே ஏதேனும் நடைபெற்றதா?'' என்று அவர் கேட்டார்.

''ஒன்றுமில்லே'' என்று நான் பதிலளித்தேன். என் கண்களிலிருந்து வழிந்த கண்ணீரை என்னுல் நிறுத்த முடியவில்லே. ''போதும் என்று வந்துவிட்டேன். உங்கள் சொற்படி ருஷ்யாவுக்குத் திரும்ப—நாளேக்கே புறப்படுவதற்குக் கூட—நான் தயாராக இருக்கிறேன்.''

அவர் சற்று நீண்ட தருணம் வரை மௌனமாக இருந்தார். என்னே கவனமாக ஆராய்ந்தார்.

''என்ன நடந்தது என்று என்னிடம் சொல்'' என்று அவர் மறுபடியும் கேட்டார்.

நான் வெட்கமடைந்து என் கண்களைத் தாழ்த்திக் கொண்டேன். அவர் முகத்தில் கடுங் கோபமும் அவமதிப்பும் தோன்றியது. அவர் மனதில் எப்படிப்பட்ட சிந்தனைகள் தோன்று கின்றனவோ என்று பயந்த நான் என்னுடைய முகபாவத்தை மாற்றிக் கொண்டு (அவ்வளவு திறமை என்னிடம் இருப்பது அதுவரை எனக் குத் தெரியாது) பேசினேன்:

''ஒன்றும் நடக்கவில்லை. அந்த வாழ்க்கை எனக்கு அலுத்துப் போய் சலிப்பாகிவிட்டது. நம்முடைய வாழ்க்கையையும் உங்களைப் பற்றி யும் நினைக்கத் தொடங்கினேன். நான் அதிக மான தவறுகள் செய்து விட்டேன்! நீங்கள் போக விரும்பாத இடங்களுக்கு என்னை ஏன் அனுப்பினீர்கள்? நான் அதிகமான தவறுகள் செய்து விட்டேன்!'' என்று மறுபடியும் கூறி னேன். மறுபடியும் என் கண்களில் நீர்த்துளி கள் திரண்டன. ''நாம் நிரந்தரமாக கிராமத் துக்குப் போய்விடுவோம்.''

''ஆ! என் அன்பே! இந்த நாடகமெல்லாம் எதற்காக?'' என்று அவர் வெறுப்போடு கூறி ஞர். ''நீ கிராமத்துக்குத் திரும்பிப் போக விரும்புவது மிகவும் நல்லது. ஏனென்ருல் நம் மிடம் அதிகமாகப் பணம் இல்லை. ஆனுல் அங்கே நிரந்தரமாக வசிப்பது—அது ஒரு கனவுதான். உன்னுல் ஒருபோதும் அதைச் சகித்துக் கொள்ள முடியாது என்பது எனக்குத் தெரியும். தேநீர் குடி—அது மிகவும் நல்லது'' என்று

சொல்லிவிட்டு வேலைக்காரனைக் கூப்பிட மணியை ஒலிப்பதற்காக எழுந்தார்.

அவர் என்னைப் பற்றி என்ன நினைக்கிறார் என்பதை நான் கற்பனை செய்து கொண்டேன். அவர் என்னைத் தயக்கத்தோடு—அவமானமடைந்த உணர்ச்சியோடும் என்று எனக்குத் தோன்றியது—என்னைப் பார்ப்பதை நான் கண்ட பொழுது அவர் மனதில் எத்தகைய பயங்கரமான எண்ணங்கள் ஏற்பட்டிருக்கும் என்பதை நினைத்துக் கலங்கினேன். இல்லை! அவரால் என்னைப் புரிந்து கொள்ள முடியாது. என்னைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற அக்கறை அவரிடமில்லை. குழந்தையைப் பார்க்க வேண்டும் என்று சொல்லிவிட்டு அவரைப் பிரிந்து சென்றேன். நான் தனியே சென்று கண்ணீர் வடிக்க, கண்ணீர் வடிக்க, கண்ணீர் வடிக்க விரும்பினேன்...

## 9

நெடுங்காலமாகச் சூனியமாகவும் வெப்பம் இல்லாமலுமிருந்த நிகோல்ஸ்கயே வீடு மறுபடியும் உறக்கம் கலைந்து விழித்துக் கொண்டது. ஆனால் ஒரு காலத்தில் அங்கே இருந்த சூழல் மறைந்துவிட்டது. அத்தை மரணமடைந்துவிட்டாள். நாங்கள் இருவருமாகத் தனியாக இருந்தோம். ஆனால் இந்தத் தனிமை இப்பொழுது எங்களுக்குத் தேவைப்படவில்லை. அது பெருஞ்சுமையைப் போலக் கூட எங்களை

அழுத்தியது. குளிர்காலம் இரண்டு மடங்கு மோசமாக மெதுவாக நகர்ந்தது. எனக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டது. இரண்டாவது மகன் பிறந்த பிறகுதான் நான் குணமடைந்தேன். என் கணவரோடு என்னுடைய உறவுகள் நகரத்தில் இருந்த மாதிரியே பாசமில்லாமல் வெறும் நட்பாகவே தொடர்ந்தன. ஆனால் இந்த நாட்டுப்புற வீட்டில் தரையிலிருந்த ஒவ்வொரு பலகையும், ஒவ்வொரு சுவரும் ஒவ்வொரு சோபாவும் முன் ஒரு காலத்தில் அவர் எனக்கு என்னவாக இருந்தார், நான் எதை இழந்துவிட்டேன் என்பதை எனக்கு நினைவுபடுத்தின. எங்களுக்கிடையே மன்னிக்கப்படாத தவறு ஒன்று நிற்பதைப் போல, ஏதோ ஒரு செயலுக்காக அவர் என்னைத் தண்டிக்கிறார், ஆனால் அது தனக்குத் தெரியாததைப் போல நடிக்கிறார் என்பதைப் போல இருந்தது. அவரிடம் மன்னிப்புக் கேட்பதற்கு, இரக்கம் காட்டுங்கள் என்று கெஞ்சுவதற்குத் தக்க காரணம் ஒன்றுமில்லை. முன் போல அவருடைய முழு உயிரையும் முழு ஆன்மாவையும் எனக்குத் தராததுதான் அவர் எனக்களித்த ஒரே தண்டனை. ஆனால் அவர் அதை வேறு யாருக்கும் எதற்கும் கொடுக்கவில்லை—அப்படி ஒன்று இனி அவரிடம் இல்லை என்பதைப் போல இருந்தது. அவர் என்னைச் சித்திரவதை செய்வதற்காக அப்படிப் பாசாங்கு செய்கிறார், அவரிடம் பழைய உணர்ச்சி இன்னும் துடிக்கிறது என்ற எண்ணம் சில சமயங்களில் எனக்கு ஏற்பட்டது. நான் அந்த உணர்ச்

சியைத் தூண்ட முயற்சி செய்தேன். ஆனால் அவர் நம்பிக்கை வைத்துச் சொல்லப் படுகின்ற பேச்சுக்களைத் தவிர்த்தார். அவர் என் மீது அவநம்பிக்கை கொண்டிருப்பதாகவும் உணர்ச்சிகளைக் காட்டுவது முட்டாள்தனம் என்று அஞ்சுவதாகவும் தோன்றியது. எனக்கு எல்லாம், ஒன்று விடாமல் எல்லாமே தெரியும் —நீ என்ன சொல்ல விரும்புகிறாய் என்பது கூட எனக்குத் தெரியும். நீ ஒன்றைச் சொல்லிவிட்டு இன்னொன்றைச் செய்வாய் என்பதும் எனக்குத் தெரியும் என்று அவருடைய பார்வையும் குரலும் பேசின. என்னிடம் நம்பிக்கை வைத்துப் பேசுவதற்கு அவர் பயந்தது முதலில் எனக்குக் கோபமூட்டியது. ஆனால் என்னிடம் நம்பிக்கை வைத்துப் பேச அவர் விரும்பாததற்குக் காரணம் பயமல்ல, ஆர்வமின்மையே என்ற எண்ணம் எனக்குப் படிப்படியாகப் பழகிவிட்டது. நானும் திடுதிப்பென்று அவரிடம் நான் உங்களைக் காதலிக்கிறேன் என்றோ அல்லது என்னோடு சேர்ந்து பிரார்த்தனை செய்யுங்கள் என்றோ சொல்லியிருக்க முடியாது, நான் பியானோ வாசிக்கப் போகிறேன், கேளுங்கள் என்று அவரைக் கூப்பிட்டிருக்க முடியாது. ஒருவரோடொருவர் எங்களுடைய நடத்தையை சில ஒழுங்கு விதிகள் நிர்ணயித்தன. எங்களில் ஒவ்வொருவரும் தன்னுடைய சொந்த வாழ்க்கையை நடத்தி வந்தோம். அவருக்குச் சொந்த வேலைகள் இருந்தன; அவற்றில் நான் பங்கெடுப்பது அவசியமல்ல, அப்படிப் பங்கெடுப்பதற்கும் இப்பொழுது நான் விரும்ப

வில்லை. நான் காலத்தை வீணைகக் கழித்தேன். அதனுல் அவருக்குக் கோபமோ அல்லது வருத்தமோ இனி ஏற்படவில்லை. குழந்தைகள் எங்களிருவரையும் ஒன்று சேர்க்க முடியாத அளவுக்கு மிகவும் சிறியவர்களாக இருந்தார்கள்.

ஆனுல் வசந்த காலம் வந்தது. காதியாவும் ஸோனியாவும் கோடை காலத்துக்காக கிராமத்துக்கு வந்தார்கள். நிகோல்ஸ்கயேயில் எங்களுடைய வீடு புதுப்பிக்கப்பட்டு வந்தபடியால் நாங்கள் பக்ரோவ்ஸ்கயேயுக்குச் சென்ருேம். அந்தப் பழைய வீடும் வராந்தாவும், பிரகாசம் நிறைந்த உபசரிப்பு அறை மேசையும் பியானேவும், சன்னல்களில் வெள்ளைத் திரைகள் தொங்கிக் கொண்டிருந்த என் பழைய அறை—எல்லாம் அப்படியே இருந்தன. சிறு பெண்ணுக இருந்த பொழுது என்னுடைய கனவுகளை அங்கே விட்டு விட்டுப் போய் மறந்துவிட்டதைப் போலத் தோன்றியது. அங்கே இரண்டு சிறிய கட்டில்கள் இருந்தன. ஒன்று என்னுடைய பழைய கட்டில். அதில் கொகோஷா தன்னுடைய மொத்தையான கரங்களை நீட்டிக் கொண்டு படுத்துக் கிடந்தான். நான் இரவில் அவன் மேல் சிலுவைக் குறியிடுவேன். அடுத்தாற்போலிருந்த சிறிய கட்டிலில் வான்யாவின் சின்ன முகம் அணையாடைகளுக்குள்ளிருந்து எட்டிப் பார்க்கும். அவர்கள் மேல் சிலுவைக் குறியிட்ட பிறகு அந்த அமைதியான அறையின் நடுவில் நான் நிற்பதுண்டு. என்னுடைய இளமைக் காலத்தின் பழைய, மறந்துபோன

காட்சிகள் மூலைகளிலிருந்து, சுவர்களிலிருந்து, திரைகளிலிருந்து திடீரென்று! மொய்த்துக் கொண்டு வரும். என்னுடைய சிறுமிப் பருவத் தின் பழைய பாடல்களை நான் கேட்டேன். அந்தக் காட்சிகள் எங்கே? அல்லது அந்த அன்பு நிறைந்த, இனிமையான பாடல்கள் எங்கே? நான் நம்பிக்கை வைப்பதற்குக் கூடத் துணிய முடியாத எல்லாமே நனவாகிவிட்டன. என் னுடைய தெளிவில்லாத, குழப்பமான கனவு கள் நிறைவேறிவிட்டன. அந்த யதார்த்தம் இரக்கமற்ற, கடினமான, உற்சாகமில்லாத வாழ்க்கையாகிவிட்டது. ஆனால் இங்கே எல் லாம் அப்படியே இருக்கின்றன. நான் சன்னல் வழியாக அதே தோட்டத்தை, அதே புல்த ரையை, அதே பாதையை, கால் வாய்க்குப் பக்கத்தில் அதே பெஞ்சை, குளத்திலிருந்து அதே வானம்பாடிகள் பாடிக் கொண்டிருப் பதை, அதே பவளக் குறிஞ்சி மலர்கள் பூத்துக் குலுங்குவதை, வீட்டுக்கு மேலே அதே நிலா வைப் பார்க்கிறேன். அதே சமயத்தில் எல் லாமே மிகவும் பயங்கரமாக, மிகவும் நம்ப முடியாதபடி மாறிவிட்டன! எனக்கு மிக நெருக் கமாகவும் அன்பாகவும் இருந்திருக்கக் கூடிய எல்லாமே மிகவும் பாசமில்லாதவையாக, எங்கோ தொலை தூரத்தில் இருப்பவையாக மாறிவிட்டன! பழைய நாட்களைப் போலவே இப்பொழுது நான் காதியாவுடன் நடைக் கூடத் தில் உட்கார்ந்து அவரைப் பற்றித் தணிவான குரலில் பேசிக் கொண்டிருக்கிறேன். ஆனால் காதியாவின் முகத்தில் சுருக்கங்கள் அதிகரித்து

விட்டன; பழுப்பு நிறம் வந்துவிட்டது. அவள் கண்கள் இனி மகிழ்ச்சியிலும் நம்பிக்கையிலும் பிரகாசிப்பதில்லே. அவை அனுதாபத்தையும் வருத்தத்தையும் பற்றிப் பேசுகின்றன. முன்பு அவரைப் பற்றிப் பேசிப் பரவசமடைவதைப் போல இப்பொழுது நாங்கள் செய்யவில்லே; அவரைப் பற்றி நிதானமாக முடிவு செய்கிருேம். நாம் ஏன், எதற்காக மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிருேம் என்று இனி நாங்கள் ஆச்சரியப்படுவதில்லே. நாங்கள் என்ன நினேக்கிருேம் என்பதை மொத்த உலகத்துக்கே தெரிவிக்க வேண்டும் என்று இனி நினேப்பதில்லே. நாங்கள் ஒருவருக்கொருவர் சதிகாரர்களேப் போல முணுமுணுத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிருேம். எல்லாமே இப்படி வருந்தும்படி ஏன் மாறிவிட்டன என்று ஒருவரையொருவர் நூறு தடவைகள் கேட்டுக் கொள்கிருேம். அவர் முன்பு இருந்த மாதிரி, இன்னும் அப்படியே இருக்கிருர்—புருவங்களுக்கிடையே உள்ள சுருக்கம் இன்னும் ஆழமடைந்து விட்டது; நெற்றிப் பொட்டுகளுக்குப் பக்கத்தில் நரைமுடி அதிகரித்திருக்கிறது. அவருடைய ஆழமான, எதையோ தேடுகின்ற பார்வை எப்பொழுதும் என்னிடமிருந்து மறைக்கப்பட்டிருக்கிறது. நான் இன்னும் அதே மாதிரியாகத்தான் இருக்கிறேன்; ஆனுல் என்னிடம் காதல் இல்லே, காதலிக்க வேண்டுமென்ற விருப்பமும் இல்லே. நான் உழைப்பதும் அவசியமல்ல, என்னேப் பற்றி எனக்குத் திருப்தியும் கிடையாது. மதத்தைப் பற்றி என்னிடமிருந்த

பழைய ஆவேசம், அவர் மீது நான் கொண்டிருந்த பழைய காதல், என்னுடைய பழைய முழு வாழ்க்கை எவ்வளவு அதிகமான தொலைவிலிருப்பதாக, எவ்வளவு நடக்க முடியாததாகத் தோன்றுகிறது. மற்றவர்களுக்காக வாழ்வதில் உள்ள மகிழ்ச்சி ஒரு காலத்தில் எனக்கு மிகத் தெளிவாக, சரியாகத் தோன்றியது. இப்பொழுது என்னுல் அதைப் புரிந்து கொள்ளக் கூட முடியவில்லை. நான் எனக்காகக் கூட வாழ விரும்பாத பொழுது மற்றவர்களுக்காக ஏன் வாழ வேண்டும்?

பீட்டர்ஸ்பர்குக்குப் போன பிறகு நான் இசையை முற்றிலும் விட்டுவிட்டேன். ஆனல் இப்பொழுது பழைய பியானேவும் இசைக் குறிப்புகளும் என்னை மறுபடியும் ஈர்த்தன.

ஒரு நாள் எனக்கு உடல் நலமில்லாமல் வீட்டில் தனியாக இருந்தேன். காதியாகவும் ஸோனியாவும் கட்டிட வேலை எப்படி நடைபெறுகிறது என்று பார்ப்பதற்காக அவரோடு நிகோல்ஸ்கயேயுக்குப் போயிருந்தார்கள். மேசையின் மேல் தேநீர்ச் சட்டி மற்றும் இதர பொருள்கள் தயாராக வைக்கப்பட்டிருந்தன. நான் கீழே சென்று அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்த பொழுது பியானேவுக்கு முன்னுல் உட்கார்ந்தேன். இசைப் புத்தகத்தை எடுத்து quasi una fantasia என்ற சொனுட்டாவின் பக்கத்தைத் திறந்து அதை வாசிக்கத் தொடங்கினேன். அங்கே என் வாசிப்பைப் பார்க்கவோ கேட்கவோ யாருமில்லை. தோட்டத்துப் பக்கமாக இருந்த சன்னல்கள் திறந்

திருந்தன. அறையில் பழக்கமான, வருத்தமும் வீறமைதியும் கலந்த ஓசை நிறைந்தது. நான் முதல் பகுதியை முடித்துவிட்டு என்னையறியாமல்—பழக்கத்தின் காரணமாக—அவர் வழக்கமாக என் இசையை ரசித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கின்ற மூலையைப் பார்த்தேன். அவர் அங்கே இல்லை. அவருடைய நாற்காலி அவர் உட்காருகின்ற மூலையில் இருந்தது. அது நெடுங்காலமாக அங்கே தான் இருக்கிறது. யாரும் அதைத் தொடவில்லை. சூரிய அஸ்தமன ஒளியில் பவளக் குறிஞ்சிப் புதர்கள் பிரகாசமாகத் தெரிவதை சன்னல் வழியாகப் பார்த்தேன். மாலை நேரத்தில் குளிர்ச்சியான காற்று திறந்திருந்த சன்னல்கள் வழியாக உள்ளே வந்தது. நான் முழங்கைகளைப் பியானோ வாத்தியத்தின் மீது வைத்துக் கொண்டு, கைகளில் முகத்தைத் தாங்கிக் கொண்டு சிந்திக்கத் தொடங்கினேன். இனி ஒருபோதும் திரும்பி வர முடியாதபடிப் போய்விட்ட கடந்த காலத்தைப் பற்றி வேதனையோடும் எதிர்காலத்தைப் பற்றிக் கவலையோடும் சிந்தித்தபடியே நெடுநேரம் வரை அங்கே உட்கார்ந்திருந்தேன். ஆனால் எனக்கு முன்னால் நான் எதையும் பார்க்கவில்லை. நான் எதையும் விரும்பாததைப் போல, ஒன்றையும் எதிர்பார்க்காததைப் போலத் தோன்றியது. ''என் வாழ்க்கை முடிந்துவிட்டதா?'' என்று நான் யோசித்தேன். எல்லாவற்றையும் மறந்துவிட வேண்டும், சிந்திக்கக் கூடாது என்ற முடிவோடு தலையைத் தூக்கிக் கொண்டு மறுபடியும் பியானோவை வாசித்தேன். மறுபடியும்

அதே அன்டான்டே இசைதான். ''அன்பு நிறைந்த இறைவனே! நான் தவறு செய்திருந் தால் என்னை மன்னித்துவிடு. அன்று மிகவும் அழகோடிருந்தவற்றை எனக்குத் திருப்பிக் கொடு. அல்லது என்ன செய்ய வேண்டும், இனி எப்படி வாழ வேண்டும் என்று எனக்குக் கற்றுக் கொடு'' என்று பிரார்த்தனை செய் தேன். புல்லின் மேல் சக்கரங்கள் ஓடிவருகின்ற சத்தம் கேட்டது. முகப்பிலும் வராந்தாவிலும் எனக்கு நன்கு அறிமுகமான, கவனம் நிறைந்த காலடிச் சத்தம் கேட்டது. பிறகு அமைதி நிலவியது. அந்த அறிமுகமான காலடிச் சத்தம் பழைய உணர்ச்சியை என்னிடம் ஏற்படுத்த வில்லை. நான் வாசிப்பை முடித்த பொழுது எனக்குப் பின்புறத்தில் காலடிச் சத்தம் கேட் டது. என் தோள் மீது ஒருகை வைக்கப்பட்டது.

''அந்த சொனுட்டாவைக் கேட்க எவ்வளவு இனிமையாக இருக்கிறது'' என்று அவர் கூறி ஞர்.

நான் பதில் சொல்லவில்லை.

''தேநீர் குடித்தாயா?''

நான் அவரைப் பார்க்காமல் தலையை மட்டும் ஆட்டினேன். என் முகத்தில் உணர்ச்சியின் சுவடுகள் இருப்பதை அவர் பார்த்துவிடக் கூடா தென்று விரும்பினேன்.

''அவர்கள் ஒரு நிமிடத்தில் வந்து விடுவார் கள். குதிரை இடக்குச் செய்தது. எனவே அவர் கள் வண்டியிலிருந்து இறங்கி குறுக்குப் பாதை வழியாக நடந்து வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்று அவர் தெரிவித்தார்.

''அவர்கள் வருகின்ற வரை காத்திருப் போம்'' என்று நான் பதிலளித்தேன். அவர் என்னைப் பின்தொடர்ந்து வருவார் என்று நினைத்துக் கொண்டு வராந்தாவுக்குச் சென் றேன். ஆனால் அவர் குழந்தைகளைப் பற்றிக் கேட்டுவிட்டு அவர்களைப் பார்ப்பதற்குச் சென் றார். அவருடைய இருப்பு, அவருடைய அன் பான, சிறிதும் பதட்டமில்லாத குரல் நான் எதையோ இழந்து விட்டதாக நினைத்தது தவறு என்று என்னிடம் கூறின. இதற்கு மேல் நான் எதை விரும்ப முடியும்? அவர் மென்மையான வர், அன்பு நிறைந்தவர், நல்ல கணவர், நல்ல தகப்பனார்—இதற்கு மேல் நான் எதிர்பார்க்க லாமா? நான் வராந்தாவைக் கடந்து சென்று பந்தலின் கீழ்—அவர் என்னைக் காதலிப்பதாகச் சொன்ன பொழுது உட்கார்ந்து கொண்டிருந்த அதே பெஞ்சின் மீது—உட்கார்ந்தேன். சூரியன் மறைந்துவிட்டது, அந்திக்கால இருள் திரண்டு கொண்டிருந்தது. அந்த வீட்டின் மேலும் தோட்டத்தின் மேலும் வசந்த காலக் கறுப்பு மேகம் ஒன்று மிதந்து கொண்டிருந்தது. மரங் களுக்கு அப்பால் வானத்தில் ஒரு தெளிவான பகுதியில் மட்டுமே அஸ்தமித்துக் கொண் டிருந்த சூரியனின் வண்ணக் கோலங்களும் அப்பொழுது பிரகாசிக்கத் தொடங்கிய மாலை நட்சத்திரமும் தென்பட்டன. மேகத்தின் நிழல் எல்லாவற்றின் மேலும் படர்ந்து தெரிந்தது. லேசான வசந்தகாலத் தூறலுக்காக எல்லோமே காத்துக் கொண்டிருந்தன. காற்று நின்றுவிட் டது. ஒரு இலை, ஒரு புல் கூட அசையவில்லை.

பவளக் குறிஞ்சி மலர்கள் மற்றும் காட்டுச் செர்ரி மலர்களின் வாசனை மிகவும் அதிகமாக இருந்த படியால் காற்று முழுவதுமே பூத்திருப் பது போலத் தோன்றியது. அது அலையலையாக —ஒரு சமயத்தில் மென்மையாகவும் மறு சம யத்தில் வன்மையாகவும்—வந்து தோட்டத் திலும் வராந்தாவிலும் நிறைந்தது. கண்களை மூடிக் கொண்டு, எதையும் பார்க்காமல், எதை யும் கேட்காமல் இந்த நறுமணத்தை முகர்ந்து கொண்டிருந்தால் மட்டும் போதுமென்று தோன் றியது. தாஹ்லியாக்களும் ரோஜாக்களும் இன்னும் மலரவில்லை. அவை கறுப்புக் கொடி களில் மெதுவாக மேலே ஏறிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. மலைப் பகுதியில் தவளை கள் உரத்த குரலில்—தங்களைத் தண்ணீருக் குள் விரட்டப் போகின்ற மழை வருவதற்கு முன்பு அதுவே கடைசி முறை என்பதைப் போல—கரைந்து கொண்டிருந்தன. இந்தக் கூச்சலுக்கு மேலே ஒரு மென்மையான குரல் இனிமையாக ஒலித்தது. வானம்பாடிகள் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குப் பறந்து செல்லும் பொழுது கவலையோடு ஒன்றை யொன்று கூப்பிட்டுக் கொண்டன. மறுபடியும் இந்த வசந்த காலத்தில் ஒரு வானம் பாடி சன்னலுக்குக் கீழே இருக்கும் புதரில் தன்னு டைய கூட்டை அமைக்க முடிவு செய்திருக்கிறது. ஆனால் நான் வெளியே போன பொழுது சந் துக்குப் பக்கத்தில் அதன் குரல் ஒலிப்பதைக் கேட்டேன். அது ஒரு தடவை பாடிவிட்டுப்

பிறகு எதையோ எதிர்பார்த்துக் கொண்டு மௌனமாக இருந்தது.

நானும் எதையோ எதிர்பார்த்துக் கொண் டிருக்கிறேன், என்னிடம் வருத்தம் நிறைந்தி ருக்கிறது என்று எனக்கே ஆறுதல் சொல்ல நான் வீண் முயற்சிகளைச் செய்தேன்.

அவர் கீழே இறங்கி வந்து எனக்குப் பக்கத் தில் உட்கார்ந்தார்.

''இந்தப் பெண்கள் மழையில் நனைந்து விடு வார்கள் என்று நினைக்கிறேன்'' என்றார்.

''ஆமாம்'' என்று நான் முணுமுணுத்தேன். நாங்கள் மறுபடியும் வெகு நேரம் வரை மௌ னமாக இருந்தோம்.

காற்று வீசவில்லை. அந்த மேகம் மேலும் மேலும் கீழே இறங்கிக் கொண்டிருந்தது. எல் லாமே அதிகமான அமைதியோடும் நறுமணத் தோடுமிருந்தன. திடீரென்று அந்தப் பந்தல் மீது ஒரு மழைத்துளி விழுந்தது. அது உடனே துள்ளிக் குதித்தது போலத் தோன்றியது. இன் னொரு மழைத்துளி சாலையிலிருந்த சரளைக்கற் களின் மேல் விழுந்தது. புல்வெளியிலிருந்த செடிகளின் பெரிய இலைகள் மீது சில பெரிய மழைத்துளிகள் விழுந்து சிதறின. பிறகு ஒரு புது மழை பலத்தைத் திரட்டிக் கொண்டு பெய்யத் தொடங்கியது. வானம்பாடிகளும் தவளைகளும் உடனே சத்தத்தை நிறுத்திக் கொண்டன. காற்றில் ஒரே ஒரு குரல் மட்டும் இன்னும் கேட்டது. ஆனால் மழையின் காரண மாக அது வெகு தூரத்துக்கு அப்பாலிருந்து வருவதைப் போலத் தோன்றியது. வராந்தா

வுக்குப் பக்கத்தில் கிடந்த சருகுகளில் மறைந்து கொண்டு ஒரு பறவை இரண்டு சுரங்களை ஒரே மாதிரியாகப் பாடியது. அவர் உள்ளே போவ தற்காக எழுந்தார்.

''எங்கே போகிறீர்கள்?'' என்று அவரை நிறுத்திய படியே கேட்டேன். ''இங்கே எவ்வளவு இனிமையாக இருக்கிறது.''

''நான் அவர்களுக்குக் குடையும் ரப்பர் காலணிகளும் அனுப்ப வேண்டும்'' என்று அவர் பதிலளித்தார்.

''அவை அவசியமாக இருக்காது. ஒரு நிமிடத்தில் இது நின்றுவிடும்.''

அவர் நான் சொன்னதை ஒத்துக் கொண்டார். வராந்தாவின் இரும்புக் கிராதிக்குப் பக்கத்தில் நாங்களிருவரும் சேர்ந்து உட்கார்ந்திருந்தோம். ஈரமடைந்து, வளவளப்பாக இருந்த இரும்புக் கிராதியை என் கையால் பிடித்துக் கொண்டு கான்வாஸ் பந்தலுக்கு வெளியே என் தலையை நீட்டினேன். குளிர்ச்சியான மழைநீர் என் தலைமுடியிலும் கழுத்திலும் விழுந்து சிதறியது. மேலேயிருந்த சிறிய மேகம் எங்கள் மேல் மழையைக் கொட்டிய பிறகு மெலிந்து லேசாக மாறியது. மழையின் ஒரே சீரான சத்தம் மறைந்து வானத்திலிருந்தும் இலைகளிலிருந்தும் ஒரு சில துளிகள் மட்டும் கீழே விழுகின்ற சத்தம் கேட்டது. மறுபடியும் தவளைகள் சத்தம் போடத் தொடங்கின. மறுபடியும் வானம்பாடிகள் சோர்வை அகற்றி ஒன்றையொன்று கூப்பிடத் தொடங்கின. எங்களைச் சுற்றி எல்லாமே லேசாயிற்று.

''இது அற்புதமாக இல்லையா?'' என்று கிராதிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு என் ஈரத் தலையைத் தடவியபடியே அவர் கேட்டார்.

அவர் சாதாரணமான முறையில் என் தலையைத் தடவிக் கொடுத்தது என்னைக் கண்டிப்பதைப் போல இருந்தது. நான் அழுவதற்கு விரும்பினேன்.

''இதற்கு மேல் ஒரு மனிதனுக்கு என்ன வேண்டும்? நான் இப்பொழுது மிகவும் மன நிறைவோடிருக்கிறேன். எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம். நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன்!'' என்று அவர் கூறினார்.

''நீங்கள் மகிழ்ச்சியைப் பற்றி வழக்கமாக இப்படிச் சொல்ல மாட்டீர்களே'' என்று நான் மனதில் நினைத்துக் கொண்டேன். ''எவ்வளவு தான் மகிழ்ச்சியை அனுபவித்தாலும் இன்னும் வேறு ஏதாவது வேண்டும் என்று சொல்வது உங்கள் வழக்கமாயிற்றே. இப்பொழுது நீங்கள் அமைதியாக, மன நிறைவோடு இருக்கிறீர்கள். ஆனால் என் இதயம் தவறுக்காக வருந்துவதைச் சொல்ல முடியாமலும் கண்ணீரைக் கொட்ட முடியாமலும் இருக்கிறது'' என்று நினைத்தேன். ஆனால் பின்வருமாறு பேசினேன்:

''எனக்கும் திருப்தியாக இருக்கிறது. ஆனால் இந்த மனநிறைவு எனக்கு வருத்தத்தைத் தருகிறது. எனக்குள் எல்லாமே மிகவும் குழப்பமாக, அரைகுறையாக இருக்கின்றன. இங்கே எல்லாமே மிகவும் அழகாகவும் பரிபூரண அமைதியோடும் இருக்கின்றன. எனினும் நான் எப்

பொழுதும் எதையாவது விரும்பிக் கொண் டேயிருக்கிறேன். கிடைக்க முடியாததை நீங் கள் விரும்புவதைப் போல, அது போய்விட் டதே என்று வருந்துவதைப் போல ஒரு சோக மான மகிழ்ச்சியை இயற்கை உங்களிடம் ஒரு காலத்திலும் தூண்டியதில்லையா?''

அவர் என் தலையைத் தடவிக் கொண்டிருந்த கையை எடுத்தார். ஒரு விஞடி மௌனமாக இருந்தார்.

''அப்படி—குறிப்பாக வசந்த காலத்தில்— எனக்குத் தோன்றியதுண்டு'' என்று எதையோ நினைவு கூர்வதைப் போல அவர் பேசினுர். ''எனக்கும் இரவில் தூக்கம் வரவில்லை. எதையோ எதிர்பார்த்துக் கொண்டு காத்திருந் தேன்—அவை மிகவும் அழகான இரவுகள்!.. ஆனுல் அப்பொழுது எல்லாமே என்னை முந்தி விட்டன; இப்பொழுது எல்லாமே எனக்குப் பின்னுல் போய்விட்டன. என்னிடம் இருப்ப தைக் கொண்டு நான் திருப்தி அடைகிறேன், என்னிடம் நிறைவு ஏற்பட்டிருக்கிறது.'' அவர் மிகவும் அலட்சியமாகவும் தன்னம்பிக்கையோ டும் பேசினுர். அவர் பேச்சு என்னைப் புண் படுத்திய போதிலும் அவர் உண்மையைத்தான் சொல்கிருர் என்று நான் நம்பினேன்.

''நீங்கள் ஒன்றைக் கூட விரும்பவில்லையா?'' என்று நான் கேட்டேன்.

''கிடைக்க முடியாதது ஒன்றையுமே நான் விரும்பவில்லை'' என்று நான் எதைக் குறிப்பிடு கிறேன் என்று யூகித்த படியே அவர் பதில ளித்தார். ''உன் தலை ஈரமாகிவிட்டது'' என்று

அவர் மறுபடியும் என் தலைமுடியைக் கோதினார், ஒரு குழந்தையைப் போல என் தலைமுடியைத் தடவினார். ''மழையில் ஈரமடையும் இலைகளையும் புல்லையும் பார்த்து நீ பொறாமைப்படுகிறாய். இலைகளாகவும் புல்லாகவும் மழையாகவும் இருக்க வேண்டுமென்று நீ விரும்புகிறாய். ஆனால் இளமையும் அழகும் ஆனந்தமும் நிறைந்த மற்றவை ஒவ்வொன்றையும் போல அவற்றைப் பார்ப்பதே எனக்குத் திருப்தியைத் தருகிறது.''

''கடந்த காலத்தில் எதைப் பற்றியுமே நீங்கள் வருத்தப்படவில்லையா?'' என்று என் இதயத்தின் சுமை மென்மேலும் அதிகரித்துக் கொண்டிருப்பதை உணர்ந்த படி நான் தொடர்ந்து கேட்டேன்.

அவர் ஒரு விநாடி சிந்தனை செய்தார். அவர் முற்றிலும் நேர்மையான முறையில் பதிலளிக்க முயற்சிப்பதை நான் கண்டேன்.

''இல்லை!'' என்று நறுக்கென்று கூறினார்.

''இது உண்மையல்ல! உண்மையல்ல!'' என்று நான் திரும்பி அவர் கண்களைப் பார்த்தபடியே உரத்த குரலில் கூறினேன். ''நாம் இழந்ததைப் பற்றி நீங்கள் வருத்தமடையவில்லையா?''

''இல்லை!'' என்று அவர் மறுபடியும் கூறினார். ''கடந்த காலத்துக்கு நான் நன்றி கூறுகிறேன். அதைப் பற்றி எனக்கு வருத்தம் கிடையாது.''

''அது திரும்ப வர வேண்டும் என்று நீங்கள்

விரும்பவில்லையா?'' என்று நான் வற்புறுத்திக் கேட்டேன்.

அவர் திரும்பிக் கொண்டு வெளியே தோட்டத்தைப் பார்த்தார்.

''எனக்குச் சிறகுகள் முளைக்க வேண்டுமென்று நான் விரும்புவதில்லை. அதைப் போலவே அதையும் நான் விரும்புவதில்லை. அது நடக்கப் போவதில்லை!''

''கடந்த காலத்தின் மீது நீங்கள் குறை காண்பதில்லையா? என்னையோ அல்லது உங்களையோ ஒருபோதும் கடிந்து கொள்வதில்லையா?''

''ஒருக்காலுமில்லை! நடந்தவை அனைத்துமே மிகச் சிறந்தவையே!''

''சற்றுக் கேளுங்கள்!'' என்று கூறிவிட்டு அவர் என்னைப் பார்க்க வேண்டும் என்பதற்காக அவருடைய கையைத் தொட்டேன். ''உங்களுக்குப் பொருத்தமாகத் தோன்றிய முறையில் நான் வாழ்க்கை நடத்த வேண்டும் என்று நீங்கள் விரும்பியதை ஒருபோதும் என்னிடம் சொல்லாதது ஏன்? சுதந்திரத்தை சரியாக உபயோகிக்க எனக்குத் தெரியாத பொழுது நீங்கள் ஏன் என்னைச் சுதந்திரமாக விட்டீர்கள்? எனக்கு போதிப்பதை ஏன் நிறுத்திக் கொண்டீர்கள்? நீங்கள் விரும்பியிருந்தால்—நீங்கள் எனக்கு வழிகாட்டியிருந்தால் ஒன்றுமே நடைபெற்றிருக்காதே.'' என்னுடைய குரல்—பழைய காதல் உணர்ச்சியோடு அல்ல—பாசமில்லாத எரிச்சலோடும் கண்டனத்தோடும் ஓங்கி ஒலித்தது.

''என்ன நடைபெற்றது?'' என்று அவர் என்னை நோக்கித் திரும்பிக் கொண்டு ஆச்சரியத்தோடு கேட்டார். ''இது வரை ஒன்றும் நடைபெற வில்லையே. எல்லாமே நல்லவைதான்—மிகவும் நல்லவைதான்'' என்று புன்சிரிப்போடு கூறினார்.

''அவர் என்னைப் புரிந்து கொள்ளவில்லையா அல்லது (அதைக் காட்டிலும் மோசமானபடி) என்னைப் புரிந்து கொள்ள விரும்பவில்லையா?'' என்று நான் திகைத்தேன். என் கண்கள் கண்ணீரைப் பெருக்கின.

''நான் ஒரு குற்றமும் செய்யாவிட்டாலும் உங்களுடைய அலட்சியம், உங்களுடைய இகழ்ச்சியினால் எப்பொழுதுமே நான் தண்டிக்கப்பட்டேனே, அது நடைபெற்றிருக்காதல்லவா?'' என்று நான் சீறினேன். ''நான் முற்றிலும் குற்றமில்லாதவளாக இருந்தாலும் நான் மிகவும் விரும்பிய எல்லாவற்றையும் பறித்துக் கொண்டீர்களே, அது நடைபெற்றிருக்காதல்லவா?''

''அன்பே! நீ என்ன சொல்கிறாய்?'' என்று என்னைப் புரிந்து கொள்ளாததைப் போல அவர் கேட்டார்.

''என் பேச்சில் குறுக்கிட வேண்டாம். எல்லாவற்றையும் நான் சொல்ல வேண்டும்... என்னிடமிருந்து உங்களுடைய நம்பிக்கையை, உங்கள் காதலை, உங்கள் மரியாதையை நீங்கள் விலக்கிக் கொண்டீர்கள். இத்தனையும் நடந்த பிறகு நீங்கள் என்னைக் காதலிப்பதாக இனி நான் நினைக்க முடியாது. பொறுங்கள். நெடுங்

காலமாக என்னைத் துன்புறுத்திக் கொண்டிருக்கும் எல்லாவற்றையும் நான் சொல்ல வேண்டும்'' என்று அவர் மறுபடியும் பேசத் தொடங்கிய பொழுது நான் கூறினேன். ''எனக்கு வாழ்க்கையைப் பற்றித் தெரியாததும் நான் அதைத் தன்னந்தனியாகக் கற்குமாறு நீங்கள் அனுமதித்ததும் என்னுடைய தவறு? இப்பொழுது, நான் விரும்புவது என்ன என்று எனக்குப் புரிகின்ற பொழுது, சுமார் ஒரு வருட காலமாக உங்களிடம் திரும்புவதற்கு நான் முயற்சி செய்து கொண்டிருக்கும் பொழுது, நான் எதை விரும்புகிறேன் என்று உங்களுக்குத் தெரியாததைப் போல என்னை ஒதுக்குகிறீர்கள். அதையும் யாரும் குறை சொல்ல முடியாதபடி செய்கிறீர்கள். தவறு செய்ததும் மகிழ்ச்சியில்லாமல் துன்பப்பட வேண்டியதும் நான் ஒருவளே என்று காட்டுகிறீர்கள்! ஆம். உங்களுக்கும் எனக்கும் பேராபத்தாக இருக்கக் கூடிய ஒரு வாழ்க்கைக்குள் என்னை மறுபடியும் தள்ளுவதற்கு நீங்கள் விரும்புகிறீர்கள்.''

''நீ ஏன் அப்படி நினைக்கிறாய்?'' என்று அவர் உண்மையிலேயே திகைப்போடும் கலவரத்தோடும் கேட்டார்.

''என்னால் இங்கே ஒருபோதும் வசிக்க முடியாது என்று நேற்று நீங்கள் சொல்லவில்லையா? குளிர் காலத்தில் நான் வெறுக்கின்ற பீட்டர்ஸ்பர்குக்கு நாம் போக வேண்டியிருக்கும் என்று நீங்கள் அடிக்கடி சொல்லவில்லையா? எனக்கு உதவி செய்வதற்கு பதிலாக நீங்கள் என்னிடம் உண்மையைப் பேசுவதில்லை, ஒருபோதும் மனப்

பூர்வமான, அன்பான வார்த்தையைப் பேசுவதில்லை. நான் முழுவதும் வீழ்ச்சியடைகின்ற பொழுது நீங்கள் என்னைக் கடிந்து கொள்வீர்கள், நான் வீழ்ந்துவிட்டதைப் பற்றி மகிழ்ச்சியடைவீர்கள்.''

''நிறுத்து'' என்று அவர் கண்டிப்பும் வெறுப்பும் நிறைந்த குரலில் கூறினர். ''நீ இப்பொழுது பேசினயே அப்படிப் பேசுவது சரியல்ல. அது என் மீது உனக்குள்ள வெறுப்பைக் காட்டுகிறது. என்னை நீ...''

''காதலிக்கவில்லையா?சொல்லுங்கள்! அதைச் சொல்லிவிடுங்கள்!'' என்று சொல்லிவிட்டு நான் விம்மியழுதேன். பெஞ்சில் உட்கார்ந்து என் முகத்தைக் கைக்குட்டையினல் மூடிக் கொண்டேன்.

''இவர் என்னை இப்படித்தான் புரிந்து கொள்கிருர் போலும்!'' என்று என்னுடைய கேவல்களை அடக்க முயற்சி செய்தவாறு நினைத்தேன். ''உங்கள் காதல் போய்விட்டது, போய்விட்டது'' என்று ஏதோ ஒரு குரல் என்னிடம் இடித்துச் சொல்லிக் கொண்டேயிருந்தது. அவர் என்னிடம் வரவில்லை, என்னை சமாதானப்படுத்த முயற்சிக்கவில்லை. என் பேச்சினல் அவர் ஆத்திரமடைந்திருக்க வேண்டும். அவர் அமைதியான, இரக்கமில்லாத குரலில் பேசினர்.

''நீ எதற்காக என்னைக் கடிந்து கொள்கிருய் என்று எனக்குத் தெரியவில்லை'' என்று அவர் தொடங்கினர். ''நான் அந்தக் காலத்தில் உன்னைக் காதலித்ததைப் போல இப்பொழுது காதலிக்காததற்காக என்ருல்...''

''அந்தக் காலத்தில்!'' என்று நான் கைக்

குட்டைக்குள் முணுமுணுத்தேன். வேதனைக் கண்ணீர் இன்னும் வேகமாக வழிந்தோடியது.

''—அது நம்முடைய குறை மட்டுமல்ல, காலத்தின் குறையும் தான். ஒவ்வொரு காலத்துக்கும் ஒரு காதல் முறை இருக்கிறது...'' அவர் சிறிது நேரம் பேசவில்லை. ''நான் முழு உண்மையையும் உன்னிடம்சொல்லிவிடட்டுமா? மனந்திறந்து பேசுங்கள் என்று நீ வற்புறுத்துவதால் சொல்கிறேன். உன்னை முதன் முதலாகத் தெரிந்து கொண்ட அந்த முதல் வருடத்தில் உன்னைப் பற்றியே நினைத்துக் கொண்டு என் இதயத்தில் மென்மேலும் காதலை வளர்த்துக் கொண்டிருந்த படியால் நான் பல இரவுகள் தூங்கவில்லை. அதே மாதிரி பீட்டர்ஸ்பர்கிலும் வெளிநாட்டிலும் என்னைச் சித்திரவதை செய்த காதலை நான் நொறுக்கி, அழித்துக் கொண்டிருந்த படியால் நான் உறங்காத பயங்கரமான இரவுகள் அதிகம். நான் காதலை அழிக்கவில்லை. என்னைச் சித்திரவதை செய்ததை மட்டும் அழித்தேன். நான் அமைதியைக் கண்டேன். ஆனால் நான் இன்னும் உன்னைக் காதலிக்கிறேன்—வேறு வழியில்,''

''நீங்கள் அதைக் காதல் என்று சொல்கிறீர்கள், ஆனால் அது கொடுமை'' என்று நான் முணுமுணுத்தேன். ''நான் உயர்ந்த சமூகத்தில் பழகியது மிகவும் தீங்கானது என்று கருதி என்னைக் காதலிப்பதை நீங்கள் நிறுத்திவிட்டீர்கள் என்றால் நான் அங்கே பழகுவதற்கு ஏன் அனுமதி கொடுத்தீர்கள்?''

'அன்பே! அது உயர்ந்த சமூகத்தின் குற்ற மல்ல.''

''என் மீது உங்களுடைய அதிகாரத்தை நீங்கள் ஏன் உபயோகிக்கவில்லை?'' நான் தொடர்ந்து பேசினேன். ''என்னை ஏன் கட்டிப் போடவில்லை, கொலை செய்யவில்லை? எனக்கு மகிழ்ச்சியைத் தந்த எல்லாவற்றையும் என்னி டமிருந்து பறித்து விடுவதைக் காட்டிலும் அது மிகவும் சிறப்பானதாயிற்றே. நான் ஆறுதல டைந்திருப்பேன், அவமானப்பட்டிருக்க மாட் டேன்.''

என் முகத்தை மறைத்துக் கொண்டு மறுபடி யும் நான் விம்மியழுவதற்குத் தொடங்கினேன்.

அதே நேரத்தில் மழையில் நனைந்து கொண்டு வந்த காதியாவும் ஸோனியாவும் பரபரப்போடு வராந்தாவின் மேல் ஏறினர்கள். அவர்கள் சிரித்துக் கொண்டு, உரத்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனல் எங்களைப் பார்த் ததும் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அங் கிருந்து போய்விட்டார்கள்.

அவர்கள் போன பிறகு நாங்கள் நெடு நேரம் வரை மௌனமாக உட்கார்ந்திருந்தோம். நான் கதறியழுதேன். அதற்குப் பிறகுதான் என் மனம் வேதனையிலிருந்து விடுபட்டது. நான் அவரை ஏறிட்டுப் பார்த்தேன். அவர் தன் தலையைக் கைகளில் தாங்கியபடி உட் கார்ந்திருந்தார். என் பார்வைக்கு மறுமொழி யாக ஏதோ சொல்ல விரும்பினர். ஆனல் அவரால் பெருமூச்சு விடத்தான் முடிந்தது.

மறுபடியும் தலையைக் கைகளுக்குள் புதைத்துக் கொண்டார்.

நான் அவருக்கு அருகில் சென்று அவர் கையைப் பிடித்திழுத்தேன். அவர் என்னைத் துயரத்தோடு பார்த்தார்.

''ஆம்'' என்று தன் சிந்தனைகள் தொடர்வதைப் போலப் பேசினர். ''நாம் எல்லோரும் —குறிப்பாகப் பெண்கள்—உண்மையான வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காகப் போலியான வாழ்க்கையை வாழ்ந்து தீர வேண்டியிருக்கிறது. நம்மில் யாருமே அடுத்தவருடைய அனுபவத்தால் பயனடைய முடியாது. அந்தக் கவர்ச்சிகரமான போலி வாழ்க்கையை நீ முற்றிலும் கடந்து விட்டதாகச் சொல்ல முடியாது. ஆனல் உன்னைத் தடுக்க எனக்கு உரிமை இல்லையென்று நான் கருதியதால் அந்த வாழ்க்கையில் நீ தனியாக ஈடுபடுமாறு நான் விட்டுவிட்டேன். அப்படிப் பட்ட வாழ்க்கையில் நான் பங்கு கொள்ளக் கூடிய காலம் நெடுங்காலத்துக்கு முன்பே போய்விட்டது.''

''நீங்கள் என்னைக் காதலித்தீர்கள் என்றால் என்னேடு தங்கி அந்த வாழ்க்கையைப் பார்த்துக் கொண்டிருந்தது ஏன்?'' என்று நான் கேட்டேன்.

''ஏனென்றல் நீ எவ்வளவு விரும்பினலும் என்னுடைய வார்த்தையை நம்பிவிட முடியாது. நீயே அதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படியே நீ தெரிந்து கொண்டு அல்லவா?''

''நீங்கள் மிகவும் அதிகமாகக் கணக்குப் போட்டீர்கள். மிகவும் குறைவாகக் காதலித்தீர்கள்'' என்று நான் கூறினேன்.

மறுபடியும் நாங்கள் மௌனமாக உட்கார்ந்திருந்தோம்.

''இப்பொழுது சொன்னயே, அது கடுமையானது—ஆனல் அது உண்மை'' என்று கூறிவிட்டு அவர் சட்டென்று எழுந்தார். வராந்தாவில் முன்னும் பின்னும் நடக்கத் தொடங்கினர். ''ஆம். அது உண்மைதான். அது என்னுடைய தவறுதான்!'' என்று எனக்கு முன்னல் நின்றபடியே கூறினர். ''உன்னைக் காதலிக்க என்னை அனுமதித்திருக்கக் கூடாது. அல்லது நான் உன்னை இன்னும் எளிமையாகக் காதலித்திருக்க வேண்டும்.''

''நாம் எல்லாவற்றையும் மறந்துவிடலாமே'' என்று நான் பயந்தவாறு கூறினேன்.

''இல்லை. நடந்தவற்றை மாற்ற முடியாது—ஒருக்காலும், ஒருக்காலும் மாற்ற முடியாது'' என்று சொன்ன பொழுது அவருடைய குரல் மிகவும் கனிவோடிருந்தது.

''எல்லாமே மாறிவிட்டன'' என்று அவருடைய தோளின் மேல் கையை வைத்தபடியே நான் கூறினேன்.

அவர் என் கையைப் பிடித்து அழுத்தினர்.

''எனக்கு வருத்தமே கிடையாது என்று சொன்னேன். அது உண்மையல்ல. நான் கடந்த காலத்தை நினைத்து வருந்துகிறேன். செத்துப் போய்விட்ட—ஒருக்காலும் புத்துயிர் பெற முடியாத—காதலைப் பற்றி நினைத்து நான்

வருந்துகிறேன். அது உண்மை. அது யாருடைய தவறு? எனக்குத் தெரியாது. காதல் இருக்கிறது. ஆனல் அது ஒரு காலத்தில் இருந்த காதல் அல்ல. காதலுக்குரிய இடம் இருக்கிறது. ஆனல் அந்தக் காதல் ஒரு விதமான நோய் வாய்ப்பட்டுவிட்டது. அதற்கு பலமில்லே, சக்தி இல்லே. நினைவுகளும் நன்றியும் இருக்கின்றன. ஆனல்...''

''அப்படிச் சொல்லாதீர்கள்...'' என்று நான் அவர் பேச்சில் குறுக்கிட்டேன். ''பழைய மாதிரியே எல்லாம் இருக்கும்... அப்படி இருக்க முடியும். சரிதானு?'' என்று அவர் கண்களே ஊடுருவிப் பார்த்துக் கொண்டு கேட்டேன். ஆனல் அவருடைய கண்கள் தெளிவாகவும் நிர்மலமாகவும் இருந்தன. அவை என் கண்களே ஆழமாகப் பார்க்கவில்லே.

நான் சொன்னது நடக்க முடியாதது என்பதைப் பேசிக் கொண்டிருந்த பொழுது நான் உணர்ந்தேன். அவர் அமைதியாக, அன்பு ததும்பச் சிரித்தார். அது ஒரு முதியவரின் சிரிப்பு என்று எனக்குத் தோன்றியது.

''நீ எவ்வளவு இளமையாக இருக்கிருய்! நான் மிகவும் கிழவனுகி விட்டேன்'' என்ருர் அவர். ''நீ விரும்புவது இனி என்னிடம் இல்லேயே. என்னேயே நான் எதற்காக ஏமாற்றிக் கொள்ள வேண்டும்?'' என்று அவர் புன்சிரிப்போடு கூறிஞர்.

நான் அவருக்குப் பக்கத்தில் மௌனமாக நின்றேன். என் இதயம் மிகவும் சுமை குறைந்து லேசாகி விட்டதைப் போல உணர்ந்தேன்.

''போனதை மறுபடியும் கொண்டுவருவதற்கு நாம் முயற்சி செய்யக் கூடாது. நாம் நம்மையே ஏமாற்றிக் கொள்ளக் கூடாது. பழைய கவலையும் பழைய வேகமும் இனி நம்மிடம் இல்லையென்றால் அதுவும் நல்லதே! நாம் எதையும் விரும்பித் தேடவில்லை. நம் அமைதியைக் குலைப்பதற்கும் ஒன்றுமில்லை. நாம் அனுபவித்த மகிழ்ச்சி சிறிதும் குறைவானதல்ல. இப்பொழுது நாம் ஒதுங்கிக் கொண்டு அவனுக்கு வழிவிட வேண்டும்'' என்று தாதியின் கரங்களில்இருந்த வான்யாவைச் சுட்டிக் காட்டியவாறு கூறினர். அவள் அவனைத் தூக்கி வைத்துக் கொண்டு வாயிற்படியில் நின்றாள். ''அன்பே! இவ்வளவு போதும்'' என்று சொல்லிக் குனிந்து என் தலையில் முத்தமிட்டு முடித்தார். அது காதலனின் முத்தமல்ல, ஒரு முதிய நண்பருடைய முத்தம்.

தோட்டத்திலிருந்து இரவின் நறுமணம் அதிக வன்மையாகவும் இனிமையாகவும் வந்தது; இரவின் ஓசைகளும் மௌனமும் வீறமைதியோடு விளங்கின; நட்சத்திரங்கள் இன்னும் பிரகாசமாகத் தோன்றின. நான் அவரைப் பார்த்தேன். எனக்கு வேதனை கொடுத்துக் கொண்டிருந்த நரம்பை அகற்றி விட்டதைப் போல உடனே என் இதயச் சுமை குறைந்து லேசாயிற்று. அந்த நாட்களைச் சேர்ந்த காதல் நிரந்தரமாக மறைந்துவிட்டது, அதற்குப் புத்துயிர் கொடுக்க முடியாது என்பது மட்டுமல்ல அவ்வாறு செய்வது வேதனையளிப்பதோடு, நம்மைக் குறுக்கிக்

கொள்வதே என்பதை நான் தெளிவாகவும் அமைதியாகவும் உணர்ந்தேன். எனக்குப் பேரானந்தமாகத் தோன்றிய அந்தக் காலம் உண்மையில் அவ்வளவு அற்புதமாக இருந்த ததா? அது முடிந்து எவ்வளவு காலம், எவ் வளவு நெடுங்காலமாகிவிட்டது!

''நாம் தேநீரை மறந்துவிட்டோமே!'' என்று அவர் நினைவு படுத்தினார். நாங்களிரு வரும் நடைக் கூடத்துக்குள் ஒன்றாகச் சென் றோம். வான்யாவைக் கைகளில் தூக்கி வைத்துக் கொண்டிருந்த தாதியை மறுபடி யும் வாயிற்படியில் சந்தித்தோம். நான் குழந் தையைத் தூக்கி மூடப்படாமலிருந்த அவ னுடைய இளஞ்சிவப்புக் கால்களைத் துணியால் மூடி அவனை] என்னோடணைத்து என் உதடுகள் லேசாகப் படும்படி முத்தமிட்டேன். அவன் தூக்கத்திலிருப்பதைப் போலத் தன் பிஞ்சு விரல்களை விரித்தான்; எதையோ தேடுவதைப் போல அல்லது எதையோ நினைத்துக் கொண்ட தைப் போல தன்னுடைய மங்கலான கண் களைத் திறந்து பார்த்தான். அந்த விழிகள் திடீரென்று என் மீது குவிந்தன. எண்ணத்தின் ஒரு பொறி பளிச்சிட்டது. அவனுடைய முழு உதடுகளும் வளைந்து ஒரு புன்சிரிப்பில் மலர்ந் தன. ''என்னுடைய குழந்தை, எனக்கே உரிய வன்!'' என்று என் இதயம் படபடத்தது. என் உடலின் ஒவ்வொரு அணுவிலும் இன்பமான வேதனையோடு அவனை என் மார்போடணைத் துக் கொண்டேன். அவனுக்குக் காயம் ஏற் படுமோ என்ற கவலை கூட எனக்கில்லை. அவ

னுடைய குளிர்ச்சியான சிறு பாதங்களை, அவன் வயிற்றை, கைகளை, இறகு அடைத்த துணியினுல் மூடப்பட்டிருந்த அவன் தலையை முத்தமிடத் தொடங்கினேன். என் கணவர் எனக்குப் பக்கத்தில் வந்தார். நான் உடனே குழந்தையின் முகத்தை மூடிவிட்டேன். பிறகு முகத்தை மூடியிருந்த துணியை நீக்கினேன்.

''இவான் ஸெர்கேயெவிச்!'' என்று அவனைக் கூப்பிட்டபடியே என் கணவர் தன் விரலால் மோவாயின் கீழ் நிமிண்டினுர். ஆனுல் நான் மறுபடியும் இவான் ஸெர்கேயெவிச்சின் முகத்தை வேகமாக மூடினேன். என்னைத் தவிர வேறு யாரும் அவனை அதிக நேரம் பார்க்கக் கூடாது. நான் என் கணவரைப் பார்த்தேன். அவர் என்னைப் பார்த்த பொழுது அவருடைய விழிகள் சிரித்துக் கொண்டிருந்தன. அவற்றைப் பார்த்த பொழுது என்னுடைய வாழ்க்கையில் நெடுங்காலத்துக்குப் பிறகு முதல் தடவையாக நான் மகிழ்ச்சியடைந்தேன்; என் இதயம் சுமையில்லாமல் லேசாக இருந்தது.

என் கணவரிடம் நான் கொண்டிருந்த காதல் அன்றுடன் முடிந்தது. என்னுடைய பழைய காதல் இனி ஒருபோதும் திரும்ப முடியாத காலத்தைப் பற்றிய இனிய நினைவாக மாறியது. என்னுடைய குழந்தைகள் மீதும் என் குழந்தைகளின் தகப்பனுர் மீதும் ஏற்பட்ட புதிய பாச உணர்ச்சி மற்றெரு மகிழ்ச்சியான வாழ்க்கையின் தொடக்கமாக அமைந்தது. அது முற்றிலும் வேறு விதமான வாழ்க்கை. அது இன்றும் கூட முடிந்துவிடவில்லை...

**1859**

# கஜக்கோல்*

## (ஒரு குதிரையைப் பற்றிய கதை)

மி.அ. ஸ்தஹோவிச்** நினை
வுக்கு அர்ப்பணிக்கப்பட்டது

### அத்தியாயம் 1

வானத்தில் ஒளி மேலே மேலே ஏறிக் கொண்டிருந்தது, சூரியோதயம் அகலமாகப் பரவியது, ஊடுருவிப் பார்க்கக் கூடிய வெள்ளிப் பனித்துளி அதிக வெண்மையாகப் பிரகாசித்தது, கருக்கரிவாள் நிலா தேய்ந்து கொண்டிருந்தது, காட்டில் சந்தடி அதிகரித்தது, மக்கள் வேலை செய்யத் தொடங்கிவிட்டார்கள். பண்ணைக்காரர் வீட்டுக் குதிரைப் பட்டியில் குதிரைகள் வைக்கோலை உறுமிக்கொண்டே பிருண்டும்

---

* இக்கதையின் தலைப்பு **ஹொல்ஸ்தமேர்** (நீண்ட காலடிகள்) என்பதாகும். நீண்ட காலடிகளைக் கொண்ட ஒரு உண்மையான குதிரையைப் பற்றிய கற்பனைக் கதை இது. **(ப-ர்.)**

** இக்கதையின் கரு நாடகாசிரியரான மி.அ. ஸ்தஹோவிச்சினால் தொடங்கப்பட்டது. ஓய்வுபெற்ற குதிரைப்படை அதிகாரியான அ.அ. ஸ்தஹோவிச் இக்கதைக் கருவை தல்ஸ்தோயிடம் தெரிவித்தார். **(லேவ் தல்ஸ்தோய் எழுதிய குறிப்பு.)**

சத்தம் அதிக முனைப்பாகக் கேட்டது. அந்தக் குதிரைகள் கோபத்தில் ஒன்றையொன்று இடித்துக் கொண்டு எதைப் பற்றியோ சச்சரவு செய்து கொண்டபொழுது கிறீச்சென்ற அழு குரலும் கூடக் கேட்டது.

''என்ன, ஆரம்பிச்சாச்சா? இன்னும் அதிக நேரமிருக்கிறதே! பட்டினியாகவா இருக்கிறீர் கள்'' என்று அந்த வயோதிகமான குதிரை மேய்ப்பவன் கிறீச்சிடுகின்ற கதவைத் திறந்து கொண்டே கூறினான். ஒரு குதிரை கதவை நோக்கிப் பாய்ந்த பொழுது ''சீ! பின்னாலே போ'' என்று கையை ஓங்கிக் கொண்டு அதட் டினான்.

மேய்ச்சல்காரனை நேஸ்தெர் தான் அணிந் திருந்த கஸாக்கியச் சட்டையை ஒரு தோல் இடைவாரினால் இடுப்போடு சேர்த்து இறுக்கிக் கட்டியிருந்தான். அந்த இடைவாரில் அவனு டைய பல்வேறு கருவிகள் தொங்கிக் கொண்டி ருந்தன. சவுக்கு தோளின் மேல் குறுக்காகக் கிடந்தது. ரொட்டியைத் துண்டில் சுற்றி இடை வாருக்குள் திணித்து வைத்திருந்தான். அவன் சேணத்தையும் கடிவாளத்தையும் கையோடு கொண்டு வந்திருந்தான்.

மேய்ச்சல்காரனின் கேலிப் பேச்சு குதிரை களிடம் பயத்தையோ அல்லது கோபத் தையோ ஏற்படுத்தவில்லை. அவை கவலைப் படாதது போலப் பாசாங்கு செய்தன. தங் களுக்கு அக்கறை இல்லாதது போலக் கதவுப் பக்கத்திலிருந்து திரும்பிக் கொண்டன. அடர்த் தியான பிடரிமயிரைக் கொண்ட ஒரே ஒரு

பெண் குதிரை மட்டும் தன் காதுகளை மடித்துக் கொண்டு அவனுக்கு வேகமாக முதுகைக் காட்டித் திரும்பிக் கொண்டது. அதைப் பார்த்தவுடன் அதற்குப் பின்னால் நின்று கொண்டிருந்த ஒரு இளம் பெண் குதிரை—உண்மையில் அது இவற்றையெல்லாம் கவனித்திருக்கக் கூடாது—கனைத்துக் கொண்டு தனக்குப் பக்கத்தில் வந்த முதல் குதிரையைப் பார்த்துத் தன் பின்னங்கால்களை உதைத்தது.

''ஓ!'' என்று அந்த மேய்ச்சல்காரன் அதிகமான சத்தத்தோடும் முன்னைக் காட்டிலும் பயமுறுத்துகின்ற தொனியிலும் கத்திக் கொண்டே அந்தக் குதிரைப் பட்டியின் தொலைவிலிருந்த மூலைக்குச் சென்றான்.

அந்தப் பட்டியிலிருந்த எல்லாக் குதிரைகளிலும் (அங்கே சுமார் நூறு குதிரைகள் இருந்தன) கதம்ப நிறத்தைக் கொண்ட காயடிக்கப்பட்ட குதிரைதான் சிறிது கூட அவசரப்படாமலிருந்தது. அது வெளியே நீட்டிக் கொண்டிருந்த எரவாணத்தின் கீழ் தனியாக நின்று கொண்டு அங்கே ஊன்றப்பட்டிருந்த ஓக் மரக் கம்பை நக்கியபடியே பாதிக் கண்களை மூடிப் பார்த்துக் கொண்டிருந்தது. அந்தக் கம்பின் ருசி எப்படி இருந்திருக்கும் என்று சரியாகச் சொல்வது கடினம். ஆனால் அந்தக் கதம்ப நிறக் குதிரை அந்தக் கம்பை நக்கிக் கொண்டிருந்த பொழுது ஆழ்ந்த யோசனையில் இருப்பதைப் போலவும் சோகமாக இருப்பதைப் போலவும் தோன்றியது.

''குறும்பு செய்வதற்குத் திட்டமா?'' என்று

மேய்ச்சல்காரன் அந்தக் குதிரைக்குப் பக்கத்தில் வந்து அதே தொனியில் கேட்டுவிட்டு சேணத்தையும் பளபளப்பான சேணத்துணியையும் பக்கத்தில் காய்ந்து போயிருந்த லத்திக் குவியலின் மீது வைத்தான்.

அந்தக் கதம்ப நிறக் குதிரை நாக்கால் மரத்தைத் தடவிக் கொண்டிருந்ததை நிறுத்தியது. உடம்பில் ஒரு தசை கூடத் துடிக்காதபடி நேஸ்தெரையே உற்றுப்பார்த்துக் கொண்டு நின்றது. அந்தக் குதிரை சிரிக்கவில்லை, முகத்தைச் சுளிக்கவில்லை, கோபமடையவில்லை; ஆனால் சில விநாடிகளிலேயே அதன் அடிவயிற்றில் ஒரு நடுக்கம் பரவியது, அது ஆழமாகப் பெருமூச்சு விட்ட பிறகு முகத்தைத் திருப்பிக் கொண்டது. மேய்ச்சல்காரன் தன் கைகளினால் அதன் கழுத்தை வளைத்துக் கொண்டு கடிவாளத்தை வாயில் மாட்டினான்.

''ஏன் பெருமூச்சு விடுகிறாய்?'' என்று நேஸ்தெர் கேட்டான்.

''ஓ! நேஸ்தெர்! ஒன்றுமில்லை'' என்று பதிலளிப்பதைப் போல அந்தக் குதிரை தன் வாலை ஒங்கியடித்தது. மேய்ச்சல்காரன் சேணத்தையும் சேணத்துணியையும் முதுகின் மேல் மாட்டினான். அந்தக் குதிரை தன்னுடைய அதிருப்தியைக் காட்டுவதற்காகக் காதுகளைப் பின்னால் வளைத்துக் கொண்டது. ஆனால் அதற்குக் கிடைத்ததென்னவோ முட்டாள் பட்டம்தான். அடிவயிற்றை இறுக்கிக் கட்டிய பொழுது அதைத் தடுப்பதற்காக அந்தக் குதிரை வயிற்றை உப்பிக் கொண்டது. ஆனால் வாய்க்

குள் செலுத்தப்பட்ட முஷ்டியும் அடிவயிற்றில் கொடுக்கப்பட்ட முழங்கால் உதையும் அதற்கு உயிர்போகிற மாதிரி வலித்தது. ஆனால் நேஸ்தெர் பற்களால் கடிவாளத்தைக் கடித்து இழுத்த பொழுது அந்தக் குதிரை துணிச்சலோடு மறுபடியும் காதுகளை மடித்துக் கொண்டது, அவனைக் கூட ஒரு மாதிரியாகச் சுற்றிப் பார்த்தது. அதனால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை என்பது அதற்குத் தெரியும். ஆனால் தன்னுடைய அதிருப்தியை நேஸ்தெர் அறிந்து கொள்ள வேண்டுமென்று அது விரும்பியது, தன் அதிருப்தியை மறைத்துக் கொள்கின்ற உத்தேசம் அதற்குக் கிடையாது. சேணம் மாட்டப்பட்ட பிறகு அது தன் வீங்கிப் போன வலது காலைத் தளர்த்திக் கொண்டது. இரும்புத் துண்டைக் காட்டிலும் சுவை இல்லாதது வேறு ஒன்றுமே இல்லை என்பது இதற்குள்ளாகவே அதற்குத் தெரிந்திருக்க வேண்டும் என்ற போதிலும் அது வாயிலிருந்த இரும்புத் துண்டைக் கடிக்கத் தொடங்கியது.

நேஸ்தெர் அடிக்கொளுவியில் காலை வைத்துக் குதிரை மீது ஏறி உட்கார்ந்து சாட்டையைப் பிரித்தான். தன்னுடைய முழங்காலுக்குக் கீழேயிருந்து கோட்டை வெளியே எடுத்தான். சேணத்தில் உட்கார்ந்திருக்கும் பொழுது வண்டிக்காரர்கள், நரி வேட்டையாடுபவர்கள் மற்றும் மேய்ச்சல்காரர்களுக்குப் பிரத்யேகமான அந்த தோரணையில் பார்த்தான். கடிவாளத்தை இழுத்தான். உத்தரவுப்படி எங்கே வேண்டுமானாலும் போகத் தயார்

என்று சொல்வதைப் போல குதிரை தலையை மேலே உயர்த்தியது, ஆனால் அசையவில்லை. அவர்கள் புறப்படுவதற்கு முன்பு குதிரை ஓட்டி அடுத்த மேய்ச்சல்காரனான வாஸ்காவுக்கும் குதிரைகளுக்கும் கூட சரமாரியாக உத்தரவு களை முழங்குவான் என்பது அதற்குத் தெரியும். அதே மாதிரி நேஸ்தெர் கூச்சலிடத் தொடங்கினான்: ''வாஸ்கா! ஹி! வாஸ்கா! பெண் குதிரைகளைத் திறந்துவிட்டாயா? ராஸ்கல் நீ எங்கே இருக்கிறாய்? தூங்கிவிட்டாயா? கதவுகளைத் திற! பெண் குதிரைகளை முதலில் வெளியே விடு!'' மற்றும் இதே மாதிரியான பல உத்தரவுகள்.

கதவுகள் கிறீச்சிட்டுக் கொண்டு திறந்தன. வாஸ்கா எரிச்சலோடும் தூக்கக் கலக்கத்தோடும் ஒரு குதிரையின் கடிவாளத்தைக் கையில் பிடித்துக் கொண்டு மற்ற குதிரைகளை வெளியே விரட்டிக் கொண்டு அந்தக் கதவுக் கம்பத்தின் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். குதிரைகள் வைக்கோலை ஜாக்கிரதையாகத் தாண்டி அதை முகர்ந்து கொண்டே ஒவ்வொன்றாக வெளியே சென்றன. பெண் குதிரைக் குட்டிகள், ஒரு வயதான குதிரைக் குட்டிகள், குதிரைகள் மற்றும் சில சினையாக இருந்ததனால் தங்களுடைய பெரிய வயிறுகளைப் பற்றி அக்கறையோடு ஒவ்வொன்றாகக் கதவுகளின் வழியாக வெளியேறிச் சென்றன. இளம் பெண் குதிரைகள் இரண்டு, மூன்றாக முன்னே முண்டிக் கொண்டும் தங்களுடைய தலைகளை முதுகுகளுக்கு மேல் நீட்டிக் கொண்டும் அவ

சரத்தில் காலிடறி விழுந்து கொண்டும் சென்றன. மேய்ச்சல்காரன் அதற்காக அந்தக் குதிரைகளைத் திட்டினான். பால் குடிக்கும் குதிரைக் குட்டிகள் இன்னும் விசித்திரமாகத் தோற்றமளித்த பெண் குதிரைகளின் கால்களுக்கு நடுவே இங்குமங்கும் ஓடின. முதிய குதிரைகள் கனைக்கும் பொழுது அதற்கு பதிலளிப்பதைப் போல அவையும் கீச்சென்று கனைத்தன.

ஒரு இளம் பெண் குதிரை கதவுகளை விட்டு வெளியே வந்ததும் தலையை மேலும் கீழுமாக ஆட்டிக் கொண்டு துள்ளிக் குதித்தது; பின்னங் கால்களைத் தட்டிக் கொண்டு லேசாகக் கனைத்தது, ஆனால் வயோதிகமான, புள்ளி போட்ட ஷுல்திபாவைத் தாண்டி ஓட அதற்குத் துணிவில்லை. அந்தக் குதிரை வழக்கம் போல மெதுவாக, கனமாக, கம்பீரமான காலடியோடு, தன் பெரிய வயிறு ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கத்துக்குக் குலுங்கிக் கொண்டிருக்க, மற்ற குதிரைகளுக்குத் தலைமை வகித்து நடந்து சென்றது.

சில நிமிடங்களுக்குப் பிறகு அந்தக் குதிரைப்பட்டி முழுவதும் காலியாயிற்று. அது சற்று முன்பு தான் ஜீவனோடும் கூட்டத் தோடுமிருந்தது. கூரையைத் தாங்கிக் கொண்டிருந்த மரக் கம்புகள் வருத்தமடைந்து, தனிமையடைந்து நிற்பது போலத் தோன்றின. குதிரை லத்தியால் மூடப்பட்டுக் கசமுசவென்று கிடந்த வைக்கோற் குப்பையைத் தவிர அங்கே வேறு ஒன்றையுமே பார்க்க இயலவில்லை. அந்தக் காயடிக்கப்பட்ட குதிரைக்கு இந்தக் காட்சி பழக்க

மானதாக இருந்தாலும் அது அதற்கு மனச் சோர்வை உண்டாக்குவது போலத் தோன்றியது. யாருக்கோ முகமன் கூறுவதைப் போல அது தன்னுடைய தலையை மெதுவாக மேலும் கீழும் ஆட்டியது, தன்னுடைய வயிறு அனுமதிக்கக் கூடிய அளவுக்குப் பெருமூச்சு விட்டது. எலும்பு துருத்திக் கொண்டிருந்த தன் முதுகில் வயோதிக நேஸ்தெரைச் சுமந்து கொண்டு தன்னுடைய விறைப்பான, வளைந்த கால்களை இழுத்துக் கொண்டு அந்தக் கூட்டத்தைப் பின் தொடர்ந்தது.

''நாம் சாலைக்குப் போனவுடன் அவன் நிச்சயமாகத் தீக்குச்சியைப் பொறுத்துவான்; பித்தளைப் பூணும் சங்கிலியும் கொண்ட அந்தப் பழைய புகைக் குழாயை எடுத்துப் புகை பிடிப்பான்'' என்று அந்தக் குதிரை நினைத்துக் கொண்டது. ''எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. ஏனென்றால் அதிகாலையில் பசும் புல்லில் பனித்துளி இன்னும் இருக்கும் பொழுது அந்தப் புகைக் குழாயின் நறு மணத்தை முகர்வது இனிமையானதே; அந்த வாசனை இன்னும் பல இனிமையான விஷயங்களை எனக்கு நினைவுபடுத்துகிறது. ஒரே ஒரு ஆட்சேபணை மட்டுமே எனக்கு உண்டு. அந்தக் கிழவன் வாயில் புகைக் குழாயைச் சொருகியவுடன் தன்னை ஒரு பெரிய மனிதனாக நினைத்துக் கொண்டு பகட்டாக நடந்து கொள்கிறான். இரண்டு காலையும் ஒரே பக்கத்தில் போட்டு உட்காருகிறான், எப்பொழுதுமே எனக்கு வலிக்கின்ற ஒரே பக்கமாக அப்படி உட்காருகிறான்.

தொலையட்டும்! அடுத்தவர்களுடைய ஆனந்தத்துக்காக என்னை தியாகம் செய்ய வேண்டியிருப்பது இது ஒன்றும் முதல் தடவை அல்லவே. நான் குதிரையாக இருந்தாலும் இந்த வாசனையில் எனக்கும் ஒரு வகையான திருப்தி ஏற்படுகிறது. பாவம்! அவன் பகட்டாக நடந்து கொள்ளட்டும். தனியாக இருக்கும் பொழுது யாரும் தன்னைப் பார்க்காத பொழுதுதானே அப்படி நடந்து கொள்கிருன். பக்கவாட்டில் உட்காருவதால் அவனுக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறதென்ருல் அப்படியே உட்கார்ந்துவிட்டுப் போகட்டும்'' என்று நினைத்தபடியே அந்த காயடிக்கப்பட்ட குதிரை பலவீனமான கால்களால் கவனமாக நடந்து சாலையின் நடுப்பகுதிக்குச் சென்றது.

## அத்தியாயம் 2

குதிரைக் கூட்டத்தை மேய்ச்சலுக்காக ஆற்றங்கரையின் ஓரமாக விரட்டிய பிறகு நேஸ்தெர் கீழே இறங்கி அந்தக் குதிரை மேலிருந்த சேணத்தைக் கழட்டினுன். பனித்துளிகளில் நனைந்து, பூமியிலிருந்து மேலே எழும்பிய மூடுபனியாலும் ஆற்றின் அணைப்பான கரத்தாலும் திரை போடப்பட்டது போல மறைந்திருந்த புதிய பசும் புல்வெளிகளை நோக்கிக் குதிரைகள் மெதுவாக நடந்து சென்றன.

கடிவாளத்தை நீக்கியதும் நேஸ்தெர் அந்தக் குதிரையின் மோவாயின் கீழ் சொரிந்தான். உடனே அந்தக் குதிரை தன்னுடைய கண்களை

மூடிக் கொண்டு இன்பத்தையும் நன்றியையும் வெளிக் காட்டியது. ''கிழட்டுக் குதிரையே! உனக்கு ரொம்ப சுகமாக இருக்கிறதோ'' என்று நேஸ்தெர் முணுமுணுத்தான். அந்தக் குதிரை அதைச் சிறிதும் விரும்பவில்லை. ஏதோ ஒரு மரியாதை உணர்ச்சி காரணமாக அது தனக்கு மிகவும் பிடித்திருப்பது போலப் பாசாங்கு செய்தது, தலையை ஆட்டியது. ஆனால் திடீரென்று எவ்விதமான எச்சரிக்கையோ, காரணமோ இல்லாமல் (அல்லது அந்தக் குதிரையோடு அதிகமாகப் பழகிவிட்டால் தன்னுடைய மரியாதை குறைந்துவிடும் என்று நேஸ்தெர் நினைத்தது ஒருவேளை காரணமாக இருக்கலாம்) அந்தக் கிழவன் குதிரையின் தலையைப் பிடித்துத் தள்ளினான்; அவன் கடிவாளத்தை வீசியெறிந்த பொழுது அதன் இரும்பு முனை எலும்பு துருத்திக் கொண்டிருந்த அதன் காலின் மீது பட்டு அந்தக் குதிரைக்கு அதிகமான வேதனையைக் கொடுத்தது. அதன் பிறகு அவன் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் வழக்கமாகத் தான் உட்காருகின்ற மணல் மேட்டுப் புதரை நோக்கி நடந்தான்.

இப்படி நடந்து கொண்டால் அந்தக் குதிரைக்கு ஆத்திரம் வராமல் என்ன செய்யும்? ஆனால் அது ஆத்திரத்தைக் காட்டிக் கொள்ளாமல் திரும்பி ஆற்றை நோக்கி நடந்தது. தன்னுடைய கம்பி போன்ற வாலை மெதுவாக ஆட்டிக் கொண்டு காற்றை முகர்ந்து கொண்டு வெளித் தோற்றத்துக்காக நுனிப்புல் மேய்ந்து கொண்டு சென்றது. இளம் குதிரைகளும்

பிறந்து ஒரு வருடமான குதிரைகளும் பால் குடிக்கும் குதிரைகளும் அந்த அருமையான காலைப்பொழுதில் உற்சாகமடைந்து துள்ளிக் குதித்து விளையாடிக் கொண்டிருந்தன. ஆனால் அந்தக் குதிரை அதையெல்லாம் கவனிக்கவே யில்லை. காலி வயிற்றில் நிறையத் தண்ணீர் குடித்து விட்டு அதற்குப் பிறகு காலைச் சிற் றுண்டி அருந்துவதே ஆரோக்கியமான பழக் கம்—அதிலும் தன்னைப் போன்ற கிழட்டுக் குதி ரைகளுக்கு அதுவே மிகச் சிறப்பானது என் பது அதற்குத் தெரியும். எனவே அந்த ஆற் றங்கரையிலேயே மிகவும் சரிவான, விஸ்தார மான இடத்தை அது தேர்ந்தெடுத்துத் தன்னு டைய குளம்புகளையும் காலடிகளையும் நனைத்துக் கொண்டது. மூக்கைத் தண்ணீருக்குள் சொருகி தன்னுடைய பிளந்த உதடுகளால் நீரை உறிஞ்சத் தொடங்கியது. அதன் விலாப் புறங்கள் விரிவடைந்தன. அதன் வால் கத்த ரித்துவிடப்பட்டு முதுகு எலும்போடு சேரும் இடத்தில் மொட்டையாக இருந்தது. அந்தக் குறைவான முடியைக் கொண்ட வாலைச் சுழற்றி யது.

ஒரு குறும்புத்தனமான பெண் குதிரை அந்தக் கிழட்டுக் குதிரையை எப்பொழுதும் சீண்டி விளையாடித் தொல்லை கொடுத்துக் கொண்டிருக்கும். ஏதோ வேலையாக வரு வதைப் போல அந்தக் கிழட்டுக் குதிரையை நோக்கி அது தண்ணீரில் நடந்து வந்தது. ஆனால் அது குடித்துக் கொண்டிருந்த தண் ணீரைக் கலக்குவதுதான் அதன் உண்மையான

நோக்கம். ஆனால் அதற்குள் அந்தக் கிழட்டுக் குதிரை வயிறு முட்டத் தண்ணீரைக் குடித்து விட்டது. அந்தப் பெண் குதிரையின் தீய நோக்கங்கள் தனக்குத் தெரியாததைப் போல அமைதியாகச் சேற்றிலிருந்து தன் கால்களை ஒவ்வொன்றாக வெளியே எடுத்தது, தலையை அசைத்துக் கொண்டு அந்த இளம் குதிரைகளிடமிருந்து பாதுகாப்பான தூரத்துக்குப் பின்வாங்கிச் சென்று காலையுணவைச் சாப்பிடத் தொடங்கியது. அது அநேகமாகத் தலையைக் கூட உயர்த்தவில்லை, புல்லை அதிகமாக மிதித்து நசுக்கிவிடாதிருப்பதற்காகத் தன் கால்களை மிகவும் விசித்திரமான வடிவங்களில் அகட்டி வைத்துக் கொண்டது. இப்படியே மூன்று மணி நேரம் நிறுத்தாமல் மேய்ந்தது. அதிகமான புல்லைச் சாப்பிட்டதனால் அதன் வயிறு, கூர்மையான, துருத்திக் கொண்டிருந்த எலும்புகளிலிருந்து ஏதோ பொருளைக் கொண்டு அடைக்கப்பட்ட சாக்கு மூட்டையைப் போலத் தொங்கியது. அதன் நான்கு கால்களுமே வலியெடுத்த போதிலும் இயன்ற அளவுக்கு வலியைக் குறைக்கக் கூடிய, குறிப்பாக, எல்லாவற்றிலும் பலவீனமான வலது முன்னங்காலில் பாரத்தைக் குறைத்து அந்தக் கால்களின் மீது தன்னுடைய சுமையைச் சமமாக்கிக் கொண்டு தூங்கியது.

சில சமயங்களில் வயோதிகம் கம்பீரமானது, சில சமயங்களில் அருவருப்பானது, சில சமயங்களில் பரிதாபகரமானது, சில சமயங்களில் கம்பீரம், அருவருப்பு இரண்டும்

கலந்தது. அந்தக் காயடிக்கப்பட்ட குதிரையின் வயோதிகம் கடைசி ரகத்தைச் சேர்ந்தது.

அந்தப் பெரிய, காயடிக்கப்பட்ட குதிரை—குறைந்த பட்சம் ஐந்தரை அடி உயரமிருக்கும். பழுப்புப் புள்ளிகள். அநேகமாகக் கறுப்பு நிறம். அதாவது ஒரு காலத்தில் அந்த நிறத்தைக் கொண்டிருந்தது. இப்பொழுது புள்ளிகள் அழுக்கு நிறத்துக்கு மாறிவிட்டன. அதன் உடலில் மொத்தம் மூன்று புள்ளிகள் இருந்தன. ஒன்று மூக்கின் ஒரு பக்கத்தில் சாய்வாக மேலே சென்று தலையின் உச்சியிலும் கழுத்தின் பாதியிலும் படர்ந்திருந்தது. இடையிடையே முடிச்சுக்களோடிருந்த அதன் நீண்ட பிடரி சில இடங்களில் வெண்மையாகவும் சில இடங்களில் பழுப்பு நிறத்திலும் இருந்தது. இரண்டாவது புள்ளி வலது பக்கத்தில் வயிற்றில் பாதி முழுவதிலும் இருந்தது. மூன்றுவது புள்ளி அதன் பின் புறத்தில் இருந்தது, வாலின் மேற்பகுதியிலும் விலாவுக்கும் இடுப்புக்கும் இடையில் பாதிவரையிலும் இருந்தது. வாலின் எஞ்சிய பகுதி கத்தரித்து விடப்பட்டு வெண்மையாக இருந்தது. அதன் தலை பெரிதாக, எலும்பு துருத்திக் கொண்டிருந்தது. கண்களைச் சுற்றி ஆழமான குழிகள் இருந்தன. மரத்திஞல் செதுக்கப்பட்டதைப் போன்ற எலும்புக் கழுத்தின் முடிவில் கறுப்பு நிறப் பதக்கத்தைப் போன்ற கீழுதடு—ஏதோ ஒரு சண்டையில் அது பிளந்து போயிருக்க வேண்டும்—தணிவாக, கனமாகத் தொங்கிக் கொண்டிருந்தது. பதக்கத்தைப் போன்ற கீழுதடு வழியாக

வாயின் ஒரு பக்கத்தில் புரண்டு கொண்டிருந்த கறுப்பு நாக்கையும் உடைந்து போன மஞ்சள் நிறப் பற்களையும் பார்க்க முடியும். அதன் காதுகள்—ஒரு காதில் வெட்டுப்பட்டிருந்தது—பெரும்பாலான நேரம் ஆடிக் கொண்டிருக்கும். மிகவும் பிடிவாதமான ஈயை விரட்டுவதற்காக எப்பொழுதாவது காதைச் சுழற்றியடிக்கும். முன் முடியில் மிச்சமிருந்தது ஒரு காதுக்குப் பின்னால் தொங்கிக் கொண்டிருந்தது. மொட்டையான நெற்றி குழிவாக, பிளவாக இருந்தது. அதன் அலைதாடிகள் காலிப் பைகளைப் போலத் தொங்கின. ஒவ்வொரு தடவை ஈ அதன் மீது உட்காரும்பொழுதும் அதன் தலையிலிருந்த முடிச்சான நரம்புகளும் கழுத்தும் ஆடிக் கொண்டு நடுங்கின. அதன் முகத்தில் கண்டிப்பான பொறுமையும் ஆழமான, நெடுங்கால துன்பமும் வெளிப்பட்டன. முன்னங்கால்கள் முழங்கால்களுக்குப் பக்கத்தில் வளைந்திருந்தன. இரண்டு குழம்புகளும் வீங்கியிருந்தன. புள்ளி போட்ட வலது முன்னங்காலில் முழங்காலுக்குப் பக்கத்தில் முஷ்டியைப் போன்ற ஒரு கை இருந்தது. அதன் பின்னங்கால்கள் இதைக் காட்டிலும் சிறப்பான நிலைமையில் இருந்தன. ஆனால் அதன் பின்புறத்திலிருந்து மென்மையான முடிப்பகுதி தேய்ந்து போன பிறகு மறுபடியும் வளரவில்லை. அதன் எலும்புந்தோலுமான உடலோடு ஒப்பிடும்பொழுது கால்கள் மிகவும் நீளமாகத் தோன்றின. அதன் எலும்புகள் நல்ல வடிவத்தில் வளர்ச்சி அடைந்திருந்தன என்றாலும் அவை

வெளியே துருத்திக் கொண்டிருந்த படியால் அவற்றுக்கு இடையிலுள்ள குழிவுப் பகுதியில் தோல் வேகமாக வளர்ச்சி அடைந்திருப்பதைப் போலத் தோன்றியது. அதன் தோள்பட்டை எலும்புகளுக்கு இடையிலுள்ள முகடும் முதுகும் பல முறை நன்றாக அடிவாங்கிய தழும்புகளைக் கொண்டிருந்தன; பின்புறத்தில் புதிதாக ஏற்பட்டிருந்த புண்ணில் சீழ் வைத்துக் கொண்டு வீங்கிப் போயிருந்தது. அதன் கறுப்பு வாலில் எலும்புகள் ரம்பம் போலத் தெரிந்தன. அது நீளமாகத் தொடங்கினாலும் முடி இல்லாமல் அநேகமாக மொட்டையாகவே இருந்தது. வாலுக்குப் பக்கமுள்ள பின் பகுதியில் கையளவுக்குப் பெரிய புண் இருந்தது (ஒருவேளை குளவி கொட்டியதனால் ஏற்பட்டிருக்கலாம்) அதிலிருந்து வெள்ளை முடி நீட்டிக் கொண்டிருந்தது. தோள்பட்டை எலும்புப் பகுதியில் இன்னொரு புண்ணின் தழும்பு இருந்தது. அதன் குண்டிப் பிளவும் வாலும் ஓயாத வயிற்றுப் போக்கினால் கறைபட்டிருந்தன. அதன் சருமத்திலிருந்த குட்டையான முடி முட்களைப் போலக் குத்திட்டு நின்றன. அந்தக் காயடிக்கப்பட்ட குதிரையின் கிழட்டுத் தோற்றம் எவ்வளவுதான் அருவருப்பாக இருந்தாலும் அது ஒரு காலத்தில் மிகவும் அழகான குதிரையாக இருந்திருக்க வேண்டும் என்று யாரும் நினைக்காதிருக்க முடியாது. ஒரு நிபுணர் நிச்சயமாக அந்த முடிவுக்குத்தான் வருவார்.

அப்படிப்பட்ட அகலமான தோள்கள், பெரிய முழங்கால் சில்லுகள், அவ்வளவு அருமையான குளம்புகள், அவ்வளவு ஒல்லியான கால்கள், அவ்வளவு அழகான கழுத்து, எல்லாவற்றையும் காட்டிலும் முக்கியமாக அவ்வளவு உயர்ந்த நெற்றி. அதில் கறுப்பு நிறத்தில் பெரிய, பிரகாசமான கண்கள், முகத்திலும் கழுத்திலும் ஜாதிக் குதிரைகளுக்கே உரிய முறையில் நரம்புகளின் முடிச்சு, அதன் சருமம் மற்றும் முடியின் மென்மை ஆகியவற்றை ருஷ்யாவில் ஒரே ஒரு இனத்தைச் சேர்ந்த குதிரையிடம் தான் பார்க்க முடியும் என்று அந்த நிபுணர் நிச்சயமாகக் கூறுவார். அந்தக் குதிரையின் அருவருப்பான முதுமை (அதன் கலப்பு நிறம் அதை மிகைப் படுத்திக் காட்டியது) அதன் தோற்றத்திலும் நடத்தையிலுமிருந்த வீறுார்ந்த சுய நம்பிக்கை (தங்களுடைய பலத்தையும் அழகையும் நன்றாக உணர்ந்தவருக்கே அது பிரத்யேகமானது) என்னும் பயங்கரமான இணைப்பிலும் கூட உண்மையிலேயே அந்தக் குதிரையிடம் ஏதோ ஒரு மேன்மையான அம்சம் இருந்தது.

பனியில் குளித்த புல்வெளியில் அந்தக் குதிரை இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கும் சிதிலத்தைப் போலத் தனியாக நின்று கொண்டிருந்தது. சற்று தூரத்தில் வெவ்வேறு இடங்களில் மேய்ந்து கொண்டிருந்த குதிரைகள் காலைப் பிறாண்டுகின்ற, சீறுகின்ற, கனைக்கின்ற, இளமையோடு துள்ளுகின்ற சத்தம் கேட்டது.

## அத்தியாயம் 3

சூரியன் ஏற்கெனவே காட்டுக்கு மேலே உயரமாக ஏறி அந்தப் புல்வெளி மற்றும் ஆற்றின் வளைவின் மீது பிரகாசமாக ஜொலித்துக் கொண்டிருந்தது. பனி துளிகளாகச் சுருங்கி விட்டது. அந்தச் சதுப்பு நிலம் மற்றும் காட்டின் மேலே அங்குமிங்கும் மூடுபனி கரைந்து மெலிதான புகையைப் போல மிதந்து கொண்டிருந்தது. மேகங்கள் பெரிய அலைகளைப் போல வந்தன. ஆனால் இன்னும் காற்று அடிக்கவில்லை. ஆற்றுக்கு அப்பாலிருந்த வயல்களில் பச்சை நிறத்தில் குட்டையான, குழாய் போன்ற தண்டுகளின் மீது ரை முதிர்ந்திருந்தது. அங்கேயிருந்த பசும்பயிர் மற்றும் மலர்களின் நறுமணம் காற்றில் நிறைந்திருந்தது. காட்டுக்குள்ளேயிருந்து ஒரு குயில் கரப்பாகக் கூவியது. மல்லாக்கப் படுத்திருந்த நேஸ்தெர் இன்னும் எத்தனை வருடங்கள் தனக்கு எஞ்சியிருக்கின்றன என்பதைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தான். ரை வயல்கள் மற்றும் தண்ணீர் தேங்கி நின்று கொண்டிருந்த புல்வெளிகள் மீது குருவிகள் பறந்து கொண்டிருந்தன. கால தாமதமாக வந்த முயல்குட்டி அந்தக் குதிரைக் கூட்டத்துக்கு நடுவில் சிக்கிக் கொண்டது. அது பாதுகாப்பான இடத்தை நோக்கி விரைந்தோடி அங்கே ஒரு புதரின் கீழ் ஜாக்கிரதையாக உட்கார்ந்து கொண்டது. வாஸ்கா தலையைப் புல்லின் மீது புதைத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். பெண் குதிரைகள் அவனைச் சுற்றி

பரந்த பகுதியில் மேய்ந்து கொண்டிருந்தன. அந்தச் சரிவின் கீழ்ப் பாதியிலும் சிதறி நின்றன. வயதான குதிரைகள் தங்களை யாரும் தொந்தரவு செய்ய முடியாத மேய்ச்சல் இடங்களைத் தேடிப் பனியில் பிரகாசமான பாதையை ஏற்படுத்திக் கொண்டு சென்றன. அந்த இடங்களுக்குச் சென்றதும் சுவையான புல்லை மென்றன. அந்தக் கூட்டம் முழுவதுமே யாரும் கவனிக்க முடியாத விதத்தில் ஒரே திசையில் நகர்ந்து சென்றது. மறுபடியும் கம்பீரமான கிழட்டுக் குதிரையான ஷுல்திபா முன்னே சென்று மற்ற குதிரைகளுக்கு வழி காட்டியது. முதல் தடவையாகக் குட்டி போட்டிருந்த இளம் மூஷ்கா தன்னுடைய குட்டியைப் பார்த்து வாலைத் தூக்கிக் கொண்டு குதியாட்டம் போட்டது. வெளிர் நீல நிறத்திலிருந்த அந்தக் குட்டி கால்கள் நடுங்கிக் கொண்டே அதற்குப் பக்கமாக வந்து ஒட்டிக் கொண்டது. லாஸ்தச்கா என்ற இந்தக் குதிரையின் பழுப்புத் தோல் பட்டுத்துணியைப் போல வளவளப்பாகவும் பளபளப்பாகவும் இருந்தது. அது இன்னும் தனிக்கட்டைதான். அது தலையைக் குனியும் பொழுது பட்டுப் போன்ற கறுப்பு முன்முடி புருவங்களையும் கண்களையும் மறைத்துக் கொள்ளும். அது புல்லை மேய்ந்து கொண்டிருக்கும் பொழுது புல்லைப் பிடுங்கி ஆகாயத்தில் தூக்கியெறிந்து அது கீழே விழுகின்ற பொழுது பனியில் நனைந்த தன் முன் குதிகால்களினால் அதை மிதித்து விளையாடும். வயதான

ஆண் குதிரைகளில் ஒன்று ஏதோ ஒரு விளையாட்டைப் போலக் கற்பனை செய்து கொண்டு ஏற்கெனவே அதன் தாயாரை இருபத்தாறு தடவைகள் சுற்றிவிட்டது. தன் மகனுடைய விளையாட்டுகள் நன்கு பழக்கமாகியிருந்தபடியால் அது அமைதியாகப் புல்லை மேய்ந்து கொண்டிருந்தது. எப்பொழுதாவது தன்னுடைய பெரிய கறுப்புநிறக் கண்களினால் மகனை ஒரு பார்வை பார்த்துக் கொள்ளும். அங்கேயிருந்த ஆண் குதிரைகளில் மிகவும் சிறிய குதிரை கறுப்பு நிறத்தில் பெரிய தலையோடிருந்தது. அதன் முன்முடி காதுகளுக்கு நடுவில் நெட்டையாக நின்று அது எதையோ பார்த்து ஆச்சரியமடைவதைப் போல ஒரு தோற்றத்தைக் கொடுத்தது. அதன் வால் கருப்பையிலிருந்ததைப் போல இன்னும் ஒரு பக்கமாக வளைந்திருந்தது. அது காதுகளை விறைப்பாக நீட்டிக் கொண்டு விளையாடிக் கொண்டிருக்கும் அந்த ஆண் குதிரையைப் பார்த்தபடியே அசைவில்லாமல் நின்று கொண்டிருந்தது. அந்தப் பார்வைக்குக் காரணம் பொறுமையா அல்லது அதிருப்தியா என்று சொல்வது கடினம். சில இளம் குதிரைகள் தங்களுடைய தாயார்களின் அடிவயிறுகளில் பால்காம்புகளைத் தேடி பொறுமையில்லாமல் தங்களுடைய மூக்குகளால் நிமிண்டிக் கொண்டிருந்தன. மற்ற குதிரைகள் தங்கள் தாயார்களின் வேண்டுகோள்களைச் சட்டை செய்யாமல் எதையோ தேடிப் போவதைப் போல எதிர்த் திசையில் வேகமாக, அவலட்சணமாக நடந்து சென்றன. பிறகு

எந்தக் காரணமும் இல்லாமலே திடீரென்று நின்று கொண்டு இதயத்தை ஊடுருவும் படியாகக் கூக்குரலிட்டன. இன்னும் சில குதிரைகள் தரையில் நன்ருகப் படுத்துக் கிடந்தன அல்லது புல்லே மேய்வதற்குக் கற்றுக் கொண்டிருந்தன அல்லது தங்களுடைய பின்னங்கால்களினுல் காதுகளின் பின் புறத்தைச் சொறிந்து கொண்டிருந்தன. சினேயாக இருந்த இரண்டு பெண் குதிரைகள் மற்ற குதிரைகளிடமிருந்து ஒதுங்கிப் போய் ஒன்ருக மேய்ந்து கொண்டு கஷ்டத்தோடு நடந்து கொண்டிருந்தன. மற்ற குதிரைகள் அவற்றின் நிலைமைக்காக மரியாதை கொடுத்தன என்பது தெளிவு. குதிரைக் குட்டிகள் அவற்றுக்குப் பக்கத்தில் சென்று தொந்தரவு கொடுக்கத் துணியவில்லை. ஏதாவது ஒரு துடிப்பான குதிரைக் குட்டி அவற்றுக்குப் பக்கத்தில் போகத் துணியுமானுல் அதன் நடத்தை சரியல்ல என்று காட்டுவதற்கு அது காது அல்லது வாலை ஆட்டுவதே போதுமானதாக இருந்தது.

ஒரு வயதான குதிரைகள், பெண் குதிரைக் குட்டிகள் பெரிய குதிரைகளின் தோரணேயில் நடந்து கொண்டன. அவை அபூர்வமாகவே ஆகாயத்தில் துள்ளிக் குதிக்கும் அல்லது உற்சாகமான இளம் குதிரைகளோடு சேர்ந்து விளையாடும். அவை நன்கு கத்தரித்துவிடப்பட்டு அன்னப் பறவை போலத் தோன்றிய தங்களுடைய கழுத்துகளை வளைத்துக் கொண்டு மிகவும் கம்பீரமாகப் புல்லை மென்றன; தங்களுக்கும் வால்கள் இருப்பது மாதிரியாகச் சிறு துடைப்பத்தைப் போன்ற தங்களுடைய வால்களை ஆட்

டின. வயதான குதிரைகளைப் போல அவை சில சமயங்களில் தரையில் படுத்துப் புரளும், அல்லது ஒருவருக்கொருவர் முதுகைச் சொரிந்து கொடுக்கும். இரண்டு அல்லது மூன்று வயதான பெண் குதிரைகளும் கன்னிக் குதிரைகளும் தான் மற்ற எல்லாக் குதிரைகளையும் காட்டிலும் உற்சாகமாக நடந்து கொண்டன. அவை எப்பொழுதுமே உணர்ச்சிகரமான பெண்கள் கோஷ்டி ஒன்றைத் தனியாக அமைத்துக் கொண்டன. எல்லா நேரங்களிலும் தங்களுடைய கால்களை உதைத்துக் கொண்டும், சீறிக் கொண்டும் விளையாடிக் கொண்டும் கனைத்துக் கொண்டுமிருந்தன. அவை ஒன்று கூடி தங்கள் தலைகளை அடுத்தவர்களுடைய தோள்கள் மீது வைத்துக் கொண்டு ஒருவரையொருவர் முகர்ந்து பார்த்து ஆகாயத்தை நோக்கித் துள்ளிக் குதிக்கும். சில சமயங்களில் கனைத்துக் கொண்டும் வால்களை ஆட்டிக் கொண்டும் மற்ற குதிரைகளுக்கு முன்பாகப் போலிக் காதல் புரிவதைப் போல பாதி ஓட்டமும் பாதி கெச்சை நடையுமாகக் காட்சி நடத்தும். இந்த உற்சாகமான பெண் குதிரைகளிலேயே மிகவும் அழகாகவும் சுட்டியாகவும் இருந்தது நாம் முன்னர் குறிப்பிட்ட அந்தப் பெண் குதிரைதான். அது என்ன செய்தாலும் மற்ற குதிரைகளும் அதைப் பின்பற்றும். அந்தப் பெண் குதிரை எங்கே போனாலும் அந்த அழகான பெண் குதிரைக் கூட்டம் முழுவதுமே அதைப் பின் தொடர்ந்து செல்லும். அன்று காலையில் அது மிகவும் விசேஷமான உற்சாகத் தோடி

ருந்தது. மனிதர்களுக்குத் திடீரென்று குதூக லம் ஏற்படுவதைப் போல அதற்கும் குதூக லம் ஏற்பட்டிருந்தது. ஆற்றங்கரையில் அந்தக் கிழட்டுக் குதிரையிடம் சேட்டை செய்த பிறகு எதைக் கண்டோ பயந்துவிட்டதைப் போலப் பாசாங்கு செய்து கொண்டு கரையோரமாகவே ஓடியது, பிறகு சீறிக் கொண்டு உச்ச வேகத் தில் புல்வெளியில் ஓடியது. அதையும் அதைப் பின்தொடர்ந்து ஓடிய மற்ற குதிரைகளையும் பிடிப்பதற்காக வாஸ்கா ஓடி வர வேண்டியி ருந்தது. அது சிறிதளவு புல்லைச் சாப்பிட்ட பிறகு தரையில் விழுந்து புரண்டது. கிழட்டுப் பெண் குதிரைகளைச் சீண்டுவதற்காக அவற் றுக்கு மிகவும் பக்கமாக ஓடியது. பிறகு ஒரு குதிரைக் குட்டியை அதன் தாயாரிடமிருந்து பிரித்து அதைக் கடிக்கப் போவதைப் போல விரட்டிக் கொண்டு ஓடியது. தாய்க் குதிரை பயந் துவிட்டது, குதிரைக் குட்டி பரிதாபகரமாக அழு தது, ஆனால் அந்தப் பெண் குதிரை அதைத் தொடக்கூட இல்லை. அது தன்னுடைய பெண் நண்பர்களுக்கு வேடிக்கை காட்டுவதற்காகவே அப்படி பயமுறுத்தியது. அவை அதைப் பேரா னந்தத்தோடு பார்த்துக் கொண்டிருந்தன. ஆற்றின் அக்கரையில் ஒரு விவசாயி பழுப்பு நிறத்தில் ஒரு குதிரையை ஏரில் பூட்டி ரை வயலில் உழுது கொண்டிருந்தான். அந்தக் குதி ரையின் கவனத்தைத் திருப்ப வேண்டும் என்ற எண்ணம் அதற்கு ஏற்பட்டது. அது அங்கே நின்று தலையை கம்பீரமாக நிமிர்த்தியது, உடலைக் குலுக்கியது, இனிமையான, அன்பு

நிறைந்த இழுவையான ஓசையை வெளியிட்டது. அந்த ஓசையில் உணர்ச்சியும் காதலும் ஒரு வகையான துயரமும் கலந்திருந்தது. அதில் வேட்கையும் காதல் வாக்குறுதியும் அதற்கான ஏக்கமும் இருந்தது.

நாணற்புதரின் அடியில் ஒரு பறவை தவ்விக் குதித்துக் கொண்டு மிகவும் உணர்ச்சிகரமாகத் தன்னுடைய துணையைத் தேடிக் கூவியது. ஒரு குயிலும் கவுதாரியும் காதற் பாட்டிசைத்தன. மலர்கள் கூட ஒன்றுக்கொன்று நறுமணமிக்க பூந்தாதுகளைக் காற்று வழியே அனுப்பிக் கொண்டிருந்தன.

''நான் இளமையோடும் அழகோடும் பலத்தோடுமிருக்கிறேன்; ஆனால் காதலின் இனிமையை இன்னும் நான் சுவைக்கவில்லை. அது மட்டுமல்ல. எந்தக் காதலனும்—ஒரு ஆண் கூட—என்னைப் பார்க்கவுமில்லை'' என்று அந்தப் பெண் குதிரை ஓலமிட்டது.

இந்தப் பொருள் பொதிந்த ஓலம் அந்தச் சரிவிலும் வயல்களின் மீதும் துயரத்தோடும் இளமையோடும் பரவியது. வெகு தூரத்துக்கு அப்பாலிருந்த அந்தப் பழுப்பு நிறக் குதிரையின் காதுகளை எட்டியது. அது காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டு அப்படியே நின்று விட்டது. விவசாயி தன் காலில் போட்டிருந்த மரக்கட்டைச் செருப்பினால் அதை மிதித்தான். ஆனால் அந்தப் பழுப்பு நிறக் குதிரை காற்றிலே வந்த கீதத்தைக் கேட்டு மெய்மறந்து விட்டது. அந்த இடத்திலேயே நின்று கொண்டு அதற்குப் பதிலளிப்பதைப் போலக் கனைத்தது. விவசாயி

ஆத்திரமடைந்து கடிவாளத்தை இழுத்தான், மறுபடியும் அந்தக் குதிரையின் வயிற்றில் மிதித்தான். இந்தத் தடவை அவன் மிகவும் பலமாக ஓங்கி மிதித்தபடியால் குதிரை தன்னுடைய கனைப்பை நிறுத்திக் கொண்டு முன்னே நடந்தது. ஆனால் அந்தப் பழுப்பு நிறக் குதிரைக்கு ஒரு இனிமையான சோகம் ஏற்பட்டு விட்டது. அதன் வேட்கை மிகுந்த ஓலமும் விவசாயியின் ஆத்திரம் நிறைந்த வசவுகளும் தொலைவிலிருந்த ரை வயலிலிருந்து எதிர்க் கரையிலிருந்த குதிரைக் கூட்டத்துக்கு மிதந்து வந்தன.

அந்தப் பெண் குதிரையின் குரலே அந்தப் பழுப்புக் குதிரை தன் கடமையை மறந்துவிடுகின்ற அளவுக்கு மயக்கிவிட்டதென்றால் அந்தக் குதிரை காதுகளை விறைப்பாக நீட்டிக் கொண்டு நாசித்துவாரங்கள் விரிந்திருக்க, காற்றை ஆழமாக உள்ளே சுவாசித்துக் கொண்டு உடலை முன்னே நீட்டியபடி, அதன் இளமையான, அழகான உடலில் ஒவ்வொரு உறுப்பும் துடிக்க மோகக் குரல் எழுப்பிய நேரத்தில் அதன் மொத்த அழகையும் அது பார்த்திருந்தால் அது எத்தகைய உணர்ச்சி வெள்ளத்துக்கு ஆளாகியிருக்கும்?

ஆனால் அந்தப் பெண் குதிரை அந்த உணர்ச்சிகளில் நெடுநேரம் மூழ்கிவிடவில்லை. தனக்கு பதிலளித்த குரல் தேய்ந்து ஒடுங்கியதும் அது மறுபடியும் கனைத்தது, பிறகு தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு தரையைப் பிருண்டியது. அந்தக் கிழட்டுக் குதிரையைச் சீண்டித் துன்பு

றுத்துவதற்காக ஓடியது. இளம் குதிரைகளின் வேடிக்கைகளுக்கும் சேட்டைகளுக்கும் அது நிரந்தரமான இலக்காக இருந்தது; மனிதர்களைக் காட்டிலும் அந்த இளம் குதிரைகள் தான் அதை அதிகமாகத் துன்புறுத்தின. ஆனால் அது யாருக்குமே ஒருபோதும் துன்பத்தைக் கொடுத்ததில்லை. மனிதர்களுக்கு அது இன்னும் உபயோகமாக இருந்தது. ஆனால் அந்த இளம் குதிரைகள் அதை ஏன் இப்படித் துன்புறுத்த வேண்டும்?

## அத்தியாயம் 4

அது கிழடு. அவை இளங் குதிரைகள். அது எலும்புந்தோலுமாக இருந்தது. அவை வளவளப்பாக இருந்தன. அது சோகமாக இருந்தது. அவை உற்சாகமாக இருந்தன. சுருக்கமாகச் சொல்வதென்றால் அது ஒரு விசித்திரமான, அந்நியமான, முற்றிலும் வேறான பிறவி. ஆகவே அனுதாபத்துக்கு உரியதல்ல. குதிரைகள் தங்களிடம் மட்டுமே அனுதாபம் காட்டும். சில அபூர்வமான விதிவிலக்குகளில் தங்களைப் போல இருப்பதாக அவை கற்பனை செய்கின்ற தங்கள் ரகத்தினரிடம் அனுதாபம் காட்டுவதுண்டு. ஆனால் அந்தக் காயடிக்கப்பட்ட குதிரை கிழடாகவும் எலும்புந்தோலுமாகவும் அவலட்சணமாகவும் இருப்பதற்காக அதைக் குறை சொல்ல முடியுமா?.. அப்படி யாரும் நினைக்க மாட்டார்கள். ஆனால் மற்ற குதிரைகளைப் பொறுத்தவரை அதற்குப்

பொறுப்பு அந்தக் குதிரைதான். இளமையாக வும் வலிமையாகவும் ஆனந்தமாகவும் இருப் பவை, தமக்கு முன்னுல் எல்லாவற்றையும் கொண்டிருப்பவை, மிகவும் லேசான எச்சரிக் கை கிடைத்தவுடனே எல்லாத் தசைநார்களும் துடிக்க, வால்கள் செங்குத்தாக உயர்ந்து நிற் கின்றவை மட்டுமே குற்றமில்லாதவை. ஒரு வேளை அந்தக் காயடிக்கப்பட்ட குதிரை இதை உணர்ந்திருக்கக் கூடும். அதிகமான அறிவு பூர் வமான தருணங்களில் தன்னுடைய வாழ்க்கை முடிந்துவிட்டதற்குத் தானே பொறுப்பு என்று அது ஒத்துக் கொண்டது. அதற்குரிய தண் டனையை ஏற்றுக் கொள்ளவும் தயாராக இருந் தது. ஆனுல் என்ன இருந்தாலும் அது வெறும் குதிரைதான். ஒரு காரணமும் இல்லாமல் தன்னைத் துன்புறுத்துகின்ற இந்த இளவட்டங் களின் வாழ்க்கை முடிவுக்கு வருகின்ற பொழுது அவை ஒவ்வொன்றுக்கும் என்ன கதி ஏற்படப் போகிறதோ என்பதை நினைத்த பொழுது சோகம், ஆத்திரம், எரிச்சல் ஆகிய உணர்ச்சி கள் ஏற்படுவதை அதனுல் தடுக்க முடியவில்லை. அந்தக் குதிரைகளின் ஈவிரக்கமற்ற மனோபா வத்துக்குப் பின்னுல் ஒரு பிரபுத்துவ உணர்ச்சி இருந்தது. அவை ஒவ்வொன்றின் பரம்பரை யையும் பிரபலமான ஸ்மெதான்கா குதிரை வரை பின்னேக்கிப் பார்க்க முடியும். ஆனுல் இந்தக் கிழட்டுக் குதிரை எந்த இனத்திலிருந்து பிறந்தது என்பது யாருக்குமே தெரியாது. மூன்று வருடங்களுக்கு முன்பு குதிரைச் சந் தையில் எண்பது ரூபிள் விலைக்கு வாங்கப்பட்ட அனுமதேயக் குதிரை அது.

அந்தப் பெண் குதிரை அதை நோக்கி வந்து மிகவும் அலட்சியமான முறையில் அதை உதைத்தது. அந்தக் குதிரை இதைக் காட்டிலும் சிறப்பாக எதையும் எதிர்பார்க்கவில்லை. அது கண்களைக் கூடத் திறக்காமல் காதுகளை வளைத்துக் கொண்டு வாயைத் திறந்து பற்களைக் காட்டியது. அந்தப் பெண் குதிரை முதுகைத் திருப்பிக் கொண்டு அதை உதைக்கப் போவதைப் போல நின்றது. அது கண்களைத் திறந்து கொண்டு அங்கேயிருந்து புறப்பட்டது. அதன் உறக்கம் போய்விட்டது. இப்பொழுது புல்லை மேயத் தொடங்கியது. மறுபடியும் அந்தப் பெண் குதிரையும் அதன் நண்பர்களும் அதை நோக்கி வந்தன. இரண்டு வயதான வழுக்கைத் தலையுள்ள அசட்டுக் குதிரை—அது அந்தப் பெண் குதிரை செய்கின்ற எல்லாக் காரியங்களையும் அப்படியே பின்பற்றும்—அதற்குப் பக்கத்தில் நடந்து வந்தது. அது காப்பியடிப்பவர்கள் எல்லோரையும் போலதான் பின்பற்றுவதை அளவுக்கு மீறிச் செய்யும். வழக்கமாக அந்தப் பெண் குதிரை தன் சொந்தக் காரியங்களை கவனிப்பதைப் போல அதற்கு மிகவும் பக்கத்தில் செல்லும். ஆனல் அதைச் சிறிது கூட ஏறிட்டுப் பார்க்காது. எனவே அந்தக் கிழட்டுக் குதிரை கோபப்படுவதற்கு உரிமையுண்டா இல்லையா என்பதை ஒருபோதும் சொல்ல முடியாது. அந்தக் காட்சி உண்மையில் மிகவும் வேடிக்கையாக இருக்கும். அதே மாதிரி இப்பொழுதும் செய்தது. ஆனல் மிகவும் குறும்பாக இருந்த அந்த வழுக்கைத்

தலை நண்பன் கிழட்டுக் குதிரையைத் தன் மார்பினால் முழு வேகத்தோடு தாக்கியது. கிழட்டுக் குதிரை மறுபடியும் பற்களைத் திறந்து காட்டியது, கனைத்தது, அந்தக் குதிரையிடம் சற்றும் எதிர்பார்க்க முடியாத எரிச்சலோடு அதன் பின்னால் ஓடி அதன் பின்புறத்தில் கடித்தது. வழுக்கைத் தலைக் குதிரைக் குட்டி தன் பின்புறத்தினால் அதை அடித்தது. வெளியே தெரிந்த எலும்புகளின் மீது அந்த அடி பலமாகப் பட்டது. கிழட்டுக் குதிரை சீறிக் கொண்டு மறுபடியும் அதை விரட்டிப் போகத் தயாரானது. ஆனால் பிறகு அது வேண்டாம் என்று முடிவு செய்து ஆழமாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டு அந்த இடத்திலிருந்து போய் விட்டது. அந்தக் கூட்டத்திலிருந்த இளம் குதிரைகள் அனைத்துமே அந்தக் கிழட்டுக் குதிரை திமிராகத் தாக்கியதற்குப் பழிவாங்குவதென்று முடிவு செய்திருக்க வேண்டும். ஏனென்றால் அன்று எஞ்சியிருந்த பொழுது முழுவதும் அந்தக் குதிரை புல்லை மேயக்கூட அவை விடவில்லை. அந்த அளவுக்கு இடைவிடாமல் அதைத் துன்புறுத்தின. மேய்ச்சல்காரன் பல தடவைகள் அந்தக் குதிரையிடமிருந்து அவற்றை விரட்டியடித்தான். அவை ஏன் இப்படி நடந்து கொள்கின்றன என்பது அவனுக்கே புரியவில்லை. கிழட்டுக் குதிரையினால் துன்பத்தைத் தாங்க முடியாததால் குதிரைக் கூட்டம் வீட்டுக்குத் திரும்ப வேண்டிய நேரம் வந்த பொழுது தானாகவே நேஸ்தெரிடம் சென்றது. தன் முதுகில் சேணத்தைப் பூட்டி நேஸ்தெர்

அதன் மீது ஏறி உட்கார்ந்த பொழுதுதான் அது அதிகமான மகிழ்ச்சியையும் பாதுகாப்பையும் உணர்ந்தது.

அந்த வயோதிக மேய்ச்சல்காரனைச் சுமந்து கொண்டு போன பொழுது அதன் மனதில் எத்தகைய எண்ணங்கள் தோன்றின என்று யார் சொல்ல முடியும்? ஒருவேளை இளமையின் இரக்கமற்ற தன்மையைப் பற்றி வருத்தத்தோடு சிந்தனை செய்திருக்கலாம் அல்லது பழங்கால முறைப்படி தன்னைத் துன்புறுத்தியவர்களைப் பற்றி அகம்பாவமான, அமைதியான இகழ்ச்சியுடன் அவர்களை மன்னித்திருக்கலாம். அதன் சிந்தனைகள் எப்படி இருந்த போதிலும் குதிரைப் பட்டிக்குப் போய்ச் சேர்கின்றவரை அது யாருடனும் பேசவில்லை.

அன்று மாலையில் அண்டை வீட்டுக்காரர்கள் சிலர் நேஸ்தெரைப் பார்க்க வந்திருந்தார்கள். பண்ணை வீட்டு வேலைக்காரர்களுக்குச் சொந்தமான குடிசைகளின் வழியாகக் குதிரைகளை ஓட்டிச் சென்ற பொழுது தன்னுடைய குடிசைக் கம்பத்தில் ஒரு குதிரையும் வண்டியும் கட்டப்பட்டிருப்பதை அவன் கவனித்தான். உடனே வீட்டுக்குத் திரும்ப வேண்டும் என்று மிகவும் அவசரப்பட்டான். எனவே அந்த லாயத்துக்குப் போனவுடன் அவன் கிழட்டுக் குதிரையைப் போகவிட்டு, அதன் மீதிருக்கும் சேணத்தைக் கழற்றுமாறு வாஸ்காவுக்கு உத்தரவிட்டான். பிறகு கதவைப் பூட்டிக் கொண்டு தன்னுடைய நண்பர்களைச் சந்திப்பதற்குச் சென்றான். அன்றிரவு அந்த வேலியடைப்புக்

குள் ஒரு அசாதாரணமான சம்பவம் நடை பெற்றது. ஸ்மெதான்காவின் கொள்ளுப் பேத்தியான அந்த வழுக்கைத் தலைக் குதிரைக் குட்டியை (ஆகவே அந்தக் கூட்டம் முழுவதின் பிரபுத்துவ உணர்ச்சிகளை) குதிரைச் சந்தையில் விலைக்கு வாங்கப்பட்ட, அப்பன், ஆத்தாள் யார் என்று தெரியாத ''சொறிக் குதிரை'' அவமானப்படுத்தியதன் விளைவாக ஒருவேளை அது நடைபெற்றிருக்கலாம். அல்லது முதுகில் குதிரையோட்டி இல்லாமல் சேணத்தை மட்டும் சுமந்து கொண்டிருந்த அந்தக் குதிரையின் விசித்திரமான தோற்றம் அதற்குக் காரணமாக இருக்கலாம். குட்டிகள் முதல் கிழடுகள் வரை எல்லாக் குதிரைகளும் பற்களைக் காட்டிக் கொண்டு அந்தக் கிழட்டுக் குதிரையை இங்கு மங்கும் துரத்தின. அவை தம் குளம்புகளால் அதன் ஒட்டிய விலாப்புறங்களை இடித்த பொழுது அது வலி தாங்காமல் பலமாகக் கத்தியது. அந்தக் குதிரையால் அதை இனியும் தாங்க முடியாத பொழுது அந்த வேலியடைப்பின் நடுவே அது நின்று கொண்டது. அதன் முகம் சக்தியற்ற வயோதிகத்தின் பலவீனமான வெறியை, அதனோடு சேர்த்து அனுதரவான நிலையை வெளிப்படுத்தியது. அது தன் காதுகளை மடித்துக் கொண்டது. திடீரென்று அது செய்த காரியம் எல்லாக் குதிரைகளும் தங்கள் பாதைகளில் அப்படியே சிலையாக நிற்குமாறு செய்தது. மூத்த பெண் குதிரையான வியஸபூரிகா அந்தக் கிழட்டுக் குதிரையை முகர்ந்துவிட்டு ஆழமாகப் பெரு

மூச்சுவிட்டது. அந்தக் காயடிக்கப்பட்ட குதிரையும் ஆழமாகப் பெருமூச்சுவிட்டது.

. . . . . . . . . . . .

## அத்தியாயம் 5

நிலவொளியில் பிரகாசமாகத் தெரிந்த அந்த வேலியடைப்பின் நடுவில் அந்தக் கிழட்டுக் குதிரை முதுகில் சேணத்தோடு நின்று கொண்டிருந்தது. அப்பொழுது அந்தக் குதிரை சொன்ன புதிய, எதிர்பாராத செய்திகளைக் கேட்டு மற்ற குதிரைகள் திகைப்படைந்ததைப் போல அமைதியாகவும் அசைவில்லாமலும் அதைச் சுற்றி நின்று கொண்டிருந்தன. ஆம். அந்தக் குதிரையிடமிருந்து அவை புதிய, எதிர்பாராத செய்திகளைத் தெரிந்து கொண்டன.

அவை பின்வரும் செய்திகளைத் தெரிந்து கொண்டன.

. . . . . . . . . . . .

### முதலாவது இரவு

''முதலாம் லியுபேஸ்னிய் மற்றும் பாராவின் மகன் நான். வம்ச பரம்பரைப்படி என்னுடைய பெயர் முதலாம் முழீக்.* என்னுடைய வமிசப் பெயர் முதலாம் முழீக் என்றாலும் என்னை எப்பொழுதுமே கஜக்கோல் என்று தான் கூப்பிட்டு

* விவசாயி.

வந்திருக்கிறார்கள். என்னுடைய நீண்ட காலடி காரணமாக இந்தப் பெயரை அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள். அப்படிப்பட்ட காலடி ருஷ்யாவிலேயே கிடையாது. உலகத்தில் எந்தக் குதிரையின் உடலிலும் என்னைக் காட்டிலும் அதிகமாக ஜாதி ரத்தம் ஓடவில்லை. இதை நான் ஒருக்காலும் உங்களிடம் சொல்லியிருக்க மாட்டேன். நான் எதற்காகச் சொல்ல வேண்டும்? என்னுடைய இளமைக் காலத்தில் ஹிரேனவோவில் என்னோடு வசித்த, இப்பொழுது சற்று முன்னர் என்னை மறுபடியும் அடையாளம் கண்டுள்ள வியஸபூரிகாவைக் காட்டிலும் அதிகமாக நீங்கள் தெரிந்து கொள்ளப் போகிறீர்களா? வியஸபூரிகாவின் சாட்சியமில்லை யென்றால் இப்பொழுது நீங்கள் என்னை நம்பப் போவதில்லை. நானும் உங்களிடம் ஒருபோதும் சொல்லியிருக்க மாட்டேன். ஒரு சில குதிரைகள் என்னைப் பற்றி அனுதாபம் காட்டுவது எனக்கு அவசியமல்ல. ஆனால் நீங்கள் என்னைப் பேசும்படிச் செய்துவிட்டீர்கள். ஆம். குதிரைகளின் நுணுக்கங்களைத் தெரிந்தவர்கள் எல்லா இடங்களிலும் தேடியும் கண்டு பிடிக்க முடியாதிருக்கிறார்களே, அந்த கஜக்கோல் நான்தான். தனக்குப் பிரியமான லேபெதைக் காட்டிலும் நான் வேகமாக ஓடியதனால் தன் குதிரைப் பண்ணையிலிருந்து என்னை அகற்றிய பிரபுவுக்கு அறிமுகமான கஜக்கோல் நான் தான்.''

. . . . . . . . . . . .

''கலப்பு நிறம் என்றால் என்னவென்று தெரியாமலே நான் பிறந்தேன். நான் வெறும் குதிரை என்றுதான் நினைத்தேன். என்னுடைய உடல் நிறத்தைப் பற்றிச் சொல்லப்பட்ட முதல் சொற்கள் எனக்கும் என் தாயாருக்கும் ஆழமான அதிர்ச்சியைக் கொடுத்தது எனக்கு நினைவிருக்கிறது. நான் இரவில் பிறந்திருக்க வேண்டும். மறு நாள் காலையில் என் தாயார் என்னை நக்கிச் சுத்தப்படுத்திய பிறகு என்னால் எழுந்து நிற்க முடிந்தது. எனக்கு ஏதோ வேண்டும் என்று நான் விரும்பியது நினைவிருக்கிறது; எல்லாமே மிகவும் ஆச்சரியகரமாகவும் மிகவும் எளிமையாகவும் தோன்றின. நீண்ட, கதகதப்பான நடைக்கூடத்தில் எங்கள் பட்டிகள் இருந்தன. அந்தக் கதவில் கிராதிகள் இருந்தன. அதன் வழியாக நாங்கள் எல்லாவற்றையும் பார்க்க முடியும். என் தாயார் தன் மடிக்காம்புகளை எனக்குக் கொடுத்த போதிலும் எனக்கு ஒன்றும் தெரியாததால் நான் அவளுடைய முன்னங்காலிலும் அவளுடைய மார்பிலும் என்னுடைய மூக்கை இடித்தேன். என் தாயார் திடீரென்று கிராதி வழியாகப் பார்த்து விட்டு என் மேல் ஒரு காலை எடுத்து வைத்துப் பின்னால் இழுத்துக் கொண்டது. அன்றைய குதிரைக்காரன் கிராதி வழியாக எங்களை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

'''இங்கே பாருங்கள்! பாபா குட்டி போட்டு விட்டது' என்று சொல்லிவிட்டு அவன் கதவுத் தாழ்ப்பாளைப் பின்னால் தள்ளினான். புதிதாகப் போடப்பட்டிருந்த வைக்கோலின் மீது நடந்து

என்னைக் கைகளால் தூக்கினான். 'தராஸ்! இங்கே வந்து பார்! இந்தக் குட்டி புறுவைப் போலக் கலப்பு நிறத்திலிருக்கிறது' என்றான்.

''நான் அவனிடமிருந்து தாவிக் குதித்து முழங்கால்கள் மடங்கிக் கீழே விழுந்தேன்.

'' 'அட! குட்டிப் பிசாசே!' என்றான் அவன்.

''என் தாயார் சங்கடப்பட்டிருக்க வேண்டும். ஆனால் என்னைப் பாதுகாப்பதற்கு ஒரு முயற்சியும் செய்யவில்லை. அது ஆழமாகப் பெருமூச்சு விட்டுவிட்டுத் திரும்பிக் கொண்டது. மற்ற குதிரைக்காரர்கள் உள்ளே வந்து என்னை உற்றுப் பார்த்தார்கள். அவர்களில் ஒருவன் குதிரைப் பண்ணைப் பொறுப்பாளரிடம் தெரிவிப்பதற்காகச் சென்றான். அவர்கள் எல்லோருமே என்னுடைய நிறத்தைப் பற்றிக் கேலியாகச் சிரித்தார்கள், வேடிக்கையான பல பெயர்களையும் எனக்குச் சூட்டினார்கள். அவற்றுக்கு என்ன அர்த்தம் என்பது என் தாயாருக்கோ, எனக்கோ புரியவில்லை. அது வரை எங்கள் குடும்பத்திலோ எங்கள் உறவினர்களிடத்திலோ ஒருபோதும் கலப்பு நிறத்தில் குதிரை பிறந்ததில்லை. ஒரு குதிரையின் நிறத்தில் குறை கூறும் படியாக ஏதேனும் இருக்கக் கூடும் என்பதே எங்களுக்குத் தெரியது. அப்பொழுதுகூட என் பலத்தையும் அழகான தோற்றத்தையும் எல்லோரும் பாராட்டினார்கள்.

'' 'எவ்வளவு சுறுசுறுப்பான குதிரைக் குட்டி, பாருங்கள். யாரும் பிடிக்க முடியாது போலிருக்கிறது' என்றான் குதிரைக்காரன்.

''சிறிது நேரத்தில் குதிரைப் பண்ணைப் பொறுப்பாளர் அங்கே வந்தார். அவருக்கு வியப்பும் ஓரளவுக்கு வருத்தமும் ஏற்பட்டிருப் பது தெரிந்தது.

'' 'இந்த அவலட்சணம் எங்கேயிருந்து வந் தது? தளகர்த்தர் இந்தக் குட்டியைக் குதிரைப் பண்ணையில் வைத்துக் கொள்ள மாட்டார். எல்லாம் கெட்டுப் பேச்சே! பாபா! என்னை ஒழித்துவிட்டாயே' என்று தாயாரைப் பார்த்துக் கூறினர். 'இந்தக் கலப்புநிறக் கோமாளி யைப் பெற்றதைக் காட்டிலும் எங்களுக்கு ஒரு வழுக்கைக் குதிரையையாவது கொடுத்திருந் தால் நன்ருயிருக்குமே!'

''என் தாயார் ஒன்றுமே பேசவில்லை. இம் மாதிரியான சந்தர்ப்பங்களில் அவள் வழக்க மாகச் செய்வதைப் போல மறுபடியும் பெரு மூச்சு விட்டாள்.

'' 'சனியன்! எதைப் போல இருக்கிறது? முழீக் மாதிரிதான்' என்ருர். 'இதைப் பண்ணை யில் வைத்திருக்க முடியாது. இதனுல் அவ மானம் தான் ஏற்படும்—ஆனல் அழகான குதிரை—மிகவும் அழகான குதிரை' என்ருர். என்னைப் பார்த்த எல்லோரும் அப்படியே சொன் ஞர்கள். சில நாடங்களுக்குப் பிறகு தளகர்த்தர் என்னைப் பார்க்க வந்தார். அவரும் அருவருப் படைந்தார். என்னுடைய தோலின் நிறத்துக் காக என்னையும் என் தாயாரையும் திட்டி ஞர். 'என்ன இருந்தாலும் அது அழகான குதி ரை—மிகவும் அழகான குதிரை' என்று

என்னைப் பார்த்த எல்லோரும் கூறினார்கள்.

''நாங்கள் அந்தக் குதிரைப் பண்ணையில் பெண் குதிரைகளுக்கு ஒதுக்கப்பட்டிருந்த பகுதியில்—குட்டிகள் தாயார்களோடு தனித் தனியாக—வசந்தகாலம் வருகின்றவரை வசித்தோம். ஆனால் அந்தக் கொட்டகையின் கூரைகளிலிருந்த பனி உருகத் தொடங்கிய பொழுது புதிய வைக்கோல் போடப்பட்டிருக்கும் அந்தப் பெரிய வேலியடைப்புக்குள் தாயார்களோடு போவதற்கு எப்பொழுதாவது அனுமதிக்கப் பட்டோம். நான் இங்கே தான் முதல் தடவையாக என்னுடைய நெருக்கமான மற்றும் தூரத்து உறவினர்களைத் தெரிந்து கொண்டேன். அந்தக் காலத்தில் மிகவும் பிரபலமான பெண் குதிரைகள் தனிக் கதவுகளின் வழியாகத் தங்களுடைய குட்டிகளோடு வருவதைப் பார்த்தேன். வயதான கொலான்கா, ஸ்மெதான்காவின் மகளான மூஷ்கா, மற்றும் கிரஸ்னூஹா சேணக் குதிரையான தொப்ரஹோதிஹா—அன்று பிரபலமடைந்திருந்த எல்லாக் குதிரைகளும் அவற்றில் இருந்தன. அவை தங்கள் குட்டிகளோடு அங்கே சூரிய ஒளியில் நடந்தன, வைக்கோலில் படுத்துப் புரண்டன, ஒன்றையொன்று முகர்ந்து கொண்டன—எல்லாம் சாதாரணமான குதிரைகளைப் போலவே. அந்த வேலியடைப்பு முழுவதும் அழகான குதிரைகள் நின்று கொண்டிருக்கும் காட்சி இன்று கூட எனக்கு நினைவிருக்கிறது. நானும் ஒரு காலத்தில் இளமையாகவும் குதியாட்டத்

தோடுமிருந்தேன் என்றால் உங்களுக்கு அது விசித்திரமாகவும் நம்ப முடியாததாகவும் இருக்கும்—ஆனால் அது உண்மை. அங்குதான் நான் வியஸபூரிகாவை சந்தித்தேன். அப்பொழுது அது ஒரு வயதுக் குட்டி. அன்பும், குதூகல உணர்ச்சியும் துடிப்பும் நிறைந்த குதிரை. இன்று நீங்கள் அதை அபூர்வமான ஜாதிக் குதிரையாகக் கருதினாலும் அந்தக் காலத்தில் அந்தப் பண்ணையிலே மிகக் கீழ்த்தரமான குதிரைகளில் ஒன்றாகவே கருதப்பட்டது. யாரையும் அவமதிப்பது என்னுடைய நோக்கமல்ல. எனினும் நான் இதைக் கூறுவது அவசியம். அந்தக் குதிரையே இதை ஒத்துக் கொள்ளும்.

''என்னுடைய கலப்பு நிறத்தை மனிதர்கள் வெறுத்தார்களே தவிர குதிரைகளுக்கு அது இனிமையாக இருந்தது. அவை அனைத்தும் என்னைச் சூழ்ந்து கொண்டு என்னைப் பாராட்டும், என்னோடு விளையாடும். மனிதர்கள் என்னுடைய நிறத்தைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்பதை நான் மறக்கத் தொடங்கினேன்; ஆனந்தமாக இருந்தேன். ஆனால் வெகு சீக்கிரத்திலேயே எனக்கு முதல் துயரம் ஏற்பட்டது. என் தாயாராலேயே அது ஏற்பட்டது. பனி உருகத் தொடங்கி, கூரைகளின் கீழ் சிட்டுக் குருவிகள் கீச்சிட்ட பொழுது, வசந்த காலத்தின் நறுமணங்கள் காற்றிலே நிறைந்திருந்த பொழுது என்னைப் பற்றி என் தாயாருடைய அணுகுமுறை மாறியது. அவள் மாறி விட்டாள் என்பது உண்மை. அவள் தன் வய

துக்குப் பொருத்தமில்லாத முறையில் அந்த வேலியடைப்புக்குள் துள்ளிக் குதித்து விளை யாடினுள் அல்லது ஒரு மாதிரியாகச் சிணுங்கத் தொடங்கினுள். அல்லது மற்ற பெண் குதிரை களைக் கடித்தாள், காலால் உதைத்தாள். அல் லது என்னை முகர்ந்துவிட்டு இகழ்ச்சியோடு உறுமினுள். அல்லது தன்னுடைய அத்தை மகள் குப்சீஹாவின் தோளின் மீது தலையை வைத்துக் கொண்டு சூரிய வெளிச்சத்தில் நின்று கொண்டு தன் முதுகை நெடு நேரத்துக்குச் சோகமாகச் சொரிந்து கொண்டிருப்பாள். என்னைத் தன் மடுக்காம்புகளிலிருந்து தள்ளி விட்டு விடுவாள். ஒரு நாள் பொறுப்பாளர் வந்தார். அவர்கள் கடிவாளத்தை மாட்டி அவளைக் கூட்டிக் கொண்டு போனுர்கள். அவள் கனைத்தாள். நான் அதற்குப் பதிலளிக்கும் முறையில் குரலெழுப்பி விட்டு அவள் பின்னுல் ஓடினேன். ஆனுல் அவள் என்னை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை. குதிரைக்காரன் தராஸ் என்னைத் தன் கைகளில் பிடித்துக் கொண் டான். அவள் உள்ளே போனதும் கதவு பூட் டப்பட்டது. நான் போராடினேன். குதிரைக் காரனை வைக்கோற் குவியலின் மீது கீழே தள்ளி னேன்; ஆனுல் கதவு பூட்டப்பட்டிருந்தது; என் தாயாரின் சிணுங்கல் ஒலி படிப்படியாகத் தேய்ந்து குறைவதைக் கேட்டேன். அவளுடைய சிணுங்கல் என்னைக் கூப்பிடுவதைப் போல ஒலிக்கவில்லை; அது முற்றிலும் வேறு விதமாக இருந்தது. இன்னெரு குரல், ஆழமான, வன் மையான குரல் அவளுடைய சிணுங்கலுக்குப்

பதிலளித்தது. அது தோப்ரியின் குரல். அந்தக் குதிரையை என் தாயாரோடு சேர்க்க இரண்டு குதிரைக்காரர்கள் எங்கோ ஒரு இடத்துக்கு அதைக் கொண்டு போனார்கள் என்று பின்னால் தான் தெரிந்து கொண்டேன். எனக்கு மிகவும் மனமுடைந்து விட்டபடியால் தராஸ் அந்தக் கொட்டகையை விட்டுப் போனதைக் கூட நான் கவனிக்கவில்லை. என் தாயாரின் அன்பை நான் நிரந்தரமாக இழந்து விட்டதாக உணர்ந் தேன். என்னுடைய நிறத்தைப் பற்றி மற்ற வர்கள் கூறியதை நினைத்துக் கொண்டு 'என் கலப்பு நிறம் தானே இவ்வளவுக்கும் காரணம்' என்று வருந்தினேன். என் மனதில் அதிகமான ஆத்திரம் பெருக்கெடுத்தது. அந்தக் கொட்ட கையின் கதவுகளை என் தலையினாலும் முழங் கால்களினாலும் இடிக்கத் தொடங்கினேன். என் உடலெல்லாம் வியர்வை வழிந்தோடும் வரை இப்படி இடித்தேன். பிறகு களைத்துப்போய் அசையாமல் நின்றேன்.

''சிறிது நேரமான பிறகு என் தாயார் திரும்பி வந்தாள். வழக்கத்துக்கு மாறான முறையில் அவள் நடைக் கூடத்தில் ஓடிவருகின்ற சத்தம் கேட்டது. கதவைத் திறந்து விட்டார்கள். என்னால் அவளை அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவள் மிகவும் இளமையாக, அழகாக மாறியிருந்தாள். அவள் என்னை முகர்ந்தாள், சீறினாள், பிறகு சிரிக்கத் தொடங்கினாள். அவள் இனி என்னிடம் அன் பாக இருக்க மாட்டாள் என்பதை அவளுடைய ஒவ்வொரு அசைவும் சுட்டிக்காட்டியது. தோப்ரி

எவ்வளவு அழகானவர், அவரை எவ்வளவு அதிகமாக விரும்புகிறேன் என்று அவள் என்னிடம் கூறினுள். அவரைச் சந்திப்பதற்காக அவளை அடிக்கடி கூட்டிக் கொண்டு போனுர்கள். அவளுக்கும் எனக்குமிருந்த உறவில் பாச உணர்ச்சி படிப்படியாகக் குறைந்தது.

''சீக்கிரத்தில் எங்களைப் புல் மேய்வதற்காக அனுப்பினுர்கள். இது எனக்குப் புதிய மகிழ்ச்சியைக் கொடுத்து என் தாயாரின் பாசத்தை இழந்ததை ஓரளவுக்கு ஈடு செய்தது. எனக்கு நண்பர்கள், தோழர்கள் கிடைத்தார்கள், நாங்கள் ஒன்று கூடிப் புல் மேய்வதற்கு, வளர்ச்சியடைந்த குதிரைகளைப் போலக் கனைக்க, எங்கள் தாயார்களைச் சுற்றி வட்டமாகத் தவ்வியோடக் கற்றுக் கொண்டோம். அவை ஆனந்தமான நாட்கள். நான் என்ன தவறு செய்தாலும் மன்னிப்பு உண்டு. எல்லோரும் என்னை நேசித்தார்கள், போற்றினுர்கள், எனக்குச் சலுகையளித்தார்கள். ஆனுல் இது நீண்ட காலத்துக்கு நிலைத்திருக்கவில்லை. சீக்கிரத்திலேயே ஒரு பயங்கரமான சம்பவம் நடைபெற்றது.'' அந்தக் காயடிக்கப்பட்ட குதிரை ஆழமாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டு அங்கிருந்து நடந்து சென்றது.

கதிரவன் உதித்துவிட்டது. கதவுகள் கிறீச்சிட்டன. நேஸ்தெர் உள்ளே வந்தான். குதிரைகள் கலைந்து சென்றன. குதிரைக்காரன் அந்தக் காயடிக்கப்பட்ட குதிரை மீது சேணத்தை இறுக்கி மாட்டிவிட்டுக் குதிரைகளை மேய்ச்சலுக்கு விரட்டினுன்.

## அத்தியாயம் 6

## இரண்டாம் இரவு

மாலை நேரத்தில் குதிரைகள் திரும்பியவுடன் அவை மறுபடியும் அந்தக் கலப்புநிறமுள்ள, காயடிக்கப்பட்ட குதிரையைச் சூழ்ந்து கொண்டன.

''ஆகஸ்ட் மாதத்தில் என் தாயாரிடமிருந்து என்னைப் பிரித்து விட்டார்கள். அதற்காக நான் விசேஷமாக வருத்தப்படவில்லை. என் தாயார் என் இளைய சகோதரனைப் (பிரபலமான உஸான்) பிரசவிக்கப் போகிறாள் என்பதைக் கண்டேன். ஒரு காலத்தில் அவள் என்னிடம் காட்டிய பாசம் மறைந்துவிட்டது. நான் பொறுமைப்படவில்லை. அவளிடம் எனக்கிருந்த பாசமும் குறைந்து கொண்டிருந்தது. தாயாரிடமிருந்து பிரித்த பிறகு என்னை ஆண் குதிரைகளுக்கான லாயத்தில் அடைப்பார்கள், அங்கே நாங்கள் இரண்டு, மூன்று குதிரைகளாக ஒன்றாக வசிக்கலாம், ஒவ்வொரு நாளும் எங்கள் எல்லோரையும் காற்று வாங்கக் கூட்டிக் கொண்டு போவார்கள் என்பது எனக்குத் தெரியும். என்னை மீலியோடு ஒரு கொட்டகையில் அடைத்தார்கள். மீலி ஒரு சவாரிக் குதிரை. அது பிற்காலத்தில் சக்கரவர்த்தி சவாரி செய்யும் குதிரையாயிற்று. ஓவியர்கள் அதை ஓவியம் தீட்டினார்கள். சிற்பிகள் தங்கள் சிற்பங்களுக்கு அதை மாதிரியாகக் கொண்டார்கள். அந்த சமயத்தில் அது சாதாரணமான ஆண் குதிரையாகத்தான் இருந்தது.

மென்மையான, பளபளப்பான தோல், அன்னப்பறவை போன்ற கழுத்து, யாழின் கம்பிகளைப் போல மெல்லியான, நேரான கால்கள். அது எப்பொழுதுமே குதூகலத்தோடும் இனிய சுபாவத்தோடும் பண்பமைதியோடும் இருந்தது. துள்ளிக் குதிப்பதிலும் தோழர்களை நக்குவதிலும் குதிரைகள் மற்றும் மனிதர்களிடம் சேட்டை செய்வதிலும் அதற்கு விருப்பம் அதிகம். நானும் அந்தக் குதிரையும் மிகவும் நெருங்கிய நண்பர்களானோம். எங்கள் நட்பு எங்களுடைய இளமைப் பருவம் முழுவதும் நீடித்தது. அப்பொழுது அந்தக் குதிரை குதூகலமாகவும் விளையாட்டில் ஈடுபாடுள்ளதாகவும் இருந்தது. அது ஏற்கெனவே பெண் குதிரைக் குட்டிகளோடு காதல் செய்யவும் சல்லாபிக்கவும் தொடங்கியிருந்தது. என்னுடைய அறியாமையைப் பற்றிக் கேலி செய்து சிரித்தது. என்னுடைய சுயமரியாதை உணர்ச்சி நான் அதன் வழிகளைப் பின்பற்றுமாறு செய்தது. அது எனக்கு வருத்தமே. வெகு சீக்கிரத்தில் நானும் காதல் வயப்பட்டேன். நான் சீக்கிரமாகவே மோகத்தில் விழுந்தது என்னுடைய வாழ்க்கையில் ஒரு மாபெரும் மாற்றத்துக்குக் காரணமாக இருந்தது.

''வியஸபூரிகாவுக்கு என்னைக் காட்டிலும் ஒரு வயது அதிகம். நானும் அவளும் நெருங்கிய நண்பர்களானோம். ஆனால் இலையுதிர்காலத்தின் முடிவில் அவளுக்கு என்னிடம் சலிப்புத் தொடங்கி விட்டது என்பதை நான் கவனித்தேன்.... என்னுடைய முதற் காதலின் துயரம்

நிறைந்த முழுக் கதையையும் நான் எடுத்துக் கூற முயற்சிக்க மாட்டேன். நான் அவளிடம் கொண்டிருந்த மோகவெறியைப் பற்றி அவ ளுக்கே நினைவிருக்கும். அது என்னுடைய வாழ்க் கையில் மிகவும் முக்கியமான மாற்றத்தை ஏற்படுத்தியது. மேய்ச்சல்காரர்கள் அவளை என்னிடமிருந்து துரத்தினார்கள், என்னை இரக்க மில்லாமல் அடித்தார்கள். ஒரு நாள் மாலையில் அவர்கள் என்னை ஒரு விசேஷமான கொட்ட கைக்குக் கொண்டு போனார்கள். மறு நாள் என்ன நடக்கப் போகிறது என்று எனக்குத் தெரிந்திருந்த படியால் நான் இரவு முழுவதும் கதறியழுதேன்.

''மறு நாள் காலையில் தளகர்த்தர், குதிரைப் பண்ணைப் பொறுப்பாளர், குதிரைக்காரர்கள், மேய்ச்சல்காரர்கள் ஆகியோர் நடைக் கூடத் தின் வழியாக என்னுடைய கொட்டகைக்கு வந்தார்கள். ஒரு பயங்கரமான சச்சரவு ஆரம் பமாயிற்று. தளகர்த்தர் பொறுப்பாளரைத் திட்டினார். என்னை வெளியே விடக் கூடாது என்று தான் உத்தரவிட்டிருந்ததாகவும் ஆனால் குதிரைக்காரர்கள் அதன்படி நடந்து கொள்ள வில்லை என்றும் பொறுப்பாளர் சமாதானம் கூறினார். அந்தக் குதிரையைக் காயடித்துவிட வேண்டும், இல்லையென்றால் எல்லோருக்கும் உதை கிடைக்கும் என்று தளகர்த்தர் மிரட்டி னார். உங்கள் உத்தரவுகளை நிறைவேற்று கிறோம் என்று பொறுப்பாளர் கூறினார். அங்கே அமைதி ஏற்பட்டது. அவர்கள் புறப்பட்டார் கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால்

எனக்கு ஏதோ செய்ய உத்தேசிக்கிறார்கள் என்பது புரிந்தது.''

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .

''மறு நாள் என்னுடைய கனைப்பை நான் நிரந்தரமாக நிறுத்திக் கொண்டேன். இப்பொழுதுள்ள நிலைமைக்கு மாறினேன். உலகமே எனக்கு மாறிவிட்டது. அதற்குப் பிறகு நான் எதைப் பற்றியும் மகிழ்ச்சி அடையவில்லை. எனக்குள்ளாகவே சுருங்கிக் கொண்டு சிந்தனையில் மூழ்கினேன். முதலில் எதுவுமே என்னைத் தூண்டவில்லை. நான் உணவருந்துவதற்கும் தண்ணீர் குடிப்பதற்கும் நடப்பதற்கும் கூட மறுத்தேன். தோழர்களோடு சேர்ந்து விளையாடுவதைப் பற்றிப் பேச்சே இல்லை. அதன் பிறகு சில சமயங்களில் துள்ளிக் குதிக்க, ஓடி விளையாட, கனைக்க எனக்கு ஆசை ஏற்படுவதுண்டு. ஆனால் 'ஏன்? எதற்காக?' என்ற பயங்கரமான கேள்வியை நான் என்னிடமே கேட்டுக் கொள்வேன். என் உடலிலிருந்து ஜீவன் மறைந்துவிடும்.

''ஒரு நாள் மாலையில் வயல்களிலிருந்து குதிரைக் கூட்டம் திரும்பிக் கொண்டிருந்த பொழுது என்னை உலாவக் கூட்டிக் கொண்டு போயிருந்தார்கள். தூரத்தில் பெண் குதிரைகளின் தெளிவற்ற உருவங்களைத் தூசிப் படலம் சூழ்ந்திருப்பதைக் கண்டேன். அவை குதூகலமாகச் சிரிக்கும் ஒலியும் கால்களால் தரையை

மிதிக்கும் சத்தமும் எனக்குக் கேட்டது. குதிரைக்காரன் கயிற்றை இழுத்த பொழுது என் கழுத்தை அது காயப்படுத்தினலும் நான் அங்கே நின்று முன்னல் வந்து கொண்டிருந்த குதிரைக் கூட்டத்தை—நிரந்தரமாக இழந்து விட்ட மகிழ்ச்சியைப் பார்ப்பதைப் போல—பார்த்துக் கொண்டிருந்தேன். அவை அருகில் வந்த பொழுது ஒவ்வொரு குதிரையாக அடையாளம் கண்டு கொண்டேன். எல்லோரும் என்னுடைய பழைய நண்பர்கள். எவ்வளவு அழகு, கம்பீரம், வளவளப்பு, ஆரோக்கியம்! அவற்றில் சில நான் நின்று கொண்டிருந்த திசையில் பார்த்தன. குதிரைக்காரன் தொடர்ந்து கயிற்றைச் சுண்டிக் கொண்டிருந்தான். ஆனல் அந்த வலி பெரிதா என்ன? என்னை மறந்தபடியே நான் பழைய முறையில் கனைத்துவிட்டு அந்தக் குதிரைகளை நோக்கி ஓடினேன். ஆனல் என்னுடைய கனைப்பு துயரமாக, கோமாளித்தனமாக, பொருத்தமில்லாததாக ஒலித்தது. என்னுடைய பழைய நண்பர்கள் ஒருவர் கூட சிரிக்கவில்லை. ஆனல் அவர்களில் பலர் ஒழுங்கு முறைமைக்காக முதுகுகளைத் திருப்பிக் கொண்டனர். என்னுடைய தோற்றத்தை அருவருப்பூட்டுவதாக, பரிதாபகரமாக, அவமானமாக—எல்லாவற்றுக்கும் மேலாக—கேலிக் குரியதாக அவர்கள் கருதினர்கள் என்பதில் ஐயமில்லை. என்னுடைய ஒல்லியான, கம்பியைப் போன்ற கழுத்தும் என்னுடைய பெரிய தலையும் (நான் மிகவும் மெலிந்துவிட்டேன்) நீண்ட, பொருத்தமில்லாத கால்களும் பழைய காலத்

தில் நான் செய்வதைப் போல குதிரைக்காரனைச் சுற்றி அசட்டுத்தனமாகத் தவ்வு நடையில் வட்டமிட்டதும் வேடிக்கையாகத்தான் இருந்திருக்கும். என்னுடைய கனைப்புக் குரலுக்கு யாருமே பதிலளிக்கவில்லை. எல்லோருமே என்னிடமிருந்து திரும்பிக் கொண்டார்கள். திடீரென்று எனக்கு எல்லாமே புரிந்தது. நான் நிரந்தரமாக அவர்களுக்கு அந்நியனாகிவிட்டேன் என்பதைக் கண்டேன். எனக்கு அதிகமான துயரம் ஏற்பட்டது. லாயத்துக்கு எப்படித் திரும்பினேன் என்பதே எனக்குத் தெரியாது.

''இதற்கு முன்னால்கூட நான் அழுத்தமான அமைதியோடு சிந்தனையில் ஈடுபடுவதுண்டு. இப்பொழுது நான் முற்றிலும் சிந்தனையில் மூழ்கினேன். என்னைப் பார்ப்பவர்களிடம் — என்னால் புரிந்து கொள்ள முடியாத — இகழ்ச்சியை ஏற்படுத்திய என் கலப்பு நிறம், எனக்கேற்பட்ட விசித்திரமான, எதிர்பாராத துரதிர்ஷ்டம், அந்தக் குதிரைப் பண்ணையில் எனக்கேற்பட்டிருந்த தனியான நிலை—அந்த நிலையை நான் உணர்ந்தேனே தவிர அதன் காரணம் எனக்குப் புரியவில்லை — என்னை எனக்குள்ளாகவே சுருக்கிக் கொள்ளும்படி நிர்ப்பந்தித்தன. நான் கலப்பு நிறத்தோடு பிறந்ததற்காக என்னைக் குறை கூறிய மனிதர்களின் அநீதியைப் பற்றிச் சிந்தித்தேன்; வெறும் உடலியற் கூறுகளையே சார்ந்திருக்கின்ற பெண்களின் அன்பைப் பற்றிப் பொதுவாகவும் தாயின் அன்பின் நிலையில்லாத தன்மையைப் பற்றியும்

சிந்தித்தேன். எல்லாவற்றுக்கும் மேலாக நம்முடைய வாழ்க்கையில் மிக முக்கிய மான பாத்திரத்தை வகிக்கின்ற, மனிதன் என்று சொல்லப்படுகின்ற குறிப்பிட்ட மிருக இனத்தின் திடீர் முடிவுகளைப் பற்றி (அந்தப் பண்ணையில் எனக்கேற்பட்டிருந்த பிரத்யே கமான—என்னால் உணரக் கூடிய ஆனால் விளக்க முடியாத—நிலைமைக்கு அத்தகைய திடீர் முடிவுகள் தானே காரணம்) சிந்தித் தேன். அது எந்த மனித குணும்சத்திலிருந்து தோன்றியதென்பதைப் பின்னால் நடை பெற்ற சம்பவம் எனக்கு முழுமையாக விளக் கியது.

''அந்த சம்பவம் குளிர்கால விடுமுறைக் காலத்தின் போது நடைபெற்றது. அன்று முழு வதும் எனக்கு உணவோ, தண்ணீரோ கொடுக் கவில்லை. குதிரைக்காரன் குடிமயக்கத்திலிருந் ததுதான் இதற்குக் காரணம் என்பதைப் பின் னால் தெரிந்து கொண்டேன். குதிரைப் பண் ணைப் பொறுப்பாளர் அன்றைய தினத்தில் என் கொட்டகைக்குள் வந்து பார்த்தார். எனக்கு உணவு கொடுக்கப்படவில்லை என்பதைக் கண்டதும் அங்கே இல்லாத குதிரைக்காரனை சரமாரியாகத் திட்டிவிட்டுப் போனார். மறு நாள் குதிரைக்காரனும் அவனுடைய நண்பனும் எங்கள் கொட்டகைக்கு வைக் கோல் கொண்டுவந்த பொழுது அவன் மிகவும் வெளுத்துப் போய்ச் சோர்ந்திருப்பதை நான் கவனித்தேன். மேலும் அவனுடைய நீண்ட முதுகில் ஏதோ இருந்தது என் கவனத்தைக்

கவர்ந்து, என் அனுதாபத்தைத் தூண்டியது. அவன் கோபத்துடன் கிராதி வழியாக வைக் கோலைத் தூக்கி வீசினான். நான் தலையை வெளி யே நீட்டினேன். அவன் தோளின் மேல் தலையை வைக்க விரும்பினேன். ஆனால் அவன் என் மூக் கில் ஓங்கிக் குத்திய பொழுது நான் பறந்து போய்ப் பின்னால் விழுந்தேன். அதற்கடுத்த படியாக என் வயிற்றிலும் உதை கிடைத்தது.

'' 'இந்தச் சொரிப் பேய் மட்டும் இல்லை யென்றால் எதுவுமே நடந்திருக்காது' என்றான் அவன்.

'' 'ஏன்?' என்று அடுத்த குதிரைக்காரன் கேட்டான்.

'' 'பிரபுவின் குதிரைகளை அவன் கவனிப்பது கிடையாது. ஆனால் அவனுடைய சொந்தக் குதிரையை ஒரு நாளைக்கு இரண்டு தடவை வந்து பார்க்கிறான்.'

'' 'ஏன்? இந்தக் கலப்பு நிறக் குதிரையை அவனுக்குக் கொடுத்துவிட்டார்களா?' என்று அடுத்தவன் கேட்டான்.

'' 'அவனுக்குக் கொடுத்துவிட்டார்களா அல்லது விற்பனை செய்து விட்டார்களா என் பது யாருக்குத் தெரியும்? பிரபுவின் குதிரை கள் பட்டினியால் செத்தால் கூட அவன் கவ லைப்பட மாட்டான். ஆனால் அவன் சொத்தை நான் பட்டினிகிடக்க விடலாமா? 'குப்புறப் படு' என்றான். சவுக்கால் விளாசிவிட்டான். எவ்வளவு அருமையான கிறிஸ்துவன்! மனி தர்களைக் காட்டிலும் மிருகங்கள் மீதே அதி

கமான அன்பு காட்டுகிறான். அவனுக்குக் கடவுள் பக்தி கிடையாது என்பதை எல்லோரும் பார்க்க முடியும். அவனே சவுக்கடிகளை எண்ணினான், மிருகம்! தளகர்த்தர் யாரையும் ஒருபோதும் சவுக்கால் அடித்ததில்லை. இவன் என் முதுகை இரத்த விளாறுக்கி விட்டான். அவனுக்கு ஆன்மா ஏது?'

''அவன் கிறிஸ்துவ மதத்தையும் சவுக்கடிகளையும் பற்றிச் சொன்னதை நான் நன்றாகவே புரிந்து கொண்டேன். ஆனால் அந்த சமயத்தில் **அவனுக்குச் சொந்தமானது, அவனுடைய சொத்து** என்ற வார்த்தைகளுக்கு என்ன அர்த்தம் என்பது மிகச் சிறிதளவு கூட எனக்குத் தெரியவில்லை. எனக்கும் குதிரைப் பண்ணைப் பொறுப்பாளருக்கும் ஏதோ ஒரு வகையான தொடர்பை அவை குறிக்கின்றன என்பது எனக்குப் புரிந்தது. அது எத்தகைய தொடர்பு என்பது அந்த சமயத்தில் எனக்குப் புரியவில்லை. சிறிது காலத்துக்குப் பிறகு, மற்ற குதிரைகளிடமிருந்து என்னைப் பிரித்து வைத்த பொழுது தான் எனக்கு அது புரிந்தது. என்னை ஒரு மனிதனுடைய சொத்து என்று எப்படிச் சொல்ல முடியும் என்பதை அந்த சமயத்தில் நான் புரிந்து கொள்ள முடியவில்லை. என்னைப் பற்றி, ஒரு உயிருள்ள, குதிரையைப் பற்றி என்னுடைய குதிரை என்று சொல்லப்பட்ட வார்த்தைகள் அவன் என்னுடைய பூமி, என்னுடைய காற்று, என்னுடைய தண்ணீர் என்று கூறியதைப் போல விநோதமாக ஒலித்தன.

''எனினும் இந்த வார்த்தைகள் என்னிடம்

பெரிய தாக்கத்தை ஏற்படுத்தின. நான் எப்பொழுதும் அவற்றைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தேன். மனிதர்களோடு மிக அதிகமான அளவுக்கு வேறுபட்ட பல உறவுகளில் அனுபவமடைந்த பிறகுதான் இந்த விசித்திரமான வார்த்தைகளுக்கு மனிதர்கள் என்ன அர்த்தத்தைக் கொடுக்கிறார்கள் என்பதை நான் கடைசியில் புரிந்து கொண்டேன். அவை பின் வரும் அர்த்தத்தைக் கொண்டவை: மனிதர்களுக்கு வாழ்க்கையில் சொற்களே வழிகாட்டுகின்றன, செயல்கள் அல்ல. எதையாவது செய்வதற்கு அல்லது செய்யாமலிருப்பதற்குக் கிடைக்கும் சந்தர்ப்பம் அவர்களுக்கு மகிழ்ச்சியைத் தருவதில்லை. பொருள்களுக்கு சில சம்பிரதாயமான வார்த்தைகளை உபயோகிக்கக் கிடைக்கும் சந்தர்ப்பமே அவர்களுக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. அவர்கள் மிகவும் அதிகமான முக்கியத்துவம் தருகின்ற வார்த்தைகளில் எனது, என்னுடையது என்பவையும் இருக்கின்றன. இந்த வார்த்தைகளை அவர்கள் எல்லாவிதமான பிராணிகளுக்கும் பொருள்களுக்கும்—நிலம், மக்கள், குதிரைகளுக்கும் கூட—கையாள்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட பொருளுக்கு **என்னுடைய** என்ற வார்த்தையை உபயோகிக்கும் உரிமை ஒரு நபருக்கு மட்டும் தான் உண்டு என்று அவர்கள் தங்களுக்குள்ளாகவே முடிவு செய்திருக்கிறார்கள். அவர்களுடைய இந்த விளையாட்டில் மிகவும் அதிகமான எண்ணிக்கையுள்ள பொருள்களுக்கு **என்னுடைய** என்ற வார்த்தையைக் கையாள்கின்ற

உரிமையைப் பெறுவதில் யார் வெற்றியடை கிருரோ அவர் மனிதர்களிலேயே அதிகமான மகிழ்ச்சி உடையவராகக் கருதப்படுகிருர். அது ஏன் என்பதை என்னுல் புரிந்து கொள்ள முடிய வில்லே. ஆனுல் இதுதான் நிலேமை. இதில் ஏதா வதொரு நேரடியான சாதகத்தைக் கண்டு பிடிப்பதற்கு நான் நெடுங்காலம் முயற்சி செய் தேன்; ஆனுல் என்னுல் முடியவில்லே.

''உதாரணமாக, என்னேத் தங்களுடைய சொத்து என்று கூறிய பலர் என் மீது சவாரி செய்யவில்லே. முற்றிலும் வேறு மனிதர்கள் தான் என் மீது சவாரி செய்தார்கள். எனக்கு உணவளித்ததும் அவர்களல்ல, முற்றிலும் வேறு மனிதர்கள்தான். அன்போடு என்னேப் பராமரித்ததும் அவர்களல்ல—வண்டிக்காரர் கள், குதிரைக்காரர்கள் மற்றும் அவர்களேப் போன்ற அந்நிய மனிதர்களே அதைச் செய் தார்கள். ஆகவே பரந்த காட்சியறிவின் பலனுக நம்மைப் போன்ற குதிரைகளேப் பற்றி மட்டு மல்லாமல் எல்லாப் பொருள்களேயும் பொறுத் தவரை **எனது, என்னுடையது** என்ற கருது கோள் அவர்களே தனிச் சொத்துடைமை உணர்ச்சி (அல்லது உரிமை) என்று கூறுகின்ற மிகக் கீழான மிருகத்தனமான (அநாகரிகமான) மனித உணர்ச்சியைத் தவிர—வேறு எதையுமே அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லே என்ற முடிவுக்கு நான் வந்தேன். ஒரு நபர் 'என் னுடைய வீடு' என்று கூறுகிருர். ஆனுல் அந்த வீட்டில் அவர் ஒருநாளும் குடியிருக்கவில்லே. அவர் அதைக் கட்டினுர், அதை நன்கு வைத்

திருக்கிறார். உதாரணமாக ஒரு வர்த்தகர் 'என்னுடைய துணிக்கடை' என்று கூறுகிறார். ஆனால் அவருடைய சொந்தக் கடையிலுள்ள மிகச் சிறந்த துணியில் தைக்கப்பட்ட உடைகளை அவர் அணிவதில்லை. ஒரு குறிப்பிட்ட நிலத்தைத் தங்களுடையது என்று கூறுகின்றவர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் அந்த நிலத்தைப் பார்த்ததுமில்லை, அதில் கால் வைத்ததுமில்லை. மற்ற நபர்களைத் தங்களுடையவர்கள் என்று கூறுகின்ற மனிதர்கள் கூட இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் அந்த மனிதர்களை ஒருக்காலும் பார்த்தது கூட இல்லை. அவர்களோடு இவர்களுக்குள்ள ஒரே தொடர்பு அவர்களுக்குக் கெடுதல் செய்வதே. சில பெண்களைத் தங்களுடைய பெண்கள், தங்களுடைய மனைவிகள் என்று கூறுகின்ற மனிதர்கள் இருக்கிறார்கள்; அந்தப் பெண்கள் வேறு மனிதர்களோடு வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். வாழ்க்கையில் தங்களாலியன்ற நன்மையைச் செய்வது மக்களுடைய குறிக்கோள் அல்ல — இயன்ற அளவுக்கு ஏராளமான பொருள்களைத் **தங்களுடையது** என்று சொல்ல முடிவது அவர்களுடைய குறிக்கோள். நமக்கும் மனிதர்களுக்குமிடையே உள்ள முக்கியமான வேறுபாடு இங்கே தான் இருக்கிறது என்று நான் உறுதியாக நம்புகிறேன். மனிதர்களுடைய—குறைந்த பட்சம் நான் ஏதாவதொரு விதத்தில் தொடர்பு கொண்ட எல்லா மனிதர்களின்—நடவடிக்கைகளுக்கும் வழிகாட்டி வார்த்தைகளே, ஆனால் செயல்களே

நமது நடவடிக்கைகளுக்கு வழிகாட்டுகின்றன. மனிதர்களோடு ஒப்பிடும் பொழுது நம்மிட முள்ள உயர்வான பல அம்சங்களைப் பற்றிப் பேசாவிட்டாலும் உயிரினங்களின் ஏணியில் நாம் மனிதர்களைக் காட்டிலும் ஒரு படி உயர் வாக இருக்கிறோம் என்று கூறுவதற்கு இது ஒன்றே போதும். போகட்டும். என்னைத் தன் னுடைய குதிரை என்று சொல்லக் கூடிய உரிமை குதிரைப் பண்ணைப் பொறுப்பாளருக்குக் கொடுக்கப்பட்டது. அதனால் அவர் குதிரைக் காரனுக்குச் சவுக்கடி கொடுத்தார். இந்தக் கண்டு பிடிப்பும் என்னுடைய உடல்நிறம் மக்களிடம் ஏற்படுத்திய சிந்தனைகளும் அணுகு முறைகளும் எனக்குத் திகைப்பைக் கொடுத் தன. இவை அனைத்தும் மற்றும் என் தாயார் என்னை மறந்ததும் என்னை இன்றிருப்பதைப் போல ஆழமான அமைதியும் சிந்தனையும் உடைய காயடிக்கப்பட்ட குதிரையாக்கின.

''நான் மூன்று வகையில் துரதிர்ஷ்டசாலி. நான் கலப்பு நிறம் உடையவன், நான் ஒரு காயடிக்கப்பட்ட குதிரை. ஒவ்வொரு ஜீவராசி யும் கடவுளுக்கும் தனக்கும் மட்டுமே சொந்த மாக இருப்பது இயற்கை. ஆனால் அதற்குப் பதிலாக நான் குதிரைப் பண்ணைப் பொறுப் பாளருக்குச் சொந்தமானவன் என்று மக்கள் கருதினார்கள்.

''அவர்கள் என்னைப் பற்றி அப்படிக் கற்பனை செய்தது பல விளைவுகளை ஏற்படுத்தின. மற்ற குதிரைகளிடமிருந்து என்னைப் பிரித்து வைத்த தும் எனக்கு நல்ல உணவு கொடுத்ததும் அடிக்

கடி உடற்பயிற்சி கொடுக்கப்பட்டதும் சீக்கிரத்திலேயே வண்டியில் மாட்டப்பட்டதும் முதல் விளைவாகும். எனக்கு மூன்று வயதான பொழுது முதல் தடவையாக எனக்குக் கடிவாளம் மாட்டப்பட்டது. என்னைத் தன்னுடைய சொத்து என்று கருதிய அந்தப் பொறுப்பாளர் நான் முரண்டு செய்வேன், என்னை அடக்க முடியாமற் போய்விடும் என்று கருதி என்னை வண்டியில் மாட்டுவதற்கு ஏராளமான குதிரைக்காரர்களைக் கூட்டிக் கொண்டு வந்த நாள் எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. அவர்கள் என்னுடைய நாக்கை அறுத்தார்கள். என்னைக் கயிறுகளால் கட்டி வண்டியின் இரு பக்கத் தண்டுகளுக்குமிடையே பலாத்காரமாகத் தள்ளினுர்கள். என் முதுகில் குறுக்கும் நெடுக்குமாகத்தோல் பட்டைகளைப் போட்டு நான் உதைக்காமலிருக்க வேண்டுமென்பதற்காக அவற்றை வண்டித் தண்டுகளோடு சேர்த்துக் கட்டினுர்கள். அவர்கள் இந்தக் காரியங்களில் ஈடுபட்டிருந்த நேரம் முழுவதும் என் மனதில் ஒரே ஒரு ஆசை, நான் உழைப்பை விரும்புகிறேன், உழைக்கத் துடிக்கிறேன் என்ற ஆசைதான் நிறைந்திருந்தது.

''ஒரு வயதான குதிரையைப் போல நான் நடந்ததைப் பார்த்து அவர்கள் அதிசயித்துப் போனுர்கள். அவர்கள் என்னை ஓட்டத் தொடங்கினுர்கள். நான் தவ்வுநடையைப் பழகத் தொடங்கினேன். நான் மிகவும் சிறப்பான முன்னேற்றத்தைக் காட்டியபடியால் மூன்ரும் மாதக் கடைசியில் தளகர்த்தரும் மற்றும் பலரும் என்னுடைய நடையைப் புகழ்ந்

தார்கள். நான் எனக்குச் சொந்தமல்ல, பொறுப்பாளருக்குச் சொந்தமானவன் என்று அவர்கள் கருதிய காரணத்தாலேயே என் நடை அவர்களுக்கு முற்றிலும் வேறுவிதமான அர்த்தத்தைக் கொண்டிருந்தது. இது விசித்திரமாகத் தோன்றலாம்.

''என்னுடைய சகோதரர்களான ஆண் குதிரைகளை ஓட்டப் பந்தயங்களுக்குக் கூட்டிச் சென்றார்கள். அவற்றின் சாதனைகள் பதிவு செய்யப்பட்டன, பொது மக்கள் அவற்றைப் பார்க்க வந்தார்கள், தங்க முலாம் பூசப்பட்ட வண்டிகளில் அவை பூட்டப்பட்டன. விலையுயர்ந்த பட்டுத் துணிகள் அவற்றின் முதுகில் விரிக்கப்பட்டன. பொறுப்பாளருடைய சாதாரணமான வண்டியில் என்னைப் பூட்டினார்கள். செஸ்மேன்காவுக்கும் மற்ற கிராமங்களுக்கும் தங்கள் காரியங்களுக்காக என்னை ஓட்டிச் சென்றார்கள். நான் கலப்பு நிறம் உடையவனாக இருந்ததும் அவர்களுடைய கருத்தின்படி நான் பொறுப்பாளருக்குச் சொந்தமான குதிரையே தவிர, பிரபுவினுடைய குதிரை அல்ல, என்பதும் இதற்குக் காரணம்.

''பொறுப்பாளர் என்னைத் தன்னுடைய உடைமையாகக் கருதியது எனக்கு எத்தகைய ஆபத்தான விளைவுகளைக் கொண்டிருந்தன என்பதை நாளைக்கு—நாம் இன்னும் உயிரோடிருந்தால்—சொல்கிறேன்.''

மறு நாள் முழுவதும் எல்லாக் குதிரைகளும் கஜக்கோலிடம் மிகவும் அதிகமான மரியாதையோடு நடந்து கொண்டன. ஆனால் நேஸ்தெர்

எப்பொழுதும் போல அதனிடம் முரட்டுத் தனமாக நடந்து கொண்டான். விவசாயியின் பழுப்பு நிற, கலப்பைக் குதிரை அந்தக் குதிரைகளின் கூட்டத்துக்குப் பக்கத்தில் வந்து கனேத்தது. அந்தப் பெண் குதிரைக் குட்டி அதஞேடு சல்லாபம் செய்தது.

## அத்தியாயம் 7

### மூன்ருவது இரவு

அந்த வேலியடைப்பின் நடுவில் கஜக்கோல் நின்று கொண்டிருந்த பொழுது புது நிலா தோன்றி அதன் மெல்லிய பிறையொளி அதன் மீது விழுந்தது. அதைச் சுற்றி மற்ற குதிரைகள் நெருக்கியடித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தன.

''நான் பிரபு அல்லது கடவுளின் உடைமையாக இல்லாமல் பொறுப்பாளரின் உடைமையாக இருந்தேன். மிகவும் ஆச்சரியப்படத்தக்க விளைவு என்னவென்ருல் என்னுடைய வேகம்—ஒரு குதிரைக்கு மிக அதிகமான சிறப்பைத் தருவது அதுதானே—என்னை விரட்டி விடக் காரணமாயிற்று'' என்று அந்தக் காயடிக்கப் பட்ட குதிரை தன் கதையைத் தொடர்ந்தது. ''ஒரு நாள் லேபெதுக்கு உடற்பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்த பொழுது, செஸ்மேன்காவிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த பொறுப்பாளர் குதிரைகள் ஓட்டம் பழகுகின்ற பாதையில் என்னை ஓட்டினர். லேபெத் என்னைக்

கடந்து சென்றது. அது நன்ருகவே ஓடியது; ஆனல் ஆர்ப்பாட்டம் ஆதிகம். ஒரு குளம்பு தரையைத் தொடுகின்ற அதே நேரத்தில் மறு குளம்பை மேலே தூக்கி விடுவதன் மூலம் ஒரு சிறு அசைவைக் கூட வீணுக்காமல் உடலே முன்னே தள்ள எல்லா முயற்சிகளேயும் ஈடு படுத்துகின்ற ஒரு நுட்பத்தை நான் வளர்த்துக் கொண்டிருந்தேன். லேபெதிடம் அந்த நுட்பம் இல்லே. நான் முன்னே சொன்னதைப் போல லேபெத் என்னேக் கடந்து சென்றது. நான் ஓட்டப் பாதைக்குள் ஓடினேன். பொறுப் பாளர் என்னேத் தடுக்கவில்லே. 'இந்தக் கலப்பு நிறக் குதிரை முயற்சி செய்துதான் பார்க்கட் டுமே' என்ருர். மறுபடியும் லேபெத் எனக்குப் பக்கத்தில் ஓடி வந்த பொழுது அவர் என்னே ஓட விட்டார். லேபெத் ஏற்கெனவே வேகத் தோடிருந்தது. எனவே முதல் சுற்றில் நான் பின்தங்கிவிட்டேன். ஆனல் இரண்டாவது சுற்றில் எனக்கு வேகமேற்பட்டுவிட்டது. நான் அந்தக் குதிரையை நெருங்கிவிட்டேன், இரு வரும் இணேயாக ஓடிக் கொண்டிருந்தோம், நான் பின்தங்கவில்லே, அதை முந்திவிட்டேன். மறுபடியும் ஓட்டப் பந்தயம் நடைபெற்றது. அதிலும் அதே முடிவுதான். நான் அதைக் காட்டிலும் வேகமாக ஓடினேன். அது எல் லோருக்கும் பயத்தைக் கொடுத்தது. வெகு தூரத்துக்கு அப்பாலுள்ள இடத்தில் என்னே விற்பனே செய்துவிட வேண்டும், என்னேப் பற்றிய தகவலே யாருக்கும் கிடைக்கக் கூடாது என்று முடிவு செய்யப்பட்டது. 'பிரபுவுக்குத்

தெரிந்தால் ஆபத்து' என்று அவர்கள் பேசிக் கொண்டார்கள். எனவே என்னை ஒரு குதிரை வியாபாரியிடம் விற்பனை செய்தார்கள். அந்த வியாபாரி என்னை அதிக காலம் வைத்திருக்க வில்லை. இராணுவத்துக்குக் குதிரைகள் வாங்குவதற்காக அனுப்பப்பட்ட ஹுஸ்ஸார் ஒருவர் என்னை விலைக்கு வாங்கினார். இவை எல்லாமே மிகவும் இரக்கமில்லாமலும் அநீதியாகவும் இருந்த படியால் என்னை ஹிரேனவோவிலிருந்து கொண்டு போன பொழுது, நான் மிகவும் நெருக்கமும் அன்பும் கொண்டிருந்த எல்லாவற்றிடமிருந்தும் என்னை நிரந்தரமாகப் பிரித்த பொழுது நான் மகிழ்ச்சியடைந்தேன். என்னுடைய பழைய தோழர்கள் மத்தியில் இருப்பது எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது. அவர்களுக்கு—அன்பு, கௌரவம், சுதந்திரம்; எனக்கு உழைப்பு, அவமதிப்பு. என் வாழ்க்கையின் இறுதிவரை அவமதிப்பும் உழைப்பும்தான். ஏன்? ஓ! ஏன்? நான் கலப்பு நிறத்தைக் கொண்டிருந்ததுதான் காரணம். அதற்காக என்னை யாரோ ஒருவருடைய உடைமையாக்கி விட்டார்கள்.''

அன்றிரவில் கஜக்கோல் தன்னுடைய கதையைத் தொடர்ந்து சொல்லச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அங்கே நடைபெற்ற ஏதோ ஒரு சம்பவம் குதிரைகள் மத்தியில் அதிகமான பரபரப்பை ஏற்படுத்தியது. இன்னும் குட்டி போடாத பெண் குதிரையான குப்சீஹா கதையை மிகவும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தது. ஆனால் திடீரென்று அது திரும்பி

மெதுவாக நடந்து கொட்டகைக்குள் சென்றது. அங்கே அது பலமாக முனகத் தொடங்கியதும் எல்லாக் குதிரைகளும் அதைத் திரும்பிப் பார்த்தன. அந்தப் பெண் குதிரை தரையில் படுப்பதையும் பிறகு சிரமத்தோடு எழுந்து நிற்பதையும் மறுபடியும் படுத்துக் கொள்வதையும் அவை பார்த்தன. வயதான பெண் குதிரைகளுக்கு அந்த விவகாரம் புரிந்துவிட்டது. ஆனுல் இளம் குதிரைகள் மிகவும் பயமடைந்து, அந்தக் காயடிக்கப்பட்ட குதிரையை விட்டு ஓடி அந்தப் பெண் குதிரையைச் சூழ்ந்து நின்றன. மறுநாள் காலையில் அங்கே இன்ஞெரு ஆண் குதிரைக் குட்டி தன் கால்களில் நடுங்கிய படியே நின்று கொண்டிருந்தது. நேஸ்தெர் குதிரைக்காரனைக் கூப்பிட்டான். அவன் பெண் குதிரையையும் குதிரைக் குட்டியையும் லாயத்துக்குள் கொண்டு போனுன். நேஸ்தெர் அதைத் தவிர மற்ற குதிரைகளை மேய்ச்சலுக்குக் கூட்டிச் சென்ருன்.

## அத்தியாயம் 8

### நான்காவது இரவு

அன்று மாலையில் கதவுகள் பூட்டப்பட்டு எங்கும் அமைதியாக இருந்த பொழுது அந்தக் கலப்பு நிறக், காயடிக்கப்பட்ட குதிரை தன் கதையைத் தொடர்ந்தது.

''இப்படியே ஒருவரிடமிருந்து இன்ஞெருவருக்கு மாறிக் கொண்டிருந்த பொழுது மனிதர்

களையும் குதிரைகளையும் பற்றி மிக அதிகமான வற்றை நான் தெரிந்து கொண்டேன். இரண்டு எசமானர்கள் என்னை அதிகமான காலம் வைத் திருந்தார்கள். ஒருவர் இளவரசர், ஹுஸ்ஸார் படையில் அதிகாரி. இரண்டாவது நபர் ஒரு கிழவி. அவள் அதிசயங்களை ஏற்படுத்தும் புனித நிக்கலாய் மாதாகோவிலுக்குப் பக்கத்தில் வசித்து வந்தாள்.

''அந்த ஹுஸ்ஸாரோடு நான் கழித்த நாட் கள் என்னுடைய வாழ்க்கையிலேயே மிகவும் சிறந்தவை.

''அவர் என்னுடைய வாழ்க்கையைக் கெடுத் துவிட்டாலும் கூட, தன்னுடைய வாழ்க்கை யில் அவர் எந்த நபரையும் எந்தப் பொருளை யும் நேசிக்காவிட்டாலும் கூட, நான் அவரை நேசித்தேன். இதற்காகவே அவரை நேசித் தேன். அவர்அழகானவர், பணக்காரர், மகிழ்ச்சி நிறைந்தவர்; ஆகவே அவர் யார் மீதும் அன்பு காட்டவில்லை என்பதற்காகவே நான் அவரை நேசித்தேன். நீங்கள் இதைப் புரிந்து கொள் வீர்கள். குதிரைகளாகிய நமக்கிருக்கும் மிக மேன்மையான உணர்ச்சி இது. அவருடைய கடுமை, இரக்கமற்ற கொடுமை, அவரை நான் முழுக்க முழுக்கச் சார்ந்திருந்தது அவரிடம் நான் கொண்டிருந்த அன்புக்குக் குறிப்பிடத் தக்க வன்மையைக் கொடுத்தது. 'என்னை அடி யுங்கள். என் உயிர் போகும் வரை என்னை விரட்டுங்கள். அதனால் என் மகிழ்ச்சி அதிகரிக் கும்' என்று அந்த நன்மையான, பழைய நாட் களில் நான் நினைப்பதுண்டு.

''பொறுப்பாளர் என்னை விற்பனை செய்த குதிரை வியாபாரியிடமிருந்து அவர் எண்ணூறு ரூபிளுக்கு என்னை வாங்கியிருந்தார். கலப்பு நிறக் குதிரைகள் யாரிடமும் இல்லை என்பதால் அவர் என்னை வாங்கினுர். என் வாழ்நாளிலேயே மிகவும் சிறந்த நாட்கள் அவை. அவருக்கு ஒரு ஆசைநாயகி இருந்தாள். நாள்தோறும் அவளிடம் அவரைக் கொண்டு சென்றதால், சில சமயங்களில் இருவரையும் சேர்த்துக் கொண்டு போனதால் இது எனக்குத் தெரிந்தது. அவருடைய ஆசைநாயகி அழகானவள், அவரும் அழகானவர், அவருடைய வண்டிக் காரனும் அப்படியே. அதனுல்தான் அவர்கள் எல்லோரையும் நான் நேசித்தேன். நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். என்னுடைய நாட்கள் பின்வரும் விதத்தில் கழிந்தன. காலையில் குதிரைக்காரன் என் உடலைத் தேய்த்துவிட வருவான்—வண்டிக்காரன் அல்ல, குதிரைக் காரன். அந்தக் குதிரைக்காரன் சுறுசுறுப்பான இளைஞன், விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன். எங்கள் உடல் வெப்பம் வெளியேறுவதற்காக அவன் கதவைத் திறந்து வைப்பான். பிறகு லத்தியை வெளியே கொண்டு போய்க் கொட்டுவான். பிறகு எங்கள் உடல் மேலிருக்கும் துணிகளை நீக்கிவிட்டு ஒருவகைச் சீப்பினுல் எங்கள் உடலைச் சுரண்டுவான். சுரண்டிய பொருள் என் குளம்புகளினுல் சிராய்க்கப் பட்டு ஓரவெட்டுக்களோடிருக்கும் தரைப் பலகைகள் மீது வெள்ளை வரிசையாகக் கீழே விழும். நான் விளையாட்டாக அவன் கையைக்

கடித்துக் காலைத் தரையில் மிதிப்பேன். என்னுடைய சந்தர்ப்பம் வந்ததும் அவன் குளிர்ந்த தண்ணீர் ஊற்றி வைக்கப்பட்டிருக்கும் தொட்டிக்கு என்னைக் கூட்டிக் கொண்டு போவான். அவன் தன்னுடைய கைத்திறமையை, அம்புகளைப் போல நேராகத் தொடங்கி அகன்ற குளம்புகளில் முடிகின்ற என் கால்களை, பளபளப்பான முதுகை, வழுக்கிக் கொண்டு போகக் கூடிய அளவுக்கு வளப்பாக இருக்கின்ற என்னுடைய பின்புறத்தை ரசித்துப் பார்த்துக் கொண்டிருப்பான். பிறகு உயர்ந்த கிராதி வழியாகச் சிறிதளவு வைக்கோல் வீசப்படும். ஓக் மரத்தால் செய்யப்பட்ட தொட்டியில் ஓட்ஸ் ஊற்றப்படும். கடைசியில் தலைமை வண்டிக்காரனுன பியோபான் வருவான்.

''வண்டிக்காரன் தன்னுடைய எசமானரைப் போலவே இருந்தான். இருவருக்குமே எதைப் பற்றியும் பயம் கிடையாது, தங்களைத் தவிர வேறு யாரையும் அவர்கள் நேசிக்கவுமில்லை. அந்தக் காரணத்துக்காகவே எல்லோரும் அவர்களை நேசித்தார்கள். பியோபான் வெல்வெட்டைப் போன்ற கம்பளி அல்லது பருத்தித் துணியில் சிகப்புச் சட்டையும், காற் சட்டையும் கையில்லாத கோட்டும் அணிந்திருப்பான். விடுமுறை நாட்களில் அவன் கையில்லாத கோட்டை அணிந்து, அவன் தலைமுடியும் கன்ன மீசையும் எண்ணெய் தடவிப் பிரகாசிக்க 'மிருகமே! என்னை மறந்துவிட்டாயா?' என்று சத்தம் போட்டபடியே ஒரு கவட்டைக் கம்

பின்னல் என் விலாப்புறத்தில் குத்துவான் — வேடிக்கையாகத்தான், வலிக்கும் படியாக அல்ல. அது எனக்குப் பிடிக்கும். அது அவனுக்கு வேடிக்கை என்று எனக்குத் தெரியுமாதலால் நான் காதுகளை மடித்துக் கொண்டு பற்களை நறநறவென்று கடிப்பேன்.

''அங்கே ஒரு கறுப்பு ஆண் குதிரை இருந்தது. அது ஜோடியாக வேலை செய்யும். இரவில் எனக்கு ஜோடியாக அதைப் பூட்டுவார்கள். இந்தப் பொல்கானுக்கு நகைச் சுவை உணர்ச்சி கிடையாது. கெட்ட நோக்கம் கொண்ட பிசாசு. எங்களுடைய கொட்டகைகள் அடுத்தடுத்தாற்போல இருந்தன. சில சமயங்களில் நாங்கள் கம்பிகள் வழியாக ஒருவரை ஒருவர் கடித்துக் கொள்வோம். அது வெறும் வேடிக்கையாகத்தான் என்று சொல்ல முடியாது. பியோபான் அந்தக் குதிரைக்குப் பயப்படவில்லை. அவன் நேரே அந்தக் குதிரைக்குப் பக்கத்தில் போய் அதைக் கொல்லப் போவதைப் போல உறுமுவான் — பிறகு சும்மா நடந்து போய்விட்டு தோல்பட்டைவாரோடு திரும்புவான். ஒரு நாள் நானும் பொல்கானும் குஸ்னேத்ஸ்கி தெருவில் ஓட்டப்பந்தயத்தில் ஈடுபட்டோம். எசமானரோ குதிரைக்காரனோ பயப்படவில்லை. அவர்கள் சிரித்தார்கள், சுற்றிலுமிருந்த நபர்களைப் பார்த்து சத்தம் போட்டார்கள். எங்கள் கயிறுகளை லாவகமாகப் பிடித்து இழுத்து ஓட்டியபடியால் ஒரு நபர் கூடக் காயமடையவில்லை.

''என்னுடைய வாழ்க்கையில் பாதியையும்

என் மிகச் சிறந்த தன்மைகள் எல்லாவற்றை யும் அவர்களுக்கு அர்ப்பணித்தேன். நான் அதிகமாகக் குடித்து என் கால்களைக் கெடுத்துக் கொள்ள அவர்கள் அனுமதித்தார்கள். எப் படியிருந்தாலும் அவை என் வாழ்க்கையின் மிகச் சிறந்த நாட்கள். அவர்கள் பன்னிரண்டு மணிக்கு வருவார்கள். எனக்கு சேணத்தை மாட்டி, என் குளம்புகளில் எண்ணெய் தடவி, என் பிடரியையும் முன் முடியையும் தண்ணீரில் நனைத்துவிட்டு வண்டியில் என்னைப் பூட்டுவார் கள்.

''அது பிரம்பினால் செய்யப்பட்ட சறுக்கு வண்டி; உள்ளே வெல்வெட் துணி தைக்கப் பட்டிருக்கும். சேணத் தளவாடத்தில் வெள்ளி யினால் செய்யப்பட்ட சிறிய மணிகள் தொங்கிக் கொண்டிருக்கும்; கடிவாளமும் லகானும் பட் டினாலானவை. சேணத் தளவாடத்தின் வார் களையும் கயிறுகளையும் உரிய இடங்களில் வைத்து இழுத்துக் கட்டிவிட்டால் சேணத் தள வாடம் எங்கே முடிகிறது, குதிரை எங்கே தொடங்குகிறது என்பதை நீங்கள் சொல்ல முடியாது. கொட்டகையிலேயே என்னை வண் டியில் பூட்டுவது வழக்கம். பியோபான்—அவ னுடைய தோள்களைக் காட்டிலும் முதுகுப் பகுதி அகலமானது—தன்னுடைய சிகப்புக் கச் சையை ஒரு கையின் கீழ் வைத்துக் கொண்டு காலைத் தூக்கி அடிக் கொளுவியின் மேல் வைப் பான்; ஏதாவது வேடிக்கையாகப் பேசுவான், சவுக்கை எடுத்துத் தொங்க விடுவான் — அது பெயருக்குத்தான், ஏனென்றால் அவன்

ஒருபோதும் என்னைச் சவுக்கால் அடித்ததில்லை —பிறகு 'ஓடு' என்பான். நான் கதவுகளின் வழியாகத் துள்ளிக் குதித்து ஓடுவேன். வாளி நிறையக் குப்பையைக் கொண்டுவந்த சமை யற்காரி கதவுக்குப் பக்கத்தில் அப்படியே நின்று விடுவாள்; முற்றத்துக்குள் விறகைத் தூக்கிக் கொண்டு வரும் விவசாயிகள் வாயைப் பிளந்து என்னைப் பார்த்துக் கொண்டு நிற்பார்கள். கதவுகளுக்கு வெளியே சற்று தூரம் ஓடிய பிறகுதான் நாங்கள் நிற்போம். பிறகு சிப்பந் திகளும் மற்ற வண்டிக்காரர்களும் எங்களைச் சுற்றிக் கூடி வம்பளப்பார்கள். அங்கே வாயி லில் நாங்கள் எல்லோரும் காத்துக் கொண் டிருப்போம், சில சமயங்களில் மூன்று மணி நேரம் கூடக் காத்துக் கொண்டிருப்போம். எப்பொழுதாவது சிறிது தூரம் வண்டியை இழுத்துக் கொண்டு ஓடிவிட்டு மறுபடியும் திரும்பிவந்து காத்துக் கொண்டிருப்போம்.

''வெகு நேரத்துக்குப் பிறகு நுழைவாயி லில் சத்தம் கேட்கும். பழுப்பு நிறத்தில் தலைமுடியும் பானை வயிறும் கொண்ட நீஹன் உள்கோட் அணிந்து 'புறப்படு!' என்று கத்திக் கொண்டே ஓடி வருவான். அந்தக் காலத்தில் 'முன்னே போ!' என்று கத்துகின்ற முட்டாள் தனமான பழக்கம் கிடையாது. முன்னால் போவதா அல்லது பின்னால் போவதா என்று எனக்குத் தெரியாதா? பியோபான் நாக்கைச் சுழற்றி 'கிளிக்' என்று ஒலி எழுப்புவான். நாங் கள் முன்னே சென்று நிற்போம். இளவரசர் தலைக் கவசமும் நீண்ட கோட்டும் அணிந்து,

அவருடைய அழகான, சிவப்பேறிய, கரிய புரு வங்களைக் கொண்ட முகத்தை ஒரு பழுப்பு நிற பீவர் காலர் மறைக்க (அந்த அழகிய முகத்தை ஒருபோதும் மறைக்கக் கூடாது) அந்த சறுக்கு வண்டி, குதிரை, பியோபான் — அவன் முதுகை வளைத்துக் கைகளை நீட்டிக் கொண் டிருக்கும் தோரணையைப் பார்த்தால் அவன் அதிக நேரத்துக்கு அப்படி நிற்க முடியாதென்று தோன்றும்—ஆகியவற்றில் அசாதாரணமான தாக ஒன்றுமே இல்லாததைப் போல அலட் சியமான தோரணையோடு வேகமாக வருவார். குதிமுள்களும் வாளும் பித்தளைக் குதிகால் களும் சப்திக்க, அவரைத் தவிர எல்லோரும் அச்சத்தோடும் ஆச்சரியத்தோடும் பார்த்துக் கொண்டிருக்கின்ற என்னையும் பியோபானையும் மற்ற பொருள்களையும் கவனிக்க முடியாத அளவுக்கு அவசரமாகப் போவதைப் போல இளவரசர் கம்பளத்தின் மேல் வேகமாக நடந்து வருவார். பியோபான் நாக்கைச் சுழற்றி 'கிளிக்' என்ற ஒலி எழுப்பினன். நான் கடிவாள வாரை இழுத்து வண்டியில் ஏறும் மேடையை நோக்கி நிதானமாக நடந்து சென் றேன். அங்கே இளவரசரைப் பக்கவாட்டில் பார்த்துவிட்டு என்னுடைய அழகான தலையை யும் பட்டுப் போன்ற முன்முடியையும் ஆட்டி னேன். இளவரசர் உற்சாகமாக இருந்தால் பியோபானைப் பார்த்து வேடிக்கையாக ஏதே னும் கூறுவார். பியோபான் தன்னுடைய அழ கான தலையை மிக லேசாக அசைத்து அவருக்கு பதிலளிப்பான். தன் கைகளைக் கீழே போடாம

லேயே கடிவாளவார்களில் மிகவும் லேசாக மட்டுமே உணரக் கூடிய ஒரு விறைப்பை ஏற் படுத்துவான். அது எனக்கு மட்டுமே புரியும். உடனே நான் க்ளப், க்ளப், க்ளப் என்று புறப் படுவேன். ஒவ்வொரு காலடியிலும் என் வேகம் அதிகரிக்கும், என் உடலின் ஒவ்வொரு தசை யும் துடிக்கும்; என் கால்கள் பனியையும் மண் ணையும் சேற்றுக் காப்பின் மீது வாரியடிக்கும். வண்டிக்காரர்கள் வயிற்றில் வலி ஏற்பட்ட தைப் போல 'ஏ' என்று கத்துகின்ற முட் டாள்தனமான வழக்கம் அந்தக் காலத்தில் கிடை யாது. அவர்கள் 'கவனம்' என்றுதான் அந்தக் காலத்தில் கத்துவார்கள். பியோபான் 'கவனம்' என்று கத்தினன். மக்கள் சிதறி ஓடினர்கள். அவர்கள் வழிவிட்டுவிட்டு அழகான குதிரை யும் அழகான வண்டிக்காரனும் அழகான இள வரசரும் போவதைப் பார்ப்பதற்குத் தங்கள் கழுத்துக்களை வளைத்துக் கொண்டு நின்றார்கள்.

''கெச்சை நடைக் குதிரையை முந்திப் போவது எனக்கு மிகவும் பிடிக்கும். பியோபானும் நானும் நாங்கள் முயற்சி செய்வதற்குரிய தகு தியைக் கொண்ட குதிரையைப் பார்த்தால் காற்றைப் போல வேகமாக அதற்குப் பின்னல் ஓடுவோம். அந்த வண்டியின் பின் னல் மண்ணை வாரியடிக்கின்றவரை படிப்படி யாக அந்த வண்டிக்குப் பக்கத்தில் வருவோம்; பிறகு நான் அந்தக் குதிரைக்கு இணையாக ஓடுவேன். பிறகு அந்தக் குதிரையை முந்திக் கொண்டு வெகுதூரம் சென்றுவிடுவேன். என் போட்டிக் குதிரையை என்னல் பார்க்க

முடியாது. அதன் குளம்பொலி மட்டும் எனக்குப் பின்னால் கேட்கும்; அதுவும் சிறிது சிறிதாகத் தேய்ந்து மறையும். இளவரசர், பியோபான் மற்றும் என்னிடமிருந்து ஒரு சிறு சத்தம் கூட வராது. எங்களுடைய சொந்த வேலையில் மிகவும் மூழ்கிவிட்டதைப் போலப் பாசாங்கு செய்த படியால் சாலையில் நாங்கள் பார்க்கும் வண்டிகளை இழுத்துச் செல்கின்ற இரண்டாந் தரக் குதிரைகளை நாங்கள் கவனிக்கவில்லை. மற்ற குதிரைகளை முந்திப் போவது எனக்கு மிகவும் பிடிக்கும். ஆனால் என்னை நோக்கி வருகின்ற நல்ல ஓட்டக் குதிரையைப் பார்க்க எனக்குப் பிடிக்கும். ஒரு நொடி, ஒரு சாட்டை வீச்சு, ஒரு பார்வை, அது கடந்து போய்விட்டது, மறுபடியும் நாங்கள் தனித்தனியாக, அவரவருடைய திசையில் பறந்து கொண்டிருக்கிறோம்.''

கதவுகள் கிறீச்சிட்டன; நேஸ்தெர் மற்றும் வாஸ்காவின் குரல்கள் கேட்டன.

## ஐந்தாம் இரவு

பருவநிலை மாறிக் கொண்டிருந்தது. காலையிலிருந்து வானம் சிடுசிடுப்பாக இருந்தது. பனித்துளியும் இல்லை. ஆனால் காற்று வெப்பமாக இருந்தது. கொசுக்கள் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தன. குதிரைகள் வேலியடைப்புக்குள் திரும்பியவுடன் கலப்பு நிறக், காயடிக்கப் பட்ட குதிரையைச் சூழ்ந்து கொண்டன. அது தன் கதையைச் சொல்லி முடித்தது.

''சீக்கிரத்தில் என்னுடைய ஆனந்தமான வாழ்க்கை முடிவடைந்தது. இரண்டு வருடங்கள்தான் அந்த வாழ்க்கை இருந்தது. இரண்டாவது குளிர்காலத்தின் போது என் வாழ்க்கையிலேயே மிகவும் அதிகமான மகிழ்ச்சியை நான் அனுபவித்தேன். அதற்குப் பிறகு மிகவும் அதிகமான துயரம் எனக்கு ஏற்பட்டது.

''மாஸ்லெனித்ஸா என்னும் குளிர்காலத் திருவிழாவின் போது இளவரசரைக் குதிரைப் பந்தய மைதானத்துக்குக் கொண்டு சென்றேன். அத்லாஸ்னியும் பிசோக்கும் ஓடிக் கொண்டிருந்தன. பந்தயம் கட்டுகின்ற அறையில் என்னுடைய எசமானர் என்ன பேசினுர் என்று எனக்குத் தெரியாது. ஆனுல் அவர் வெளியே வந்தவுடன் பந்தயப் பாதைக்கு என்னை ஓட்டுமாறு பியோபானுக்கு உத்தரவிட்டார். என்னை அங்கே ஓட்டிச் சென்றதும் அத்லாஸ்னிக்குப் போட்டியாக ஓடியதும் எனக்கு நினைவிருக்கிறது. அத்லாஸ்னி இன்னொரு உதவிக் குதிரையோடு இருந்தது. நான் ஒரு சறுக்குவண்டியில் பூட்டப்பட்டிருந்தேன். திருப்பத்தில் நான் அதை முந்திவிட்டேன். உரத்த சிரிப்பொலியும் ஆரவார முழக்கமும் கேட்டது.

''என்னைக் கூட்டிக் கொண்டு போன பொழுது கூட்டம் முழுவதுமே அலைபோல என்னைப் பின் தொடர்ந்தது. குதிரைப் பிரியர்கள் ஐந்து பேர் பல ஆயிரங்கள் கொடுத்து என்னை விலைக்கு வாங்கத் தயாராக இருப்பதாக இளவரசரிடம் கூறினுர்கள். அவர் தன்னுடைய அழகான வெள்ளைப் பற்களை வெளியே காட்டி சிரித்தார்.

'' 'இல்லை. அது குதிரையல்ல. என்னுடைய நண்பன். நீங்கள் மலையளவு தங்கத்தைக் கொடுத்தாலும் நான் அவனை விற்பனை செய்ய மாட்டேன். கனவான்களே, போய் வருகிறேன்' என்று சொல்லிவிட்டு அவர் சறுக்குவண்டியின் கதவைத் திறந்து உள்ளே உட்கார்ந்தார்.

'' 'ஒஸ்தோழென்கா தெருவுக்குப் போ!' என்றார். அது அவருடைய ஆசை நாயகி வசிக்கும் தெரு. நாங்கள் ஓடினோம். நாங்கள் மகிழ்ச்சியோடிருந்த கடைசி நாள் அதுதான்.

''நாங்கள் அந்தப் பெண்ணின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம். அவர் அவளைத் 'தன்னுடையவள்' என்று கூறி வந்தார். ஆனால் அவள் வேறொருவனைக் காதலித்தாள். அவனோடு வெளியே சென்றிருந்தாள். இந்த விஷயம் அவள் வீட்டுக்குச் சென்ற பொழுது அவருக்குத் தெரியவந்தது. அப்பொழுது மணி ஐந்து. என்னை வண்டியிலிருந்து விடுவிக்காமல் அவளைத் தேடிப் புறப்பட்டார். அதற்கு முன்பு ஒருபோதும் நடைபெறாத ஒரு காரியம் அப்பொழுது எனக்கு நடைபெற்றது. வேகமாக ஓடும்படி என்னைச் சவுக்கால் அடித்தார்கள். முதல் தடவையாக நான் கால் இடறினேன். எனக்கு அவமானமாக இருந்தது. என் புகழைக் காப்பாற்ற விரும்பினேன். ஆனால் திடீரென்று இளவரசர் தன் முழு பலத்தோடும் 'சீ! வேகமாக ஓடு!' என்று உரத்த குரலில் சொன்னது எனக்குக் கேட்டது, சவுக்கு காற்றைக் கிழித்துக் கொண்டு என்னைத் தாக்கியது. நான் வேகமாக ஓடிய பொழுது உலோகத்தால் செய்

யப்பட்ட சேற்றுக் காப்பின் மேல் கால்களை இடித்துக் கொண்டேன். இருபத்தைந்து வெர்ஸ்டா* தூரம் போன பிறகு நாங்கள் அவளைப் பிடித்தோம். நான் அவரை வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்த்தேன். ஆனால் இரவு முழுவதும் என் உடல் நடுங்கியது. அதை என்னால் நிறுத்த முடியவில்லை. என்னால் சாப் பிடவும் முடியவில்லை. காலையில் சிறிதளவு தண் ணீர் கொடுத்தார்கள். நான் அதைக் குடித் தேன். ஆனால் அந்த நேரத்திலிருந்து நான் வேறு விதமான குதிரையாகிவிட்டேன். நான் நோயாளியானேன். அவர்கள் என்னைச் சித்தி ரவதை செய்தார்கள். என்னை முடமாக்கினார் கள் — அதை 'மருந்து கொடுப்பதென்று' மற்றவர்கள் சொல்லிக் கொண்டார்கள். என் குளம்புகள் விழுந்துவிட்டன, என் உடலில் புண் கள் ஏற்பட்டன, என் கால்கள் வளைந்துவிட் டன, என் மார்பு உள்ளே வளைந்தது. நான் உணர்ச்சியில் சோர்வாகவும் உடலில் பலவீன மாகவும் மாறினேன். அவர்கள் என்னை ஒரு குதிரை வியாபாரியிடம் விற்பனை செய்தார் கள். அவர் எனக்கு காரட்டுகளையும் இன்னும் ஏதோ ஒன்றையும் சாப்பிடக் கொடுத்தார். விஷயம் தெரியாதவர்களை ஏமாற்றுவதற்காக என்னிடம் இல்லாததை இருப்பதாகக் காட்ட அவர் விரும்பினார். என்னிடம் இனி பலமும் கிடையாது, வேகமான நடையும் கிடையாது.

---

* ஒரு வெர்ஸ்டா—1.06 கிலோமீட்டர் தூரமாகும்.

வாடிக்கையாளர் என்னைப் பார்க்க வருகின்ற பொழுதெல்லாம் அந்தக் குதிரை வியாபாரியும் என் கொட்டகைக்குள் வந்து என்னைச் சவுக்காலடித்து பயத்தினால் என் உடலெல்லாம் நடுங்கும்படி செய்து மேலும் சித்திரவதை செய்தார். பிறகு அவர் என் உடலில் சவுக்கடி பட்ட காயங்களைத் துடைத்துவிட்டு என்னை வெளியே கூட்டிக் கொண்டு போவார். ஒரு கிழவி என்னை வாங்கினாள். அவள் அதிசயங்களை ஏற்படுத்தும் புனித நிக்கலாய் மாதா கோவிலுக்கே எப்பொழுதும் என்னை ஓட்டிப் போய்க் கொண்டிருப்பாள். அவள் தன்னுடைய வண்டிக்காரனைச் சவுக்காலடிப்பாள். வண்டிக்காரன் என்னுடைய லாயத்துக்கு வந்து கதறியழுவது வழக்கம். கண்ணீர்த் துளிகளுக்குச் சுவாரசியமான உப்புச் சுவை உண்டு என்பதை நான் அப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன். பிறகு அந்தக் கிழவி இறந்துவிட்டாள். அவள் வீட்டு மேலாளர் என்னை ஒரு கடை முதலாளியிடம் விற்பனை செய்தார். அவரிடம் இருந்த பொழுது நான் கோதுமையை அதிகமாகச் சாப்பிட்ட படியால் என்னுடைய நோய்கள் அதிகரித்தன. என்னை ஒரு விவசாயியிடம் விற்பனை செய்தார்கள். நான் அவன் கலப்பையை இழுத்தேன். அநேகமாக எனக்குச் சாப்பாடே கிடையாது. மறுபடியும் நான் நோயில் விழுந்தேன். ஒரு ஜிப்சியிடம் என்னைப் பண்ட மாற்றாகக் கொடுத்தார்கள். அவன் என்னை மிகவும் மோசமாக நடத்தினான். கடைசியில் இந்தப் பண்ணைக்

காரரிடம் என்னை விற்பனை செய்தான். இப்படி இங்கே வந்து சேர்ந்தேன்.''

யாரும் பேசவில்லை. அங்கே மழைபெய்யத் தொடங்கியது.

## அத்தியாயம் 9

மறு நாள் மாலையில் மேய்ச்சலுக்குப் பிறகு குதிரைகள் திரும்பிய பொழுது அவர்களுடைய எசமானர் வருவதைப் பார்த்தன. அவருடன் ஒரு நண்பரும் வந்தார். வீட்டுக்குப் பக்கமாக வந்த பொழுது ஷூல்திபாதான் அந்த இரண்டு ஆண் உருவங்களையும் சாடையாகப் பார்த்தது. அவர்களில் ஒருவர் இளம் எசமானர். அவர் ஓலைத் தொப்பி அணிந்திருந்தார். அடுத்தவர் உயரமாகவும் பருமனாகவும் இருந்தார், இராணுவ உடை அணிந்திருந்தார். கிழட்டுப் பெண் குதிரை அவர்களைச் சாடையாகப் பார்த்து விட்டு ஒதுங்கி நடந்தது. குறிப்பாக எசமானரும் அவருடைய விருந்தினரும் குதிரைகளுக்கு நடுவில் நேராக நடந்து வந்து ஒருவருக்கொருவர் பல விஷயங்களைச் சுட்டிக் காட்டவும் பேசவும் தொடங்கிய பொழுது மற்ற குதிரைகள் தமது இளமையின் காரணமாக வெட்கமும் சங்கடமும் அடைந்தன.

''அந்தப் புள்ளி போட்ட பழுப்புக் குதிரையை வொயெய்கோவிடமிருந்து வாங்கினேன்'' என்றார் எசமானர்.

''வெள்ளைக் கால்களோடிருக்கும் அந்த

இளம் கறுப்புக் குதிரை யாருடையது? அது நன்ருக இருக்கிறது'' என்ருர் விருந்தினர். அவர்கள் பல குதிரைகளை மேலும் கீழும் பார்த்தார்கள். அவற்றுக்குப் பின்ஞல் ஓடிப்போய் அவற்றை நிற்க வைத்துப் பார்த்தார்கள். அவர்கள் அந்த இளம் பெண் குதிரையையும் கவனித்தார்கள்.

''அது ஹிரேனவோ சவாரிக் குதிரை இனத்தைச் சேர்ந்தது'' என்ருர் எசமானர்.

அவர்களால் எல்லாக் குதிரைகளையும் பரிசீலனை செய்ய முடியவில்லை. எசமானர் நேஸ்தெரைக் கூப்பிட்டார். அந்தக் கிழவன் சவாரி செய்து கொண்டிருந்த கலப்பு நிறக் காயடிக்கப்பட்ட குதிரையின் விலாக்களில் தன் குதிமுள்ளைச் செலுத்தி வேகமாக வந்தான். அந்தக் காயடிக்கப்பட்ட குதிரை ஒரு காலில் நொண்டிய போதிலும் மிகவும் சிரமத்தோடு ஓடி வந்தது. ஆஞல் உச்ச வேகத்தில் பூமியின் கடைசிக்கு ஓடும்படி உத்தரவு கொடுத்திருந்தால் கூட அது முணுமுணுக்காது ஏன்பது தெளிவாகத் தெரிந்தது. அது அப்படி ஓட விரும்பியிருக்கும், நன்ருக இருந்த வலது காலில் அந்த முயற்சியைச் செய்திருக்கும்.

''இதைக் காட்டிலும் நல்ல பெண் குதிரையை ருஷ்யா முழுவதிலும் தேடிஞலும் பார்க்க முடியாது. இது நிச்சயம்'' என்று எசமானர் ஒரு குதிரையைச் சுட்டிக் காட்டிக் கூறிஞர். விருந்தினரும் அதற்குப் பாராட்டுத் தெரிவித்து ஏதோ கூறிஞர். எசமானர் இங்குமங்கும் பரபரப்பாக ஓடிஞர். அந்தக் குதிரை

களைக் காட்டி அவற்றின் சரித்திரத்தையும் பரம் பரையையும் விளக்கினுர். விருந்தினர் அலுப் படைந்தது போலத் தோன்றியது. ஆனுல் அவர் தனக்கு அக்கறை இருப்பதாகக் காட்டிக் கொள் வதற்காக வலிந்து கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

''ஓ! அப்படியா?'' என்று அவர் கவனக் குறைவாகக் கேட்டார்.

''இதைப் பார்'' என்று விருந்தினருக்கு ஏற் பட்டிருக்கும் அலுப்பை உணராமல் எசமானர் பேசினுர். ''இந்தக் கால்களைப் பார்... இந்தக் குதிரையை அதிகமான விலை கொடுத்து வாங் கினேன். ஆனுல் அவளுடைய மூன்று வயதான மகன் ஏற்கெனவே ஓட்டம் பழகிவிட்டான்.''

''வேகமாக ஓடுகிறதா?'' என்று விருந்தினர் கேட்டார்.

அவர்கள் ஒவ்வொரு குதிரையைப் பற்றி யும் பேசினுர்கள். கடைசியில் எல்லாக் குதிரை களையும் பற்றி விவாதித்து முடித்துவிட்டார் கள். அதற்குப் பிறகு பேசுவதற்கு ஒன்று மில்லை. அங்கே மௌனம் நிலவியது.

''சரி. போகலாமா?''

''ஆமாம்.'' அவர்கள் கதவு வழியாக வெளியே சென்றுர்கள். குதிரைகளைச் சுட்டிக் காட்டியது முடிவடைந்ததைப் பற்றி விருந் தினருக்கு மகிழ்ச்சி. இனி அவர்கள் வீட்டுக்குப் போகலாம். அங்கே உணவருந்திக் குடித்து விட்டுப் புகை பிடிக்கலாம். அவருக்கு அதிகமான உற்சாகம் ஏற்பட்டிருப்பது போலத் தோன் றியது. அவர்களுடைய உத்தரவுகளை எதிர்

பார்த்துக் கலப்பு நிறக் குதிரையின் மேல் உட் கார்ந்திருந்த நேஸ்தெரைக் கடந்த பொழுது விருந்தினர் தன்னுடைய பெரிய, சதைப் பிடிப்பான கையினுல் அந்தக் காயடிக்கப்பட்ட குதிரையின் பின்புறத்தில் அடித்தார்.

''இது அழகான குதிரை. முன்பு என்னிடம் ஒரு கலப்பு நிறக் குதிரை இருந்தது என்று உன்னிடம் சொன்னேனே, நினைவிருக்கிறதா?'' என்று கேட்டார்.

அவருடைய கூற்று தனக்குச் சொந்தமான குதிரைகளைப் பற்றியதல்ல என்பதால் எசமானர் அதை கவனமாகக் கேட்கவில்லை. அவர் தன்னு டைய குதிரைகளையே தொடர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று அவருடைய காதுக்குள் பலவீன மாக, கிழட்டுத்தனமாக, முட்டாள்தனமாகக் கனைப்பதற்குச் செய்யப்பட்ட முயற்சி அவரைத் திடுக்கிடச் செய்தது. அந்தக் காயடிக்கப்பட்ட குதிரை கனைத்தது. ஆனுல் அதற்கேற்பட்ட குழப்பத்தில் அதை முடிக்காமலேயே பாதியில் நிறுத்திவிட்டது. விருந்தினரோ, எசமானரோ அதைப்பற்றி சிறிதும் அக்கறை காட்டாமல் வீட்டுக்குத் திரும்பினுர்கள். அந்தக் கொழுத்த மனிதர் தனது அன்புக்குரிய எசமானர், ஒரு காலத்தில் பணக்காரராகவும் அழகானவராக வுமிருந்த இளவரசர் ஸெர்புஹவ்ஸ்கோய் என் பதை கஜக்கோல் அடையாளம் கண்டுவிட்டது.

## அத்தியாயம் 10

. . . . . . . . . . . .
. . . . . . . . . . . .

மழை சொட்டுச் சொட்டாக விழுந்து கொண்டிருந்தது. அந்த வேலியடைப்புக்குள் சோர்வு மண்டிக்கிடந்தது, ஆனுல் அந்தப் பெரிய வீடு வேறு விதமாக இருந்தது. வசதி யான உபசரிப்பு அறையில் மிகவும் ஆடம்பர மாகத் தேநீர் விருந்து நடைபெற்றுக் கொண் டிருந்தது. மேசைக்குப் பின்னுல் விருந்தளிப் பவர், விருந்தளிக்கும் பெண், அவர்களுடைய விருந்தினர் ஆகியோர் உட்கார்ந்திருந்தார்கள்.

விருந்தளிக்கும் பெண் கர்ப்பமாக இருந் தாள். அவளுடைய பெரிய வயிறு, தேநீர்ச் சட்டிக்குப் பக்கத்தில் அவள் விறைப்பாக உட் கார்ந்திருந்த நிலே, அவளுடைய உடற்பருமன் குறிப்பாக, அவளுடைய பெரிய கண்கள்— அவை அடக்கமும் பெருமிதமும் கலந்த தோற் றத்தைக் கொண்டு அவள் மீதே உள்முகமாகத் திருப்பப்பட்டவை போலத் தோன்றின—ஆகிய வற்றிலிருந்து அதைத் தெரிந்து கொள்ள முடியும்.

விருந்தளிப்பவர் உயர்ந்த ரகச் சுருட்டுகள டங்கிய ஒரு பெட்டியைக் கையில் வைத்திருந் தார். அவை பத்து வருடகாலம் பழையவை. அத்தகைய சுருட்டுக்கள் அவரைத் தவிர வேறு யாரிடமும் கிடையாது அல்லது அப்படி அவர் தன் விருந்தினரிடம் பெருமையாகச் சொல்லப்

போகிறார். விருந்தளிப்பவர் அழகர், சுமார் இருபத்தைந்து வயது இருக்கும். மலர்ச்சியான தோற்றம், நல்ல பளபளப்பு, கவனமாகப் பராமரிக்கப்பட்ட உடல். வீட்டிலிருக்கும் பொழுது அவர் லண்டனில் தைக்கப்பட்ட இறுக்கமில்லாத கம்பளி சூட் அணிந்திருந்தார். அவருடைய கைக் கடிகாரச் சங்கிலியிலிருந்து கனமான தங்கச் சிற்றணிகள் தொங்கின. அவருடைய சட்டையின் கைப் பொத்தான்கள் கூட கனமான தங்கத்தினால் செய்யப்பட்டு நீலக்கல் பதிக்கப்பட்டிருந்தன. அவருடைய தாடி மூன்றும் நெப்போலியனைப் போல கத்தரித்து விடப்பட்டிருந்தது. மேலுதட்டின் இரு பக்கங்களிலும் சுண்டெலிகளின் வால்களைப் போல நீட்டிக் கொண்டிருந்தன. பாரிஸ் நகர பாணியில் அவை பசை தடவி அழகாக முறுக்கி விடப்பட்டிருந்தன. விருந்தளித்த பெண் மெல்லிய பட்டு கவுன் அணிந்திருந்தாள். அதில் மலர்க் கொத்துக்களின் சித்திரம் தீட்டப்பட்டிருந்தது. அவளுடைய பழுப்பு நிறக் கொண்டையில்—அது முற்றிலும் சொந்தத் தலைமுடியல்ல என்றாலும் மிகவும் அழகாக இருந்தது—பெரிய, வளைந்த, தங்க ஊசிகள் சொருகப்பட்டிருந்தன. அவளுடைய மேற்கைகளிலும் கைகளிலும் பல விலையுயர்ந்த மோதிரங்களும் வளையல்களும் அணிந்திருந்தாள். தேநீர்ச் சட்டி வெள்ளியினால் செய்யப்பட்டது; தேநீர்க் கோப்பைகள் மிகவும் உயர்தரமான சீனப் பீங்கானில் செய்யப்பட்டவை. வெள்ளை உள் கோட், கழுத்துப்பட்டை, வால் வைத்த கோட்

அணிந்து அலங்காரமான தோற்றத்தோடு ஒரு பணியாள் உத்தரவுகளை எதிர்பார்த்துக் கத வுக்குப் பக்கத்தில் சிலையைப் போல நின்று கொண்டிருந்தான். அங்கிருந்த மரச்சாமான் கள் சிற்ப வேலைப்பாடுகளோடு அணி நலம் மிகுந்திருந்தன. சுவரில் ஒட்டப்பட்டிருந்த காகிதத்தில் மலர்களின் படங்கள் வரையப் பட்டிருந்தன. மேசைக்குப் பக்கத்தில் மிக உயர்ந்த ஜாதியைச் சேர்ந்த வேட்டை நாய் படுத்திருந்தது. அதன் கழுத்தில் கட்டப்பட் டிருந்த வெள்ளிச் சங்கிலி அவ்வப்பொழுது 'கிளிங்' என்ற சப்தத்தை ஏற்படுத்தியது. அந்த நாய்க்கு அசாதாரணமான ஆங்கிலப் பெயர் கொடுக்கப்பட்டிருந்தது. அதை எச மானரோ அல்லது அவருடைய ஆசைநாய கியோ உச்சரிக்க முடியாது; ஏனென்றால் இரு வருக்குமே ஆங்கிலம் தெரியாது. ஒரு மூலையில் செடிகளுக்கு மத்தியில் வேலைப்பாடுகள் நிறைந்த பெரிய பியானோ வாத்தியம் நிறுத்தி வைக் கப்பட்டிருந்தது. அங்கேயிருந்த திரைகள், விரிப்புக்கள் அனைத்துமே புதியவை, அபூர் வமானவை, விலையுயர்ந்தவை. அவை வளச் சிறப்பு, ஆடம்பரம், அறிவு பூர்வமான அக் கறையின்மை ஆகியனவற்றின் முத்திரை யைத் தாங்கியிராதிருந்தால் அவை நன்றாகவே இருந்திருக்கும்.

விருந்தளிப்பவருக்குப் பந்தயக் குதிரைகளைப் பற்றிப் பைத்தியம். அவர் உடல் பலமும் ஆரோக்கியமும் உடையவர். தன்னம்பிக்கை நிறைந்தவர். மனிதர்களில் அந்த ரகம்

ஒருபோதும் அழியாது. அவர்கள் சேபிள் கோட்டை அணிந்து கொண்டு குதிரைகளின் மேல் சவாரி செய்வார்கள். விலையுயர்ந்த மலர்ச் செண்டுகளை நடிகைகளின் மேல் வீசுவார்கள். மிகச் சிறப்பான உணவு விடுதிகளில் மிகப் புதிய ரகங்களைச் சேர்ந்த மிக விலையுயர்ந்த மதுபானங்களை அருந்துவார்கள்; தங்கள் பெயர்களில் பரிசுகளை ஏற்படுத்துவார்கள், ஆசைநாயகிகளுக்கு மிக அதிகமான பணத்தைச் செலவிடுவார்கள்.

அவருடைய விருந்தினரான நிக்கீதா ஸெர்புஹவ்ஸ்கோய்க்கு நாற்பதுக்கும் அதிகமான வயதிருக்கும். அவர் உயரமானவர், பருமனுனவர், வழுக்கைத் தலையர், பெரிய மீசையும் கன்னமீசையும் உடையவர். இளமையில் அவர் மிகவும் அழகானவராக இருந்திருக்க வேண்டும். ஆனால் தற்பொழுது உடலாரோக்கியத்திலும் தார்மிக ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் சீர்குலைந்தவராகவே அவர் தோற்றமளித்தார்.

அவருக்கு ஏராளமான கடன் ஏற்பட்டிருந்தபடியால் சிறைவாசத்திலிருந்து தப்பிப்பதற்காகவே அரசாங்க வேலையை மேற்கொண்டார். அவர் இப்பொழுது ஒரு மாகாண நகரத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறார். அங்கே குதிரை வளர்ப்பு நிலையத்தின் பொறுப்பாளராக அவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்தப் பதவிகூட அவருடைய செல்வாக்குமிக்க உறவினர்களுடைய உதவியினால்தான் அவருக்குக் கிடைத்தது. அவர் இராணுவ மேற்சட்டையும் நீலக்

காற்சட்டையும் அணிந்திருந்தார். அவை பணக்காரர்கள் அணியக் கூடிய உயர்ந்த ரகம். இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட கைக் கடிகாரத்தை அணிந்திருந்தார். அவருடைய பூட்சுகளின் குதி அசாதாரணமானவையாக, ஒரு அங்குலம் கனம் உடையவையாக இருந்தன.

நிக்கீதா ஸெர்புஹவ்ஸ்கோய் இருபது லட்சம் ரூபிள் திரண்ட செல்வத்தை அழித்துவிட்டார். இப்பொழுது அவருக்கு ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபிள் கடன் இருக்கிறது. இவ்வளவு அதிகமான செல்வம் ஒருவரிடமிருந்தால் அந்தப் பெருமையைக் கொண்டே அவர் கடன் வாங்க முடியும்; இன்னும் பத்து வருட காலத்துக்கு அநேகமாக எல்லா வசதிகளோடும் வாழ்க்கை நடத்த முடியும். அந்தப் பத்து வருடங்கள் முடிந்துவிட்டன; பெருமை மறைந்துவிட்டது; இப்பொழுது நிக்கீதாவின் வாழ்க்கை ஒரு சுமையாக மாறிவிட்டது. அவர் மிதமிஞ்சிக் குடிக்கத் தொடங்கினர், அதாவது ஒயின் அவருக்கு மயக்கத்தைக் கொடுக்கத்தொடங்கியிருந்தது. அதற்கு முன்னர் இப்படி ஒருபோதும் நடைபெற்றதில்லை. குடியைப் பொறுத்தவரை அவர் உண்மையில் ஒருபோதும் தொடங்கவுமில்லை, முடிக்கவுமில்லை. அவருடைய வீழ்ச்சி நிலையை மற்ற எல்லாவற்றையும் காட்டிலும் அவருடைய கண்களிலிருந்த சங்கட உணர்ச்சியும் (அவருடைய கண்கள் இங்குமங்கும் பார்க்கத் தொடங்கிவிட்டன) அவருடைய குரலிலும் நடையிலுமிருந்த தயக்கமும் மிக நன்ருக வெளிக்காட்டின. இந்த மன

உலைவு அவருக்குப் புதியது, இதற்கு முன்பு அவர் யாரைப் பற்றியும் அல்லது எதைப் பற்றியும் ஒருபோதும் பயமடைந்தது கிடையாது, சமீபத்தில் அவருக்கு ஏற்பட்ட சோதனைகளே அவருடைய இயல்புக்கு முற்றிலும் பொருந்தாத பீதி மனோபாவத்தை அவரிடம் ஏற்படுத்தியிருக்கின்றன என்பதை ஒருவர் சுலபமாகப் பார்க்க முடிந்ததால் இந்த மன உலைவு அழுத்தமாகத் தெரிந்தது. விருந்தளிப்பவர், அந்தப் பெண் இருவருமே இதை கவனித்தார்கள், ஒருவருக்கொருவர் சிந்தனைகளைப் புரிந்து கொண்டதாகவும், இனி படுக்கைக்குப் போனபிறகு அவரைப் பற்றி விவாதித்துக் கொள்ளலாம் என்றும் சமிக்கை காட்டிக் கொண்டார்கள். தற்பொழுது பாவம் அந்த நிக்கீதாவிடம் அனுதாபமாக—இனிமையாகக் கூட—நடந்து கொள்ள வேண்டியதே. விருந்தளிப்பவரிடமிருந்த உற்சாகம் நிக்கீதாவின் தன்மதிப்பைக் குலைத்தது. இனி அவரால் என்றுமே திரும்பப் பெற முடியாத கடந்த காலத்தைப் பற்றிய நினைவுகளை அவரிடம் பலவந்தமாக ஏற்படுத்தி அவரிடம் பொறுமையைத் தூண்டியது.

''மரீ! நாங்கள் புகை பிடிக்கலாமா?'' என்று அந்தப் பெண்ணிடம் அதிகமான பழக்கத்தால் ஏற்படுகின்ற பிரத்யேகமான, தளுக்கான குரலில் அவர் கேட்டார். அது உசிதமான, நட்புணர்ச்சி கலந்த தொனி—ஆனால் முற்றிலும் மரியாதையான தொனி அல்ல. அதிகமான நாகரிகமுடையவர்கள் தங்கள் நண்பர்

களின் ஆசைநாயகிகளோடு (மனைவிகளோடு அல்ல) பேசும் பொழுது அந்த தொனியைப் பயன்படுத்துவார்கள். அவளுக்கு வருத்தமேற் படுத்துவது அவருடைய நோக்கம் அல்ல. அதற்கு மாறாக அவள் மற்றும் தனக்கு விருந் தளிப்பவருடைய நல்லெண்ணத்தைப் பெற விரும்பினார் (ஆனால் அவர் அதை அநேகமாக ஒத்துக் கொண்டிருக்க மாட்டார்). அத்தகைய பெண்களோடு பேசும் பொழுது இத்தகைய தொனியைப் பயன்படுத்துவது அவருடைய வழக்கம். ஒரு சீமாட்டியிடம் பேசுவதைப் போல அவளிடம் பேசியிருந்தால் அவளே ஆச் சரியமடைந்திருப்பாள் — அவளுக்கு வருத்தம் கூட ஏற்பட்டிருக்கும் — என்பது அவருக்குத் தெரியும். மேலும் அங்கீகரிக்கப் பட்ட மரி யாதைத் தொனியைத் தனக்குச் சமதையான நண்பரின் உண்மையான மனைவியோடு பேசு கின்ற பொழுது பயன்படுத்துவதற்காக அவர் கையிருப்பில் வைத்துக் கொள்ள வேண்டி யிருந்தது. அவர் எப்பொழுதுமே ஆசைநாய கிகளோடு மரியாதையாகத்தான் பேசினார். எந்த நிலையிலிருந்தாலும் ஒவ்வொரு மனிதப் பிறவிக்கும் மதிப்பு உண்டு என்பதைப் பற்றி, திருமணத்தின் போலித்தன்மை இன்னும் இதர எல்லாவற்றையும் பற்றி சஞ்சிகை களில் எழுதப்படுகின்ற (அவர் அப்படிப்பட்ட குப்பைகளை ஒருபோதும் படிப்பதில்லை) கருத் துக்கள் என்று சொல்லப்படுவனவற்றை அவர் பகிர்ந்து கொண்டதால் அல்ல. ஆனால் கண் ணியமான எல்லா மனிதர்களும் அவர்களிடம்

அந்த முறையில்தான் நடந்து கொண்டார்கள் என்பது அதற்குக் காரணம். அவர் வீழ்ச்சியடைந்தவர் என்ருலும் மிகவும் கண்ணியமானவர்.

அவர் ஒரு சுருட்டை எடுத்தார். விருந்தளிப்பவர் இங்கிதமில்லாமல் கை நிறைய சுருட்டுக்களை எடுத்து அவரிடம் நீட்டினர்.

''இதோ! இவற்றையும் எடுத்துக் கொள். இவை சிறந்த சுருட்டுக்கள் என்பதை நீயே தெரிந்து கொள்வாய்.''

நிக்கீதா சுருட்டுகளை வேண்டாம் என்று தள்ளினர். அவமதிக்கப்பட்டுப் புண் படுத்தப்பட்ட உணர்ச்சி அவருடைய கண்களில் பளிச்சிட்டன.

''நன்றி.'' அவர் தன்னுடைய சுருட்டுப் பெட்டியை எடுத்தார். ''என்னுடைய சுருட்டைப் புகைத்துப் பார்.''

விருந்தளித்த பெண் அதிகமான கூருணர்ச்சி உடையவள். அங்கே நடந்ததை கவனித்ததனுல் அவள் முந்திக் கொண்டு பேசினுள்.

''எனக்குச் சுருட்டுகள் என்ருல் மிகவும் பிடிக்கும். என்னைச் சுற்றி எப்பொழுதும் யாராவது புகை பிடிக்கிருர்கள். இல்லையென்ருல் நானே புகை பிடிக்கத் துணிந்துவிடுவேன்.''

அவள் தன் அழகான, அன்பான புன்சிரிப்புக்களில் ஒன்றை உதிர்த்தாள். அவரும் பதிலுக்குச் சிரித்தார். அவருடைய பற்களில் இரண்டு விழுந்திருந்தன.

''இல்லை. இதை எடுத்துக் கொள்'' என்று

அந்த நயமில்லாத விருந்தளிப்பவர் வற்புறுத்தினர். ''இவை காட்டம் குறைவானவை. Fritz, bringen sie noch *eine* Kasten, dort zwei".*

அந்த ஜெர்மானியப் பணியாள் ஒரு புதுப் பெட்டியைக் கொண்டுவந்தான்.

''உனக்கு எப்படிப்பட்ட சுருட்டுகள் பிடிக்கும்? காட்டமானவையா? இவை முதல் தரமானவை. இவை எல்லாவற்றையும் எடுத்துக் கொள்'' என்று அவர் தொடர்ந்து வற்புறுத்தினர். தன்னுடைய அபூர்வமான உடைமைகளைப் பகட்டாக எடுத்துக் காட்டுவதில் ஏற்பட்ட ஆனந்தம் அவர் மற்ற எல்லாவற்றையும் மறக்கும் படிச் செய்தது. ஸெர்புஹவ்ஸ்கோய் சுருட்டைப் பற்ற வைத்தார். அவர்கள் பேசிக் கொண்டிருந்த விஷயத்தைத் தொடர்வதற்கு அவர் அவசரப்பட்டார்.

''அத்லாஸ்னியை என்ன விலைக்கு வாங்கியதாகச் சொன்னாய்?'' என்று கேட்டார்.

''அதிகமான பணம். குறைந்த பட்சம் ஐயாயிரம். ஆனல் அந்தக் குதிரைக்கு அவ்வளவு கொடுக்கலாம். அதன் குட்டியை நீ அவசியம் பார்க்க வேண்டும்.''

''ஓட்டப் பந்தயக் குதிரைகளா?''

''அத்தனையும் ஓட்டக் குதிரைகள்தான். இந்த வருடம் அதன் மகன் தூலா, மாஸ்கோ, பீட்டர்ஸ்பர்கில் வொயெய்கோவின் வரனேய்க்கு

---

* ஃபிரீட்ஸ்! இன்னொரு சுருட்டுப் பெட்டியை எடுத்துக் கொண்டு வா. அங்கே இரண்டு பெட்டிகள் இருக்கின்றன **(ஜெர்மன்).**

எதிராக ஓடி மூன்று பரிசுகளைப் பெற்றது. குதிரையோட்டி ராஸ்கல் மட்டும் நான்கு தப்புக்கள் செய்யாமலிருந்தால் அந்தக் குதிரையைக் கொடிக்குப் பின்னாலேயே விட்டுவிட்டு இது முன்னால் ஓடி வந்திருக்கும்''.

''அந்தக் குதிரை இன்னும் பதப்படவில்லை. என்னுடைய அபிப்பிராயத்தில் அந்தக் குதிரையிடம் டச்சு ரத்தம் அதிகமாக இருக்கிறது'' என்றார் ஸெர்புஹவ்ஸ்கோய்.

''பெண் குதிரைகளைப் பற்றி என்ன நினைக்கிறாய்? அவற்றை நாளைக்கு உன்னிடம் காட்டுகிறேன். தப்ரீன்யாவுக்கு மூவாயிரமும் லாஸ்கவயாவுக்கு இரண்டாயிரமும் கொடுத்தேன்.''

மறுபடியும் விருந்தளிப்பவர் தன்னுடைய பணத்தைப் பற்றிப் பீற்றிக் கொள்ளத் தொடங்கினார். இது ஸெர்புஹவ்ஸ்கோய்க்கு வேதனையைக் கொடுத்ததையும், அவர் அதைக் கேட்டுக் கொண்டிருப்பது போலப் பாசாங்கு மட்டுமே செய்கிறார் என்பதையும் விருந்தளித்த பெண் கவனித்தாள்.

''இன்னொரு கோப்பை தேநீர் குடிக்கிறீர்களா?'' என்று அவள் கேட்டாள்.

''வேண்டாம்'' என்றார் விருந்தளிப்பவர். அவர் மேலும் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார். அவள் எழுந்து நின்றாள். அவர் அவளை நிறுத்தி அவளைத் தன் கைகளால் தழுவி முத்தமிட்டார்.

அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்த ஸெர்புஹவ்ஸ்கோய் சிரிப்பதற்கு, அவர்களுக்கு மகிழ்ச்சியூட்டும் வகையில் இயற்கைக்கு மாறான

வகையில் சிரிக்கத் தொடங்கினர். ஆனல் விருந்தளிப்பவர் எழுந்து அவளுடைய இடையைத் தன் கையால் அணைத்துக் கதவு வரை சென்று வழியனுப்பிய பொழுது அவருடைய முகபாவம் திடீரென்று மாற்றமடைந்தது. அவர் நீண்ட பெருமூச்சு விட்டார். அவருடைய மொத்தையான முகத்தில் மனமுறிவைக் காட்டும் தோற்றம் ஏற்பட்டது. ஆதில் சிறிதளவு எரிச்சல் கூடக் கலந்திருந்தது.

## அத்தியாயம் 11

விருந்தளிப்பவர் சிரித்தபடியே திரும்பிவந்து நிக்கீதாவுக்கு எதிரில் உட்கார்ந்தார். அவர்கள் சற்று நேரம் வரையிலும் பேசிக் கொள்ளவில்லை.

''நீ வொயெய்கோவிடமிருந்து அந்தக் குதிரையை வாங்கியதாகத்தானே சொன்னய்'' என்று ஸெர்புஹவ்ஸ்கோய் ஏதோ ஞாபகத்தில் கேட்டார்.

''ஆமாம். அத்லாஸ்னியைத்தான். துபவீத்ஸ்கியிடமிருந்து பெண் குதிரைகளை வாங்க விரும்பினேன். ஆனல் அவரிடம் உருப்படியாக ஒன்றுமில்லை.''

''பாவம். அவர் நொடித்துப் போய்விட்டார்'' என்றுர் ஸெர்புஹவ்ஸ்கோய். பிறகு திடீரென்று நிறுத்திக் கொண்டு தன்னைச் சுற்றிலும் பார்த்தார். இந்த 'நொடித்துப் போன' கனவானுக்குத் தான் இருபதாயிரம் ரூபிள்கள் தர வேண்டும் என்பது அவர் நினைவுக்கு வந்

தது. துபவீத்ஸ்கியை நொடித்துப் போனவர் என்று மற்றவர்கள் சொல்லலாமென்றால் அவர்கள் தன்னைப் பற்றி என்ன சொல்ல வேண்டும்? அவர் மௌனமாக இருந்தார்.

மறுபடியும் நீண்ட இடைவெளி நிலவியது. தன்னுடைய விருந்தினரிடம் பெருமையாகப் பேசக் கூடிய எல்லா விஷயங்களைப் பற்றியும் விருந்தளிப்பவர் சிந்தித்துக் கொண்டிருந்தார். தான் நொடித்துப் போய்விட்டதாகத் தான் கருதவில்லை என்று எடுத்துக் காட்டுவதற்கு என்ன பேச வேண்டும் என்று ஸெர்புஹவ்ஸ்கோய் சிந்தித்துக் கொண்டிருந்தார். ஆனால் சுருட்டுகள் சுறுசுறுப்பூட்டினாலும் அவர்களிருவருடைய மூளைகளும் மந்தமாகவே இயங்கின. ''எப்பொழுது மதுவருந்துமாறு அழைக்கப் போகிறான்?'' என்று ஸெர்புஹவ்ஸ்கோய் சிந்தித்தார். ''நாங்கள் குடிப்பது இதைக் காட்டிலும் நல்லது. இல்லாவிட்டால் அலுப்பே என்னைக் கொன்றுவிடும்'' என்று விருந்தளிப்பவர் நினைத்தார்.

''நீ இங்கே நீண்ட காலம் தங்கியிருக்க உத்தேசிக்கிறாயா?'' என்று ஸெர்புஹவ்ஸ்கோய் கேட்டார்.

''ஒரு மாதம். இரவு உணவு அருந்தலாமா? ஃபிரீட்ஸ்! உணவு தயாராகிவிட்டதா?''

அவர்கள் உணவருந்தும் அறைக்குள் சென்றார்கள். சரவிளக்கு மேலே தொங்க ஒரு மேசையின் மேல் அழகிய மெழுகுவர்த்திக் கொத்தும் பல விதமான உயர்ந்த ரகப் பொருள்களும் வைக்கப்பட்டிருந்தன. உந்து குப்பிகள்,

தக்கைகளில் பொம்மைகள் சொருகப்பட்ட பாட்டில்கள், பல விதமான வோட்கா பாட்டில்கள், உயர்ந்த ரக ஒயின் வைக்கப்பட்டிருந்த வடிகலங்கள், தட்டுகளில் சிறந்த உணவு வகைகள் இருந்தன. அவர்கள் குடித்தார்கள், உணவருந்தினுர்கள், மறுபடியும் குடித்தார்கள், மறுபடியும் உணவருந்தினுர்கள். கடைசியாக உரையாடத் தொடங்கினுர்கள். ஸெர்புஹவ்ஸ்கோயின் முகம் நன்ருகச் சிவந்துவிட்டது. அவர் வரையறை இல்லாமல் பேசத் தொடங்கினுர்.

அவர்கள் பெண்களைப் பற்றிப் பேசினுர்கள். தங்களுக்குப் பழக்கமான ஜிப்சி பெண்கள், பிரெஞ்சுப் பெண்கள், நடனக்காரிகளைப் பற்றி அவர்கள் பேசினுர்கள்.

''மதியேயை ஏன் விட்டுவிட்டாய்?'' என்று விருந்தளிப்பவர் கேட்டார். மதியே என்ற அந்தப் பெண்தான் ஸெர்புஹவ்ஸ்கோயேயின் அழிவுக்குக் காரணம்.

''நான் விடவில்லை. அவள்தான் என்னை விட்டுப்போய்விட்டாள்.ஒரு மனிதன் எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்கிறது!இப்பொழுதெல்லாம் ஆயிரம் ரூபிள் கிடைத்து விட்டால் எனக்கு ஆனந்தமாக இருக்கிறது. எல்லோரிடமிருந்தும் பிரிந்து தனியாகப் போய்விட்டால் அதுவே எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது. என்ஞல் இனிமேல் மாஸ்கோவில் வசிக்க முடியாது. ஓ! அதை நினைக்க முடியவில்லையே.''

ஸெர்புஹவ்ஸ்கோயின் பேச்சு விருந்தளிப்பவருக்கு அலுப்பைக் கொடுத்தது. அவர் தன்னைப் பற்றிப் பேசுவதற்கு, பெருமையாகப்

பீற்றிக் கொள்வதற்கு விரும்பினுர். ஸெர்பு ஹவ்ஸ்கோய் தன்னைப் பற்றி, தன்னுடைய அதியற்புதமான கடந்த காலத்தைப் பற்றிப் பேசுவதற்கு விரும்பினுர். விருந்தளிப்பவர் ஒரு கிளாசில் ஒயினை ஊற்றி அவரிடம் நீட்டினுர். இதற்கு முன்பு யாருமே சிந்தித்திராத வகையில் தன்னுடைய குதிரைப் பண்ணையை அமைத்திருப்பதைப் பற்றியும் மரீ தன்னை முழு மனதோடும் காதலிக்கிருள் (பணத்துக்காக மட்டும் அல்ல) என்பதையும் அவரிடம் சொல்ல வேண்டும் என்ற துடிப்பில் அவர் அந்த ஒயினைக் குடித்து முடிப்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தார்.

''என்னுடைய குதிரைப் பண்ணையில் ஒரு விஷயத்தைப் பற்றிக் குறிப்பிட வேண்டும்...'' என்று அவர் தொடங்கினுர். ஆனுல் ஸெர்பு ஹவ்ஸ்கோய் அவர் பேச்சில் குறுக்கிட்டார்.

''ஒரு காலத்தில் நான் வாழ்க்கையை நேசித்தேன், எப்படி வாழ வேண்டுமென்று எனக்குத் தெரிந்திருந்தது என்று நான் உண்மையிலேயே சொல்ல முடியும்'' என்ருர் அவர். ''குதிரைச் சவாரியைப் பற்றிப் பேசுகிருய், இதற்கு பதில் சொல்: உன்னுடைய வாழ்க்கையில் ஓட்டிய மிக வேகமான குதிரை ஏது?''

விருந்தளிப்பவர் தன்னுடைய குதிரைப் பண்ணையைப் பற்றிப் பேசக்கிடைத்த, சந்தர்ப்பத்தைப் பிடித்துக் கொள்ள விரும்பினுர். ஆனுல் அவர் பேசத் தொடங்கு முன்பே ஸெர்புஹவ்ஸ்கோய் மறுபடியும் குறுக்கிட்டார்.

''உன்னைப் போல குதிரைப் பண்ணை வைத்

திருப்பவர்கள் எல்லோருமே பிரபலமடைய வேண்டும் என்றுதான் விரும்புகிறீர்கள், வாழ்க்கையை அனுபவிக்க, சுகமாகப் பொழுது போக்க விரும்புவதில்லை. நான் ஒருபோதும் அப்படி இருந்ததில்லை. உன்னுடைய மேய்ச்சல் காரன் சவாரி செய்து கொண்டிருந்தானே அதே போன்ற கலப்பு நிற ஓட்டக் குதிரை ஒரு காலத்தில் என்னிடமிருந்தது என்று நான் உன்னிடம் இன்று கூறியது நினைவிருக்கிறதா? அது சரியான குதிரை. நீ நம்பக் கூட மாட்டாய். இது மிகவும் முன்னால், 1842ம் வருடத்தில் நடைபெற்றது. அப்பொழுது நான் மாஸ்கோவுக்கு வந்திருந்தேன். குதிரை வியாபாரியிடம் போகிறேன். கலப்பு நிறத்தில் ஒரு காயடிக்கப்பட்ட குதிரையைப் பார்க்கிறேன். நல்ல அம்சங்கள். விலை? ஆயிரம் ரூபிள்கள். எனக்கு அந்தக் குதிரையைப் பிடித்துவிட்டது, வாங்கினேன், வண்டியில் பூட்டி ஓட்டத் தொடங்கினேன். அதற்குச் சமமான ஒரு குதிரையை நீயோ, நானோ, அல்லது வேறு யாருமோ எந்தக் காலத்திலும் வைத்திருந்ததில்லை, வைத்திருக்கப் போவதுமில்லை. வேகத்திலோ, பலத்திலோ, அழகிலோ அதற்கு இணையே கிடையாது. நீ அப்பொழுது சிறு பையனாக இருந்திருப்பாய். அந்தக் குதிரையைப் பார்த்திருக்க முடியாது. ஆனால் நீ கேள்விப்பட்டிருக்கலாம். மாஸ்கோ முழுவதிலும் அந்தப் பேச்சுத்தான்.''

''ஆம். நான் அந்தக் குதிரையைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்று விருந்தளிப்பவர் விருப்பமில்லாமல் ஒத்துக் கொண்டார்.

''ஆனால் நான் உன்னிடம் சொல்ல விரும்பி யது...''

''உனக்குத் தெரியும். எந்தச் சான்றிதழும், பரம்பரை அல்லது சிபாரிசும் இல்லாமல் நான் சட்டென்று அந்தக் குதிரையை வாங்கினேன். வொயெய்கோவும் நானும் அந்தக் குதிரையின் குலப் பரம்பரையைக் கண்டு பிடித்தோம். அது முதலாம் லியுபேஸ்னியின் மகன் கஜக்கோல். அதன் தாவு அடி இவ்வளவு தூரம் இருக்கும். அது கலப்பு நிறமாக இருந்ததனால் ஹிரேனவோ குதிரைப் பண்ணைச் சொந்தக்காரர் அதைப் பண்ணையின் பொறுப்பாளரிடம் விற்றுவிட்டார். அவர் அதைக் காயடித்து ஒரு குதிரை வியாபாரியிடம் விற்றுவிட்டார். அந்த மாதிரிக் குதிரை எந்தக் காலத்திலும் இருந்ததில்லை, நண்பனே! அவை எவ்வளவு அருமையான நாட்கள்! ஆ! இளமைப் பருவம்! நான் இழந்து விட்ட இளமைப் பருவம்!'' என்று ஒரு ஜிப்சி பாடலைப் பாடியபடியே அவர் பெருமூச்சு விட்டார். குடிபோதை அவருக்கு அதிகரித்துவிட்டது. ''ஆம். அது மிகச் சிறந்த காலம். எனக்கு இருபத்தைந்து வயது, வருடத்துக்கு எண்பதாயிரம் வருமானம், என் தலையில் ஒரு முடி கூட நரைக்கவில்லை. அத்தனை பற்களும் இருந்தன. ஒவ்வொரு பல்லும் ஒரு முத்து. நான் எந்த முயற்சியில் ஈடுபட்டாலும்வெற்றியடைந்தேன். இப்பொழுது — எல்லாம் முடிந்துவிட்டது.''

''இப்பொழுது குதிரைகளுக்கு இருக்கும் வேகம் அந்தக் காலத்தில் அவைகளிடம்

இல்லே'' என்று விருந்தளிப்பவர் இடைவெளியைப் பயன்படுத்திக் கொண்டு பேசத் தொடங்கினர். ''ஒரு விஷயம் உனக்குச் சொல்கிறேன். என்னுடைய முதல் குதிரைகள் ஓடத் தொடங்கிய பொழுது...''

''உன்னுடைய குதிரைகளா? ஏன், அந்தக் காலத்தில் குதிரைகள் இதைக் காட்டிலும் வேகமாகத்தானே ஓடின.''

''இக் காலத்தைக் காட்டிலும் வேகமாகவா? எப்படிச் சொல்கிருய்?''

''ஆமாம். வேகமாகத்தான் ஓடின. ஒரு நாள் மாஸ்கோ குதிரைப் பந்தய மைதானத்துக்குக் கஜக்கோலே ஓட்டிக் கொண்டு போனேன். என்னுடைய குதிரைகளே ஓட்டப் பந்தயத்தில் நான் விட்டதில்லே. பந்தயக் குதிரைகளே எனக்கு ஒருபோதும் பிடிக்காது. என்னிடம் ஜெனரல், ஷொலே, முகம்மது என்று ஜாதிக் குதிரைகள்தான் இருந்தன. அந்தக் கலப்பு நிறக் குதிரையை அங்கே ஓட்டிக் கொண்டு போனேன். என்னிடம் இருந்த வண்டிக்காரனும் முதல் தரமானவன். அவன் மீது எனக்கு அதிகப் பிரியம். அவன் குடித்தே செத்துப் போனன். குதிரைப் பந்தய மைதானத்துக்குப் போனேன். 'ஸெர்புஹவ்ஸ்கோய்! எப்பொழுது பந்தயக் குதிரைகளே வளர்க்கப் போகிறீர்கள்?' என்று அவர்கள் என்னிடம் கேட்டார்கள். 'எனக்குப் பந்தயக் குதிரைகள் எதற்காக? உங்களுடைய அருமையான பந்தயக் குதிரைகளே எல்லாம் இந்தக் கலப்பு நிறக் குதிரை தோற்கடித்து விடும்'

என்று நான் கூறினேன். 'அது நடக்காது' என்று அவர்கள் கூறினார்கள். 'ஆயிரம் ரூபிள்கள் பந்தயம்' என்று நான் கூறினேன். நாங்கள் கை குலுக்கிக் கொண்டோம். பந்தயம் விட்டோம். என் குதிரை ஐந்து விநாடிகள் முன்னால் வந்து விட்டது. பந்தயப் பணம் ஆயிரம் ரூபிள்கள் எனக்குக் கிடைத்தது. ஆனால் அது ஒன்றும் பெரிதல்ல. ஒபி சமயத்தில் மூன்று ஜாதிக் குதிரைகள் பூட்டிய டிரோய்க்கா வண்டியில் நூறு வெர்ஸ்டாக்கள் தூரத்தை மூன்று மணி நேரத்தில் கடந்தேன். மாஸ்கோ முழுவதுமே அதைப் பற்றித்தான் பேசினார்கள்.''

ஸெர்புஹவ்ஸ்கோய் தொடர்ச்சியாகவும் திறமையோடும் புளுகிக் கொண்டிருந்த படியால் விருந்தளிப்பவரால் ஒரு வார்த்தை கூடக் குறுக்கே பேச முடியவில்லை. அவர் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு அவருக்கெதிரில் உட்கார்ந்திருந்தார். தனக்கும் தன் விருந்தினருக்கும் ஒயினை ஊற்றிக் கொடுப்பது தான் அவர் கவனத்தைச் செலுத்தக் கூடிய ஒரே வழியாக இருந்தது.

வெளிச்சம் வரத் தொடங்கியது. எனினும் அவர்கள் இன்னும் உட்கார்ந்திருந்தார்கள். விருந்தளிப்பவருக்குச் சொல்ல முடியாத அலுப்பு ஏற்பட்டது. அவர் எழுந்தார்.

''ஆமாம். இனித் தூங்க வேண்டியது தான்', என்று கூறிக் கொண்டு ஸெர்புஹவ்ஸ்கோய் எழுந்தார். அவரால் நிற்க முடியவில்லை. உப்பியிருந்த கன்னங்களைத் தேய்த்துவிட்டுக்

கொண்டு அவர் தன்னுடையஅறையை நோக்கித் தள்ளாடிய படியே நடந்தார்.

---

விருந்தளித்தவர் தன்னுடைய ஆசைநாயகியின் பக்கத்தில் படுத்திருந்தார்.

''ஒரே தொண தொணப்பு. அதிகமான குடி மயக்கம். வெறும் பொய்யாகச் சொல்லிக் கொண்டிருந்தான்.''

''அவன் என்னிடம் சரசத்துக்கு முயற்சித்தான்.''

''அவன் என்னிடம் கடன் கேட்பான் என்று நினைக்கிறேன்.''

ஸெர்புஹவ்ஸ்கோய் வாயினுல் காற்றை ஊதிக் கொண்டு எல்லா உடைகளையும் அணிந்த படியே படுக்கையின் மேல் படுத்திருந்தார்.

''நான் வெறும் பொய்களாகச் சொல்லிக் கொண்டிருந்தேன் என்று நினைக்கிறேன். அதனுலென்ன? நல்ல ஒயின். ஆனுல் அவன் ஒரு நல்ல பன்றி. வியாபாரியைப் போல. நானும் ஒரு பன்றி'' என்று தனக்குள் சொல்லிவிட்டு வெடிப்புச் சிரிப்புச் சிரித்தார். ''முதலில் நான் அவர்களை வைத்திருந்தேன். இப்பொழுது அவர்கள் என்னை வைத்துக் கொண்டிருக்கிருர்கள். அந்த வின்க்ளேர்ஷா பெண் என்னை வைத்துக் கொண்டிருக்கிருள்—நான் அவளிடமிருந்து பணம் வாங்கிக் கொள்கிறேன். இதுதான் சரி. அவனுக்கு இது வேண்டியதுதான். ஆனுல் நான் உடைகளைக் கழற்ற வேண்டும். இந்த பூட்சுகளைக் கழற்ற முடியவில்லை.''

''ஏ!'' என்று அவர் சத்தம் போட்டார். ஆனால் அவருடைய பணியாள் நெடு நேரத்துக்கு முன்பே தூங்கப் போய்விட்டான்.

அவர் எழுந்து உட்கார்ந்தார். தன்னுடைய மேல் கோட்டையும் உள்கோட்டையும் கழற்றினார். மிகவும் சிரமப்பட்டுக் காற்சட்டைகளைக் கழற்றினார். ஆனால் அவரால் பூட்சுகளைக் கழற்ற முடியவில்லை—அவருடைய மென்மையான தொந்தி குறுக்கே நின்றது. கடைசியில் எப்படியோ ஒரு பூட்சைக் கழற்றிவிட்டார். ஆனால் எவ்வளவு மூச்சுப் பிடித்தாலும், இழுத்தாலும் அடுத்த பூட்சைக் கழற்ற முடியவில்லை. எனவே அவர் பூட்சோடு படுக்கையில் பொத்தென்று விழுந்து குறட்டை விடத் தொடங்கினார். அந்த அறை முழுவதும் புகையிலை, ஒயின், அருவருப்பான முதுமையின் நெடி நிறைந்தது.

## அத்தியாயம் 12

அந்த இரவில் கஜக்கோல் எத்தனையோ பல விஷயங்களை நினைவு படுத்திக் கொண்டிருக்கலாம். ஆனால் வாஸ்கா அதன் கவனத்தை மாற்றிவிட்டான். அவன் அதன் மீது குதிரைத் துணியைப் போட்டு வேகமாகச் சவாரி செய்து கொண்டு போனான். இரவு முழுவதும் ஒரு உணவு விடுதிக்கு வெளியே ஒரு விவசாயியின் குதிரைக்குப் பக்கத்தில் அதைக் கட்டிப் போட்டிருந்தான். இரண்டு குதிரைகளும் ஒன்றையொன்று நக்கிக் கொண்டன. காலையில் வாஸ்

காவும் கஜக்கோலும் குதிரைப் பண்ணைக்குத் திரும்பினார்கள். கஜக்கோல் தன்னைச் சொரிந்து கொள்ளத் தொடங்கியது.

''எனக்கு ஏன் இப்படி அரிக்கிறது?'' என்று அது தனக்குள் சிந்தித்தது.

ஐந்து நாட்கள் கடந்தன. அவர்கள் கால் நடை மருத்துவரைக் கூப்பிட்டனுப்பினார்கள்.

''இதற்குச் சொரி பிடித்துவிட்டது'' என்று மருத்துவர் மகிழ்ச்சியோடு கூறினார். ''இதை ஜிப்சிகளிடம் விற்றுவிட அனுமதியுங்கள்.''

''எதற்காக? அதன் கழுத்தை வெட்டுங்கள் அல்லது உங்கள் விருப்பம் போல எதை வேண்டு மானாலும் செய்யுங்கள். ஆனால் இன்றைக்கே இதை ஒழித்துவிட வேண்டும்.''

காலைப் பொழுது தெளிவாகவும் அமைதி யாகவும் இருந்தது. குதிரைக் கூட்டம் மேய் வதற்குப் போயிருந்தது. கஜக்கோல் மட்டும் அங்கே இருந்தது. ஒல்லியான உடல், இருண்ட நிறம், அழுக்கு, கோட்டு முழுவதும் கறைகளைக் கொண்ட விசித்திரமான தோற்றமுடைய ஒரு மனிதன் அதற்குப் பக்கத்தில் வந்தான். அவன் குதிரைகளை வெட்டித் தோலை உரிப்பவன். அவன் கஜக்கோலை ஏறிட்டுக் கூடப் பார்க்காமல் கழுத்து வாரைப் பிடித்து அதை இழுத்துக் கொண்டு போனான். கஜக்கோல் திரும்பிப் பார்க்காமல் அமைதியாக—வழக்கம் போலக் கால்களை இழுத்துக் கொண்டு, பின் கால்கள் வைக்கோலில் சிக்கித் தடுமாறிக் கொண்டு— நடந்தது. கதவுகளைத் தாண்டியதும் அது கிணறு இருந்த திசையில் திரும்பியது. ஆனால் அவன்

அதைப் பின்னுல் பிடித்து இழுத்தான். ''என்ன பிரயோசனம்?'' என்று அவன் கூறினுன்.

குதிரை வெட்டுபவனும் அவனுக்குப் பின்னுல் நடந்துவந்து கொண்டிருந்த வாஸ்காவும் செங்கற் கொட்டகைக்குப் பின்னுலிருந்த கணவாய்க்கு அதைக் கொண்டு போனுர்கள். அது மிகவும் சாதாரணமான இடம். அங்கே அசாதாரணமான ஏதோ ஒன்றிருப்பதைப் போல அவர்கள் அங்கே நின்ருர்கள். அவன் குதிரையின் கழுத்துவாரை வாஸ்காவிடம் கொடுத்த பிறகு தன் கோட்டைக் கழற்றினுன். சட்டைக் கைகளை மேலே சுருட்டிக் கொண்டான். கத்தியையும் சாணைக் கல்லையும் எடுத்து, கத்தியின் ஓரத்தை சாணைக் கல்லில் தீட்ட ஆரம்பித்தான். அந்தக் காயடிக்கப்பட்ட குதிரை தோல்வாரைக் கடித்துக் கொண்டு நேரத்தைப் போக்கலாம் என்ற எண்ணத்தில் அதைத் தொடுவதற்கு எட்டிப் பார்த்தது. ஆனுல் அது வெகு தூரத்திலிருந்த படியால், அது பெருமூச்சு விட்டுக் கண்களை மூடிக் கொண்டது. அதன் உதடு கீழே தொங்கியது; குட்டையான, மஞ்சள் நிறப்பற்கள் வெளியே தெரிந்தன. கத்தியைத் தீட்டுகின்ற சத்தத்தைக் கேட்டபடியே அது அரைத்தூக்கம் போட ஆரம்பித்தது. அதற்குச் சங்கடத்தைக் கொடுத்த ஒரே விஷயம் ஒரு காலில் ஏற்பட்ட புண் வீங்கி அது வெட்டியிழுத்ததே. திடீரென்று யாரோ தன் தாடையைப் பிடித்துத் தூக்கி தன் தலையை வெடுக்கென்று மேலே உயர்த்துவதை அது உணர்ந்தது. அது கண்

களைத் திறந்தது. தனக்கு முன்னால் இரண்டு நாய்கள் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தது. ஒரு நாய் தோலுரிப்பவன் நின்ற திசையில் திரும்பிக் காற்றை மோப்பம் பிடித்துக் கொண் டிருந்தது. அடுத்தது உட்கார்ந்து கொண்டு அந்தக் காயடிக்கப்பட்ட குதிரையிடமிருந்து எதையோ எதிர்பார்ப்பதைப் போல அதை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது. அந்தக் காயடிக்கப்பட்ட குதிரை அவற்றைப் பார்த்து விட்டுத் தன்னைப் பிடித்துக் கொண்டிருந்த கையின்மேல் தன் கன்னத்தைத் தேய்க்கத் தொடங்கியது.

''அவர்கள் எனக்கு ஏதோ சிகிச்சை செய்யப் போகிறார்கள். செய்யட்டும்!'' என்று நினைத் தது.

அது நினைத்ததைப் போலவே அவர்கள் தன் னுடைய தொண்டையில் ஏதோ செய்வதை அது உணர்ந்தது. கத்தியால் வெட்டுகின்ற வலியை உணர்ந்தது. அது துடித்தது, கால்களை உதைத்தது பிறகு தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு அடுத்த படியாக என்ன நடக்கப் போகிறது என்று எதிர்பார்த்துக் காத்திருந் தது. அதன் கழுத்து, மார்பு நெடுகிலும் சூடான ஒரு திரவம் வழிந்தோடத் தொடங்கி யது. அது ஆழமாக மூச்சை உள்ளே இழுத்த படியால் அதன் விலாப்புறங்கள் பெரிதாக வீங்கிக் கொண்டன. அப்பொழுது அதற்கு மிக வும் சுகமாக இருந்தது. அதன் வாழ்க்கையின் மொத்தச் சுமையும் அதனிடமிருந்து கீழே விழுந்தது. அது கண்களை மூடிக் கொண்டது,

தன் தலையைக் கீழே தொங்கவிட்டது. யாரும் அதைத் தூக்கிப் பிடிக்கவில்லை. அதன் கழுத்து கீழே தொங்கியது, அதன் கால்கள் நடுங்கத் தொடங்கின. அதன் உடல் தள்ளாடியது. அதற்கு பயத்தைக் காட்டிலும் ஆச்சரிய உணர்ச்சியே அதிகமாக ஏற்பட்டது. எல்லாமே மிகவும் வேறு விதமாக இருந்தன. தன்னுடைய ஆச்சரியத்தில் அது முன்னே போக, மேலே குதிக்க முயற்சி செய்தது. ஆனால் அதன் கால் கள் பின்னிக் கொண்டன. அது ஒரு பக்கமாகக் கீழே விழத் தொடங்கியது. தன்னைச் சமாளிக்க முயற்சி செய்த பொழுது அது இடது பக்கத் தில் முன்னே விழுந்தது. அதன் மரணவஸ்தை முடியட்டும் என்று தோல் உரிப்பவன் காத்துக் கொண்டிருந்தான். அந்த நாய்களையும் தடுத் தான். பிறகு அதனருகில் சென்று ஒரு காலைப் பிடித்துத் தூக்கி அந்தக் குதிரையைப் புரட்டிப் போட்டான். தோலை உரிக்கும் பொழுது குதி ரையைப் பிடித்துக் கொள்ளுமாறு வாஸ்கா வைக் கேட்டுக் கொண்டான்.

''இளமைப் பருவத்தில் இது உயர்ந்த குதிரை'' என்றான் வாஸ்கா.

''அதன் உடலில் சதை சிறிது கூடுதலாக இருந்திருந்தால் இது அருமையான தோலாக இருக்கும்'' என்றான் தோல் உரிப்பவன்.

மாலை நேரத்தில் குதிரைகள் மலையிலிருந்து திரும்பி வந்தன. தரையில் சிகப்பாக ஏதோ ஒரு பொருள் கிடப்பதையும், சில நாய்கள் அங்கே சுறுசுறுப்பாக இருப்பதையும் காக்கை களும் பருந்துகளும் அந்த இடத்துக்கு மேலே

பறந்து கொண்டிருப்பதையும் இடது பக்கத்தில் வந்த குதிரைகள் பார்த்திருக்க முடியும். ஒரு நாய் அந்தப் பொருளைத் தன்னுடைய இரண்டு கைகளால் பிடித்துக் கொண்டு தன் பற்களால் அதைப் பிய்த்தது. நறநறவென்ற சத்தத்தோடு ஒரு பகுதியைத் துண்டிக்கின்ற வரை அது தலையை ஆட்டிக்கொண்டிருந்தது. பெண் குதிரை அமைதியாக நின்று தன் கழுத்தை நீட்டி, நெடுநேரம் வரை காற்றை மோப்பம் பிடித்தது. அதைப் புறப்படும்படி செய்வதற்கு மற்ற குதிரைகளால் அநேகமாக முடியவில்லை.

---

அதிகாலையில், பழைய காட்டுக்கு நடுவே ஓடிக் கொண்டிருந்த அந்தக் கணவாயின் அடர்த்தியான சிறு புதரில் சில ஓநாய்க் குட்டிகள் வேடிக்கையாக ஓடி விளையாடிக் கொண்டிருந்தன. அங்கே ஐந்து குட்டிகள் இருந்தன. அவற்றில் நான்கு அநேகமாக ஒரே அளவாக இருந்தன. ஒன்று சிறியது, அதன் தலை உடலைக் காட்டிலும் பெரியதாக இருந்தது. மெலிவாகவும் எலும்புகள் துருத்திக் கொண்டுமிருந்த ஓநாய்த்தாய் புதர்களிலிருந்து வெளியே வந்தது, தன்னுடைய வீங்கிப் போன வயிற்றையும் தரையைத் தொட்டுக் கொண்டிருந்த காம்புகளையும் இழுத்துக் கொண்டு வந்து அரை வட்டமாக இருந்த குட்டிகளுக்கு எதிரில் உட்கார்ந்தது. ஓநாய்க் குட்டிகள் அதற்குப் பக்கத்தில் போய் அரைவட்டமாக நின்றன. அது தன் கடைக் குட்டியிடம் சென்றது, தன்

முன்னங் கால்களை வளைத்தது, தலையைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டு வாயைப் பிளந்தது, வயிற்றை உருட்டிப் புரட்டிக் குலுக்கியது. ஒரு பெரிய குதிரை இறைச்சித் துண்டைக் கக்கியது. பெரிய குட்டிகள் அதை நோக்கிப் பாய்ந்துவந்தன; ஆனால் தாயார் அவற்றை விரட்டியடித்துவிட்டு அந்த இறைச்சி முழு வதையுமே கடைக்குட்டிக்குக் கொடுத்தது. அந்தச் சின்னக் குட்டி ஆத்திரமடைந்ததைப் போல உறுமியது, அந்த இறைச்சியைக் கை களுக்கிடையே வைத்துக் கொண்டு அதைக் கிழிக்கத் தொடங்கியது. அந்தத் தாயார் அதே முறையில் இரண்டாவது இறைச்சித் துண்டை, மூன்றாவது துண்டை... இப்படியே ஐந்து குட்டிகளுக்கும் உணவு கிடைக்கும் படியாகக் கக்கியது. அதற்குப் பிறகே அது அவற்றுக்குப் பக்கத்தில் படுத்துக் கொண்டு ஓய்வெடுத்தது.

ஒரு வார காலத்துக்குப் பிறகு அந்தச் செங் கற் கொட்டகைக்குப் பக்கத்தில் ஒரு பெரிய மண்டையோட்டையும் இரண்டு துடை எலும்புகளையும் தவிர வேறு எதுவும் மிஞ்ச வில்லை. மற்ற எல்லாமே மறைந்துவிட்டன. எலும்புகளைச் சேகரிக்கின்ற விவசாயி ஒருவன் மண்டையோட்டையும் துடை எலும்புகளை யும் எடுத்துக் கொண்டு போய்விட்டான். தன்னுடைய காரியங்களுக்காக அவற்றை நொறுக்கிப் பொடியாக்கிவிட்டான்.

---

இதற்கு மிகவும் பிந்திய காலத்தில் தான், சாப்பிடுவதும் குடிப்பதுமாக இருந்த ஸெர்பு

ஹவ்ஸ்கோயின் பிரேதம் பூமியில் புதைக்கப்பட்டது. அவருடைய தோல், தசை மற்றும் எலும்புகளினுல் யாருக்கும் பயனில்லே. அந்தப் பிரேதம் பூமியில் நடந்து கொண்டிருந்த காலத்தில் இருபது வருடங்கள் சுமையாக இருந்ததைப் போல அந்தப் பிரேதத்தை பூமியில் புதைப்பதும், அந்தக் கடமையைச் செய்ய வேண்டியவர்களுக்குப் பெருந்தொல்லேயாகவே இருந்தது. நெடுங்காலமாகவே அவரால் யாருக்கும் உபயோகமில்லே. அவர்கள் அவரை ஒரு தொந்தரவாக மட்டுமே கருதிஞர்கள். ஆனுல் அவருடைய வீங்கிப் போன, அழுகிக் கொண்டிருந்த உடலுக்கு அழகான உடையும் நல்ல பூட்சுகளும் அணிவித்து, நான்கு மூலேகளிலும் புதிய குஞ்சங்கள் கட்டப்பட்ட அழகான, சவப்பெட்டியில் அதை வைத்து இந்த சவப்பெட்டியை ஈயத்தால் செய்யப்பட்ட மற்ருெரு சவப்பெட்டிக்குள் வைத்து மாஸ்கோவுக்குக் கொண்டு போவது அவசியமென்று செத்துப் போனவர்களேப் புதைக்கின்ற செத்தவர்கள் கருதிஞர்கள். புது உடையும் பளபளப்பான பூட்சுகளும் அணிந்து கொண்டிருந்த அந்த அழுகிப் போன, புழுக்கள் நிறைந்த உடலே பூமியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் புதைக்க வேண்டும் என்பதற்காக அதற்கு முன்னுல் புதைக்கப்பட்ட மற்ற மனிதர்களுடைய எலும்புகள் தோண்டியெடுக்கப்பட்டன.

1885

# இவான் இலியீச்சின் மரணம்

## 1

நீதிமன்றத்தின் பெரிய கட்டிடத்தில் மெல்வீன்ஸ்கி குடும்ப வழக்கு நடைபெற்றுக் கொண்டிருந்தது. அந்த விசாரணையில் இடைவேளையின் போது நீதிமன்ற உறுப்பினர்கள் இவான் யெகோரவிச் ஷெபெக்கின் அலுவலகத்தில் கூடி அரசு வழக்குரைஞரோடு பேசிக்கொண்டிருந்தார்கள். பேச்சு கிராஸோவ் வழக்கைப் பற்றித் திரும்பியது. அந்த வழக்கு நீதிமன்றங்களின் அதிகார வரம்புக்கு உட்பட்டதென்பதை ஃபியோதர் வசீலியெவிச் சூடாக மறுத்துப் பேசினர். ஆனல் இவான் யெகோரவிச் ஒத்துக் கொள்ளவில்லை. தொடக்கத்திலிருந்தே இந்த விவாதத்தில் கலந்துகொள்ளாமலிருந்த பியோத்தர் இவானவிச் அப்பொழுது அங்கே தரப்பட்ட **வேதமஸ்தி** பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார்.

''கனவான்களே! இவான் இலியீச் மரணமடைந்து விட்டார்'' என்று அவர் கூறினர்.

''உண்மையாகவா!''

''இதோ, படித்துப் பாருங்கள்'' என்று ஃபியோதர் வசீலியெவிச்சிடம் அச்சு மை இன்னும் உலராதிருந்த பத்திரிகையை நீட்டியபடியே அவர் கூறினார்.

பத்திரிகையில் பின்வரும் செய்தி கறுப்புக் கட்டமிடப்பட்டு வெளியிடப் பட்டிருந்தது:
''என்னுடைய அன்பு மிக்க கணவரும் நீதிமன்ற உறுப்பினருமான இவான் இலியீச் கலவீன் 1882 பிப்ரவரி 4ந் தேதியன்று மரணமடைந்து விட்டார் என்பதை உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன். வியாழக் கிழமை ஒரு மணிக்கு இறுதிச் சடங்கு நடைபெறும்.

**பிரஸ்கோவியா பியோதரவ்னு கலவீனு.''**

இவான் இலியீச் அங்கே கூடியிருந்த கனவான்களின் சகாவாக இருந்தவர். அவர்கள் எல்லோரும் அவரை நேசித்தார்கள். அவர் பல வாரங்களாக நோய்வாய்ப்பட்டிருந்தார்; அவருடைய நோயைக் குணப்படுத்த முடியாது என்று சொல்லப்பட்டது. அவருடைய பதவிகாலியாக இருந்தது; ஆனுல் அவர் மரணமடைந்து விட்டால் அவருக்குப் பதிலாக அலெக்ஸேயிவ் நியமிக்கப்படலாம், அலெக்ஸேயிவின் இடத்துக்கு வின்னிக்கவ் அல்லது ஷ்தாபெல் வரலாம் என்று பேசிக்கொள்ளப்பட்டது. எனவே இவான் இலியீச்சின் மரணத்தைப் பற்றித் தெரிந்து கொண்டவுடன் இதன் விளைவாகத் தங்கள் அல்லது தங்களுடைய நண்பர்களின்

நிலைகளில் எத்தகைய மாற்றங்கள் மற்றும் பதவி உயர்வுகள் ஏற்படலாம் என்ற எண்ணம்தான் அந்த அலுவலகத்தில் கூடியிருந்த ஒவ்வொரு கனவானுடைய மனதிலும் முதலில் தோன்றியது.

''ஷ்தாபெல் அல்லது வின்னிக்கவ் இடத்துக்கு என்னை நியமிப்பார்கள் என்பது உறுதி'' என்று ஃபியோதர் வசீலியெவிச் நினைத்தார். ''அந்தப் பதவி எனக்குத் தரப்படுமென்று நெடுங்காலத்துக்கு முன்பே உறுதியளித்தார்கள். இந்தப் பதவி உயர்வினுல் எனக்கு எண்ணூறு ரூபிள் ஊதிய உயர்வும் அலுவலகச் செலவுகளுக்குத் தனியாக மானியத் தொகையும் கிடைக்கும்.''

''என் மைத்துனரைக் கலூகாவிலிருந்து மாற்றுவதற்கு மனுக்கொடுக்க வேண்டும்'' என்று பியோத்தர் இவானவிச் நினைத்தார். ''என் மனைவிக்கு மகிழ்ச்சி ஏற்படும். அவளுடைய குடும்பத்துக்கு நான் ஒன்றுமே செய்யவில்லை என்று அவள் இனிமேல் என்னைக் குற்றம் சாட்ட முடியாது.''

''அவர் நோயிலிருந்து ஒருபோதும் மீள மாட்டார் என்று எனக்கு உறுதியாகத் தெரியும். எவ்வளவு பரிதாபம்!'' என்று பியோத்தர் இவானவிச் பலமாகச் சொன்னுர்.

''அவருக்கு என்ன நோய்?''

''டாக்டர்களால் முடிவு செய்ய இயலவில்லை. அதாவது ஒவ்வொரு டாக்டரும் ஒவ்வொரு மாதிரியாக முடிவு செய்தார்கள். போன தடவை அவரைப் பார்த்த பொழுது குணமடைந்

திருப்பதாகத்தான் எனக்குத் தோன்றியது.''

''விடுமுறைக்குப் பிறகு நான் அங்கே போகவில்லை. போக வேண்டும் என்று தான் நினைத்தேன்.''

''அவர் பணவசதி உள்ளவரா?''

''அவர் மனைவியிடம் ஏதோ ஓரளவுக்கு இருந்தது. ஆனால் அதுவும் குறைவாகத் தான் இருக்கும் என்று நினைக்கிறேன்.''

''சரி. இப்பொழுது நாம் அங்கே துக்கம் கேட்கப் போகாமலிருக்க முடியாது. இருந்தாலும் அவர்கள் ரொம்பத் தள்ளி இருக்கிறார்கள்.''

''உங்கள் வீட்டிலிருந்தா? எல்லாமே உங்களுக்கு அதிக தூரம்தான்.''

''நான் ஆற்றின் மறு கரையில் இருப்பதை அவர் கடைசிவரை மன்னிக்கவே இல்லை'' என்று பியோத்தர் இவானவிச் ஷெபெக்கைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கூறினார். இதற்குப் பிறகு நகரத்தில் ஒவ்வொரு இடமும் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்று பேச்சு தொடர்ந்தது. பிறகு அவர்கள் நீதிமன்ற அறைக்குத் திரும்பிச் சென்றார்கள்.

அவருடைய மரணச் செய்தி சாத்தியமான மாற்றங்கள் அல்லது பதவி உயர்வுகளைப் பற்றி ஊகங்களை ஏற்படுத்தியதைத் தவிர, தங்களுக்கு மிகவும் நன்கு தெரிந்த ஒருவர் இறந்து விட்டார் என்ற உண்மை, நல்ல வேளை நான் இறந்துவிடவில்லை, நண்பர்தான் இறந்தார்

என்ற மகிழ்ச்சியை அவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் ஏற்படுத்தியது.

''என்ன வேடிக்கை! இறந்தது அவர்தான், நானல்ல'' என்ற எண்ணம் அல்லது உணர்ச்சி அவர்கள் ஒவ்வொருவரிடமும் ஏற்பட்டது. இவான் இலியீச்சுடன் மிகவும் நெருக்கமாக இருந்தவர்கள் அதாவது அவருடைய நண்பர்கள் என்று சொல்லப்பட்டவர்கள் அவருடைய இறுதிச் சடங்கில் கலந்து கொண்டு அதற்குப் பிறகு அவர் மனைவியிடம் துக்கம் விசாரிக்க வேண்டும் என்று மரபு தங்கள் மீது விதிக்கின்ற சோர்வு தரும் கடமையை இப்பொழுது நிறைவேற்ற வேண்டுமே என்று சிந்திக்காமலே தமக்குள் சொல்லிக் கொண்டார்கள்.

ஃபியோதர் வசீலியெவிச்சையும் பியோத்தர் இவானவிச்சையும் போல மற்றவர்கள் இவான் இலியீச்சுக்கு அவ்வளவு நெருக்கமான நண்பர்கள் அல்ல.

பியோத்தர் இவானவிச் அவரோடு சேர்ந்து படித்தவர்; மேலும் அவருக்கு ஓரளவு கடமைப்பட்டிருப்பதாகவும் நினைத்துக் கொண்டிருப்பவர்.

அன்று மாலை உணவின் போது இவான் இலியீச் மரணமடைந்த செய்தியை அவர் தன் மனைவியிடம் தெரிவித்தார். மேலும் அவளுடைய சகோதரனை இப்பொழுது தங்கள் நீதிமன்றத்துக்கு மாற்றிக் கொள்ளும் சந்தர்ப்பங்கள் ஏற்பட்டிருப்பதையும் தெரிவித்தார். அதன் பிறகு வழக்கம் போலப் படுத்து ஓய்வு கொள்வதற்குப் பதிலாக அவர் தன்னுடைய

உள் கோட்டை அணிந்து கொண்டு இவான் இலியீச்சின் வீட்டிற்குப் புறப்பட்டார்.

அவர் அந்த வீட்டை அடைந்தபொழுது வாயிலில் ஒரு கோச்சுவண்டியும் இரண்டு வண்டிகளும் நின்றுகொண்டிருந்தன. உள்ளே நுழைந்ததும் தொப்பிகளை மாட்டும் இடத்திற்குப் பக்கத்தில் ஒரு சவப்பெட்டி மூடி குஞ்சங்களாலும் நன்கு மெருகிடப்பட்ட தங்க முலாமிடப்பட்ட பின்னல்களாலும் அலங்கரிக்கப்பட்டு சுவரின் மீது சாத்தி வைக்கப்பட்டிருந்தது. கறுப்பு உடையணிந்த இரண்டு பெண்கள் தங்களுடைய மேல் கோட்டுகளைக் கழற்றிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரு பெண்ணை—இவான் இலியீச்சின் சகோதரியை—அவருக்குத் தெரியும். அடுத்த பெண் புதியவள். பியோத்தர் இவானவிச்சின் நண்பரான ஷ்வார்த்ஸ் அப்பொழுது படிக்கட்டில் இறங்கிக் கொண்டிருந்தார். ஆனுல் அவரைக் கண்டதும் நின்று ''இவான் இலியீச் திறமையில்லாமல் நடந்துகொண்டார், ஆனுல் நீங்களும் நானும் நிச்சயமாக அப்படிப்பட்டவர்களல்ல'' என்று அவரிடம் சொல்வதைப் போல கண்ணைச் சிமிட்டினுர்.

எப்பொழுதும் போல ஷ்வார்த்ஸிடம் ஆங்கில பாணியில் — அவருடைய கன்னங்களின் பக்கங்களில் வளர்ந்திருந்த மீசையிலும் உள் கோட் அணிந்த ஒல்லியான உருவத்திலும்— ஒருவகை நயமான பகட்டமைதி இருந்தது. அந்தப் பகட்டமைதி அவருடைய குணும்சத்தின் கேலிப்பண்பிலிருந்து அழுத்தமான வேறு

பாட்டைக் காட்டும்; இந்த சந்தர்ப்பத்தில் அது ஒரு பிரத்யேகமான சுவையைக் கொண்டிருந்தது. குறைந்த பட்சம் பியோத்தர் இவானவிச் அவ்வாறுதான் நினைத்தார்.

பெண்கள் முன்னால் போகட்டும் என்று பியோத்தர் இவானவிச் விலகிக் கொண்டார்; பிறகு மெதுவாக அவர்களைப் பின்பற்றிப் படிக்கட்டில் ஏறினார். ஷ்வார்த்ஸ் காலடிகளை நிறுத்திக் கொண்டு படிகளின் உச்சியில் அவருக்காகக் காத்திருந்தார். அது ஏன் என்று பியோத்தர் இவானவிச் ஊகம் செய்துகொண்டார். அன்று மாலையில் அவர்கள் சீட்டாடுவதற்கு எங்கே சந்திப்பது என்பதை அவர் முடிவு செய்ய விரும்பினார் என்பதில் சந்தேகமில்லை. பெண்கள் விதவையைப் பார்க்கச் சென்றார்கள்; ஷ்வார்த்ஸின் உதடுகள் கவலையினால் ஒரு கோடு போல நீண்டிருந்தன; கண்கள் வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டிருந்தன. இறந்தவருடைய உடல் எந்த அறையில் வைக்கப்பட்டிருக்கிறது என்பதை பியோத்தர் இவானவிச்சிடம் சுட்டிக் காட்டுவதற்காக அவர் தன்னுடைய புருவங்களை அசைத்தார்.

நான் என்ன செய்ய வேண்டும் என்று தெரியவில்லையே என்று ஆச்சரியப்படுபவரைப் போல (எப்பொழுதுமே ஒருவருக்கு அப்படி ஆச்சரியமேற்படுவது இயற்கை) பியோத்தர் இவானவிச் உள்ளே நுழைந்தார். இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் சிலுவைக் குறியிட்டுக்கொள்வதால் ஒருபோதும் தீமையில்லை என்பது அவருக்குத் தெரியும். குனிந்து வணக்கம் தெரிவிக்கலாமா

அல்லது கூடாதா என்பது அவருக்கு நிச்சய மில்லாதிருந்தது. எனவே இரண்டுக்குமிடையில் ஏதோ ஒன்றைச் செய்தார். அறைக்குள் நுழைந் ததும் சிலுவையிட்டுக் கொண்டு குனிந்து வணக்கம் செலுத்துவதாகக் கருதப் படக் கூடிய ஒரு சிறு அசைவைச் செய்தார். அதே சமயத்தில் தன்னால் முடிந்த அளவுக்கு அந்த அறையைச் சுற்றிப் பார்வையைச் சுழல விட்டார். இரண்டு இளைஞர்கள்—அவர்கள் மைத்துனர்களாக இருக்க வேண்டும், அவர் களில் ஒருவன் பள்ளிக்கூடத்தில் படிக்கும் பையன்—அறையை விட்டு வெளியே போகும் பொழுது சிலுவைக் குறியிட்டுக் கொண்டார் கள். ஒரு கிழவி அசையாமல் நின்று கொண் டிருந்தாள். ஒரு பெண் தன்னுடைய கண்புரு வங்களை விசித்திரமாக உயர்த்தி அவளிடம் ஏதோ ரகசியமாகச் சொல்லிக் கொண்டிருந் தாள். ஒரு போதகர்—அவர் உணர்ச்சியும் உறுதியும் நிறைந்தவர்—உள் கோட்டணிந்து உரத்த குரலில் எதையோ படித்துக்கொண் டிருந்தார். அந்தக் குரலில் மற்றவர்கள் மறுப்புக் கூற விட மாட்டேன் என்ற உறுதி தொனித்தது. கெராஸிம் என்ற வேலைக்காரன் சப்தமில்லாமல் பியோத்தர் இவானவிச்சைக் கடந்துசென்று தரையில் எதையோ தெளித் தான். அதைப் பார்த்ததும் அங்கே லேசாக நாற்றமடிப்பதை அவர் உடனே உணர்ந்தார். அவர் போன தடவை இவான் இலியீச்சைப் பார்க்க வந்தபொழுது அவருடைய அறையில் இந்த வேலைக்காரனைப் பார்த்தார். அப்பொ

ழுது நோயாளியைக் கவனித்துக் கொண்டு அவருடைய படுக்கைக்குப் பக்கத்தில் இருந்தான். இவான் இலியீச் அவனிடம் அதிகமான பிரியம் வைத்திருந்தார். பியோத்தர் இவானவிச் சவப்பெட்டிக்கும் மூலேயில் மேசை மீது வைக்கப்பட்டிருந்த தெய்வ வடிவங்களுக்கு எதிராக நின்று கொண்டிருந்த போதகருக்கும் இடையிலிருந்த திசையை நோக்கி சிலுவைக் குறியிட்டுக் கொண்டும் லேசாகக் குனிந்து கொண்டுமிருந்தார். இவர் அதிகமாகச் சிலுவைக் குறியிடுகிருரே என்று யாரும் நினைத்துவிடலாம் என்று தோன்றியபொழுது அவர் அதை நிறுத்திவிட்டு இறந்து போனவரை உற்றுப் பார்த்தார்.

அந்த உடல் அவர் இறந்து போன நிலேயில் சவப்பெட்டியின் பஞ்சுமெத்தையில் கைகால்கள் விறைப்பாகவும் தலே நிரந்தரமாகத் தலேயணே மேல் வளேவாகவும் வைக்கப்பட்டு எல்லாப் பிரேதங்களேயும் போலவே மிகவும் கனமாக இருப்பதைப் போல தோற்றமளித்தது. மஞ்சள் மெழுகு வர்த்தியைப் போன்ற அதன் நெற்றியும் குழிந்து போன நெற்றியின் ஓரத்தில் பிரகாசமான புள்ளிகளும் மேலுதட்டை அழுத்திக் கொண்டிருப்பதைப் போல நீண்டிருந்த மூக்கும் எல்லாப் பிரேதங்களேயும் போலவே இருந்தது. இவான் இலியீச் மிகவும் மாறிவிட்டார். பியோத்தர் இவானவிச் அவரைப் போன தடவை பார்த்த பொழுது இருந்ததைக் காட்டிலும் மிகவும் மெலிந்து போயிருந்தார். ஆனல் இறந்தவர்கள் எல்லோரை

யும் போலவே அவர் முகம் வாழ்க்கையில் இருந்ததைக் காட்டிலும் மிக அழகான— அல்லது அதிகமான முக்கியத்துவமுடைய— தோற்றத்தைப் பெற்றிருந்தது. நடக்க வேண்டியது நடந்துவிட்டது, அதிலும் சரியான முறையில் நடந்துவிட்டது என்று சொல்வதைப் போலத் தோற்றமளித்தது. மேலும் அந்தத் தோற்றம் வாழ்ந்து கொண்டிருப்பவர்களுக்கு ஒரு கண்டனத்தைப் போல, ஒரு நினைவு படுத்துதலைப் போலத் தோன்றியது. இந்த நினைவுறுத்தல் அனுவசியமானது என்று பியோத்தர் இவானவிச் கருதினார். மற்றவை எப்படியிருந்தாலும் அவருக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. அவர் சங்கடமாக இருப்பதைப் போல உணரத் தொடங்கினார். எனவே அவசரமாகச் சிலுவைக் குறியிட்டுக் கொண்டு— அது கண்ணியமான முறை என்று சொல்ல முடியாதென்பதை அவரே உணர்ந்தார்— வெளியே சென்றார். அடுத்த அறையில் ஷ்வார்த்ஸ் அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தார். அவர் கால்களை அகலமாக விரித்துக் கொண்டு நின்றார்; முதுகுக்குப் பின்னால் அவருடைய கைகள் உயரமான தொப்பியோடு விளையாடிக் கொண்டிருந்தன. அவருடைய குறும்புத்தனமான, வாட்ட சாட்டமான, அழகான உருவத்தை ஒரு தடவை பார்ப்பதே பியோத்தர் இவானவிச்சின் உற்சாகத்தைத் தூண்டப் போதுமானதாக இருந்தது. ஷ்வார்த்ஸ் இவை எல்லாவற்றையும் கடந்தவர், இந்த சோகமயமான சூழலுக்கு பலியாக

மறுத்துவிட்டார் என்பதை பியோத்தர் இவானவிச் உணர்ந்தார். ''நம்முடைய வழக்கமான சீட்டாட்டத்தை ரத்துச்செய்வதற்கு இவான் இலியீச்சின் இறுதிச் சடங்கு போதுமான காரணம் என்று எவ்விதத்திலும் கருத முடியாது, அதாவது இன்று மாலையில் நமது சந்திப்பில், புதிய சீட்டுக் கட்டைப் பிரிப்பதில்—அதே சமயத்தில் இவான் இலியீச்சின் வேலைக்காரன் சவப்பெட்டியைச் சுற்றி நான்கு மெழுகுவர்த்தி ஏற்றிக் கொண்டிருப்பான் என்ற போதிலும்—எதுவும் குறுக்கிட முடியாது. பொதுவாக இன்றைய மாலைப் பொழுதை நாம் உல்லாசமாக அனுபவிப்பதை இந்த சம்பவம் தடை செய்வதாக நினைக்க வேண்டிய அவசியமில்லை'' என்று சொல்வதைப் போல அவருடைய மொத்தத் தோற்றமும் இருந்தது. பியோத்தர் இவானவிச் அந்த அறையைக் கடந்து சென்ற பொழுது ஷ்வார்த்ஸ் இவை எல்லாவற்றையும் அவருடைய காதுக்குள் உண்மையாகவே முணுமுணுத்தார். ஆனால் பியோத்தர் இவானவிச்சுக்கு அன்று மாலையில் சீட்டாடுகின்ற பாக்கியம் கிடையாது. பிரஸ் கோவியா ஃபியோதரவ்னு குட்டையான, பருமனான பெண். அவளுடைய தோள்களைக் காட்டிலும் அடிப் பகுதியில் தான் அவள் அதிகப் பருமனாக இருந்தாள். இத்தனைக்கும் இதற்கு எதிரிடையான விளைவு ஏற்பட வேண்டும் என்று அவள் எவ்வளவோ முயற்சி செய்ததுண்டு. அவள் முற்றிலும் கறுப்பு உடை அணிந்து தலைக்கு மேலே பின்னல் துணியைப் போர்த்தி

சவப்பெட்டிக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த பெண்களிடம் காணப்பட்ட அதே மாதிரி விசித்திரமான முறையில் புருவங்களை உயர்த்திக் கொண்டு தன்னுடைய அறையிலிருந்து வெளியே வந்தாள். அவளைத் தொடர்ந்து வந்த மற்ற பெண்களிடம் உடல் வைக்கப்பட்டிருந்த அறைக் கதவைச் சுட்டிக் காட்டிவிட்டு ''பிரார்த்தனை தொடங்கப் போகிறது. உள்ளே வாருங்கள்'' என்று அவள் சொன்னாள்.

ஷ்வார்த்ஸ் ஏதோ ஒரு விதமாகக் குனிந்தார்; அவளுடைய அழைப்பை ஏற்றுக்கொண்டதாகவோ அல்லது மறுப்பதாகவோ காட்டிக் கொள்ளாமல் நின்றார். பிரஸ்கோவிய ஃபியோதரவ்னு பியோத்தர் இவானவிச்சைப் பார்த்ததும் பெருமூச்சு விட்டபடியே நேரடியாக அவரிடம் வந்தாள். ''நீங்கள் இவான் இலியீச்சின் உண்மையான நண்பர் என்று எனக்குத் தெரியும்...'' என்று அவர் கையைப் பிடித்துக் கொண்டு கூறினாள். அவர் அதற்குத் தகுந்த முறையில் பதிலளிப்பார் என்று எதிர்பார்த்தபடியே அவரைப் பார்த்தாள். உள்ளே போன பொழுது சிலுவைக் குறியிட்டுக் கொள்ள வேண்டும் என்று பியோத்தர் இவானவிச்சுக்கு எப்படித் தெரிந்திருந்ததோ அதைப் போல அவள் கையைப் பிடித்து அழுத்திப் பெருமூச்சு விட்டுக் கொண்டு ''நாங்கள் உதவியாக இருப்போம்...'' என்று சொல்ல வேண்டுமென்பதும் அவருக்குத் தெரியும். அவர் அப்படியே நடந்துகொண்டார். அதன் பிறகு எதிர்பார்த்த விளைவு ஏற்பட்டிருப்பதை

உணர்ந்தார். அவர் மன நெகிழ்ச்சியடைந்தார், அவளும் அப்படியே உணர்ச்சிவசப் பட்டாள்.

''அது தொடங்குவதற்கு முன்பு இங்கே வாருங்கள். நான் உங்களோடு பேச விரும்புகிறேன்'' என்று விதவை கூறினுள். ''உங்கள் கையை நீட்டுங்கள்.''

பியோத்தர் இவானவிச் அவள் கையைப் பிடித்துக் கொண்டார். இருவரும் ஷ்வார்த்ஸைக் கடந்து உள் அறைகளுக்குள் போகும் பொழுது அவர் அனுதாபப்படுவது போல கண்ணைச் சிமிட்டினுர்.

''சீட்டாட்டம் தொலைந்தது! நாங்கள் வேறு யாரையாவது உங்களுக்குப் பதிலாகச் சேர்த்துக் கொண்டால் வருத்தப்பட மாட்டீர்களே. விடுதலையான பிறகு வந்தீர்களானுல் ஐந்தாவது நபராகச் சேர்ந்து கொள்ளலாம்'' என்று அவர் சொல்வது போலத் தோன்றியது.

பியோத்தர் இவானவிச் மேலும் ஆழமாகவும் துயரத்தோடும் பெருமூச்சு விட்டார். பிரஸ்கோவியா ஃபியோதரவ்ன அவர் விரல்களை நன்றியோடு அழுத்தினுள். அவளுடைய வரவேற்பு அறையில் இளஞ்சிவப்பு நிறத் திரை தொங்கிக் கொண்டிருந்தது. மங்கலான விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவர்கள் அந்த அறைக்குள் நுழைந்து மேசைக்கு முன்னுல் உட்கார்ந்தார்கள். அவள் சோபாவில் அமர்ந்தாள். பியோத்தர் இவானவிச் ஒரு தணிவான மெத்தைத் திண்டின் மீது உட்கார்ந்த பொழுது அதிலிருந்த உடைந்து

போன விசைச் சுருள் கிறீச்சிட்டது. அதில் உட்கார வேண்டாம் என்று பிரஸ்கோவியா ஃபியோதரவ்ன அவரை எச்சரிக்க விரும்பினள், ஆனல் அந்த நிலைமைக்கு அது பொருத்தமல்ல என்று கருதிப் பேசாமலிருந்தாள். இவான் இலியீச் அந்த வரவேற்பு அறையை அலங் கரித்த சமயத்தில் பச்சை இலைகளைக் கொண்ட இளஞ்சிவப்பு நிறத் திரையைப் பற்றித் தன்னைக் கலந்து கொண்டதை பியோத்தர் இவானவிச் திண்டின் மேல் உட்கார்ந்த பொழுதுநினைத்துக் கொண்டார். சோபாவில் உட்காருவதற்காக மேசையைக் கடந்து சென்ற பொழுது (அந்த அறையில் மரச் சாமான்களும் பழங்காலத்துக் கலைப் பொருள் களும் நிறைந்திருந்தன) விதவை அணிந்து கொண்டிருந்த கறுப்பு சால்வை ஏதோ ஒரு சிற்பத்தில் சிக்கிக் கொண்டது. பியோத்தர் இவானவிச் அதை விடுவிப்பதற் காகப் பாதி எழுந்தார், அவர் எழுந்த பொ ழுது விடுவிக்கப்பட்ட விசைச் சுருள் அவ ரை லேசாக முன்னல் தள்ளியது. விதவை தானகவே சால்வையை விடுவித்துக் கொண் டாள், பியோத்தர் இவானவிச் மறுபடியும் ஆசனத்தின் மீது உட்கார்ந்து கீழ்ப்படிய மறுக்கும் விசைச்சுருளை அடக்கினர். ஆனல் அந்த விதவை தன்னுடைய சால்வையை முழுவதுமாக விடுவித்துக் கொள்ளவில்லை. பியோத்தர் இவானவிச் மறுபடியும் பாதி எழுந் தார். மறுபடியும் அந்த திண்டு மேலே எம்பிய தோடு சிறு சத்தம் கூடக் கேட்டது. அது

முடிந்த பிறகு அவள் தன்னுடைய வெள்ளைக் கைக்குட்டையை எடுத்துக் கொண்டு அழுவதற்குத் தொடங்கினுள். ஆனுல் சால்வைச் சம்பவத்தாலும் திண்டுடன் நடத்திய போராட்டத்திலும் பியோத்தர் இவானவிச்சின் உணர்ச்சிகள் உறைந்து போய்விட்டன. அவர் சும்மா உட்கார்ந்து முகத்தைச் சுளித்துக் கொண்டிருந்தார். இவான் இலியீச்சின் வேலைக்காரனை ஸகலோவ் உள்ளே வந்த பொழுது தான் அந்த நிலைமையிலிருந்த இறுக்கம், கடுமை குறைந்தது. பிரஸ்கோவியா ஃபியோதரவ்ன கல்லறையில் தேர்ந்தெடுத்திருக்கும் இடத்துக்கு இருநூறு ரூபிள்கள் கட்ட வேண்டும் என்று அவன் தெரிவித்தான். அவள் தன்னுடைய அழுகையை நிறுத்திக் கொண்டு பியோத்தர் இவானவிச்சிடம் என் தியாகத்தைப் பார்த்தீர்களா என்று சொல்வதைப் போலப் பார்த்தாள், எனக்கு எவ்வளவு துன்பம் என்று பிரெஞ்சு மொழியில் கூறினுள். பியோத்தர் இவானவிச் தன்னுடைய அனுதாபத்தைக் காட்டும் வகையில் பெருமூச்சு விட்டார்.

''நீங்கள் விரும்பினுல் புகை பிடிக்கலாமே'' என்று பெருந்தன்மையோடு ஆனுல் வேதனையான குரலில் சொல்லிவிட்டு புதைகுழியின் விலையைப் பற்றி ஸகலோவிடம் விவாதிப்பதற்காகத் திரும்பினுள். பியோத்தர் இவானவிச் சிகரெட்டைப் பற்றவைத்தார். கல்லறையில் வெவ்வேறு இடங்களுக்கும் உள்ள விலைகளைப் பற்றி அவள் நுணுக்கமாக விசாரித்து மதிநுட்பத்தோடு நல்ல இடத்தைத் தேர்ந்தெடுப்

பதை அவர் கவனித்தார். இந்த விஷயம் முடிந்ததும் பாடற்குழுவை ஏற்பாடு செய்யும் பிரச்சினையைப் பற்றி விவாதித்தாள். பிறகு ஸகலோவ் வெளியே சென்முன்.

''எல்லாவற்றையும் நானே கவனித்துக் கொள்கிறேன்'' என்று அவள் மேசையின் மீதிருந்த படத்தொகுப்புக்களை ஒதுக்கி வைத்தபடியே பியோத்தர் இவானவிச்சிடம் கூறினுள். சிகரெட் சாம்பல் மேசையில் விழுந்துவிடக் கூடிய ஆபத்தைப் பார்த்து உடனே வேகமாக ஒரு சாம்பற்குப்பியை எடுத்து அவரிடம் கொடுத்தாள். ''என்னுடைய துயரத்தின் காரணமாக இந்த வேலைகளைக் கவனிக்க முடியவில்லை என்று சொன்னுல் அது வெறும் பாசாங்காகத் தான் இருக்கும். அதற்கு மாருக, அவருக்காக ஏதாவது செய்வதுதான் எனக்கு... ஆறுதலளிக்காவிட்டாலும், கவலையை மறக்க உதவுகிறது.'' அவள் அழப்போவதைப் போல தன் கைக்குட்டையை வெளியே எடுத்தாள். ஆனுல் திடீரென்று சிரமப்பட்டுத் தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டாள். தலையை லேசாக ஆட்டிவிட்டு நிதானமாகப் பேசினுள்.

''ஒரு முக்கிய விஷயமாக உங்களைக் கலந்தாலோசிக்க வேண்டும்.''

பியோத்தர் இவானவிச் குனிந்தார். விசைச் சுருள் கலகம் செய்யப் போகும் புதிய அறிகுறிகளைக் காட்டிய போதிலும் அவர் அதை அனுமதிக்கவில்லை.

''கடைசி நாட்களில் அவர் மிகவும் துன்பப் பட்டார்.''

''அப்படியா?'' என்று பியோத்தர் இவானவிச் கேட்டார்.

''அதிகமான துன்பம்! அவர் இடை விடாமல்—நிமிடங்கள் அல்ல, மணிக்கணக்காக—கூக்குரலிட்டார்; மூன்று நாட்கள் மூச்சு விடக்கூட நிறுத்தாமல் கூக்குரலிட்டார். அப்பப்பா! சொல்லவே முடியாது. அதை எப்படித் தாங்கிக் கொண்டேன் என்று எனக்கே தெரியாது. மூன்று அறைகளுக்கு அப்பால்கூட அந்தச் சத்தம் கேட்கும். ஓ! நான் எவ்வளவு கஷ்டப்பட்டேன் என்பது உங்களுக்குத் தெரியுமானல்!''

''அவர் மரணமடையும் வரை சுய உணர்வோடிருந்தார் என்று சொல்கிறீர்களா?'' என்று பியோத்தர் இவானவிச் கேட்டார்.

''ஆமாம்'' என்று அவள் முணுமுணுத்தாள். ''கடைசி வினடி வரை. அவர் மரணமடைவதற்குப் பதினைந்து நிமிடங்களுக்கு முன்பு தான் எங்களிடம் விடைபெற்றுக் கொண்டு வலோத்யாவை அறையிலிருந்து கூட்டிக் கொண்டு போகுமாறு சொன்னர்.''

தானும் அந்த விதவையும் போலித்தனமாகப் பேசிக் கொண்டிருக்கிறோம் என்ற கசப்பான உணர்ச்சி பியோத்தர் இவானவிச்சுக்கு ஏற்பட்ட போதிலும், தனக்கு மிக நன்ருகத் தெரிந்த ஒருவருடைய மரண வேதனையைப் பற்றிய சிந்தனை அவரை ஆழமாக உலுக்கியது. அவர் இவான் இலியீச்சை முதலில் உற்சாகமான, கவலையில்லாத பள்ளிச் சிறுவனுகவும் பிறகு வளர்ச்சியடைந்த மனிதராகவும் தன்

னுடைய சகாவாகவும் அறிந்திருந்தார். அவர் மறுபடியும் அந்த நெற்றியை, மேலுதட்டை அழுத்திக் கொண்டிருந்த மூக்கை நினைத்துப் பார்த்தார். தன்னைப் பற்றி அவருக்கு பய மேற்பட்டது.

''மூன்று நாட்களாகச் சொல்ல முடியாத துன்பம், மரணம். எந்த நேரத்திலும் அதே நிலைமை எனக்கும் ஏற்படலாம்'' என்று அவர் நினைத்தார். அச்சம் ஒரு குறுகிய விஞடி நேரம் அவரைப் பற்றிக் கொண்டது. ஆனுல் உடனே மரணம் தனக்கு ஏற்படவில்லை, இவான் இலி யீச்சுக்குத்தான் ஏற்பட்டது, அப்படிப்பட்ட ஒன்று தனக்கு ஏற்படாது, ஏற்பட முடியாது என்ற வழக்கமான சிந்தனை அவருடைய உத விக்கு வந்தது. அது ஏன் என்பதை அவரால் சொல்ல முடியவில்லை. இத்தகைய சிந்தனை கள் நமக்கு மனச் சோர்வுக்குத்தான் வழி வகுக் கும்; ஷ்வார்த்ஸின் முகம் மிகவும் உணர்ச்சி யோடு எடுத்துக் காட்டியதைப் போல, அதை நாம் தவிர்க்க வேண்டும். இவ்வாறு சிந்திக்கத் தொடங்கிய பிறகு பியோத்தர் இவானவிச் மறுபடியும் அமைதியடைந்தார். இவான் இலியீச்சின் மரணத்தைப் பற்றிய விவரங்களை —மரணம் ஒரு போதும் தனக்கு வராது, அது இவான் இலியீச்சுக்கு மட்டுமே ஏற்படக் கூடிய விபத்து என்பதைப் போல — விசாரித்த பொழுது உண்மையான அக்கறை கூட அவ ரிடம் ஏற்பட்டிருந்தது.

இவான் இலியீச் எப்படி உண்மையிலே சகிக்க முடியாத உடல்வலியால் கஷ்டப்பட்டார்

(இவான் இலியீச் அனுபவித்த பெருந்துன்பம் பிரஸ்கோவியா ஃபியோதரவ்னுவின் நரம்புகளுக்கு ஏற்படுத்திய விளைவின் மூலமாகவே அவற்றைப் பற்றி பியோத்தர் இவானவிச் தெரிந்து கொண்டார்) என்பதைப் பற்றிய நுணுக்கமான வர்ணனைக்குப் பிறகே அந்த விதவையால் மற்ற விவகாரங்களைப் பற்றிப் பேச முடிந்தது.

''ஆ! பியோத்தர் இவானவிச்! எனக்கு எவ்வளவு துன்பம்! கொடுந்துன்பம்! கொடுமை!'' என்று சொல்லிவிட்டு அவள் மறுபடியும் கண்ணீர் வடித்தாள்.

பியோத்தர் இவானவிச் மறுபடியும் பெருமூச்சுவிட்ட பிறகு அவள் மூக்கைத் துடைத்துக் கொள்வதற்காகக் காத்திருந்தார். அவள் மூக்கைத் துடைத்தபிறகு, ''நாங்கள் உதவியாக இருப்போம்...'' என்முர். அவள் மறுபடியும் பேசத் தொடங்கினுள். அவரைக் கலந்தாலோசிக்க விரும்பிய விஷயத்துக்கு வந்தாள். தன் கணவர் மரணமடைந்ததை ஒட்டி அரசாங்கத்திடமிருந்து நிதியுதவி பெறுவது எப்படி என்று கேட்டாள். அவள் ஓய்வூதியத்தைப் பற்றிக் கேட்பதாகத் தோன்றியது, ஆனுல் தனக்குக் கூடத் தெரியாத விஷயங்கள் அவளுக்குத் தெரிந்திருந்தன, அவற்றையும் கடைசி விவரம் உள்படத் தெரிந்துவைத்திருந்தாள் என்பதை அவர் கண்டார். இந்த மரணத்தின் காரணமாக அவளுக்கு எவ்வளவு பணம் கிடைக்கக் கூடும் என்பது அவளுக்குத் துல்லியமாகத் தெரியும்; அதை அதிகரிப்பதற்கு ஏதா

வது வழிகள் இருக்கின்றனவா என்று அறிய விரும்பினுள். பியோத்தர் இவானவிச் இதை எப்படிச் செய்யலாம் என்று சிந்திக்க முயற்சி செய்தார். ஆனுல் சில நிமிட நேரம் அதைப் பற்றிச் சிந்தித்த பிறகு அரசாங்கத்தின் கருமித்தனத்தைக் கண்டித்துத் தன் அனுதாபத்தை எடுத்துக் காட்டிவிட்டு, இதற்கு மேல் கிடைப்பது சாத்தியமில்லை என்று தோன்றுவதாகக் கூறினுர். அவள் இதைக் கேட்டதும் ஆழமான பெருமூச்சு விட்டாள், இந்தப் பேட்டியை எப்படி முடிவுக்குக் கொண்டு வர முடியும் என்று அவள் சிந்திப்பதைப் போலத் தோன்றியது. இதை ஊகித்தவுடன் அவர் சிகரெட்டை அணைத்தார், எழுந்து நின்று அவள் கையைக் குலுக்கிவிட்டு வெளியே ஹாலுக்குள் சென்றுர்.

உணவருந்தும் அறையில்—இவான் இலியீச் ஏலத்தில் வாங்கித் தன்னுடைய பழம்பொருள் தொகுப்பில் மிகவும் மகிழ்ச்சியோடு சேர்த்துக் கொண்ட கடிகாரம் அந்த அறையில் தொங்க விடப்பட்டிருந்தது—பியோத்தர் இவானவிச் போதகரையும் சவ அடக்கத்தில் கலந்துகொள்வதற்காக வந்திருந்த சில நண்பர்களையும் பார்த்தார். இவான் இலியீச்சின் அழகான மகளையும் அங்கே பார்த்தார். அவள் எல்லா உடைகளையும் கறுப்பு நிறத்தில் அணிந்திருந்தாள், அதனுல் அவளுடைய ஒல்லியான இடை முன்னெப்போதையும் காட்டிலும் ஒல்லியாகத் தோன்றியது. அவள் கவலையாக, உறுதியாக அநேகமாகக் கோபமாகப் பார்த்துக் கொண்

டிருந்தாள். பியோத்தர் இவானவிச்சை எதற்கோ குறை சொல்வதைப் போல அவள் அவரைக் குனிந்து வணங்கினாள். அவளுக்குப் பின்னால் ஒரு இளைஞர் அவளைப் போலவே அதிருப்தியோடு நின்றுகொண்டிருந்தார். பியோத்தர் இவானவிச்சுக்கு அவரைத் தெரியும். அவர் ஒரு இளம் பணக்காரர், விசாரணை நீதிபதி. அவர் அந்த இளம் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளப் போவதாகப் பேசிக்கொண்டார்கள். பியோத்தர் இவானவிச் சோகத்தோடு குனிந்து வணங்கிவிட்டு உடல் வைக்கப்பட்டிருந்த அறைக்குத் திரும்பியபொழுது இவான் இலியீச்சினுடைய மகன் — உடற்பயிற்சிக் கலை மாணவன், தன் தகப்பனாரைப் போலவே தோற்றமுடையவன் — படிகளில் இறங்கி வந்தான். சட்ட மாணவராகப் பியோத்தர் இவானவிச் அறிந்திருந்த இளம் இவான் இலியீச்சைப் போலவே அவன் இருந்தான். அவனுடைய கண்கள் அழுது சிவந்திருந்தன, உடல் தூய்மையற்ற பதிமூன்று அல்லது பதினான்கு வயதான சிறுவர்கள் பெரும்பாலோருடைய கண்களைப் போல இருந்தன. பியோத்தர் இவானவிச்சைப் பார்த்தவுடன் அவன் இங்கிதமில்லாமல் முகத்தைச் சுளித்தான். பியோத்தர் இவானவிச் அவனை நோக்கித் தலையை அசைத்து விட்டு உடல் வைக்கப்பட்டிருந்த அறைக்குள் சென்றார். பிரார்த்தனை தொடங்கியது. மெழுகுவர்த்தி விளக்குகள், ஓலங்கள், தூபப் புகை, கண்ணீர், கேவல்கள். பியோத்தர் இவானவிச் புருவங்களைச் சுழித்துக்

கொண்டு தனக்கு முன்ஞலிருந்தவர்களின் கால்களை உற்றுப் பார்த்தவாறு நின்ருர். அவர் ஒரு தடவைகூட மரணமடைந்தவரின் உடலைப் பார்க்கவில்லை. மனதில் சோர்வுண்டாக்கும் எண்ணங்களை ஏற்படுத்தக் கூடிய வேறு எதையுமே அவர் பார்க்கவில்லை. அந்த அறையிலிருந்து வெளியே வந்த முதல் நபர்களில் அவரும் ஒருவராக இருந்தார். ஹாலில் யாருமே இல்லை. வேலைக்காரன் கெராஸிம் படிகளில் வேகமாக இறங்கி ஓடிஞன். அங்கே மலை போலக் குவிந்து கிடந்த கோட்டுகளுக்குள் தன் வலுவான கைகளை நுழைத்து பியோத்தர் இவானவிச்சினுடைய கோட்டைத் தேடிஞன். அதைக் கண்டு பிடித்து அவர் அதை அணிந்து கொள்ள உதவி செய்தான்.

''என்ன கெராஸிம்! நீ வருத்தப்படுகிருயா?'' என்று பியோத்தர் இவானவிச் ஏதாவது பேசவேண்டுமென்பதற்காகக் கேட்டார்.

''ஐயா! எல்லாம் கடவுள் சித்தம். எல்லோருமே என்றைக்காவது ஒரு நாள் இறக்கப் போகிருேம்'' என்று சொல்லிக் கொண்டு விவசாயிக்கு உரித்தான வரிசையான, உறுதியான, வெண்மையான பற்களைக் காட்டியபடியே முறுவலித்தான். பிறகு எல்லா வேலையையும் தானே செய்துகொண்டிருக்கும் நபரைப் போல கதவைத் திறந்தான், வண்டிக்காரனைக் கூப்பிட்டான், பியோத்தர் இவானவிச் வண்டியில் ஏறுவதற்கு உதவி செய்தான், வேறு ஏதோ வேலையைச் செய்வதற்கு அவசரமாக ஓடுபவனைப் போல படிகளில் துள்ளிக் குதித்து ஓடிஞன்.

தூபப்புகை, பிரேதம் மற்றும் கார்பாலிக் அமிலத்தின் நாற்றத்துக்குப் பிறகு சுத்தமான காற்றைச் சுவாசிப்பது பியோத்தர் இவானவிச்சுக்கு விசேஷமான மகிழ்ச்சியைக் கொடுத்தது.

''எங்கே போக வேண்டும்?'' என்று வண்டிக்காரன் கேட்டான்.

''இன்னும் நேரம் இருக்கிறது. ஃபியோதர் வசீலியெவிச்சைப் பார்க்க வேண்டும். அங்கே போ!''

அவர் புறப்பட்டார். அவர்கள் அப்பொழுதுதான் முதல் ஆட்டத்தை முடித்திருந்தார்கள். எனவே அடுத்த ஆட்டத்தில் ஐந்தாவது நபராகச் சேர்ந்து கொள்வது சுலபமாக இருந்தது.

## 2

இவான் இலியீச்சின் வாழ்க்கை எளிமையானது, சாதாரணமானது, மிகவும் பயங்கரமானது.

நீதித்துறைக் கவுன்சில் உறுப்பினரான இவான் இலியீச் தன்னுடைய நாற்பத்தைந்தாவது வயதில் மரணமடைந்தார். சில நபர்கள் பல பதவிகளை வகித்துவிட்டுக் கடைசியில் உண்மையிலேயே முக்கியமான எந்தப் பொறுப்புக்குமே தகுதியில்லாதவர்கள் என்று தெளிவான பிறகும் ஏதாவது ஒரு பதவிக்கு நியமிக்கப்படுவார்கள். அவர்களுடைய நீண்ட பணிக் காலத்தாலும் உயர்ந்த அந்தஸ்தாலும் அவர்களைப் பதவியிலிருந்து வெளியேற்ற முடி

யாதிருக்கும். எனவே அவர்கள் கற்பனையில் மட்டுமே உள்ள பதவிகளையும், ஆறாயிரம் முதல் பத்தாயிரம் வரை சிறிதும் கற்பனை என்று சொல்ல முடியாத ஊதியங்களையும் பெற்றுக் கொண்டு பழுத்த கிழட்டுப் பருவம் வரை வாழ்வதுண்டு. அவருடைய தகப்பனார் இந்த அதிகார வாழ்க்கையைப் பின்பற்றி பல மந்திரி சபைகளிலும் இலாகாக்களிலும் பதவி வகித்தார்.

இவர்தான் பிரிவு கவுன்சிலர் இலியா யெஃபீமவிச் கலவீன். பல விதமான உபரி ஸ்தாபனங்களின் உபரி உறுப்பினர்.

அவருக்கு மூன்று ஆண் மக்கள் உண்டு. இவான் இலியீச் இரண்டாவது மகன். மூத்தவனுடைய அதிகார வாழ்க்கை தகப்பனாரைப் போலவே இருந்தது; மந்திரி சபை இலாகா மட்டும்தான் வேறு. இனி மேல் சீக்கிரத்தில் சோம்பேறித்தனத்துக்காகவே ஊதியம் கொடுக்கப்படுகின்ற பணிக் கட்டத்தை அடைந்து விடுவார். மூன்றாவது மகன் உருப்படவில்லை. பல பதவிகளில் கெட்ட பெயரெடுத்த பிறகு தற்பொழுது இரயில்வே இலாகாவில் வேலை செய்து கொண்டிருக்கிறார். அவருடைய தகப்பனாரும் சகோதரர்களும்—குறிப்பாக அவர்களுடைய மனைவிமார்கள்—அவரைச் சந்திப்பதைத் தவிர்த்தார்கள்; அப்படி ஒருவர் இருப்பதைக் கூட இயன்றவரையிலும் மறந்துவிட்டார்கள். அவர்களுடைய சகோதரி கிரேஃப் பிரபுவுக்குத் திருமணம் செய்துவைக்கப்பட்டிருந்தாள். அவர் தன் மாமனாரைப் போன்ற

அதே ரகத்தைச் சேர்ந்த பீட்டர்ஸ்பர்க் அதிகாரியாக இருந்தார். இவான் இலியீச் le phenix de la famille* என்று அவர்கள் அடிக்கடி மகிழ்ச்சியோடு சொல்வதுண்டு. அவர் தன்னுடைய மூத்த சகோதரரைப் போல உணர்ச்சியற்றவரல்ல, நுணுக்கமான ஒழுங்குமுறை உடையவரல்ல. இளைய சகோதரரைப் போல விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாதவரல்ல. அவர் இருவருக்கும் இடைத்தரமானவர் — புத்திசாலி, சுறுசுறுப்பானவர், கவர்ச்சி நிரம்பியவர். அவரும் அவருடைய இளைய சகோதரரும் சட்டப் பள்ளியில் படித்தவர்கள். இளைய சகோதரர் படிப்பை முடிக்கவில்லை. ஏனென்றால் அவர் ஐந்தாவது வருடம் படிக்கும் பொழுது பள்ளியிலிருந்து வெளியேற்றப்பட்டார். இவான் இலியீச் சிறப்பான முறையில் படிப்பை முடித்தார். பிற்கால வாழ்க்கையில் அவரிடம் காணப்பட்ட அத்தனை குணங்களும் சட்ட மாணவராக இருந்த காலத்திலேயே அவரிடம் இருந்தன. அவர் திறமையுள்ளவராக, உற்சாகமானவராக, மற்றவர்களோடு சுமுகமாகப் பழகக் கூடியவராக, இனிய சுபாவம் உடையவராக, தன்னுடைய கடமை என்று அவர் கருதிய எல்லாவற்றையும் நிறைவேற்றுவதில் கண்டிப்பானவராக இருந்தார்; உயர்ந்த பதவிகளில் இருந்தவர்கள் உத்தரவிட்ட எல்லாவற்றையும் நிறைவேற்றுவதை

---

* குடும்பத்துக்குப் பெருமையளிப்பவர் **(பிரெஞ்சு.)**

அவர் தன்னுடைய கடமையாகக் கருதினர். குழந்தைப் பருவத்திலோ அல்லது வளர்ச்சியடைந்த பிறகோ அவர் அடிவருடியாக இருக்கவில்லை, ஆனல் இளமைப் பருவத்தில் தொடக்கத்திலிருந்தே விளக்கின் ஒளி வண்டுகளை இழுப்பதைப் போல அவர் தனக்கு மேலே இருப்பவர்களை நோக்கி ஈர்க்கப்பட்டார். அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் கருத்துக்களையும் அவர் பின்பற்றினர், அவர்களோடு நட்புறவுகளை வளர்த்துக் கொண்டார். குழந்தைப் பருவத்திலும் இளமையிலும் அவரிடமிருந்த விருப்பார்வங்கள் சுவடு கூட இல்லாமல் மறைந்துவிட்டன. அவர் ஒரு காலத்தில் பகட்டான வாழ்க்கையிலும் சிற்றின்பத்திலும் ஈடுபாடு கொண்டிருந்தார். மாணவ வாழ்க்கையின் கடைசி நாட்களின் போது மிதவாதக் கருத்துக்களோடு சல்லாபித்தார். ஆனல் எல்லாமே அவருடைய இயற்கை அறிவு வகுத்துக் கொடுத்த கவனமான எல்லைகளுக்குள்ளேயே நடைபெற்றன.

மாணவ வாழ்க்கையின் போது அவர்—அந்த சமயத்தில்—அருவருப்பானவை என்று கருதிய செயல்களில் ஈடுபட்டதுண்டு. அதன் காரணமாக அவர் தன்னைப் பற்றியே வெறுப்படைந்தார். ஆனல் பிற்காலத்தில் உயர்ந்த பதவிகளில் உள்ள மனிதர்கள் எத்தகைய உறுத்தல்களும் இல்லாமல் அதே காரியங்களைச் செய்வதைப் பார்த்த பிறகு அவர் அவைகளை மறந்துவிட்டார். அவை சரியல்ல என்று கருதினரே தவிர தன்னுடைய பாவச் செயல்களைப்

பற்றிய நினைவுகளால் அவர் துன்புறுத்தப்பட வில்லை.

இவான் இலியீச் சட்டக் கல்வியை முடித்ததும் உடை மற்றும் இதரவைகளுக்காகத் தகப்பனார் அனுப்பிய பணத்தைப் பெற்றுக் கொண்டார். உடனே ஷார்மரில் விசேஷமான உடைகளைத் தைத்துக் கொண்டார், கோட்டின் மேல் respice finem* என்ற வாசகம் எழுதப்பட்ட பதக்கத்தை அணிந்து கொண்டார், சட்டக் கல்லூரி முதல்வரிடம் விடைபெற்றுக் கொண்டு தனோனில் நண்பர்களோடு ஆடம்பரமாக விருந்து சாப்பிட்டார்; பிறகு நாகரிகமான புதுப் பைகள், சூட்டுகள், துணிகள், முகச் சவர மற்றும் அலங்காரப் பொருட்கள்—இவை அனைத்துமே முதல் தரமான கடைகளில் முன்னரே உத்தரவு கொடுத்து வாங்கப் பட்டிருந்தன — சகிதம் ஒரு மாகாண கவர்னருடைய விசேஷ கமிஷன்களின் காரியதரிசியாகத் தன்னுடைய தகப்பனார் ஏற்பாடு செய்திருந்த பதவியில் சேருவதற்காகப் புறப்பட்டார்.

மாணவப் பருவத்தில் இவான் இலியீச்சினுடைய வாழ்க்கை எவ்வளவு சுலபமானதாகவும் மகிழ்ச்சி நிரம்பியதாகவும் இருந்ததோ அப்படியே அந்த மாகாண நகரத்திலும் அமைத்துக் கொண்டார். அவர் உழைத்தார், தன்னுடைய பதவி முன்னேற்றத்தைக் கவனித்துக் கொண்டார், அதே சமயத்தில் ஆனந்த

* இலட்சியத்தை அடையட்டும் (இலத்தீன்).

மான, நயமான பொழுதுபோக்குகளிலும் பங் கெடுத்துக் கொண்டார். கவர்னருடைய ஆணையை நிறைவேற்றுவதற்காக அவர் எப் பொழுதாவது நாட்டுப்புறப் பகுதிகளுக்குப் போவார். அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் தனக்குக் கீழே இருப்பவர்களிடமும் தனக்கு மேலே இருப்பவர்களிடமும் பழகும் நேரங் களில் அவர் தன்னுடைய கௌரவத்தைக் காத்துக் கொண்டார். தன்னிடம் ஒப்படைக்கப் பட்ட பொறுப்புகளை (இவை பெரும்பாலும் திருச் சபையை ஏற்க மறுப்பவர்களைப் பற் றியே இருந்தன) லஞ்சம் வாங்கிக் கொண்டு விட்டுக் கொடுக்காமல் நடந்து கொண்டார். இதைப் பற்றி அவர் பெருமைப்பட்டதும் நியாயமானதே.

தன் பதவிக் கடமைகளை நிறைவேற்றும் பொழுது அவர்—இளைஞராகவும் வேடிக்கை களை விரும்புபவராகவும் இருந்தபோதிலும்— அதிகமான ஒதுக்கத்தோடும் அதிகார தோரணை யோடும் — கண்டிப்பாகக் கூட — நடந்து கொண்டார். ஆனால் உயர்ந்த வட்டாரங் களில் பழகும்பொழுது அவர் கலகலப்பாக நடந்து கொண்டு வேடிக்கையாகப் பேசினார்; கவர்னரும் கவர்னருடைய மனைவியும்—அவர் களுடைய வீட்டுக்கு அவர் அடிக்கடி போவார் — அவரை bon enfant* என்று சொல்வ துண்டு.

அந்த மாகாணத்தில் ஒரு சீமாட்டியோடு

---

* இனிமையாகப் பழகுபவர் (பிரெஞ்சு).

அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது—அவள் அந்த நவநாகரிகமான இளம் வழக்குரைஞரிடம் மையல் கொண்டாள்; பெண்களின் தொப்பிகளைத் தயாரிக்கும் ஒரு பெண்ணோடும் நெருங்கிப் பழகினார். அந்த நகரத்துக்கு வருகின்ற அதிகாரிகளோடு மதுபான விருந்துகளில் கலந்துகொள்வார். அவை முடிந்த பிறகு சற்றுத் தொலைவிலுள்ள தெருவில் ஒரு வீட்டுக்குப் போய்வருவதும் உண்டு. கவர்னருக்கும் கவர்னருடைய மனைவிக்கும் சில சேவைகளையும் செய்திருக்கிறார். ஆனால் இவை எல்லாவற்றையும் அவர் மிகவும் உயர்வான நாகரிகத்தோடு செய்தபடியால் அவற்றை விவரிப்பதற்கு ஒரு மோசமான சொல்லை அநேகமாகப் பயன்படுத்த முடியாது. Il faut que jeunesse se passe* என்ற பிரெஞ்சு வாக்கியத்தைச் சொல்லி அவற்றை மன்னித்துவிட முடியும். அதை சுத்தமான கைகளோடு, சுத்தமான உடையோடு, பிரெஞ்சு மொழிச் சொற்களைக் கொண்டு செய்தார். இன்னும் மிக முக்கியமானது என்னவென்றால் உயர்ந்த சமூகத்தில், அதாவது உயர்வான பதவிகளில் இருப்பவர்களின் அங்கீகாரத்தோடு, அதைச் செய்தார்.

இவான இலியீச் இந்தப் பதவியில் ஐந்து வருடங்கள் இருந்தார். அதன் முடிவில் சட்டத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. புதிய நீதி

---

* இளைஞர்களுக்குரிய செயல்கள் தாமாகவே மறைந்துவிடும். ஆனால் அவற்றைச் செய்யாமல் தவிர்க்க முடியாது (பிரெஞ்சு).

மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. அவற்றுக்குப் புதிய நபர்கள் தேவைப் பட்டார்கள்.

அந்தப் புதிய நபர்களில் இவான் இலியீச்சும் ஒருவர்.

அவருக்கு விசாரணை நீதிபதி பதவி கிடைத்தது. அவர் வேறொரு குபேர்னியாவுக்குப் போக வேண்டும். பழகியவர்களை விட்டுப் பிரிந்து சென்று புதியவர்களைப் பழகிக் கொள்ள வேண்டும். எனினும் அவர் அந்தப் பதவியை ஏற்றுக் கொண்டார். இவான் இலியீச்சுக்குப் பிரிவுபசாரவிருந்து நடைபெற்றது. அவருடைய நண்பர்கள் அவரோடு சேர்ந்து உட்கார்ந்து புகைப்படம் எடுத்துக் கொண்டார்கள். வெள்ளியினால் தயாரிக்கப்பட்ட சிகரெட் பெட்டியை அவருக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார்கள். அவர் புதிய பதவியில் சேரப் புறப்பட்டார்.

விசாரணை நீதிபதி என்ற முறையில் அவர் முன் போலவே comme il faut* ஆகவும் நற்குடிப் பயிற்சியுடையவராகவும் இருந்தார், கவர்னருக்காக விசேஷப் பொறுப்புகளை நிறைவேற்றியபொழுது தன்னுடைய பொதுக் கடமைகளையும் தனிப்பட்ட கடமைகளையும் பிரித்துப் பார்ப்பதிலும் பொதுவான மரியாதையைத் தூண்டுவதிலும் எவ்வளவு அதிகமான திறமையைக் காட்டினாரோ அதைப் போலவே இப்பொழுதும் நடந்து கொண்டார். முந்திய பதவியைக் காட்டிலும் நீதிபதி பதவி

---

* இருக்க வேண்டிய முறைப்படியும்(பிரெஞ்சு).

அதிகமான அளவுக்குச் சுவாரசியமாகவும் ஆனந்தமாகவும் இருந்தது. முந்திய பதவியின் போது ஷார்மரால் தைக்கப்பட்ட கச்சிதமான உடையை அலங்காரமாக அணிந்து கொண்டு காத்திருக்கும் அறையில் கவலையோடு உட்கார்ந்திருக்கும் கட்சிக்காரர்களையும் எழுத்தர்களையும் ஒரே எட்டில் கடந்து, அவர்கள் பொறுமையோடு பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது கவர்னருடைய அலுவலகத்துக்குள் சென்று அவரோடு தேநீர் அருந்தி சிகரெட் புகைப்பது திருப்தியாக இருந்தது என்பது உண்மையே. ஆனால் வெகு சிலரே அவருக்குக் கீழ் நேரடியாக வேலைசெய்து கொண்டிருந்தார்கள் (மாவட்ட போலீஸ் அதிகாரிகளும் விசேஷ வேலையாக கிராமப் பகுதிகளுக்குச் சென்றபொழுது அவர் சந்தித்த திருச் சபையை ஏற்க மறுத்தவர்களும் தான்). அத்தகைய நபர்களை நாகரிகப் பண்போடு நடத்துவது, அநேகமாகத் தோழமையான முறையில் விஷயங்களை விவாதிப்பது, அவர்களை நசுக்குவதற்கு அவரிடம் அதிகாரம் இருந்தபோதிலும் உண்மையாகவே நட்புறவோடு எத்தகைய சம்பிரதாயமும் இல்லாமல் தங்களிடம் நடந்து கொண்டார் என்ற உணர்ச்சியை அவர்களிடம் ஏற்படுத்துவது ஆகியவற்றை மற்றவற்றைக் காட்டிலும் சிறப்பாகச் செய்தார். ஆனால் அப்படிப்பட்டவர்கள் மிகவும் குறைந்த எண்ணிக்கையில்தான் இருந்தார்கள். ஆனால் இப்பொழுது விசாரணை நீதிபதி என்ற முறையில் எல்லோரும், விதிவிலக்கில்லாமல் எல்லோருமே—

மிகவும் முக்கியமானவர்களும் சுய திருப்தி அடைந்தவர்களும் உள்பட — தன்னுடைய அதிகாரத்துக்கு உட்பட்டவர்கள் தான் என்று அவர் கருதினர். அரசாங்க முத்திரையைக் கொண்ட ஒரு தாளில் அவர் சில வார்த்தைகளை எழுதினுல் போதும். மிகவும் முக்கியமானவர்களும் சுய திருப்தி அடைந்தவர்களும் கூட தனக்கு முன்னுல் சாட்சிகளாக —அல்லது கைதிகளாகக் கூட—கொண்டு வரப் படுவார்கள். இவான் இலியீச் அவர்களை நோக்கி ''உட்காருங்கள்'' என்று சொல்லா விட்டால் அவர்கள் நின்று கொண்டுதான் அவருடைய கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டும். இவான் இலியீச் ஒருபோதும் தன்னுடைய அதிகாரத்தை அத்து மீறிப் பயன்படுத்தவில்லை. அதற்கு மாருக அவர் அதைக் கனிவோடு உபயோகிக்க முயற்சி செய்தார். ஆனுல் இந்த அதிகாரத்தைப் பற்றிய உணர்வும் கனிவோடு நடந்துகொள்ளத் தனக்கிருந்த உரிமையும் இந்தப் புதிய பதவியில் அவருக்கு முக்கியமாக அக்கறையையும் கவர்ச்சியையும் ஏற்படுத்தியது. விசாரணை நீதிபதி என்ற முறையில் தனக்கு நேரடியான சம்பந்தமில்லாத எல்லா சந்தர்ப்பங்களையும். அகற்றிவிடுவது, மிகச் சிக்கலான வழக்குகளிலும் கூட எழுத்து மூலம் சாட்சியமளிக்கின்ற முறைகளை — இவை வெளிப்புற அம்சங்களை மட்டுமே பதிவு செய்தன, அவருடைய சொந்த அபிப்பிராயத்தை முற்றிலும் அகற்றின என்ருலும், மற்ற எல்லாவற்றையும் காட்டிலும் சம்பிரதாயமான

எல்லா முறைகளையும் பின்பற்றின—தயாரிப்பது முதலிய கலையில் இவான் இலியீச் வெகு சீக்கிரத்தில் வல்லவரானார். அந்த வேலை புதிதாக ஏற்படுத்தப்பட்டது; 1864ல் நீதிமன்ற நடைமுறையில் ஏற்படுத்தப்பட்ட சீர்திருத்தங்களை முதலில் செய்முறையில் கையாண்டவர்களில் அவரும் ஒருவர்.

விசாரணை நீதிபதியாக அந்தப் புதிய நகரத்துக்கு வந்தவுடன் இவான் இலியீச் புதிய தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டார், புதிய நண்பர்களோடு பழகினார். நடத்தையில் புதிய வழியைப் பின்பற்றி, புதிய தோரணையை மேற்கொண்டார். இந்தத் தடவை அவர் நகரத்தில் மிகவும் சிறந்த சட்டத்துறை வட்டாரங்களிலிருந்தும் பணக்காரப் பிரபுக்களிடமிருந்தும் தன்னுடைய நண்பர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு ஸ்தல அதிகாரிகளிடமிருந்து கௌரவமாகத் தனித்து நின்றார். மேலும் நிதானமான மிதவாதம் மற்றும் சமூக உணர்ச்சி பாணியில் பேசினார், அரசாங்கத்தை லேசாகக் குறை சொல்லவும் தன்னை அனுமதித்துக் கொண்டார். எப்பொழுதும் போலவே தன்னுடைய உடைகளைப் பற்றி அதிகமாக அக்கறை எடுத்துக் கொண்டாலும் முகச் சவரம் செய்வதை நிறுத்திவிட்டார், தாடியை விருப்பம் போல வளரவிட்டார்.

இந்தப் புதிய நகரத்தில் இவான் இலியீச்சினுடைய வாழ்க்கை பழைய நகரத்தைப் போலவே மகிழ்ச்சியோடிருந்தது. கவர்னருக்கு விரோதமாக இருந்த கோஷ்டி அவரிடம் மிக

வும் நட்போடு பழகினுர்கள். அவர்கள் நட்பு மிகவும் சுவாரசியமாகவும் இருந்தது. அவருடைய வருமானம் முன்னைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. அவர் ''விஸ்ட்'' விளையாடக் கற்றுக் கொண்ட பிறகு புதிய பொழுது போக்கும் அவருக்கு ஏற்பட்டது. மொத்தத்தில் அவர் சுமுகமான முறையில் சீட்டாடினுர், வேகமாகவும் நுட்பமாகவும் முடிவுகளைச் செய்தார், அநேகமாக எப்பொழுதுமே அவர் வெற்றியடைந்தார்.

இந்த நகரத்தில் இரண்டு வருட காலம் வசித்தபிறகு இவான் இலியீச் தன்னுடைய எதிர்கால மனைவியைச் சந்தித்தார். அவர் பழகிய வட்டாரங்களில் பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞ மிஹேல் மிகப் பிரகாசமான, அறிவுமிக்க, பேரழகுடைய, கவர்ச்சிகரமான இளம் பெண்ணுக இருந்தாள். விசாரணை நீதிபதி என்ற முறையில் அவருக்கு ஏற்பட்ட சோர்வைப் போக்கிய விளையாட்டுகள் மற்றும் பொழுது போக்குகளோடு இப்பொழுது இவான் இலியீச் பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞவுடன் லேசான சல்லாபத்தையும் சேர்த்துக் கொண்டார்.

விசேஷ கமிஷன்களின் காரியதரிசி பதவி வகித்தபொழுது இவான் இலியீச் வழக்கமாக நடனமாடுவார். விசாரணை நீதிபதி பதவியில் அவர் இப்பொழுது விதிவிலக்காகவே நடனமாடினுர். புதிய சட்ட முறையை நிறைவேற்றுபவராகவும் ஐந்தாவது தகுதி நிலையில் உள்ள வழக்குரைஞராக இருந்தாலும் நடனத்திலும்

கூட அவர் சராசரி தகுதிக்கும் உயர்ந்தவர் என்று எடுத்துக் காட்டுவதற்காகவே அவர் நடனமாடினார். ஆகவே எப்பொழுதாவது ஒரு மாலை நேரத்தின் இறுதியில் அவர் பிரஸ்கோவியா ஃபியோதரவ்னாவுடன் நடனமாடினார். அநேகமாக இத்தகைய நடனங்களின் போது தான் அவர் அவளை வென்றார். அவள் அவரைக் காதலித்தாள். இவான் இலியீச்சுக்குத் திருமணம் செய்துகொள்வதென்ற தெளிவான, திட்டவட்டமான எண்ணம் கிடையாது. ஆனால் அந்தப் பெண் அவரைக் காதலித்தபொழுது அந்தப் பிரச்சினை தோன்றியது. ''நான் ஏன் திருமணம் செய்து கொள்ளக் கூடாது?'' என்று அவர் தன்னைக் கேட்டுக் கொண்டார்.

பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா நல்ல குடும்பத்தில் பிறந்தவள், அழகி. அவளிடம் சிறிதளவு பணமும் இருந்தது. இவான் இலியீச் இன்னும் நல்ல மனைவியாகப் பார்த்துத் திருமணம் செய்துகொள்ளலாம். ஆனால் இந்த இடம் அப்படி மோசமல்ல. அவருக்கு மாத ஊதியம் இருந்தது. அவளுக்கும் வருமானம் இருந்தது—தன்னுடைய ஊதியத்தின் அளவுக்கு அந்த வருமானம் இருக்குமென்று அவர் எதிர்பார்த்தார். மைத்துனர்களும் தகுதி உடையவர்கள். அவள் இனிமையான, அழகான, நன்கு வளர்க்கப்பட்ட இளம் பெண். இவான் இலியீச் அவளைக் காதலித்ததனாலும் வாழ்க்கையைப் பற்றி அவர் கொண்டிருந்த எல்லாக் கருத்துக்களோடும் அவள் உடன்பட்டதனாலும் அவளைத் திருமணம் செய்துகொண்

டார் என்று சொல்வது அவருடைய கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் அந்தத் திருமணத்தை அங்கீகரித்ததனுல் அவர் அவளேத் திருமணம் செய்து கொண்டார் என்று சொல்வதைப் போலவே தவருகும். இந்த இரண்டு காரணங்களுக்காகவும் அவர் அவளேத் திருமணம் செய்து கொண்டார். அந்தக் குறிப்பிட்ட பெண்ணே மனேவியாக்கிக் கொண்டால் அவருக்கு மகிழ்ச்சி ஏற்படுவதோடு உயர்ந்த அந்தஸ்துடையவர்கள் அவருக்குப் பொருத்தமானது என்று கருதிய செயலேச் செய்ததாகவும் இருக்கும்.

இவான் இலியீச் திருமணம் செய்து கொண்டார்.

திருமணச் சடங்குகளும் திருமண வாழ்க்கையின் முதற் கட்டமும்—அதன் தாம்பத்திய சல்லாபங்களும் புதிய நாற்காலி, சோபாவும் புதிய உணவுத் தட்டுகளும் புதிய துணிமணிகளும்—மனேவி முதல் தடவை தாய்மைப் பேறடைகின்ற வரை மிகவும் நன்ருகக் கழிந்தது. சமூகத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஆனந்தமான, சுலபமான, பொழுது போக்குகின்ற, நன்கு ஒழுங்கமைக்கப்பட்ட வாழ்க்கைக்குத் திருமணம் எவ்வகையிலும் இடையூறு அல்ல, அது அந்த வாழ்க்கையைத் தீவிரப்படுத்தவும் உதவும் என்று இவான் இலியீச் நினேக்கத் தொடங்கும் அளவுக்கு மிக நன்ருகக் கழிந்தது. ஆனுல் மனேவி கருவுற்ற முதல் மாதங்களின் போது அவர் புதுமையான, எதிர்பாராத, அருவருப்பான, அலங்கோலமான, சகித்துக் கொள்ள முடியாத ஏதோ ஒன்றைச் சந்தித்

தார். அந்த ஏதோ ஒன்றை அவரால் முன்னறிந்து கூற இயலாது, அதை ஒழிப்பதற்கும் அவரால் ஒன்றும் செய்ய முடியாது.

அவள் ஒரு காரணமும் இல்லாமல்—de gaité de coeur* என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டதைப் போல—அவர்களுடைய வாழ்க்கையின் இனிமையையும் அமைதியையும் கெடுக்கத் தொடங்கினுள். காரணமில்லாமல் அவரைப் பற்றிப் பொருமைப் படவும் அவர் தன் மீது அதிகமான அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தவும் தொடங்கினுள். அவர் என்ன செய்தாலும் அதில் தப்புக் கண்டு பிடிக்க, அநாகரிகமான, அருவருப்பான சம்பவங்களை ஏற்படுத்தத் தொடங்கினுள்.

இந்த அதிருப்திகரமான நிலைமையிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்வதற்குத் தனக்கு ஆரம்பத்தில் வெற்றியைத் தேடிக் கொடுத்த அதே நன்கு பயிற்றுவிக்கப்பட்ட, அலட்சியமான போக்கைப் பின்பற்றினுல் போதும் என்று இவான் இலியீச் முதலில் நினைத்தார். அவர் தன் மனைவியிடம் அவ்வப்பொழுது ஏற்படும் கோபாவேசத்தைப் புறக்கணித்துவிட்டு வழக்கம் போல இனிமையாக, சுலபமாக வாழ்க்கை நடத்த விரும்பினுர். தன்னுடைய நண்பர்களை சீட்டாட வீட்டுக்கு வருமாறு அழைத்தார். பொழுது போக்கு மன்றத்துக்கும் நண்பர்களுடைய வீடுகளுக்கும் சென்ருர். ஆனுல் ஒரு சந்தர்ப்பத்தில் அவருடைய மனைவி மிகவும்

* வேண்டுமென்றே (பிரெஞ்சு).

மோசமான வார்த்தைகளை உபயோகித்து அவரைத் திட்டினுள், அதன் பிறகு அவள் சொன்னதைச் செய்யாத ஒவ்வொரு தடவையும் அவரை மிகக் கீழ்த்தரமாகக் கடிந்து கொண்டாள், தன்னுடைய உத்தரவுக்கு அவர் கீழ்ப்படிய வேண்டும், அதாவது அவளைப் போலவே அவரும் சோர்வுடன் வீட்டில் உட்கார்ந்திருக்கும் வரை அவரைவிட்டு வைப்பதில்லை என்று அவள் உறுதியாக முடிவு செய்துவிட்டாள் என்பது தெளிவாகும். அதைக் கண்டு இவான் இலியீச் திகைப்படைந்தார். திருமண வாழ்க்கை — குறைந்தபட்சம் இந்த மனைவியோ— வாழ்க்கையின் இன்பங்களையும் சுதந்திரங்களையும் அதிகப்படுத்த வேண்டும் என்பது அவசியமல்ல, ஆனுல் அதற்கு மாருக, அவற்றுக்கு ஆபத்தேற்படுத்தும், எனவே இத்தகைய ஆபத்துகளுக்கு எதிராகத் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பதை அவர் உணர்ந்தார். இதைச் செய்வதற்கு ஒரு வழியைக் கண்டுபிடிக்க முயற்சி செய்தார், இவான் இலியீச். பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞ அவருடைய வேலை ஒன்றை மட்டுமே மதித்தபடியால் இவான் இலியீச் தன் மனைவியோடு போராடுவதற்கும் தன்னுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் தன்னுடைய வேலையையும் அதனை ஒட்டி ஏற்பட்ட கடமைகளையும் உபயோகிக்கத் தொடங்கினுர்.

குழந்தை பிறந்தபிறகு அதற்கு உணவு கொடுப்பதில் பிரச்சினைகள் தொடங்கின, குழந்தைக்கும் தாய்க்கும் உண்மையான மற்

றும் கற்பனையான நோய்கள் (இவற்றைப் பற்றி இவான் இலியீச்சுக்கு ஒன்றுமே புரியவில்லை என்றாலும் அவர் அனுதாபம் காட்ட வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது) ஏற்பட்டதும் குடும்பத்துக்கு வெளியே அவருக்கென்று தனியாக ஒரு உலகத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் மிகவும் அவசரமாக ஏற்பட்டது.

அவர் மனைவி எவ்வளவு அதிகமாகச் சிடுசிடுப்பானவளாகவும் கண்டிப்பானவளாகவும் மாறினாளோ அந்த அளவுக்கு அவர் தன்னுடைய வாழ்க்கையின் மையத்தை வேண்டுமென்றே அலுவலகத்துக்கு மாற்றிக் கொண்டார். அவர் தன்னுடைய வேலையில் அதிகமாக ஈடுபட்டார், அவருடைய பதவி ஆசை முன்னெப்போதுமில்லாதபடி அதிகமாயிற்று.

வெகு சீக்கிரத்தில்—திருமணம் முடிந்த ஒரே ஒரு வருடத்துக்குப் பிறகு—குடும்ப வாழ்க்கையில் குறிப்பிட்ட சில வசதிகள் இருந்தாலும் அது உண்மையிலேயே மிகச் சிக்கலான, கடினமான விவகாரம். குடும்ப வாழ்க்கையில் ஒருவர் தன் கடமையை நிறைவேற்ற வேண்டுமென்றால் (அதாவது சமூகத்தின் பாராட்டைப் பெறுவதற்காகக் கண்ணியமான வெளித் தோற்றத்தைக் கொண்டிருக்க வேண்டும் என்பது இதன் பொருள்) அவர் தன்னுடைய வேலை சம்பந்தமாக நடந்துகொள்வதைப் போல திட்டவட்டமான கோட்பாடுகளை உருவாக்க வேண்டும் என்பதை இவான் இலியீச் உணர்ந்தார்.

இவான் இலியீச் இந்தக் கோட்பாடுகளை உருவாக்கினார். குடும்ப வாழ்க்கையைப் பொறுத்த வரை அவர் சுவையான மாலையுணவு, மனைவி, தாம்பத்திய இன்பம், எல்லாவற்றுக்கும் மேலாக, நற்பெயரைப் பாதுகாத்துக் கொள்வது (ஏனென்றால் இதைப் பொறுத்தே சமூகம் பாராட்டும்) ஆகிய வசதிகளை மட்டுமே அவர் கோரினார். அவர் குடும்ப வாழ்க்கையில் மகிழ்ச்சியைத் தேடினார். அது கிடைத்தால் அவர் நன்றி காட்டுவார். அவருக்கு ஏமாற்றமேற்பட்டால், முணுமுணுப்புக்களையும் புகார்களையும் மட்டுமே கேட்பாரானால் அவர் உடனே வெளியுலகத்திலிருந்து வேலியால் தடுக்கப்பட்டிருந்த தன்னுடைய வேலை என்ற உலகத்துக்குள் ஒதுங்கிவிடுவார். அங்கே அவருக்கு மகிழ்ச்சி ஏற்படும்.

இவான் இலியீச்சினுடைய கடுமையான உழைப்பு பாராட்டப்பட்டது. மூன்று வருடங்களுக்குள் அவர் உதவி அரசு வழக்குரைஞராகப் பதவி உயர்வு பெற்றார். அவருடைய புதிய கடமைகள், அவற்றின் முக்கியத்துவம் யார் மீதும் வழக்குத் தொடர்வதற்கும் அவர்களைச் சிறையில் தள்ளுவதற்கும் அவருக்குத் தரப்பட்ட அதிகாரம், அவருடைய பொது மேடைப் பேச்சுக்களும் அவை அவருக்கு ஏற்படுத்திய வெற்றியும்—இவையனைத்தும் அந்தப் பதவி மீது அவருக்கு அதிகமான நாட்டத்தை ஏற்படுத்தின.

மேலும் குழந்தைகள் பிறந்தன. அவர் மனைவி அதிகச் சிடுசிடுப்பாகவும் எதற்கெடுத்தாலும் எரிந்து விழுபவளாகவும் மாறினாள்,

ஆனால் இவான் இலியீச் கடைப் பிடித்த இல் வாழ்க்கைக் கோட்பாடுகள் அவளுடைய முணு முணுப்பு அவரை அநேகமாக பாதிக்காதபடி செய்தன.

இந்த நகரத்தில் ஏழு வருடங்கள் பணியாற் றிய பிறகு அவர் வேறொரு குபேர்னியாவுக்கு அரசு வழக்குரைஞரானார். அவர்கள் அங்கே சென்றார்கள், அவர்களிடம் பணத் தட்டுப்பாடு ஏற்பட்டது. அவர் மனைவி அந்தப் புதிய நகரத் தை வெறுத்தாள். அவருடைய ஊதியம் அதிக மாக இருந்தபோதிலும் வாழ்க்கைச் செலவு அதைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. இரண்டு குழந்தைகள் இறந்து விட்டன, இவான் இலியீச்சுக்குக் குடும்ப வாழ்க்கை முன் எப்போதையும் காட்டிலும் கசப்பானதாக மாறியது.

அந்தப் புதிய நகரத்தில் தங்களுக்கு ஏற் பட்ட ஒவ்வொரு துன்பத்துக்கும் பிரஸ்கோ வியா ஃபியோதரவ்னா தன் கணவனையே குற்றம் சாட்டினாள். கணவனுக்கும் மனைவிக்கும் இடையே நடைபெற்ற உரையாடல்கள் சம் பந்தப்பட்ட அநேகமாக ஒவ்வொரு விஷய முமே—குறிப்பாக, குழந்தைகளின் கல்வியைப் பற்றிய விவகாரம்—அவர்கள் எப்பொழுதோ ஒரு சமயத்தில் சண்டை போட்டுக் கொண்ட பிரச்சினைகளை மறுபடியும் கொண்டுவந்தன, கடந்த காலத்தில் நடைபெற்ற சண்டைகள் மறுபடியும் வருவோம் என்று எப்பொழுதும் பயமுறுத்திக் கொண்டிருந்தன. அவர்கள் அபூர் வமாக எப்பொழுதாவது காதலித்துக் கொள்

வதுண்டு, ஆனால் அது நெடுங்காலம் நீடிப்ப தில்லை. பரிபூரணமான தனிமையில் வெளிப் பட்ட இரகசியப் பகைமை என்ற கடலில் தம் பதிகள் மறுபடியும் பிரயாணம் செய்வதற்கு முன்பு சிறு பொழுது தங்கி ஓய்வெடுத்த தீவு களாக மட்டுமே அத்தகைய கட்டங்கள் இருந் தன. இந்தத் தனிமை கூடாது என்று இவான் இலியீச் நினைத்திருந்தால் அவருக்கு மனக் கவலை ஏற்பட்டிருக்கும்; ஆனால் அவரோ இதற் குள் அது வாடிக்கையானது என்பது மட்டு மல்லாமல் விரும்பத்தக்கது என்ற முடிவுக்கு வந்திருந்தார். அந்த உறவின் ஈடேற்றத்துக்கு அவர் உணர்வு பூர்வமாகப் பாடுபட்டார். குடும்ப வாழ்க்கையின் எதிர்பாராத துன்பங் களிலிருந்து மென்மேலும் தன்னை விடுவித்துக் கொள்ளவும் அவை ஆபத்தானவையாகவோ அல்லது கண்ணியக் குறைவாகவோ மாருதபடி பார்த்துக் கொள்ளவும் அவர் திட்டமிட்டார். வீட்டில் தங்கும் நேரத்தை மென்மேலும் குறைத்தும் அங்கே இருக்கும்பொழுது அந் நியர்களைக் கூட வைத்துக் கொள்வதன் மூலம் அமைதியைக் காத்தும் அவர் தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டார். அவருடைய வாழ்க்கையில் வேலைதான் மிகவும் முக்கியம் அவருடைய அதிகாரக் கடமைகளைக் கொண்ட உலகம்தான் அவருக்கிருந்த உண்மையான ஒரே அக்கறை. இந்த அக்கறை அவரை முற்றி லும் ஈர்த்துக்கொண்டது. தன்னுடைய அதி காரம், யாரையாவது அழிக்க விரும்பினால் அவர்களை அழிப்பதற்குத் தன்னிடமிருந்த

சக்தி, நீதிமன்றத்தில் நுழைந்து தனக்குக் கீழே வேலை செய்பவர்களிடம் பேசும் பொழுது தன்னுடைய தோற்றத்தில் கூட இடம் பெற்றிருந்த கனம், தனக்கு மேலேயும் கீழேயும் இருந்தவர்களிடம் அவருடைய புகழ், வழக்குகளில் அவர் காட்டிய திறமை, அந்தத் திறமையை அவரே வியந்து பாராட்டிக் கொள்ளுதல்—இவை அனைத்தும் அவருக்கு மகிழ்ச்சியைத் தந்தன. இவையும் அவருடைய சகாக்களோடு அவரது உரையாடல்கள், அவர் கலந்து கொண்ட விருந்துகள், விஸ்ட் சீட்டாட்டம் முதலியன அவருடைய வாழ்க்கையை முழுமையாக்கின. ஆகவே மொத்தத்தில் இவான் இலியீச்சின் வாழ்க்கை—அது எப்படி இருக்க வேண்டுமென்று அவர் விரும்பினாரோ அப்படி—இனிமையாகவும் கண்ணியமாகவும் இருந்தது.

இந்த வாழ்க்கை இப்படியே ஏழு வருட காலம் தொடர்ந்தது. அவர் மகளுக்கு இப்பொழுது பதினாறு வயதாகியிருந்தது. மேலும் ஒரு குழந்தை இறந்துவிட்டது, பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த ஒரே மகன்தான் இருந்தான். அவனைப் பற்றி அவர்களுக்கிடையே அதிகமான கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அவனை சட்டக் கல்லூரிக்கு அனுப்ப வேண்டுமென்று இவான் இலியீச் விரும்பினார்; ஆனால் பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா அவருக்கு எரிச்சலுண்டாக்க வேண்டுமென்பதற்காகவே அவன் உடற்கலைக் கல்வி பயில வேண்டும் என்று வற்புறுத்தினாள். மகள் வீட்டிலிருந்தே படித்

தாள்; அவள் படிப்பில் நல்ல முன்னேற்றம் இருந்தது. மகனும் நன்ருகவே படித்தான் என்று தான் சொல்ல வேண்டும்.

## 3

இவான் இலியீச் இப்படியே தன்னுடைய குடும்ப வாழ்க்கையில் பதினேழு வருடங்களைக் கழித்தார். அவர் ஏற்கெனவே அனுபவமிக்க அரசு வழக்குரைஞராக இருந்தார். இன்னும் நல்ல பதவி கிடைக்கும் என்ற எதிர்பார்ப்பில் சில நல்ல பதவிகளை மறுத்துவிட்டார். இந்த நேரத்தில் நடைபெற்ற ஒரு சம்பவம் நிதான மாகப் போய்க் கொண்டிருந்த அவருடைய வாழ்க்கையை பாதித்தது. ஏதாவதொரு பல் கலைக்கழக நகரத்தில் தலைமை நீதியாக வேண் டும் என்பது அவருடைய ஆசை. ஆனல் கோப்பே எப்படியோ அவரை முந்திக் கொண் டார். அந்தப் பதவி அவருக்குக் கிடைத்தது. இவான் இலியீச் மிகவும் அதிர்ச்சி அடைந் தார், குற்றஞ்சாட்டினர், கோப்பேயுடனும் தன்னுடைய மேலதிகாரிகளோடும் சச்சரவிட் டார். அவர்கள் அவரைப் பற்றி அதிருப்தி யடைந்தார்கள். அடுத்த முறை பதவி நிய மனங்கள் நடைபெற்ற பொழுது அவர் மறு படியும் ஒதுக்கப்பட்டார்.

இது 1880ம் வருடத்தில் நடைபெற்றது. இவான் இலியீச்சினுடைய வாழ்க்கையிலேயே அது மிகவும் துன்பமானதாக இருந்தது. ஒரு

பக்கத்தில் அவருடைய வருமானம் அவர் குடும்பம் நடத்தப் போதுமானதாக இல்லை. மறு பக்கத்தில் அவர் அவமதிக்கப்பட்டார்; எதை அவர் மிகவும் படுமோசமான, ஈவிரக்க மற்ற அநீதி என்று கருதினரோ அது மற்றவர் களால் மிகவும் சாதாரண விஷயமாகக் கருதப் பட்டது. அவர் தகப்பனர் கூட அவருக்கு உதவி செய்வது தன்னுடைய கடமை என்று கருதவில்லை. எல்லோருமே தன்னைக் கைவிட்டு விட்டதாக இவான் இலியீச் கருதினர், ஆனல் அது முற்றிலும் வாடிக்கையானதென்று அவர் கள் கருதினர்கள். அவர் மூவாயிரத்தைந்நூறு ரூபிள் ஊதியம் பெறுவதே அதிர்ஷ்டம் என்று அவர்கள் நினைத்தார்கள். தனக்குக் கிடைத்த அவமதிப்புக்கள், மனைவியின் ஓயாத நச்சரிப்பு, தன்னுடைய சக்தியைக் காட்டிலும் உயர்ந்த வாழ்க்கை நடத்தியதால் தனக்கு ஏற்பட் டிருக்கும் கடன்கள்—இவை அனைத்தும் வாடிக் கையானவை அல்ல என்பது அவருக்கு மட்டுமே புரிந்தது.

அந்தக் கோடைகால விடுமுறையில் குடும்பச் செலவுகளைக் குறைக்கும் நோக்கத்துடன் அவரும் மனைவியும் கிராமத்திலிருந்த மனைவி யின் சகோதரரோடு வசிக்கச் சென்றூர்கள். அங்கே எந்த வேலையும் இல்லாததால் இவான் இலியீச் வாழ்க்கையிலேயே முதல் தடவையாக அதிகமான சலிப்புக்கு ஆளா ஞர். அவர் சொல்ல முடியாத அளவுக்கு வே தனைப் பட்டபடியால் ஏதாவது செய்ய வேண்டும், தீர்மானமான நடவடிக்கைகளில்

ஈடுபட வேண்டும் என்று முடிவு செய்தார்.

ஒரு இரவில் அவர் உறங்காமல் வராந்தாவில் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார். பீட்டர்ஸ்பர்குக்குச் சென்று வேறு மந்திரி சபை இலாவுக்குத் தன்னை மாற்றிக் கொள்ள முயற்சி செய்ய வேண்டும், அதன் மூலம் தன் திறமையைப் பாராட்டத் தவறியவர்களைத் தண்டிக்க வேண்டும் என்று முடிவு செய்தார்.

மறு நாள் அவருடைய மனைவியும் மைத்துனரும் எவ்வளவோ தடுத்தபோதிலும் அவர் பீட்டர்ஸ்பர்குக்குப் புறப்பட்டார்.

ஒரே ஒரு நோக்கத்தோடுதான் அவர் புறப்பட்டார். ஐயாயிரம் ரூபிள் ஊதியம் தரக்கூடிய பதவியைப் பெற்றுவிட வேண்டும்; எந்த மந்திரி சபை அல்லது இலாகா அல்லது எப்படிப்பட்ட வேலையாக இருந்தாலும் அவருக்குக் கவலையில்லை. ஏதாவதொரு ஸ்தாபனத்தில்—வங்கிகள், இரயில் வேக்கள், சக்கரவர்த்தினி மரீயாவின் நிர்வாக அமைப்புகள், சுங்கத் தீர்வையில் கூட—ஐயாயிரம் கொடுக்கக் கூடிய பதவி ஒன்றைத்தான் அவர் விரும்பினார். ஒரே நிபந்தனை ஐயாயிரம் கொடுக்க வேண்டும். அவருடைய திறமையைப் பாராட்டத் தவறிய இலாகாவிலிருந்து விலகிக் கொள்ள உதவியாக இருக்கும்.

அந்தப் பயணம் அதிசயமான முறையிலும் எதிர்பாராத விதத்திலும் வெற்றி அடைந்தது. அவர் பயணம் செய்த ரயில் வண்டி குர்ஸ்க் நிலையத்தை அடைந்தபொழுது அவருடைய

நண்பர்—ஃபி. எஸ். இலியீன் என்ற பெயருடையவர்—அந்த முதல் வகுப்புப் பெட்டியில் ஏறினுர். மந்திரி சபையில் முக்கியமான ஒரு மாற்றம் ஏற்படப் போகிறது, பியோத்தர் இவானவிச்சுக்குப் பதிலாக இவான் ஸெம்யோனவிச் நியமிக்கப்படுவார் என்ற தகவலைக் கொண்ட தந்தி குர்ஸ்க் கவர்னருக்கு அப்பொழுதுதான் வந்திருப்பதாக அவரிடம் தெரிவித்தார்.

உத்தேசிக்கப்பட்ட இந்த மாற்றம் ருஷ்யாவுக்குக் கொண்டிருந்த முக்கியத்துவத்தைத் தவிர இவான் இலியீச்சுக்கும் சிறப்பான முக்கியத்துவத்தைக் கொண்டிருந்தது. ஏனென்ருல் புதிய நபரான பியோத்தர் பெத்ரோவிச்சுக்கும் அவருடைய நண்பரான (அப்படித்தான் இருக்க வேண்டும்) ஸஹார் இவானவிச்சுக்கும் முன்னேற்றம் ஏற்பட்டபொழுது சந்தர்ப்பங்கள் இவான் இலியீச்சுக்கும் சாதகமாக மாறியிருந்தன. ஸஹார் இவானவிச் இவான் இலியீச்சினுடைய நண்பர், உடன் பயின்ற மாணவர்.

மாஸ்கோவில் செய்தி ஊர்சிதம் செய்யப்பட்டது. பீட்டர்ஸ்பர்கை அடைந்ததும் இவான் இலியீச் ஸஹார் இவானவிச்சைப் போய்ப்பார்த்தார். தான் வேலை செய்த சட்ட இலாகாவிலேயே அவருக்கும் வேலைக்கு நிச்சயமாக ஏற்பாடு செய்வதாக அவர் வாக்குறுதியளித்தார்.

ஒரு வாரத்துக்குப் பிறகு அவர் தன் மனைவிக்குப் பின்வரும் தந்தியை அனுப்பினுர்:

மில்லருக்குப் பதிலாக ஸஹார் நியமிக்கப்பட்டிருக்கிருர். முதல் அறிக்கைக்குப் பிறகு எனக்குப் பதவி கிடைக்கும்.

இந்த மாற்றத்தின் பலஞக எதிர்பாராத விதத்தில் இவான் இலியீச்சுக்கு அவருடைய மந்திரி சபை இலாகாவில் பதவி கிடைத்தது. இப்பொழுது அவர் தன்னுடைய சகாக்களைக் காட்டிலும் இரண்டு தகுதி நிலைகள் உயர்த்தப் பட்டிருக்கிருர். ஐயாயிரம் ரூபிள் ஊதியம், இடமாற்றத்தை ஒட்டிய செலவுகளுக்காக மூவாயிரத்தைந்நூறு ரூபிள்கள் கிடைக்கும். தன்னுடைய எதிரிகளுக்கும் மந்திரி சபைக்கும் எதிராகத் தனக்கேற்பட்ட ஆத்திரத்தை மறந்து அவர் முற்றிலும் மகிழ்ச்சி அடைந்தார்.

இவான் இலியீச் இதுவரை ஏற்படாத உற்சாகத்தோடும் மனநிறைவோடும் கிராமத்துக்குத் திரும்பினுர். பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞவிடமும் உற்சாகம் பெருகியது. அங்கே தற்காலிகமாக அமைதி ஆட்சி புரிந்தது. பீட்டர்ஸ்பர்கில் தன்னை எவ்வளவு அன்போடு வரவேற்ருர்கள், தன் எதிரிகள் எப்படிக் கேவலமடைந்தார்கள், இப்பொழுது அவர்கள் தன்னிடம் எப்படிக் கெஞ்சிப் பேசுகிருர்கள், தன்னுடைய புதிய பதவியைப் பற்றியும் குறிப்பாக, பீட்டர்ஸ்பர்கில் தனக்கு ஏற்பட்டிருக்கும் செல்வாக்கைப் பற்றியும் எப்படிப் பொருமைப் படுகிருர்கள் என்று இவான் இலியீச் வர்ணித்தார்.

பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞ கவனமாகக் கேட்டாள், அவர் கூறிய எல்லாவற்றையும் நம்புவதைப் போல நடித்தாள். அவள் எதற்

குமே எதிர்ப்புச் சொல்லவில்லை. அவர்கள் போக வேண்டிய புதிய நகரத்தில் எப்படி வசிக்க வேண்டும் என்று திட்டங்கள் போடுவதில் தன் கவனம் முழுவதையும் ஈடுபடுத்தினாள். அவளுடைய திட்டங்கள் தன்னுடைய எண்ணங்களோடு பொருந்துவது, அவர்கள் மறுபடியும் ஒத்துப் போய்விட்டது இவான் இலியீச்சுக்கு மகிழ்ச்சியைத் தந்தது. இந்தச் சிறு அதிர்ச்சிக்குப் பிறகு அவருடைய வாழ்க்கை மறுபடியும் இனிமையாகவும் மெருகு குறையாமலும் இருக்கும்,அது இயற்கைதானே என்று அவர் நினைத்தார்.

இவான் இலியீச் சில நாட்கள் மட்டுமே தங்கியிருப்பதற்காகத்தான் திரும்பிவந்தார். செப்டெம்பர் 10ம் தேதியன்று அவர் பதவியில் சேரவேண்டும். மேலும் அவர் புதிய இடத்தில் தங்கிக் கொள்ள வேண்டும், தன்னுடைய உடைமைகள் அனைத்தையும் அந்த மாகாண நகரத்திலிருந்து கொண்டு வர வேண்டும், புதிய சாமான்களை வாங்க வேண்டும், இன்னும் பல சாமான்களுக்கு அனுப்பாணை கொடுக்க வேண்டும். சுருக்கமாகச் சொல்வதென்றால் அவர் தன் மனதில் முடிவு செய்திருந்த முறையில், பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா தன்னுடைய ஆன்மாவில் முடிவு செய்திருந்த முறையில் அங்கே குடும்ப வாழ்க்கையைத் தொடங்க வேண்டும்.

எல்லாமே மிகவும் சாதகமான முறையில் முடிவு செய்யப்பட்டதாலும் அவருக்கும் அவர் மனைவிக்கும் உடன்பாடு ஏற்பட்டதாலும்—

அது மட்டுமல்லாமல் அவர்கள் ஒருவரையொரு வர் குறைவாகவே பார்த்துக் கொண்டதாலும்—அவர்களிருவரும் திருமண வாழ்க்கையின் ஆரம்ப நாட்களுக்குப் பிறகு எக்காலத்திலும் இருந்திராத அளவுக்கு மிகவும் நெருக்கமடைந் தார்கள். இவான் இலியீச் தன்னுடைய குடும் பத்தை உடனே கூட்டிக் கொண்டு போக வேண்டுமென்றுதான் முதலில் நினைத்தார். ஆனல் அவருடைய மைத்துனரும் மைத்துனர் மனைவி யும் வற்புறுத்தியதனல்—அவர்கள் திடீரென்று மிகவும் அக்கறையுள்ளவர்களாகவும் சுமுகமான வர்களாகவும் மாறியிருந்தார்கள்—அவர் மட் டும் சென்றார்.

இவான் இலியீச் தனியாகப் புறப்பட்டார். தன்னுடைய சாதனையினலும் மனைவியோடு இணக்கமான உறவுகளாலும் ஏற்பட்டிருந்த ஆனந்தமான மனேநிலை அவரிடம் நீடித்தது. அவர் ஒரு நல்ல வீட்டைத் தேர்ந்தெடுத்தார். அவரும் அவர் மனைவியும் கற்பனை செய்து கொண்டிருந்த வீட்டைப் போலவே அது இருந் தது. பழைய பாணியிலமைந்த பெரிய, உயர மான உபசரிப்பு அறைகள், அகன்ற வசதியான படிப்பறை, மனைவிக்கும் மகளுக்கும் தனி அறை கள், மகனுக்குப் பாடம் போதிப்பதற்காக ஒரு அறை—அவர்களுக்காகவே திட்டம் போட்டுக் கட்டியதைப் போல அந்த வீடு இருந்தது. இவான் இலியீச்சே வீட்டை அலங்கரிப்பது, நாற்காலி, மரச்சாமான்களைத் தேர்ந்தெடுப் பது போன்ற வேலைகளைக் கவனித்தார். சுவர்க் காகிதத்தையும் மெத்தைகளையும் அவரே

தேர்ந்தெடுத்தார், பெரும்பாலும் பழைய காலத்தைச் சேர்ந்த, குறிப்பிடத்தக்க அளவுக்குப் பொருத்தமானவை என்று அவருக்குத் தோன்றிய நாற்காலி, சோபாக்களை அவரே வாங்கினார். இவை மென்மேலும் வளர்ந்து கொண்டே போய் அவருடைய எதிர்கால வீடு அவர் முடிவு செய்திருந்த இலட்சியத்தை எட்டியது. அலங்கரிக்கும் வேலை பாதி முடிந்திருக்கும்பொழுதே அதன் விளைவு அவருடைய எதிர்பார்ப்புகளையும் மிஞ்சிவிட்டது. அந்த வீடு தயாரானவுடன் சிறிதுகூடத் தரங்குறையாமல் எவ்வளவு அழகாகவும் பொருத்தமாகவும் இருக்கும் என்று அவர் கற்பனை செய்தார். வரவேற்பு அறையின் அலங்காரம் முடிந்த பிறகு அது எப்படித் தோன்றும் என்று கற்பனை செய்து கொண்டே அவர் இரவில் தூங்கினார். இன்னும் பூர்த்தியடையாத உபசரிப்பு அறையைப் பார்த்தபொழுது கணப்பு, திரை, அலமாரி, அங்கே ஒழுங்கில்லாமல் போடப்பட்டிருக்கும் நாற்காலிகள், அரிய சீனத் தட்டுக்கள் தொங்கிக் கொண்டிருக்கும் சுவர்கள், வெண்கலச் சிற்பங்கள் முதலியவற்றைக் கண்டார். இப்படிப்பட்ட விஷயங்களில் அக்கறையுள்ள தன் மனைவிக்கும் மகளுக்கும் எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும் என்பதை நினைத்து அவர் ஆனந்தமடைந்தார். அங்கே அவர்களுக்காகச் செய்யப்பட்டிருந்த தயாரிப்புகளை அவர்கள் கனவில் கூடப் பார்த்திருக்க மாட்டார்கள். அவர் பழைய நாற்காலி, சோபாக்களைக் குறைந்த விலைக்கு வாங்கினார். அந்த வகையில் அவர்

குறிப்பிடத்தக்க அதிர்ஷ்டசாலிதான். இவை பொதுத் தோற்றத்துக்கு மெருகூட்டின. தன்னுடைய கடிதங்களில் வீட்டைப் பற்றி வேண்டுமென்றே மோசமாக எழுதினர். அப்பொழுதுதான் இறுதிவிளைவு சிறப்பாக இருக்கும் என்று எதிர்பார்த்தார். இந்த நடவடிக்கைகள் அவருடைய முழு கவனத்தையும் பெற்றுவிட்டபடியால் புதிய பதவியின் கடமைகள்—அவை அவர் மிகவும் விரும்புகின்ற ரகத்தைச் சேர்ந்தவை—அவர் எதிர்பார்த்ததைக் காட்டிலும் குறைவாகவே அவருடைய கவனத்தைப் பெற்றன. நீதிமன்றத்தில் விசாரணை நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுது சில சமயங்களில் அவர் தன்னை மறந்துவிடுவார். திரைகள் தொங்கவிடப்பட்டிருக்கும் குறுக்குச் சட்டம் மொட்டையாக இருக்கலாமா அல்லது துணி சுற்றப்பட்டிருக்க வேண்டுமா என்பதை அவர் மனம் ஆராய்ந்து கொண்டிருக்கும். அந்த வேலையில் அவர் அதிகமாக ஈடுபட்டுவிட்டபடியால் நாற்காலி, சோபாக்களை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குத் தூக்கி வைப்பதிலோ, திரைகளைத் தொங்கவிடுவதிலோ தொழிலாளர்களுக்கு உதவியாகவும் அடிக்கடி சேர்ந்து கொண்டார். ஒரு நாள் திரைகள் எப்படித் தொங்கவிடப்பட வேண்டும் என்று தான் விரும்புவதை ஒரு தொழிலாளியிடம் காட்டுவதற்காக அவர் ஏணியின் மேல் ஏறினர், கால் வழுக்கி அநேகமாகக் கீழே விழுந்துவிட்டார். ஆனல் அவர் அதிக பலசாலியாகவும் சுறுசுறுப்பானவராகவும் இருந்தபடியால் சன்னல் கட்

டையில் உடம்பு மோதியதால் ஏற்பட்ட லேசான சிராய்ப்புடன் தப்பிவிட்டார். அவருடைய உடலின் ஒரு பக்கத்தில் சிறிது நேரம் வலி ஏற்பட்டது. ஆனால் அது சீக்கிரத்தில் மறைந்துவிட்டது. அந்த சமயம் பூராவுமே இவான் இலியீச் மிகவும் நலமாகவும் உற்சாகத்தோடுமிருந்தார். ''என் வயதில் பதினைந்து வருடங்கள் குறைந்து விட்டதைப் போல நான் உணர்கிறேன்'' என்று அவர் எழுதினார். எல்லா வேலையும் செப்டெம்பர் மாதத்துக்குள் முடிந்து விடும் என்று அவர் எதிர்பார்த்தார், ஆனால் அக்டோபர் மத்தி வரை வேலை இழுத்துக் கொண்டு சென்றது. ஆனால் அதன் விளைவுகள் அற்புதமாக இருந்தன. அவர் ஒருவர் மட்டும் அப்படி நினைக்கவில்லை. வீட்டைப் பார்த்த எல்லோருமே அதை ஒத்துக் கொண்டார்கள்.

விஷயம் என்னவென்றால் உண்மையிலேயே பணக்காரர்களாக இல்லாத ஆனால் பணக்காரர்களைப் போல இருக்க விரும்பி, கடைசியில் ஒருவரைப் போலவே இன்னொருவரும் ஆகிவிடுகின்ற எல்லா மனிதர்களும் செய்து முடிக்கின்றவைகளைப் போலவே அதுவும் இருந்தது. திரைகள், கருங்காலி, மலர்க்கொத்துகள், கம்பளங்கள், வெண்கலச் சிற்பங்கள்—எல்லாமே கறுப்பாகவும் நன்கு மெருகிடப்பட்டவையாகவும் இருக்கும்—ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் அந்த வர்க்கத்தைச் சேர்ந்த மற்ற எல்லோரையும் போலவே தங்களை ஆக்கிக் கொள்வதற்காகப் படைக்கின்ற பொருள்கள் இவைதான். அவருடைய வீடு மற்றவர்களு

டைய வீடுகளை மிகவும் ஒத்திருந்தபடியால் அது எத்தகைய கருத்துப்பதிவையும் ஏற்படுத்த வில்லை. எனினும் அந்த வீடு மிகச் சிறப்பாக அமைந்திருப்பதாக அவர் நினைத்தார். தன் குடும்பத்தினரைக் கூட்டி வருவதற்காக அவர் இரயில் நிலையத்துக்குச் சென்ற பொழுது, பிர காசமாக விளக்குகள் எரிந்து கொண்டிருந்த வீட்டுக்குள் அவர்களை அழைத்து வந்தபொ ழுது, வெள்ளை நிறத்தில் கழுத்துப் பட்டை அணிந்த சிப்பந்தி கதவைத் திறந்துவிட, அவர் கள் மலர்களால் அலங்கரிக்கப்பட்ட முன் னறைக்குள் நுழைந்து, அங்கிருந்து உபசரிப்பு அறைக்குள், பிறகு படிப்பறைக்குள் சென்று பார்த்துப் பேரானந்தத்தால் திணறிய நேரத் தில்—இவையனைத்தும் நடைபெற்ற பொழுது அவர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார், வீடு முழு வதையும் அவர்களுக்குச் சுற்றிக் காட்டினார், அவர்களுடைய பாராட்டுக்களைக் கேட்டுப் புள காங்கிதமடைந்தார். அவர் முகம் திருப்தியில் மலர்ந்தது. அவர்கள் மாலையில் தேநீர் அருந்திக் கொண்டிருந்த பொழுது எப்படிக் கீழே விழுந்தீர்கள் என்று பிரஸ்கோவியா ஃபியோ தரவ்னு அவரிடம் கேட்டாள். அவர் சிரித்துக் கொண்டே கால் வழுக்கி விழுவதைப் போலவும் அதைக் கண்ட தொழிலாளி பயந்து நடுங்கு வதைப் போலவும் வேடிக்கையாக நடித்துக் காட்டினார்.

''நான் உடற்பயிற்சிக் கலையைப் படித்தது நன்மையாக இருந்தது. இன்னொருவராக இருந் தால் மோசமான அடி பட்டிருக்கும். ஆனால்

எனக்கு இந்தப் பக்கத்தில் சிராய்ப்போடு தப்பிவிட்டேன். அந்த இடத்தில் தொட்டால் இன்னும் வலிக்கிறது, ஆனல் அது ஆறிவரு கிறது. வெறும் சிராய்ப்புத்தான்'' என்ருர்.

அவர்கள் அந்தப் புதிய வீட்டில் வசிக்கத் தொடங்கினர்கள். ஒரு வீட்டில் வசிக்கும் பொழுது அங்கே கூடுதலாக இன்னொரு அறை இருந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும் என்று தோன்றுவது வழக்கம். அதைப் போலவே இந்த வீடும் இருந்தது. அவர்களுடைய புதிய வருமானமோ சற்றுக் கூடுதலாக, ஒரு ஐநூறு ரூபிள் அதிகமாக இருந்திருந்தால் எல்லாச் செலவுகளையும் பூர்த்தி செய்வதற்குப் போது மானதாக இருக்கும். இது எப்பொழுதுமே உண்மையானதுதான். ஆனல் மொத்தத்தில் எல்லாமே சிறப்பாக இருந்தது. எல்லா வேலை யும் முடியாதிருந்த பொழுது, இன்னும் பல பொருள்களை வாங்கவோ, அனுப்பாணை கொடுக் கவோ, பழுது பார்க்கவோ அல்லது ஒரு இடத்திலிருந்து மற்ருெரு இடத்தில் மாற்றி வைக்கவோ வேண்டியிருந்த பொழுது ஆரம் பத்தில் எல்லாமே மிகவும் சிறப்பாக இருந் தது. சிறு கருத்து வேற்றுமைகள் அவ்வப் பொழுது ஏற்பட்டன என்பது உண்மையே. ஆனல் கணவரும் மனைவியும் எப்பொழுதுமே திருப்தியாக இருந்ததாலும் அவர்கள் கவனிக்க வேண்டிய வேலை அதிகமாக இருந்ததாலும் இக்கருத்து வேற்றுமைகள் உண்மையான சண்டைகளாக மாறுவதற்கு முன்பே சரிப் படுத்தப்பட்டன. வீட்டு வேலைகள் முடிந்த

பிறகு வாழ்க்கைச் சுவை குறைந்துவிட்டதைப் போல, ஏதோ ஒன்று இல்லாததைப் போலத் தோன்றியது. ஆனால் இதற்குள் அவர்கள் நண்பர்களோடு பழகிக் கொண்டும் புதிய பழக்க வழக்கங்களை உருவாக்கிக் கொண்டுமிருந்தபடியால் அவர்களுக்கு ஓய்வு இல்லாமலிருந்தது.

இவான் இலியீச் காலை நேரங்களை நீதிமன்றத்தில் கழித்துவிட்டு மாலையுணவுக்கு வீட்டுக்குத் திரும்புவார். முதலில் அவர் வீட்டின் காரணமாகச் சற்று பாதிக்கப்பட்டாலும் (மேசைத்துணி அல்லது மெத்தையில் ஏற்பட்ட ஒவ்வொரு கறையும் திரைச் சீலைகளில் உதிரியாகத் தொங்கும் ஒவ்வொரு நூலும் அவருக்கு எரிச்சலூட்டியது, எல்லாம் சரியாக இருக்க வேண்டும் என்பதற்காக அவர் அதிகமாகப் பாடுபட்டிருந்தபடியால் அழிவின் மிகச் சிறிய அறிகுறி கூட அவருக்கு வேதனையைக் கொடுத்தது) மிக அதிகமான உற்சாகத்தோடிருந்தார். மொத்தத்தில் இவான் இலியீச்சினுடைய வாழ்க்கை அவருடைய நம்பிக்கைப் பிரகாரம் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருந்தது. அதாவது சுலபமாகவும் இனிமையாகவும் கண்ணியமாகவும் இருந்தது. அவர் காலையில் ஒன்பது மணிக்கு எழுந்து காபி அருந்திவிட்டு பத்திரிகை படிப்பார், பிறகு நீதிபதி உடையணிந்து நீதிமன்றத்துக்குச் செல்வார். அங்கே அவருடைய அன்றாட வேலை என்ற நுகத்தடி அவருக்காகத் தயாராக வைக்கப்பட்டிருக்கும். அவர் சிரமமின்றி அதை மாட்டிக் கொள்வார். மனுதாரர்கள், அலுவலகத்

துக்கு வந்திருக்கும் விசாரணை மனுக்கள், அலுவலகப் பணிகள், பொது மற்றும் தனி விசாரணைகள். இவை அனைத்திலிருந்தும், புதியனவாகவும் உயிராற்றலைக் கொண்டு மிருப்பவற்றை ஒதுக்க வேண்டும், ஏனென்றால் அவை அதிகார பூர்வமான வேலையைத் தடை செய்யக் கூடியவை. அதிகார பூர்வமான உறவுகளைத் தவிர வேறு எவ்விதமான உறவுகளையும் மற்றவர்களோடு வைத்துக் கொள்ளக் கூடாது. இந்த உறவுகள் அதிகார நிலையிலிருந்து பிறக்க வேண்டும். அந்த உறவுகளும் முற்றிலும் அதிகார பூர்வமாக இருக்க வேண்டும். உதாரணமாக, ஒரு நபர் எதைப் பற்றியோ விசாரிக்க வருவதாக வைத்துக் கொள்வோம். இத்தகைய நபரிடம் இவான் இலியீச் தன்னுடைய அதிகார நிலைமைக்கு அப்பாற்பட்ட உறவுகளை வைத்துக் கொள்வது சாத்தியமல்ல. ஆனால் நீதிமன்ற உறுப்பினர் என்ற முறையில் தன்னோடு இந்த நபருக்கு ஏதாவது உறவு இருந்தால் (அரசாங்க முத்திரைக் காகிதத்தில் அதை எழுதித் தந்தால்) இந்த உறவின் வரையறைகளுக்கு உட்பட்டு இவான் இலியீச் அவருக்காக எல்லாவற்றையும், தன்னுடைய அதிகாரத்துக்கு உட்பட்ட எல்லாவற்றையும் நிச்சயமாகச் செய்வார், அவரை மரியாதையோடு—மனித பூர்வமான, நட்பான உறவுகளின் சாயலோடு—நடத்துவார். ஆனால் எந்த நிமிடத்தில் அதிகார பூர்வமான உறவுகள் முடிந்துவிடுகின்றனவோ அப்பொழுது எல்லாமே முடிந்துவிடும். அதிகார பூர்வமான உறவுகளைத்

தனிமைப் படுத்துவதில்லை, உண்மையான வாழ்க்கையிலிருந்து அவற்றை முற்றிலும் பிரித்துவைப்பதில் இவான் இலியீச்சுக்கு அசாதாரணமான திறமை இருந்தது. அவருடைய ஆற்றல் மற்றும் அனுபவத்தால் அவர் அதை மிக அதிகமாக வளர்த்துக் கொண்டிருந்தபடியால் எப்பொழுதாவது மனித உறவுகளையும் அதிகார உறவுகளையும்—ஒரு வேடிக்கை காட்டுவதைப் போல—ஒன்று கலக்கத் தன்னை அனுமதிக்கக் கூடிய எல்லை கடந்த திறமைக் கட்டத்தை எட்டியிருந்தார். அவசியமேற்பட்டால் மறுபடியும் அதிகார பூர்வமான அம்சங்களைத் தனிமைப்படுத்துவதற்கும் மனிதப்பண்பைக் கைவிடுவதற்கும் போதுமான மனவலிமை அவரிடமிருந்தபடியால் இதைச் செய்வதற்கு அவர் தன்னை அனுமதித்துக் கொண்டார். இவான் இலியீச் இதைச் சுலபமாக, இனிமையாக, கண்ணியமாக மட்டுமல்ல, எல்லை கடந்த திறமையோடு நிறைவேற்றினார். இதற்கிடையில் அவர் புகை பிடித்தார், தேநீர் அருந்தினார், சிறிது நேரம் அரசியலைப் பற்றியும், தொழில் முறை விவகாரங்களைப் பற்றியும் சீட்டாட்டத்தைப் பற்றியும்—பதவி நியமனங்களைப் பற்றி அதிகமாகவும்—பேசினார். முடிவில் சோர்வடைந்தவராக ஆனால் ஒரு அற்புதமான நிகழ்ச்சியை (இசைக் குழுவின் முதல் வயலின்களை உபயோகித்து) நடத்தி முடித்த கலாமேதையின் பரிபூரணமான திருப்தியோடு வீட்டுக்குத் திரும்புவார். வீட்டில் அவர் மனைவியும் மகளும் மாலையில் வெளியே போவதற்காகப் புறப்

பட்டுக்கொண்டிருப்பார்கள் அல்லது யாருக்காவது விருந்தளித்துக் கொண்டிருப்பார்கள்; மகன் பள்ளிக்கூடத்தில் இருப்பான் அல்லது ஆசிரியரோடு பாடங்களைப் படித்துக் கொண்டிருப்பான். உடற்கலைப் பள்ளியில் கற்பிக்கப் பட்ட எல்லாவற்றையும் கவனத்தோடு படித்துக் கொண்டிருப்பான். எல்லாமே நன்றாகப் போய்க் கொண்டிருந்தது. மாலையுணவுக்குப் பிறகு விருந்தினர்கள் இல்லையென்றால் சில சமயங் களில் இவான் இலியீச் அப்பொழுது பிரபல மாகப் பேசப் படுகின்ற புத்தகத்தைப் படிப் பார். பிறகு ஆவணங்களைப் பரிசீலித்து, சட்ட புத்தகங்களில் விதிகளைத் தேடி, சாட்சியங் களைப் படித்து அவற்றைச் சட்டங்களோடு பொருத்தி ஆராயும் பணிகளைத் தொடங்கு வார். இந்த வேலையைச் சோர்வானதாகவோ அல்லது மகிழ்ச்சியானதாகவோ அவர் கருத வில்லை. அதற்காக சீட்டாட்டத்தைக் கைவிடு மாறு நேர்ந்தால் அது சோர்வளிக்கின்ற வேலை தான். ஆனால் சீட்டாட்டம் இல்லையென்றால் தனியாக அல்லது மனைவியோடு உட்கார்ந்திருப் பதைக் காட்டிலும் அது சிறப்பானதாகும். அவர் நடத்திய சிறிய விருந்துகள் அவருக்கு அதிகமான மகிழ்ச்சியைக் கொடுத்தன, அவர் உயர்வான சமூகத் தகுதியைக் கொண்ட கன வான்களையும் சீமாட்டிகளையும் இந்த விருந்து களுக்கு அழைப்பார். அவருடைய உபசரிப்பு அறை அவர்களுடைய உபசரிப்பு அறைகளைப் போலவே இருந்தபடியால் அவர்கள் ஒன்றாக மாலை நேரத்தைக் கழித்த முறை இந்தப்

பெரு மக்கள் வழக்கமாக மாலை நேரத்தைக் கழிக்கின்ற முறையை ஒத்திருந்தது.

ஒரு நாள் அவர்கள் மாலைவிருந்தோடு நடனத்துக்கும் ஏற்பாடு செய்திருந்தார்கள். இவான் இலியீச் மிகவும் உற்சாகத்தோடிருந்தார், அவருக்கும் அவருடைய மனைவிக்கும் சாக்கலேட்டுகளையும் கேக்குகளையும் பற்றி மோசமான சச்சரவு ஏற்பட்டதைத் தவிர மற்றபடி எல்லாமே முதல் தரமாக முடிவடைந்தது. சிற்றுண்டிகளைப் பற்றி பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா ஒரு முடிவு செய்திருந்தாள். ஆனால் அதிகமான விலைக்கு அவற்றை விற்பனை செய்கின்ற தயாரிப்பாளரிடமிருந்து வாங்க வேண்டுமென்று இவான் இலியீச் வற்புறுத்தினார். அவர் ஏராளமான கேக்குகளை அனுப்பச் சொல்லிவிட்டார். அவற்றில் பல மீந்துவிட்டன, விலையோ நாற்பத்தைந்து ரூபிள். எனவே அவர்களுக்கிடையே சச்சரவு ஏற்பட்டது. பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா அவரை ''முட்டாள்,'' ''முதுகெலும்பில்லாதவன்'' என்று திட்டினாள், அவர் தலையைக் கையில் பிடித்துக் கொண்டு விவாகரத்துச் செய்ய வேண்டும் என்று மனதுக்குள் பேசிக் கொண்டார் என்பதிலிருந்து அந்தச் சண்டை எவ்வளவு மோசமாகவும் அருவருப்பாகவும் இருந்திருக்கும் என்பதை முடிவு செய்து கொள்ளலாம். ஆனால் அந்த விருந்து கலகலப்பாக இருந்தது. முக்கியமானவர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். ''என்னுடைய நுகத்தடியை நீ ஏற்றுக்கொள்'' என்ற தர்ம ஸ்தாபனத்தை

நிறுவிய த்ரூஃபனவாவின் சகோதரியான இள வரசி த்ரூஃபன்வாவோடு இவான் இலியீச் நடனமாடினுர். அவருடைய பதவிக் கடமைகள் அவர் ஆசையைப் பூர்த்தி செய்த படியால் மகிழ்ச்சி அடைந்தார். சமூக வாழ்க்கை அவருடைய பெருமையுணர்ச்சிக்குத் தீனி போட்ட படியால் அவர் மகிழ்ச்சி அடைந்தார். ஆனுல் இவை எல்லாவற்றையும் காட்டிலும் சீட்டாட்டத்தில்தான் அவர் மிகவும் உண்மையான மகிழ்ச்சியை அடைந்தார். என்னதான் நடைபெற்ருலும், எவ்வளவு பெரிய ஏமாற்றங்கள் தனக்கு ஏற்பட்டாலும் ஒரு சிறு விளக்கைப் போல எல்லாவற்றையும் ஊடுருவிப் பிரகாசிக்கும் மகிழ்ச்சி ஒன்று இருக்கிறது. சில நல்ல ஆட்டக்காரர்களோடு, கூச்சல் போடாத கூட்டாளிகளோடு உட்கார்ந்து ''வின்ட்'' என்ற நான்கு-கை ஆட்டத்தை (ஐந்து-கை ஆட்டத்தில் உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருக்கும் நபராக இருப்பதற்குச் சிறிதும் பொருட்படுத்தவில்லை என்று நாம் நடித்தாலும் அது மிகவும் துன்பமானது) விளையாடிவிட்டுப் பிறகு வீட்டுக்குச் சென்று உணவருந்தி விட்டு ஒரு டம்ளர் ஒயின் சாப்பிடுவது எப்படிப்பட்ட மகிழ்ச்சி என்று அவர் கூறுவதுண்டு. இவான் இலியீச் எப்பொழுதுமே சீட்டாட்டத்துக்குப் பிறகு—அதிலும் சிறிதளவு பணத்தை வெற்றி பெற்றிருந்தால் (பெரிய தொகைகளை வெற்றியடைவது அவருக்கு மனச்சங்கடத்தைக் கொடுக்கும்) — குறிப்பிடத்தக்க மனநிறைவோடு தூங்கச் செல்வார்.

வாழ்க்கை இப்படியே சென்றது. அவர்கள் மிக உயர்வான வட்டாரங்களில் பழகினார்கள், முக்கியமான நபர்களும் இளைஞர்களும் அவர் களுடைய வீட்டுக்கு வந்தார்கள்.

கணவர், மனைவி, மகள் ஆகியோர் தங்கள் சூழாத்தில் யார் இருக்க வேண்டும் என்பதைப் பற்றி முழுமையான கருத்தொற்றுமை கொண் டிருந்தார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் கலந்து கொள்ளாமலேயே பல விதமான விரும்பத்தகாத நண்பர்களையும் உறவினர்களை யும் உதறிவிட்டார்கள். அவர்களால் தங்க ளுக்கு அவமானம் ஏற்படும் என்று கருதினார்கள். மேலும் அவர்கள் சுவர்களில் ஜப்பானியத் தட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட உபசரிப்பு அறைக்குள் வந்து மரியாதையைச் செலுத்து வோம் என்று வற்புறுத்தினார்கள். சிறிது காலத்துக்குப் பிறகு இந்த விரும்பத்தகாத பிறவிகள் வராமல் நின்றுவிட்டார்கள். சமூகத் தின் மிக உயர்ந்த வட்டாரங்களைச் சேர்ந்த நண்பர்கள் மட்டுமே கலவீன்களுக்கு மிஞ்சினார் கள். திறமை மிக்க இளைஞர்கள் லீஸச்காவின் காதலை நாடி வந்தார்கள். திமீத்ரி இவான விச்சின் மகனும் அவருடைய பண்ணைக்கு ஒரே வாரிசும் இளம் விசாரணை நீதிபதியுமான பெத்ரீ ஷெவ் மிகத் தீவிரமாக அவளைக் காதலித்தபடி யால் இவான் இலியீச் அதைப்பற்றி பிரஸ் கோவியா ஃபியோதரவ்னாவிடம் பேசினார். சறுக்கு வண்டியில் உல்லாசப் பயணம் அல்லது ஏதாவது நாடக நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யு மாறு ஆலோசனை கூறினார். அவர்கள் இப்படி

வாழ்ந்தார்கள். எந்த மாற்றமும் இல்லாமல் ஒவ்வொரு நாளும் போய்க் கொண்டிருந்தது. எல்லாம் நன்ருகவே இருந்தது.

## 4

அவர்கள் எல்லோரும் சுகமாகவே இருந்தார்கள். சில சமயங்களில் இவான் இலியீச் தன் வாயில் ஏதோ ஒரு விசித்திரமான உணர்ச்சி ஏற்படுகிறது, உடலின் இடது பக்கத்தில் ஏதோ கோளாருக இருக்கிறது என்று புகார் சொல்வார். ஆனுல் இதை நோய் என்று சொல்லிவிட முடியுமா?

ஆனுல் அந்த ஏதோ ஒன்று மோசமாயிற்று. உண்மையான வலி இன்னும் ஏற்படாவிட்டாலும் ஒரு பக்கத்தில் அழுத்தத்தை உணர்ந்தார்; அதன் விளைவாக அவர் எப்பொழுதுமே சோர்வாக இருந்தார். அந்த சோர்வு ஆழமடைந்து கலவீன் குடும்பம் மீண்டும் ஏற்படுத்திக் கொண்டிருந்த சுலபமான, பகட்டமைதியான வாழ்க்கையின் மகிழ்ச்சியைக் கெடுத்தது. கணவனும் மனைவியும் முன்னைக் காட்டிலும் அடிக்கடி சச்சரவு செய்து கொள்ளத் தொடங்கினுர்கள். வெகு சீக்கிரத்தில் வாழ்க்கையின் சுகமும் மகிழ்ச்சியும் மறைந்தது, அதிகமான சிரமத்தோடுதான் அந்தப் பகட்டமைதியைக் காப்பாற்ற முடிந்தது. அவர்களுக்கிடையே அடிக்கடி சண்டைகள் ஏற்பட்டன. மறுபடியும் அங்கே தீவுகள் மட்டுமே இருந்தன. படீரென வெடித்தல் இல்லாமல் கணவனும் மனைவி

யும் ஒன்ருகச் சேர்ந்து இருக்கக் கூடிய தீவுகள் மிகச் சிலவே இருந்தன.

தன் கணவர் ஓயாத தொல்லே கொடுப்பவர் என்று பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞ கூறுவதில் இப்பொழுது நியாயமிருந்தது. அவர் எப்பொழுதுமே இப்படித் தொல்லே கொடுத்து நச்சரிப்பவர், தன்னிடமிருக்கும் மேலான பண்புகளிஞல்தான் இருபது வருடங்களாக இதைத் தாங்கிக் கொண்டிருக்கிறேன் என்று தனக்கே உரிய மிகைப்படுத்தலோடு அவள் கூறிஞள். இப்பொழுது பூசலேத் தொடங்கிவைப்பது அவர்தான் என்பது உண்மையே. மாலே உணவருந்த உட்காருவதற்குச் சற்று முன்பு அல்லது சூப்பை ஊற்றும் பொழுது அவர் வழக்கமாக ஏதாவது ஒரு குறை கண்டுபிடித்தார். தட்டுகள் உடைந்திருக்கின்றன அல்லது உணவு மோசம் அல்லது அவர் மகன் மேசையின் மேல் முழங்கையை வைத்துக் கொண்டிருக்கிருன் அல்லது மகள் தலேமுடியை ஒழுங்காக வாரிக் கொள்ளவில்லே என்பார். எல்லாவற்றுக்கும் பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞவைக் குற்றஞ் சாட்டுவார். முதலில் அவள் எதிர்த்துப் பேசிக் காட்டமான முறையில் பதில் கொடுத்தாள். ஆனல் இரண்டு சந்தர்ப்பங்களில் மாலேயுணவு ஆரம்பமாவதற்கு முன்பே அவரிடம் கடுஞ்சீற்றம் ஏற்பட்டது. உணவருந்தும் பொழுது அவருக்கு ஏதோ நோய் ஏற்படுகிறது, அதனுல் தான் சத்தம் போடுகிருர் என்று உணர்ந்து தன்னேக் கட்டுப்படுத்திக் கொண்டாள். அவள் திரும்பப் பேசுவதில்லே. இயன்ற வரை வேக

மாக மாலையுணவை முடித்துவிடுவதற்கு மட்டும் எல்லா முயற்சிகளையும் செய்தாள். இவ்வளவு அதிகமான சுய கட்டுப்பாட்டைக் கடைப்பிடிப்பதைப் பற்றி அவள் மிகவும் பெருமைப்பட்டாள். தன் கணவர் நச்சரிப்புக்காரர், தன்னுடைய வாழ்க்கையைத் துன்பமயமாக்கி விட்டார் என்று முடிவு செய்தபிறகு அவள் தனக்காக இரக்கப்பட்டுக் கொள்ளத் தொடங்கினாள். தன் மீது எவ்வளவு அதிகமாக இரக்கப் பட்டாளோ அவ்வளவு அதிகமாகக் கணவனை வெறுத்தாள். அவர் இறந்துவிடுவார் என்று கூட நம்பத் தொடங்கினாள். ஆனால் அப்படி உண்மையாகவே அவள் நம்பினாள் எனச் சொல்ல முடியாது ஏனென்றால் அப்படி நடக்குமானால் வருமானம் இல்லாமற்போய் விடும். இது அவருக்கு எதிராக அவளை மேலும் திருப்பியது. அவர் மரணமடைந்தால் கூட தன்னைக் காப்பாற்ற முடியாது என்பதை அவள் உணர்ந்தபொழுது அவளிடம் வஞ்சிக்கப்பட்ட உணர்ச்சி அதிகரித்தது. அவள் ஆத்திர மடைந்த போதிலும் அந்த ஆத்திரத்தை மறைத்துக் கொண்டாள். அவள் ஆத்திரத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டது அவருடைய ஆத்திரத்தைப் பெருக்கியது.

ஒரு நாள் இவான் இலியீச் மிகவும் அநியாய மாக அவள் மீது குற்றம் சாட்டிய பிறகு—அது மிகவும் அநியாயமாக இருந்ததனால் அவர்களுக் கிடையே சமரசம் ஏற்பட்டபொழுது தன்னுடைய நோய் காரணமாகவே தனக்கு அடிக்

கடி கோபமேற்படுகிறது என்று அவர் ஒத்துக் கொண்டார் — அவருக்கு உடல் நலமில்லை என்றால் நோயை குணப்படுத்த முயற்சிகள் எடுக்க வேண்டுமென்று பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா அவரிடம் கூறினாள், பிரபலமான ஒரு டாக்டரிடம் உடம்பைக் காட்டுமாறு வற்புறுத்தினாள்.

அவர் சென்றார். அது அவர் எதிர்பார்த்ததைப் போலவே இருந்தது. காத்திருத்தல், டாக்டரின் முக்கியத்துவம் நிறைந்த முகபாவனை (அவருக்கு அது அறிமுகமானதுதான், ஏனென்றால் அவர் நீதிமன்றத்துக்குள் நுழைந்ததும் தன்னுடைய முகத்தை அப்படித்தான் வைத்துக் கொள்வார்) விரல்களால் தட்டுவது, உற்றுக் கேட்பது, கேள்விகளும் பதில்களும் (எல்லா விவரங்களும் ஏற்கெனவே தெரியுமென்பதால் இந்தக் கேள்விகள் அவசியமில்லாதவை) டாக்டரிடம் உங்களை ஒப்படைத்துக் கொள்ளுங்கள், எல்லாம் சரியாகிவிடும் (என்ன செய்ய வேண்டும் என்பது டாக்டருக்குத் தெரியும் என்பதில் என்ன சந்தேகம்?) என்று மறைமுகமாகக் குறிப்பிடுகின்ற பொருள் பொதிந்த பார்வை —நோயாளி எப்படிப்பட்டவராக இருந்த போதிலும் எல்லா நோயாளிகளிடமும் ஒரே விதமான அணுகுமுறை—எப்பொழுதும் இப்படித்தானே இருக்கும். எல்லாம் நீதிமன்றத்தில் நடப்பதைப் போலவே இருந்தது. குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு முன்னால் அவர் தன்னுடைய முக்கியத்துவத்தை வலியுறுத்தி எப்படி நடந்து கொள்வாரோ, அதே மாதிரி

நோயாளிகளுக்கு முன்னல் டாக்டர் நடந்து கொண்டார்.

உம்மிடம் இதுவும், அதுவும் சரியில்லை என்று இதுவும் அதுவும் காட்டுகிறது, ஆனல் இதை யும் அதையும் சோதித்துப் பார்க்கும்பொழுது எமது முடிவுக்கு ஒத்துவராவிட்டால் உமக்கு இதுவும் அதுவும் இருக்குமோ என்று நாங்கள் சந்தேகிக்க வேண்டியிருக்கும். உமக்கு இதுவும் அதுவும் ஏற்பட்டிருந்தால்... பிறகு, இதரவை. என்னுடைய நிலைமை ஆபத்தானதா இல்லையா என்ற ஒரே ஒரு கேள்விக்கு மட்டுமே இவான் இலியீச் பதில் எதிர்பார்த்தார். ஆனல் அந்தக் கேள்வி அனுவசியமானதென்று டாக்டர் ஒதுக் கினர். அவருடைய பார்வையில் அந்தக் கேள்வி ஆலோசிக்கப்படுவதற்குக் கூடத் தகுதியற்ற தாகும். இந்த நோய் மிதக்கும் குண்டிக்காய் கள், நீண்ட காலமாக இருக்கும் மூக்கடைப்பு, பெருங்குடல் வாயில் புண் முதலிய ஏதாவ தொரு காரணத்தால் ஏற்பட்டிருக்கிறது. இவான் இலியீச்சின் உயிரைப் பற்றிய பிரச் சினையே கிடையாது—மிதக்கும் குண்டிக்காய் களுக்கும் பெருங்குடல் வாய்ப் புண்ணுக்கும் போட்டி என்பதைத் தவிர வேறென்றுமில்லை. இது பெருங்குடல் வாய்ப் புண்ணினல்தான் ஏற் பட்டிருக்க வேண்டும் என்று அந்த டாக்டர் மேதாவிலாசத்தோடு இவான் இலியீச்சிடம் விளக்கினர். சிறு நீரைச் சோதனை செய்யும் பொழுது புதிய தகவல் கிடைத்தால் இந்த நோயைப் பற்றி மறு பரிசீலனை செய்ய வேண்டி யிருக்கும் என்பதையும் தெரிவித்தார். குற்ற

வாளிக் கூண்டில் நிற்கும் கைதிக்கு முன்னால் இவான் இலியீச் ஆயிரம் தடவைகள் இதைத் தான் செய்திருக்கிறார். அதிலும் இதே மாதிரி யான மேதாவிலாசத்தோடு செய்திருக்கிறார். டாக்டர் ஏற்கெனவே கூறியவற்றை இப்பொ ழுது மறுபடியும் அற்புதமான முறையில் தன் னுடைய கண்ணாடிகளுக்கு மேல் குற்றவாளி யை வெற்றியோடு—வேடிக்கையாகக் கூடப் —பார்த்துக் கொண்டு விளக்கினார். டாக்ட ருடைய பொழிப்பிலிருந்து தன்னுடைய நோய் மோசமானது, ஆனால் டாக்டருக்கு அது முக் கியமல்ல, மற்றவர்களுக்கும் கூட அது முக்கிய மல்ல என்று இவான் இலியீச் முடிவு செய்தார். இந்த முடிவு அவரை வேதனைப்படுத்தியது, அவரிடம் சுய அநுதாப உணர்ச்சியைப் பல மாக ஏற்படுத்தியது. இவ்வளவு முக்கியமான விஷயத்தைப் பற்றி அலட்சியமாக நடந்து கொள்ளும் அந்த டாக்டர் மீது அதே அள வுக்குப் பலமான ஆத்திரத்தையும் ஏற்படுத் தியது.

ஆனால் அவர் மறுப்புத் தெரிவிக்கவில்லை; எழுந்து மேசையின்மேல் பணத்தை வைத்து விட்டுப் பெருமூச்சு விட்டபடியே கேட்டார்:

''நோயாளிகள் உங்களிடம் முட்டாள்தன மான கேள்விகளைக் கேட்பார்களல்லவா? அது உங்களுக்குப் பழகிப்போயிருக்கும். பொது வாகக் கேட்கிறேன். என்னுடைய நோய் ஆபத்தானதா, இல்லையா?..''

டாக்டர் கண்ணாடிகளுக்கு மேல் அவரைக் கடுமையாகப் பார்த்தார். ''கைதியே! அனு மதிக்கப்பட்ட கேள்விகளோடு நீ நிறுத்திக்

கொள்ளவில்லை என்றால் உன்னை நீதிமன்றத்திலிருந்து வெளியே கொண்டு போகுமாறு நான் உத்தரவிட வேண்டியிருக்கும்'' என்று சொல்வதைப் போல இருந்தது.

''அவசியமானவை, சரியானவை என்று நான் கருதிய எல்லா விவரங்களையும் ஏற்கெனவே உங்களிடம் சொல்லிவிட்டேன்'' என்று பதிலளித்தார் டாக்டர். ''வேறு ஏதேனுமிருந்தால் சோதனை முடிந்த பிறகுதான் அது வெளிப்படும்.'' அதோடு டாக்டர் அவருக்கு வணக்கம் கூறி அனுப்பிவைத்தார்.

இவான் இலியீச் மெதுவாக நடந்து வெளியே சென்றார், வாட்டத்தோடு சறுக்குவண்டியில் உட்கார்ந்து வீட்டுக்குத் திரும்பினார். போகும் வழியில் டாக்டர் சொன்னவற்றைப் பற்றித் திரும்பத் திரும்ப நினைத்தார். டாக்டருடைய தெளிவில்லாத, குழப்பம் ஏற்படுத்தக் கூடிய விஞ்ஞானப் பதங்களைச் சாதாரண மொழிக்கு மாற்ற முயற்சி செய்தார். ''மோசமா—மிகவும் மோசமா அல்லது இன்னும் அவ்வளவு மோசமாகிவிடவில்லையா?'' என்ற தன்னுடைய கேள்விக்கு அவற்றில் பதிலைத் தேடினார். டாக்டர் தெரிவித்த விளக்கத்தின் சாராம்சம் மிகவும் மோசமான நிலைமை என்று அவர் கற்பனை செய்து கொண்டார். இப்பொழுது எதைப் பார்த்தாலும் அவருக்கு வருத்தமாக இருந்தது. வண்டி ஓட்டிகளைப் பார்க்கும் பொழுது சலிப்பு ஏற்பட்டது, வீடுகளைப் பார்க்கும் பொழுது சலிப்பு ஏற்பட்டது, பாதசாரிகள், கடைகள்—எல்லாமே சலிப்பைக் கொடுத்தன. அவருடைய வலி—ஒரு வினாடி கூட நிற்காமல்

ஏற்பட்டுக் கொண்டிருந்த மந்தமான, வேதனை யான வலி—டாக்டருடைய புரியாத சொற் களின் பின்னணியில் புதிய, துயரம் நிறைந்த முக்கியத்துவத்தைப் பெற்றன. ஆபத்து வரப் போகிறதென்ற புதிய உணர்ச்சியோடு அவர் அதன் மீது தன்னுடைய கவனத்தைக் குவித் தார்.

அவர் வீட்டுக்குச் சென்று எல்லாவற்றையும் மனைவியிடம் தெரிவித்தார். அவள் கேட்டாள். ஆனால் கதை நடுவில் அவருடைய மகள் புதுத் தொப்பியை அணிந்து கொண்டு உள்ளே வந்தாள். அவளும் அவளுடைய தாயாரும் வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அவள் தன்னை பலவந்தப்படுத்திக் கொண்டு அங்கே உட்கார்ந்து அவருடைய மந்தமான வர்ணனையைச் சற்று நேரம் கேட்டாள். ஆனால் அதிக நேரம் கேட்கவில்லை. அவர் மனைவிகூடப் பூராவும் கேட்கவில்லை.

''சரி. நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்றாள் அவருடைய மனைவி. ''இனி மருந்தை முறையாகச் சாப்பிட வேண்டும். மருந்துச் சீட்டை என்னிடம் கொடுங்கள். கெராஸிமை மருந்துக் கடைக்கு அனுப்புகிறேன்.'' இப்படிச் சொல்லிவிட்டு அவள் உடையை மாற்றிக் கொள்ளப் போய்விட்டாள்.

அவள் அறையில் இருந்தவரை அவர் மூச்சுக் கூட விடவில்லை. பிறகு ஆழமாகப் பெருமூச்சு விட்டார்.

''சரி. என் நிலைமை உண்மையில் அவ்வளவு

மோசமாக இல்லாதிருக்கலாம்...'' என்று நினைத்தார்.

அவர் மருந்து சாப்பிடத் தொடங்கினார். டாக்டருடைய கட்டளைகள் எல்லாவற்றையும் கடைப்பிடித்தார். அவருடைய சிறுநீரைச் சோதனை செய்த பிறகு டாக்டர் தன்னுடைய கட்டளையை மாற்றிக் கொண்டார். ஆனால் சோதனை சம்பந்தமாக அல்லது சோதனைக்குப் பிறகு என்ன தொடர வேண்டுமோ அதைப் பற்றி ஏதோ தப்பெண்ணம் ஏற்பட்டிருக்க வேண்டும். இந்த அற்ப விஷயத்தைப் பற்றி அந்தப் புகழ்பெற்ற டாக்டரிடம் கேட்க முடிய வில்லை. ஆனால் என்ன காரணத்தாலோ அவர் என்ன நடைபெறும் என்று கூறினாரோ அப்படி விஷயங்கள் நடைபெறவில்லை. டாக்டர் எதை யோ மறந்திருக்க வேண்டும் அல்லது நோ யாளியிடம் பொய் சொல்லியிருக்க வேண் டும் அல்லது நோயாளியிடமிருந்து எதையோ மறைத்திருக்க வேண்டும்.

எனினும் இவான் இலியீச் டாக்டருடைய கட்டளைகளை ஒன்று விடாமல் பின்பற்றினார். அவற்றைப் பின்பற்றுவது ஆரம்பத்தில் அவ ருக்கு ஆறுதலைக் கொடுத்தது.

டாக்டரைப் பார்த்துவிட்டுத் திரும்பிய பிறகு சுகாதாரத்தைப் பற்றி டாக்டரின் கட் டளையை முழுமையாகப் பின்பற்றுவதும் மருந்து சாப்பிடுவதும் வலியில், உறுப்புக்களின் செயல் முறையில் ஏதாவது மாற்றம் ஏற்பட் டால் அதைப் பதிவு செய்வதும் இவான் இலியீச்சினுடைய முக்கியமான வேலையாக மாறி

யது. மனிதர்களின் வியாதிகளும், உடல் ஆரோக்கியமுமே வாழ்க்கையில் அவருடைய முக்கியமான அக்கறையாயிற்று. நோயினுல் பாதிக்கப்பட்டிருந்தவர்களைப் பற்றி அல்லது இறந்து போனவர்களைப் பற்றி அல்லது நோயிலிருந்து, அதிலும் தன்னுடைய நோயைப் போன்ற நோயிலிருந்து குணமடைந்த பிறகு இழந்த ஆரோக்கியத்தைப் பெறுவதற்காக ஓய்வெடுத்துக் கொண்டிருப்பவர்களைப் பற்றி, அவருக்கு முன்ஞல் யாராவது பேசிஞல் அவர் கவனமாக உற்றுக் கேட்பார், தன்னிடம் ஏற்பட்டிருக்கும் நடுக்கத்தை மறைக்க முயற்சித்துக்கொண்டு கேள்விகள் கேட்பார், மனதில் தன்னுடைய உடல்நிலையோடு அதை ஒப்பிட்டுப் பார்ப்பார்.

வலி குறையவில்லை. ஆஞல் குணம் ஏற்பட்டு வருவதாக நினைக்கும்படி இவான் இலியீச் தன்னையே நிர்ப்பந்தித்துக் கொண்டார். எல்லாம் சரியாகப் போய்க்கொண்டிருக்கும் வரையிலும் அவர் தன்னை ஏமாற்றிக் கொள்வதில் வெற்றியடைந்தார். ஆஞல் மனைவியோடு சச்சரவு அல்லது அலுவலகத்தில் ஒரு அசம்பாவிதம் அல்லது சீட்டாட்டத்தில் தோல்வி ஏற்பட்ட உடனே அவர் நோயைப் பற்றித் தீவிரமாக நினைக்கும் படியாகிவிடும். இதற்கு முன்பாக அவர் துன்பத்தை தீரமாகத் தாங்கிக் கொண்டார், அதைச் சமாளித்து விட முடியும் என்ற நம்பிக்கையில் வெற்றி கிட்டும் வரை அதை எதிர்த்துப் போராடிஞர். வெற்றியடைந்து விடுவோம், எப்படியும் கடைசியில் ''முழு

வெற்றி'' கிடைத்துவிடும் என்று நம்பினார். ஆனால் இப்பொழுது ஒவ்வொரு இடையூறும் அவருக்குக் குழி தோண்டியது. என்ன ஏற் படுமோ என்ற அவநம்பிக்கையான நிலைமைக்கு அவரைத் தள்ளியது. இப்பொழுதுதான் சிறி தளவு குணம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது, மருந்து குணம் ஏற்படுத்தத் தொடங்கியிருந் தது, அதற்குள் இந்த பாழாய்ப் போன இடை யூறு அல்லது துன்பம் வந்துவிட்டதே... அவர் அந்த இடையூறுக்கு எதிராக அல்லது தனக்குத் துன்பத்தைக் கொடுத்துத் தன்னைக் கொலை செய்து கொண்டிருப்பவர்களுக்கு எதிராகக் குமுறினார். இந்தக் குமுறலே தன்னைக் கொல் கிறது என்பதை உணர்ந்தார். ஆனால் அவரால் அதை நிறுத்த முடியவில்லை. மக்கள் மீதும் சந்தர்ப்பங்கள் மீதும் ஏற்படும் கோபம் தன் னுடைய நோயைத்தான் தீவிரப்படுத்துகிறது என்பதை அவர் புரிந்து கொண்டிருக்க வேண் டும். எனவே தற்செயலான நிகழ்வுகளைப் பற்றிச் சிறிதும் அலட்டிக் கொண்டிருக்கக் கூடாது. ஆனால் அவர் இதற்கு எதிர்த்திசை யில் சிந்தித்தார். தனக்கு அமைதி வேண்டும் என்றார், எதுவும் தன்னுடைய அமைதியைக் குலைத்துவிடக் கூடாது என்று மிகவும் ஜாக் கிரதையாக இருந்தார். அது மிகக் குறைவான அளவுக்கு மீறப்பட்டால் கூட ஆத்திரமடைந் தார். அவர் மருத்துவப் புத்தகங்களைப் படித் தும் டாக்டர்களைக் கலந்தாலோசித்தும் நிலை மையை மேலும் மோசமாக்கிக் கொண்டார். அவருடைய உடல்நிலை மிகவும் படிப்படியாக

மோசமாகிக் கொண்டிருந்த படியால் ஒரு நாளை மறு நாளோடு ஒப்பிட்டுப் பார்த்து (அந்த வேறுபாட்டை அநேகமாக உணர முடியாது) தன்னை ஏமாற்றிக் கொள்வது அவருக்குச் சுலபமாக இருந்தது. ஆனால் அவர் டாக்டர்களிடம் போகும் பொழுது உடல்நிலை மோசமாகிக்கொண்டிருப்பது மட்டுமல்லாமல் அது மிகவும் வேகமாக ஏற்பட்டுக் கொண்டிருப்பதாக உணர்ந்தார். எனினும் அவர் தொடர்ந்து டாக்டர்களைக் கலந்தாலோசித்துக் கொண்டிருந்தார்.

அவர் அந்த மாதத்திலேயே மற்றொரு பிரபலமான டாக்டரைச் சந்தித்தார். இவர் பிரச்சினையைச் சிறிதளவு வேறு விதமாக முன்வைத்தார் என்ற போதிலும் அநேகமாக முதல் டாக்டர் கூறிய மாதிரியே கூறினார். இந்தப் பிரபலஸ்தரின் அறிவுரை இவான் இலியீச்சின் சந்தேகத்தையும் அச்சத்தையுமே அதிகப்படுத்தின. அவருடைய நண்பரின் நண்பரொருவர்—இவர் சிறந்த டாக்டர்—நோய்க்கு முற்றிலும் வேறு விதத்தில் விளக்கம் கொடுத்தார். இவான் இலியீச் குணமடைந்துவிடுவார் என்று அவர் உறுதியளித்த போதிலும் அவருடைய கேள்விகளும் அனுமானங்களும் அவரை அதிகமாகக் குழப்பி அவருடைய சந்தேகங்களை அதிகப்படுத்திவிட்டன. ஒரு ஹோமியோபதி மருத்துவர் இன்னொரு விதத்தில் நோய்க்கு விளக்கமளித்து வேறு விதமான மருந்தைக் கொடுத்தார். இவான் இலியீச் ஒரு வாரம் வரை வேறு யாருக்கும் தெரியாமல் இந்த மருந்தைச் சாப்

பிட்டு வந்தார். ஒரு வாரம் முடிந்தது. ஆனால் நோய் தணியவில்லை. அதன் காரணமாக இந்த மருத்துவ முறையிலும் மற்ற மருத்துவ முறைகளிலும் அவருடைய நம்பிக்கை சிதைந்து அவர் முன்னைப் போதுமிருந்ததைக் காட்டிலும் அதிகமாகச் சோர்வடைந்தார். ஒரு நாள் அவருக்குத் தெரிந்த ஒரு பெண், தெய்வ வடிவங்களினால் நோய் குணமடையும் என்று அவரிடம் கூறினாள். இவான் இலியீச்சின் மனம் அதை கவனமாகக் கேட்டது, அப்படி குணமடைவது சாத்தியம் என்று நம்பியது. இந்த சம்பவம் அவருக்கு பயத்தைக் கொடுத்தது. ''நான் அவ்வளவு முட்டாளாகிவிட்டேனா?'' என்று அவர் தன்னையே கேட்டுக் கொண்டார். ''பிதற்றல்! இனிமேல் நோயைப் பற்றி நினைத்து நடுங்கக் கூடாது. ஒரு டாக்டரைத் தேர்ந்தெடுத்து அவர் விதிக்கும் சிகிச்சையைக் கண்டிப்பாகப் பின்பற்ற வேண்டும். அதைத் தான் நான் செய்யப் போகிறேன். போதும்! இனிமேல் உடம்பைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கப் போவதில்லை. கோடை காலம் முடிகின்ற வரை டாக்டர் கட்டளையைக் கண்டிப்பாக நிறைவேற்றுவேன். பிறகு என்ன நடக்குமோ, பார்ப்போம். இதற்கு மேல் ஊசலாட்டம் கூடாது!..'' இப்படிச் சொல்வது சுலபமாக இருந்தது; ஆனால் அவரால் அதை நிறைவேற்ற முடியவில்லை. உடம்பின் ஒரு பக்கத்தில் ஏற்பட்ட வலி அவரை மிகவும் பலவீனப் படுத்தியது, அது சீர்கேடடைந்து வருவதாகத் தோன்றியது, அவருக்குச் சிறிதும் ஓய்வில்லாமற்

செய்தது, வாயில் முன்பு ஏற்பட்டிருந்த ஒரு வகையான உணர்ச்சி மேலும் பிரத்யேக மான தன்மையைப் பெற்றது. வெளியே மூச்சு விடும்பொழுது அருவருப்பான நாற்றம் ஏற் படுவதாக உணர்ந்தார். பசி குறைந்தது; அவர் மேலும் பலவீனமடைந்தார். இனியும் தன்னை ஏமாற்றிக் கொள்ள முடியாது, இவான் இலி யீச்சுக்கு ஏதோ ஆபத்தான ஒன்று ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது, அது புது விதமானது, அது மிக முக்கியமானதென்பதால் அவ்வளவு முக் கியமான ஒன்று அது வரை அவர் வாழ்க்கை யில் நடைபெற்றதில்லை. அவர் மட்டும்தான் அதை உணர்ந்தார். அவரைச் சுற்றிலுமிருந்த வர்கள் அதைப் புரிந்து கொள்ளவில்லை அல்லது அதைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று அக்கறை எடுக்கவில்லை. உலகத்தில் எல்லாமே எப்பொழுதும் போல இருப்பதாகவே அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். மற்ற எதை யும் காட்டிலும் இது அவரைச் சித்திரவதை செய்தது. வீட்டில் இருந்தவர்கள்—குறிப்பாக, அவருடைய மனைவியும் மகளும்—உயர் குடும் பங்களில் நடைபெறும் கொண்டாட்டங்களில் ஈடுபட்டிருந்தார்கள். அவர்கள் எதையும் பார்க்கவில்லை, எதையும் புரிந்து கொள்ள வில்லை. அவர் எப்பொழுதுமே உற்சாகமில்லாம லும் சிடுசிடுப்பாகவும் இருப்பதைப் பற்றி (அது அவருடைய குறை என்பதைப் போல) ஆத் திரப்பட்டார்கள். அவர்கள் தன்னை ஒரு தொந் தரவாகக் கருதுகிறார்கள் என்பதை—அவர் கள் என்னதான் மறைத்தபோதிலும்—அவர்

புரிந்து கொண்டார். அவர் என்ன சொன்னாலும் அல்லது செய்தாலும் அவருடைய நோயைப்பற்றி அவர் மனைவி ஒரு குறிப்பிட்ட அணுகு முறையைக் கடைப் பிடித்தாள். அந்த அணுகு முறை இதுதான்: ''இரக்கமான உள்ளம் கொண்ட எல்லோரையும் போலவே இவான் இலியீச்சினால் டாக்டருடைய கட்டளையை அப்படியே நிறைவேற்ற முடிவதில்லை. ஒரு நாள் மருந்தைச் சாப்பிடுவார், உணவில் பத்தியமாக இருப்பார். மறு நாளைக்கே (நான் அவரைக் கவனிக்காதிருந்தால்) மருந்தைச் சாப்பிட மறந்து விடுவார், மீன் வறுவலை (அதைச் சாப்பிடக் கூடாது) சாப்பிட்டுவிடுவார், காலை ஒரு மணிவரை சீட்டாடிக்கொண்டிருப்பார்'' என்று தன் நண்பர்களிடம் கூறினாள்.

'''இது வரை எப்பொழுதாவது நான் அப்படி நடந்திருக்கிறேனா?' என்று ஒரு சமயத்தில் இவான் இலியீச் சங்கடத்தோடு கேட்டார். 'பியோத்தர் இவானவிச் வீட்டில் ஒரே ஒரு தடவை...'

'நேற்றிரவில் ஷெபெக்குடன்.'

'அதைச் சொல்ல முடியுமா? என்னால் வலியினால் தூங்க முடியவில்லை...'

'அது முக்கியமில்லையா? இப்படியே போனால் உங்கள் உடம்பு ஒருக்காலும் குணமடையப் போவதில்லை. எங்களைச் சித்திரவதை செய்து கொண்டே இருக்கப் போகிறீர்கள்.' ''

பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா மற்றவர்களிடமும் இவான் இலியீச்சிடமும் கூடச்

சொன்னதை வைத்துப் பார்க்கும் பொழுது, அந்த நோய்க்கு அவர்தான் பொறுப்பு, எல்லாமே தனக்குத் தொந்தரவு தருவதற்கு மற்ருெரு வழி என்பதே தன் கணவருடைய நோயைப் பற்றி அவளுடைய அணுகுமுறையாக இருந்தது. இந்த அணுகுமுறை வேண்டுமென்றே ஏற்பட்டதல்ல என்பது இவான் இலியீச்சுக்குத் தெரியும், ஆனல் அதற்காக அவர் அதை ஒத்துக்கொள்ள முடியுமா?

நீதிமன்றத்திலும் இவான் இலியீச் தன்னைப் பற்றி ஒரு விசித்திரமான அணுகுமுறையைக் கவனித்தார் அல்லது குறைந்தபட்சம் கவனித்ததாக நினைத்துக் கொண்டார். சில சமயங்களில் தன்னுடைய சகாக்கள் இடத்தைக் காலி செய்யப் போகிற ஒருவரைப் பார்ப்பதைப் போல திருட்டுத்தனமான முறையில் தன்னைப் பார்ப்பதைப் போல அவர் உணர்ந்தார். மற்ற சமயங்களில் அவருடைய நண்பர்கள் அவருடைய கற்பனை நோயைப் பற்றி வேடிக்கையாக அவரைக் கேலி செய்வதுண்டு. அவர் உடலுக்குள் வளர்ந்து கொண்டிருக்கின்ற, அவர் உயிரை இரவு பகலாகக் கொறித்துக் கொண்டிருக்கின்ற, தடுக்க முடியாதபடி அவர் உயிரை இழுத்துப் போய்க் கொண்டிருக்கின்ற அந்த பயமேற்படுத்துகின்ற, பயங்கரமான, யாருமே கேள்விப்பட்டிராத ஒன்று கேலிப் பேச்சுக்கு மிகவும் பொருத்தமான பொருள் என்று நினைத்தார்கள் போலும். அவர் குறிப்பாக, ஷ்வார்த்ஸிடம்—அவருடைய உற்சாகம், விளையாட்டான குணம், எப்பொழுதுமே முறை

பிசகாதிருக்கின்ற தன்மை ஆகியவை இவான் இலியீச்சுக்குப் பத்து வருடங்களுக்கு முன்னுல் தன்னைப் பற்றிய நினைவுகளை ஏற்படுத்தியது—மிகவும் எரிச்சலடைந்தார்.

அவருடைய நண்பர்கள் அவரோடு சீட்டாட வந்தார்கள். அவர்கள் மேசைக்கு முன்னுல் உட்கார்ந்து புதிய சீட்டுகளைக் கலைத்துப் போட்டார்கள். அவர் தன்னுடைய சீட்டுகளை எடுத்து வரிசைப்படி அடுக்குகிருர். ஏழு டயமன்களையும் ஒன்ருகச் சேர்த்தார்கள். அவருடைய சகா ''துருப்பு இல்லை'' என்று சொல்லிவிட்டு இரண்டு டயமன்களை மேசை மேல் வைத்தார். இதற்கு மேல் என்ன வேண்டும்? அவர் ஆனந்தமடைந்திருக்க வேண்டும்—''முழு வெற்றி''. ஆனுல் இவான் இலியீச் திடீரென்று கொறிக்கும் வலியை உணர்கிருர். வாயில் அந்த உணர்ச்சி ஏற்படுகிறது. இப்படிப்பட்ட நிலைமையில் ''முழு வெற்றியில்'' பரவசமடைவது பைத்தியக்காரத்தனம் என்று நினைக்கிருர்.

தன்னுடைய சகாவான மிஹயீல் மிஹாய்லவிச் தன்னுடைய சதைப் பிடிப்பான கையை மேசையில் தட்டுவதையும் சலுகை காட்டுவதைப் போல தன்னுடைய சீட்டுகளை எடுக்க மறுப்பதையும் இவான் இலியீச் தன்னுடைய கையை அதிக தூரம் நீட்டாமல் அவற்றை எடுத்துக் கொள்ள உதவியாக அவரை நோக்கி அந்தச் சீட்டுக்களை நகர்த்துவதையும் பார்க்கிருர். ''கையை நீட்ட முடியாத அளவுக்கு நான் பலவீனமாகிவிட்டதாக நினைக்கிருரா?'' என்று நினைத்தபடியே இவான் இலியீச் துருப்புச்

சீட்டை மறந்துவிட்டு சகாவின் சீட்டை வெட்டி விளையாடுகிறார், ''முழு வெற்றியை'' இழந்து விடுகிறார். இதில் மிக மோசமானது என்னவென்றால் மிஹயீல் மிஹாய்லவிச் எவ்வளவு சங்கடமடைகிறார் என்பது தெரிந்த போதிலும் அவர் சிறிதுகூடக் கவலைப்படவில்லை என்பதாகும். அவர் ஏன் கவலைப்படவில்லை என்பது நினைப்பதற்கே பயங்கரமானதாகும்.

அவர் மோசமான நிலையிலிருக்கிறார் என்பதை எல்லோரும் பார்க்கிறார்கள். ''உங்களுக்குக் களைப்பாக இருந்தால் விளையாட்டை நிறுத்தி விடுவோம். சற்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்'' என்று அவர்கள் சொல்கிறார்கள். ஓய்வா? எதற்காக? அவருக்குச் சிறிது கூடக் களைப்புக் கிடையாது. அவர் அந்த ஆட்டத்தைக் கடைசி வரை விளையாட விரும்புகிறார். அவர்கள் வருத்தத்தோடு அமைதியாக உட்கார்ந்திருக்கிறார்கள். இந்த வருத்தத்துக்குத் தானே காரணம் என்பது இவான் இலியீச்சுக்குத் தெரியும். ஆனால் அவரால் அதைப் போக்க முடியவில்லை. அவர்கள் உணவருந்துகிறார்கள், தன்னுடைய வாழ்க்கையில் நஞ்சு கலந்துவிட்டது, மற்றவர்களுடைய வாழ்க்கையிலும் நான் நஞ்சைக் கலந்து கொண்டிருக்கிறேன், அந்த நஞ்சு குறைவதற்குப் பதிலாகத் தன்னுடைய உயிரில் மென்மேலும் ஆழமாக ஊடுருவிச் கொண்டிருக்கிறது என்ற உணர்வோடு இவான் இலியீச்சைத் தனியே விட்டு விருந்தினர்கள் வீடுகளுக்குச் செல்கிறார்கள்.

இந்த உணர்வோடும் உடல்வலியோடும் பீதி

யுணர்ச்சியோடும் அவர் படுக்கையில் படுத் திருக்க வேண்டும். பெரும்பாலான சந்தர்ப்பங் களில் இரவில் நெடுநேரம் அவர் வலி காரண மாகத் தூங்காது விழித்திருப்பார். காலையில் அவர் மறுபடியும் எழுந்து, உடையணிந்து கொண்டு, நீதிமன்றத்துக்குப் போக வேண் டும். அங்கே பேச வேண்டும், எழுத வேண்டும். அவர் நீதிமன்றத்துக்குப் போகவில்லையென்றால் இருபத்து நான்கு மணி நேரமும் வீட்டில் இருக்கவேண்டியிருக்கும், ஒவ்வொரு மணியும் அவருக்குச் சித்திரவதையாக இருக்கும். அவர் இப்படியே முற்றிலும் தனிமையாக, தன்னைப் புரிந்து கொண்டு அனுதாபம் காட்டுவதற்கு ஒரு நபர் கூட இல்லாமல் அழிவின் விளிம்பில் தொடர்ந்து வாழ்க்கை நடத்த வேண்டியிருக் கும்.

## 5

இப்படி ஒரு மாதம், பிறகு மற்றொரு மாதம் கழிந்தது. வருடப் பிறப்புக்கு முன்னர் அவ ருடைய மைத்துனர் அந்த நகரத்துக்கு வந்து அவர்களுடைய வீட்டில் தங்கியிருந்தார். இவான் இலியீச் நீதிமன்றத்தில் இருந்தார். பிரஸ்கோவியா ஃபியோதரவ்னு கடைகளுக்குப் போயிருந்தாள். இவான் இலியீச் வீட்டுக்கு வந்த பொழுது உடல் நலமும் உற்சாகமும் நிறைந்த தன் மைத்துனர் தன்னுடைய படிப் பறையில் தோல்பெட்டியைத் திறந்து கொண் டிருப்பதைப் பார்த்தார். இவான் இலியீச்சின் காலடிச் சத்தம் கேட்டதும் அவர் தலையை

உயர்த்திப் பார்த்தார். ஒரு கண நேரம் அவரை அப்படியே அமைதியாக உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய பார்வை இவான் இலியீச்சுக்கு எல்லாவற்றை யும் புரிய வைத்தது. மைத்துனர் தன் அதிர்ச் சியைத் தெரிவிக்க வாயைத் திறந்தார், ஆனால் தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டார். இதுவும் எல்லாவற்றையும் நிரூபித்தது.

''ஏன்—நான் மாறிவிட்டேனா?''

''ஆ-ஆமாம், நீங்கள் மாறிவிட்டீர்கள்.''

அதற்குப் பிறகு, இவான் இலியீச் எவ்வள வோ பாடுபட்டும் அவருடைய தோற்றத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூட மைத்துனரைப் பேசவைக்க முடியவில்லை. பிரஸ்கோவியா ஃபி யோதரவ்னா வந்தாள். அவளுடைய அறைக் குள் மைத்துனர் சென்றார். இவான் இலியீச் கதவைப் பூட்டிக் கொண்டு கண்ணாடியில் தன்னை உற்றுப் பார்த்தார். முதலில் பக்க வாட்டிலும் பிறகு நேர் முகமாகவும் பார்த் தார். அவரும் மனைவியும் சேர்ந்திருக்கும் ஒரு புகைப்படத்தை எடுத்தார். கண்ணாடியில் தோன்றும் உருவத்தோடு அதை ஒப்பிட்டுப் பார்த்தார். வேறுபாடு பயங்கரமாக இருந் தது. முழங்கைக்குமேல் சட்டையை உயர்த்தி விட்டுக் கையைப் பரிசோதித்தார், பிறகு சட் டைக் கையைக் கீழே இறக்கிவிட்டு சோபாவில் பொத்தென்று விழுந்தார். இரவைக் காட்டி லும் இருண்ட சிந்தனைகளில் அவர் மூழ்கினார்.

''இல்லை, வேண்டாம்'' என்று அவர் தனக் குள் சொல்லிக் கொண்டார். அவர் குதித்

தெழுந்து மேசைக்கு முன்னுல் போய் உட்கார்ந்து ஒரு வழக்கைப் பற்றிய குறிப்புகளை எடுத்தார். அதைப் படிக்க முயற்சி செய்தார், ஆனுல் அவரால் படிக்க முடியவில்லை. அவர் கதவைத் திறந்து கொண்டு உபசரிப்பு அறைக்குள் சென்றுர். அந்த அறைக் கதவு நன்ருகத் திறந்திருந்தது. அவர் அடிமேலடி வைத்துக் கதவுக்குப் பக்கத்தில் போய் உள்ளே பேசுவதைக் கேட்டார்.

''நீ மிகைப் படுத்திச் சொல்கிருய்'' என்றுள் பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞு.

''மிகைப் படுத்துகிறேஞு? உனக்கே தெரியவில்லையா? அவர் பிரேதத்தைப் போல இருக்கிருர். அவருடைய கண்களைப் பார். அவற்றில் ஒளி இல்லை. அவருக்கு என்ன நோய்?''

''யாருக்குமே புரியவில்லை. நிக்கலாயெவ் (ஒரு டாக்டர்) ஒன்றைச் சொன்ஞர். ஆனுல் லெஷெதித்ஸ்கி (பிரபலமான டாக்டர்) அதற்கு முற்றிலும் எதிரான அபிப்பிராயத்தைக் சொன்ஞர்...''

இவான் இலியீச் அங்கிருந்து புறப்பட்டுத் தன்னுடைய அறைக்குள் சென்று அங்கே படுத்தபடியே சிந்தனையில் ஈடுபட்டார். ''குண்டிக்காய்கள். மிதக்கும் குண்டிக்காய்.'' டாக்டர்கள் தெரிவித்த எல்லாவற்றையும்—குண்டிக்காய் பிரிந்துவிட்டது, அது மிதந்து கொண்டிருக்கிறது—அவர் நினைத்துப் பார்த்தார். கற்பனையில் அவர் தன்னுடைய குண்டிக்காயைப் பிடித்து அதன் இடத்தில் அதை நிறுத்தி வைத்தார். அது மிகச் சுலபமான காரியமாக அவருக்குத் தோன்றியது. ''சரி. நான் பியோத்தர்

இவானவிச்சை (அந்த நண்பருக்கு ஒரு டாக்டர் நண்பராக இருந்தார்) போய்ப் பார்க்க வேண் டும்.'' அவர் மணியடித்தார், வண்டியைக் கொண்டு வருமாறு உத்தரவிட்டார், அவரைப் பார்க்கப்போவதற்குத் தயாராஞர்.

"Jean எங்கே போகிறீர்கள்?'' என்று அவர் மனேவி மிகவும் சோகம் நிறைந்த, என்று மில்லாதபடி அன்பு தொனிக்கும் குரலில் கேட் டாள்.

வழக்கத்துக்கு மாருன அவளுடைய மரி யாதை அவருக்கு எரிச்சலேற்படுத்தியது. அவர் அவளே உம்மென்று பார்த்தார்.

''நான் பியோத்தர் இவானவிச்சைப் பார்க்க வேண்டும்.''

டாக்டருக்கு நண்பரான தன்னுடைய நண் பரின் வீட்டுக்குச் சென்ருர். அவர்களிருவரும் டாக்டரைப் பார்க்கச் சென்ருர்கள். டாக்டர் வீட்டிலிருந்தார். அவர்கள் டாக்டரோடு நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவருடைய உடலில் ஏற்பட்டுக் கொண் டிருக்கும் உடலியல் மற்றும் உறுப்பியல் சம் பந்தமான மாற்றங்களேப் பற்றி டாக்டர் விளக்கியவுடன் இவான் இலியீச்சுக்கு எல் லாமே தெளிவாகிவிட்டது.

பெருங்குடல் வாயில் ஏதோ ஒன்று, மிகச் சிறிய அளவான ஒன்று இருக்கிறது. அதை குணப் படுத்திவிட முடியும். ஒரு உறுப்பின் செயலேப் பலப்படுத்த வேண்டும். இன்ெனுரு உறுப்பின் செயலே பலவீனப்படுத்த வேண்டும், அந்தச் சிறிய ஒன்றை உள் வாங்கச் செய்ய

வேண்டும், பிறகு எல்லாமே சரியாகிவிடும். இவான் இலியீச் மாலை உணவருந்துவதற்குச் சில நிமிடங்கள் தாமதமாக வந்தார். உணவு சாப்பிட்டபிறகு சிறிது நேரம் உற்சாகமாகப் பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அவரால் படிப்பறைக்குள் போய் வேலை செய்ய முடிய வில்லை. கடைசியில் படிப்பறைக்குச் சென்று வேலை செய்ய உட்கார்ந்தார். சில வழக்குகளைப் பற்றிய குறிப்புகளைப் படித்தார், அந்த வேலை யில் கவனத்தைச் குவித்தார். ஆனல் ஏதோ ஒரு முக்கியமான, தனியான விவகாரத்தைத் தள்ளிப் போட்டு விட்டோம், இந்த வேலையை முடித்ததும் அதை கவனிக்க வேண்டும் என்று அவர் மனம் சதா உறுத்திக் கொண்டிருந்தது. வேலை முடிந்தபிறகு அந்தத் தனி விவகாரம் நினைவுக்கு வந்தது. பெருங்குடல் வாய்ப் புண்ணைப் பற்றிய சிந்தனைகள்தான் அந்தத் தனி விவகாரம். ஆனல் அவர் உடனே அந்தப் பிரச்சினையில் மூழ்கிவிடவில்லை. அதற்குப் பதி லாக, தேநீர் அருந்த உபசரிப்பு அறைக்குப் போனர். அங்கே விருந்தினர்கள் உரையாடிக் கொண்டும் பியானே வாசித்துக் கொண்டும் பாடிக் கொண்டுமிருந்தார்கள். தன் மகளை மணந்துகொள்ள உறுதி செய்யப்பட்டிருக்கும் விசாரணை நீதிபதியும் அங்கே இருந்தார். அந்தக் குழுவினரில் மிகவும் உற்சாகமாக, வேடிக்கையாகப் பேசியது இவான் இலியீச்சே என்று பிரஸ்கோவியா ஃபியோதரவ்ன கூறி னள். ஆனல் பெருங்குடற் புண்ணைப் பற்றிய முக்கியமான சிந்தனைகளைத் தள்ளி வைத்திருப்

பதை அவர் ஒரு நிமிடம் கூட மறக்கவில்லை. பதினொரு மணியானதும் அவர் அங்கிருந்த எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு தன்னுடைய அறைக்குச் சென்றார். நோய் ஏற்பட்டதிலிருந்து அவர் தன் படிப்பறைக்குப் பக்கத்திலுள்ள சிறிய அறையில் தனியாகவே தூங்கிக் கொண்டிருந்தார். அவர் அங்கே சென்று உடைகளை மாற்றிக் கொண்டார், எமிலி ஸோலாவின் நாவலைப் படிக்க எடுத்தார். ஆனால் அதைப் படிப்பதற்குப் பதிலாகத் தன்னுடைய சிந்தனைகளில் மூழ்கினார். அவர் நெடுங்காலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தபடி பெருங்குடற் புண்ணைக் குணப் படுத்தி விட்டதாகக் கற்பனை செய்துகொண்டார். உள்வாங்குதல், வெளியேற்றுதல், வழக்கமான செயல் முறையை மறுபடியும் ஏற்படுத்துதல். ''நாம் இயற்கைக்கு உதவியளிக்க வேண்டும். அது தான் முக்கியம்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார். இது மருந்தை அவருக்கு நினைவு படுத்தியது. அவர் எழுந்து மருந்தை எடுத்துக் குடித்தார். மருந்து எவ்வளவு நன்முறையான விளைவை ஏற்படுத்துகிறது, எப்படி வலியைக் குறைக்கிறது என்று நினைத்தபடியே காலை நீட்டிப் படுத்தார். ''நான் முறைப்படி மருந்து சாப்பிட வேண்டும், தீய பழக்கங்கள் எல்லாவற்றையும் நிறுத்திவிட வேண்டும். நிச்சயமாக உடம்பு குணமாகிவிட்டதைப் போல இருக்கிறது, அதிகம் குணமடைந்ததைப் போல இருக்கிறது.'' அவர் விலாவைத் தொட்டுப் பார்த்தார். தொடும்பொழுது வலி

ஏற்படவில்லை. ''ஒருவிதமான வலியும் இல்லையே. நான் உண்மையாகவே மிகவும் குணமடைந்துவிட்டேன்.'' அவர் மெழுகுவர்த்தி விளக்கை அணைத்துவிட்டு ஒருக்களித்துப் படுத்தார்... பெருங்குடற் புண் குணமாகிக் கொண்டிருக்கிறது, உள்வாங்கிக் கொண்டிருக்கிறது. திடீரென்று அந்தப் பழைய, பழக்கமான, கொறிக்கும் வலியை உணர்ந்தார். அமைதியாக, தீவிரமாக, விடாமல் வலி ஏற்பட்டது. வாயில் அதே மாதிரியான பழைய அருவருப்பு ஏற்பட்டது. அவருடைய இதயம் ஒடுங்கியது, அவருக்கு மயக்கம் வந்துகொண்டிருந்தது. ''கடவுளே! கடவுளே!'' என்றார். ''இது ஒருக்காலும் நிற்கப் போவதில்லை.'' திடீரென்று எல்லாவற்றையும் முற்றிலும் வேறு விதமாகப் பார்த்தார். ''பெருங்குடல் வாய்ப் புண், குண்டிக் காய்கள்!'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டார். ''இது பெருங்குடலையும் குண்டிக் காய்களையும் பற்றிய விவகாரம் அல்ல. இது வாழ்க்கையையும்... மரணத்தையும் பற்றிய விவகாரம். ஆமாம். ஒரு காலத்தில் உயிர் இருந்தது. இப்பொழுது அது போய்க் கொண்டிருக்கிறது, போய்க் கொண்டேயிருக்கிறது, அதைத் தடுக்க என்னால் ஒன்றுமே செய்ய முடியாது. ஆம். நான் ஏன் என்னை ஏமாற்றிக் கொள்ள வேண்டும்? நான் செத்துக் கொண்டிருக்கிறேன், சில வாரங்களில், நாட்களில், மணிகளில் கூட செத்துப் போய்விடுவேன் என்பது என்னைத் தவிர எல்லோருக்கும் தெரிந்திருக்கவில்லையா? முன்பு ஒளி இருந்தது.

இப்பொழுது இருட்டுத்தான் இருக்கிறது. நான் இங்கே இருந்தேன், அங்கே போய்க் கொண்டிருக்கிறேன்! எங்கே?'' அவர் உடல் முழுவதும் குளிர்ச்சி அடைந்தது. மூச்சு விடுவதற்குச் சிரமப்பட்டார். தன்னுடைய இதயத் துடிப்பைத் தவிர வேறு எதுவுமே அவருக்குக் கேட்கவில்லை.

''நான் சாகப் போகிறேன். எது உயிரோடிருக்கப் போகிறது? ஒன்றுமில்லை. செத்த பிறகு நான் எங்கே இருப்பேன்? உண்மையாகவே மரணமா? ஓ! நான் சாக விரும்பவில்லை.'' விளக்கைப் பற்ற வைப்பதற்காக அவர் குதித்தெழுந்தார், நடுங்கிக் கொண்டிருந்த கரங்களால் விளக்கைத் தேடினார், மெழுகுவர்த்தியையும் விளக்கையும் தரையில் தட்டிவிட்டார், மறுபடியும் தலையணை மீது சாய்ந்தார். ''அது முக்கியமா? எல்லாம் ஒன்றுதான்'' என்று கண்களை அகலமாக விரித்து இருட்டை உற்றுப் பார்த்துக் கொண்டே மனதுக்குள் சொல்லிக் கொண்டார். ''மரணம்! ஆம், மரணம்! அவர்களுக்குத் தெரியவில்லை. அதைத் தெரிந்து கொள்ள விருப்பமும் இல்லை. அவர்களிடம் இரக்கமும் கிடையாது. அவர்கள் பாடிக் கொண்டிருக்கிறார்கள் (வெகு தூரத்துக்கு அப்பால் ஒரு பெண் பாடுவதும் பியானோ வாத்தியத்தின் பின்னணி இசையும் மூடப்பட்ட கதவு வழியாக அவருக்குக் கேட்டது). அவர்களுக்கு இப்பொழுது எல்லாமே ஒன்றுதான். ஆனால் அவர்களும் மரணமடைவார்கள். முட்டாள்கள். நான் முதலில் போகிறேன். பிறகு

அவர்கள். அவர்களுக்கும் இந்த கதி வரத்தான் போகிறது. இப்பொழுது அவர்கள் ஆனந்தத்தை அனுபவிக்கிறார்கள். மிருகங்கள்!'' அவருக்கு ஏற்பட்ட எரிச்சல் தொண்டையை அடைத்தது. அவர் பயங்கரமாக, சொல்ல முடியாத அளவுக்கு வேதனையடைந்தார். இந்தப் பயங்கரத்தை ஒவ்வொருவரும் எப்பொழுதாவது அனுபவிக்க வேண்டுமென்பதை நினைத்துப் பார்க்கக் கூட முடியாது. அவர் உடம்பை நிமிர்த்திக் கொண்டார்.

''ஏதோ தவறு ஏற்பட்டுவிட்டது. நான் பதட்டமடையக் கூடாது. எல்லாவற்றையும் தொடக்கத்திலிருந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும்.'' அவர் சிந்திக்கத் தொடங்கினார். ''ஆம், நோயின் ஆரம்பம். விலாவில் இடித்துக் கொண்டேன். ஆனால் அன்றைக்கு வழக்கம் போலவேதான் இருந்தேன். மறுநாளும் தான். முதலில் லேசாகத்தான் வலித்தது, பிறகு அது மோசமடைந்தது. பிறகு டாக்டர்களிடம் போகத் தொடங்கினேன். பிறகு சோர்வடைந்தேன், உற்சாகமிழந்தேன், பிறகு இன்னும் அதிகமான டாக்டர்களைப் பார்த்தேன். இந்தக் காலம் முழுவதிலும் நான் செங்குத்தான பாறையின் விளிம்பை மேலும் மேலும் நெருங்கிக் கொண்டிருந்தேன். என் சக்தி குறைந்து விட்டது. விளிம்புக்குப் பக்கத்தில், பக்கத்தில். இப்பொழுது நான் மிக மோசமான நிலைமையிலிருக்கும் நோயாளி. என் கண்களில் ஒளி இல்லை. மரணம் தான் இருக்கிறது. என் பெருங்குடல் வாய்ப் புண்ணைப் பற்றியே இன்

னும் நினைத்துக் கொண்டிருக்கிறேன். என் குடல் நோயை குணப்படுத்திவிடலாம் என்று நினைக்கிறேன். ஆனால் மரணம் என்னைச் சூழ்ந்து விட்டது. ஐயோ! இது தான் மரணமா?'' மிகவும் பயங்கரமான அச்சம் அவரை மறுபடியும் பிடித்துக் கொண்டது. அவர் மூச்சுத் திணறினார், கீழே குனிந்தார், தீப்பெட்டியைத் தேடினார், படுக்கைக்குப் பக்கத்திலுள்ள மேசையின் மேல் முழங்கையை இடித்துக் கொண்டார். அவருக்கு அதிகமான வலி ஏற்பட்டது. குறுக்கே போடப்பட்டிருந்த மேசையின் மேல் அவருக்குக் கோபமேற்பட்டது, இரண்டாவது தடவை அதன் மேல் பலமாக அடித்துக் கீழே புரட்டித் தள்ளினார். அந்த முயற்சியில் அவருக்கு மூச்சுத் திணறியது. அவர் மல்லாக்க விழுந்தார், அந்தக் கணத்திலேயே தனக்கு மரணம் வராதா என்று எதிர்பார்த்தார்.

விருந்தினர்கள் தங்கள் வீடுகளுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களை வழியனுப்பிக் கொண்டிருந்த பிரஸ்கோவியா ஃபியோதரவ்னு மேசை கீழே விழுந்த சத்தத்தைக் கேட்டு அறைக்குள் வந்தாள்.

''உங்களுக்கு என்ன ஆச்சு?''

''ஒன்றுமில்லை. நான் மேசையைத் தற்செயலாகத் தள்ளிவிட்டேன்.''

அவள் வெளியே போய்விட்டு மெழுகுவர்த்தி விளக்கை எடுத்துக் கொண்டு `திரும்பினாள். அவர் படுத்தபடியே அவளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். நெடுந்தூரம் ஓடியவரைப்

போல அவர் பலமாகவும் வேகமாகவும் மூச்சு விட்டுக் கொண்டிருந்தார்.

''Jean, என்ன நடந்தது?''

''ஓ-ஒன்றுமில்லை. நான் அதைத்.... தள்ளி விட்டேன்.'' (''இவளிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்? இவள் புரிந்து கொள்ள மாட்டாள்'' என்று அவர் நினைத்தார்.)

ஆம், அவள் புரிந்து கொள்ளவில்லை. அவள் மேசையைத் தூக்கிச் சரியாக வைத்தாள். அங்கேயிருந்த விளக்கைப் பொருத்தி வைத்து விட்டு வேகமாகப் புறப்பட்டாள். அவள் சீமாட்டியை வழியனுப்ப வேண்டும்.

அவள் திரும்பிவந்த பொழுது அவர் இன்னும் மல்லாக்கப் படுத்தபடியே மேல் தளத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''என்ன? மோசமாக இருக்கிறதா?''

''ஆமாம்.''

அவள் தலையை ஆட்டிக் கொண்டு உட்கார்ந்தாள்.

''Jean, லெஷெதித்ஸ்கியைக் கூட்டி வருமாறு ஆளனுப்பலாமா என்று யோசிக்கிறேன்.''

அந்தப் பிரபல டாக்டருக்கு ஆளனுப்பினால் மறுபடியும் அதிகமாகப் பணம் செலவழிக்க வேண்டியிருக்கும். அவர் செயற்கையாகச் சிரித்துவிட்டு வேண்டாம் என்றார். அவள் சற்று நேரம் உட்கார்ந்திருந்தாள். பிறகு அவருக்குப் பக்கத்தில் வந்து நெற்றியில் முத்தமிட்டாள்.

அவள் தன்னை முத்தமிட்ட பொழுது அவர் தன் முழு மனதோடும் அவளை வெறுத்தார்.

அவளைப் பிடித்துத் தள்ளாமலிருப்பதற்கு அவர் மிகவும் முயற்சி செய்ய வேண்டியிருந்தது.

''போய் வருகிறேன். கடவுள் கிருபையால் நீங்கள் நன்றாகத் தூங்குவீர்கள்.''

''ஆமாம்.''

## 6

இவான் இலியீச் தான் செத்துக் கொண்டிருப்பதை உணர்ந்தார், எப்பொழுதுமே நம்பிக்கை இல்லாத நிலைமையில் இருந்தார்.

தான் செத்துக் கொண்டிருப்பது இதயத்தின் ஆழத்தில் அவருக்குத் தெரியும். அந்தக் கருத்துக்குத் தன்னைப் பழக்கிக் கொள்ளவில்லை என்று அவரைச் சொல்லிவிட முடியாது. அவரால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை; அவரால் புரிந்து கொள்ளக் கூட முடியாது.

கிஸெவதெரின் தர்க்கவியலைக் கற்கும்பொழுது ''காயிஸ் ஒரு மனிதர், மனிதர்கள் அழியக் கூடியவர்கள், ஆகவே காயிஸ் அழியக் கூடியவர்'' என்ற முக்கூற்று முடிவைப் படித்திருக்கிறார். ஆனால் அது காயிஸைப் பொறுத்த மட்டில்தான் உண்மையானது, தனக்கு அது உண்மையல்ல என்றுதான் அவர் வாழ்க்கை முழுவதிலும் கருதிவந்திருக்கிறார். காயிஸ் ஒரு மனிதர், அதாவது சூக்குமமான அர்த்தத்தில் ஒரு மனிதர், ஆகவே இந்த முக்கூற்று முடிவு அவருக்குப் பொருந்தும். அனால் இவான் இலியீச் காயிஸ் அல்ல, சூக்குமமான அர்த்தத்தில் மனிதருமல்ல. மற்ற எல்லா மனிதர்களிடத்

திலிருந்தும் அவர் முற்றிலும், முற்றிலும் வேறுவிதமான மனிதராக எப்பொழுதுமே இருந்து வந்திருக்கிறார். அவருடைய அப்பாவுக்கும் அம்மாவுக்கும் சகோதரர்களான மீத்யாவுக்கும் வலோத்யாவுக்கும் வண்டிக்காரனுக்கும் தாதிக்கும் பொம்மைகளுக்கும் மற்றும் காதென்காவுக்கும் சிறுவன் வான்யாவாக இருந்திருக்கிறார். குழந்தைப் பருவம், பால்யம் மற்றும் இளமையின் இன்பங்களையும் துன்பங்களையும் பரவசங்களையும் அனுபவித்த வான்யாவாக வளர்ந்திருக்கிறார். வான்யா மிகவும் அன்போடு நேசித்த கால் பந்தின் தோல் வாசனையைக் காயிஸ் எக்காலத்திலாவது அறிந்திருக்கக் கூடுமா? காயிஸ் அவரைப் போல உணர்ச்சியோடு தாயாரின் கையில் எப்பொழுதாவது முத்தமிட்டிருப்பாரா அல்லது அவளுடைய பட்டுடைகளின் சரசரக்கும் சத்தத்தை எப்பொழுதாவது நேசித்திருப்பாரா? காயிஸ் பள்ளிக்கூடத்தில் அப்பங்களைப் பற்றித் தகராறு செய்திருப்பாரா? அல்லது எப்பொழுதாவது காதலித்திருப்பாரா? அல்லது நீதிமன்ற நடவடிக்கைகளுக்கு மேதாவிலாசத்தோடு தலைமை தாங்கியிருப்பாரா?

''காயிஸ் அழியக் கூடியவர் என்பது உண்மை. அவர் மரணமடைவது சரியானது, பொருத்தமானதே. ஆனால் நான், வான்யா, எல்லாச் சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் கொண்ட இவான் இலியீச்—என்னைப் பொறுத்த வரை அது முற்றிலும் வேறு விஷயம். நான் மரணமடைவது சரியானதாகவும்

பொருத்தமானதாகவும் இருக்க முடியாது. அந்த எண்ணமே மிகவும் பயங்கரமானதாக இருக்கும்.''

அவருடைய சிந்தனைகள் இப்படியிருந்தன.

''காயிஸைப் போல நான் மரணமடையுமாறு விதிக்கப்பட்டிருந்தால் அது எனக்குத் தெரிய வந்திருக்கும், ஏதாவதொரு மனக்குரல் என்னிடம் தெரிவித்திருக்கும். ஆனால் அந்த மாதிரி எதுவுமே ஒருக்காலும் எனக்குத் தெரியவில்லையே. நான் காயிஸைப் போன்ற அதே தரத்தைச் சேர்ந்தவனல்ல என்பது எனக்கு எப்பொழுதுமே தெரியும், என்னுடைய நண்பர்கள் எல்லோருக்கும் தெரியும். ஆனால் இப்பொழுது பாருங்கள்!'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டார். ''அப்படி இருக்க முடியாது. அது இருக்க முடியாது. ஆனால் இருக்கிறதே. அது எப்படி சாத்தியம்? இதை ஒருவர் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்?''

அவரால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்த எண்ணம் போலியானது, தவறாக வழி நடத்திச் செல்வது, அழகற்றது என்று அதை விரட்டியடிக்க முயற்சி செய்தார், அதனிடத்தில் உண்மையான, தூய எண்ணங்களை எழுப்புவதற்கு முயற்சி செய்தார். ஆனால் அந்த எண்ணம் வெறும் எண்ணத்தைக் காட்டிலும் பெரியது, அதுவே யதார்த்தம், அது திரும்பத் திரும்ப வந்து அவருக்கு எதிரே நின்றது.

அவர் மற்ற சிந்தனைகளில் ஆதரவைத் தேட முடியும் என்ற நம்பிக்கையில் அவற்றை ஒவ்

வொன்ருகக் கூப்பிட்டார். மரணத்தைப் பற்றிய சிந்தனைகள் ஏற்படாமல் தன்னைப் பாது காத்த பழைய சிந்தனை முறையை மீண்டும் பெறுவதற்கு அவர் முயற்சி செய்தார். ஆனல் ஒரு காலத்தில் மரணத்தைப் பற்றிய உணர் வைத் தடுத்த, மறைத்த, அதன் சுவடுகூடத் தெரியாமல் நசுக்கிவிட்ட பொருள்களால் இப் பொழுது அப்படிச் செய்ய முடியவில்லை. இது ஒரு விசித்திரம்தான். இவான் இலியீச் சமீப காலத்தில் மரணத்தைப் பற்றி நினைப்பதைத் தடுத்த பழைய சிந்தனை முறையை மறுபடியும் ஏற்படுத்துவதற்குத் தன்னுடைய நேரத்தில் பெரும் பகுதியைச் செலவிட்டார். உதாரண மாக, ''என்னுடைய வேலையில் மூழ்கிவிட வேண்டும், ஒரு காலத்தில் வேலைதானே என் னுடைய மொத்த வாழ்க்கையாகவும் இருந் தது'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொள் வார். அவர் எல்லாச் சந்தேகங்களையும் தன் மனதிலிருந்து அகற்றிக் கொண்டு நீதிமன்றத் துக்குப் போவார். அங்கே தன்னுடைய நண் பர்களோடு உரையாடுவார், வழக்கம் போல அவர்கள் மத்தியில் தன்னுடைய இருக்கையில் அமர்வார், உட்காரும் பொழுதே நீதிமன்றத் தில் கூடியிருக்கும் மக்களை நோக்கி பொதுப் படையாகவும் கம்பீரமாகவும் பார்வையைச் சுழலவிடுவார். ஓக் மரத்தில் செய்யப்பட்ட தன்னுடைய சாய்வு நாற்காலியின் கைகளைத் தன் மெலிந்த கரங்களால் பிடித்துக் கொண்டு தனக்குப் பக்கத்தில் அமர்ந்திருப்பவரை நோக் கிக் குனிவார், மேசை மேல் வைக்கப்பட்டிருக்

கும் காகிதங்களைக் கலைப்பார், மெலிதான குர லில் ஏதோ சொல்லுவார், பிறகு திடீரென்று நிமிர்ந்து உட்கார்ந்து, கண்களை மேலே உயர்த்தி நீதிமன்றத்தின் நடவடிக்கைகளைத் தொடங்கி வைக்கும் அந்தப் பழக்கமான வார்த்தைகளை உச்சரிப்பார். ஆனால் வழக்கு விசாரணை நடுவில் விலாப்புறத்தில் வலி ஏற் படும், நீதிமன்ற நடவடிக்கை எந்தக் கட்டத் தில் இருக்கிறது என்பதற்குச் சம்பந்தமில்லா மல் அதன் கொறிக்கும் நடவடிக்கை ஆரம்ப மாகும். இவான் இலியீச் அதை லேசாக கவ னித்த பிறகு அதை மனதிலிருந்து விரட்டு வதற்கு முயற்சி செய்வார், ஆனால் அது தன் வேலையைத் தொடரும், அவருக்கு முன்னால் வந்து நிற்கும், அவருடைய கண்களை நேராக உற்றுப் பார்க்கும். அவர் குழப்பமடைவார், அவருடைய கண்களின் ஒளி மறையும், ''இது ஒன்று மட்டும்தான் உண்மையா?'' என்று அவர் மறுபடியும் தன்னைக் கேட்டுக் கொள்வார். எப் பொழுதுமே மேதாவிலாசமும் நுணுக்கமான திறமையும் உடைய அவர் குழப்பமடைவதை யும் தவறுகள் செய்வதையும் அவருடைய சக நீதிபதிகளும் அவருடைய உதவியாளர்களும் வியப்போடும் வருத்தத்தோடும் கவனிப்பார் கள். அவர் தலையைச் சிலிர்ப்பிக் கொண்டு தன் கவனத்தை ஒரு முகப்படுத்த, எப்படியா வது விசாரணையைக் கடைசிவரை கொண்டு போய் முடிப்பதற்கு முயற்சி செய்வார். அவர் அதிலிருந்து தப்பிப்பதற்கு எந்தச் சட்ட நட வடிக்கையும் உதவி செய்யாது என்பதைத் தன்

னிடமிருந்தே மறைப்பதற்கு அவர் விரும்பினுர். இனிமேல் சட்ட நடவடிக்கைகள் அதைத் தன்னிடமிருந்து மறைக்க முடியாது என்பதை உணர்ந்தவராக அவர் வருத்தத்தோடு வீட்டுக்குத் திரும்புவார். அது அவருடைய முழு கவனத்தையும் கோரியது, வேறு எதுவும் செய்ய விடாமல் அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்றது; ஒன்றும் செய்யாதே, சொல்ல முடியாத துன்பத்தை அனுபவி என்று அது இப்படி வற்புறுத்தியது தான் எல்லாவற்றைக் காட்டிலும் மோசமாக இருந்தது.

இந்தப் பயங்கரமான மனேநிலேயிலிருந்து தப்புவதற்காக இவான் இலியீச் மற்ற சுகங்களே, மற்ற மூடு திரைகளேத் தேடினுர்; அத் தகைய மூடு திரைகளே அவர் கண்டார். சிறிது காலத்துக்கு அவை நோயைத் தணிப்பதைப் போலத் தோன்றியது, ஆனுல் வெகு சீக்கிரத் திலேயே அவை அழிந்தன; அல்லது அதற்கு எல்லாவற்றையும் ஊடுருவிப் பார்க்கக் கூடிய சக்தி இருப்பதைப் போலவும் இந்த உலகத்தில் அதைத் தடுத்து நிறுத்தக்கூடியது ஒன்றுமே யில்லே என்பதைப் போலவும் அவை ஊடுருவிப் பார்க்கக் கூடியதாக மாறின.

சில சமயங்களில் அவர் தான் அரும்பாடு பட்டு அலங்கரித்த உபசரிப்பு அறைக்குள், கால் தவறி விழுந்த அதே அறைக்குள் போவார். இந்த அறைக்காகத்தானே என்னுடைய வாழ்க்கையைத் தியாகம் செய்தேன் (விழுந்ததிலிருந்து தான் நோய் தொடங்கியது என்று

அவர் நிச்சயமாகக் கருதிஞர்) என்று கசப் பான சிரிப்போடு நினைப்பார். அவர் உபசரிப்பு அறைக்குள் சென்று மெருகிடப்பட்ட மேசை யின் மேல் ஆழமான வெட்டு ஏற்பட்டிருப் பதைப் பார்த்தார். வெண்கலத்தில் ஓரங்களைக் கொண்ட படத்தொகுப்பின் பிடி வளைந்திருப் பதைக் கண்டார். மேசைக்கு ஊறு ஏற்படுத்தி யிருப்பது அது தான் என்பதைப் புரிந்து கொண் டார். அந்தப் படத் தொகுப்பைக் கையில் எடுத்தார். அதன் விலை அதிகம். மிகவும் அன்பு நிறைந்த கவனத்தோடு அவர் படங்களை அதில் ஒட்டி வைத்திருந்தார். தன் மகள் மற்றும் அவளுடைய நண்பர்களுடைய அக்கறையின் மையைப் பற்றி ஆத்திரமடைந்தார். பிடி வளைந்திருந்தது. உள்ளே புகைப் படங்கள் தலை கீழாக இருந்தன. அவர் மிகுந்த கவனத்தோடு படங்களைச் சரியாக வைத்தார், பிடியின் வளைவை நேராக்கிஞர்.

அந்த établissement* மொத்தத்தையும் —படத் தொகுப்பு உள்பட—அறையின் வேறொரு மூலையில் செடிகள் வைக்கப்பட் டிருந்த இடத்துக்கு மாற்ற வேண்டும் என்று நினைத்தார். அவர் வேலைக்காரனைக் கூப்பிட் டார். அவர் மனைவி அல்லது மகள் உதவி செய் வதற்கு வந்தார்கள். அவர்களுக்கிடையே கருத்து வேறு பாடுகள் ஏற்பட்டன. அவர்கள் மாற்ற வேண்டாம் என்ருர்கள். அவர் அவர் களோடு வாதாடிஞர், அவருக்குக் கோபமேற் பட்டது. ஆஞல் அதுவும் நல்லதுதான். ஏனென்

* சாமான்கள் (**பிரெஞ்சு**).

ருல் அதை மறப்பதற்கு அது உதவி செய்தது. அது கண்ணுக்கு எட்டாத இடத்துக்குத் தள்ளப்பட்டுவிட்டது.

ஆனால் அவர் தானே மேசையைத் தூக்க முயற்சி செய்தபொழுது, ''வேண்டாம். அதை வேலைக்காரர்களிடம் விட்டுவிடுங்கள். நீங்கள் மறுபடியும் காயப்படுத்திக் கொள்வீர்கள்'' என்று அவர் மனைவி கூறினாள். அது திடீரென்று திரைக்குப் பின்னாலிருந்து வெளியே வந்தது. அவருடைய பார்வைக்கு முன்னால் அது பிரகாசமாகத் தோன்றியது. மறுபடியும் அது மறைந்து விடும் என்று அவர் நம்பினார். ஆனால் விலாப் புறத்தில் வலி ஏற்படுவதை அவர் தானாகவே உணர்ந்தார்—ஏதோ ஒன்று இன்னும் அங்கே இருந்தது, இன்னும் கொறித்துக் கொண்டிருந்தது, அவரால் அதை மறக்க முடியவில்லை. அது செடிகளுக்குப் பின்னாலிருந்து மிகவும் தெளிவாக அவரை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது. அப்படியானால் இவ்வளவு அமளி தேவையில்லையே.

''ஒரு கோட்டையைப் புயல்போலச் சூழ்ந்து தாக்குவதைப் போல இங்கே, இந்தத் தொங்கு திரைகளில் என்னுடைய உயிரை இழந்தேன் என்பது உண்மையாக இருக்க முடியுமா? அது உண்மையல்ல! என்ன பயங்கரம்! என்ன பிதற்றல்! அப்படி இருக்க முடியாது! அப்படி இருக்காது. ஆனால் அப்படி இருக்கிறதே.''

அவர் தன்னுடைய படிப்பறைக்குள் சென்று படுத்தார். மறுபடியும் அதோடு அவர் தன்னந் தனியாக இருந்தார். அதோடு நேருக்கு நேராக

இருந்தார். அதைப் பற்றி அவர் ஒன்றும் செய்ய முடியாது. அதைப் பற்றிச் சிந்திப்பதையும் உடலில் இரத்தம் குளிர்ச்சியடைந்து கொண்டிருப்பதை உணர்வதையும் தவிர அவர் செய்யக்கூடியது வேறொன்றுமில்லை.

## 7

இவான் இலியீச் நோய் வாய்ப்பட்ட மூன்றுவது மாதத்தில் இனிமேல் அவர் எவ்வளவு சீக்கிரத்தில் பதவியைக் காலி செய்வார், உயிரோடிருப்பவர்களைத் தன்னுடைய இருத்தலின் சுமையிலிருந்தும் தன்னைத் துன்பங்களிலிருந்தும் எவ்வளவு சீக்கிரத்தில் விடுவிப்பார் என்ற ஒரு விஷயத்தைப் பற்றியே இனி மற்றவர்கள் அவரிடம் அக்கறை எடுத்துக் கொள்வார்கள் என்பதை அவருடைய மனைவி, மகள், மகன், வேலைக்காரர்கள், நண்பர்கள், டாக்டர்கள் குறிப்பாக, அனைவருமே அறிந்திருந்தது எப்படி என்று சொல்வது கடினம். அது மெதுவாக, மிகவும் நுட்பமாக, படிப்படியாக ஏற்பட்டது. எனவே அதைச் சொல்வது கடினம்.

அவர் தூக்கம் மேலும் மேலும் குறைந்தது. கஞ்சாவைச் சாப்பிட்டார். அபினிச் சத்தை ஊசி மூலம் உடலில் செலுத்தினார்கள். ஆனால் இது வலியைக் குறைக்கவில்லை. முதலில் இந்தப் பாதி உணர்வோடிருக்கும் நிலையின் மந்தமான துன்பம்—அது புதுமையானதாகச் சுகமாக இருந்தது. ஆனால் சீக்கிரத்திலேயே அதுவும் துன்பம் தணிக்கப்படாத வலியைக் காட்டிலும்

அதிகமாக இல்லாவிட்டாலும் அதே அளவுக்குப் பெருந் துன்பத்தைக் கொடுத்தது.

டாக்டர் உத்தரவுப்படி அவருக்குத் தனி உணவு தயாரிக்கப்பட்டது. ஆனால் அவருக்கு அவை அனைத்துமே மென்மேலும் சுவையற்றவையாக, அருவருப்பைத் தருபவையாக இருந்தன.

அவர் காலையில் குடலைச் சுத்தம் செய்து கொள்வதற்கு விசேஷமான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இது அன்றாடச் சித்திரவதையாக இருந்தது. அந்த அசுத்தமும் வெளி மதிப்பின்மையும் நாற்றமும்—அதற்கு இன்னொரு நபர் உதவி செய்ய வேண்டும் என்பதாலும்—சித்திரவதையாக இருந்தது.

ஆனால் இந்த அருவருப்பான விவகாரம் இவான் இலியீச்சுக்கு ஒரு ஆறுதலைக் கொடுத்தது. மலச் சட்டியைத் தூக்கிக் கொண்டு போவதற்கு வேலைக்காரன் கெராஸிம் எப்பொழுதும் வருவதே அந்த ஆறுதலாகும்.

கெராஸிம் ஒரு சுத்தமான விவசாய இளைஞன்; அவன் நகர உணவில் செழித்துக் கொண்டிருந்தான். அவன் எப்பொழுதுமே பிரகாசமாகவும் சுறுசுறுப்போடுமிருந்தான். ருஷ்ய உடைகளை அணிந்து கொண்டிருக்கும் இந்தச் சுத்தமான இளைஞன் இவ்வளவு அருவருப்பான கடமையைச் செய்வது முதலில் இவான் இலியீச்சுக்கு மனச் சங்கடத்தைக் கொடுத்தது.

ஒரு தடவை பானை மேலிருந்து எழுந்தவுடன் அவர் தன் காற்சட்டையைக் கூடச்

சரியாக அணிந்து கொள்ள முடியாமல் சாய்வு நாற்காலியில் சாய்ந்தார். மூடப்படாதிருந்த பின்னங்கால் கெண்டைச் சதையையும் அதன் மீது தொங்கிக் கொண்டிருந்த சதையையும் பின்புறமாகச் சாய்ந்தவாறு பயந்தபடியே பார்த்துக்கொண்டிருந்தார்.

அந்தத் தருணத்தில் கெராஸிம் மென்மையான, உறுதியான காலடியோடு உள்ளே வந்தான். அவனைச் சுற்றி குளிர்காலக் காற்றின் புது வாசனையும் அவனுடைய கனத்த பூட்சுகளின் மேல் தேய்க்கப்பட்டிருந்த தார் நெடியும் வீசியது. அவன் சுத்தமான கைநெசவு மேல்துணியும் அதன் கீழ் சுத்தமான பருத்திச் சட்டையும் அணிந்திருந்தான். சுருட்டிவிடப் பட்டிருந்த கைகள் அவனுடைய பலமான இளம் கரங்களை வெளிக் காட்டின. இவான் இலியீச்சின் முகத்தைப் பார்க்காமல் (தன்னுடைய முகத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் வாழ்க்கையின் ஆனந்தம் அவரைக் கேலி செய்வதாக அவர் நினைத்துவிடுவாரோ என்ற அச்சம் காரணமாக இருக்கும்) அவன் மலச் சட்டியை நோக்கிச் சென்றான்.

''கெராஸிம்!'' என்று இவான் இலியீச் பலவீனமான குரலில் கூப்பிட்டார்.

கெராஸிம் ஏதோ தவறு செய்துவிட்டதாக நினைத்து பயந்து போய்த் திடுக்கிட்டான். அவனுடைய மலர்ந்த, சாதாரணமான, இனிய சுபாவங்கொண்ட இளம் முகத்தை—அந்த முகத்தில் தாடி வளரப் போகின்ற முதற் சின்

னங்கள் தெரிந்தன—நோயாளியை நோக்கி வேகமாகத் திருப்பினுன்.

''ஐயா! என்ன வேண்டும்?''

''உனக்கு இது மிகவும் அருவருப்பாக இருக்குமே. என்னை மன்னித்துவிடு. இதை நானே செய்து கொள்ள முடியவில்லை.''

''ஐயா! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' கெராஸிமுடைய கண்களும் பற்களும் சிரிப்பில் பிரகாசித்தன. ''நான் உங்களுக்கு உதவி செய்யக் கூடாதா? உங்களுக்கு உடம்பு சரியில்லை.''

அவன் தன்னுடைய பலமான, திறமையான கரங்களால் வழக்கமான பணியைச் செய்தான். அந்த அறையிலிருந்து சப்தமில்லாமல் வெளியே சென்றுன். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு அதே மாதிரியாக சப்தமில்லாமல் நடந்து திரும்பினுன்.

இவான் இலியீச் இன்னும் அந்த சாய்வு நாற்காலியில் படுத்திருந்தார்.

''கெராஸிம்!'' அந்த இளைஞன் சுத்தப்படுத்தப்பட்ட சட்டியைக் கீழே வைத்த பொழுது அவர் கூப்பிட்டார். ''தயவு செய்து எனக்கு உதவி செய். இங்கே வா.'' கெராஸிம் அவருக்குப் பக்கத்தில் வந்தான். ''என்னைத் தூக்கிப் பிடித்துக் கொள். என்னுல் எழுந்திருக்க முடியவில்லை. திமீத்ரியையும் வெளியே அனுப்பிவிட்டேன்.''

கெராஸிம் குனிந்தான். அவன் பலமான கைகளாலும் அவன் காலடியைப் போலவே மென்மையான பிடியோடும் அவரை மெதுவாக,

நாசூக்காகத் தூக்கினான். ஒரு கையால் அவரைப் பிடித்துக் கொண்டு மறு கையால் அவருடைய காற் சட்டையை மேலே இழுத்தான். அவரை மறுபடியும் சாய்வு நாற்காலியில் வைக்கப் போனபொழுது சோபாவில் தன்னை உட்காரவைக்குமாறு இவான் இலியீச் அவனைக் கேட்டுக் கொண்டார். கெராஸிம் சிறிதும் முயற்சியில்லாதபடி இவான் இலியீச்சை அப்படியே தூக்கி சோபாவின் மேல் வைத்தான்.

''நன்றி. நீ மிகவும் திறமைசாலி... எல்லாக் காரியத்தையும் எவ்வளவு நன்றாகச் செய்கிறாய்.''

கெராஸிம் மறுபடியும் சிரித்துவிட்டு வெளியே போகப் புறப்பட்டான். அவன் பக்கத்திலிருப்பது இவான் இலியீச்சுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தபடியால் அவர் அவனைப் போகவிடவில்லை.

''அந்த நாற்காலியைத் தூக்கிக் கொண்டு வா. அது அல்ல. அந்த நாற்காலி. என் காலைத் தூக்கி நாற்காலியின் மேல் வை. கால் மேலே இருந்தால் எனக்கு சுகமாக இருக்கிறது.''

கெராஸிம் நாற்காலியைத் தூக்கிக் கொண்டு வந்தான். சட்டென்று அதைத் தரையில் பலமான சத்தத்தோடு வைக்கப் போனான். பிறகு தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு நாற்காலியை சப்தமில்லாமல் கீழே வைத்தான். இவான் இலியீச்சினுடைய கால்களைத் தூக்கி நாற்காலியின் மேல் வைத்தான். தன்னுடைய கால்களை கெராஸிம் மேலே தூக்கிப் பிடித்த

உடனே சுகமாக இருப்பதைப் போல இவான் இலியீச் உணர்ந்தார்.

''என் கால்கள் மேலே இருக்கும்பொழுது சுகமாக இருக்கிறது'' என்றார் இவான் இலியீச். ''தலையணையைக் கொண்டு வந்து காலின் கீழ் வை.''

கெராஸிம் அவர் சொன்னபடி செய்தான். அந்த நோயாளியின் கால்களை மறுபடியும் தூக்கி அவற்றுக்குக் கீழே தலையணையை வைத்தான். தன் கால்களை கெராஸிம் தூக்கியபொழுது இவான் இலியீச்சுக்கு மறுபடியும் சுகமாக இருந்தது. அவன் கால்களைக் கீழே வைத்த பிறகு அவருடைய நிலைமை மோசமடைந்தது.

''கெராஸிம், உனக்கு முக்கியமான வேலை இருக்கிறதா?''

''இல்லை, ஐயா!'' என்றான் கெராஸிம். தன்னைக் காட்டிலும் உயர்ந்தவர்களிடம் எப்படிப் பேச வேண்டும் என்பதை அவன் நகர வாசிகளிடமிருந்து கற்றுக் கொண்டிருந்தான்.

''உனக்கு வேறு என்ன வேலை இருக்கிறது?''

''வேறு ஒன்றுமில்லை. நாளைக்கு வேண்டிய விறகை வெட்டுவதைத் தவிர மற்ற எல்லாவற்றையும் முடித்து விட்டேன்.''

''இன்னும் சிறிது நேரம் என் கால்களை மேலே தூக்கிப் பிடிக்கிறாயா?''

''அப்படியே செய்கிறேன், ஐயா!'' கெராஸிம் அவர் காலைத் தூக்கிப் பிடித்தான். அப்படிப் பிடிக்கும் பொழுது தனக்கு வலி ஏற்படவில்லை என்று இவான் இலியீச் கற்பனை செய்து கொண்டார்.

''நீ விறகு வெட்ட வேண்டுமே!''

''அதைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள். அதற்கு இன்னும் எவ்வளவோ நேரம் இருக்கிறது.''

கெராஸிமை உட்கார்ந்து கால்களைப் பிடித்துக் கொண்டு தன்னோடு பேசிக் கொண்டிருக்குமாறு இவான் இலியீச் கேட்டுக் கொண்டார். கெராஸிம் தன் கால்களைப் பிடித்துக் கொண்டிருக்கும் பொழுது உண்மையாகவே வலி இல்லாதிருப்பதைப் போல அவர் கற்பனை செய்து கொண்டது விசித்திரமே.

அதற்குப் பிறகு இவான் இலியீச் அவ்வப் பொழுது கெராஸிமை வரச் சொல்லி அவன் தோள்களில் தன் கால்களைத் தூக்கி வைத்துக் கொண்டிருக்குமாறு கூறுவார். அந்த இளைஞனோடு பேசிக் கொண்டிருப்பதை அவர் விரும்பினார். கெராஸிம் எல்லாவற்றையும் விருப்பத்தோடு, சுலபமாக, எளிமையாக, இனிய முகத்தோடு செய்வதைக் கண்டு இவான் இலியீச் மன நெகிழ்ச்சி அடைந்தார். கெராஸிமைத் தவிர மற்ற எல்லோருடைய உடல் நலமும் பலமும் உற்சாகமும் இவான் இலியீச்சுக்கு எரிச்சலைக் கொடுத்தது. அதற்கு மாறாக, கெராஸிமின் உடல் நலமும் உற்சாகமும் அவருக்கு — எரிச்சலைத் தரவில்லை — ஆறுதலைக் கொடுத்தது.

இவான் இலியீச் செத்துக் கொண்டிருக்கவில்லை, அவர் நோய்வாய்ப் பட்டிருக்கிறார், அவர் அமைதியாக இருந்தால், டாக்டர் சொல்வதைக் கேட்டு நடந்தால் எல்லாம் சரியாகப்

போய்விடும் என்ற பொய்யினுல் — என்ன காரணத்துக்காகவோ எல்லோரும் இந்தப் பொய்யைப் பரப்பினுர்கள்—அவர் மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் அதிகமான துன்பமடைந்தார். என்ன செய்தாலும் எதுவும் மாறப் போவதில்லே, தன்னுடைய துன்பங்கள் அதிகரிக்கும், தனக்கு மரணம் ஏற்படும் என்பதை அவர் நன்ருக அறிந்திருந்தார். இந்தப் பொய்யினுல் அவர் சித்திரவதை செய்யப்பட்டார், எல்லோருமே இந்தப் பொய்யைப் பரப்பியதனுல் அவர் சித்திரவதையை அனுபவித்தார். அவருக்கு உண்மை தெரியும் என்பதால், எல்லோருக்கும் உண்மை தெரியும் என்பதால், எனினும் அவருடைய ஆபத்தான நிலைமை காரணமாக இந்தப் பொய்யை அவர் மீது திணித்ததனுல், இந்தப் பொய்க்கு அவரையும் கூட்டாளியாகுமாறு நிர்ப்பந்தித்ததால் அவர் சித்திரவதைக்குள்ளாஞர். இந்தப் பொய், அவர் மரணமடையுந்தறுவாயில் அவர் மீது திணிக்கப்பட்ட இந்தப் பொய், அவருடைய மரணம் என்ற கம்பீரமான, அச்சமூட்டுகின்ற நடவடிக்கையை நண்பர்களுடைய சந்திப்புகள், இரவு உணவுக்கு மீன் சாப்பிடுவதைப் போன்ற தரத்துக்குக் குறைத்துவிட்ட இந்தப் பொய் இவான் இலியீச்சுக்குச் சொல்ல முடியாத சித்திரவதையாக இருந்தது. அவர்கள் பல சந்தர்ப்பங்களில் இப்படி அவரிடம் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, ''உங்களுடைய பொய்யை நிறுத்துங்கள்! நான் சாகப் போகிறேன் என்பது உங்களுக்கும் தெரி

யும், எனக்கும் தெரியும். இன்னும் எதற்காகப் பொய் சொல்கிறீர்கள்?'' என்று சத்தம் போட்டுச் சொல்லத் துடிக்கும் கட்டத்துக்கு அவர் வந்துவிட்டார். ஒரு மயிரிழை தான் வித்தியாசம் என்பது விசித்திரமே. ஆனால் அதைச் சொல்லக் கூடிய துணிச்சல் அவரிடம் ஒருபோதும் ஏற்படவில்லை. தன்னைச் சுற்றிலு மிருப்பவர்கள் தன்னுடைய மரணம் என்ற பயங்கரமான நடவடிக்கையை, பயத்தைத், தற்செயலாக ஏற்படும் சச்சரவு, நாகரிக ஒழுங்கு முறையில் ஒரு முறிவு (உபசரிப்பு அறைக்குள் நுழையும் பொழுது நாற்றம் வரு கின்ற நபரிடம் நடந்து கொள்வதைப் போல அவர்கள் அவரிடம் நடந்து கொண்டார்கள்) அவர் வாழ்நாள் முழுவதும் கொத்தடிமையாக இருந்த மேன்மையான வாழ்க்கையை மீறு வதைப் போன்ற தரத்துக்குக் குறைத்துவிட் டார்கள் என்பதை அவரால் பார்க்க முடிந் தது. யாருமே தனக்காக வருத்தப்படவில்லை; ஏனென்றால் யாருமே தன்னுடைய நிலைமை யைப் புரிந்து கொள்ள முயற்சிக்கவில்லை என் பதை அவர் பார்த்தார். அவருடைய நிலை யைப் புரிந்துகொண்டு அவருக்காக வருத்தப் பட்ட ஒரே நபர் கெராஸிம்தான். இவான் இலியீச் தன்னோடு இருக்க வேண்டுமென்று விரும்பிய ஒரே நபர் கெராஸிம் என்பதும் அதே காரணத்துக்காகத் தான். சில சமயங் களில் கெராஸிம் இரவு முழுவதும் அவரோடு உட்கார்ந்து கால்களைப் பிடித்துவிடுவான். அவனைத் தூங்கப் போகுமாறு சொல்லும்

பொழுது ''இவான் இலியீச்! நீங்கள் அதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள், நான் பிறகு தூங்கு வேன்'' என்று அவன் மறுப்பான். அல்லது ''நீங்கள் நோயாளி, நான் உங்களுக்காகப் பாடு படக் கூடாதா?'' என்று பதிலளிப்பான். கெரா ஸிம் ஒருவன் மட்டுமே பொய் சொல்லவில்லை. உண்மையான நிலைமையை அவன் ஒருவன் மட்டுமே புரிந்திருக்கிறான், அதை மறைப்பது அவசியம் என்று அவன் கருதவில்லை என்பதை அவனுடைய ஒவ்வொரு செயலும் எடுத்துக் காட்டியது. தன்னுடைய எஜமானர் பரிதாப கரமாக, உடல் மெலிந்து செத்துக் கொண் டிருப்பதைக் கண்டு அவன் வருத்தப்பட்டான். ஒரு நாள் இவான் இலியீச் அவனிடம் ''போதும், நீ போகலாம்'' என்று சொன்ன பொழுது ''நாம் எல்லோரும் ஒரு நாள் மரண மடையத்தான் போகிறோம். உங்களுக்கு நான் இப்பொழுது உதவி செய்வது தவறா?'' என்று அவன் ஒளிவு மறைவில்லாமல் கேட்டான். இவான் இலியீச்சுக்கு ஊழியம் புரிவது எனக்குச் சிறிதும் சங்கடத்தைத் தரவில்லை, ஏனென்றால் செத்துக் கொண்டிருக்கும் நப ருக்கு நான் உதவி புரிகிறேன், நான் செத்துக் கொண்டிருக்கும் பொழுது எனக்கும் யாரா வது உதவி செய்வார்கள் என்று நம்புகிறேன் என்றான்.

அந்தப் பொய் மற்றும் அதிலடங்கிய எல்லா வற்றுக்கும் அடுத்தபடியாக யாருமே தனக் காக, தான் விரும்புகின்ற வகையில் வருத்தப் படவில்லை என்பது இவான் இலியீச்சுக்கு அதிக

மான வேதனையைக் கொடுத்தது. நெடு நேரம் துன்பப்பட்டபிறகு நோய்வாய்ப்பட்ட குழந்தையை அநுதாபத்தோடு தடவிக் கொடுப்பதைப் போல தன்னை நடத்த வேண்டும்—அதை ஒத்துக் கொள்ள அவர் வெட்கப்பட்ட போதிலும்—என்று அவர் மிகவும் ஏங்கிய தருணங்கள் இருந்தன. நோயாளியாக இருக்கின்ற குழந்தைகளை முத்தம் கொடுத்து சமாதானப் படுத்துவதைப் போல யாராவது தன்னைத் தட்டிக்கொடுக்க மாட்டார்களா, முத்தமிட மாட்டார்களா, கண்ணீர் வடிக்க மாட்டார்களா என்று ஏங்கினுர். அவர் நீதிமன்றத்தின் முக்கியமான உறுப்பினர், அவருடைய தாடி நரைக்கத் தொடங்கியிருந்தது, எனவே தன்னிடம் அப்படி நடந்து கொள்ள மாட்டார்கள் என்பது அவருக்குத் தெரியும். ஆனுல் அவர் அதைத்தான் விரும்பினுர். இதைப் போன்ற ஏதோ ஒன்று கெராஸிமோடு அவருடைய உறவுகளில் இருந்தது. அதனுல் தான் கெராஸிம் பக்கத்திலிருக்கும் பொழுது அவருக்கு ஆறுதல் ஏற்பட்டது. இவான் இலியீச் சத்தம் போட்டு அழுவதற்கு விரும்பினுர். யாராவது தன்னை அணைத்துக் கொள்ள வேண்டும், தன்னைப் பற்றிக் கதறியழ வேண்டும் என்று அவர் விரும்பினுர். ஆனுல் நீதிமன்ற உறுப்பினரும் அவருடைய சகாவுமான ஷெபெக் அவரைப் பார்க்க வருகிருர். அவரிடம் கதறியழுது ஆறுதலடைவதற்குப் பதிலாக இவான் இலியீச் சோகமான, அறிவாழமிக்க தோற்றத்தை மேற்கொண்டு வெறும் சோம்பல் காரணமாக,

மேன் முறையீட்டு நீதிமன்றத்தின் முடிவுகளின் முக்கியத்துவத்தைப் பற்றித் தன்னுடைய கருத்தைத் தெரிவிக்கிறார், அந்த முடிவுகளை வன்மையாக ஆதரித்துப் பேசுகிறார். இவான் இலியீச்சின் மனதிலும் மற்றும் அவரைச் சுற்றி எங்குமிருந்த இந்தப் பொய்யைப் போல அவருடைய கடைசி நாட்களை நஞ்சாக மாற்றியது வேறு ஒன்றுமேயில்லை.

## 8

காலைப் பொழுது உதயமாகிவிட்டது. கெராஸிம் போய்விட்டதும் வேலைக்காரன் பியோத்தர் அறைக்குள் வந்ததும்தான் காலைப் பொழுது உதித்துவிட்டதற்கு ஒரே ஆதாரமாக இருந்தது. அவன் உள்ளே வந்து மெழுகு வர்த்தி விளக்குகளை அணைத்தான். சன்னல்களில் ஒன்றை மூடியிருந்த திரையை இழுத்து விட்டபிறகு அமைதியாக அந்த அறையைப் பெருக்கத் தொடங்கினன். காலையோ அல்லது, இரவோ, வெள்ளிக்கிழமையோ அல்லது சனிக்கிழமையோ ஒரு வேறுபாடும் கிடையாது. அவருக்கு எல்லாமே ஒன்றுதான். எந்த நேரத்திலும் ஒரே மாதிரியான கொறிக்கும், துன்ப மூட்டும் வலி. அது ஒரு விஞடி கூட நிற்பதில்லை. வாழ்க்கை தடுக்க முடியாத விதத்தில் வெளியேறிக் கொண்டிருக்கிறது, ஆனல் அது இன்னும் முடிந்துவிடவில்லை, ஒரே யதார்த்தமான, அருவருக்கத்தக்க மரணம் மெதுவாக, விட்டுக் கொடுக்காத விதத்தில் அவர் மீது படர்

கிறது; பிறகு — அந்தப் பொய். நாட்கள், வாரங்கள், மணிகளைப் பற்றி எப்படிச் சிந்திக்க முடியும்?

''ஐயா! தேநீர் கொண்டுவரவா?'' (''இவனுக்கு உத்தரவு வேண்டுமோ? காலையில் குடும்பத்தில் எல்லோரும் தேநீர் குடிப்பது பழக்கமாயிற்றே'' என்று இவான் இலியீச் நினைத்தார்.)

''வேண்டாம்'' என்று மட்டும் கூறினார்.

''சோபாவுக்கு மாற்றிக் கொள்ள விரும்புகிறீர்களா, ஐயா?''

(''அவன் அறையைச் சுத்தம் செய்ய வேண்டும். நான் படுத்திருப்பது அவனுக்கு இடையூறாக இருக்கிறது. நான் இந்த அறையை அடைசலாக்குகிறேன், என்னால் ஒழுங்கில்லாமல் கிடக்கிறது'' என்று இவான் இலியீச் நினைத்தார்.)

''இல்லை. என்னைத் தூக்க வேண்டாம்'' என்று மட்டும் கூறினார்.

வேலைக்காரன் இன்னும் சற்று நேரம் அங்கே சுறுசுறுப்பாக வேலை செய்தான். இவான் இலியீச் தன் கையை நீட்டினார். பியோத்தர் பரிவுடன் அருகில் வந்தான்.

''என்ன வேண்டும், ஐயா?''

''என்னுடைய பைக்கடிகாரத்தை எடு.''

இவான் இலியீச்சின் கைக்கு எட்டிய தூரத்திலிருந்த பைக்கடிகாரத்தை அவன் எடுத்து அவரிடம் கொடுத்தான்.

''எட்டரை மணியாகிவிட்டதே. மற்றவர்கள் எழுந்து விட்டார்களா?''

''இன்னும் எழுந்திருக்கவில்லை, ஐயா! வசீலி இவானவிச் (மகன்) பள்ளிக்கூடத்துக்குப் போய் விட்டார். உங்களுக்கு எதுவும் வேண்டுமென்ருல் தன்னைக் கூப்பிடுமாறு பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞ உத்தரவு போட்டிருக்கிருர்கள். அவர்களைக் கூப்பிடட்டுமா, ஐயா?''

''வேண்டாம்.'' (''நான் தேநீர் குடிக்கலாமா?'' என்று அவர் நினைத்தார்.) ''எனக்குத் தேநீர்... கொண்டு வா.''

பியோத்தர் கதவை நோக்கி நடந்தான். தனியாக இருக்க வேண்டும் என்பதை நினைத்த பொழுது இவான் இலியீச்சுக்குப் பயமேற்பட்டது. (''அவனை இங்கே இருக்கச் செய்வதற்கு என்ன செய்யலாம்? ஆமாம். என்னுடைய மருந்து.'') ''பியோத்தர்! என் மருந்தை எடுத்துக் கொடு.'' (''மருந்தைக் குடிக்கலாம். அது உண்மையிலேயே உதவியாகக் கூட இருக்கும்''). அவர் ஒரு கரண்டி நிறைய மருந்தை ஊற்றிக் குடித்தார். வாயில் அவருக்குப் பழக்கமான, இனிப்பான, நம்பிக்கையற்ற உணர்ச்சி ஏற்படுவதை மறுபடியும் உணர்ந்தவுடன் ''இல்லை. அது உதவி செய்யாது. பிதற்றல். சுய-ஏமாற்றம்'' என்று முடிவு செய்தார். ''எனக்கு இனியும் மருந்தில் நம்பிக்கை கிடையாது. ஏன், ஏன் இந்த வலி எனக்கு வர வேண்டும்? ஒரு நிமிடத்துக்கு மட்டுமாவது வலி இல்லாமலிருக்கக் கூடாதா!'' அவர் முனகிஞர். பியோத்தர் திரும்பி வந்தான்.

''ஒன்றுமில்லை. நீ போ! தேநீர் கொண்டு வா.''

பியோத்தர் வெளியே போனான். இவான் இலியீச்சுக்கு வலி அதிகமான வேதனையைக் கொடுத்த போதிலும் அவர் வருத்தத்தின் காரணமாக முனகினார். ''ஒரே மாதிரியான வலி தொடர்ந்து கொண்டேயிருக்கிறது. ஒரே மாதிரியான, முடிவேயில்லாத பகல்களும் இரவு களும். அது சீக்கிரம் வந்துவிடாதா? எது சீக்கிரம் வந்துவிடாதா? மரணம். இருள். இல்லை. இல்லை. மரணத்தைக் காட்டிலும் எதுவுமே சிறந்ததுதான்!''

பியோத்தர் சிற்றுண்டித் தட்டை எடுத்துக் கொண்டு திரும்பி வந்தபொழுது அவன் யார், அவனுக்கு என்ன வேண்டும் என்று புரிந்து கொள்ள முடியாமல் இவான் இலியீச் சற்று நேரம் அவனைக் குழப்பத்தோடு பார்த்தார். அந்தப் பார்வை பியோத்தருக்குச் சங்கடத்தை ஏற்படுத்தியது. அவன் சங்கடமடைவதைப் பார்த்தபொழுது இவான் இலியீச்சுக்கு சுய உணர்வு ஏற்பட்டது.

''ஆமாம்'' என்றார். ''தேநீர்... நல்லது. கீழே வை. என் உடலைக் கழுவ உதவி செய். புதுச் சட்டையை எடு.''

இவான் இலியீச் தன்னைக் கழுவிக் கொள்ளத் தொடங்கினார். அவ்வப்பொழுது ஓய்வெடுத்துக் கொண்டு கைகளையும் முகத்தையும் கழுவினார். பிறகு பற்களைத் தேய்த்தார். தலையை வாரிக் கொண்டு கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்தார். அவர் திடுக்கிட்டார். குறிப்பாக அவருடைய வெளிறிப் போன நெற்றியின்

மீது வளைவான முடி ஒட்டிக் கொண்டிருப் பதைப் பார்த்துத் திடுக்கிட்டார்.

சட்டையை மாற்றும் பொழுது தன் உடலைக் கண்ணுடியில் பார்த்தால் இன்னும் அதிகமாகத் திடுக்கிட வேண்டியிருக்கும் என்று அவர் அதைப் பார்க்கவில்லை. கடைசியில் எல்லா வேலைகளும் முடிந்தன. அவர் மேலங்கியை அணிந்து, கால்களைக் கம்பளியால் போர்த்திக் கொண்டு தேநீர் அருந்துவதற்காக சாய்வு நாற் காலியில் உட்கார்ந்தார். ஒரு விஞடி நேரம் அவருக்குப் புத்துணர்ச்சி ஏற்பட்டது. ஆனல் தேநீர் அருந்தத் தொடங்கியதும் வலி ஏற்படு வதையும் வாயில் அந்த உணர்ச்சியையும் அவர் மறுபடியும் உணர்ந்தார். அவர் தன்னை நிர்ப் பந்தம் செய்து கொண்டு தேநீரைக் குடித்து முடித்தார். பிறகு காலை நன்ருக நீட்டிக் கொண்டு படுத்தார். பியோத்தரைப் போய் வருமாறு கூறினர்.

மறுபடியும் அதே நிலைமைதான். ஒரு விஞ டியில் நம்பிக்கை என்னும் சிறு துளியின் பிர காசம். அடுத்த விஞடியே நம்பிக்கையற்ற நிலைமை என்னும் கொந்தளிக்கும் கடல். எப் பொழுதும் இதே வலி, ஒரே வலி, இதே துன் பம், இப்படியே தொடர்ச்சியாக. அவரால் தனியே இருக்கும் பொழுது துன்பத்தைத் தாங்கிக் கொள்ள முடியாது. அவர் யாரை யாவது கூப்பிட விரும்புகிருர். ஆனல் அது இன்னும் ஆபத்தாகவே இருக்கும் என்பது அவருக்கு முன்பே தெரியும். ''அவர்கள் அபின் சத்தை எனக்கு மறுபடியும் கொடுக்க மாட்

டார்களா? வலியை மறந்துவிடுவேனே! எதை யாவது செய்யுங்கள் என்று டாக்டரிடம் சொல்ல வேண்டும். இதைத் தாங்க முடிய வில்லையே, தாங்க முடியவில்லையே.''

இப்படியே ஒரு மணி நேரம், பிறகு மற்றொரு மணி நேரம் சென்றது. வாயிலில் அறிவிப்பு மணி ஒலித்தது. டாக்டர் வருகிறாரோ. ஆம். அது டாக்டர்தான். அவர் புது மலர்ச்சியோடு, கொழுத்த, சுறுசுறுப்பான, உற்சாகமான தோற்றத்தோடு ''என்ன ஆச்சு, அதாவது பயந்துவிட்டீர்களா? சொடக்குப் போடும் நேரத்துக்குள் எல்லாவற்றையும் சரிப்படுத்தி விடுவோம்'' என்று சொல்வதைப் போல உள்ளே வந்தார். இந்தத் தோற்றம் இங்கே பொருத்தமில்லை என்பது டாக்டருக்குத் தெரியும். ஆனால் அவர் அதை நிரந்தரமாக மாட்டிக் கொண்டிருக்கிறார். நோயாளிகளைப் பார்ப்பதற்காகக் காலையில் வீட்டை விட்டுப் புறப்படுவதற்கு முன்பு அவர் அணிந்து கொண்ட உள்கோட்டைப் போல அந்தத் தோற்றத்தையும் அவரால் மாற்ற முடியாது.

டாக்டர் சுறுசுறுப்பாக, ஆறுதலளிக்கும் விதத்தில் இரண்டு கைகளையும் ஒன்று சேர்த்துத் தேய்த்தார்.

''எனக்குக் குளிர்ந்துவிட்டது. வெளியே பயங்கரமான குளிர். நான் குளிர் காய்கின்ற வரை ஒரு நிமிடம் பொறுத்துக் கொள்ளுங்கள்'' (நான் குளிர்காய்கின்ற வரை ஒரு நிமிடம் பொறுத்திருந்தால் போதும் பிறகு எல்லாவற்றையும் சரிப்படுத்திவிடுவேன் என்று சொல்

வதைப் போன்ற குரலில் அவர் பேசினர்).

''சரி! எப்படி இருக்கிறீர்கள்?''

''உங்கள் வயிறு எப்படி இருக்கிறது?'' என்று கேட்பதற்கே டாக்டர் விரும்பினர், ஆனல் அது மிகவும் கேலியாக இருக்கும் என்பதால் ''இரவை எப்படிக் கழித்தீர்கள்?'' என்று மாற்றிக் கொண்டார் என்று இவான் இலியீச் உறுதியாகக் கருதினர்.

''பொய் சொல்வதைப் பற்றி நீங்கள் ஒரு போதும் வெட்கப்பட மாட்டீர்களா?'' என்று கேட்பதைப் போல இவான் இலியீச் டாக்டரை ஒரு மாதிரியாகப் பார்த்தார். ஆனல் டாக்டர் அந்தப் பார்வையைப் புரிந்து கொள்ள விரும்பவில்லை.

''அதே மாதிரி கோரமாக வலிக்கிறது'' என்றார் இவான் இலியீச். ''வலி ஒருபோதும் நிற்பதில்லை, குறைவதுமில்லை. வேறு எதையாவது கொடுங்களேன்!''

''சரி. எல்லா நோயாளிகளுமே ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறீர்கள். சரி. இப்பொழுது குளிர் போய்விட்டது. பிரஸ்கோவியா ஃபியோதரவ்ன கண்டிப்பானவளாக இருந்தால் கூட என்னுடைய உடம்பு குளிர்ச்சியாக இருக்கிறதென்று இப்பொழுது குறை சொல்ல முடியாது. சரி. காலை வணக்கம்'' என்று சொல்லிவிட்டு டாக்டர் அவருடைய கையைக் குலுக்கினர்.

டாக்டர் தன்னுடைய வேடிக்கையை உதறிப் போட்டு விட்டு முகத்தைக் கவலையாக வைத்துக் கொண்டு நோயாளியைப் பரி

சோதனை செய்யத் தொடங்கினார். அவருடைய நாடித் துடிப்பையும் உடல் வெப்ப அளவையும் எடுத்தார். அவருடைய நெஞ்சைத் தட்டினார், இருதயத்தின் மேல் காதை வைத்துக் கேட்டார்.

இவை அனைத்துமே அர்த்தமில்லாதவை, வெறும் மோசடி என்பது இவான் இலியீச்சுக்கு மிகத் தெளிவாகவும் சந்தேகமில்லாத விதத்திலும் தெரியும். ஆனால் தனக்கு முன்னால் அந்த டாக்டர் முழந்தாளிட்டுக் குனிந்து தன் காதை அவருடைய மார்பில் முதலில் கீழேயும் பிறகு அதைக் காட்டிலும் உயரமாகவும் வைத்துக் கேட்ட பொழுது, உலகத்திலேயே மிகவும் பொறுப்பு வாய்ந்த முகத்தோற்றத்தோடு முகத்தைப் பலவிதமாக வளைத்துச் சிலுப்பிய பொழுது வழக்குரைஞர்கள் பொய் சொல்கிறார்கள் என்பதும் அவர்கள் ஏன் பொய் சொல்கிறார்கள் என்பதும் அவருக்கு நன்றாகத் தெரிந்திருந்த போதிலும் அவர்களுடைய வாதங்களின் மந்திர சக்தியில் மயங்கியதைப் போல அவர் டாக்டரின் மந்திர சக்திக்கு உட்பட்டார்.

டாக்டர் இன்னும் சோபாவில் முழந்தாளிட்டுக் கொண்டு அவருடைய நெஞ்சைத் தட்டிக் கொண்டிருந்த பொழுது பட்டு உடை சலசலப்பது கதவு வழியாகக் கேட்டது. டாக்டர் வந்துவிட்டதை ஏன் என்னிடம் தெரிவிக்கவில்லை என்று பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா பியோத்தரிடம் கோபித்துக் கொள்வது கேட்டது.

அவள் உள்ளே வந்து கணவனை முத்தமிட்டாள். உடனே நான் நெடுநேரத்துக்கு முன்பாகவே எழுந்துவிட்டேன், ஏதோ ஒரு தவறு காரணமாகவே டாக்டர் வரும்பொழுது நோயாளியின் அறையில் இல்லை என்று விளக்கம் சொல்லத் தொடங்கினாள்.

இவான் இலியீச் அவளை உற்றுப் பார்த்தார். அவளுடைய தோற்றத்தின் ஒவ்வொரு அம்சத்தையும் கவனித்தார். அவளுடைய வெண்மையான நிறம், உடற்பருமன், அவளுடைய கரங்கள் மற்றும் கழுத்தின் தூய்மை, அவளுடைய தலைமுடியின் பளபளப்பு, கண்களின் பிரகாசம்—அவளிடம் நிரம்பி வழிந்த வாழ்க்கையின் பூரணத்துவம்—அவருக்கு எரிச்சலைக் கொடுத்தது. அவருடைய உடலின் ஒவ்வொரு அணுவும் அவளை வெறுத்தது. அவள் தன்னைத் தொட்ட ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவர் உள்ளத்தில் வெறுப்பு பொங்கியது.

அவரைப் பற்றியும் அவருடைய நோயைப் பற்றியும் அவளுடைய அணுகுமுறை மாறவில்லை. நோயாளிகளைப் பற்றி டாக்டர் ஒரு அணுகுமுறையைக் கொண்டிருக்கிறார், அவரால் அதை மாற்றிக் கொள்ள முடியாது என்பதைப் போல அவரிடம் அவள் ஒரு அணுகுமுறையை வளர்த்துக் கொண்டிருந்தாள்—அவர் செய்யக்கூடாத ஒன்றைச் செய்து கொண்டிருக்கிறார், எனவே அவருடைய நிலைமைக்கு அவரே பொறுப்பு, அவள் செய்யக்கூடிய ஒரே காரியம அவரை அன்போடு கடிந்து

கொள்வதே — இந்த அணுகுமுறையை அவளால் மாற்றிக் கொள்ள முடியாது.

''அவர் கேட்கவே மாட்டேன் என்கிறாரே! முறைப்படி மருந்து சாப்பிட மாட்டேன் என்கிறாரே! காலை மேலே தூக்கிவைத்துக் கொண்டு தான் படுத்திருப்பேன் என்று பிடிவாதம் செய்கிறார். அது மிகவும் கெடுதல் என்று கூறினால் கேட்கிறாரா?''

கெராஸிம் அவர் கால்களைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்குமாறு அவர் செய்ததை அவள் விவரித்தாள்.

டாக்டர் அன்போடு, விட்டுக் கொடுக்கின்ற தோரணையில் சிரித்தார். ''அதைப் பற்றி என்ன செய்யலாம்? நோயாளிகள் எல்லோருமே அர்த்தமில்லாத தந்திரங்களைப் பற்றியே எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். நாம் அவர்களை மன்னித்துவிட வேண்டியது தான்.''

அவருடைய சோதனை முடிந்த பிறகு டாக்டர் தன்னுடைய பைக்கடிகாரத்தைப் பார்த்தார். பிறகு அவருக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, அவரைப் பார்க்க அவள் ஒரு பெரிய டாக்டரை இன்று வரச் சொல்லியிருப்பதாகவும் அவரும் மிஹயீல் தனீலவிச்சும் (இது சாதாரண டாக்டருடைய பெயர்) கூட்டாக அவரைச் சோதனை செய்து கலந்தாலோசிப்பார்கள் என்று பிரஸ்கோவியா ஃபியோதரவ்னு இவான் இலியீச்சிடம் தெரிவித்தாள்.

''தயவு செய்து மறுக்க வேண்டாம். எனக்காகவே இதைச் செய்திருக்கிறேன்'' என்று

அவள் கிண்டல் செய்வதைப் போலக் கூறினுள். உங்கள் நன்மைக்காக இதைச் செய்கிறேன், ஆனல் நீங்கள் மறுப்பதைத் தடுப்பதற்காக இப்படிச் சொல்கிறேன் என்று அவரிடம் தெரிவிப்பதைப் போல இருந்தது. அவர் முகத்தைச் சுளித்தார். ஆனல் ஒன்றும் பேசவில்லை. அவர் சிக்கிக் கொண்டிருக்கும் பொய் என்ற சிலந்தி வலையில் உண்மையையும் பொய்யையும் பிரிக்க முடியாது என்பதை அவர் உணர்ந்திருந்தார்.

அவருக்காக அவள் செய்த எல்லாமே அவள் முற்றிலும் தனக்காகச் செய்துகொண்டது தான்; அவள் உண்மையிலேயே தனக்காக எதைச் செய்கிருளோ அதை எனக்காகத் தான் செய்கிறேன் என்று சொல்லி முற்றிலும் நம்பக்கூட முடியாததாகக் காட்டி அதற்கு எதிரான அர்த்தத்தில் அவர் புரிந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்பாள்.

அவள் சொன்னபடியே பதினென்றரை மணிக்கு அந்தப் பெரிய டாக்டர் வந்தார். மறுபடியும் அவருடைய உடலைப் பரிசோதித்தார்கள். அவருக்கு முன்னலும் அடுத்த அறையிலும் குண்டிக் காய்களைப் பற்றியும் பெருங் குடலைப் பற்றியும் முக்கியமான ஆலோசனைகள் நடைபெற்றன. இப்பொழுது இவான் இலியீச்சுக்கு முன்னலிருந்த உண்மையான ஒரே பிரச்சினை வாழ்க்கையா, மரணமா என்பதே. அதற்குப் பதிலாக குண்டிக் காய்களும் பெருங் குடலும் ஒழுங்காக நடந்து கொள்ளாத பிரச்சினை இப்பொழுது ஏற்பட்டிருப்பதைப் போலவும் மிஹயீல் தனீலவிச்சும் அந்தப் பெரிய

டாக்டரும் சேர்ந்து அவற்றை ஒழுங்கு படுத்த வேண்டும் என்பதைப் போலவும் மிகவும் கவலை நிறைந்த முகத்தோடு கேள்விகள் கேட்கப்பட்டன, பதில்கள் சொல்லப்பட்டன.

அந்தப் பெரிய டாக்டர் அவரிடம் மிகக் கவலையான முகத்தோடு, ஆனால் நம்பிக்கையை முற்றிலும் இழந்துவிடாத பார்வையோடு விடை பெற்றுக் கொண்டார். இவான் இலியீச் அச்சமும் நம்பிக்கையும் பிரகாசிக்கும் கண்களை மேலே உயர்த்தி நோய் குணமடையக் கூடிய சந்தர்ப்பம் இருக்கிறதா என்று பயந்து கொண்டே கேட்ட பொழுது அவர் தன்னால் உறுதியாகச் சொல்ல முடியாது, ஆனால் லேசாக ஒரு சந்தர்ப்பம் இருக்கிறது என்று பதிலளித்தார். டாக்டர் வெளியே போவதைக் கதவு வரையிலும் பார்த்துக் கொண்டிருந்த இவான் இலியீச்சின் கண்களில் ஏற்பட்ட நம்பிக்கை ஒளி மனதை உருக்குவதாக இருந்தபடியால் பிரஸ்கோவியா ஃபியோதரவ்னா அந்தப் பெரிய டாக்டருக்குப் பணம் கொடுப்பதற்காகப் படிப்பறையிலிருந்து வெளியே போகும் பொழுது கண்ணீர் வடித்தாள்.

டாக்டர் அளித்த ஊக்கம் அவருடைய உணர்ச்சிகளைத் தூண்டியது. ஆனால் அது குறைந்த காலத்துக்கு மட்டுமே நீடித்தது. மறுபடியும் அதே அறை, அதே படங்கள், திரைகள், சுவர்க்காகிதம், கலைப்பொருள்கள் மற்றும் அதே வலிக்கின்ற, வேதனையை அனுபவிக்கின்ற உடல். இவான் இலியீச் முனகத்

தொடங்கினர். அவர்கள் அவருக்கு ஊசி போட்டார்கள். அவர் உணர்விழந்தார்.

அவருக்கு மறுபடியும் உணர்வு ஏற்பட்ட பொழுது அந்தி நேரமாகியிருந்தது. அவர்கள் அவருக்கு மாலையுணவு கொண்டு வந்தார்கள். அவர் மிகவும் சிரமப்பட்டு சிறிதளவு கோழி சூப்பைக் குடித்தார். மறுபடியும் எல்லாம் அதே மாதிரிதான். மறுபடியும் இரவு வந்தது.

மாலையுணவுக்குப் பிறகு, ஏழு மணிக்கு பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞ மாலை உடையணிந்து அறைக்குள் வந்தாள். அவளுடைய முன்பகுதி எடுப்பாக இருந்தது. முகத்தில் பவுடர் பூச்சின் சுவடுகள் தெரிந்தன. அவர்கள் நாடகத்துக்குப் போவதாகக் காலையில் அவரிடம் சொல்லியிருந்தாள். ஸாரா பெர்ஞர்* நகரத்துக்கு வந்திருந்தாள். அவருடைய வற்புறுத்தலின் பேரில் அவர்கள் முன்வரிசையில் ஒரு பெட்டியை எடுத்திருந்தார்கள். அவர் அதைப் பற்றிய எல்லாவற்றையுமே மறந்து விட்டார். அவளுடைய நுணுக்கமான ஒப்பனையைப் பார்த்த பொழுது அவருக்கு வேதனை ஏற்பட்டது. ஆனல் அந்தக் கலைநிகழ்ச்சியைப் பார்ப்பது குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கு உதவும் என்று கருதி அவர்கள் தனிப் பெட்டி எடுத்துக் கொள்ள வேண்டும் என்று தான் வற்புறுத்தியது நினைவுக்கு வந்ததும் அவர் தன்னுடைய உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டார்.

---

* பிரபலமான பிரெஞ்சு நாடக நடிகை.

பிரஸ்கோவியா ஃபியோதரவ்ஞ தன்னுடைய தோற்றத்தைப் பற்றித் திருப்தியடைந்தவளாக—ஆனுல் லேசான குற்ற உணர்ச்சியோடு—உள்ளே வந்தாள். அவள் உட்கார்ந்து உடல்நிலே எப்படி இருக்கிறது என்று கேட்டாள். ஏதாவது பேச வேண்டுமென்பதற்காகத்தான் அவள் அப்படிக் கேட்டாளே தவிர அவருடைய உடல் நலத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காக அல்ல என்பதை அவர் உணர்ந்தார். மேலும் அவருடைய உடல் நிலேயைப் பற்றிப் புதிதாகத் தெரிந்து கொள்வதற்கு ஒன்றுமில்லே. பிறகு அவள் சொல்ல வந்ததைச் சொன்ஞள். நாடக அரங்கில் பெட்டியை ஏற்பாடு செய்திராவிட்டால் நான் போவதைப் பற்றி நினைத்திருக்க மாட்டேன், மேலும் ஏலெனும் அவர்களுடைய மகளும் பெத்ரீஷெவும் (அவர்கள் மகளேத் திருமணம் செய்து கொள்ளப் போகின்ற விசாரணை நீதிபதி) நாடகத்துக்குப் போகிருர்கள், அவர்கள் துணையில்லாமற் போகக் கூடாது என்ருள். உங்களோடு வீட்டில் உட்கார்ந்திருப்பதைத்தான் நான் மிகவும் விரும்புகிறேன், நான் வெளியே போயிருக்கும் பொழுது தயவு செய்து டாக்டர் சொன்னபடி எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்ருள்.

''ஃபியோதர் பெத்ரோவிச் (மணமகன்) உங்களேப் பார்க்க விரும்புகிருர். அவர் வரலாமா? லீஸாவும்தான்.''

''வரட்டுமே.''

அவர் மகள் உடல் முழுவதும் ஒப்பனேயோடு

வந்தாள். அவளுடைய இளமையான உடலின் பெரும் பகுதி மூடப்படாமல் காட்சிப் பொருளாக இருந்தது. பாவம். அவருடைய உடல் அவரைச் சித்திரவதை செய்து கொண்டிருந்தது. அவள் உடலுரத்தோடும் ஆரோக்கியத்தோடும் இருந்தாள். அவள் அதிகமாகக் காதல் வயப்பட்டிருந்தது தெரிந்தது. அவருடைய நோயும் வேதனையும் மரணமும் தன்னுடைய மகிழ்ச்சியை பாதிப்பதைப் பற்றி அவளுக்கு எரிச்சலாக இருந்தது...

ஃபியோதர் பெத்ரோவிச் மாலை உடை அணிந்து á la Capoulஐப் போல சுருள் சுருளான தலை முடியோடு வந்தார். அவருடைய நீண்ட, சதைத்திரட்சியுடைய கழுத்தைச் சுற்றி விறைப்பான, வெள்ளை நிறக் காலர் தெரிந்தது. அவருடைய மார்பை வெண்மையான சட்டை மறைத்தது, அவருடைய உரமான கால்களைக் குறுகலான, கறுப்பு நிறக் காற்சட்டைகள் மூடியிருந்தன. ஒரு கையை வெள்ளைக் கையுறை மூடியிருந்தது. மறு கையில் நாடக அரங்கத் தொப்பியை வைத்துக் கொண்டிருந்தார்.

அவருக்குப் பின்னால் இவான் இலியீச்சினுடைய மகன், பள்ளி மாணவன் வந்ததை யாரும் கவனிக்கவில்லை. அவன் புதிய உடைகளை அணிந்திருந்தான் (பாவம்) கைகளைக் கையுறைகள் மூடியிருந்தன. அவனுடைய கண்களுக்குக் கீழ் பயங்கரமான, கறுப்பு வட்டங்கள் தெரிந்தன. அதன் அர்த்தம் இவான் இலியீச்சுக்குத் தெரியும்.

அவர் எப்பொழுதுமே தன் மகனைப் பற்றி வருத்தப்படுவார். இப்பொழுது அந்தப் பைய னின் பீதியடைந்த, பரிதாபமான பார்வை அவரை மிகவும் வேதனைப் படுத்தியது. கெரா ஸிமைத் தவிர வாஸ்யா மட்டுமே தன்னைப் புரிந்து கொண்டு தனக்காக அனுதாபப் படுவ தாக இவான் இலியீச் உணர்ந்தார்.

அவர்கள் எல்லோரும் உட்கார்ந்தார்கள். அவருடைய உடல் நிலை எப்படி இருக்கிற தென்று மறுபடியும் கேட்டார்கள். சிறிது நேர மௌனம். நாடக அரங்கில் பயன்படுத்தும் தொலைக் காட்சிக் கண்ணாடிகள் எங்கே இருக் கின்றன என்று லீஸா தாயாரைக் கேட்டாள். அவற்றைக் கைத் தவறுதலாக வைத்தது யார் என்பதைப் பற்றி தாயாருக்கும் மகளுக்கும் சிறிது நேரம் வாக்குவாதம் நடைபெற்றது. மிகவும் அதிருப்திகரமானது.

ஸாரா பெர்னுரை நீங்கள் பார்த்திருக்கிறீர் களா என்று ஃபியோதர் பெத்ரோவிச் இவான் இலியீச்சைக் கேட்டார். அவருக்கு முதலில் இந்தக் கேள்வி புரியவில்லை, பிறகு பேசினுர்:

''இல்லை. நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?''

''ஆமாம். 'Adrienne Lecouvreur'* என்ற நாடகத்தில்.''

அவள் ஏதோ ஒரு பாத்திரத்தில் மிக அற் புதமாக நடித்ததாக பிரஸ்கோவியா ஃபியோ

---

* அத்ரியேன்னு லெகுவ்ரேர் — பிரெஞ்சு நாடக ஆசிரியர்களான ஸ்க்ரீப் மற்றும் லெகுவே எழுதிய நாடகம்.

தரவ்ஞ கூறினாள். மகள் அதை மறுத்தாள். அவளுடைய நடிப்பின் கவர்ச்சியையும் இயல் பான தன்மையையும் பற்றி விவாதம் தொடங் கியது. இதைப் பற்றி வழக்கமாக எப்பொ ழுதுமே சொல்லப்படுகின்ற அதே விஷயங்களை அவர்களும் பேசினார்கள்.

அவர்களுடைய உரையாடலுக்கு நடுவில் ஃபியோதர் பெத்ரோவிச் இவான் இலியீச்சைப் பார்த்தார். அவர் பேச்சு அப்படியே நின்று விட்டது. மற்றவர்களும் அவரைப் பார்த்தார் கள். உடனே பேச்சை நிறுத்திக் கொண்டார் கள். இவான் இலியீச் தனக்கு முன்னால் கண் களில் பொறி பறக்க எதையோ பார்த்துக் கொண்டிருந்தார். அவரால் தன்னுடைய எரிச் சலை மறைக்க முடியவில்லை. அந்த நேரத்தில் இதைத் திருத்த வேண்டியது அவசியப்பட்டது. ஆனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அங்கே நிலவிய மௌனத்தைப் போக்க வேண்டும். ஆனால் அதைப் போக்க யாருமே துணியவில்லை. நாகரிக முறைக்காக அவர்கள் எல்லோரும் நடத்தும் பொய்மைக் கூத்தை ஏதாவது அம் பலப்படுத்திவிடுமோ, எல்லாவற்றையுமே திடீ ரென்று உண்மையின் ஒளியில் பார்த்து விடு வோமோ என்று எல்லோரும் அச்சமடையத் தொடங்கினார்கள். லீஸாவுக்குத்தான் முதலில் துணிச்சல் ஏற்பட்டது. அவள்தான் மௌனத் தை முறித்தாள். எல்லோரும் நினைத்துக் கொண்டிருந்த விஷயத்தை மறைக்கின்ற உத் தேசத்தோடு அவள் பேசினாள்; ஆனால் அதையே பேசிவிட்டாள்.

''சரி, நாம் போவதென்றால் புறப்பட வேண் டும்'' என்று தன் கைக்கடிகாரத்தைப் (அது அவள் தகப்பனாருடைய அன்பளிப்பு) பார்த்துக் கொண்டு கூறினாள். அந்த இளைஞனைப் பார்த்து அவர்கள் இருவருக்கு மட்டுமே தெரிந்த எதைப் பற்றியோ அர்த்தத்தோடு, ஆனால் யாரும் பார்க்கமுடியாத முறையில் அவள் சிரித்தாள். பிறகு பட்டுடை சலசலக்க அவள் எழுந்தாள்.

அவர்கள் எல்லோரும் எழுந்து, விடை பெற்றுக் கொண்டு வெளியே சென்றார்கள்.

அவர்கள் போன பிறகு தன் உடல் நிலை அபிவிருத்தியடைந்திருப்பதாக இவான் இலியீச் கற்பனை செய்து கொண்டார். குறைந்த பட்சம் அந்தப் பொய் போய்விட்டது. அவர்களோடு அதுவும் போய்விட்டது. ஆனால் அந்த வலி இருந்தது. அதே பழைய வலி. அதே பழைய அச்சம். வேறு எதுவுமே இதைக் காட்டிலும் கடினமாக இருக்காது, சுலபமாகவும் இருக் காது. அது மேலும் மோசமாகிக் கொண்டிருந் தது.

நேரம் ஒவ்வொரு நிமிடமாக, ஒவ்வொரு மணியாக, அதே மாதிரியாக, முடிவேயில்லாமல் —ஆனால் அவருடைய முடிவு நிச்சயம் என்ற பயங்கர உணர்ச்சி அவரைச் சூழ்ந்து கொள்ள —மெதுவாக நகர்ந்தது.

''ஆமாம். கெராஸிமை அனுப்பிவை'' என்று பியோத்தரின் கேள்விக்கு அவர் பதி லளித்தார்.

## 9

இரவு வெகு நேரமான பிறகுதான் அவருடைய மனைவி திரும்பினுள். அவள் அடிமேலடி வைத்து அறைக்குள் நுழைந்தாள். ஆனல் அவள் வருவது அவருக்குக் கேட்டுவிட்டது. அவர் கண்களைத் திறந்தார். உடனே கண்களை வேகமாக மூடிக் கொண்டார். அவள் கெராஸிமை அனுப்பிவிட்டு அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்க விரும்பினுள். ஆனுல் அவர் கண்களைத் திறந்தார்:

''வேண்டாம். நீ போ.''

''அதிகமாக வலிக்கிறதா?''

''அது முக்கியமல்ல.''

''சிறிது அபின் சத்தைக் குடியுங்கள்.''

அவர் சரி என்று வாங்கிக் குடித்தார். அவள் வெளியே சென்றுள்.

காலை மூன்று மணிவரை அவருக்குச் சித்திரவதை, பாதி உணர்ச்சி நிலையில் இருந்தார். ஒரு குறுகலான, கறுப்புச் சாக்குக்குள் அவரைத் திணிக்க முயற்சி செய்து சித்திரவதை செய்வதைப் போல அவர் கனவு கண்டார். அவரை மென்மேலும் ஆழமாகத் திணித்துக் கொண்டிருந்தார்கள். ஆனுல் அடிப்பகுதி வரை அவரைத் திணிக்க முடியவில்லை. இந்த பயங்கரமான நடவடிக்கை அவருக்குத் துன்பத்தைக் கொடுத்தது. அவருக்கு பயம் ஏபட்டது, ஆனுல் அவர் சாக்குக்குள் போக விரும்பினுர். ஒரே சமயத்தில் எதிர்த்தார், உள்ளே போக முயற்சி செய்தார். திடீரென்று அவர் தப்பி

ஓடினுர், கீழே விழுந்தார். அவர் விழித்துக் கொண்டார். கெராஸிம் அமைதியாக, பொறு மையாகத் தூங்கி விழுந்து கொண்டு அந்தப் படுக்கையின் கால் மாட்டில் இன்னும் உட் கார்ந்திருந்தான். இவான் இலியீச்சினுடைய மெலிந்து போன, காலுறையணிந்த கால் கள் அந்த இளைஞனின் தோள்களின் மேல் இருந்தன. விளக்குக் கூண்டிற்குள் மெழுகு வர்த்தி இன்னும் எரிந்து கொண்டிருந்தது. அவர் உடலில் இன்னும் வலி இருந்தது.

''கெராஸிம்! நீ போய்த் தூங்கு'' என்று அவர் முணுமுணுத்தார்.

''அவசியமில்லை, ஐயா! இன்னும் சற்று நேரம் உட்கார்ந்திருக்கிறேன்.''

''வேண்டாம். நீ போ.''

அவர் கால்களைக் கீழே இறக்கிவைத்துக் கொண்டு புரண்டு படுத்தார். கன்னத்தின் கீழ் கையை வைத்துக் கொண்டு தன்னைப் பற்றிப் பரிதாபப்படத் தொடங்கினுர். கெரா ஸிம் அடுத்த அறைக்குள் போகின்ற வரையி லும் காத்திருந்தார். அதன் பிறகு குழந்தை யைப் போலக் கதறி அழுதார். தன்னுடைய அஞதரவான நிலைமைக்காக, தன்னுடைய பயங்கரமான தனிமைக்காக, மக்களும் கட வுளும் இரக்கமில்லாமலிருப்பதற்காக, கடவுள் இல்லை என்பதற்காகக் கதறியழுதார்.

''கடவுளே! ஏன் இப்படிச் செய்தீர்கள்? இந்த உலகத்தில் என்னை எதற்காகக் கொண்டு வந்தீர்கள்? நான் என்ன செய்தேன் என்பதற்

காக என்னை இப்படிச் சித்திரவதை செய்கிறீர் கள்?..''

அவர் பதிலை எதிர்பார்க்கவில்லை. பதில் இல்லை என்பதனுல், பதில் இருக்க முடியாது என்பதனுல் அவர் கதறியழுதார். மறுபடியும் வலி தொடங்கியது, ஆனுல் அவர் அசைய வில்லை, யாரையும் கூப்பிடவில்லை. ''மிகவும் சரி. மறுபடியும் என்னைத் துன்புறுத்து, பல மாக! ஆனுல் எதற்காக? நான் உனக்கு என்ன செய்தேன்?'' என்று மட்டும் தனக்குள் சொல்லிக் கொண்டார்.

பிறகு அவர் அமைதியடைந்தார். அழுவதை நிறுத்தியதோடு மூச்சுவிடுவதையும் நிறுத்திக் கொண்டார். எதையோ கவனமாகக் கேட் டார். அவர் பேசும் குரலைக் கேட்கவில்லை, ஆன்மாவின் குரலை, தன்னுள் பாய்ந்து கொண் டிருந்த சிந்தனை நீரோட்டத்தின் குரலைக் கேட் டார்.

''உனக்கு என்ன வேண்டும்?'' என்பது தான் ஓரளவுக்கு வார்த்தைகளில் தெளிவாக எடுத் துரைக்கப்படக் கூடிய முதற் கருத்து. ''உனக்கு என்ன வேண்டும்? உனக்கு என்ன வேண்டும்?'' என்று அவர் தன்னையே திருப்பித் திருப்பிக் கேட்டுக் கொண்டார். ''துன்பம் போதும். வாழ வேண்டும்'' என்று அவர் பதிலளித்தார்.

அவர் மறுபடியும் கவனமாகக் கேட்டார். உடலை இறுக்கிக் கேட்டபடியால் வலி கூட அவர் கவனத்தைத் திருப்ப முடியவில்லை.

''வாழ்க்கையா? எப்படி வாழப் போகிருய்?' என்று ஆன்மாவின் குரல் கேட்டது.

''நான் முன்பு வாழ்ந்ததைப் போல—சுக மாக, மகிழ்ச்சியாக வாழ வேண்டும்.''

''முன்பு உன் வாழ்க்கை அவ்வளவு சுகமாக வும் மகிழ்ச்சியாகவும் இருந்ததா?'' என்று அந்தக் குரல் கேட்டது. அவர் தன்னுடைய மகிழ்ச்சியான வாழ்க்கையின் மிகச் சிறந்த தருணங்களை நினைத்துப் பார்க்கத் தொடங் கினார். ஆனால் அவருடைய மகிழ்ச்சி நிறைந்த வாழ்க்கையின் மிகச் சிறந்த தருணங்கள் எல் லாமே முதலில் அவர் நினைத்ததைப் போல இல்லை எனத் தோன்றியது விசித்திரமே. அவ ருடைய குழந்தைப் பருவத்தின் மிகத் தொ டக்க கால நினைவுகளைத் தவிர மற்றவை எல் லாமே. அவருடைய குழந்தைப் பருவத்தில் உண்மையிலேயே மகிழ்ச்சியான ஏதோ ஒன்று —அதை மறுபடியும் உயிர்ப்பிக்க முடியுமானல் அதற்காக உயிரைக் கொடுப்பது கூடப் பொருத் தமே—இருந்தது. ஆனல் அந்த ஆனந்தத்தை அனுபவித்த மனிதர் எங்கோ மறைந்துவிட் டார். வேறு யாரோ ஒருவருடைய நினைவுகளை அவர் கூப்பிடுவது போலத் தோன்றியது.

இன்று இவான் இலியீச் என்று மாறிவிட்ட நபரைப் பற்றிய நினைவுகள் ஏற்பட்ட உடனே ஒரு காலத்தில் மகிழ்ச்சியாகத் தோன்றிய அனைத்துமே அவருடைய நிலையான, திடமான பார்வையில் கரைந்து போய் மதிப்பில்லாத ஏதோ ஒன்றாக—அருவருப்பானதாகக் கூட— மாறின.

இவர் தன்னுடைய குழந்தைப் பருவத் திலிருந்து எவ்வளவு தள்ளிப் போனாரோ நிகழ்

காலத்துக்கு எவ்வளவு நெருக்கமாக வந்தாரோ, அவ்வளவுக்கு அவருடைய மகிழ்ச்சி மதிப்பில்லாததாகவும் சந்தேகத்துக்குரியதாகவும் ஆயிற்று. இது சட்ட இயல் பள்ளியிலிருந்து தொடங்கியது. அங்கே உண்மையாகவே நல்ல அனுபவங்கள் பல அவருக்கு ஏற்பட்டன. அங்கே அவருக்கு ஆனந்தம், நட்பு மற்றும் நம்பிக்கை ஏற்பட்டன. ஆனுல் உயர் வகுப்புகளுக்குப் போனதும் இந்த நல்ல விஷயங்கள் மிகவும் அபூர்வமாகிவிட்டன. அதன் பிறகு, கவர்னருடைய காரியதரிசியாகப் பணியாற்றிய ஆரம்ப வருடங்களில் அவர் மறுபடியும் சில நல்ல விஷயங்களை அனுபவித்தார். அவை எல்லாமே காதலோடு சம்பந்தப் பட்டிருந்தன. பிறகு அவருடைய வாழ்க்கை சிக்கலடைந்தது, நல்லவை குறைந்தன. பிறகு அவை மேலும் அதிகமாகக் குறைந்தன. எவ்வளவு தள்ளிப் போனுரோ அவ்வளவு குறைந்தன.

அவருடைய திருமணம்... எவ்வளவு தற்செயலான திருமணம், அதில் ஏற்பட்ட ஏமாற்றம், அவர் மனைவியின் மூச்சின் நாற்றம், உடலின்பமும் பாசாங்கும்! ஜீவனே இல்லாத அவருடைய தொழில், ஒவ்வொரு வருடமும், ஒன்று, இரண்டு, பத்து, இருபது வருடங்கள் —எந்த மாற்றமும் இல்லாமல்—பணத்தைப் பற்றிய கவலைகள். அது எவ்வளவு அதிகமாக நீடித்ததோ அந்த அளவுக்கு அதிகமாக எல்லாமே உயிரில்லாமற் போய்விட்டன. மலைமேல் ஏறுவதாக நான் கற்பனை செய்தபொழுது தொடர்ச்சியாகக் கீழே இறங்கிக் கொண்டிருந்

ததைப் போல. ஆமாம். அதுதான் உண்மை. நான் மேலே, மேலே போய்க்கொண்டிருப்பதாக என்னுடைய நண்பர்கள் நினைத்தார்கள். ஆனால் என் கால்களுக்குக் கீழ் வாழ்க்கையே நொறுங்கிக் கொண்டிருந்தது... இப்பொழுது நான் செத்துக் கொண்டிருக்கிறேன்!

என்ன நடந்து கொண்டிருக்கிறது? ஏன்? நம்ப முடியவில்லையே. என்னுடைய வாழ்க்கை அவ்வளவு அருவருப்பானதாக, அர்த்தமற்றதாக இருந்தது என்பதை நம்ப முடியவில்லையே? ஆனால் அது அருவருப்பானதாக, அர்த்தமற்றதாக இருந்தால் கூட நான் எதற்காகச் சாக வேண்டும்? அதிலும் இப்படித் துடி துடித்துச் சாக வேண்டுமா? ஏதோ ஒரு தவறு இருக்க வேண்டும்.

''ஒருவேளை எப்படி வாழ வேண்டுமோ அப்படி நான் வாழவில்லையோ?'' என்ற எண்ணம் அவர் மனதில் தோன்றியது. ''ஆனால் எப்படி வாழ வேண்டுமோ அப்படி நான் வாழவில்லை என்பது காரணமாக இருக்காது. ஏனென்றால் எந்தக் காரியத்தை எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படித்தானே நான் செய்தேன்'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டார். வாழ்க்கை மற்றும் மரணத்தைப் பற்றிய மொத்தப் பிரச்சினைக்கும் உரிய இந்த ஒரு பதிலை முற்றிலும் சாத்தியமற்றதாகக் கருதி உடனே அதை மனதிலிருந்து விரட்டினார்.

உனக்கு என்ன வேண்டும்? வாழ வேண்டுமா? எப்படி வாழப் போகிறாய்? நீதிமன்றத்தில் நான் இருப்பதைப் போல, ''நீதிபதி வருகிறார்! நீதி

பதி வருகிறுர், நீதிபதி வருகிறுர்'' என்று ஊழியர் அறிவிப்பதைப் போல என்று அவர் மனதில் திருப்பிச் சொல்லிக் கொண்டார். இங்கே அவர்தான் நீதிபதி! ''ஆனுல் எனக்கு ஒன்றும் தெரியாது'' என்று அவர் ஆத்திர மாகக் கத்தினுர். ''நான் செய்த தவறு என்ன?'' அவர் அழுகையை நிறுத்திவிட்டு, சுவரை நோக்கி முகத்தைத் திருப்பிக் கொண்டு அதே விஷயத்தைப் பற்றி மறுபடியும் மறுபடியும் சிந்தித்துக் கொண்டிருந்தார்: ''இந்த பயங் கரத்தை நான் ஏன் அனுபவிக்கிறேன்? என்ன காரணத்துக்காக அனுபவிக்கிறேன்!''

எவ்வளவு சிந்தித்தபோதிலும் அவரால் ஒரு பதிலேயும் கண்டுபிடிக்க முடியவில்லே. எப்படி வாழ்க்கை நடத்த வேண்டுமோ அப்படி வாழ்க்கை நடத்தாததனுல்தான் இவை அனேத் துமே ஏற்பட்டிருக்கின்றன என்ற எண்ணம் அவருக்கு ஏற்படும் பொழுது (அந்த எண்ணம் அடிக்கடி ஏற்பட்டது) அவர் உடனே எவ்வளவு சரியான வாழ்க்கையை நான் நடத்தினேன் என்பதை நினேவுபடுத்திக் கொண்டு அந்த நம்ப முடியாத கருத்தை உடனே விரட்டியடித் தார்.

## 10

இன்னும் இரண்டு வாரங்கள் கழிந்தன. இப்பொழுதெல்லாம் இவான் இலியீச் சோபா வை விட்டு எழுந்திருப்பதே இல்லே. அவர் படுக் கையில் படுத்திருக்க விரும்பாததால் சோபா வில் படுத்திருந்தார். பெரும்பாலும் சுவரை

நோக்கி முகத்தை வைத்துக் கொண்டு சோபா வில் படுத்திருக்கும் பொழுது அதே காரண மில்லாத துன்பத்தில் தனியாக வேதனைப்பட் டார். காரணம் சொல்ல முடியாது, அதே கேள்விகளைப் பற்றித் தனியாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார். இது என்ன? உண்மையில் இதுதான் மரணமோ? ஆம்! இது உண்மையி லேயே மரணம் தான் என்று அவர் மனக்குரல் பதிலளித்தது. இந்தத் துன்பம் எதற்காக? இதற்கு எந்தக் காரணமும் கிடையாது என்று மனக்குரல் பதிலளித்தது. இதற்கு மேல் பதில் கிடையாது—இதைத் தவிர வேறு பதிலும் கிடையாது.

அவருக்கு நோய் ஆரம்பமானதிலிருந்து, டாக்டரைப் பார்க்கப் போன முதல் நாளி லிருந்தே இவான் இலியீச்சினுடைய வாழ்க்கை மாறி மாறி வந்து கொண்டிருந்த இரண்டு எதிர் மனோபாவங்களாகக் கூறு போடப்பட் டிருந்தது. ஒன்று: மன முறிவு மனோபாவம், பயங்கரமான, புரிந்து கொள்ள முடியாத மர ணத்தை எதிர்பார்ப்பது. அடுத்தது: நம்பிக்கை மனோபாவம், தன் உடலின் செயல்களைக் கவனிப்பதில் விசேஷமான அக்கறை எடுத்துக் கொள்ளுமாறு அவரைத் தூண்டியது. ஒரு சமயத்தில் அவர் தன்னுடைய கண்களுக்கு முன்னால் தற்காலிகமாகத் தன்னுடைய கட மையைச் செய்ய மறுக்கின்ற குண்டிக் காயை அல்லது பெருங்குடலைப் பார்த்தார். அடுத்த சமயத்தில் பயங்கரமான, ஆழம் காண முடி யாத, தப்பிக்க எந்த வழியும் இல்லாத மர

ணத்தைத் தவிர வேறு எதையும் பார்க்க வில்லே.

நோய் ஏற்பட்டதிலிருந்தே இந்த இரண்டு மனேபாவங்களும் மாறி மாறி வந்து கொண்டிருந்தன. ஆனுல் அவருடைய நோய் முற்றிய அளவுக்கு அவருடைய குண்டிக் காய்களேப் பற்றிய ஊகங்களும் மிக விசித்திரமாகவும் நடைபெற முடியாத வகையிலும் ஏற்பட்டன. நெருங்கிக் கொண்டிருக்கும் மரணத்தைப் பற்றி அவருடைய உணர்வும் அதிகமான அளவுக்கு உண்மையான விதத்தில் இருந்தது.

மூன்று மாதங்களுக்கு முன்பு அவர் எப்படி இருந்தார், தற்பொழுது எப்படி இருக்கிருர்; உடல்நிலே எவ்வளவு தொடர்ச்சியாகச் சீர்கேடடைந்து விட்டது என்பதை நினேத்துப் பார்ப்பதே எல்லா நம்பிக்கையையும் அழிக்கப் போதுமானதாக இருந்தது.

சுவரைப் பார்த்தபடியே சோபாவில் படுத்திருந்த அந்தத் தனிமையின் கடைசி நாட்களில், ஜனக் கூட்டம் நிறைந்த அந்த நகரத்தின் நடுவில் அவருடைய பல நண்பர்கள் மற்றும் உறவினர்களுக்கு மத்தியில் அவருடைய தனிமையின், கடலின் அடியாழத்தில் அல்லது பூமியின் மடியில் கூட அவ்வளவு முழுமையாக இருந்திருக்க முடியாத அந்த பயங்கரமான தனிமையின் கடைசி நாட்களின் போது இவான் இலியீச் கடந்த காலத்தில்தான் வாழ்ந்து கொண்டிருந்தார். கடந்த காலத்தின் சித்திரங்கள் ஒவ்வொன்ருக அவர் மனதில் தோன்றி மறைந்தன. அவை எப்பொழுதுமே சற்று

முந்திய கடந்த காலத்திலிருந்து ஏதாவதொன்றிலிருந்து ஆரம்பமாகி அதிகப் பழங்காலத்தை, அவருடைய குழந்தைப் பருவத்தை நோக்கிப் பின்னேக்கிச் சென்று அங்கே சற்று நேரம் தாமதிக்கும். அந்தப் பருவத்தில் காலையில் கொடுக்கப்பட்ட பழப்பாகை நினைத்துக் கொண்டார் என்ருல் குழந்தைப் பருவத்தில் தரப்பட்ட பிசினைப் போலக் கையில் ஒட்டுகின்ற பிரெஞ்சுப் பழப்பாகுகளை, அவற்றின் பிரத்யேகமான ருசியை, அந்தக் கொட்டைகளைச் சப்பும் பொழுது வாயிலிருந்து வடிகின்ற எச்சிலை நிச்சயமாக நினைப்பார். அந்த ருசியைப் பற்றிய நினைவு இன்னும் தொடர்ச்சியாக தாதிகளை, சகோதரனை, விளையாட்டுப் பொருள்களைப் பற்றிப் பல நினைவுகளை ஏற்படுத்தும். ''நான் அவர்களைப் பற்றி நினைக்கக் கூடாது... அது மிகவும் வேதனையானது'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டு சிந்தனைகளை நிகழ் காலத்துக்கு மாற்றுவார். சோபாவுக்குப் பின்னுலுள்ள பொத்தான், சோபாவின் மொராக்கோத் தோலிலுள்ள மடிப்பு. ''மொராக்கோத் தோல் விலை அதிகம். ஆனுல் நீடித்துப் பயன் படுவதில்லை. இதைப் பற்றி என் மனைவியோடு சச்சரவு கூட ஏற்பட்டது. ஆனுல் அந்தக் காலத்தில் அப்பாவின் கைப்பெட்டியின் மொராக்கோத் தோல் வேறுரகம். அதைக் கத்தியினுல் வெட்டிவிட்டோம். பெரிய தகராறு. எங்களைத் தண்டித்தார்கள். அம்மா இனிப்புக் கேக்குகளைக் கொடுத்தாள்.'' மறுபடியும் நினைவுகள் அவருடைய குழந்தைப் பருவத்தின் மீது

மையங்கொள்ளும். அவர் மறுபடியும் அவை வேதனையளிப்பதாகக் கருதி வேறு எதைப் பற்றியாவது சிந்திப்பதன் மூலம் அவற்றை விரட்ட முயற்சி செய்தார்.

இந்த நினைவுகளின் தொடர்வரிசையோடு மற்ற நினைவுகளும்—அவருடைய நோய் எப்படித் தொடங்கி வளர்ச்சியடைந்தது என்ற நினைவுகள்—ஒரே சமயத்தில் அவர் மீது தாக்கம் செலுத்தின. கடந்த காலத்தில் எவ்வளவு பின்னால் போகிறாரோ அவ்வளவு அதிகமான உயிராற்றலோடு அவர் வாழ்க்கை விளங்கியிருக்கிறது என்பதை உணர்ந்தார். ஆரம்பத்தில் அவருடைய வாழ்க்கையில் நன்மை அதிகமாக இருந்தது. உயிராற்றலும் அதிகம். ஒன்று மற்றதோடு இணைந்திருந்தது. ''என்னுடைய துன்பம் மென்மேலும் மோசமாகிக் கொண்டிருப்பதைப் போல, என்னுடைய மோத்த வாழ்க்கையும் மென்மேலும் மோசமடைந்திருந்தது'' என்று அவர் நினைத்தார். ஒரே ஒரு கட்டம் தான் பிரகாசமானது, அது மிகவும் பின்னால் அவருடைய வாழ்க்கையின் தொடக்கத்தில் இருந்தது. அதறகுப் பிறகு எல்லாமே கறுப்பாக, மென்மேலும் கறுப்பாக மாறின, அதிலும் வேகமாக, மென்மேலும் வேகமாக மாறின. ''மரணத்திலிருந்து என்னைப் பிரிக்கும் தூரத்தின் செங்கோணத்துக்கு எதிர்மறை விகிதத்தில்'' என்று இவான் இலியீச் நினைத்தார். மென்மேலும் அதிகரிக்கும் வேகத்தோடு கீழே விழுகின்ற கல்லின் உதாரணம் அவருடைய மூளையில் பளிச்சிட்டது. மென்மேலும் அதிகரிக்

கும் துன்பங்களைக் கொண்டது வாழ்க்கை அது வேகத்தோடு, இன்னும் அதிகமான வேகத்தோடு சொல்ல முடியாத துன்பம் என்ற இலக்கை நோக்கி விழுந்துகொண்டிருக்கிறது. ''நான் கீழே விழுந்து கொண்டிருக்கிறேன்...'' அவர் திடுக்கிட்டார், நடுங்கினார், எதிர்க்க முயற்சித்தார். ஆனால் இனி எதிர்க்க முடியாது என்பது இப்பொழுது அவருக்குத் தெரியும். சிந்தனை செய்து களைப்படைந்தவராக—ஆனால் கண்களுக்கு முன்னால் தோன்றியதைப் பார்க்காமல் கண்களைத் திருப்ப முடியாதவராக—அவர் சோபாவின் பின்புறத்தைப் பார்த்துக் கொண்டு காத்திருந்தார்—அந்த பயங்கரமான வீழ்ச்சிக்காக, கடைசி அதிர்ச்சிக்காக, அழிவுக்காகக் காத்திருந்தார். ''இதை எதிர்க்க முடியாது'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டார். ''ஏன் இப்படி ஏற்பட்டது என்பது மட்டும் எனக்குப் புரிந்துவிட்டால்! ஆனால் அதுவும் இயலாத காரியம். எப்படி வாழ வேண்டுமோ அப்படி நான் வாழவில்லை என்றாலாவது சற்றுப் புரிந்து கொள்ளலாம். ஆனால் அப்படி ஒத்துக் கொள்ள முடியாது'' என்று தன்னுடைய வாழ்க்கையின் நேரான தன்மையை, அதன் ஒழுங்குமுறையை, அதன் தகுதிச் சிறப்பை நினைத்தவராகத் தனக்குள் கூறிக் கொண்டார். ''அதை நான் ஒத்துக் கொள்ள முடியாது'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார். யாராவது தன்னுடைய சிரிப்பைப் பார்த்து ஏமாந்துவிடலாம் என்று நினைப்பவரைப் போல உதடுகளைப்

பிரித்துக் கொண்டார். ''இதற்கு எந்த அர்த்த மும் இல்லை! வேதனை, மரணம்... ஏன்?''

## 11

இப்படியே மேலும் இரண்டு வாரங்கள் கழிந்தன. அவரும் அவருடைய மனைவியும் எதிர்பார்த்துக் கொண்டிருந்த நிகழ்ச்சி இந்த சமயத்தில் நடைபெற்றது. பெத்ரீஷெவ் அவர் மகளிடம் தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். அது மாலையில் நடைபெற்றது. மறு நாள் காலையில் பிரஸ்கோவியா ஃபியோதரவ்னு இந்த விஷ யத்தைக் கணவரிடம் எப்படித் தெரிவிக்கலாம் என்று சிந்தித்தவாறு அவருடைய அறைக்குள் நுழைந்தாள். ஆனுல் முந்திய இரவில் இவான் இலியீச்சினுடைய உடல்நிலை மோசமடைந் திருந்தது. அவர் அதே சோபாவில்—ஆனுல் வேறு விதமாகப் — படுத்திருப்பதை அவள் பார்த்தாள். அவர் மல்லாக்கப் படுத்திருந் தார். தனக்கு முன்னுல் எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டு முனகிக் கொண்டிருந்தார்.

அவள் மருந்துகளைப் பற்றி அவரோடு பேச ஆரம்பித்தாள். அவர் கண்களைத் திருப்பி அவ ளைப் பார்த்தார். அந்தக் கண்களில் அதிகமான வெறுப்பை, தன் மீது வெறுப்பைப் பார்த் தபடியால் அவள் சொல்லிக் கொண்டிருந் ததை முடிக்காமல் நிறுத்திக் கொண்டாள்.

''உனக்குப் புண்ணியமாகப் போகட்டும். என்னை நிம்மதியாகச் சாக விடு'' என்ருர் அவர்.

அவள் அறையை விட்டுப் போவதைப் போல எழுந்தாள். ஆனால் அந்த நேரத்தில் அவளுடைய மகள் உள்ளே வந்து காலை வணக்கம் தெரிவிப்பதற்காக அவருக்குப் பக்கத்தில் சென்றாள். அவர் தன் மனைவியைப் பார்த்த மாதிரியே தன் மகளையும் பார்த்தார். உடல் நிலை எப்படி இருக்கிறது என்று அவள் கேட்ட பொழுது உங்களுக்குத் தொல்லையில்லாமல் சீக்கிரத்தில் போய்ச் சேர்ந்து விடுவேன் என்று வறண்ட குரலில் பதிலளித்தார். இருவரும் பேசவில்லை. ஒரு வினாடி நேரம் உட்கார்ந்தார்கள். பிறகு வெளியே போனார்கள்.

''நாம் என்ன தவறு செய்தோம்?'' என்று லீஸா தன்னுடைய தாயாரிடம் கேட்டாள். ''எல்லாமே நம்முடைய தப்பு என்று நினைக்கிறார்! அப்பாவுக்காக வருத்தப்படுகிறேன். ஆனால் அவர் ஏன் நம்மை இப்படிச் சித்திர வதை செய்ய வேண்டும்?''

டாக்டர் வழக்கமான நேரத்துக்கு வந்தார். இவான் இலியீச் தன்னுடைய நெருப்புக் கண்களால் டாக்டரைப் பார்த்தபடியே கேள்விகளுக்கு ''ஆமாம்'' என்றும் ''இல்லை'' என்றும் பதிலளித்தார். ''எனக்கு எதுவுமே பலன் தராது என்று உங்களுக்கு நன்றாகத் தெரியும். என்னைத் தொந்தரவு செய்யாமல் விட்டு விடுங்கள்'' என்று கடைசியில் கூறினார்.

''உங்கள் துன்பங்களைக் குறைப்பதற்கு நாங்கள் முயற்சிக்கிறோம்'' என்றார் டாக்டர்.

''இல்லை. அதைக்கூட உங்களால் செய்ய முடியாது. என்னைச் சும்மா விடுங்கள்.''

டாக்டர் உபசரிக்கும் அறைக்குச் சென்று

அவருடைய நிலைமை மிகவும் மோசமடைந் திருப்பதாக பிரஸ்கோவியா ஃபியோதரவ்னு விடம் கூறினர். அவருடைய வேதனைகளைத் தணிப்பதற்கு ஒரே ஒரு மருந்து தான் இருக் கிறது, அது அபினிச் சத்து. ஆனல் அதைக் கொடுப்பதும் பயங்கரமானதுதான் என்ருர்.

அவருக்கு பயங்கரமான உடல்வலி ஏற்பட் டிருக்கிறது என்று டாக்டர் கூறினர். அது உண்மைதான். ஆனல் அவருடைய உடல் வலியைக் காட்டிலும் தார்மிக வேதனை மிக வும் பயங்கரமாக இருந்தது. அதுதான் அவ ருக்கு உண்மையான சித்திரவதை.

அந்த தார்மிக வேதனை முந்திய இரவில் தூங்கிக் கொண்டிருந்த, இனிமையான பண் புடைய கெராஸிமின் அகன்ற முகத்தைப் பார்த்ததனுலும் ''என்னுடைய வாழ்க்கை முழு வதுமே, முதிர்ச்சியான வாழ்க்கை முழுவதுமே உண்மையில் எப்படி இருக்க வேண்டுமோ, 'அப்படி இல்லாது' இருந்திருக்குமானல்?'' என்று சிந்தித்ததனுலும் ஏற்பட்டிருந்தது.

முன்பு எந்தக் கருத்து (எப்படி வாழ்ந்திருக்க வேண்டுமோ அப்படி அவர் வாழவில்லை) முற்றி லும் தவருனதாகத் தோன்றியதோ அது உண் மையாக இருக்கக் கூடும் என்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டிருந்தது. உயர்ந்த அந்தஸ் தில் இருப்பவர்கள் நல்லவை என்று கருதிய வற்றுக்கு எதிராகப் போராட வேண்டும் என்று நன்கு வெளிப்படாத சில உந்துதல்கள் அவ ரிடம் ஏற்பட்டதுண்டு. அந்தத் தெளிவில்லாத உந்துதல்களை அவர் எப்பொழுதும் நசுக்கிவிடு

வார். அவைதான் உண்மையானவையாகவும் மற்ற எல்லாமே உண்மைக்கு அப்பாற்பட்டவையாகவும் இருக்கக் கூடும் என்ற எண்ணம் இப்பொழுது அவருக்குத் தோன்றியது. அவருடைய பதவிக் கடமைகள், அவருடைய வாழ்க்கை முறை, அவருடைய குடும்பம், அந்தச் சமூக விருப்பார்வங்கள்—இவை அனைத்துமே உண்மை அல்லாதனவாக இருக்கக் கூடும். இவற்றை ஆதரித்து வாதாட அவர் முயற்சித்தார். ஆனல் திடீரென்று சிறிதும் தகுதியில்லாதவைகளைத் தான் ஆதரிப்பதாக உணர்ந்தார். அங்கே ஆதரிப்பதற்கு ஒன்றுமேயில்லை.

''இது உண்மை என்ருல், எனக்குக் கொடுக்கப்பட்ட எல்லாவற்றையும் நான் விரயம் செய்துவிட்டேன் என்ருல், நான் வாழ்க்கையிலிருந்து விடைபெற்றுக் கொள்கிறேன் என்ருல், அதைப் பற்றி நான் ஒன்றுமே செய்ய முடியாத அளவுக்குக் காலதாமதமாகிவிட்டது என்ருல்—பிறகு?'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டார். அவர் திரும்பிப் படுத்துக் கொண்டு தன்னுடைய வாழ்க்கை முழுவதையும் முற்றிலும் வேறு கோணத்தில் மறு பரிசீலனை செய்யத் தொடங்கினர். அவர் காலையில் முதலில் வேலைக்காரனையும், பிறகு தன்னுடைய மனைவியையும் பிறகு தன்னுடைய மகளையும் கடைசியில் டாக்டரையும், அவர்களுடைய ஒவ்வொரு அசைவையும், ஒவ்வொரு வார்த்தையையும் பார்த்த பொழுது இரவில் வெளிப்பட்ட பயங்கரமான உண்மை நிரு

பிக்கப்பற்றது. அவர்களில் அவர் தன்னைக் கண்டார், தன்னுடைய வாழ்க்கையை உருவாக்கிய எல்லாவற்றையும் கண்டார், இவை அனைத்துமே உண்மையல்ல என்பதைத் தெளிவாகக் கண்டார். இவை அனைத்துமே வாழ்க்கை, மரணம் ஆகிய உண்மைகளை மறைக்கின்ற பயங்கரமான, பெரிய மோசடி என்பதைக் கண்டார். இதைப் புரிந்து கொண்டது அவருடைய உடல் வேதனைகளை அதிகப்படுத்தியது, அதைப் பத்து மடங்கு அதிகப்படுத்தியது. அவர் முனகினார், படுக்கையில் புரண்டார், தன்னுடைய உடைகளை இழுத்தார். அவருடைய உடைகள் அவரை இறுக்குவதைப் போல, மூச்சைப் பிடிப்பதைப்போல அவருக்குத் தோன்றியது. அவர் உடைகளை வெறுத்தார்.

அவருக்கு அபின்சத்தை அதிகமாகக் கொடுத்தார்கள். அவர் சுயநினைவை இழந்தார். ஆனால் மாலையுணவுச் சமயத்தில் மறுபடியும் வலி ஏற்பட்டது. அவர் எல்லோரையும் வெளியே அனுப்பிவிட்டுப் படுக்கையில் வலி தாங்க முடியாமல் துடித்துக் கொண்டிருந்தார்.

அவர் மனைவி அவருக்குப் பக்கத்தில் வந்தாள்.

"Jean, அன்பே! எனக்காக இதை வாங்கிக் கொள்ளுங்கள். (எனக்காகவா ?) இது ஒரு கெடுதலையும் செய்யாது. மிகவும் உதவியாக இருக்கும். இது மருந்து இல்லை. சில சமயங்களில் ஆரோக்கியமாக இருப்பவர்கள் கூட...''

அவர் தன் கண்களை அகலமாக விரித்து அவளைப் பார்த்தார்.

''என்ன? திருச் சின்னத்தைப் பெற்றுக் கொள்ளவா? ஏன்? எனக்கு வேண்டாம்! இருந் தாலும்...''

அவள் கண்ணீர் வடிக்கத் தொடங்கினாள்.

''அன்பே! வாங்கிக் கொள்ள மாட்டீர்களா? பாதிரியாரைக் கூட்டிக் கொண்டு வரச் சொல் லட்டுமா? அவர் மிகவும் நல்லவர்.''

''செய். மிகவும் நல்லது'' என்றார் அவர்.

பாதிரியார் வந்து தன்னுடைய பாவ ஏற்பைக் கேட்ட பிறகு இவான் இலியீச் நிம் மதியடைந்தார். அவருடைய சந்தேகங்கள் மறைந்து விட்டதைப் போல அவருக்குத் தோன்றியது. இது துன்பத்தைத் தணித்தது. ஒரு விநாடி நேரம் அவருக்கு நம்பிக்கை கூட ஏற்பட்டது. மறுபடியும் அவர் பெருங்குடல் வாய்ப் புண்ணையும் அதை குணப்படுத்தும் சாத் தியத்தையும் பற்றி சிந்தனை செய்யத் தொடங் கினார். அவர் திருச்சின்னத்தை வாங்கிக் கொண்ட பொழுது கண்களில் கண்ணீர் பெருகியது.

அவர் திருச்சின்னத்தைப் பெற்றுக் கொண்ட பிறகு அவரைப் படுக்க வைத்த பொழுது ஒரு விநாடி நேரம் குணமடைந்திருப்பதைப் போன்ற உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது. அவ ருடைய உள்ளத்தில் குணமடைந்து விடலாம் என்ற நம்பிக்கை மறுபடியும் இடம் பெற்றது. அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும் என்று டாக்டர் கூறிய ஆலோசனையைப் பற்றி அவர் சிந்தித்தார். நான் வாழ விரும்புகிறேன், நான் வாழ விரும்புகிறேன் என்று அவர் தனக்குள்

சொல்லிக் கொண்டார். அவரைப் பாராட்டுவதற்காக மனைவி உள்ளே வந்தாள். அவள் வழக்கமான விஷயங்களைப் பேசினுள். பிறகு கேட்டாள்:

''நீங்கள் உண்மையிலேயே குணமடைந்ததைப் போல உணர்கிறீர்கள், அல்லவா?''

''ஆமாம்'' என்று அவளைப் பார்க்காமலே அவர் பதிலளித்தார்.

அவளுடைய உடை, அவள் தோற்றம், அவள் முகத்திலிருந்த பாவம், அவள் குரலின் தொனி—எல்லாமே ''இது உண்மை அல்ல. உன்னுடைய வாழ்க்கையில் இது வரை நடந்திருப்பவை இப்பொழுது நடந்து கொண்டிருப்பவை அனைத்தும் வாழ்க்கை மற்றும் மரணத்தின் யதார்த்தத்தை உன்னிடமிருந்து மறைக்கின்ற பொய், மோசடி'' என்று அவரிடம் கூறின. இந்த எண்ணம் தோன்றிய மறு விஞடியே அவர் மனதில் வெறுப்பு பொங்கியது. வெறுப்போடு சேர்ந்து துன்பமளிக்கும் உடல் வேதனையும் அந்த வேதனை ஏற்பட்டவுடன் அவருக்கு நெருங்கிக் கொண்டிருக்கும் தவிர்க்க முடியாத மரணத்தைப் பற்றிய உணர்வும் ஆரம்பித்தன. புதிய உணர்ச்சிகள் தலை காட்டின. அவருக்குள் ஏதோ ஒன்று அவருடைய மூச்சை இறுக்க, தடுக்க, அடைக்கத் தொடங்கியது.

''ஆமாம்'' என்ற வார்த்தையை அவர் உச்சரித்த பொழுது அவருடைய முகத்தோற்றம் பயங்கரமாக இருந்தது. அதைச் சொல்லி முடித்தவுடன் அவள் கண்களை நேராகப்

பார்த்துக் கொண்டு உடலைத் திருப்பிக் கொண்டு படுக்கையில் விழுந்து (அவரைப் போல மிகவும் பலவீனமான ஒருவர் அவ்வளவு வேகமாக விழுந்தது ஆச்சரியமே) கூக்குரலிட்டார்:

''போ! போய்த்தொலை! என்னைத் தனியே விடு!''

## 12

அந்த வினாடியிலிருந்து தொடங்கி அவர் மூன்று நாட்களாக மிகவும் பயங்கரமான முறையில் சிறிதுகூட நிறுத்தாமல் கூக்குரலிட்டார். இரண்டு அறைகளுக்கு அப்பால் அதைக் கேட்டால் கூட ஒருவருக்குக் குலை நடுக்கம் ஏற்படும். மனைவியின் கேள்விக்குப் பதிலளித்த மறு வினாடியே எல்லாம் முடிந்துவிட்டது, இனி நம்பிக்கை இல்லை, முடிவு, கடைசி முடிவு நெருங்கிவிட்டது; தன்னுடைய சந்தேகங்கள் அனைத்துமே சந்தேகங்களாகவே நீடிக்கும், ஒரு போதும் பதில் கிடைக்காது என்பதை அவர் புரிந்து கொண்டார்.

''ஆ! ஆ! ஆ!'' என்று வெவ்வேறு தொனிகளில் அவர் கூக்குரலிட்டார். ''நான் சாக மா-ட்-டே-ன்'' என்று தொடங்கி ''ஆ!'' என்று கூக்குரலிட்டுக் கொண்டிருந்தார்.

அந்த மூன்று நாட்களும் (அவருக்கு அவை முடிவே இல்லாமலிருந்தன) அவர் அந்தக் கறுப்புச் சாக்கில் தத்தளித்துக் கொண்டிருந்தார். கண்ணுக்குத் தெரியாத, தடுக்க முடி

யாத ஏதோ ஒரு சக்தி அவரை அந்தச் சாக்கிற்குள் தள்ளிக் கொண்டிருந்தது. மரண தண்டனை விதிக்கப்பட்ட ஒருவரைப் போல, கொலையாளியின் கரங்களிலிருந்து எப்படிப் போராடினுலும் தப்ப முடியாது என்று அறிந்திருப்பவரைப் போல அவர் போராடினுர். ஒவ்வொரு நிமிடமும் — அவர் எவ்வளவு மூர்க்கமாகப் போராடினுலும் — எது என்னைப் பயமுறுத்துகிறதோ, அது தன்னை மென்மேலும் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்தார். அந்தக் கறுப்புப் பொந்துக்குள் தன்னைத் தள்ளுவதனுல்தான் — சித்திரவதை ஏற்படுகிறது, தாஞகவே அதற்குள் நுழைய முடியாததனுல் தான் அது இன்னும் அதிகமாக ஏற்படுகிறது என்பதை அவர் உணர்ந்தார். தன்னுடைய வாழ்க்கை நன்ருகவே இருந்தது என்ற நம்பிக்கை பொந்துக்குள் நுழைய முடியாதபடி அவரைத் தடுத்தது. அவர் நடத்திய வாழ்க்கைக்கு அவரளித்த ஆதரவு அவர் முன்னேறிப் போவதைத் தடுக்கும் இடையூருக இருந்தது. மற்றவைகளைக் காட்டிலும் அதுதான் சித்திரவதையை அதிகப்படுத்தியது.

திடீரென்று ஏதோ ஒரு சக்தி அவரை மார்பிலும் விலாவிலும் தாக்கி அவர் மூச்சை நிறுத்தியது. அவர் அந்தப் பொந்துக்குள் பொத்தென்று விழுந்தார். அங்கே, அந்தப் பொந்தின் முடிவில் விளக்கின் மங்கலான ஒளியைக் கண்டார். ஒரு தடவை ரயில் வண்டியில் பிரயாணம் செய்தபொழுது அது முன்னுல் போய்க் கொண்டிருப்பதாக அவர் நினைத்தபொழுது

அது உண்மையில் பின்னால் போய்க்கொண்டிருந் தது. திடீரென்று அவர் உண்மையான திசை யை உணர்ந்த நேரத்தில் ஏற்பட்ட உணர்ச்சி அவருக்கு இப்பொழுது ஏற்பட்டது.

''ஆம். இது உண்மைக்கு மாறானதே'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார். ''அதனா லென்ன. 'இதை' உண்மையாக்க இன்னும் என்னால் முடியும். ஆனால் 'எது' உண்மை?'' என்று அவர் தன்னைக் கேட்டுக் கொண்டார். திடீரென்று அமைதியாக இருந்தார்.

மூன்றாவது நாளின் இறுதியில் அவர் மரண மடைவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பு இது நடைபெற்றது. அந்த சமயத்தில் அவ ருடைய மகன் சப்தமில்லாமல் அறைக்குள் நுழைந்து அவருடைய படுக்கைக்குப் பக்கத் தில் வந்தான். அவர் சாகுந்தறுவாயில் இன்னும் அடக்க முடியாதபடி கூக்குரலிட்டுக் கொண்டு கைகளைத் தாறுமாறாக ஆட்டிக் கொண்டிருந் தார். ஒரு கை அவர் மகன் தலை மீது பட்டது. அந்தப் பையன் கையைப் பிடித்துத் தன் னுடைய உதடுகளில் வைத்து அழுத்திக் கொண்டு கதறியழத் தொடங்கினான்.

அந்த வினாடியில்தான் இவான் இலியீச் பொந்துக்குள் விழுந்தார், விளக்கின் ஒளியைப் பார்த்தார். அவர் சரியான முறையில் வாழ்க் கை நடத்தவில்லை, ஆனால் இன்னும் நிலைமை யைத் திருத்திக்கொள்ள முடியும் என்பது வெளிப்படுத்தப்பட்டது. '' 'எது' உண்மை?'' என்று அவர் தன்னைக் கேட்டுக் கொண்டார், பிறகு மௌனமாக கவனித்துக் கொண்டிருந்

தார். தன்னுடைய கையை யாரோ முத்தமிடு வதை அப்பொழுது உணர்ந்தார். அவர் கண் களைத் திறந்து மகனைப் பார்த்தார். அவன் மீது அவருக்கு அநுதாபம் நிறைந்தது. அவர் மனைவி உள்ளே வந்தாள். அவர் அவளைக் கவனித்தார். அவள் அங்கே நின்று வாயைத் திறந்தபடியே அவரைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் மூக்கிலும் கன்னங்களிலும் கண்ணீர்த் துளிகள் துடைக்கப்படாமல் வழிந்துகொண்டிருந்தன. அவள் முகத்தில் இனி என்ன செய்வேன் என்ற பாவம் இருந்தது. அவள் மீதும் அவருக்கு அநுதாபம் நிறைந்தது.

''ஆம், நான் அவர்களைச் சித்திரவதை செய் கிறேன்'' என்று அவர் நினைத்தார். ''எனக்காக அவர்கள் வருத்தப்படுகிறார்கள். ஆனால் நான் போன பிறகு அவர்களுடைய நிலைமை முன் னேற்றமடையும்.'' அவர்களிடம் இதைக் கூற விரும்பினார். ஆனால் அதற்குத் தேவையான பலம் அவரிடமில்லை. ''ஆனால் பேசுவதால் என்ன பயன்? நான் இதையாவது செய்ய வேண் டும்'' என்று அவர் நினைத்தார். அவர் தன் மனைவியை நோக்கித் திரும்பி கண்களால் தன் மகனைச் சுட்டிக் காட்டினார்.

''அவனைக் கூட்டிக் கொண்டு போ... பாவம்... நீயும் போ...'' என்றார். அவர் ''மன் னித்துவிடு'' என்று சொல்ல விரும்பினார். அது ''வழி விடு'' என்று வந்தது. தவறைத் திருத்து வதற்கு அவருடைய உடலில் பலமில்லை. அவர் கையை மட்டும் லேசாக ஆட்டினார். யார் புரிந்து கொள்ள வேண்டுமோ அந்த நபர்

புரிந்து கொள்வார் என்பது அவருக்குத் தெரியும்.

தன்னைச் சித்திரவதை செய்த, தன்னால் உதறிவிட முடியாத அனைத்துமே இப்பொழுது தானாகவே விழுந்து கொண்டிருக்கின்றன, இரண்டு பக்கங்களில், பத்துப் பக்கங்களில், ஒரே சமயத்தில் எல்லாப் பக்கங்களிலும் விழுந்து கொண்டிருக்கின்றன என்பது அவருக்குத் தெளிவாயிற்று. அவர் அவர்களுக்காக வருத்தமடைந்தார், அவர்களுடைய துன்பத்தைத் தணிப்பதற்குத் தான் ஏதாவது செய்ய வேண்டும். அவர்களையும் தன்னையும் இந்தத் துன்பத்திலிருந்து விடுவிக்க வேண்டும். ''எவ்வளவு நன்மை! எவ்வளவு எளிமை!'' என்று அவர் நினைத்தார். ''அந்த வலி?'' என்று அவர் தன்னைக் கேட்டுக் கொண்டார். ''அதை நான் எப்படிப் போக்க முடியும்? வலியே! நீ எங்கே இருக்கிறாய்?''

அவர் வலியைத் தேடி உடம்பைத் தடவினார்.

''ஆ! இங்கே இருக்கிறது. அதனாலென்ன? அப்படியே இருக்கட்டும்.''

''மரணம். மரணம் எங்கே?''

அவர் மரணத்தைப் பற்றி வழக்கமாகத் தன்னிடம் ஏற்படும் அச்சத்தைத் தேடினார். அதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மரணம் எங்கே? மரணம் என்பது என்ன? மரணம் என ஒன்று இல்லாததால் அச்சமும் இல்லை.

அங்கே மரணத்துக்குப் பதிலாக ஒளி இருந்தது.

''ஓ! அது இதுதானு?'' என்று அவர் திடீ ரென்று பலமாகப் பேசினுர். ''எவ்வளவு ஆனந் தம்!''

இவை அனைத்துமே ஒரு நொடியில் நடை பெற்றன. ஆனுல் அந்த நொடியின் முக்கியத் துவம் அழிவில்லாதது. அங்கே இருந்தவர் களுக்கு அவருடைய மரண வேதனை இன்னும் இரண்டு மணி நேரம் தொடர்ந்தது. அவருடைய தொண்டையில் ஏதோ சலசலப்பதைப் போல சத்தம் கேட்டது. அவருடைய மெலிந்த உடல் துடித்தது. பிறகு அவருடைய மூச்சுத் திணற லும் தொண்டையில் ஏற்பட்ட சத்தமும் படிப் படியாக நின்றன.

''எல்லாம் முடிந்தது!'' என்று யாரோ சொன்னுர்கள்.

இந்த வார்த்தைகள் அவருடைய காதில் விழுந்தன. அவர் இவற்றைத் தன்னுடைய ஆன்மாவில் திருப்பிச் சொன்னுர். ''எல்லாம் முடிந்துவிட்டது. இனிமேல் மரணமில்லை'' என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டார்.

அவர் ஆழமாக மூச்சிழுத்தார், நடுவில் மூச்சை நிறுத்தினுர், கால், கைகளை விறைப்பாக நீட்டினுர். அவர் மரணமடைந்தார்.

1886

# இரேய்ஸர் சொனட்டா*

"...நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்தில் அவளோடே விபசாரஞ் செய்தாயிற்று" (மத்தேயு 5; 28).

"அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி: மனைவியைப் பற்றிப் புருஷனுடைய காரியம் இப்படியிருந்தால், விவாகம் பண்ணுகிறது நல்லதல்ல என்றார்கள்.

அதற்கு அவர்: வரம் பெற்றவர்களே தவிர மற்றவர்கள் இந்த வசனத்தை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

தாயின் வயிற்றிலிருந்து அண்ணகர்களாய்ப் பிறந்தவர்களும் உண்டு; மனுஷர்களால் அண்ணகர்களாக்கப்பட்டவர்களும் உண்டு; பரலோக ராஜ்யத்தினிமித்தம் தங்களை அண்ணகர்களாக்கிக் கொண்டவர்களும் உண்டு; இதை ஏற்றுக்கொள்ள வல்லவன் ஏற்றுக்கொள்ளக் கடவன் என்றார்" (மத்தேயு 19; 10, 11, 12).

---

* இரேய்ஸர் சொனட்டா (*Kreutzer Sonata*)—ஜெர்மானிய இசை மேதையான பீத்தோவன் பிரெஞ்சு இசைவாணர் ரதோல்ஃப் கிரேய்ஸருக்கு (1766—1831) அர்ப்பணித்த பிரபலமான சங்கீதப் படைப்பு.

# 1

அப்பொழுது வசந்தகாலம் ஆரம்பமாகி யிருந்தது. நாங்கள் சுமார் இரண்டு நாட் களாகத் தொடர்ந்து பிரயாணம் செய்து கொண்டிருந்தோம். குறுகிய தூரப் பயணம் செய்யும் பிரயாணிகள் ரயில் வண்டிக்குள் வரு வதும் போவதுமாக இருந்தார்கள். ஆனால் என்னையும் சேர்த்து மூன்று நபர்கள் வண்டி புறப்பட்டதிலிருந்தே அதில் பிரயாணம் செய்துகொண்டிருந்தோம். அவர்களில் அழ கில்லாத, நடுவயதை அடைந்த ஒரு பெண் மணியும் இருந்தாள். அவள் பார்வையே அரு வருப்பாக இருந்தது. அவள் ஆண்களின் கோட் டையும் தொப்பியையும் அணிந்திருந்தாள். சிகரெட் புகைப்பதும் உண்டு. அடுத்தவர் அவ ளுக்குப் பழக்கமானவர். சுமார் நாற்பது வயது ஆகியிருக்கும். சளசளவென்று பேசிக் கொண் டிருந்தார். புத்தம் புதிய சாமான் பெட்டிகளை வைத்திருந்தார். மூன்றாவது நபர் ஒரு கன வான். அவர் யாரோடும் சேராமல் தனித்திருந் தார். நடுத்தரமான உயரம், திடீர் திடீரென்று எழுந்திருப்பதும் நடப்பதுமாக இருந்தார். அவர் வயோதிகப் பருவத்தை அடையவில்லை என்றாலும் அவருடைய சுருள் முடி உரிய காலத் துக்கு முன்பே நரைத்துவிட்டது. அவருடைய கண்கள் அசாதாரணமான பிரகாசத்தோடு ஒவ்வொரு பொருளையும் மாறி, மாறிப் பார்த்துக் கொண்டிருந்தன. அவர் ஆட்டுக் குட்டித் தோலில் தொப்பியும் காலர் வைக்கப்

பட்டிருந்த பழைய கோட்டும் அணிந்திருந்தார். அந்த கோட்டைப் பிரபலமான தையற்காரர் தயாரித்திருக்க வேண்டும். அவர் கோட்டுப் பொத்தான்களைக் கழற்றும் பொழுது ருஷ்ய உள் கோட்டும் சித்திரத்தையல் செய்யப்பட்ட ருஷ்யச் சட்டையும் அணிந்திருப்பது தெரிந்தது. இந்த கனவான் அவ்வப்பொழுது விசித்திரமான ஓசைகளை வெளியிட்டது பிரத்யேகமான அம்சமாகும். தொண்டையைச் செறுமிக் கொள்வதைப் போல அல்லது சிரிக்க ஆரம்பித்தவுடன் அதை நிறுத்திக்கொள்வதைப் போல அவை ஒலித்தன.

அவர் பிரயாணம் முழுவதும் மற்ற பிரயாணிகளோடு எல்லாவிதமான பேச்சுக்களையும் தொடர்புகளையும் மிகவும் கவனமாகத் தவிர்த்துக் கொண்டுவந்தார். யாராவது அவரிடம் பேச்சுக் கொடுத்தால் நறுக்கென்று பதிலளித்தார். தன்னுடைய நேரம் முழுவதையும் படிப்பதிலும் சன்னல் வழியாகப் பார்ப்பதிலும் புகைபிடிப்பதிலும் அல்லது தன்னுடைய பழைய மூட்டையில் உணவைத் தேடியெடுத்துப் பிறகு தேநீர் குடிப்பதில் அல்லது சிற்றுண்டி சாப்பிடுவதில் கழித்தார்.

தனிமை அவரைத் துன்புறுத்துகிறது என்று நான் நினைத்துக்கொண்டு அவரோடு பேசுவதற்குச் சில முயற்சிகளைச் செய்தேன். ஆனால் எங்கள் கண்கள் சந்தித்த ஒவ்வொரு தடவையும் (நாங்கள் எதிர்ச்சாய்வாக உட்கார்ந்திருந்தபடியால் எங்கள் கண்கள் அடிக்கடி சந்தித்துக்கொண்டன) அவர் முகத்தைத் திருப்பிக்

கொண்டு புத்தகத்தை எடுப்பார் அல்லது சன்னல் வழியாகப் பார்க்கத் தொடங்குவார்.

இரண்டாம் நாள் மாலைப் பொழுதுக்கு முன்பு ஒரு பெரிய ரயில் நிலையத்தில் வண்டி நின்ற பொழுது இந்தப் பதட்டமான கனவான் வெளியே இறங்கிச் சென்று வெந்நீர் வாங்கித் தேநீர் தயாரித்துக் கொண்டார். புதுப் பெட்டிகள் வைத்திருந்த நபரும் (அவர் ஒரு வழக்குரைஞர் என்று பின்னால் தெரிந்துகொண்டேன்) அவருக்குப் பழக்கமான, ஆண்களைப் போலக் கோட் அணிந்து புகைபிடித்த அந்தப் பெண்ணும் ரயில் நிலையத்திலிருந்த உணவகத்தில் தேநீர் குடிக்கச் சென்றார்கள்.

அந்த கனவானும் பெண்மணியும் வெளியே சென்ற பிறகு சில புதுப் பிரயாணிகள் வண்டியில் ஏறினார்கள். அவர்களில் ஒருவர் உயரமானவர், நன்றாக முகச் சவரம் செய்திருந்த, முகத்தில் சுருக்கங்கள் நிறைந்த வயோதிகர். அவர் ஓரங்களில் பர்வைத்துத் தைக்கப்பட்ட கோட்டும் பெரிய விளிம்பைக் கொண்ட துணித் தொப்பியும் அணிந்திருந்தார். அவர் ஒரு வர்த்தகராக இருக்க வேண்டும். வழக்குரைஞரும் பெண்மணியும் உட்கார்ந்திருந்த இடத்துக்கு எதிரில் இந்த வர்த்தகர் உட்கார்ந்து அப்பொழுது வண்டிக்குள் நுழைந்த ஒரு இளைஞரோடு — அவர் ஒரு கடைச் சிப்பந்தியைப் போலத் தோன்றினார்—உடனே உரையாடத் தொடங்கினார்.

நான் அவர்களுக்கு எதிர்ச்சாய்வுக் கோணத்தில் உட்கார்ந்திருந்தேன். இரயில் வண்டி

நின்று கொண்டிருந்தபடியால் யாரும் குறுக்கும் நெடுக்குமாகப் போகாமலிருந்த பொழுது அவர்களுடைய உரையாடலில் சில பகுதிகள் என் காதில் விழுந்தன. அடுத்த ஸ்டேஷனில் அமைந்திருக்கும் தன்னுடைய நாட்டுப்புறப் பண்ணைக்குப் போய்க் கொண்டிருப்பதாக வர்த்தகர் கூறினார். பிறகு அவர்கள் வர்த்தக நிலைமைகளையும் விலை வாசிகளையும் பற்றிய வழக்கமான விவாதத்தில் ஈடுபட்டார்கள். மாஸ்கோ சந்தை மற்றும் நீழ்னி நோவ்கரத் திருவிழாச் சந்தையைப் பற்றி வழக்கமான கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. அந்தத் திருவிழாவின் போது அவர்கள் இருவருக்கும் அறிமுகமான ஒரு பணக்கார வர்த்தகரின் மதுபானக் கேளிக்கைகளைப் பற்றி கடைச் சிப்பந்தி வர்ணிக்கத் தொடங்கினார். அப்பொழுது அந்தக் கிழவர் குறுக்கிட்டு குஞவினேவில் தானே நேரில் கலந்துகொண்ட மதுபான விருந்துகளைப் பற்றிச் சொல்லத் தொடங்கினார். அவற்றில் பங்கெடுத்ததைப் பற்றி அவர் பெருமைப்பட்டிருக்க வேண்டும். அவரும் அவர்கள் பேசிக்கொண்ட அதே நபரும் குடிமயக்கத்திலிருந்த பொழுது செய்த ஒரு காரியத்தை அவர் இரகசியமான குரலில் தெரிவித்த பொழுது அவர் முகத்தில் பெருமிதம் பிரகாசித்தது. கடைச் சிப்பந்தி வண்டி முழுவதும் கேட்கும்படி பலமாகவென்று சிரித்தார். அந்தக் கிழவரும் இரண்டு நீளமான மஞ்சள் பற்களை வெளியே காட்டிச் சிரித்தார்.

அங்கே சுவாரசியமான எதையும் கேட்க

முடியாது என்று கருதி ரயில்வண்டி புறப்படும் வரை வெளியே நடந்துகொண்டிருக்கலாம் என்ற எண்ணத்தில் வெளியே வந்தேன். கதவுக்குப் பக்கத்தில் அந்த வழக்குரைஞரையும் பெண்மணியையும் சந்தித்தேன். அவர்களிருவரும் ஆர்வத்தோடு பேசிக் கொண்டிருந்தார்கள்.

''உலாவுவதற்கு நேரமிருக்காது. எந்த நேரத்திலும் இரண்டாவது மணி அடிக்கலாம்'' என்று எல்லோருடனும் எளிதில் கலந்துரையாடும் அந்த வழக்குரைஞர் கூறினார்.

அவர் கூறியதைப் போல நான் அந்த ரயிலைக் கடப்பதற்குள் மணி அடித்தது. நான் திரும்பிய பொழுது அந்த வழக்குரைஞரும் பெண்மணியும் வழக்கம் போல ஆர்வத்தோடு பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த வயோதிக வர்த்தகர் அவர்களிடமிருந்து தள்ளி தனக்கு முன்னால் எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தார். அவ்வப்பொழுது தன்னுடைய இரண்டு பற்களால் உதட்டைக் கடித்துத் தன்னுடைய அதிருப்தியைக் காட்டிக்கொண்டிருந்தார்.

'' 'நான் இனிமேல் உன்னோடு வாழ்க்கை நடத்த மாட்டேன், அது என்னால் முடியாது. ஏனென்றால்'—என்று அவள் தன் கணவனிடம் சொன்னாள்...'' என்று அந்த வழக்குரைஞர் புன்னகையோடு சொல்லிக் கொண்டிருந்தது அவர்களைக் கடந்து சென்ற பொழுது என் காதில் விழுந்தது.

அவர் இப்படிப்பேசிக் கொண்டிருந்த தன்

தொடர்ச்சி எனக்குக் கேட்கவில்லை. எனக்குப் பின்னால் சில பிரயாணிகள் வந்தார்கள், பிறகு நடத்துநர், அவருக்குப் பிறகு ஒரு கைவினைஞர் எங்களைக் கடந்து ஓடினார். சற்று நேரம் அங்கே அதிகமான சத்தமும் குழப்பமும் இருந்தபடியால் அங்கே நடைபெற்ற உரையாடலை நான் கேட்க முடியவில்லை. அங்கே அமைதி ஏற்பட்ட பிறகு மறுபடியும் வழக்குரைஞருடைய குரல் எனக்குக் கேட்டது. அவர் ஒரு வழக்கை விவரித்துக் கூறியது பொதுவான விவாதத்துக்கு வழி வகுத்தது.

ஐரோப்பாவில் விவாகரத்துப் பிரச்சினையைப் பற்றிப் பொது மக்கள் விவாதித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும் ருஷ்யாவில் விவாகரத்துக் கோரும் வழக்குகள் மென்மேலும் சாதாரணமாகிக் கொண்டிருக்கின்றன என்றும் அந்த வழக்குரைஞர் சொல்லிக் கொண்டிருந்தார். தன்னைத் தவிர யாருமே பேசவில்லை என்பதைக் கவனித்ததும் அவர் அந்தக் கிழவரிடம் பேசத் தொடங்கினார்.

''பழைய காலத்தில் இப்படி இல்லை அல்லவா?'' என்று இனிமையாகச் சிரித்துக் கொண்டே கேட்டார்.

அந்தக் கிழவர் பதில் சொல்லப் போகும் பொழுது ரயில் புறப்பட்டுவிட்டது. அவர் தன் தொப்பியைத் தூக்கிக்கொண்டு சிலுவைக் குறியிட்டார். பிறகு ஒரு தோத்திரத்தை முணு முணுக்கத் தொடங்கினார். வழக்குரைஞர் தன் கண்களை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு அவர் தோத்திரத்தை முடிப்பதற்காக நாகரிக

மாகக் காத்திருந்தார். கிழவர் தோத்திரத்தை முடித்த பிறகு மூன்று தடவை சிலுவையிட்டுக் கொண்டார். பிறகு தொப்பியை நேராகத் தலையில் வைத்து அதை இறுக்கமாகக் கீழே இழுத்தார். பிறகு தன் இடத்தில் நன்ருக உட்கார்ந்து கொண்டு பேசத் தொடங்கினுர்:

''ஐயா, அந்த மாதிரி சம்பவங்கள் அந்தக் காலத்திலும் இருந்தன. ஆனுல் அவை குறைவு தான். இந்தக் காலத்தில் இவற்றை எதிர் பார்க்கத் தானே வேண்டும். மக்கள் அதிகமாகக் கல்வி கற்றுக் கொண்டிருக்கிருர்களே'' என்ருர்.

இரயில் இணைப்புகளில் கடகடத்துக்கொண்டு வேகமாக ஓடத் தொடங்கியதால் அவர்கள் பேசியதை என்ஞல் சரியாகக் கேட்க முடிய வில்லை. ஆனுல் பேசிக் கொண்டிருந்த விஷயம் எனக்குச் சுவாரசியமாக இருந்த காரணத்தால் அவர்களுக்குப் பக்கத்திலிருந்த இடத்தில் உட் கார்ந்தேன். எனக்குப் பக்கத்தில் பிரகாசமான கண்களைக் கொண்ட பதட்டமுள்ள கனவான் உட்கார்ந்திருந்தார். அவர்களுடைய உரை யாடல் அவருக்கும் சுவாரசியமாக இருந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. ஏனென்ருல் அவர் தன்னுடைய இடத்தை விட்டு எழுந் திராமலேயே அக்கறையாகக் கேட்டுக் கொண் டிருந்தார்.

''கல்வி பெறுவது தவருனதா?'' என்று அந்தப் பெண் லேசாகச் சிரித்தபடியே கேட் டாள். ''பழைய காலத்தில் மணமகளும் மண மகனும் திருமணத்துக்கு முன்பு ஒருவரையொரு

வர் பார்த்துக் கொள்ளாமலேயே கல்யாணம் செய்துகொண்டார்கள். அது நல்லதென்று நீங்கள் நினைக்கிறீர்களா?'' அடுத்தவர் கூறிய தற்கு பதிலளிப்பதற்குப் பதிலாக அவர் என்ன சொன்னார் என்று தாங்கள் நினைப்பதற்குப் பதிலளிப்பது பல பெண்களுக்கு வழக்கம். அந்த பாணியைப் பின்பற்றி அவள் தொடர்ந்து பேசினாள். ''அவர்கள் ஒருவரையொருவர் காத லிக்கிறார்களா அல்லது என்றாவது ஒருவரை யொருவர் காதலிக்க முடியுமா என்பதை அறிந்துகொள்ளாமல் ஒருவரைத் திருமணம் செய்து கொண்டார்கள். பிறகு வாழ்க்கை முழு வதும் துன்பங்களை அனுபவித்தார்கள். அது மிக வும் நல்லது என்று நீங்கள் நினைக்கிறீர்களா?'' அந்தக் கிழவரைக் காட்டிலும் என்னையும் வழக் குரைஞரையும் நோக்கியே அவள் பேசினாள் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

''மக்கள் அதிகமாகக் கல்வி கற்றுக் கொண் டிருக்கிறார்களே'' என்று அந்த வர்த்தகர் அவளுடைய கேள்விக்குப் பதிலளிக்காமல் அவளை இகழ்ச்சியாகப் பார்த்தபடியே திருப்பிச் சொன்னார்.

''கல்விக்கும் மன ஒற்றுமையில்லாத திரு மணங்களுக்கும் இடையில் நீங்கள் பார்க்கும் தொடர்பை விளக்கிச் சொல்வீர்களா?'' என்று வழக்குரைஞர் புன்சிரிப்போடு கேட்டார்.

வர்த்தகர் பதிலளிக்கப் போகும் பொழுது அந்தப் பெண் குறுக்கிட்டாள்.

''இல்லை. அந்தக் காலம் நிரந்தரமாக

மறைந்துவிட்டது'' என்றாள். ஆனால் வழக்குரைஞர் அவள் பேச்சில் குறுக்கிட்டார்.

''பொறுங்கள். அவர் என்ன நினைக்கிறார் என்பதைச் சொல்லட்டும்'' என்றார் அவர்.

''கல்வி முட்டாள்தனத்தையும் நிறையக் கொண்டு வருகிறது'' என்று அந்தக் கிழவர் தீர்மானமாகக் கூறினார்.

''ஒருவரையொருவர் காதலிக்காதவர்களுக்குப் பெரியவர்கள் திருமணம் செய்து வைக்கிறார்கள். பிறகு அவர்கள் மன ஒற்றுமை இல்லாதிருப்பதைக் கண்டு ஆச்சரியப்படுகிறார்கள்'' என்று என்னையும், வழக்குரைஞரையும் கடைச் சிப்பந்தியையும் கூடப் பார்த்தபடியே அந்தப் பெண் படபடப்பாகப் பேசினாள். கடைச் சிப்பந்தி எழுந்து தன்னுடைய ஆசனத்தின் முதுகில் சாய்ந்தபடியே நின்று முகத்தில் புன்சிரிப்போடு பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார். ''எஜமானருடைய உத்தரவுப்படி மிருகங்களைத் தான் இணைக்க முடியும். ஆனால் மனிதப் பிறவிகளுக்குச் சொந்த விருப்பங்களும் ஆசைகளும் இருக்கின்றன'' என்று அந்தக் கிழவரைப் புண்படுத்துகின்ற நோக்கத்தோடு அவள் கூறினாள்.

''பெண்மணி! நீங்கள் இப்படி வீணாகப் பேசுவது சரியல்ல. மிருகம் விலங்கு இனத்தைச் சேர்ந்தது. ஆனால் மனிதப் பிறவி சட்டப்படி நடக்க வேண்டும்'' என்றார் கிழவர்.

''தான் காதலிக்காத ஒரு மனிதனோடு எப்படி வாழ்க்கை நடத்த முடியும்?'' என்று அந்தப் பெண் கேட்டாள். அவள் புதுமையானவை

என்று நினைத்த கருத்துக்களை அங்கே பேசத் துடித்தாள்.

''முன்காலத்தில் அப்படிப்பட்ட கருத்து வித்தியாசங்கள் கிடையாது'' என்று அந்தக் கிழவர் தீர்மானமான குரலில் அடித்துக் கூறினார். ''இது இக்காலக் கருத்து. ஒரு பெண்ணுக்கு ஏதோ ஒரு சின்ன விஷயம் பிடிக்கவில்லை என்றால் கூட 'நான் உன்னை விட்டுப் போகிறேன்' என்று சொல்கிறாள். விவசாயிகளிடம் கூட இந்தப் புது நாகரிகம் பரவிவிட்டது. 'இந்தா! உன் சட்டை துணிமணிகளை எடுத்துக் கொள். நான் வாங்காவோடு போகிறேன். அவன் தலை முடி சுருள் சுருளாக இருக்கிறது' என்கிறாள். இந்த நிலைமைக்கு நாம் வந்துவிட்டோம். முதலாவதாக ஒரு பெண்ணுக்கு அச்சம் இருக்க வேண்டும்.''

கடைச் சிப்பந்தி வழக்குரைஞரைப் பார்த்த பிறகு அந்தப் பெண்ணையும் என்னையும் பார்த்தார். அவர் கஷ்டப்பட்டு சிரிப்பை அடக்கிக் கொண்டிருந்தார். வர்த்தகரின் கருத்துக்களுக்கு என்ன வரவேற்புக் கிடைக்கிறது என்று பார்த்த பிறகு அவற்றை ஆதரிக்கவோ அல்லது ஏளனமாகச் சிரிப்பதற்கோ அவர் தயாராக இருந்தார்.

''என்ன அச்சம் வேண்டியிருக்கிறது?'' என்று அந்தப் பெண் கேட்டாள்.

''என்ன அச்சமா? தன் கண—வ—னுக்குப் பயப்பட வேண்டும்! அதுதான் அச்சம்.''

''இல்லை, ஐயா, அந்தக் காலம் போய்விட்

டது'' என்று அந்தப் பெண் நறுக்கென்று பதிலளித்தாள்.

''பெண்மணியே! அந்தக் காலம் ஒருபோதும் மறையாது. ஆணின் விலா எலும்பைக் கொண்டுதான் ஏவாள் படைக்கப்பட்டாள். அவள் கடைசிவரை அப்படியேதான் இருப்பாள்'' என்று அந்தக் கிழவர் கண்டிப்பான முறையில் இதில் சந்தேகமென்ன என்று கேட்பதைப் போல தலையை ஆட்டிக்கொண்டு கூறினார். அதைப் பார்த்த கடைச் சிப்பந்தி அவர் வெற்றி பெற்று விட்டார் என்று முடிவு செய்து கடகடவென்று சிரித்தார்.

''ஆண்களான நீங்கள் மட்டுமே அப்படி நினைக்கிறீர்கள்'' என்றாள் அந்தப் பெண். அவள் பார்வை நான் தோற்றுவிடவில்லை என்று சொல்வதைப் போல இருந்தது. ''எல்லா சுதந்திரத்தையும் உங்களுக்கே வைத்துக் கொண்டு பெண்களை அடக்கி வைத்திருக்க விரும்புகிறீர்கள். உங்களுடைய விருப்பம் போல எதை வேண்டுமானாலும் செய்வதற்கு உங்களுக்கு உரிமை கொடுத்துக் கொள்கிறீர்கள்.''

''யாரும் எங்களுக்கு உரிமை கொடுக்கவில்லை. ஒரு ஆண் தன்னுடைய வீட்டுக்குக் குழந்தைகளைக் கொண்டுவரவில்லை. ஆனால் பெண் எப்படியோ ஒரு குழந்தையைக் கொண்டு வர முடியும். ஏனென்றால் அவள் பலவீனமான பிறவி'' என்று அந்தக் கிழவர் அதே தீர்மானமான பாணியில் தொடர்ந்து வற்புறுத்தினார்.

அவருடைய தொனி கேட்பவர்களை அவர் கருத்துக்களை நம்ப வைத்தது. அந்தப் பெண் தன்னுடைய நிலை பாதிக்கப்பட்டதை உணர்ந் தாள். எனினும் அவள் சரணடையவில்லை.

''ஆனால் பெண்ணும் மனிதப் பிறவிதான், ஆணைப் போலவே அவளுக்கும் உணர்ச்சிகள் இருக்கின்றன என்பதை நீங்கள் நிச்சயமாக ஒத்துக்கொள்ளுவீர்கள் என்று நினைக்கிறேன். அவள் தன்னுடைய கணவனைக் காதலிக்கவில்லை என்றால் அவள் என்ன செய்ய வேண்டும்?''

''கணவனைக் காதலிக்கவில்லையா!'' என்று அந்த வர்த்தகர் தன்னுடைய புருவங்களையும் உதடுகளையும் சுழித்துக் கொண்டு கடுமையான குரலில் திருப்பிச் சொன்னார். ''நடத்துகிறபடி நடத்தினால் கணவனை நிச்சயமாகக் காதலிப் பாள்!''

இந்த எதிர்பாராத வாதம் கடைச் சிப்பந் திக்கு மிகவும் பிடித்திருந்தது. அதைப் பாராட் டுவதைப் போல அவரிடமிருந்து சத்தம் கேட் டது.

''இல்லை. அப்படி ஒன்றும் செய்ய முடியாது. அவள் கணவனைக் காதலிக்கவில்லை யென்றால் அவளை பலவந்தப்படுத்த முடியாது'' என்றாள்.

''ஒரு மனைவி கணவனுக்கு துரோகம் செய் கிறாள் என்றால்?'' என்று வழக்குரைஞர் கேட் டார்.

''அதை அனுமதிக்க முடியாது. அப்படித் தவறு நடக்காமற் கண்காணிக்க வேண்டும்'' என்றார் கிழவர்.

''அப்படி நடந்தால் என்ன செய்வது? அப்படியும் நடக்கிறதல்லவா?''

''ஒருவேளை சிற்சில பகுதியினரிடம் அப்படி நடக்கலாம். நம்மைப் போன்றவர்களிடம் அது நடக்காது'' என்ருர் கிழவர்.

யாரும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. கடைச் சிப்பந்தி காலை மாற்றிக்கொண்டார், அருகில் வந்து சிரித்தார். அந்தப் பேச்சில் தனக்குப் பங்கு இல்லாமற் போய்விடக் கூடாது என்று கவலைப்படுபவரைப் போலப் பேசத் தொடங்கினுர்:

''ஒரு சமயத்தில் ஒரு குடும்பத்தில் இப்படிப் பட்ட அவமானகரமான சம்பவம் நடைபெற்றது. அதற்கு யார் காரணம் என்று சொல்வது கஷ்டம். அவனுடைய மனைவி ஒழுக்கக் குறைவான பெண்ணுக இருந்தாள். அவள் தன்னுடைய தந்திரங்களை ஆரம்பித்தாள். அவர் கெளரவமான இளைஞர், திறமை சாலி. முதலில் அவள் கணக்குப் பிள்ளையோடு சம்பந்தம் வைத்துக் கொண்டாள். அவர் அவளுக்குப் புத்தி சொல்லித் திருத்துவதற்கு முயற்சி செய்தார். அதனுல் நன்மை ஏற்படவில்லை. அவள் மிகவும் மோசமாக நடந்துகொண்டாள். அவருடைய பணத்தைத் திருட ஆரம்பித்தாள். அவர் அவளை அடித்தார். அவள் மேலும் மோசமாக நடந்துகொண்டாள். ஞானஸ்நானம் செய்விக்கப்படாதவன், அதாவது ஒரு யூதனேடு (இந்தப் பெயரைச் சொன்னதற்காக நீங்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது) அவள் சம்பந்தம் வைத்துக்

கொண்டாள். இனிமேல் அவர் என்ன செய்ய முடியும்? அவளை விட்டுப் போய்விட்டார். இன்றைக்கும் கூட அவர் கல்யாணமாகாத நபரைப் போல இருக்கிறார். அவள் தெருக்களைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள்.''

''அவர் முட்டாள். அவர் ஆரம்பத்திலிருந்தே அவளுக்கு இடம் கொடுக்காமலிருந்திருந்தால், அவளை எப்படி நடத்த வேண்டுமோ அப்படி நடத்தியிருந்தால் இன்றைக்கும் அவள் அவரோடு வசித்துக் கொண்டிருப்பாள் என்பதில் சந்தேகமில்லை. ஆரம்பத்திலிருந்தே அவர்களை விருப்பம் போல விட்டுவிடுவது தப்பாகும். 'வயலில் நிற்கும் குதிரையையும் வீட்டிலிருக்கும் மனைவியையும் நம்பாதே''' என்று கூறினார் கிழவர்.

அடுத்த ரயில் நிலையத்தில் இறங்குபவர்களுடைய பயணச் சீட்டுகளை வாங்குவதற்காக நடத்துநர் அந்த நேரத்தில் வந்தார். கிழவர் தன்னுடைய பயணச் சீட்டை அவரிடம் கொடுத்தார்.

''ஆமாம். பெண்களை ஆரம்பத்திலிருந்தே அடக்கி வைத்திருக்க வேண்டும். இல்லையென்றால் எல்லாமே கெட்டுப் போய்விடும்.''

''குனவினேவில் நடைபெற்ற சந்தையின் போது திருமணமான உங்களைப் போன்றவர்கள் நடத்திய திருவிளையாடல்களைப் பற்றிச் சிறிது நேரத்துக்கு முன்பு சொன்னீர்களே. அதைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்?'' என்று என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் கேட்டேன்.

''அது வேறு விஷயம்'' என்று சொல்லி விட்டு அந்த வர்த்தகர் இரட்டை ஓட்டுச் சிப்பியைப் போல வாயை மூடிக் கொண்டார்.

இரயிலின் விசில் சத்தம் கேட்டதும் அந்தக் கிழவர் எழுந்தார், ஆசனத்துக்குக் கீழே வைக் கப்பட்டிருந்த சாக்கு மூட்டையை இழுத்தார், கம்பளிக்கோட்டை மாட்டிக்கொண்டார், தொப்பியைத் தூக்கி விடைபெற்றுக் கொண்டு வெளியே சென்ருர்.

## 2

அவர் இரயில் வண்டியிலிருந்து இறங்கிய வுடன் பலர் ஒரே சமயத்தில் பேச ஆரம்பித் தார்கள்.

''பழைய காலத்து மனிதர்'' என்ருர் கடைச் சிப்பந்தி.

''டொமஸ்த்ரோயின்* வாழும் பிரதிநிதி. பெண்களேயும் திருமணத்தையும் பற்றி எவ் வளவு காட்டுத்தனமான கருத்துக்களேக் கொண் டிருக்கிருர்!'' என்ருள் அந்தப் பெண்மணி.

''ஆமாம். திருமணத்தைப் பற்றி ஐரோப் பியர்களுடைய கருத்துக்களிலிருந்து நாம் மிக வும் பின்தங்கியிருக்கிருேம்'' என்ருர் வழக் குரைஞர்.

---

* டொமஸ்த்ரோய் — பதினுரும் நூற்ருண் டில் ருஷ்யக் குடிமக்கள் பின்பற்றுவதற்காக வகுக்கப்பட்ட சட்டம். கணவனின் முழு அதி காரத்துக்கு மனேவி உட்பட வேண்டுமென்று இந்தச் சட்டம் விதித்தது.

''இப்படிப்பட்டவர்கள் முக்கியமான விஷயத்தைப் புரிந்து கொள்ளத் தவறுகிறார்கள். திருமணத்தில் காதல் இல்லையென்றால் அது திருமணமேயல்ல. காதல்தான் திருமணத்தைப் புனிதப்படுத்துகிறது, காதலால் புனிதமடைந்த திருமணம் ஒன்று மட்டுமே உண்மையான திருமணம்'' என்றாள் அந்தப் பெண்மணி.

கடைச் சிப்பந்தி இதைக் கேட்டுக்கொண்டிருந்தபொழுது புன்னகை செய்தார். அவர் இந்தப் பொன்மொழிகளை எதிர்காலத்தில் பயன்படுத்துவதற்காக இயன்றவரை அவற்றில் பலவற்றை மனப்பாடம் செய்ய முயற்சித்துக் கொண்டிருந்தார்.

அந்தப் பெண்ணுடைய பேச்சுக்கு நடுவில் எனக்குப் பின்னால் ஏதோ ஒரு சத்தம் கேட்டது. சிரிப்பை அல்லது அழுகையை அடக்கிக் கொள்வதைப் போல அது ஒலித்தது. நாங்கள் வேகமாகத் திரும்பியபொழுது எங்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த, பிரகாசமான கண்களும் நரை முடியும் உள்ள, கூச்சமான சுபாவம் கொண்ட கனவானைப் பார்த்தோம். எங்களுடைய உரையாடலின் போது அவர் எங்கள் பேச்சில் அக்கறை கொண்டவராக எங்களுக்குப் பக்கத்தில் வந்துவிட்டதை நாங்கள் கவனிக்கவில்லை. அவர் தன் ஆசனத்தின் முதுகின் மீது கைகளை வைத்துக்கொண்டு நின்று கொண்டிருந்தார். அவர் மிகவும் பதட்டமடைந்திருப்பது போலத் தோன்றியது. அவர் முகம் சிவப்பேறியிருந்தது, அவருடைய கன்னங்கள் துடித்துக் கொண்டிருந்தன.

''காதல்... எந்தக் காதல்... திருமணத்தைப் புனிதப்படுத்துகின்ற காதல் என்பது என்ன?'' என்று அவர் நாக்குளறிப் பேசினர்.

அவர் உணர்ச்சி வசப்பட்டிருப்பதைப் பார்த்த அந்தப் பெண்மணி பதமாகவும் கவனமாகவும் பதிலளித்தாள்.

''உண்மையான காதல்... ஒரு ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே அத்தகைய காதல் இருந்தால் திருமணம் சாத்தியம்'' என்ருள்.

''சரி. உண்மையான காதலை நாம் புரிந்து கொள்வது எப்படி?'' என்று பிரகாசமான கண்களைக் கொண்ட அந்த கனவான் தயக்கத்தோடும் தன்னுணர்ச்சியோடும் புன்சிரிப்போடும் கேட்டார்.

''உண்மையான காதல் என்பது என்னவென்று எல்லோருக்குமே தெரியும்'' என்று அந்த உரையாடலை முடிவுக்குக் கொண்டுவரும் விருப்பத்தோடு அந்தப் பெண் கூறினுள்.

''ஆனல் எனக்குத் தெரியவில்லை. நீங்கள் எப்படிப் புரிந்துகொள்கிறீர்கள் என்பதை வரையறுத்துச் சொல்வது அவசியம்...'' என்று அந்த கனவான் கூறினர்.

''எப்படி முடிவு செய்வது? ஓ! அது சுலபமான காரியம்தான்'' என்று சொல்லிவிட்டு அந்தப் பெண் சற்று நேரம் சிந்தித்தாள். ''காதல்? காதல் என்பது மற்ற எல்லோரையும் காட்டிலும் ஒரு குறிப்பிட்ட ஆணையோ அல்லது பெண்ணையோ அதிகமாக விரும்புவதைக் குறிக்கும்'' என்ருள்.

''அந்த அதிகமான விருப்பம் எவ்வளவு

காலத்துக்கு இருக்கும்? ஒரு மாதமா? இரண்டு நாட்களா? அரை மணி நேரமா?'' என்று அந்த நரைத்த தலை மனிதர் சிரித்துக் கொண்டே கேட்டார்.

''அவசரப்படாதீர்கள். நீங்கள் முற்றிலும் வேறு எதைப் பற்றியோ பேசுகிறீர்கள் போலும்.''

''இல்லை. நான் அதே விஷயத்தைப் பற்றித் தான் பேசுகிறேன்.''

''அவர்கள் சொல்வது'' என்று தொடங்கிய வழக்குரைஞர் அந்தப் பெண்மணியைச் சுட்டிக் காட்டிப் பேசினார். ''என்னவென்றால் திருமணம் என்பது, எல்லாவற்றுக்கும் மேலாக, அன்பின்—காதல் என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள் — தொடர்ச்சியாக இருக்க வேண்டும். அது இருந்தால் மட்டும்தான் திருமணத்தை ஓரளவுக்காவது புனிதமானதாகக் கருத முடியும். மேலும் இந்தப் பரஸ்பர அன்பு —காதல் என்று வேண்டுமானால் சொல்லுங்கள் —இல்லாத எந்தத் திருமணத்துக்கும் சமூகக் கடமைகள் கிடையாது. நான் சொல்வது சரி தானே?''

அந்தப் பெண் இதை ஏற்றுக்கொள்கின்ற முறையில் தலையை அசைத்தாள்.

''அதன் பிறகு...'' என்று தொடங்கினார் வழக்குரைஞர். ஆனால் அந்த கனவான் அவருடைய பேச்சில் குறுக்கிட்டார். இப்பொழுது அவருடைய கண்கள் நெருப்புக் கங்குகளைப் போல எரிந்து கொண்டிருந்தன. அவர் மிகவும் அதிகமாக உணர்ச்சி வசப்பட்டிருந்தபடியால்

அவர் வழக்குரைஞரைப் பேசவிடாமல் தானே பேசத் தொடங்கினுர்.

''இல்லே, அதைப் பற்றித்தான்—மற்ற எல்லோரையும் காட்டிலும் ஒரு குறிப்பிட்ட நபரை அதிகமாக விரும்புவதைப் பற்றித்தான்—நானும் பேசிக்கொண்டிருக்கிறேன். ஆனுல் எவ்வளவு காலத்துக்கு? நான் கேட்பது இது தான்.''

''எவ்வளவு காலத்துக்கா? மிகவும் நீண்ட காலத்துக்கு, சில சமயங்களில் வாழ்க்கை முழுவதற்குமே'' என்று அந்தப் பெண்மணி தோள்களேக் குலுக்கிக்கொண்டு பதிலளித்தாள்.

''ஆனுல் அந்த மாதிரி நாவல்களில் தான் நடக்கிறது. வாழ்க்கையிலே ஒருபோதும் இல்லே. வாழ்க்கையில் ஒருவர் மீதுள்ள அதிகமான விருப்பம் சில அபூர்வமான உதாரணங்களில் வருடக் கணக்கில் நீடிக்கலாம். ஆனுல் பெரும்பாலும் அது சில மாதங்களுக்கும் சில சமயங்களில் சில வாரங்கள் அல்லது நாட்கள் அல்லது மணிகளுக்கு மட்டுமே இருக்கும்'' என்ருர். தன்னுடைய கருத்து எல்லோருக்கும் அதிர்ச்சியைக் கொடுக்கிறது என்பது அவருக்குத் தெளிவாகப் புரிந்திருக்க வேண்டும். அப்படி அதிர்ச்சியைக் கொடுப்பது அவருக்கு திருப்தியாக இருந்திருக்கும்.

''என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? அப்படி எதுவும் கிடையாது. இதைக் கேளுங்கள்—'' என்று நாங்கள் மூவரும் ஒரே குரலில் பேசத் தொடங்கினேம். கடைச் சிப்பந்திகூட தன்

அதிருப்தியைக் காட்டுகின்ற வகையில் முணு முணுத்தார்.

''ஆம், நீங்கள் என்ன சொல்லப்போகிறீர் கள் என்று எனக்குத் தெரியும்'' என்று அந்த நரைத்த தலைக் கனவான் எங்களைவிட உரத்த குரலில் பேசினார். ''ஏதோ ஒன்று இருப்பதாகக் கற்பனை செய்கிறார்களே, அதைப் பற்றி நீங் கள் பேசுகிறீர்கள். உண்மையில் இருப்பதைப் பற்றி நான் பேசுகிறேன். ஒரு அழகான பெண்ணைப் பார்க்கும்பொழுது நீங்கள் குறிப் பிடுகின்ற உணர்ச்சி ஒவ்வொரு மனிதனுக்கும் ஏற்படுகின்றது. இதை நீங்கள் காதல் என்று அழைக்கிறீர்கள்.''

''நீங்கள் சொல்வது அபத்தம். எப்படிப் பார்த்தாலும் இரண்டு நபர்களுக்கிடையில் நாம் காதல் என்று சொல்கின்ற உணர்ச்சி இருக்கிறதே, அது மாதக் கணக்கில், வருடக் கணக்கில் அல்ல, வாழ்க்கை முழுவதுமே நீடிக் கிறது, இல்லையா?''

''இல்லை. அப்படி ஒன்றுமில்லை. ஒரு ஆண் ஒரு குறிப்பிட்ட பெண்ணைத் தன் வாழ்க்கை முழுவதுமே நேசிப்பது சாத்தியம் என்று ஒத் துக்கொண்டால் கூட அந்தப் பெண் வேறொரு வரை நேசிப்பதற்கு அதிகமான சாத்தியம் உண்டு என்று தோன்றுகிறது. இந்த நிலைமை தான் உலகத்தில் எப்போதுமே இருந்திருக் கிறது'' என்று சொல்லிவிட்டு அவர் சிகரெட் பெட்டியை எடுத்துப் புகைபிடித்தார்.

''அப்படியானால் அது பரஸ்பர உணர்ச்சி யாக இருக்கலாம்'' என்றார் வழக்குரைஞர்.

''இல்லை. அப்படி இருக்க முடியாது'' என்று அவர் மறுத்தார். ''இரண்டு பட்டாணிகளை எடுத்துக் கொள்வோம். ஒரு வண்டி முழுவதும் பட்டாணிகளைப் போடும்பொழுது நாம் தேர்ந்தெடுத்த அந்த இரண்டு பட்டாணிகளும் அடுத்தடுத்தாற்போல இருக்கும்படி வைக்க முடியுமா? அதைப் போலவே இதுவும் நடக்கப் போவதில்லை. இதைத் தவிர ஆணையும் பெண்ணையும் பொறுத்தவரையிலும் நிகழக்கூடியனவற்றின் விதிப் பிரகாரம் அங்கே நிலைமை நிர்ணயிக்கப்படுவதில்லை. காய்ச்சப் பாடுதான் அதை நிர்ணயிக்கிறது. ஒரு ஆணை அல்லது ஒரு பெண்ணை வாழ்க்கை முழுவதும் காதலிப்பதாமே—வாழ்க்கை முழுவதும் ஒரு மெழுகுவர்த்தி எரியும் என்று எதிர்பார்ப்பதைப் போன்றதே இதுவும்'' என்று சொல்லிவிட்டு அவர் சிகரெட்டுப் புகையை ஆர்வத்தோடு இழுத்தார்.

''ஆனால் நீங்கள் உடற் பசியைப் பற்றி மட்டுமே பேசுகிறீர்கள். கருத்து ஒற்றுமையால், ஆன்மிக இணைப்பால் காதல் ஏற்படுவதுண்டா, இல்லையா? சொல்லுங்கள்'' என்று அந்தப் பெண் கேட்டாள்.

''ஆன்மிக இணைப்பு! கருத்து ஒற்றுமை!'' என்று அவர் திருப்பிச் சொன்னார். முன்பு நான் குறிப்பிட்டதைப் போன்ற சத்தம் அவரிடமிருந்து மறுபடியும் வந்தது. ''அப்படியானால் அவர்கள் ஒன்றாகப் படுக்க வேண்டியதில்லையே? (பச்சையாகப் பேசுவதற்கு என்னை மன்னியுங்கள்). கருத்து ஒற்றுமை ஒரே படுக்கையில்

புரளுவதற்கு இட்டுச் செல்வதாக நாம் கேள்விப்பட்டிருக்கிருேமா?'' என்று அவர் கூச்சமில்லாமல் சிரித்துக்கொண்டே கேட்டார்.

''பொறுங்கள்'' என்ருர் வழக்குரைஞர். ''அன்ருட நிகழ்ச்சிகள் உங்கள் கருத்தை மறுக்கின்றன. தாம்பத்திய உறவுகள் இருக்கின்றன. மனிதகுலம் முழுமையுமே அல்லது குறைந்த பட்சம் பெரும்பான்மையினராவது இப்படித்தான் வாழ்கிருர்கள். அவர்களில் பெரும்பாலோர் தங்களுடைய கடைசி நாட்கள் வரை நேர்மையான இல்வாழ்க்கையை நடத்துகிருர்கள்.''

நரைத்த தலைக் கனவான் மறுபடியும் சிரித்தார்.

''திருமணம் காதலை அடிப்படையாகக் கொண்டது என்று முதலில் சொன்னீர்கள். உடற்பசியைத் தவிர வேறுவிதமான காதல் இருக்கிறதா என்று என்னுடைய சந்தேகத்தைத் தெரிவித்தபொழுது திருமணம் இருப்பதைச் சுட்டிக் காட்டிக் காதல் இருப்பதை நிரூபிக்கிறீர்கள். இந்தக் காலத்தில் திருமணம் என்பது மோசடியைத் தவிர வேறொன்றுமில்லை!''

''இல்லை, பொறுங்கள்'' என்ருர் வழக்குரைஞர். ''திருமணங்கள் இருக்கின்றன, அவை என்றுமே இருந்து வந்திருக்கின்றன என்று மட்டுமே நான் கூறினேன்.''

''ஆம். அவை இருக்கின்றன. ஆனல் அவை ஏன் இருக்கின்றன? திருமணத்தை மர்மமானதாக, அந்த மர்மம் விதிக்கும் கடமைகளுக்குத்

தாங்கள் கடவுளிடம் பதிலளிக்க வேண்டிய வர்கள் என்று கருதுகின்ற மக்கள் மத்தியில் திருமணங்கள் இருக்கின்றன, எல்லாக் காலத் திலும் இருந்திருக்கின்றன. அவர்களிடம் அவை இருக்கின்றன, நம்மைப் போன்ற மக்களிடம் அவை இல்லை. திருமணத்தில் உடலின்பத்தைத் தவிர வேறு எதையுமே பார்க்காமல் நம்மவர் திருமணம் செய்து கொள்கிருர்கள். எனவே அது மோசடி அல்லது பலாத்காரம் என்ருகி விடுகிறது. இந்த இரண்டில் ஏமாற்று சற்றுக் குறைவான தீமையே. கணவனும் மனைவியும் உண்மையில் பல தார வாழ்க்கையை நடத் திய போதிலும் தாங்கள் ஒரு தார வாழ்க் கையை நடத்துவதாக நினைக்கும்படி மற்றவர் களை ஏமாற்றுகிருர்கள். அது அருவருப்பான தென்ருலும் அதைச் சகித்துக் கொள்ளலாம். ஆனால் வேறு வகையான உதாரணத்தைப் பார்ப்போம். பெரும்பாலானவர்களின் வாழ்க் கையில் இதைப் பார்க்கலாம். கணவனும் மனைவியும் தங்கள் வாழ்நாள் முழுவதும் சேர்ந் திருக்கும் சம்பிரதாயமான கடமையைத் தங் கள் மீது சுமத்திக்கொண்டு முதல் மாதத் துக்குப் பிறகு ஒருவரையொருவர் வெறுக்கிருர் கள், பிரிந்து போக விரும்புகிருர்கள். எனினும் அவர்கள் இன்னும் சேர்ந்துதான் இருக்கிருர் கள். இதன் விளைவாக ஏற்படும் வர்ணிக்க முடியாத சித்திரவதை அவர்களைக் குடிக்கச் செய்கிறது, துப்பாக்கியை உபயோகித்துத் தற்கொலை செய்து கொள்ளத் தூண்டுகிறது, தங்களையும் மற்றவர்களையும் கொலை செய்ய

வும் விஷங் கொடுக்கவும் தூண்டுகிறது'' என்று அவர் அதிகமான உணர்ச்சியோடு பேசினர். யாரும் குறுக்கிட்டு ஏதாவதொரு வார்த்தை சொல்லிவிடலாம் என்று அஞ்சியவராக மென் மேலும் வேகமாகப் பேசினர். அவர் பேச்சை நிறுத்தியபொழுது அங்கே எல்லோரிடமும் ஒரு சங்கடமான அமைதி நிலவியது.

''ஆமாம். இல்வாழ்க்கையில் நெருக்கடி யான சம்பவங்கள் ஏற்படுகின்றன என்பதில் சந்தேகமில்லை'' என்ருர் வழக்குரைஞர். அவர் இந்த உணர்ச்சிகரமான, நாசூக்கில்லாத உரை யாடலை இதோடு நிறுத்திவிட விரும்பினர்.

''என்னை அடையாளம் தெரிந்து கொண்டீர் கள் அல்லவா?'' என்று அந்த நரைமுடிக் கன வான் மென்மையாகவும் அமைதியின் சாயலோ டும் கூறினர்.

''இல்லை. தங்களை அறிந்துகொள்வதில் எனக்கு மகிழ்ச்சியே. ஆனல் தாங்கள் யாரென்று எனக்குத் தெரியவில்லையே.''

''அதில் பெரிய மகிழ்ச்சி இருக்க முடியாது. என் பெயர் போஸ்த்நிஷெவ். நீங்கள் குறிப் பிட்ட நெருக்கடியான கட்டம் எனக்கு ஏற் பட்டு அதனுல் மனைவியைக் கொலை செய்த வன்'' என்று சொல்லி விட்டு அவர் எங்கள் ஒவ்வொருவரையும் அவசரமாகப் பார்த்தார்.

என்ன பேசுவதென்று தோன்ருததால் நாங் கள் எல்லோருமே அமைதியாக உட்கார்ந் திருந்தோம்.

''எது எப்படியிருந்தாலும் சரி'' என்ருர். அந்த விசித்திரமான ஒலி மறுபடியும் அவரிட

மிருந்து வந்தது. ''என்னை மன்னியுங்கள். ஆ!.. உங்களைச் சங்கடப்படுத்த நான் நினைக்க வில்லை.''

''அதற்கென்ன, அதாவது...'' என்ருர் வழக் குரைஞர். ''அதாவது'' என்று தொடங்கிய பொழுது என்ன சொல்ல விரும்பினுர் என்பது அவருக்கே தெரியாது.

போஸ்த்நிஷெவ் அவரைப் புறக்கணித்து விட்டு வேகமாகத் திரும்பி அவருடைய இடத் தில் உட்கார்ந்தார். கனவானும் அந்தப் பெண் மணியும் தங்களுக்கிடையே முணுமுணுத்துக் கொண்டிருந்தார்கள். போஸ்த்நிஷெவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த நான் ஒன்றும் பேசவில்லை. அதிகமாக இருட்டியிருந்தபடியால் படிக்க முடியவில்லை. என்ன பேசுவதென்று தெரியாததால் கண்களை மூடிக்கொண்டு தூங்கு வதைப் போலப் பாசாங்கு செய்தேன். அடுத்த ரயில் நிலையம் வரை நாங்கள் இப் படியே அமைதியாகப் பிரயாணம் செய்தோம்.

அந்த கனவானும் அந்தப் பெண்மணியும் நடத்துநரோடு ஏற்பாடு செய்துகொண்டு வேறு வண்டிக்கு மாறிக்கொண்டார்கள். கடைச் சிப்பந்தி பெஞ்சில் உடம்பை நீட்டிப்படுத்துத் தூங்கிவிட்டார். போஸ்த்நிஷெவ் முடிவே இல்லாதபடி சிகரெட்டுகளைப் புகைத்துக் கொண்டிருந்தார். இரயில் நிலையத்தில் வண்டி நின்றபொழுது தயாரித்த தேநீரைக் குடித் தார்.

நான் கண்களைத் திறந்து அவரைப் பார்த்த பொழுது அவர் திடீரென்று துணிவும் எரிச்ச

லும் கலந்த தொனியில் என்னிடம் பேசினுர்:

‘‘நான் யாரென்று தெரிந்துகொண்டபடியால் என்னேடு ஒன்ருக உட்கார உங்களுக்கு அருவருப்பாக இருக்கிறதா? அப்படியாஞல் நான் போய்விடுகிறேன்.’’

‘‘அப்படி எதுவும் இல்லை.’’

‘‘அப்படியாஞல் இதைக் கொஞ்சம் குடியுங்கள். ஆனல் இது மிகவும் காட்டமாக இருக்கும்’’ என்று சொல்லிக்கொண்டு தேநீரை ஊற்றி என்னிடம் கொடுத்தார்.

‘‘பேச்சு, அவர்களுடைய பேச்சு... அத்தனையும் பொய்கள்...’’ என்று அவர் கூறினுர்.

‘‘எதைச் சொல்கிறீர்கள்?’’ என்று நான் கேட்டேன்.

‘‘அவர்கள் சொன்னதைப் பற்றித்தான். அவர்கள் காதல் என்று பேசினுர்களே, அது உண்மையில் என்ன என்பதைப் பற்றித்தான். அதிகமாகக் களைப்படைந்து விட்டீர்களா?’’

‘‘நிச்சயமாக இல்லை.’’

‘‘அப்படியாஞல் நான் என்ன செய்தேனே அதைச் செய்யும்படி அந்தக் காதல் எப்படித் தூண்டியது என்பதைச் சொல்கிறேன். கேட்கிறீர்களா?’’

‘‘அதனல் உங்களுக்கு அதிகமான வேதனை ஏற்படாதென்ருல் சொல்லுங்கள்.’’

‘‘எதுவும் பேசாமலிருப்பதுதான் எனக்கு அதிகமான வேதனையைக் கொடுக்கிறது. தேநீரைக் குடியுங்கள். மிகவும் காட்டமாக இருக்கிறதா?’’

அந்தத் தேநீர் பீரைப் போல இருந்தது

என்பது உண்மையே. எனினும் நான் ஒரு கிளாஸ் தேநீர் குடித்தேன். அந்த நேரத்தில் நடத்துநர் எங்களைக் கடந்து சென்ருர். என் னுடைய சகா நெருப்பைப் போல எரிந்து கொண்டிருந்த கண்களால் அவர் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் மறையும் வரை காத்திருந்துவிட்டுக் கதையைத் தொடங் கினுர்.

## 3

''சரி. உங்களிடம் கதையைச் சொல் கிறேன்... நீங்கள் நிச்சயமாக அதைக் கேட்க விரும்புகிறீர்களா?''

நான் மிகவும் கேட்க விரும்புவதாக மறுபடி யும் கூறினேன். அவர் ஒரு நிமிடம் பொறுத்த பிறகு, தன் கைகளால் முகத்தைத் தேய்த்துக் கொண்டு பேசத் தொடங்கினுர்:

''அதைச் சொல்வதென்ருல் நான் ஆரம் பத்திலிருந்து தொடங்க வேண்டும். நான் ஏன், எப்படித் திருமணம் செய்துகொண்டேன், திரு மணத்துக்கு முன்ஞல் நான் எப்படி இருந் தேன் என்பதைச் சொல்ல வேண்டும்.

''என்னுடைய திருமணத்துக்கு முன்பு எல் லோரையும், அதாவது நம் வர்க்கத்திலுள்ள எல்லோரையும் போல நானும் வாழ்ந்தேன். நான் ஒரு நிலவுடைமையாளன். பல்கலைக்கழ கத்தில் படித்தேன், முதுகலைப் பட்டம் பெற் றேன். மேன் மக்களுக்கு மார்ஷலாகவும் இருந் தேன். என்னுடைய திருமணத்துக்கு முன்பு எல்லோரையும் போலவே நானும் வாழ்க்கை

நடத்தினேன், அதாவது ஊதாரித்தனமான வாழ்க்கை நடத்தினேன். நம் வர்க்கத்தைச் சேர்ந்த எல்லோரும் அப்படிப்பட்ட வாழ்க்கைதான் சரியானது என்று நினைப்பதைப் போலவே நானும் உறுதியாக நினைத்தேன். என்னை நற்பண்புகளுடையவனாக, ஒழுக்க நெறியுள்ளவனாக நினைத்தேன். நான் மற்ற பெண்களைக் கெடுக்கவில்லை. பண்புக்குறைவான விருப்பங்கள் என்னிடமில்லை. என் வயதைச் சேர்ந்த பலரைப் போல இதையே என்னுடைய வாழ்க்கையின் பிரதான நோக்கமாக ஆக்கிக் கொள்ளவில்லை. என்னுடைய காம உணர்ச்சியை கௌரவமான, கண்ணியமான முறையில் தீர்த்துக் கொண்டேன். அதுவும் என்னுடைய உடல் நலத்துக்காகத் தான். குழந்தைகள் உள்ள பெண்கள் எனக்குச் சுமையாக இருப்பார்கள் என்பதனால் அவர்களோடு நான் சம்பந்தம் வைத்துக் கொள்ளவில்லை. யாரோடும் மிகவும் பலமான உறவுகளைத் தவிர்த்தேன். உண்மையைச் சொல்வதென்றால் குழந்தைகளும் பிறந்திருக்கலாம், பலமான உறவுகளும் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் நான் அவற்றைப் பார்க்காமல் கண்களை மூடிக்கொண்டேன். இது மிகவும் ஒழுக்கமானது என்று கருதியதோடு அதைப் பற்றி நானே பெருமைப்பட்டேன்.''

அவர் பேச்சை நிறுத்தினார். தொண்டையிலிருந்து வழக்கமான சப்தம் கேட்டது. புதிய சிந்தனை ஏற்படும்பொழுதெல்லாம் அப்படி சத்தம் செய்வது அவருடைய பழக்கம் போலும்.

''அதுதான் எல்லாவற்றையும் காட்டிலும்

மிகவும் அருவருப்பானது'' என்று இரைந்து பேசினார். ''உடலுறவில் ஒழுக்கக் கேடானது ஒன்றுமில்லை. நீங்கள் உடலுறவு வைத்துக் கொள்ளும் பெண்ணைப் பொறுத்தமட்டில் எல்லா வகையான தார்மிகப் பொறுப்பையும் உதறிவிடுவதில்தான் ஒழுக்கக்கேடு, அதிலும் உண்மையான ஒழுக்கக்கேடுஅடங்கியிருக்கிறது. இந்த தார்மிகப் பொறுப்பை நான் உதறிவிட முடிந்ததை என்னுடைய தனிப்பெருமைக்குரிய சாதனையாகக் கருதினேன். ஒரு பெண் என் மீது ஏற்பட்ட காதல் மயக்கத்தில் தன்னை எனக்கு அர்ப்பணித்தாள். அவளுக்குப் பணம் கொடுக்க மறந்துவிட்டது என் மனச்சாட்சியை உறுத்தியது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அவளுக்குப் பணத்தைக் கொடுத்தனுப்பிய பிறகு அதன்மூலம் அவளைப் பொறுத்தவரை எல்லாவிதமான தார்மிகப் பொறுப்பிலிருந்தும் என்னை விடுவித்துக் கொண்ட பிறகுதான் என்னிடம் மறுபடியும் மன அமைதி ஏற்பட்டது. நான் சொல்வதை ஒத்துக்கொள்வதைப் போலத் தலையை ஆட்டாதீர்கள்'' என்று அவர் திடீரென்று என்னை மிரட்டினார். ''என்னை ஏமாற்ற முடியாது. நீங்கள் — நீங்கள் எல்லோருமே—ஒரே மாதிரியானவர்கள்தான். நீங்கள் ஒரு அபூர்வமான விதிவிலக்காக இருந்தால் அது வேறு விஷயம். நான் என்ன கருத்துக்களைக் கொண்டிருந்தேனோ அதே கருத்துக்கள் தான் உங்களிடமும் இருக்கும். அதனாலென்ன? என்னை மன்னித்துவிடுங்கள்'' என்றார். ''நான் எப்படிச் சொல்வேன்? ஓ! அது பயங்கர

மானது, பயங்கரமானது, பயங்கரமானது!''

''எது பயங்கரமானது?'' என்று நான் கேட்டேன்.

''பெண்கள் மற்றும் அவர்களோடு நமது உறவுகளைப் பொறுத்தவரை தவறு என்ற படுகுழியில் நாம் வசித்துக் கொண்டிருக்கிறோமே அது. ஆமாம். இந்த விஷயத்தைப் பற்றி என்னால் நிதானமாகப் பேச முடியாது. 'சம்பவம்' என்று அந்த கனவான் கூறினாரே அந்த சம்பவம் அதற்குக் காரணமல்ல; அந்த சம்பவம் எனக்கு ஏற்பட்டதிலிருந்து என்னுடைய கண்கள் திறந்து விட்டன, நான் எல்லாவற்றையுமே முற்றிலும் வேறு விதமாகப் பார்க்கிறேன் என்பதால்தான். உள்ளே இருப்பதை வெளியே கொண்டு வருகிறேன். உள்ளே இருப்பது வெளியே!..''

அவர் சிகரெட்டைப் பற்ற வைத்தார். முழங்கைகளை முழங்கால்களின் மேல் வைத்துக் குனிந்துகொண்டு பேச்சைத் தொடர்ந்தார்.

அந்த இருளில் என்னால் அவருடைய முகத்தைப் பார்க்க முடியவில்லை. ஆனால் இரயில் வண்டியின் கடகட சத்தத்தை மீறிக் கொண்டு அவருடைய மனமார்ந்த இனிமையான குரல் என் காதில் விழுந்தது.

## 4

''ஆம். எனக்கேற்பட்ட அதிகமான துன்பங்களையெல்லாம் அனுபவித்த பிறகுதான்—அதன் விளைவாக மட்டுமே—தீமையின் மூல

வேர்கள் எங்கே இருக்கின்றன என்பதை நான் உணர்ந்தேன், அவை எப்படி இருக்க வேண்டும் என்பதை உணர்ந்தேன், இன்றைய நிலைமையின் பயங்கரம் முழுவதையும் நேரில் கண்டேன்.

''அந்த சம்பவம், என்னை இட்டுச் சென்ற எல்லாமே எப்படி, எப்பொழுது தொடங்கின என்பதை உங்களிடம் கூற அனுமதியுங்கள். என்னுடைய பதினாறுவது வயதில் அவை தொடங்கின. நான் உடற்கலைப்பள்ளியில் மாணவனாக இருந்தேன். என் மூத்த சகோதரர் பல்கலைக்கழகத்தில் முதல் வருடம் படித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அது நடந்தது. நான் இன்னும் கன்னிமை நிலைமையில்தான் இருந்தேன். ஆனால் நம்முடைய வர்க்கத்தில் துரதிர்ஷ்டம் பிடித்த எல்லாக் குழந்தைகளையும் போல நானும் ஒன்றும் அறியாதவனல்ல. இரண்டு வருட காலமாக நான் மற்ற இளைஞர்களால் கெட்டுப்போய்க் கொண்டிருந்தேன். ஏற்கெனவே பெண் (ஏதாவதொரு குறிப்பிட்ட பெண்ணல்ல, இனிமையான மோகத்தைத் தருபவர்கள் என்ற முறையில் பொதுவாகப் பெண்) மற்றும் அவளுடைய நிர்வாணம் என்னைத் துன்புறுத்திச் சித்திரவதை செய்தது. தனிமையாக இருந்த நேரங்களில் நான் குற்றமில்லாதவனாக இருக்கவில்லை. நம் இளைஞர்களில் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தினருக்கு ஏற்படும் உடல்வாதைகள் எனக்கும் ஏற்பட்டன. எனக்கு பீதியேற்பட்டது, நான் துன்பமடைந்தேன், பிரார்த்தனை செய்தேன், கடை

சியில் பலியானேன். கற்பனையிலும் செய்கை யிலும் நான் பாவம் செய்தேன். ஆனால் நான் இன்னும் அந்தக் கடைசிக் காலடியை எடுத்து வைக்கவில்லை. என்னை அழித்துக்கொண்டேனே தவிர, வேறு எந்தப் பிறவியையும் இன்னும் நான் கெடுத்துவிடவில்லை. ஆனால் என் சகோ தரரின் நண்பரான ஒரு மாணவர்— அவர் மிக வும் உல்லாசமானவர், குடிப்பதற்கும் சீட்டாடு வதற்கும் மற்றவர்களுக்குச் சொல்லித் தரு கின்ற முதல் தரமான போக்கிரிகளில் ஒருவர், ஆனால் 'நல்லவர்' என்று கருதப்படுபவர்களில் ஒருவர்—என்னுடைய சகோதரரின் இந்த நண்பர் ஒரு நாள் மாலையில் மதுபான விருந் துக்குப் பிறகு 'அங்கே' போகலாம் என்று ஆலோசனை கூறினார். நாங்கள் அங்கே சென் றோம். என் சகோதரரும் கன்னிமை நிலையில் தான் இருந்தார், அன்றிரவில் அவரும் வீழ்ச்சி யடைந்தார். பதினாறு வயதுப் பையனாகிய நான் என்னைக் கறைப்படுத்திக் கொண்டதோடு மட்டுமல்லாது நான் என்ன செய்கிறேன் என் பதைப் புரிந்து கொள்ளாமல் மற்றொரு பெண் ணையும் களங்கப்படுத்தினேன். அந்தக் காரி யம் தவறு என்று என்னுடைய பெரியவர்கள் சொல்லி நான் ஒரு காலத்திலும் கேட்டது கிடை யாது. இன்றும் கூட யாரும் கூறிக் கேட்டதில்லை. அது தவறான காரியம் என்று பத்துக் கட்டளை கள் கூறுவது உண்மையே. ஆனால் பாதிரியாரி டம் பைபிள் பாடத்தில் கேள்விகளுக்குச் சரியாக பதில் சொல்ல வேண்டும் என்ற ஒரே காரணத் துக்காகத்தான் நாம் பத்துக் கட்டளைகளைப்

படிக்கிறோம். எனவே அதில் அறிவு முக்கியமானதல்ல. வாக்கிய அமைப்புகளில் 'உட்' எங்கே உபயோகிக்க வேண்டும் என்று தெரிந்து கொள்வதைக் காட்டிலும் அதன் முக்கியத்துவம் குறைவே.

''ஆகவே யாருடைய கருத்துக்களுக்கு நான் மதிப்பளித்தேனோ அந்தப் பெரியவர்களில் ஒருவர் கூட நான் செய்யும் காரியம் தவறு என்று எந்தக் காலத்திலும் என்னிடம் கூறியதில்லை. அதற்கு மாறாக நான் மதித்தவர்கள் அது சரியான காரியமே என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அதைச் செய்தபிறகு என்னுடைய போராட்டங்களும் துன்பங்களும் நின்று விடும் என்று சொன்னார்கள். இதைக் கேட்டேன். இதையே அனுசரித்தேன். அது என்னுடைய உடல்நலத்துக்கு நல்லது என்று பெரியவர்கள் சொல்லக் கேட்டேன். இதில் ஒரு விதமான தகுதி, வீரம் இருப்பதாக என்னுடைய நண்பர்கள் கூறினார்கள். ஆகவே மொத்தத்தில் அதில் ஏதாவது தவறு இருப்பதாக நான் பார்க்க முடியவில்லை. நோய்கள் ஏற்படக்கூடிய ஆபத்து? எல்லாவற்றையும் முன்பே சிந்தித்திருக்கிறார்கள். இதைப் பொறுத்தவரை கருணையுள்ள அரசாங்கம் முன்பே நடவடிக்கை எடுத்திருக்கிறது. பள்ளிக்கூடப் பையன்கள் தங்கள் காமவெறியை ஆபத்தில்லாமல் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்பதற்காக அரசாங்கம் விபசார விடுதிகளில் மருத்துவ சோதனையைக் கட்டாயமாக்கியது. இதற்காக டாக்டர்களுக்கு மாத ஊதியம் கொடுத்தது. அதுவும் இயற்கை

யான காரியம் தான். ஒழுக்கக்கேடு உடல் ஆரோக்கியத்துக்கு நல்லது என்று அரசாங்கம் கருதியதால் தீமையில்லாத, சுத்தமான ஒழுக்கக்கேட்டை உருவாக்குகின்ற நிலைமைகளை அரசாங்கம் தானே ஏற்படுத்த வேண்டும். தங்கள் பையன்கள் விஷயத்தில் இவற்றையும் கவனித்துக் கொண்ட தாயார்களை எனக்குத் தெரியும். விஞ்ஞானம் இளைஞர்களை விபசார விடுதிகளுக்கு அனுப்புகிறது.''

''விஞ்ஞானமா?'' என்று நான் கேட்டேன்.

''டாக்டர்கள் விஞ்ஞானிகளில்லையா? அவர்கள் விஞ்ஞானத்தின் குருநாதர்கள் அல்லவா? நம்முடைய இளைஞர்களின் உடல்நலத்துக்கு அது அவசியம் என்று வற்புறுத்தி அவர்களிடையே ஒழுக்கக்கேட்டை ஏற்படுத்துபவர்கள் யார்? அவர்களே. பிறகு அவர்கள் முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொண்டு கிரந்தி நோய்க்குச் சிகிச்சை அளிக்கிறார்கள்.''

''அவர்கள் கிரந்தியைக் குணப்படுத்தக் கூடாதா? ஏன்?''

''கிரந்தியைக் குணப்படுத்துவதற்குச் செய்யப்படும் முயற்சியில் பத்தில் ஒரு பங்கை ஒழுக்கக்கேட்டை அடியோடு ஒழிப்பதற்குப் பயன்படுத்தியிருந்தால் கிரந்தி நோய் நெடுங்காலத்துக்கு முன்பே மறைந்திருக்கும். ஆனால் ஒழுக்கக்கேட்டை ஒழிப்பதற்கல்ல, அதை ஊக்குவிப்பதற்கே, பாதுகாப்பானதாக்குவதற்கே நாம் பாடுபடுகிறோம். ஆனால் நான் சொல்ல வந்தது அதுவல்ல. என்னுடைய வர்க்கத்தில் மட்டுமல்ல, விவசாயிகள் மற்றும் எல்லா வர்க்

கங்களையும் சேர்ந்த இளைஞர்களில் பத்தில் ஒன்பது பங்கினரைப் போல (இதற்கும் கூடுத லாகவே இருக்கலாம்) நானும் அந்தப் பயங் கரமான பாவத்தைச் செய்தேன். ஒரு குறிப் பிட்ட பெண்ணின் உடலழகில் மயங்கிப் போன தனுல் அல்ல. இல்லே. எந்தப் பெண்ணும் என் னைக் கெடுக்கவில்லே. நான் வாழ்ந்த சமூ கத்தின் காரணமாகவே நான் பாவம் செய் தேன். என்னைச் சுற்றிலுமிருந்த சிலர் என் னுடைய உடல்நலத்தைப் பாதுகாப்பதற்கு அதைத் தக்க நடவடிக்கையாகக் கருதியதால், மற்றவர்கள் அதை ஒரு இளைஞனுக்குரிய தீங் கில்லாத பொழுதுபோக்கு—அது மன்னிக்கப் படக் கூடியது மட்டுமல்ல முற்றிலும் குற்ற மில்லாதது கூட—என்று கருதியதால் நான் பாவம் செய்தேன். நான் அதைப் பாவச் செயல் என்று கருதவில்லே. பகுதியளவுக்கு இன்பமாக வும், பகுதியளவுக்கு ஒரு குறிப்பிட்ட வயதுக்கு உரிய ஒரு அவசியத்தைத் (அப்படித் தான் என்னிடம் கூறினார்கள்) திருப்தி செய்கின்ற காரியம் என்ற எண்ணத்தில்தான் நான் அதில் ஈடுபட்டேன். அதற்கு முன்பு நான் புகைபிடிக்க, குடிக்கத் தொடங்கியதைப் போல என் காம வெறியைத் தணித்துக் கொள்வதிலும் ஈடுபட் டேன். எனினும் இந்த முதல் வீழ்ச்சியில் உள் ளத்தைத் தொடக் கூடிய, தனிச் சிறப்பான அம்சம் ஏதோ ஒன்று இருந்தது. அந்த நேரத் தில், அந்த விடுதியின் அறையை விட்டு வெளியே வருவதற்கும் முன்பாகவே நான் மிக அதிக மாக வருத்தப்பட்டது எனக்கு நினைவிருக்

கிறது. நான் கதறியழ விரும்பினேன். என்னுடைய தூய்மையை இழந்ததற்காக, பெண்களோடிருந்த பரிசுத்தமான உறவு இனி நிரந்தரமாக மறைந்து விட்டதே என்பதற்காக நான் கதறியழ விரும்பினேன். ஆம். ஒரு இயற்கையான, எளிமையான உறவு நிரந்தரமாக மறைந்து விட்டது. அந்த நேரத்திலிருந்து அது பரிசுத்தமாக இருக்கவில்லை, இருக்கவும் முடியாது. அந்த நேரத்திலிருந்து நான் ஒரு காமுகனானேன். காமுகனாக இருப்பதென்றால் கஞ்சாக் குடியன், குடிகாரன், புகை பிடிப்பவன் ஆகியோரை ஒத்திருக்கின்ற உடல்நிலையில் இருப்பதென்று பொருளாகும். கஞ்சாக் குடியன், குடிகாரன், புகை பிடிப்பவன் இயல்பான மனிதன் அல்ல என்பதைப் போல பல பெண்களிடம் உடலின்பம் அடைந்த நபரும் இயல்பான மனிதர் அல்ல. அவர் நிரந்தரமாகக் கெட்டுப் போனவர், ஒரு காமுகன். குடிகாரனை அல்லது கஞ்சாக் குடியனை அந்த நபரின் முகத்தையும் நடத்தையையும் வைத்துக் கண்டுபிடித்து விடலாம் என்பதைப் போல காமுகனையும் கண்டுபிடித்துவிட முடியும். ஒரு காமுகன் தன்னுடைய ஒழுக்கக்கேட்டுக்கு எதிராகப் போராடலாம், திருந்த முயற்சிக்கலாம். ஆனால் பெண்களோடு அந்தப் பரிசுத்தமான, ஒளிமயமான, எளிமையான உறவை, சகோதர உறவை அவர் மறுபடியும் ஒருக்காலும் அடைய முடியாது. ஒரு இளம் பெண்ணைப் பார்க்கின்ற முறையிலேயே காமுகனை உடனடியாகக் கண்டுபிடித்து விட முடியும். இப்படி

நான் ஒரு காமுகனுனேன், அன்றிலிருந்து காமுகனுக இருந்தேன். அதனுல்தான் எனக்கு அழிவு ஏற்பட்டது.''

## 5

''ஆம், இதுதான், ஐயா. சிறிது காலம் வரை இப்படியே போய்க் கொண்டிருந்தது. பிறகு இது மேலும் மேலும் தொடர்ந்தது. நான் ஒரே அனுபவத்தை விதம் விதமாகச் செய்து கொண்டிருந்தேன். அட கடவுளே! என்னுடைய எல்லா மிருகத்தனத்தையும் நினைத்துப் பார்த்தால் கூட பயத்தில் மூழ்கிப் போய்விடுகிறேன்! ஒரு காலத்தில் என்னுடைய பரிசுத்தமான தன்மையைக் கண்டா என் நண்பர்கள் கேலியாகச் சிரித்தார்கள் என்று நினைத்துப் பார்க்கிறேன். உயர்குடி இளைஞர்கள், இராணுவ அதிகாரிகள், பாரிஸ் நகரவாசிகள்! இந்த கனவான்கள் அனைவரையும் என்னையும், முப்பது வயதான ஒழுக்கக்கேடர்கள், பெண்களுக்கு எதிராக மிகவும் பயங்கரமான நூற்றுக் கணக்கான, மற்றும் பல்வேறு விதமான குற்றங்களைச் செய்தவர்களை நினைத்துப் பார்க்கிறேன். முப்பது வயதான ஒழுக்கக்கேடர்களாகிய நாங்கள், நன்ருகக் குளித்து முகச்சவரம் செய்து, சுத்தமான வாசனைத்தைலம் தெளித்த உள் கோட்டுகளையும் உடைகளையும் அணிந்து உபசரிப்பு அறைகளிலும் நடன அறைகளிலும் மிகவும் அழகாக—பரிசுத்தத்தின் வடிவங்களாக — மிடுக்காக நடை பயின்றதை

நினைத்துப் பார்க்கிறேன். ஓ! அவர்கள் எவ்வளவு அழகாக இருக்கிறார்கள்!

''எல்லாம் எப்படி இருந்திருக்க வேண்டும், ஆனால் அவை எப்படி இருக்கின்றன என்பதை ஒரு வினாடி சிந்தியுங்கள். இப்படிப்பட்ட ஒரு கனவான் என் சகோதரியை அல்லது மகளைப் பார்க்க வரும் பொழுது அவர் எப்படிப்பட்ட வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறார் என்பதைத் தெரிந்திருக்கும் நான் அவரிடம் சென்று, தனியாகக் கூட்டிக் கொண்டு போய், 'அருமை நண்பரே! கேளுங்கள். நீங்கள் எப்படிப்பட்ட வாழ்க்கை நடத்துகிறீர்கள், இரவு நேரங்களை யாரோடு, எங்கே கழிக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். இது உங்களுக்குத் தகுந்த இடமல்ல. இங்கே பரிசுத்தமான, ஒன்று மறியாத பெண்கள் இருக்கிறார்கள். போய் விடுங்கள்' என்று மெதுவாகச் சொல்ல வேண்டும். இப்படி நடக்க வேண்டும். ஆனால் அப்படிப்பட்ட கனவான் உண்மையாகவே வந்து என் சகாதரியோடு அல்லது மகளோடு நடனமாட ஆரம்பிக்கும்பொழுது தன் கரத்தால் அவள் இடையை அணைக்கும்பொழுது, அவர் பணமும் உயர்ந்த தொடர்புகளும் உள்ள கனவானுகை இருந்தால் நான் பரவசமடைகிறேன். அவர் ஏதோ ரிகல்போஷ் என்ற பெண்ணோடு இரவைக் கழித்துவிட்டு வந்திருக்கலாம். ஆனால் என் மகளிடம் அக்கறை காட்ட மாட்டாரா என்று நினைக்கிறேன். அவர் கறை பட்டவராக அல்லது நோய் உள்ளவராக இருந்தாலும் அது முக்கியமல்ல. இக்காலத்தில் அவற்றை குணப்

படுத்திவிட முடியும். ஏன்? பிரபலமான குடும்பங்களைச் சேர்ந்த பெற்றோர்கள் கிரந்தி நோய் உள்ளவர்களுக்குத் தங்கள் பெண்களைத் திருமணம் செய்து வைப்பதற்கு எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தார்கள் என்பது எனக்குத் தெரியும். ஓ! என்ன அசிங்கம்! இத்தகைய அசிங்கமும் பொய்யும் அம்பலப்படுத்தப்படும் காலம் நிச்சயமாக வரும்.''

அவர் சில தடவைகள் அந்த விசித்திரமான சப்தத்தை எழுப்பிய பிறகு தேநீர் அருந்தத் தொடங்கினார். தேநீர் மிகவும் காட்டமாக இருந்தது. அதை நீராளமாக்குவதற்குத் தண்ணீர் இல்லை. அந்தத் தேநீரில் இரண்டு டம்ளர் குடித்ததன் பலனாக எனக்குத் தூக்கம் வரவில்லை. தேநீர் அவரையும் அதேபோல பாதித்ததாகத் தோன்றியது. ஏனென்றால் அவர் மென்மேலும் அதிகமாக உணர்ச்சி வசப்பட்டார். அவர் குரல் இனிமையான பாடலைப் போல மென்மேலும் இழுவையாகச் சென்றது. அவர் தன்னுடைய நிலைகளை அடிக்கடி மாற்றிக் கொண்டிருந்தார், ஒரு சமயத்தில் தொப்பியைத் தலையிலிருந்து எடுப்பார், மற்றொரு சமயத்தில் அதைத் தலையில் வைப்பார். நாங்கள் உட்கார்ந்திருந்த இடத்தின் அரை இருளில் அவருடைய முகத்தில் விசித்திரமான பாவங்கள் தோன்றி மறைந்தன.

''எனக்கு முப்பது வயதாகும் வரை நான் இப்படித்தான் வாழ்ந்தேன். ஆனால் திருமணம் செய்து கொண்டு மிகவும் உயர்ந்த, பரிசுத்தமான குடும்ப வாழ்க்கையை நடத்த வேண்

டும் என்ற உத்தேசத்தை ஒரு விஞடி கூட நான் கைவிடவில்லை. அந்த நோக்கத்தோடு அதற்குப் பொருத்தமான பெண்ணை நான் தேடிக்கொண்டிருந்தேன். உடற்கலவி என்னும் சேற்றில் நான் மூழ்கிக் கிடந்த அதே சமயத்தில் எனக்கு மனைவியாகும் தகுதியைக் கொண்ட பரிசுத்தமான ஒரு பெண்ணைத் தேடிக்கொண்டிருந்தேன். நான் எதிர்பார்த்த அளவுக்குப் பரிசுத்தமில்லை என்ற காரணத்துக்காகப் பல பெண்களை நிராகரித்தேன். கடைசியில் ஒரு பெண்ணைக் கண்டேன். அவள் தகுதி உடையவள் என்று கருதினேன். ஒரு காலத்தில் பெரும் பணக்காரராகக் கருதப்பட்ட—ஆனால் தன் பணம் எல்லாவற்றையும் இழந்துவிட்ட—பேன்ஸா என்ற நகரத்தைச் சேர்ந்த ஒரு நிலவுடைமையாளருடைய இரண்டு பெண்மக்களில் ஒருத்தி அந்தப் பெண்.

''நாங்கள் பகல் முழுவதும் உல்லாசமாகப் படகு ஓட்டிக்கொண்டிருந்துவிட்டு இரவில் நிலவின் வெளிச்சத்தில் வீடு திரும்பிக் கொண்டிருந்தோம். நான் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தேன். இறுக்கமான கம்பளி ஜெர்ஸி எடுத்துக்காட்டிய அவளுடைய எடுப்பான உடலமைப்பையும் சுருள் சுருளான தலை முடியையும் நான் ரசித்துப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவளையே திருமணம் செய்துகொள்வதென்று திடீரென்று முடிவு செய்தேன். அன்று மாலையில் என்னுடைய எல்லா உணர்ச்சிகளையும் சிந்தனைகளையும் அவள் புரிந்து கொண்டதாக, அவை மிகவும் உயர்ந்த மட்டத்தை

அடைந்துவிட்டதாக நான் கற்பனை செய்தேன். உண்மையில் அந்த ஜெர்ஸியும் சுருள் முடியும் அவளுக்கு அதிகமான அழகைக் கொடுத்தன, நாள் முழுவதும் அவளுக்குப் பக்கத்திலேயே இருந்த பிறகு இன்னும் அதிக நெருக்கமாக இருக்க வேண்டுமென்று நான் விரும்பினேன்.

''அழகானவை அனைத்துமே நல்லவை என்ற பிரமை எவ்வளவு நீக்கமற நிறைந்திருக்கிறது என்பதை நினைக்கும் பொழுது ஆச்சரியமேற் படுகிறது. ஒரு அழகான பெண் அபத்தங்களைப் பேசலாம். நீங்கள் அதைக் கேட்டுக் கொண் டிருக்கிறீர்கள், அவள் பேசுவது அபத்தங்கள் அல்ல, அறிவார்ந்த விஷயங்கள் என்று கற்பனை செய்கிறீர்கள். அவள் அருவருப்பான விஷயங் களைப் பேசுகிருள், செய்கிருள். அவற்றில் ஏதோ அழகு இருப்பதாக நினைக்கிறீர்கள். அவள் தற்செயலாக, அபத்தமான, அருவருப் பான விஷயங்களுக்குப் பதிலாக அழகான விஷயங்களைப் பேசிவிட்டாலோ அவ்வளவு தான், அவள் அதிசயமான அழகி மற்றும் அறி வின் சொரூபம் என்று நீங்கள் உடனே நம்பி விடுகிறீர்கள்.

''அவள் குற்றமில்லாத அறச்செல்வி, எனவே எனக்கு மனைவியாகும் தகுதி உள்ள வள் என்ற நம்பிக்கையில் நான் பரவசத்தோடு வீட்டுக்குத் திரும்பினேன். நான் அவளைத் திரு மணம் செய்து கொள்ள விரும்புவதை மறு நாள் அவளிடம் தெரிவித்தேன்.

''இது என்ன குழப்பம்! ஆயிரம் பேர்கள் திருமணம் செய்துகொண்டால் (நம்முடைய

வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமல்ல, கீழ் வர்க்கங்களைச் சேர்ந்தவர்களும் தான் என்பது துரதிர்ஷ்டமே) அதற்கு முன்பே பத்துத் தடவைகள், ஒருவேளை டோன் ஜுவனைப் போல நூறு அல்லது ஆயிரம் தடவைகள் திருமணம் செய்து கொள்ளாத ஒருவரைப் பார்ப்பது கூட அநேகமாகக் கஷ்டமே. (இது அற்பமான விஷயமல்ல, மாபெரும் முக்கியத்துவத்தைக் கொண்ட நடவடிக்கை என்று அறிந்த, உணர்ந்த பரிசுத்தமான மனிதர்கள் இப்பொழுது இருக்கிறார்கள் என்பதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன், கவனித்திருக்கிறேன் என்பது உண்மையே. கடவுள் அவர்களை ஆசீர்வதிக்கட்டும்! ஆனால் என் காலத்தில் அப்படிப்பட்டவர்கள் பத்தாயிரத்தில் ஒருவர் கூடக் கிடையாது.) எல்லோருக்கும் இது தெரியும் என்றாலும் அதைத் தெரியாதவர்களைப் போல நடிக்கிறார்கள். எல்லா நாவல்களும் கதாநாயகர்களுடைய உணர்ச்சிகளை, அவர்கள் தடாகங்கள், பூச்செடிகளுக்கு அருகே உலாவுகிறார்கள் என்பதை நுணுக்கமாக வர்ணிக்கின்றன. ஆனால் இந்த அழகான கதாநாயகன் ஒரு இளம் பெண்ணிடம் கொண்டிருக்கும் மாபெரும் காதலை வர்ணிக்கும்பொழுது இந்தச் சுவாரசியமான கதாநாயகன் அதற்கு முன்பு எப்படி இருந்தார் என்பதைச் சொல்வதில்லை, விபசார விடுதிகளுக்குச் சென்றதையும் பணிப்பெண்களையும், சமையற்காரிகளையும் அடுத்தவர்களுடைய மனைவிகளையும் கெடுத்ததைப் பற்றி ஒன்றுமே சொல்வதில்லை. இவற்றை விவரிக்

கின்ற தரக்குறைவான நாவல்கள் இருக்கின்றன என்றாலும் அவற்றைப் படிப்பதும் அம்மாதிரியான விஷயங்களைத் தெரிந்து கொள்வதும் யாருக்கு மிகவும் அவசியமோ அவர்களிடம் அவை கொடுக்கப்படுவதில்லை, அதாவது இளம் பெண்களிடம் அவை கொடுக்கப்படுவதில்லை. முதலில், நம்முடைய நகரங்களிலும் கிராமங்களிலும் கூட பாதியளவுக்கு இருக்கின்ற இந்தச் சிற்றின்ப வாழ்க்கை என்பதே இல்லாததைப் போல நம் இளம் பெண்கள் தொடக்கத்தில் நம்ப வேண்டுமென்று நம் பெரியவர்கள் பாசாங்கு செய்கிறார்கள். பிறகு அவர்களே இந்தப் பாசாங்குக்குப் பழகிப் போகிறார்கள். கடைசியில் அவர்கள் ஆங்கிலேயர்களைப் போல, மிகவும் அறவழிப்பட்ட இந்த உலகத்தில் உயர்ந்த அற நெறிகளைப் பின்பற்றும் மக்கள் தாங்கள் என்று மனப்பூர்வமாக நம்புகிறார்கள். பாவம்! இந்த இளம் பெண்கள் இதை மிகத் தீவிரமாக நம்புகிறார்கள். என்னுடைய துரதிர்ஷ்டம் பிடித்த மனைவி கூட இதை நம்பினாள். நான் மணமகனாக இருக்கும் பொழுது என்னுடைய நாட்குறிப்பை அவளிடம் காட்டியது நினைவுக்கு வருகிறது. அந்த நாட்குறிப்பிலிருந்து என் கடந்த காலத்தைத் தெரிந்துகொள்ள முடியும்; குறைந்தபட்சம் சமீபத்தில் எனக்கு ஏற்பட்டிருந்த தொடர்பைப் பற்றி அவள் தெரிந்து கொள்ள முடியும்; அவள் அதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று நான் மிகவும் விரும்பினேன். அதைப் பற்றி மற்றவர்கள் அவளிடம் சொல்லக்கூடும்

என்பதால் நானே அதைப் பற்றிச் சொல்வது உசிதமானது என்று நினைத்தேன். அவள் அதைத் தெரிந்துகொண்ட பொழுது, புரிந்து கொண்ட பொழுது அவளுக்கேற்பட்ட பீதியும் மனக்குழப்பமும் திகைப்பும் எனக்கு நினைவிருக்கிறது. அவள் அந்த நேரத்திலே என்னிடமிருந்து போய்விட விரும்பியதை நான் கண்டேன். ஓ! அவள் ஏன் அப்படிப் போகவில்லை!''

அந்த வழக்கமான சப்தம் அவரிடமிருந்து வந்தது, பேச்சை நிறுத்தினார், தேநீரை ஒரு மிடறு விழுங்கினார்.

## 6

''இல்லை! அவள் போயிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! நன்றாக இருந்திருக்கும்!'' என்று அவர் உரத்த குரலில் கூறினார். ''அது எனக்கு வேண்டியதுதான். ஆனால் நான் இப்பொழுது கதையைத் தொடர்கிறேன். துரதிர்ஷ்டவசமாகப் பெண்கள் மட்டுமே ஏமாற்றப்படுகிறார்கள் என்பதையே சொல்ல விரும்பினேன். அவர்களுடைய தாயார்களுக்கு — குறிப்பாகத் தங்கள் கணவர்களால் நன்றாகப் பயிற்றுவிக்கப்பட்ட தாயார்களுக்கு — எல்லாமே தெரியும். அவர்கள் ஆண்களின் தூய்மையை நம்புவதாக நடிக்கிறார்கள், ஆனால் அவர்கள் உண்மையில் அதற்கு முற்றிலும் எதிரான முறையில் நடந்துகொள்கிறார்கள். தங்களுக்காகவும் தங்கள் பெண்களுக்காகவும் ஆண்களைப் பிடிப்பதற்கு எந்தத் தூண்டிலைப் பயன்

படுத்த வேண்டும் என்பது அவர்களுக்குத் தெரியும்.

''ஆண்களாகிய நமக்கு மட்டுமே அது தெரியாது. நாம் அதைத் தெரிந்துகொள்ள விரும்பாததால் அது நமக்குத் தெரிவதில்லை. மிகவும் மேன்மையான, கவித்துவம் நிறைந்த காதல் என்று சொல்கிறீர்களே அது அறப்பண்புகளால் ஏற்படுவதில்லை, உடல் உரசுவதால், முடியலங்காரத்தால், உடையின் நிறத்தால், அதன் சிறப்பால் ஏற்படுகிறது என்பது பெண்களுக்கே நன்ருகத் தெரியும். ஒரு குறிப்பிட்ட நபரைப் 'பிடித்துவிட' வேண்டும் என்று பாடுபடுகின்ற அலங்காரியிடம் அந்த மனிதனுக்கு முன்னுல் பொய், கொடுமை (விபசார நடத்தை கூட) ஆகியவற்றுக்காகக் குற்றஞ் சாட்டப்படுதல் அல்லது அவலட்சணமான, தன் உடலுக்குச் சரியில்லாத கவுனை அணிந்து அவருக்கு முன்னுல் தோன்றுதல், இந்த இரண்டில் எந்த ஆபத்தை அவள் தேர்ந்தெடுப்பாள் என்று கேட்டுப் பாருங்கள். அவள் நிச்சயமாக முதலில் சொன்னதையே தேர்ந்தெடுப்பாள். ஆண்களாகிய நாம் மேன்மையான உணர்ச்சிகளைப் பற்றிப் பேசும்பொழுது வெறும் பொய்யைத் தான் பேசுகிருேம் என்பது அவளுக்குத் தெரியும். அவளுடைய உடல் தான் அவனுக்கு வேண்டும். அவன் அவளுடைய பாவச் செயல்களை மன்னிப்பான். ஆனுல் அவலட்சணமான, அவள் உடலுக்குச் சரியில்லாத, கலைநயமில்லாத கவுனை அவன் ஒருக்காலும் மன்னிக்க மாட்டான். ஒரு விபசாரி இதை உணர்வுபூர்வமாகத்

தெரிந்து கொண்டிருக்கிருள். ஆனல் எதுவும் தெரியாத இளம் பெண், மிருகங்களைப் போல உள்ளுணர்ச்சி மூலமாகவே தெரிந்து கொள் கிருள்.

''அருவருப்புத் தருகின்ற ஜெர்ஸிகளுக்கும், பின்புறங்களைத் துருத்திக் காட்டும் தந்திரங் களுக்கும் திறந்த தோள்களுக்கும் கைகளுக் கும் அநேகமாகத் திறந்திருக்கும் மார்புகளுக் கும் காரணம் இதுவே. உயர்ந்த விஷயங்களைப் பற்றிய பேச்சு வெறும் பேச்சு, உடலையும் அந்த உடலின் கவர்ச்சியை அதிகப்படுத்துகின்றவை களையும் தான் உண்மையில் ஆண் விரும்புகிருர் என்பது பெண்களுக்கு, குறிப்பாக ஆண்களிட மிருந்து தங்களுடைய அறிவைப் பெற்றவர் களுக்குத் தெரியும். எனவே அதையே அவர் களும் கொடுக்கிருர்கள். மேல் வர்க்கத்தின ருடைய வாழ்க்கையை வாடிக்கையான அணுகு முறை—அது நமக்கு இரண்டாவது இயற்கை யாகிவிட்டது—என்ற முப்பட்டைக் கண்ணுடி யின் வழியாகப் பார்க்காமல் அதன் உண்மை யான ஒளியில் நாம் பார்க்க முடியுமாளுல் அது மெய்யாகவே ஒரு விபச்சார விடுதி என்பதைப் பார்ப்போம். நீங்கள் ஒத்துக் கொள்ளவில்லை யா? இப்பொழுதே நான் அதை நிரூபிக்க முடியும்'' என்று நான் பேசுவதற்குச் சந்தர்ப் பம் கொடுக்காமல் அவர் கூறிஞர். ''நம் வர்க் கத்துப் பெண்களிடம் விபசார விடுதிப் பெண் களிடமிருந்து வித்தியாசமான வேறு அக்கறை கள் இருக்கின்றன என்று நீங்கள் சொல்கிறீர் களா? இல்லை என்று நான் சொல்கிறேன். இப்

பொழுதே நான் நிரூபிக்கிறேன். மக்களுக்கு வாழ்க்கையில் வேறு இலட்சியங்கள் இருந்தால், அவர்களுடைய அக உணர்வுகள் வேறு விதமாக இருந்தால் இந்த வேறுபாடு நிச்சயமாக வெளித் தோற்றங்களில் பிரதிபலிக்கும். அந்த வெளி மனிதனும் வேறுவிதமாக இருப்பான். நாம் வெறுத்தொதுக்கும் துரதிர்ஷ்டம் பிடித்த பெண்களையும் மிகவும் உயர்ந்த சமூகத்திலிருந்து வரும் இளம் பெண்களையும் பாருங்கள்: அதே உடைகள், அதே நவநாகரிகம், அதே வாசனைத் தைலங்கள், அதே போல துணிகளால் மறைக்கப்படாத கரங்கள், தோள்கள், மார்புகள், அதே மாதிரி செயற்கைப் பின்புறங்கள், விலையுயர்ந்த வைரங்களுக்கும் அதிகமான விலையுள்ள, பளபளப்பான நகைகளுக்கும் அதே விதமான ஆசை, அதே உல்லாசங்கள், நடனங்கள், சங்கீதம், பாட்டு. ஆண்களைக் கவர்ந்திழுப்பதற்கு விபசாரிகள் பயன்படுத்தும் அதே முறைகளை உயர்ந்த குடும்பப் பெண்களும் வேறு வழிகளில் உபயோகிக்கிறார்கள். எந்த வேறுபாடும் கிடையாது. அவர்களுக்கிடையே கண்டிப்பாக வேறுபடுத்திக் காட்ட வேண்டுமென்றால் குறுகிய கால விபச்சாரிகளை நாம் வழக்கமாக வெறுத்து ஒதுக்குகிறோம், ஆனால் நீண்ட கால விபச்சாரிகளான உயர்குடும்பப் பெண்களை மதிக்கிறோம் என்று தான் சொல்ல வேண்டும்.''

# 7

''ஜெர்ஸிகள், சுருள்முடிகள், உடையலங்காரங்கள் என்ற வலையில் நான் இப்படி சிக்கினேன். வெப்ப அறைகளில் வளரும் வெள்ளரிக்காயைப் போல இளைஞர்களிடம் காதல் உணர்ச்சியை வளர்க்கின்ற விசேஷமான நிலைமைகளில் நான் வளர்ந்தபடியால் என்னைச் சிக்கவைப்பது எளிதாகவே இருந்தது. காம உணர்ச்சியைத் தூண்டும் உணவுகளை நாம் மிக அதிகமாகச் சாப்பிடுகிறோம். அது மட்டுமல்லாமல் முற்றிலும் சோம்பேறித்தனமான வாழ்க்கையை நடத்துகிறோம். இவை காம உணர்ச்சியை இடைவிடாமல் தூண்டுகின்றன. இது உங்களுக்கு வியப்பை ஏற்படுத்தலாம் அல்லது ஏற்படுத்தாதிருக்கலாம்; ஆனால் இது உண்மை. நானே சமீபகாலம் வரை இதை உணரத் தவறினேன். இப்பொழுது இந்த உண்மையை உணர்கிறேன். அதனால்தான் மற்றவர்கள் இந்த உண்மையை உணராமலிருப்பதைப் பார்க்கும்பொழுது, இங்கே உட்கார்ந்திருந்த அந்தப் பெண்மணி பேசிய மாதிரி அபத்தமாகப் பேசுவதைக் கேட்கும் பொழுது எனக்கு ஆத்திரமேற்படுகிறது.

''ஆம், ஐயா, இந்த வசந்தகாலத்தின் போது சில விவசாயிகள் என் ஊருக்குப் பக்கத்தில் ஒரு ரயில் பாதையைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தார்கள். ஒரு இளம் விவசாயியின் வழக்கமான உணவு ரொட்டியும் க்வாசும் வெங்காயமும் தான். அவன் உயிரோடிருந்து, உற்சாகமாக,

ஆரோக்கியமாக இருந்து, இலேசான வெளி வேலையைச் சுறுசுறுப்பாகச் செய்வதற்கு இந்த உணவு போதும். அவன் ரயில்வேயில் வேலை செய்கின்ற பொழுது சூழும் ஒரு பவுண்ட் இறைச்சியும் அவனுடைய அன்றாட உணவாக இருக்கிறது. முப்பது பூடுகள் எடையுள்ள சரக்கு வண்டியை அன்றாடம் பதினறு மணி நேரம் இழுப்பதற்கு இந்த இறைச்சியைச் செல விடுகிறான். அந்த உணவு அவனுக்குச் சரியாக இருக்கிறது. ஆனால் நாம் இரண்டு பவுண்டு இறைச்சியும் கோழியும், ஊட்டமான இதர உணவு வகைகளும் மதுபானங்களும் சாப்பிடு கின்றோம். அதை எப்படிச் செலவிடுகிறோம்? உடலின்பத்தில் செலவிடுகிறோம். அதைச் செல விட்டு விட்டோமென்றால் நல்லதே. ஏனென் றால் குறுக்கு வழி திறந்தே இருக்கிறது, எந்த ஆபத்துமில்லை. ஆனால் எனக்கு அந்தச் குறுக்கு வழி அவ்வப்பொழுது மூடியிருந்ததைப் போல இருந்தால் அது காம வெறியை ஏற்படுத்து கிறது; நமது செயற்கையான வாழ்க்கை என்ற முப்பட்டைக் கண்ணாடி வழியாக அது வெளி வரும் பொழுது, மிகவும் நயமான காதல் உணர்ச்சியில்—சில சமயங்களில் கருத்தியலான காதல் கூட—வெளிப்படுகிறது. எல்லோரை யும் போலவே நானும் காதலித்தேன். என் காதலில் பரவசங்கள், போற்றுதல், கவிதை ஆகிய எல்லா அம்சங்களும் இருந்தன. உண் மையில் என்னுடைய இக்காதல் ஒரு பக்கத்தில் அவளுடைய தாயார் மற்றும் உடை தயாரிப் பாளர்களாலும் மறு பக்கத்தில் சோம்பேறித்

தனமான வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்த நான் சாப்பிட்ட மிகை உணவினாலும் ஏற்பட்டது. ஒரு பக்கத்தில் படகுப் பயணங்கள் இல்லாவிட்டால், அவளுடைய இடையழகையும் மற்ற அம்சங்களையும் எடுப்பாகக் காட்டக் கூடிய உடை தயாரிப்பாளர்கள் இல்லாதிருந்தால், என்னுடைய எதிர்கால மனைவி உருவமற்ற கவுனை அணிந்துகொண்டு வீட்டில் உட்கார்ந்திருந்தால், மறு பக்கத்தில் தான் செய்கின்ற வேலைக்கு அவசியமான உணவை மட்டுமே சாப்பிடுகின்ற மனிதனின் வாடிக்கையான நிலைமைகளில் நான் வாழ்ந்து கொண்டிருந்தேன் என்றால், என்னுடைய குறுக்கு வழி திறந்திருந்தால் (அது அந்த சமயத்தில் மூடப்பட்டிருந்தது) நான் காதலில் சிக்கியிருக்க மாட்டேன். மற்ற விளைவுகளும் ஏற்பட்டிருக்க மாட்டா.''

## 8

''ஆனால் அன்று தற்செயலாக எல்லாமே—என்னுடைய மனநிலையும் அவளுடைய ஒப்பனையும் படகுப் பயணமும்—பொருந்தியிருந்தன. அதற்கு முன்பு இருபது தடவைகள் அவை பொருந்திவிடவில்லை. ஆனால் இம்முறை அவை பொருந்திவிட்டன. பொறியில் அகப்படுவதைப் போல. நான் வேடிக்கையாகப் பேசவில்லை. நம் காலத்தில் திருமணங்கள் பொறிகளைப் போல முன்னரே தயாராக வைக்கப்படுகின்றன. இயற்கையாக என்ன இருக்கிறது? ஒரு பெண் பருவமடைகிறாள், அவளுக்குத் திரு

மணம் செய்ய வேண்டும். அந்தப் பெண் குரூபியாக இல்லாவிட்டால் திருமணத்துக்குத் துடிக்கும் ஆண்கள் இருக்கின்ற வரை இது மிகச் சாதாரண விஷயம்தான் என்று தோன்றுகிறது. பழங்காலத்தில் அப்படித்தான் நடந்தது. ஒரு பெண் பருவமடைந்ததும் அவள் பெற்ருேர்கள் அவளுக்குத் தகுந்த கணவனைத் தேர்ந்தெடுத்தார்கள். எல்லா மக்களினங்களிலும்— சீனர்கள், இந்தியர்கள், முகம்மதியர்கள் மற்றும் நம் மக்களிடம் — இப்படித் தான் நடைபெற்றது, இன்றும் இப்படியே நடைபெறுகிறது. உலகத்தில் குறைந்த பட்சம் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தினரிடம் இப்படித் தான் நடைபெறுகிறது. ஆனல் ஒரு சதவிகித மக்கள், நம்மைப் போன்ற ஒழுக்கக் கேடர்கள். இது சரியல்ல என்று முடிவு செய்து விட்டார்கள், ஒரு புதிய முறையைத் தேர்ந்தெடுத்திருக்கிருர்கள். அந்தப் புதிய முறை என்ன? பெண்களை உட்கார்த்திவைத்து அவர்களுக்கு முன்னும் பின்னும் ஆண்களை நடக்க வைப்பது—எல்லாம் சந்தை மாதிரித்தான்— அந்தப் புதிய முறையாகும். அவர்கள் தங்களுக்குப் பிடிக்கும் பெண்ணைத் தேர்ந்தெடுக்கிருர்கள். பெண்கள் அங்கே உட்கார்ந்து கொண்டு 'ஐயா, என்னைத் தேர்ந்தெடுங்கள், என்னையே! அவள் வேண்டாம்! என்னைத் தேர்ந்தெடுங்கள்! எவ்வளவு அழகான தோள்கள், இன்னும் மற்றவைகளைப் பாருங்கள்' என்று (பலமாகச் சொல்வதற்குப் பயந்தவர்களாக) மனதுக்குள் சொல்லிக் கொள்கிருர்கள். ஆண்

களாகிய நாம் அவர்களுக்கு முன்னாலும் பின்னாலும் நடந்து கொண்டு அவர்களை உற்றுப் பார்க்கிறோம். நமக்காக நடத்தப்படும் இந்தக் கண் காட்சியைப் பற்றி மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம். 'ஓ! எனக்குத் தெரியும். நான் சிக்கிக் கொள்ள மாட்டேன்' என்று ஆண்கள் நினைக்கிறார்கள். ஒரே ஒரு விநாடி மட்டும், அப்புறம்— அவன் கவனமாக இல்லையென்றால் — டப்! — பொறியில் சிக்கிக்கொண்டான்.''

''அது வேறு எப்படி இருக்க முடியும்? பெண் ஆணைத் தேர்ந்தெடுக்கலாமா?'' என்று நான் கேட்டேன்.

''எப்படி இருக்கலாம் என்று எனக்குத் தெரியாது. சமத்துவம் வேண்டுமென்றால் உண்மையான சமத்துவம் இருக்கட்டும். பெற்றோர்கள் திருமணங்களை நிச்சயிப்பது சரியல்ல என்றால் இது அதைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு மோசம். முதல் உதாரணத்திலாவது உரிமைகளும் சந்தர்ப்பங்களும் குறைந்த பட்சம் சமமாக இருக்கின்றன. இந்த உதாரணத்தில் பெண் சந்தையில் விற்பனை செய்யப்படுகின்ற அடிமையாக அல்லது பொறியில் வைக்கப்படும் இரையாக இருக்கிறாள். அந்தப் பெண்ணின் ஒரே வேலை ஒரு மாப்பிள்ளையை வலை போட்டுப் பிடிப்பதுதான் என்று ஒரு தாயாரிடம் அல்லது பெண்ணிடமே சொல்லிப் பாருங்கள். அட கடவுளே! என்ன அநியாயம்! ஆனால் உண்மையில் அந்த ஒரு வேலையை மட்டுமே அவர்கள் எல்லோரும் செய்கிறார்கள், அவர்கள் செய்வதற்கு

வேறொன்றுமில்லை. இளம் பெண்கள், ஒரு தவறும் அறியாதவர்கள் இந்த வேலையில் ஈடுபட்டிருப்பதைப் பார்க்க பயங்கரமாக இருக்கிறது. அதிலும் இதை பகிரங்கமாகச் செய்கிறார்கள், இருக்கட்டும். ஆனால் இது எல்லாம் மோசடி. 'ஆ! உயிரினங்களின் தோற்றம் எவ்வளவு சுவாரசியமானது! ஆ! என் லீஸாவுக்கு ஓவியத்தில் அதிகமான பிரியம்! நீங்களும் கண்காட்சிக்கு வருகிறீர்களா? மிகவும் அறிவூட்டக் கூடியது! மூன்று குதிரைச் சறுக்கு வண்டிப் பயணங்களும் நாடகமும் ஸிம்பனியும்? ஆ, எவ்வளவு அற்புதமானது! என் லீஸாவுக்கு இசை என்றால் பைத்தியம். நீங்கள் இந்தக் கருத்துக்களை ஏன் ஒத்துக் கொள்ளாதிருக்கிறீர்கள்? படகுப் பயணங்கள்!..' ஆனால் இந்தப் பேச்சு முழுவதிலும் அவளுடைய ஒரே எண்ணம்:'என்னை எடுத்துக் கொள்,எடுத்துக் கொள், அல்லது என்னுடைய லீஸாவை எடுத்துக் கொள்! இல்லை, என்னையே! குறைந்த பட்சம் ஒரு தடவை மட்டுமாவது...' சீ! என்ன போலித்தனம்! எவ்வளவு அருவருப்பு!'' என்று சொல்லி விட்டு அவர் கடைசியாக மிச்சமிருந்த தேநீரைக் குடித்த பிறகு கோப்பைகளையும் பாத்திரங்களையும் ஒதுக்கி வைக்கத் தொடங்கினார்.

## 9

''இந்த உலகத்துக்குத் துன்பத்தைத் தருகின்ற பெண்களின் ஆட்சி என்ற மூலவேர் இதற்குக் காரணம் என்பது உங்களுக்குத்

தெரிந்திருக்கும்'' என்று தேயிலையையும் சர்க்கரையையும் பைக்குள் வைத்துக் கொண்டு அவர் பேசத் தொடங்கினர்.

''எந்தப் பெண்களின் ஆட்சி? உரிமைகள், அந்த உரிமைகளின் பலன்கள் ஆண்களுக்குச் சாதகமாக அல்லவா இருக்கின்றன'' என்றேன்.

''ஆமாம், ஆமாம். அதுதான்'' என்று அவர் என் பேச்சில் குறுக்கிட்டார். ''இதைப் பற்றித் தான் நான் உங்களிடம் பேச விரும்பினேன். அதாவது ஒரு பக்கத்தில், பெண்ணை மிகவும் கீழான நிலைமைக்குத் தள்ளிவிட்ட போதிலும் அவள் ஆதிக்கம் செலுத்துவது அசாதாரணமான நிகழ்வுதான். மறு பக்கத்தில், அதை விளக்குவது சட்ட நிலைமையே. ஒன்றின் விளைவாக மற்றொன்று ஏற்பட்டிருக்கிறது. யூதர்கள் அடக்குமுறைக்கு ஆளானபோதிலும் பணத்தின் அதிகாரம் தங்களுக்குக் கிடைத்திருப்பதில் திருப்தி அடைவதைப் போல. 'ஆ! நாங்கள் வர்த்தகர்களாக மட்டும்தான் இருக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? மிகவும் சரி. அப்படியே ஆகட்டும். வர்த்தகர்கள் என்ற முறையில் உங்களை அடக்கி ஆளுவோம்' என்று யூதர்கள் சொல்கிறார்கள். 'ஓகோ, நாங்கள் போகப் பொருளாகத்தான் இருக்க வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களா? சரி. போகப் பொருள் என்ற முறையில் உங்களை எங்கள் அடிமைகளாக்குவோம்' என்று பெண்கள் சொல்கிறார்கள். ஒரு பெண்ணுக்கு உரிமைகள் இல்லை என்பது எதில் அடங்கியிருக்கிறது? நீதிபதியைத் தேர்ந்தெடுக்க வாக்களிக்க

அல்லது தானே நீதிபதியாக அவளுக்கு உரிமை யில்லை என்பது முக்கியமல்ல—இம்மாதிரியான செயல்களை உரிமை என்று சொல்ல முடியாது. தாம்பத்திய வாழ்க்கையில் ஆணோடு அவளுக்குச் சமத்துவம் கிடையாது; தன் விருப்பம் போல ஒரு ஆணோடு இன்பம் அனுபவிப்பதற்கு அல்லது அந்த நபருக்குத் தன்னைக் கொடுக்க மறுப் பதற்கு அவளுக்கு உரிமையில்லை, ஒரு ஆணால் தேர்ந்தெடுக்கப்படுவதற்குப் பதிலாகத் தன் விருப்பத்துக்குரிய ஆண் மகனைத் தேர்ந்தெடுத் துக்கொள்ள அவளுக்கு உரிமையில்லை என்ப தில் அது அடங்கியிருக்கிறது. இதை இழிவு என்று சொல்கிறீர்களா? சரி. அப்படியானால் ஆணுக்கும் அப்படிப்பட்ட உரிமைகள் இருக்கக் கூடாது. இப்பொழுது ஆணுக்குத் தரப்பட் டிருக்கும் உரிமை பெண்ணுக்குக் கிடையாது. எனவே இந்த உரிமையை இழந்ததை ஈடு செய்வதற்காக அவள் ஆண் மகனின் உணர்ச் சிகளைத் தூண்டுகிறாள். அவருடைய உணர்ச்சி களை முடுக்கிவிட்டு அவர் தேர்ந்தெடுப்பதென் பதே வெறும் சம்பிரதாயம் என்று சொல்லக் கூடிய அளவுக்கு அவரை அடிமைப்படுத்தி விடு கிறாள். அவள்தான் உண்மையில் தேர்ந்தெடுக் கிறாள். தன்னுடைய நோக்கத்தை நிறைவேற் றிக் கொள்வதற்கு இந்த வழியைக் கண்டுபிடித் ததும் அவள் எல்லோர் மீதும் பயங்கரமான அதிகாரத்தைச் செலுத்துவதற்கு இதைப் பயன்படுத்துகிறாள்.''

''இந்த விசேஷமான அதிகாரம் எங்கே இருக் கிறது?'' என்று நான் கேட்டேன்.

''எங்கே இருக்கிறதா? எங்குமே, எல்லாவற்றிலுமே இருக்கிறது. ஒவ்வொரு முக்கியமான நகரத்திலுமுள்ள பெரிய கடைகளைப் போய்ப் பாருங்கள். இவற்றில் கோடிக் கணக்கான ரூபிள்கள் செலவிடப்படுகின்றன. நம்மால் கணக்கிட முடியாத அளவுக்கு அதிகமானவர்கள்—பாடுபட்டுத் தயாரித்த பொருள்கள் அங்கே காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் நன்ருகப் பாருங்கள்: இந்தக் கடைகளில் பத்தில் ஒன்பது பங்கில் ஆண்களின் உபயோகத்துக்குரிய எந்தப் பொருளேயாவது பார்க்க முடியுமா? வாழ்க்கையின் ஆடம்பரப் பொருள்கள் எல்லாமே பெண்களுக்காகத் தயாரிக்கப்பட்டு அவர்களாலே வாங்கப்படுகின்றன. எல்லாத் தொழிற்சாலைகளையும் எண்ணுங்கள். மிகவும் அதிகப் பெரும்பான்மையான தொழிற்சாலைகள் பெண்களுக்காக உபயோகமில்லாத ஆபரணங்களையும் வண்டிகளையும் நாற்காலிகளையும் விளையாட்டுப் பொருட்களையும் தயாரித்துக் கொண்டிருக்கின்றன. பெண்களின் சபலத்தைத் திருப்தி செய்வதற்காக நடைபெறுகின்ற இந்த இரக்கமற்ற தொழிற்சாலை உழைப்பில் கோடிக் கணக்கானவர்கள்—பல தலைமுறைகளாக அடிமைகளாக இருப்பவர்கள்—தங்களையே அழித்துக் கொள்கிருர்கள். பெண்கள் அரசிகளைப் போல, மனிதகுலத்தில் பத்தில் ஒன்பது பகுதியினரைச் சிறையிலடைத்துத் தங்களுக்கு அடிமைகளாகப் பாடுபடுமாறு கட்டாயப்படுத்துகிருர்கள். ஆண்களோடு பெண்களுக்குச் சம உரிமைகளைத்

தர மறுத்து அவர்களை அவமதித்ததற்காக நம்முடைய சிற்றின்ப உணர்ச்சிகளை முடுக்கிவிட்டு, பொறியில் நம்மைச் சிக்கவைத்து அவர்கள் பழிவாங்குகிறார்கள். ஆம், எல்லாமே அதற்காகத் தான். காம உணர்ச்சியைத் தூண்டுவதற்குத் தங்களை ஒரு கருவியாகப் பெண்கள் ஆக்கிக் கொண்டிருப்பதால் அவர்களுக்கு முன்பாக ஆண் தன்னுடைய நிதானத்தைக் காத்துக்கொள்ள முடிவதில்லை. ஒரு ஆண் ஒரு பெண்ணுக்குப் பக்கத்தில் வந்தவுடனே அவன் அவளுடைய போதையில் மயக்கமடைந்து தடுமாறுகிறான். அலங்காரமான நடன கவுனை அணிந்து கொண்டிருக்கும் பெண்ணைப் பார்த்தவுடன் முன்பு நான் ஒரு வகையான சங்கடத்துக்கு ஆளானேன், அவர்களிடம் கெஞ்சினேன். ஆனால் இப்பொழுது நான் பீதியடைகிறேன். ஏனென்றால் நான் அந்தப் பெண்ணிடம் ஆபத்தான, சட்டத்துக்குப் புறம்பான ஏதோ ஒன்றைக் காணுகிறேன். 'உதவி!' என்று கத்த, இந்த அபாயகரமான பொருளிடமிருந்து (பெண்ணிடமிருந்து) என்னைக் காப்பாற்றுங்கள் என்று போலீசைக் கூப்பிடுவதற்கு, அவளைச் சிறையில் தள்ளுங்கள் என்று கோருவதற்குத் துடிக்கிறேன்.

''நீங்கள் சிரிக்கிறீர்களா?'' என்று அவர் என்னை அதட்டினார். ''இது வேடிக்கையல்ல. ஆண்களின் உணர்ச்சிகளைத் தூண்டுகின்ற நேரடியான உத்தேசத்தோடு பெண் தன் உடலை அலங்கரித்துக் கொள்வதைப் போல கலவரத்தை உண்டாக்குகின்ற ஒன்றை அனுமதிக்கக்

கூடிய சமூகம் எப்படி இருக்க முடிந்தது என்று மக்கள் அதிசயப்படுகின்ற, இதைப் புரிந்து கொள்கின்ற காலம் வரும்—அது சீக்கிரத் திலேயே வரப் போகிறது என்று நான் உறுதியாகச் சொல்வேன். ஆண்கள் நடந்து செல் லும் பாதைகளில் பொறிகளை வைப்பதைப் போன்றதுதானே இதுவும். அதைக் காட்டிலும் ஆபத்தானது! சூதாட்டத்துக்குத் தடை விதிப் பதும் ஆண்களின் காம உணர்ச்சியைத் தூண்டு வதற்காக விபச்சாரியைப் போல ஆடையணி களால் பெண்கள் தங்கள் உடலை அலங்கரித்துக் கொள்வதற்குத் தடைவிதிக்காமல் இருப்பதும் ஏன்? அதைக் காட்டிலும் இது ஆயிரம் மடங்கு ஆபத்தாயிற்றே!''

## 10

''ஆகவே இப்படி நான் சிக்கிக்கொண்டேன். 'காதலில் மூழ்கிவிட்டதாகச்' சொல்கிறார்களே, அந்த நிலையில் நான் இருந்தேன். அவளைத் தூய்மையின் சிகரம் என்று நான் கருதியது மட்டுமல்ல, எங்கள் திருமணம் நிச்சயிக்கப்பட் டிருந்த அந்தக் கட்டத்தில் நானும் தூய்மை யின் சிகரமாக இருந்தேன். ஒருவர் கயவனாக இருக்கலாம்; ஏதாவது ஒரு அம்சத்தில் தன்னைக் காட்டிலும் மோசமான ஒருவன் இருப்பது அந்தக் கயவனுக்குக் கூட, தன்னைப் பற்றி மகிழ்ச்சியடைவதற்கும் பெருமைப்படுவதற்கும் காரணமாக இருக்கிறது. என்னுடைய நிலைமை யும் அப்படித்தான் இருந்தது. நான் பணத் துக்காகத் திருமணம் செய்து கொள்ளவில்லை.

எனக்குப் பேராசை கிடையாது. என்னுடைய நண்பர்கள் பலரும் பணத்துக்காக அல்லது பெரிய இடத்துத் தொடர்புகளுக்காகத் திரு மணம் செய்து கொண்டிருந்தார்கள். நான் பணக்காரன். அவளோ ஏழை. அது ஒரு விஷ யம். அதோடு திருமணத்துக்கு முன்பிருந்ததைப் போல பல பெண்களோடு வாழ்க்கை நடத்து வதைத் தொடரும் உத்தேசத்தோடு மற்றவர் கள் திருமணம் செய்து கொள்கிறார்கள். நானோ திருமணத்துக்குப் பிறகு கண்டிப்பாக ஒரு தார வாழ்க்கை நடத்துவதென்று உறுதியாக முடிவு செய்திருந்தேன். இது என்னைப் பற்றி நானே மிக அதிகமாகப் பெருமைப்படச் செய்தது. ஆம். நான் ஒரு அருவருக்கத்தக்க பன்றியாக இருந்தேன். ஆனால் நான் ஒரு தேவன் என்று கற்பனை செய்துகொண்டேன்.

''என் திருமண நிச்சயதார்த்தக் கட்டம் அதிகக் காலம் நீடிக்கவில்லை. அந்தக் காலத் தைப் பற்றி நினைப்பதற்கே எனக்கு வெட்கமாக இருக்கிறது! எவ்வளவு கேவலம். அப்பொழுது உடற் காதலல்ல, ஆன்மிகக் காதல் இருப்ப தாக நாம் நினைக்கிறோம். அது ஆன்மிகக் காதல், ஆன்மிக உறவு என்றால் நம்முடைய வார்த்தை களும் பேச்சுக்களும் உரையாடல்களும் அந்த ஆன்மிக உறவைப் பிரதிபலிக்க வேண்டும். ஆனால் என் விஷயத்தில் அப்படி நடக்கவில்லை. நாங்கள் இருவரும் தனியே இருந்த சந்தர்ப் பங்களில் பேசுவதே எனக்குக் கஷ்டமாக இருந் தது. ஏதாவது பேசுவதற்கு மாபெரும் முயற்சி அவசியமாக இருந்தது. ஏதாவது பேசுவதற்

குக் கூட நான் நெடுநேரம் சிந்தித்துக் கொண்டிருப்பேன். அதைப் பேசிய பிறகு மௌனத்தில் மூழ்கிவிடுவேன், இனி எதைப் பற்றிப் பேசலாம் என்று சிந்தித்துக் கொண்டிருப்பேன். எங்களுக்கிடையே பேசுவதற்கு ஒன்றுமே இல்லை. நாங்கள் இருவரும் சேர்ந்து வாழ வேண்டிய எதிர்கால வாழ்க்கையைப் பற்றி, எங்கள் திட்டங்களையும் ஏற்பாடுகளையும் பற்றிப் பேசக்கூடிய எல்லாவற்றையுமே பேசி முடித்துவிட்டோம். வேறு என்ன இருக்கிறது? நாங்கள் மிருகங்களாக இருந்தால் நாங்கள் பேச முடியாது என்பதைப் புரிந்துகொண்டிருப்போம். ஆனால் மனிதப் பிறவிகள் என்ற முறையில் நாங்கள் பேசிக் கொள்வோம் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் நாங்கள் ஒன்றுமே பேசவில்லை. ஏனென்றால் நாங்கள் மனதில் நினைத்துக் கொண்டிருந்த விஷயம் உரையாடலுக்குரிய பொருளல்ல. இவை எல்லாவற்றோடும் அருவருக்கத்தக்க மரபு—சாக்கலேட்டுகள், இனிப்புத்தீனியை வயிற்றில் அடைத்துக் கொள்வது, வீட்டைத் தயாரித்தல், படுக்கை அறை, மெத்தைகள், கவுன்கள், உடைகள், பீரோ முதலிய அருவருக்கத்தக்க திருமணத் தயாரிப்புகள்—சேர்ந்து கொண்டது. அந்தக் கிழவர் வற்புறுத்திப் பேசிய 'டோமஸ்த்ரோய்' முறையின் கீழ் சீர் வரிசை, கட்டில், இறகு மெத்தைகள்—இவை அனைத்துமே அந்த மர்மச் சடங்கில் சில விவரங்கள். ஆனால் இப்பொழுது திருமணத்துக்கு ஏற்பாடு செய்து கொண்டிருப்பவர்களில் பத்தில் ஒன்பது நபர்

கள் கூட அந்த மர்மத்தில் நம்பிக்கை வைப்ப தில்லை, அல்லது தான் செய்யப் போகின்ற காரியம் சமூகப் பொறுப்பைக் கொண்டிருக் கிறதென்று நம்புவதுமில்லை. திருமணத்துக்கு முன்பே உடலுறவில் ஈடுபடாத நபரை நூறில் ஒருவராகக் கூடப் பார்க்க முடியாதிருக்கும் பொழுது, தனக்குக் கிடைக்கக் கூடிய முதல் சந்தர்ப்பத்தில் மனைவியை ஏமாற்றத் துணியா தவர் ஐம்பதில் ஒருவர் கூட இல்லாதிருக்கும் பொழுது திருமணம் செய்துகொள்ளும் பெரும் பான்மையானவர்கள் மாதா கோவிலில் நடை பெறும் திருமணச் சடங்கை ஒரு குறிப்பிட்ட பெண்ணைத் தன்னுடைய உடைமையாக்கிக் கொள்வதற்கு விதிக்கப்படுகின்ற நிபந்தனை யாக மட்டுமே கருதும் பொழுது — இவை அனைத்தையும் நீங்கள் நினைத்துப் பார்க்கின்ற பொழுது—இத்தயாரிப்புகளின் பயங்கரமான அர்த்தம் தெளிவாகத் தெரிகிறது. இவை அனைத்துமே தம்மளவில் ஒரு முடிவாகத் தோன்றுகின்றன. அது ஒரு விற்பனை என்று தெரிந்து கொள்கிறோம். ஒரு அறியாப் பெண்ணை ஒழுக்கக் குறைவான ஒரு ஆணுக்கு விற்பனை செய்கிறார்கள். அந்த விற்பனை அதற்குப் பொருத்தமான சடங்குகளோடு நடைபெறு கிறது.''

## 11

''எல்லோரும் இப்படித்தான் திருமணம் செய்துகொள்கிறார்கள். நானும் இப்படியே திருமணம் செய்துகொண்டேன். பிறகு எல்

லோரும் போற்றிப் புகழும் தேநிலவுக்குப் புறப் பட்டேன். அந்தப் பெயரே எவ்வளவு இழி வாக இருக்கிறது!'' என்று அவர் அருவருப் போடு சீறினர். ''ஒரு சமயம் பாரிசில் பல விசித்திரங்களைச் சேகரித்து வைத்திருக்கும் கண்காட்சிக்குப் போயிருந்தேன். அங்கே தாடி வளர்ந்துள்ள பெண்ணையும் பாதி மீனுகவுள்ள நாயையும் பார்த்தேன். ஒரு ஆண் பெண்ணு டைய உடைகளை அணிந்துகொண்டு தாடிப் பெண்ணுகத் தோன்றினுன். ஒரு நாயின் உட லில் ஸீல் மீனின் தோலைக் கட்டி தண்ணீர்த் தொட்டிக்குள் நீந்தவிட்டிருந்தார்கள் என் பதை அறிந்தேன். அந்தக் கண்காட்சியில் சுவாரசியமாக ஒன்றுமே இல்லை. ஆனல் நான் வெளியே வந்தபொழுது அந்தக் கண்காட்சி யை விளம்பரம் செய்பவன் என்னைச் சுட்டிக் காட்டியபடியே பொது மக்களிடம் பேசினுன்: 'இந்தக் கண்காட்சியைப் பார்க்கலாமா வேண் டாமா என்று இந்த கனவானிடம் கேளுங்கள்! அனுமதிச் சீட்டுகளை வாங்குங்கள்! அனுமதிச் சீட்டுகளை வாங்குங்கள்! விலை ஒரு பிராங்க் தான்!' என்ருன். அந்தக் கண்காட்சி பார்க்கத் தகுதியில்லாதது என்று கூறுவதற்கு எனக்கு வெட்கமாக இருந்தது. அந்த விளம்பரக்கார னுக்கு அது புரிந்திருக்க வேண்டும். தேநிலவு என்னும் அருவருப்பான அனுபவத்துக்கு ஆளானவர்களும் இதே மாதிரியானவர்கள் தான் என்று கருதுகிறேன். மற்றவர்களின் நம் பிக்கையைக் கெடுப்பதற்கு அவர்கள் விரும்பு வதில்லை. நானும் மற்றவர்களுடைய நம்பிக்

கையைக் குலேக்காமல் தான் இருந்தேன். ஆனால் இப்பொழுது உண்மையை மறைப்பதற்கு ஒரு காரணமும் கிடையாது என்பதைப் பார்க்கிறேன். உண்மையை எடுத்துக் கூறுவது என்னுடைய கடமை என்றும் கருதுகிறேன். என்னுடைய தேநிலவு சங்கடமானதாக, அவமானமாக, அருவருப்பாகவும் பரிதாபகரமாகவும் — எல்லாவற்றையும் காட்டிலும் — சலிப்புத் தருவதாகவும் இருந்தது! வர்ணிக்க முடியாத அளவுக்குச் சலிப்பாக இருந்தது. இதே மாதிரியான அனுபவம் முதன்முதலாகப் புகை பிடித்த பொழுது எனக்கு ஏற்பட்டது, எனக்கு வாந்தி வந்தது. ஆனால் அதை விழுங்கிக் கொண்டு மகிழ்ச்சியாக இருப்பதைப் போல நடித்தேன். புகை பிடிப்பதை ரசிப்பது—அது முடியுமானல் — அனுபவமடைந்த பிறகுதான் ஏற்படுகிறது. இதுவும் அதைப் போன்றதே. இந்தத் தீயொழுக்கத்திலிருந்து தம்பதிகள் ஏதேனும் இன்பமடைய வேண்டுமென்றால் அதற்குத் தங்களேப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும்.''

''தீயொழுக்கம் என்று சொல்கிறீர்களா?'' என்று நான் கேட்டேன். ''மிகவும் இயற்கையான மனித நடவடிக்கையைப் பற்றியல்லவா பேசிக்கொண்டிருக்கிறீர்கள்.''

''இயற்கையானதா?'' என்று அவர் கேட்டார். ''இயற்கையானதா? இல்லே. நான் இதற்கு எதிரான முடிவுக்கு வந்திருக்கிறேன் என்பதைச் சொல்லி விட வேண்டும். அது இயற்கைக்கு எதிரா-னது, மிகச் செயற்கை-யா-ன-து. குழந்தைகளேக் கேளுங்கள். ஒன்றுமறியாத

இளம் பெண்ணைக் கேளுங்கள். என் தங்கை மிகவும் இளம் பெண்ணாக இருந்த பொழுது அவளைக் காட்டிலும் இரண்டு மடங்கு வயதான ஒரு ஒழுக்கக்கேடனுக்கு அவளைத் திருமணம் செய்து வைத்தோம். திருமணம் முடிந்த இரவில் அவள் வெளுத்துப் போய்க் கண்ணீர் வடிய, மாட்டேன்—முடியவே முடியாது—என்று சொல்லிக் கொண்டு அவனிடமிருந்து நடுங்கியபடி ஓடி வந்தபொழுது நாங்கள் எவ்வளவு ஆச்சரியமடைந்தோம் என்பது எனக்கு நினைவிருக்கிறது. அவன் எப்படி நடந்து கொண்டான் என்பதை அவளால் வர்ணிக்கக் கூட முடியவில்லை.

''இதை இயற்கையானது என்று நீங்கள் சொல்கிறீர்கள்! இயற்கையான விஷயங்கள் இருக்கின்றன. உதாரணமாக சாப்பிடுவது தொடக்கத்திலிருந்தே இனிமையாகவும் மகிழ்ச்சியூட்டுவதாகவும் அவமானம் இல்லாததுமான விஷயம். ஆனால் இது அப்படிப்பட்டதல்ல. இது அருவருப்பானது, வெட்கக் கேடானது, வேதனையளிப்பது. இல்லை, இது இயற்கையானதல்ல! ஒழுக்கங்கெடாத பெண் எப்பொழுதும் இதை வெறுக்கிறாள் என்பதில் எனக்குச் சந்தேகம் கிடையாது.''

''ஆனால் மனித இனம் நீடிப்பது எப்படி?'' என்றேன் நான்.

''மனித இனம் கடலின் அடிமட்டத்துக்குப் போய்விடாது!'' இந்த வழக்கமான, நேர்மையற்ற மறுப்பை அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்ததைப் போல அதைக் கிண்டலாகத்

திருப்பிச் சொன்னர். ''ஆங்கிலப் பிரபுக்கள் அதிகமாகச் சாப்பிட வசதி செய்வதற்காக நீ கருத் தடையைப் பிரச்சாரம் செய்ய முடியும். விரும்பத்தகாத விளைவுகள் ஏற்படாமல் உட லின்பத்தை அனுபவிப்பதற்காகக் கருத் தடை யை நீ பிரச்சாரம் செய்ய முடியும். ஆனல் ஒழுக்கத்தின் பெயரால் கருத் தடையைப் பிரச் சாரம் செய்ய ஒருவர் வாயைத் திறந்தால் போதும், பாவம்! ஓ! எவ்வளவு கூச்சல்! ஒன்று அல்லது இரண்டு டஜன் நபர்கள் தாங்கள் பன்றிகளாக இருந்தது போதும் என்று முடிவு செய்தால், உடனே மனிதகுலம் நீடிப்பது எப் படி என்று கேட்கப்படுகிறது. மன்னியுங்கள். அந்த விளக்கு என் கண்ணை உறுத்துகிறது. அதற்கு மேல் திரையைப் போடுவதில் உங் களுக்கு ஆட்சேபமில்லையே?'' என்று விளக்கைச் சுட்டிக் காட்டிக் கொண்டு அவர் கேட்டார்.

அதனல் எனக்குச் சிரமம் கிடையாது என்று நான் கூறினேன். அவர் தனக்குரிய நடுக்க மான முறையில் பெஞ்சின் மீது ஏறி நின்று திரையை இழுத்து விளக்கை மறைத்தார்.

''உங்கள் கருத்தை எல்லோரும் பின்பற் றினல் மனித இனம் பூண்டற்றுப் போய்விடும்'' என்று நான் கூறினேன்.

அவர் உடனடியாக பதில் சொல்லவில்லை.

''மனித இனம் நீடிப்பதைப் பற்றி நீங்கள் கவலைப்படுகிறீர்களா?'' அவர் மறுபடியும் எனக்கு எதிராக உட்கார்ந்து கொண்டு, கால் களை அகலமாக விரித்து வைத்துக் கொண்டு குனிந்து முழங்கால்களின் மீது முழங்கைகளை

வைத்துக் கொண்டு கேட்டார். ''மனிதகுலம் ஏன் நீடிக்க வேண்டும்?''

''ஏன் கேட்கிறீர்கள்? இல்லையென்றால் நீங்களும் நானும் இருக்க மாட்டோமே.''

''நாம் எதற்காக இருக்க வேண்டும்?''

''எதற்காக? வாழ்வதற்காக.''

''நாம் எதற்காக வாழ வேண்டும்? வாழ்க்கையில் குறிக்கோள் இல்லையென்றால், வாழ்வது மட்டுமே குறிக்கோளாக இருந்தால் வாழ்க்கையில் எந்த நோக்கமும் இல்லாமற் போய்விடுகிறது. இது உண்மையென்றால் ஷோப்பென்ஹாவுரும் ஹார்த்மானும் பௌத்தர்களும் சொல்வது முற்றிலும் சரியானதே. ஆனால் வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் இருந்தால் அந்தக் குறிக்கோள் நிறைவேறியதும் வாழ்க்கை முடிவடைந்து விட வேண்டும் என்பது தெளிவாகும். அதுதான் ஒரே முடிவு'' என்று அவர் உணர்ச்சிவசப்பட்டுக் கூறினர். இந்தக் கருத்தை அவர் மிகவும் முக்கியமாகக் கருதினர் என்பது வெளிப்படையாகும். ''அதுதான் ஒரே முடிவு. இதைச் சிந்தியுங்கள். மனித வாழ்க்கையின் நோக்கம் நன்மையும் நலமும் காதலும் என்றால், மத நூல்களில் சொல்லப்பட்டிருப்பவை—எல்லா மக்களையும் அன்பு ஒன்றுபடுத்தும், போர்வாளுக்குப் பதிலாகக் கலப்பைகள் வரும், இன்னும் இதரவை—மனித வாழ்க்கையின் குறிக்கோள் என்றால் இந்தக் குறிக்கோளை நாம் சாதிக்க முடியாதபடி தடுப்பது என்ன? நம்முடைய பேராசைகள்தான். எல்லாப் பேராசைகளிலுமே மிகவும் வலிமையானது,

மிகவும் தீங்கானது, விடாப்பிடியானது சிற்றின்ப வேட்கையே, பாலுணர்ச்சியே. எனவே பேராசைகளை — குறிப்பாக அவற்றிலேயே மிகவும் வலிமையான உடலின்ப உணர்ச்சியை —கட்டுப்படுத்திவிட்டால் மத நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் முன்னறிவிப்புகள் நிறைவேறும், மனிதகுலம் ஒன்ருக இணைக்கப்படும், மனித வாழ்க்கையின் குறிக்கோள் நிறைவேறும். அதற்குப் பிறகு மனிதகுலம் வாழ்வதற்கு எந்த இலட்சியமும் எஞ்சியிருக்காது. மனிதகுலம் இருக்கும் வரை ஒரு இலட்சியம் அதற்கு எழுச்சியைத் தருகிறது. அது இயன்றவரை குட்டிகளைப் பெற வேண்டும் என்ற பன்றிகள், முயல்களின் இலட்சியம் அல்ல. உடலுறவின் மூலம் மிகவும் நயமான இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்ற குரங்குகள் மற்றும் பாரிஸ் நகரவாசிகளின் இலட்சியமாகவும் இருக்காது. புலனடக்கத்தாலும் தூய்மையாலும் சாதிக்கப்படும் நல்லனவே அந்த இலட்சியமாகும். மனிதர்கள் எப்பொழுதுமே இந்த இலட்சியத்தை அடைய முயன்று வந்திருக்கிருர்கள், இனியும் எப்பொழுதும் முயற்சி செய்வார்கள். ஆனுல் அதிலிருந்து வருவது என்ன என்று பாருங்கள்.

''அதிலிருந்து இதுதான் வருகிறது. உடற்பசி ஒரு பாதுகாப்பு விசை என்று கருதுவதாகத் தோன்றுகிறது. இன்றைய தலை முறையால் மனிதகுலத்தின் இலட்சியத்தை அடைய முடியவில்லை. அதன் பேராசைகளால்தான் அந்த இலட்சியத்தை அடைய முடியவில்லை. அந்தப் பேராசைகளில் மிகவும் வலிமையானது பாலு

ணர்ச்சியே. பாலுணர்ச்சி ஒரு புதிய தலை முறையை உற்பத்தி செய்கிறது. இந்த இலட்சியத்தை அடைகின்ற வாய்ப்பு இந்தப் புதிய தலை முறைக்குத் தரப்படுகிறது. ஆனால் அந்தப் புதிய தலை முறையாலும் இலட்சியத்தை அடைய முடியவில்லை, எனவே அந்த வாய்ப்பு அடுத்த தலை முறைக்கு, அதற்கடுத்த மற்றும் அதற்கடுத்த தலை முறைக்குக் கொடுக்கப் படுகிறது. இது இலட்சியத்தை அடைகின்ற வரை, முன்னறிவிப்புகள் நிறைவேறும் வரை, மனிதகுலம் ஒன்றாகச் சேரும் வரை இப்படியே தொடர்கிறது. வேறு எப்படி நடைபெற முடியும்? ஒரு குறிப்பிட்ட இலட்சியத்தை அடைவதற்காகக் கடவுள் மனிதர்களை—ஆனால் அவர்களை அழியக் கூடியவர்களாகவும் பாலுணர்ச்சி இல்லாதவர்களாகவும் அல்லது அழிவில்லாதவர்களாகவும் — படைத்திருக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அவர்களை அழியக் கூடியவர்களாகவும் பாலுணர்ச்சி இல்லாதவர்களாகவும் படைத்திருந்தால் என்ன விளைவு ஏற்படும்? அவர்கள் இலட்சியத்தை அடையாமல் வாழ்ந்துகொண்டிருப்பார்கள், பிறகு மடிந்து விடுவார்கள். இலட்சியத்தை அடைவதற்குக் கடவுள் புதிய மனிதர்களைப் படைக்க வேண்டியிருக்கும். கடவுள் அவர்களை அழிவில்லாதவர்களாகப் படைத்திருந்தால் (புதிய மனிதர்கள் தங்கள் முன்னோர்களின் தவறுகளைத் திருத்திக்கொண்டு பூரணத்துவத்தை எட்டுவதைக் காட்டிலும் ஒரே விதமான மக்கள் தமது தவறுகளைத் திருத்திக் கொள்

வது கடினம் என்ருலும்) பல்லாயிரக் கணக்கான வருடங்களுக்குப் பிறகு அவர்கள் தங்களுடைய குறிக்கோளை அடைவார்கள் என்பது சாத்தியம், ஆம், அது சாத்தியமானதே. ஆனால் அதற்குப் பிறகு இந்த அழிவில்லாத மனிதர்களால் என்ன பலன்? அவர்களை எதற்குப் பயன்படுத்த முடியும்? ஒரு உபயோகமும் இருக்காது. அவர்கள் உதவி இல்லாமலேயே எல்லாம் நன்ருக இருக்கிறது... ஆனால் நான் பிரச்சினையை இப்படி முன்வைப்பதை நீங்கள் ஆட்சேபிக்கிறீர்களா? ஒருவேளை நீங்கள் பரிணாமவாதியா? எப்படி இருந்தாலும் விளைவு ஒன்றுதான். உயிர்ப் பிராணிகளின் உயர்ந்த வடிவமான மனிதர்கள் மற்ற விலங்குகளை எதிர்த்துப் போராடி உயிர் வாழ்வதற்குத் தேனீக் கூட்டத்தைப் போல ஒன்று சேர வேண்டும். அவர்கள் முடிவில்லாத இனப்பெருக்கத்தில் ஈடுபடக் கூடாது. தேனீக்களைப் போல மனிதர்களும் பாலுணர்ச்சி இல்லாத தனிநபர்களை உற்பத்தி செய்ய வேண்டும். அதாவது கற்பைக் காப்பாற்ற வேண்டும். நம் சமூகத்தில் இன்று செய்யப்படுவதைப் போல உடலின்பத்தில் மூழ்கி விடக் கூடாது''. அவர் ஒரு விஞடி பேச்சை நிறுத்திஞர். ''மனிதகுலத்தின் முடிவு? ஒருவருடைய கருத்துக்கள் எப்படி இருந்த போதிலும் எந்த நபராவது மனிதகுலத்தின் முடிவு தவிர்க்க முடியாதது என்பதைச் சந்தேகிக்க முடியுமா? அது மரணத்தைப் போல நிச்சயமானது. எல்லாப் புனித போதனைகளும் உலகத்தின் முடிவை முன்னறிவிக்கின்றன, எல்லா

விஞ்ஞான போதனைகளும் அதையே கூறுகின்றன. அறநெறிப் போதனைகளும் அதே முடிவைச் சுட்டிக் காட்டுவது விசித்திரமானதா?''

இதற்குப் பிறகு அவர் வெகுநேரம் வரை அமைதியாக இருந்தார். மறுபடியும் தேநீர் குடித்தார், சிகரெட்டைப் புகைத்து முடித்தார், தன் பையிலிருந்து இன்னும் சிகரெட்டுகளை எடுத்துத் தன்னுடைய பழைய, அழுக்குப்பிடித்த சிகரெட் பெட்டியில் வைத்துக் கொண்டார்.

''உங்கள் கருத்து எனக்குப் புரிகிறது. குவேக்கர்களும் இதே மாதிரியான கருத்துக் கொண்டிருக்கிறார்கள்.''

''அவர்கள் கருத்து சரியானதே. உடலின்ப வெறி—எந்த வடிவத்தில் அது வெளிப்பட்டாலும்—ஒரு தீமை, பயங்கரமான தீமை. அதை நாம் எதிர்த்துப் போராட வேண்டுமே தவிர இப்பொழுது நாம் செய்வதைப் போல ஊக்குவிக்கக் கூடாது. யார் ஒரு பெண்ணைக் காமத்தோடு பார்க்கிறாரோ அவர் ஏற்கெனவே அப்பெண்ணோடு கூடா ஒழுக்கத்தில் ஈடுபட்டு விட்டார் என்பது மற்ற ஆண்களின் மனைவிகளுக்கல்ல, முதலாவதாக, நம்முடைய மனைவிகளுக்காகவும் சொல்லப்பட்டதே.''

## 12

''நம் உலகத்தில் எல்லாமே அதற்கு எதிரிடையாக இருக்கிறது. ஒரு ஆண் திருமணம் செய்வதற்கு முன் புலனடக்கத்தைக் கடைப்

பிடித்தால், திருமணமானவுடன் புலனடக்கம் அவசியமல்ல என்று நினைக்கிறார். திருமணத் துக்குப் பிறகு அவர்களுடைய பிரயாணங்கள், பெற்றோர்களின் ஒப்புதலோடு—அது ஒழுக்கக் கேட்டுக்குத் தரப்படுகின்ற ஒப்புதலைத் தவிர வேறு ஒன்றுமில்லை—இளம் தம்பதிகள் தனியறைக்குள் போவது, இவையெல்லாம் எதற்கு? ஆனால் ஒழுக்க விதிகளை மீறினால் அவை தம் தண்டனையைக் கொடுத்துவிடுகின்றன. எங்களுடைய கொண்டாட்டத்தைத் தேநிலவாக மாற்றுவதற்கு நான் எவ்வளவு பாடுபட்ட போதிலும் வெற்றி அடையவில்லை. முதலிலிருந்து கடைசி வரை அது வெட்கக்கேடான தாக, அருவருப்பானதாக, சலிப்பூட்டுவதாக இருந்தது. ஆனால் வெகு சீக்கிரத்தில் அது இன்னும் சங்கடம் நிறைந்ததாயிற்று. சீக்கிரத் திலேயே, மூன்றாவது நாள் அல்லது ஒருவேளை நான்காவது நாள் என் மனைவி சோர்வாக இருப்பதைக் கண்டேன். என்ன காரணம் என்று கேட்டேன். அவளைத் தடவிக் கொடுத்தேன், அவள் அதை விரும்புகிறாள் போலும் என்று நினைத்து. ஆனால் அவள் என் கையைத் தட்டிவிட்டு அழத் தொடங்கினாள். ஏன்? அவளால் சொல்ல முடியவில்லை. அவளிடம் மகிழ்ச்சியில்லை, அவள் வருத்தத் தோடிருந்தாள். எங்கள் உறவுகள் எவ்வளவு அருவருக்கத் தக்கவை என்ற உண்மையை அவளுடைய நாடி நரம்புகள் அவளுக்குத் தெரிவித்திருக்க வேண்டும். ஆனால் அவள் அதைச் சொல்ல முடியவில்லை. நான் அவளை வற்புறுத்தினேன். தாயாரைப் பார்க்க

வேண்டும் என்று ஏதோ முணுமுணுத்தாள். அவள் உண்மையைச் சொல்லவில்லை என்று நான் நினைத்தேன். அவள் பதிலைப் பொருட்படுத்தாமல் மேலும் அவளைத் தாஜா செய்யத் தொடங்கினேன். அவள் மன வருத்தமடைந்திருக்கிருள், தன் தாயாரை ஒரு சாக்காகச் சொல்கிருள் என்பதை நான் புரிந்து கொள்ளவில்லை. அவள் தாயாரைப் பற்றிச் சொன்னதை நான் பொருட்படுத்தாததற்காக—நான் அவளை நம்பவில்லை என்பதைப் போல—அவள் என் மீது ஆத்திரமடைந்தாள். நான் அவளைக் காதலிக்கவில்லை என்பது நிச்சயம் என்று சொன்னுள். அவள் ஏறுமாருக நடந்து கொள்வதாக நான் குறை கூறினேன். அவள் முகம் திடீரென்று அப்படியே மாறிவிட்டது. அவள் முகத்தில் வருத்தம் மறைந்து எரிச்சல் ஏற்பட்டது, நான் சுயநலமாகவும் இரக்கமில்லாமலும் நடந்து கொள்வதாக மிகவும் புண்படுத்தக் கூடிய சொற்களால் என்னைக் குற்றஞ்சாட்டத் தொடங்கினுள். நான் அவளை ஏறிட்டுப் பார்த்தேன். அவள் முகம் அப்படியே உறைந்து போயிருந்தது, குரோத உணர்ச்சி நிறைந்திருந்தது. அவள் அநேகமாக என்னை அடியோடு வெறுத்தாள் என்பதைக் காட்டியது. நான் எவ்வளவு அதிர்ச்சியடைந்தேன் என்பது இன்னும் நினைவிருக்கிறது. 'இது ஏன்? காதலுக்குப் பதிலாக, ஆன்மாக்கள் இணைவதற்குப் பதிலாக—இது ஏன்? இது அசாத்தியம். அவளுக்கு ஏதோ ஏற்பட்டிருக்கிறது!' என்று நினைத்தேன். அவளைச் சமாதானப்படுத்த முயற்சி

செய்தேன், ஆனால் ஈரமில்லாத, எரிச்சல் நிறைந்த பகைமை என்ற தகர்க்க முடியாத சுவர் எனக்கு முன்னால் நிற்பதைப் பார்த்தேன். என்னையறியாமலே எனக்கு ஆத்திரம் பொங்கி விட்டது. நாங்கள் ஒருவருக்கொருவர் தாறு மாருகப் பேசிக் கொண்டோம். அந்த முதல் சண்டை என் மீது பயங்கரமான விளைவை ஏற்படுத்தியது. நான் அதைச் சண்டை என்று குறிப்பிட்ட போதிலும் உண்மையில் அது சண்டை அல்ல. எங்களுக்கிடையே இருந்த மாபெரும் இடை வெளியை அது எடுத்துக் காட்டியது. எங்கள் பசி திருப்தியடைந்தவுடன் எங்கள் காதல் ஓய்ந்து விட்டது. இப்பொழுது எங்களுடைய உண்மையான உறவில் ஒருவருக் கொருவர் எதிரே நின்று கொண்டிருந்தோம். ஒருவரிடமிருந்து மற்ருெருவர் மிக அதிக மான அளவுக்கு உடற்பசியைத் தீர்க்க மட்டுமே விரும்பிய முற்றிலும் அந்நியமான, சுய நலமான இரண்டு தனி நபர்கள் என்பதே அந்த உறவாகும். எங்களுக்கிடையே நடந்த தைச் சண்டை என்று கூறினேன். ஆனல் அது சண்டை அல்ல. எங்கள் உடற்பசி தீர்க்கப் பட்ட பிறகு உண்மையான உறவு வெளிப்பட் டது ஈரமேயில்லாத பகைமை என்ற இந்த அணுகுமுறை எங்களுக்கிடையே சகஜமான உறவு என்பதை நான் உணரவில்லை. வெகு சீக்கிரத்தில் காதல், உடலின்பம் என்ற புதிய அலையில் மூழ்கியபொழுது அது இந்தப் பகை மையான அணுகுமுறையை நான் பார்க்க இய லாதபடி தடுத்தது.

''நாங்கள் சண்டை போட்டுக்கொண்டோம், பிறகு சமாதானமாகி விட்டோம், இனி இப் படிப்பட்ட காரியத்தில் ஒருபோதும் ஈடுபட மாட்டோம் என்று நான் நினைத்தேன். ஆனால் இந்தத் தேநிலவின் முதல் மாதத்தில் நாங்கள் அடுத்தபடியாக ஒரு திகட்டும் கட்டத்தை—அந்தக் கட்டத்தில் நாங்கள் ஒருவருக்கொருவர் இனி அவசியமில்லாதவர்களாகி விட்டோம்—வெகு சீக்கிரத்தில் அடைந்தோம். இது மறு படியும் ஒரு சண்டையைத் தூண்டியது. முதல் சண்டையைக் காட்டிலும் இரண்டாவது சண் டை எனக்கு அதிகமான வேதனையைக் கொடுத்தது. முதல் சண்டை தற்செயலாக ஏற்படவில்லை; அது எதிர்பார்த்திருக்கப்பட வேண்டிய ஒன்றுதான், அது மறுபடியும் நிச்சய மாக ஏற்படும் என்று நான் நினைத்தேன். இரண் டாவது சண்டை எனக்கு மிகவும் அதிர்ச்சியைக் கொடுத்தது. ஏனென்றால் ஏதோ மிகவும் அற் பமான காரணத்துக்காக—பணம் சம்பந்தமாக—அது ஏற்பட்டது. பண விஷயத்தில் நான் ஒருபோதும் கஞ்சத்தனமாக நடந்துகொண்ட தில்லை. அதிலும் என் மனைவியிடம் அப்படி நடந்து கொண்டிருக்க மாட்டேன். நான் சொன்னதற்கு அவள் வேறு அர்த்தம் கொடுத் தாள். என்னுடைய பணத்தினால் அவள் மீது எனக்கு அதிகாரம் ஏற்பட்டிருக்கிறது, என் பணத்தை விருப்பப்படி செலவழிக்க எனக்கு மட்டுமே உரிமையுண்டு அல்லது இவற்றைப் போல மோசமாகவும் முட்டாள்தனமாகவும் எங்கள் இருவருக்குமே தகுதியற்ற விதத்திலும்

நான் பேசியதைப் போல திரித்துக் கூறினாள். எனக்குக் கோபமேற்பட்டது, மரியாதை இல்லாமல் பேசுவதாக அவளைக் குற்றம் சாட்டினேன். அவள் திருப்பிப் பேசினாள். மறுபடியும் சண்டைதான். முதல் தடவை எனக்கு அதிர்ச்சியை ஏற்படுத்திய அதே ஈரமற்ற, இரக்கமில்லாத பகைமையை அவளுடைய வார்த்தைகளில், அவளுடைய முகத்திலும் கண்களிலுமிருந்த பாவத்தில் நான் மறுபடியும் பார்த்தேன். என்னுடைய சகோதரனோடு, நண்பர்களோடு, என் தகப்பனாரோடு கூட—சண்டை போட்டுக்கொண்டது எனக்கு நினைவிருக்கிறது. ஆனால் இங்கே பார்த்த அந்தப் பிரத்யேகமான, நஞ்சுபோன்ற பகைமை அங்கே ஒருக்காலும் இருந்ததில்லை. கால ஓட்டத்தில் இந்தப் பரஸ்பர வெறுப்பு காதல் நிலைமையால் அதாவது பாலுணர்ச்சியால் மறுபடியும் மறைக்கப்பட்டது. அந்த இரண்டு சண்டைகளும் தவருக ஏற்பட்டவை, அவற்றைத் திருத்திக்கொள்ள முடியும் என்று மறுபடியும் என்னை சமாதானப்படுத்திக் கொண்டேன். ஆனால் மூன்ருவது, நான்காவது சண்டைகளும் ஏற்பட்டன. இவை தற்செயலான விபத்துக்கள் அல்ல, அவற்றை அப்பொழுது மட்டுமல்ல, எதிர்காலத்திலும் தவிர்க்க முடியாது என்பது எனக்கு நிரந்தரமாகப் புரிந்தது. எதிர்காலத்தைப் பற்றி நினைப்பதற்கே எனக்குப் பயமாக இருந்தது. நாங்களிருவர் மட்டுமே இப்படி மோசமான குடும்ப வாழ்க்கை நடத்துகிரேம், மற்றவர்களின் திருமணங்கள் வெற்றிகரமாக இருக்கின்றன என்ற

எண்ணம் என்னை மேலும் சித்திரவதை செய்தது. எல்லோருடைய கதியும் இதுவே, என்னுடைய துன்பம் ஒரு விதிவிலக்கு என்று நான் நினைத்ததைப் போலவே எல்லோரும் நினைக்கிருர்கள், இந்தத் தனிவகையான, அவமானகரமான துன்பத்தை ஒத்துக்கொள்ளாமல் மற்றவர்களிடமிருந்து மட்டுமல்ல, தங்களிடமிருந்தும் மறைத்துக்கொள்கிருர்கள் என்பது அப்பொழுது எனக்குத் தெரியாது.

''நாங்கள் திருமணம் செய்து கொண்ட உடனே தொடங்கிய பகைமை மென்மேலும் ஆழமாகவும் இரக்கமற்ற வகையிலும் வளர்ச்சியடைந்தது. முதல் வாரத்திலேயே நான் அகப்பட்டுவிட்டேன். நான் எதிர்பார்த்தது நிச்சயமாக இதுவல்ல, திருமணம் ஒரு இன்பமாக இருப்பதற்குப் பதிலாக மாபெரும் துன்பமாகிவிட்டது என்பதை என் இதயத்தின் ஆழத்தில் உணர்ந்தேன். ஆனல் மற்ற எல்லோரையும் போலவே, நானும் அதை ஒத்துக்கொள்ள விரும்பவில்லை (அது இப்படி முடிந்திருக்காவிட்டால் நான் இப்பொழுதும் அதை ஒத்துக்கொண்டிருக்க மாட்டேன்). நான் உண்மையை மற்றவர்களிடமிருந்து மட்டுமல்லாமல் என்னிடமும் மறைத்துக் கொண்டேன். எவ்வளவு நீண்ட காலம் வரை உண்மையைப் பார்க்கத் தவறி விட்டேன் என்பது இப்பொழுது எனக்குத் திகைப்பளிக்கிறது. எங்கள் சண்டைகள் மிக அற்பமான விஷயங்களிலிருந்து தொடங்கின, பிறகு எங்களால், அவற்றை நினைவுபடுத்திக் கொள்ளக் கூட முடியவில்லை என்ற

உண்மையே எனக்கு எல்லாவற்றையும் தெளிவாகக் காட்டியிருக்க வேண்டும். நாங்கள் நிரந்தரமான விரோதியாக இருந்ததற்குக்கனமான காரணங்களைக் கண்டுபிடிப்பதற்கு எங்கள் பகுத்தறிவுக்குச் சந்தர்ப்பம் கொடுக்கப்படவில்லை. ஆனால் நாங்கள் சமரசம் செய்து கொண்டபொழுது சொல்லிக் கொண்ட போலிக் காரணங்கள் இதைக் காட்டிலும் அதிர்ச்சியைத் தரக் கூடியவை. வார்த்தைகள், விளக்கங்கள்... சில சமயங்களில் கண்ணீரும் வடிப்பதுமுண்டு, ஆனால் மற்ற சமயங்களில்... அட கடவுளே! அதை நினைப்பதற்கே இப்பொழுது கூட அருவருப்பாக இருக்கிறது —ஒருவருக்கொருவர் மிகவும் அன்பில்லாமல் ஏச்சுக்களைப் பரிமாறிக் கொண்ட பிறகு, திடீரென்று மௌனம், பார்வைகள், சிரிப்புகள், முத்தங்கள், தழுவிக்கொள்ளுதல்... சீ! என்ன அருவருப்பு! இந்த அருவருப்பை எல்லாம் அப்பொழுது நான் எப்படிப் பார்க்கத் தவறினேன்?..''

## 13

இரண்டு பிரயாணிகள் உள்ளே நுழைந்து வண்டியின் கடைசிக் கோடியிலிருந்த இடங்களில் உட்கார்ந்தார்கள். அவர்கள் உட்கார்கின்ற வரையிலும் அவர் பேச்சை நிறுத்தினார், பிறகு ஒரு கணம் கூட சிந்தனை ஓட்டத்தை இழந்துவிடாமல் மறுபடியும் தொடங்கினார்.

''இதில் மிகவும் அருவருப்பானது என்ன

வென்றால்'' என்று அவர் தொடங்கினர். ''காதல் இலட்சியபூர்வமானது, மிகவும் மேன்மையானது என்று கருதப்படுகிறது, ஆனல் அது உண்மையில் மிகக் கீழ்மையானதாகவும் பன்றிகளுடைய குணமாகவும் இருப்பதால் அதைப் பற்றிப் பேசுவது அல்லது சிந்திப்பது கூடக் கேவலமாகவும் அவமானகரமாகவும் இருக்கிறது. இயற்கை அதைக் கேவலமாகவும் அவமானகரமாகவும் வைத்திருப்பதற்குக் காரணம் இருக்க வேண்டும். அது கேவலமான தாகவும் அவமானகரமானதாகவும் இருந்தால் அதை அப்படித்தான் புரிந்து கொள்ள வேண்டும். ஆனல் எது கேவலமானதாகவும் அவமான கரமானதாகவும் இருக்கிறதோ அது அழகானது, மேன்மையானது என்று மக்கள் பாசாங்கு செய்கிறார்கள். என்னுடைய காதலின் முதற் சின்னங்கள் எவை? சிறிது கூட வெட்கமேயில்லாமல் நான் மிருகத்தைப் போலக் காமவெறியில் மிதந்தேன். என்னுடைய கலவிச் சக்தியைப் பற்றிப் பெருமையாகக் கூட நினைத்துக் கொண்டேன். நான் அவளுடைய ஆன்மிக அல்லது உடல் நலத்தைப் பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. எங்களுடைய கோபம் எங்கிருந்து வந்தது என்று நான் ஆச்சரியமடைந்தேன். அது வேறு மாதிரியாக இருக்க முடியாது. இப்படி மிருக வெறிக்கு உட்படுத்தப்படுவதை எங்களுடைய மனித இயல்பு எதிர்த்தது அந்த எரிச்சலுக்குக் காரணமே தவிர வேறென்றுமில்லை. என் மனைவி இந்த மிருகவெறிக்கு உட்பட்டிருந்தாள்.

''நாங்கள் ஒருவரையொருவர் வெறுத்தது எனக்கு வியப்பாக இருந்தது. ஆனால் அதைத் தவிர வேறு எதையும் எதிர்பார்த்திருக்க முடியாது. ஒரு குற்றத்தைச் செய்த—ஆம் குற்றத்தைத் தூண்டிவிட்டு நிறைவேற்றிய — இரண்டு தரப்பினரிடமும் ஏற்படுகின்ற பரஸ்பர வெறுப்பே அது. அவள், அந்த அப்பாவிப் பெண் முதல் மாதத்திலேயே கர்ப்பமானாள், ஆனால் எங்களுடைய மிருக உறவுகள் தொடர்ந்தன என்றால் அது குற்றமாகத் தோன்றவில்லையா? இந்தக் கதைக்கு இவை அனைத்தும் சம்பந்தமில்லாதவை என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இல்லவே இல்லை! என் மனைவியை நான் எப்படிக் கொன்றேன் என்பதையெல்லாம் நான் உங்களிடம் சொல்கிறேன். நீதிமன்றத்தில் நான் எப்படி எந்த ஆயுதத்தைக் கொண்டு அவளைக் கொன்றேன் என்று கேட்டார்கள். முட்டாள்கள்! நான் அக்டோபர் 5ந் தேதியன்று ஒரு கத்தியால் அவளைக் கொன்றேன் என்று அவர்கள் நினைத்தார்கள். நான் அவளை அப்பொழுது கொலை செய்யவில்லை, அதற்கு மிகவும் முன்பாகவே கொன்றுவிட்டேன். எல்லோரும்—ஆம்! எல்லோரும் — செய்து கொண்டிருக்கும் அதே முறையில்தான் நான் அவளைக் கொன்றேன்...''

''ஏன் அப்படிச் செய்தீர்கள்?'' என்று நான் கேட்டேன்.

''அதுதான் ஆச்சரியம்! யாரும் இந்தச் சாதாரணமான, எளிமையான உண்மையை ஒத்துக்கொள்ள விரும்புவதில்லை. இந்த உண்

மை டாக்டர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும், அவர்கள் இதைப் பிரச்சாரம் செய்ய வேண்டும். ஆனால் அவர்கள் இதைப் பற்றி மௌனம் சாதிக்கிறார்கள். இந்தப் பிரச்சினை மிகவும் எளிமையானது. தாம்பத்திய உறவின் பலனாகக் கரு ஏற்படுகிறது, பிறகு குழந்தைக்குப் பால் கொடுக்க வேண்டும். அந்தக் கட்டத்தில் தாம்பத்தியம் தாயார், குழந்தை இருவருக்குமே ஆபத்தானது. இந்த விஷயத்தில் ஆண்களும் பெண்களும் மிருகங்களைப் போன்றவர்கள் தான். ஆண்களும் பெண்களும் சம எண்ணிக்கையில் அளவில் இருக்கிறார்கள். அது எதைச் சுட்டிக் காட்டுகிறது? அது மிகத் தெளிவானது என்று நினைக்கிறேன். விலங்குகள் கண்டுபிடித்திருக்கும் முடிவை, அதாவது புலனடக்கம் அவசியம் என்ற முடிவுக்கு வர அதிகமான அறிவு தேவைப்படாது. ஆனால் நாம் அந்த முடிவுக்கு வரவில்லை. விஞ்ஞானிகள் எத்தனையோ உபயோகமில்லாத பொருள்களை, உதாரணமாக இரத்தத்தில் நீந்திக் கொண்டிருக்கும் அணுக்களைக் கூடக் கண்டு பிடிக்கும் மதிநுட்பம் பெற்றிருக்கிறார்கள். ஆனால் அவர்களால் இதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர்கள் இதைப் பற்றிப் பேசியதைக் குறைந்தபட்சம் நான் கேட்கவில்லை.

''எனவே ஒரு பெண் தப்பிக்க வேண்டுமென்றால் இரண்டு வழிகள் மட்டுமே உள்ளன. ஒன்று, ஒரு பெண் தன் கணவன் விரும்பும் பொழுதெல்லாம் இன்பம் அனுபவிக்க வேண்டுமென்பதற்காக, பெண்ணாக அதாவது தாயாக இருப்பதற்

குரிய தன்னுடைய தகுதியை ஒரேயடியாகவோ அல்லது படிப்படியாகவோ அழித்துத் தன்னைச் சிதைத்துக் கொள்ள வேண்டும். இரண்டாவது வழி—அதை அநேகமாக ஒரு வழியென்றே சொல்ல முடியாது. பச்சையாகச் சொல்வதென்றால் அது இயற்கை விதிகளைக் கீழான முறையிலும் நேரடியாகவும் மீறுவதே. சிறந்த குடும்பங்கள் என்று சொல்லப்படுகின்ற எல்லாக் குடும்பங்களிலும் இதைத்தான் செய்கிறார்கள். ஒரு பெண்—அவளுடைய இயல்புக்கு மாறான வகையில் — ஒரே சமயத்தில் கர்ப்பவதியாகவும், குழந்தையை வளர்க்கும் தாயாகவும் தன்னுடைய கணவனுக்கு மனைவியாகவும் இருக்க வேண்டும் என்பது இதன் பொருள். இந்தக் கட்டளையை ஒரு விலங்கு கூட ஏற்காது. அந்தப் பெண்ணிடம் அதற்குத் தேவையான சக்தி கூடக் கிடையாது. அதனால் தான் நம்முடைய வர்க்கங்களைச் சேர்ந்த பெண்கள் நரம்புத்தளர்ச்சி உடையவர்களாகவும் உணர்ச்சி வசப்பட்டவர்களாகவும் ஆகிவிடுகிறார்கள். உழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்த பெண்கள் சண்டைக்காரிகளாக இருக்கிறார்கள். இளம் பெண்கள், ஒன்றும் அறியாத இளம் பெண்கள் ஒருபோதும் சண்டைக்காரிகளாக இருப்பதில்லை என்பதை கவனியுங்கள். பெண்கள், அதிலும் கணவர்களைக் கொண்ட பெண்கள் மட்டுமே அப்படி ஆகிவிடுகிறார்கள். இது நம் மக்களைப் பற்றிய உண்மை. இது ஐரோப்பியர்களுக்கும் பொருந்தக்கூடிய உண்மையே. இயற்கை விதிகளை மீறி நோயாளிகளாக்கப்பட்ட பெண்கள் மருத்துவ

மனேகள் முழுவதும் நிறைந்திருக்கிருர்கள். ஆனல் சண்டைக்காரிகளும் டாக்டர் ஷர்கோ வின் நோயாளிகளும் முழுப் பைத்தியத்துக்கு ஆளாகிவிட்ட பெண்கள். இன்னும் இந்தக் கட் டத்துக்குவராத பெண்கள் உலகத்தில் ஏராள மாக இருக்கிருர்கள். ஒரு பெண் தன் கருப்பை யில் சிசுவை வளர்த்து, தான் பெற்ற குழந் தைக்குப் பாலூட்டி வளர்க்கும் செயல் எவ் வளவு புனிதமானது! நம்முடைய வாரிசுகளே, மனிதகுலத்தை நீடிக்கச் செய்பவர்களே அவள் படைக்கிருள். இந்தப் புனிதச் செயலில் குறுக் கிடுவது என்ன? அதை நினைக்கவே அருவருப் பாக இருக்கிறது! அவர்கள் இன்னும் பெண் குலத்தின் விடுதலேயைப் பற்றி, உரிமைகளேப் பற்றிப் பேசுகிருர்கள். மனிதர்களேச் சாப்பிடு கின்ற காட்டுமிராண்டிகள் தாங்கள் கொலே செய்யப் போகின்ற மனிதர்களுக்கு உணவும் ஊட்டமும் தருகின்ற பொழுதே உங்களுடைய உரிமைகளேயும் சுதந்திரத்தையும் பற்றி நாங் கள் அக்கறை கொண்டிருக்கிரேம் என்று சொல் வதைப் போன்றதே இதுவும்.''

அவருடைய கருத்துக்கள் எனக்குப் புதுமை யாகவும் அதிர்ச்சி தருபவையாகவும் இருந் தன.

''அப்படியானல் என்ன செய்வது? நீங்கள் சொல்வது உண்மை என்ருல் ஒரு ஆண் தன் மனேவியோடு இரண்டு வருடங்களுக்கு ஒரு தடவை மட்டுமே சல்லாபிக்க முடியும். ஆனல் ஆண்...''

''ஆண்களுக்கு அது அவசியம்'' என்று அவர்

குறுக்கிட்டார். ''சிறப்புமிக்க 'சூனியக்காரர்கள்,' இதை நம்பும்படி எல்லோரையும் செய்துவிட்டார்கள். ஆண்களுக்குப் பெண்கள் அவசியம் என்று சொல்லும் இந்தச் சூனியக்காரர்களைப் பெண்களின் கடமைகளை நிறைவேற்றுமாறு கட்டாயப்படுத்திஞல் அவர்கள் என்ன சொல்வார்களோ? ஒரு மனிதனிடம் வோட்கா, புகையிலை, கஞ்சா மூன்றும் உனக்கு அவசியம் என்று சொல்லிப் பாருங்கள். அவை அப்படியே அவசியமான பொருள்களாகிவிடும். என்ன வேண்டுமென்று கடவுளுக்குத் தெரியாது என்பது போல இருக்கிறது. அதனுல்தான் இது அவசியம் என்று அவர் மோசமாக ஏற்பாடு செய்தார். அந்தச் சூனியக்காரர்களையும் கூட அவர் கலந்து கொள்ளவில்லை. இந்த விஷயங்கள் ஒன்றுக்குள் ஒன்று பொருந்துவதில்லை என்பதைப் பாருங்கள். ஆண்கள் காமவெறியைத் தீர்த்துக் கொள்ளாமல் உயிரோடிருக்க முடியாது என்று சூனியக்காரர்கள் (டாக்டர்கள்) முடிவு செய்திருக்கிருர்கள். ஆனுல் பிரசவமும் குழந்தை வளர்ப்பும் ஆண்களுடைய காமவெறியைத் தீர்ப்பதில் குறுக்கிடுகின்றன. இதற்கு என்ன செய்ய வேண்டும்? சூனியக்காரர்களைக் கேளுங்கள்! அவர்கள் எல்லாவற்றையும் ஒழுங்கு படுத்திவிடுவார்கள். அவர்கள் அப்படியே செய்தார்கள். ஓ! அப்படிப்பட்ட டாக்டர்கள் மற்றும் சூனியக்காரர்கள்-அவர்களுடைய பொய்கள் எப்பொழுது அம்பலமாகும்? அதற்குத் தக்க நேரம் இதுவே! இதன் காரணமாக மக்களுக்குப் பைத்தியமேற்பட்டு அவர்

கள் தங்களேச் சுட்டுக் கொள்கின்ற கட்டம் வந்துவிட்டது. எல்லாவற்றுக்கும் இதுதான் காரணம். அது வேறு எப்படி இருக்க முடியும்? தம் இன விருத்திக்காகவே குட்டிகள் என்று விலங்குகளுக்குத் தெரிகிறது, அவை இதன் தொடர்பான விதியைக் கடைப்பிடிக்கின்றன. இது மனிதனுக்குத்தான் தெரிவதில்லே, இதைத் தெரிந்து கொள்ளும் அக்கறையும் அவனிடம் இல்லே. இயன்றவரை அனுபவிக்க வேண்டும். இது ஒன்றை மட்டுமே அவன் விரும்புகிருன். அவன் யார்? மனிதன், இயற்கையின் அரசன். விலங்குகள் இன விருத்தி செய்யக்கூடிய பருவத்தில் மட்டுமே புணர்ச்சியில் ஈடுபடுகின்றன. ஆனுல் இந்த இயற்கையின் நாற்றம்பிடித்த அரசன் தன்னுல் இயன்றபொழுதெல்லாம் புணர்ச்சியில் ஈடுபடுகிருன், அதிலும் இன்பத்துக்காக மட்டுமே ஈடுபடுகிருன். அது மட்டுமல்ல. காதல் என்ற இந்தக் குரங்கு வேலேயை படைப்பிலேயே மிக மேன்மையான உணர்ச்சி என்று அடையாளம் காட்ட முயற்சி செய்கிருன். இந்தக் காதலின் பெயரால் அதாவது கேவலத்தின் பெயரால் மனிதகுலத்தில் சரிபாதியினரைப் பலியிடுகிருன். மனிதகுலம் நன்மையையும் உண்மையையும் அங்கீகரிக்குமாறு செய்வதில் அவனுக்குத் துணேயாக இருந்து உதவ வேண்டிய பெண்ணேத் தன் இன்பத்தை முன்னிட்டுத் தனக்கு எதிரியாக்கிவிடுகிருன். இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்: எங்கும் மனிதகுலத்தின் முன்னேற்றத்தைத் தடுப்பது யார்? பெண்கள். அவர்கள்

ஏன் இப்படி இருக்கிறார்கள்? இந்தக் காரணத்தால் தான். ஆமாம், ஐயா, ஆமாம்'' என்று அவர் திரும்பத் திரும்பச் சொல்லிவிட்டு உடலை ஆட்டிக்கொண்டு பையில் கையை விட்டு சிகரெட்டைத் தேடி எடுத்துப் புகை பிடிக்கத் தொடங்கினார். அதன் மூலம் தன்னை அமைதிப் படுத்த விரும்பினார் போலும்.

## 14

''நான் இப்படிப்பட்ட பன்றி வாழ்க்கையை நடத்தினேன்'' என்று அவர் அதே குரலில் தொடர்ந்தார். ''அதில் மோசமான விஷயம் என்னவென்றால், நான் இத்தகைய வாழ்க்கையை நடத்தினாலும் மற்ற பெண்கள் என்னைக் கெடுப்பதற்கு அனுமதிக்காமல் என் மனைவிக்கு விசுவாசமாக இருந்ததால், நான் தார்மிக நெறிகளைப் பின்பற்றுவதாகவும் குறையே இல்லாத மனிதன் என்றும் எங்களுக்கிடையே சண்டைகள் ஏற்பட்டால் அதற்குக் காரணம் அவள் அல்லது அவளுடைய குணக் கோளாறுதான் என்றும் கற்பனை செய்து கொண்டேன்.

''ஆனால் நிச்சயமாக அவளைக் குற்றஞ் சொல்ல முடியாது. மற்ற எல்லோரிடமிருந்தும், குறைந்தபட்சம் அவர்களில் பெரும்பான்மையானவர்களிடமிருந்தும் அவள் வேறாக இருக்கவில்லை. நம் சமூகத்தில் பெண்களின் நிலைக்கு ஏற்ற வகையில், எல்லா மேல் வர்க்கப் பெண்களும் வளர்க்கப்படுகின்ற அதே வகையில், அவர்கள் வளர்க்கப்படுகின்ற இயல்பான

அந்த ஒரே வகையில் அவளும் வளர்க்கப்பட்டிருந்தாள். பெண்களுக்கு ஏதோ நவீனக் கல்வி வசதிகளைப் பற்றி அதிகமாகப் பேசப்படுகிறது. அத்தனையும் பொய்யான வார்த்தைகள். பெண்ணைப் பற்றி நம்முடைய அணுகுமுறை இப்படியே இருக்கின்ற வரை (அது எப்படி இருக்க வேண்டும் என்று நாம் பாசாங்கு செய்கிறோமே அதுவல்ல) பெண்ணின் கல்வியும் எப்படி இருக்க வேண்டுமோ அப்படித் தான் இருக்கிறது.

''பெண்ணைப் பற்றிய ஆண்களின் அணுகுமுறைக்கு எப்பொழுதும் பொருந்துகின்ற முறையில்தான் பெண்ணின் கல்வியும் இருக்கும். ஆண் பெண்ணை எப்படிப் பார்க்கிறான் என்பது நம் எல்லோருக்குமே தெரியும். 'Wein, Weiber und Gesang'*—என்றல்லவா கவிஞர்கள் பாடியிருக்கிறார்கள். காதற் பாட்டுக்கள் மற்றும் நிர்வாண வீனஸ் சிலைகளில் தொடங்கி எல்லாக் கவிதை முழுவதையும், ஓவியம் மற்றும் சிற்பம் முழுவதையும் எடுத்துக் கொள்ளுங்கள். அரண்மனை நடனங்களிலும் அதைப் போல ட்ருப்னயா சதுக்கம் அல்லது கிரச்சோவ்கா தெரு வரை—எல்லா இடங்களிலும் பெண்ணை போகப் பொருளாகத்தான் நினைத்திருக்கிறார்கள். அதிலும் பிசாசுகளின் தந்திரத்தைப் பாருங்கள். அதாவது, அதில் மகிழ்ச்சியும் இன்பத்தையும் தவிர வேறொன்றுமில்லை

* ஒயினும் பெண்களும் கவிதைகளும் (ஜெர்மன்).

என்றால் நாமும் அதை அப்படியே மகிழ்ச்சி, இன்பம் என்ற அளவில் ஏற்றுக்கொள்ளுவோம். பெண் ஒரு இனிப்புப் பண்டமே தவிர, வேறொன்றுமல்ல. இல்லை. பெண்ணை வழிபடுவதாக முதலில் சொல்லிக் கொண்டவர்கள் மேன்மக்கள் தான் (அவர்கள் அவளை வணங்கினாலும் போகப் பொருளாகவே பார்த்தார்கள்). இன்று ஆண்கள் பெண்ணை மதிப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள். சில ஆண்கள் பெண் வந்ததும் எழுந்திருந்து தங்களுடைய ஆசனங்களைக் கொடுக்கிறார்கள், அவர்கள் போட்ட கைக்குட்டைகளை எடுக்கிறார்கள். மற்றவர்கள் நிர்வாகத் துறையிலோ, ஆட்சித் துறையிலோ எந்தப் பதவியையும் சீக்கிரத்தில் வகிப்பதற்குப் பெண்ணின் உரிமையை அங்கீகரிக்கிறார்கள்—ஆமாம், எந்தப் பதவியையும். அவர்கள் சொல்வது அதுதான்; ஆனால் அவளைப் பற்றி அவர்களுடைய அணுகுமுறை அதே மாதிரியாகத்தான் இருக்கிறது. அவள் ஒரு போகப் பொருள். அவளுடைய உடல் இன்பக் கிளர்ச்சியூட்டும் சாதனம். அது அவளுக்கும் தெரியும். இது ஒருவகையான அடிமைத்தனம். அடிமைத்தனம் என்பது மற்றவர்களைக் கட்டாயப்படுத்தி உழைக்குமாறு செய்து அதன் பலனைச் சிலர் அடைகின்ற அமைப்பு என்பதைத் தவிர வேறொன்றுமில்லை. மற்றவர்களுடைய கட்டாயமான உழைப்பின் பலனைச் சிலர் அடைவதை—அது பாவமானது அல்லது அவமானகரமானது என்பதால்—இனி ஒருபோதும் விரும்பாத நிலையில் மட்டுமே

அடிமைத்தனம் ஒழிக்கப்பட முடியும். ஆனுல் அவர்கள் உண்மையில் என்ன செய்கிருர்கள் என்ருல் அடிமைகளை விற்பனை செய்வதைத் தடை செய்து அடிமை முறையின் வெளி வடிவங்களை மாற்றுகிருர்கள். பிறகு அடிமை முறை ஒழிக்கப்பட்டு விட்டது என்று அவர்கள் கற்பனை செய்கிருர்கள் (தங்களையும் நம்ப வைத்துக் கொள்கிருர்கள்). அடுத்தவர்களின் உழைப்பின் பலனை அடைவதை மக்கள் விரும்புவது நீடிப்பதால் அவ்வாறு செய்வது சரியானது, நியாயமானது என்று அவர்கள் கருதுவதால் அடிமை முறை இன்னும் இருந்து கொண்டிருக்கிறது என்பதை அவர்கள் பார்ப்பதுமில்லை, பார்க்க விரும்புவதுமில்லை. இது சரியானதே என்று கருதப்படுகின்ற வரை மற்றவர்களைக் காட்டிலும் அதிகமான வலிமையும் சூழ்ச்சியும் உடையவர்களாக இருக்கின்றவர்கள் அடிமை முறையை ஏற்படுத்துவார்கள். பெண்களின் விடுதலையும் இப்படிப்பட்டதே. பெண்ணைத் தன்னுடைய போகத்துக்குப் பயன்படுத்துவது சரியானது, விரும்பத்தக்கது என்று ஆண்மகனைக் கருதச் செய்வதில் பெண்ணின் அடிமைத்தனம் அடங்கியிருக்கிறது. பிறகு அவளை விடுவிப்பதற்குப் பாடுபடுகிருர்கள். ஆணுக்குத் தரப்பட்டுள்ள அதே உரிமைகளை அவளுக்குக் கொடுக்கிருர்கள், ஆனுல் அவளை போகப் பொருளாகவே தொடர்ந்து கருதுகிருர்கள், அவளைக் குழந்தைப் பருவத்திலேயே இதற்குப் பயிற்றுவிக்கிருர்கள், பொது ஜன அபிப்பிராயத்தின் மூலம் இதைக்

கற்பிக்கிறார்கள். அவள் அதே தரக்குறைவான, ஒழுக்கமில்லாத அடிமையாக நீடிக்கிறாள், ஒழுக்கக் குறைவான அடிமை—உடைமையாளராக ஆண் நீடிக்கிறான்.

''அவர்கள் கல்லூரிகள், நீதிமன்றங்கள் மூலமாகப் பெண்களுக்கு விடுதலையளிக்கிறார்கள். ஆனால் அவளைப் போகப் பொருளாகத் தொடர்ந்து கருதுகிறார்கள். அவள் தன்னை இப்படியே கருத வேண்டும் என்று கற்பிக்கப்படும் வரை (நாம் அவளுக்கு அதைத்தானே கற்றுக் கொடுக்கிறோம்) அவள் கீழான பிறவியாகவே நீடிப்பாள். அவள் போக்கிரியான டாக்டருடைய உதவியினால் கருத்தரிக்காதபடி பார்த்துக் கொள்வாள். அதாவது அவள் முழுதும் விபச்சாரியாகிவிடுவாள். விலங்குகளின் நிலைக்குக் கீழே, வெறும் சடப் பொருளின் தரத்துக்கு இறங்கிவிடுவாள். அல்லது பரிதாபகரமான, திடீரென்று உணர்ச்சி வசப்படுகின்ற, மன நோயாளியாக, ஆன்மிக வளர்ச்சிக்குத் தகுதியற்றவளாகிவிடுவாள். பெரும்பாலான உதாரணங்களில் அவர்கள் உண்மையிலேயே அப்படித்தான் இருக்கிறார்கள்.

''பள்ளிக்கூடமும் கல்லூரியும் இதை மாற்ற முடியாது. பெண்களைப் பற்றி ஆண்களின் கருத்தும், தன்னைப் பற்றிய பெண்ணின் கருத்தும் மாற்றமடைந்தால் மட்டுமே இது மாற முடியும். கன்னிமை நிலை என்பது இன்று கருதப்படுவதைப் போல வெட்கக்கேடானது, அவமானகரமானதல்ல, அது எல்லாவற்றிலும் உயர்ந்த நிலை என்று பெண்கள் கருதும் பொழுதே அந்த

நிலை மாறும். அந்த நிலை ஏற்படுகின்ற வரை ஒவ்வொரு பெண்ணும் — அவள் எந்த அளவுக்குப் படித்திருந்தாலும் — தன்னாலியன்ற வரை அதிகமான ஆண்களைக் கவர்ச்சிப்பதற்குத்தான் விரும்புவாள். அப்பொழுதுதான் அவர்களிடமிருந்து ஒருவரைத் தேர்ந்தெடுப்பதற்கு அவளுக்கு வாய்ப்புக் கிடைக்கும்.

''அவள் கணிதம் கற்றிருக்கிறாள் என்பதோ அல்லது அவளுக்கு வயலின் வாசிக்கத் தெரியும் என்பதோ நிலைமையைச் சிறிதளவு கூட மாற்றாது. ஒரு பெண் ஆணை மயக்கிவிட்டால் மகிழ்ச்சி அடைகிறாள், தன்னுடைய மிக உயர்ந்த நோக்கம் நிறைவேறி விட்டதாகக் கருதுகிறாள். ஆகவே ஒரு ஆணை மயக்குவதே வாழ்க்கையில் அவளுடைய முக்கியமான நோக்கமாக இருக்கிறது. கடந்த காலத்தில் அப்படித்தான் இருந்தது, எதிர்காலத்திலும் அப்படியே இருக்கும். இது திருமணமாகாத பெண்களுக்கு மட்டுமல்ல, திருமணமான பெண்களுக்கும் பொருந்தக் கூடியதே. திருமணமாகாத பெண்கள் தமக்கென்று ஒரு ஆணை அடைவதற்கு இதைச் செய்யத் தெரிந்திருக்க வேண்டும். திருமணமான பெண்கள் தங்களுடைய கணவர்கள் மீது ஆட்சி செலுத்துவதற்கு இதைச் செய்ய வேண்டும்.

''இந்தத் திசையில் ஒரு பெண்ணின் முயற்சிகளை நிறுத்துவது அல்லது தற்காலிகமாக ஒத்திவைப்பது குழந்தைப் பேறுகும். அதுவும் அவள் அரக்கியாக இருக்கக் கூடாது, தன்னுடைய குழந்தைகளுக்குத் தானே பாலூட்டி வளர்க்க

வேண்டும். ஆனால் இங்கே டாக்டர்கள் மறுபடியும் குறுக்கிடுகிறார்கள்.

''என் மனைவி தன் குழந்தைகளைத் தானே பாலூட்டி வளர்க்க விரும்பினாள். ஐந்து குழந்தைகளைத் தானே பாலூட்டி வளர்த்தாள். முதல் குழந்தை பிறந்த பிறகு அவள் உடல் நலமில்லாதிருந்தாள். டாக்டர்கள் சிறிதும் வெட்கமில்லாமல் அவள் உடைகளை நீக்கி அவள் உடல் முழுவதும் தடவிப் பார்த்தார்கள் (அதற்காக நான் அவர்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும், கட்டணமும் செலுத்த வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது). அந்த கௌரவமான டாக்டர்கள் அவள் தன்னுடைய முதல் குழந்தைக்குப் பாலூட்டக் கூடாது என்று கூறினார்கள். எனவே முதல் தடவையாக அவளுடைய சல்லாபத்தை அகற்றக் கூடிய ஒரே சாதனமும் பிடுங்கப்பட்டது. அந்தக் குழந்தைக்குப் பாலூட்டி வளர்ப்பதற்கு ஒரு செவிலித்தாய் நியமிக்கப்பட்டாள். அதாவது ஒரு பெண்ணின் வறுமையையும் அறியாமையையும் உபயோகப்படுத்தி அவளுடைய சொந்தக் குழந்தையிடமிருந்து அவளை ஆசை காட்டிப் பிரித்து நம்முடைய குழந்தையைப் பராமரிக்கச் செய்வது என்று அர்த்தம். அதற்காக அவளுக்குச் சீருடையும் தொப்பியும் தந்தோம். ஆனால் அது பிரச்சினையல்ல. என் மனைவியின் தாய்மைக் காலம் முடிந்ததும் தன் குழந்தையைப் பாலூட்டி வளர்க்க வேண்டிய பொறுப்பிலிருந்து விடுவிக்கப்பட்டதும் அவளிடம் உறங்கிக் கிடந்த பாலுணர்ச்சி அசா

தாரணமான வேகத்தோடு வெளிப்பட்டது. அதுதான் பிரச்சினை. அவளுடைய சல்லாபத்துக்கு நேரடியான விகிதத்தில் என்னுடைய திருமணத்தின் முதல் நாளிலிருந்து ஒரு விநாடி கூட எனக்கு அமைதியைத் தராத பொறாமை உணர்ச்சி என்னைச் சித்திரவதை செய்தது. நானோ என் மனைவியோ வாழ்க்கை நடத்தியதைப் போல—அதை ஒழுக்கக் குறைவான வாழ்க்கை என்று தான் சொல்ல வேண்டும்—வாழ்க்கை நடத்துகின்ற மற்ற கணவர்களையும் அந்தப் பொறாமை உணர்ச்சி தவிர்க்க முடியாதபடி சித்திரவதை செய்யும்.''

## 15

''என்னுடைய திருமண வாழ்க்கை முழுவதிலும் ஒரு நிமிடம் கூட பொறாமை உணர்ச்சியால் துன்புறுத்தப்படாமல் நான் இருக்கவில்லை. ஆனால் சில சமயங்களில் இப் பொறாமை மிகவும் தீவிரமடைந்தது. அதில் என் முதல் குழந்தை பிறந்தபிறகு வந்த கட்டமும் ஒன்றாகும். அப்பொழுது என் மனைவி குழந்தைக்குப் பாலூட்டி வளர்க்கக் கூடாதென்று டாக்டர்கள் கூறியிருந்தார்கள். அப்பொழுது நான் மிகவும் அதிகமாகப் பொறாமை உணர்ச்சிக்கு ஆளாகியிருந்தேன். அதற்கு சில காரணங்கள் இருந்தன. முதலாவதாக, எந்த விதமான சரியான காரணமும் இல்லாமல் இயற்கையான முறையில் குறுக்கிடுவதைப் பற்றி—எல்லாத் தாய்களைப் போலவே—என் மனைவி மிகவும்

கவலைப்பட்டாள். இரண்டாவதாக, ஒரு தாயாருக்குரிய தார்மிகக் கடமைகளை அவள் எவ்வளவு சுலபமாகக் கைவிட்டாள் என்பதைக் கண்டதும் அவள் தன்னுடைய தாம்பத்தியக் கடமைகளையும் அதைப் போல சுலபமாகவே கைவிட்டு விடுவாள் என்று நான் நியாயமாகவே (அல்லது என்னை அறியாமலே) முடிவு செய்தேன். அதிலும் அப்பொழுது அவள் நல்ல ஆரோக்கியத்தோடிருந்தாள்; கௌரவ மிக்க டாக்டர்கள் தடை விதித்திருந்தாலும் தன்னுடைய மற்ற குழந்தைகளை எத்தகைய பாதகமான விளைவும் இல்லாமல் வளர்த்தாள்.''

''உங்களுக்கு டாக்டர்களிடம் சிறிது கூட அன்பு கிடையாதா?'' என்று நான் கேட்டேன். டாக்டர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்ற பொழுதெல்லாம் அவருடைய கண்களில் மிகவும் அதிகமான விரோத உணர்ச்சியைப் பிரதிபலிக்கும் ஒளி தென்படுவதை நான் கவனித்திருந்தேன்.

''அவர்களை விரும்புகிறோமா அல்லது வெறுக்கிறோமா என்பது இங்கே பிரச்சினை அல்ல. அவர்கள் நூற்றுக்கணக்கானவர்கள், ஆயிரக்கணக்கானவர்களின் வாழ்க்கையைக் கெடுப்பதைப் போல, என்னுடைய வாழ்க்கையையும் கெடுத்தார்கள். என்னால் காரணத்தையும் விளைவையும் தனியே பிரிக்க முடியாது. வழக்குரைஞர்களைப் போல, எல்லோரையும் போல டாக்டர்கள் பணத்தைக் கறக்க விரும்புகிறார்கள் என்பது எனக்குத் தெரியும். என்னுடைய

குடும்ப வாழ்க்கையில் அவர்கள் குறுக்கிடாமல் ஒதுக்கி வைத்திருக்க முடியுமென்றால் என்னுடைய வருமானத்தில் பாதியை மகிழ்ச்சியோடு அவர்களுக்குக் கொடுத்திருப்பேன் (உண்மையான நிலைமையைப் புரிந்து கொண்ட மற்றவர்கள் கூட அதையே செய்திருப்பார்கள்). நான் புள்ளிவிவரங்களைச் சேகரிக்கவில்லை, ஆனால் டாக்டர்கள் தாயார் குழந்தையைப் பெற்றெடுக்க முடியாதபடி பலவீனமாக இருக்கிறாள் என்று சொல்லி (ஆனால் அவள் பிறகு பல குழந்தைகளை மிகவும் சுலபமாகப் பெற்றெடுத்திருப்பாள்) கருப்பையிலேயே குழந்தையைக் கொன்ற அல்லது ஏதோ ஒரு அறுவைச் சிகிச்சை செய்து தாயாரைக் கொன்ற டஜன் கணக்கான (அவை எண்ணற்றவை) உதாரணங்கள் எனக்குத் தெரியும். மத்திய காலத்தில் மதநீதி விசாரணைமன்றங்கள் செய்த கொலைகளை யாரும் கொலை என்று சொல்வதில்லை; ஏனென்றால் அவை மக்களின் நலனுக்காகச் செய்யப்பட்டவை என்று சொல்லப்பட்டது. அதைப் போல இத்தகைய கொலைகளையும் யாரும் கொலை என்று கூறுவதில்லை. டாக்டர்கள் செய்யும் குற்றங்கள் எண்ண முடியாதவை. ஆனால் குறிப்பாகப் பெண்கள் என்ற சாதனத்தின் மூலம் பொருள்முதல்வாதத்தைக் கொண்டு உலகத்தின் தார்மிகப் பண்பை அவர்கள் சீர்குலைப்பதோடு ஒப்பிடும் பொழுது இந்தக் குற்றங்கள் முக்கியமில்லாதவை என்று தான் சொல்ல வேண்டும். மேலும் அவர்களுடைய அறிவுரையைக் கேட்பதென்றால் நாம்

ஒருவருக்கொருவர் தனித்தே இருக்க வேண்டும். ஏனென்ருல் தொத்து நோய் ஆபத்து எங்கும் எல்லாவற்றிலும் இருக்கிறது. எனவே நாம் மனித குலத்தின் ஒற்றுமைக்காகப் பாடுபடுவதற்குப் பதிலாக ஒருவருக்கொருவர் பிரிந்து வாழ்கின்ற நிலைமைக்கே முயற்சி செய்ய வேண்டியதாகிவிடும். அவர்கள் போதனையைக் கேட்டால் நாம் ஒவ்வொருவருமே கார்பாலிக் அமிலம் கலந்த மருந்தை வாயில் ஊற்றிக் கொண்டு தனியாக உட்கார்ந்திருக்க வேண்டும் (ஆனல் சமீபகாலத்தில் இந்த மருந்தினுல் பலனில்லை என்று கண்டு பிடித்திருக்கிருர்கள்). ஆனல் அது கூட முக்கியமல்ல. அவர்கள் மக்களை, குறிப்பாகப் பெண்களைக் கெடுத்துவிடுகிருர்கள் என்பதுதான் முக்கியம்.

"'நீ மோசமான பழக்கங்களைப் பின்பற்றுகிருய். உன் போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும்' என்று இந்தக் காலத்தில் சொல்லக் கூடாது. இதைத் தன்னிடமோ அல்லது மற்றவர்களிடமோ சொல்ல முடியாது. நீங்கள் தவறு செய்தால் உங்களுடைய நரம்பு மண்டலத்தில் ஏதோ கோளாறு ஏற்பட்டிருக்க வேண்டும் அல்லது அப்படிப்பட்ட ஏதோ ஒன்றைச் சொல்கிருேம். நீங்கள் டாக்டர்களிடம் போக வேண்டும். அவர்கள் முப்பத்தைந்து கோபெக் விலையுள்ள ஒரு மருந்தை எழுதிக் கொடுப்பார்கள். நீங்கள் அதை வாங்கிச் சாப்பிட வேண்டும். உங்கள் உடல் நிலை மேலும் மோசமடையும். நீங்கள் மேலும் பல டாக்டர்களிடம் போக வேண்டும். இன்னும் அதிகமான

மருந்தைச் சாப்பிட வேண்டும். எவ்வளவு பிரமாதமான தொழில்!

''ஆனால் நான் சொல்ல வந்தது அதுவல்ல. அவள் மற்ற குழந்தைகளை நன்றாக வளர்த்தாள், அவளுடைய பிரசவ காலமும் குழந்தை வளர்ப்புக் காலமும்தான் பொறாமையின் வேதனைகளிலிருந்து என்னைக் காப்பாற்றிய ஒரே காலங்கள் என்பதைத்தான் சொல்ல விரும்பினேன். அவை மட்டும் இல்லாதிருந்தால் பின்னால் நடைபெற்றது மிகவும் முன்பாகவே நடைபெற்றிருக்கும். குழந்தைகள் அவளையும் என்னையும் காப்பாற்றின. எட்டு வருடங்களில் அவளுக்கு ஐந்து குழந்தைகள் பிறந்தன. ஐந்து குழந்தைகளையும் தானே வளர்த்தாள்.''

''உங்கள் குழந்தைகள் இப்பொழுது எங்கே இருக்கிறார்கள்?'' என்று நான் கேட்டேன்.

''என்னுடைய குழந்தைகளா?'' என்று அவர் பயந்துவிட்டதைப் போல திருப்பிக் கேட்டார்.

''என்னை மன்னித்துவிடுங்கள். அவர்களை நினைப்பது ஒருவேளை உங்களுக்கு வேதனையைக் கொடுக்கலாம்.''

''இல்லை. அப்படி எதுவுமில்லை. என் மனைவியின் சகோதரரும் அவரது மனைவியும் என் குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு போய்விட்டார்கள். குழந்தைகள் என்னோடிருப்பதற்கு அவர்கள் விடவில்லை. நான் அவர்களுக்கு என் சொத்து முழுவதையும் கொடுத்தேன். ஆனால் குழந்தைகள் என்னோடிருக்கக் கூடாதென்று அவர்கள் சொல்லிவிட்டார்கள். எனக்குப் பைத்தியம் பிடித்திருப்பதாகச் சொல்கிறார்

கள். நான் அவர்களைப் பார்த்துவிட்டுத்தான் இப்பொழுது திரும்பிக் கொண்டிருக்கிறேன். அவர்களிடம் பேசினேன். ஆனால் குழந்தைகளை என்னிடம் ஒப்படைக்க அவர்கள் மறுத்துவிட்டார்கள். மற்ற பெற்றோர்களிடமிருந்து வித்தியாசமானவர்களாக நான் அவர்களை வளர்ப்பேன், அவர்கள் வித்தியாசமானவர்களாக வளரக் கூடாது. சரி. என்ன செய்வது? அவர்கள் குழந்தைகளை என்னிடம் கொடுக்க மாட்டார்கள், என்னை நம்ப மாட்டார்கள் என்பது இயற்கையே. குழந்தைகளை வளர்க்க என்னிடம் சக்தி இருக்கிறதா என்பதும் எனக்கு நிச்சயமில்லை. என்னால் முடியாதென்றுதான் நினைக்கிறேன். நான் அழிந்துவிட்டேன், பாழாகிவிட்டேன். அது எனக்குப் புரிகிறது. ஆம். எனக்குப் புரிந்த விஷயங்களை மற்றவர்கள் கற்றுக் கொள்ள நெடுங்காலம் பிடிக்கும்.

''என் குழந்தைகள் உயிரோடிருக்கிறார்கள். மற்றவர்கள் எல்லோரையும் போலக் காட்டுமிராண்டிகளாக வளர்ந்து கொண்டிருக்கிறார்கள். நான் அவர்களை மூன்று தடவைகள் பார்த்தேன். அவர்களுக்கு நான் செய்யக் கூடிய உதவி ஒன்றுமில்லை. ஒன்றுமே இல்லை. நான் தெற்கே போய்க் கொண்டிருக்கிறேன். அங்கே எனக்கு ஒரு சிறு வீடும் தோட்டமும் இருக்கிறது.

''ஆம், எனக்குத் தெரிந்திருக்கும் விஷயங்களை மற்றவர்கள் அறிந்து கொள்ள நெடுங்காலம் பிடிக்கும். சூரியனிலும் மற்ற நட்சத்திரங்களிலும் எவ்வளவு இரும்பு இருக்கிறது, மற்ற உலோகங்கள் எவ்வளவு இருக்கின்றன

என்ற கண்டுபிடிப்பதற்கு நமக்கு நெடுங்காலம் பிடிப்பதில்லே. ஆனல் நம்முடைய பன்றித் தனத்தை அம்பலப்படுத்தும் விஷயங்களேக் கண்டு பிடிப்பது கடினமானது, மிகவும் கடின மானது...

''நீங்களாவது நான் சொல்வதைக் கேட்கி றீர்கள். உங்களுக்கு என் நன்றி.''

## 16

''இதோ, என் குழந்தைகள் நினேவு வரு கிறது. குழந்தைகளேப் பற்றி நம்முடைய அணு குமுறை எவ்வளவு போலித்தனமானது. குழந் தைகள் கடவுளின் அருட்கொடை என்று சொல் கிருர்கள், குழந்தைகள் என்ருல் பேரானந்தம், பொய். ஒரு காலத்தில் குழந்தைகள் அப்படி இருந்திருக்கலாம். ஆனல் இப்பொழுது அப்படி இல்லே. குழந்தைகள் ஒரு துன்பம் என்பதைத் தவிர வேருென்றுமில்லே. பெரும்பாலான தாயார்களுக்கு இது நன்ருகத் தெரியும். அவர் கள் எப்பொழுதாவது ஒரு சமயத்தில் தங்களே மறந்து இதைச் சொல்லிவிடுவதும் உண்டு. மேல் வர்க்கங்களேச் சேர்ந்த பெரும்பான்மை யான தாய்மார்களேக் கேட்டுப் பாருங்கள். குழந்தைகளுக்கு நோய் ஏற்படுவதாலும் இறந் துவிடுவதாலும் பாலூட்டி வளர்க்க நாங்கள் விரும்பாததாலும் எங்களுக்குக் குழந்தைகளே வேண்டாம் என்று அவர்கள் உங்களிடம் சொல்லுவார்கள். அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்தால், அந்தக் குழந்தைகளிடம் அதிகமான

பிரியம் ஏற்பட்டுவிடும், அதனுல் துன்பமடைய நேரும் என்ற பயத்தினுல் அந்தக் குழந்தைகளை வளர்க்க அவர்கள் விரும்புவதில்லை. ஒரு குழந்தையின் சிறுகைகளும் கால்களும் உடலும் அழகானவையே. ஆனுல் அந்தக் குழந்தையினுல் ஏற்படுகின்ற மகிழ்ச்சி அந்தக் குழந்தை நோய்வாய்ப்பட்டு இறந்துவிடும் பொழுது ஏற்படுகின்ற துன்பம் மட்டுமல்லாமல் அது அப்படி நோய் வாய்ப்படுமோ, இறந்துவிடுமோ என்று ஏற்படும் பயத்தைக் காட்டிலும் குறைவானதே. குழந்தைகளினுல் ஏற்படக்கூடிய சாதகங்களையும் பாதகங்களையும் எண்ணிப் பார்த்தால் எப்பொழுதுமே சாதகங்களைக் காட்டிலும் பாதகங்களே அதிகமாக இருக்கின்றன. அதனுல் தான் குழந்தைகள் இல்லாதிருப்பது நல்லது. பெண்கள் தங்களுடைய உணர்ச்சிகள் குழந்தைகள் மீதுள்ள பாசத்தினுல் ஏற்படுவதாகக் கற்பனை செய்து கொண்டு இதைப் பச்சையாக, தைரியமாகச் சொல்கிருர்கள். அது நல்ல, பாராட்டத்தக்க உணர்ச்சியே. அதைப் பற்றி அவர்களுக்குப் பெருமையும் உண்டு. இப்படிச் சிந்திப்பது அன்பை நிராகரித்து, சுயநலத்தை வற்புறுத்துவது என்பதை அவர்கள் உணரத் தவறுகிருர்கள். ஒரு குழந்தையினுல் ஏற்படுகின்ற ஆனந்தம் அந்தக் குழந்தையினுல் அவர்களுக்கு ஏற்படுகின்ற துன்பத்தைக் காட்டிலும் குறைவானதே. எனவே தாங்கள் நேசிக்கக் கூடிய குழந்தையை அவர்கள் வேண்டாம் என்கிருர்கள். அன்புக்குரிய குழந்தைக்காக அவர்கள் தங்களைத் தியாகம் செய்யவில்லை, ஆனுல்

தங்களுக்காக அன்பைத் தந்திருக்கக் கூடிய குழந்தையைத் தியாகம் செய்கிறார்கள்.

''இது அன்பு அல்ல, சுயநலம் என்பது தெளிவு. ஆனால் இந்தச் சுயநலத்துக்காகப் பணக்காரத் தாயார்களைக் குறை கூறுவது கடினம். உயர்ந்த வட்டாரங்களைச் சேர்ந்த குடும்பங்களில் குழந்தைகளின் உடல் நலத்தைப் பாதுகாப்பதற்கு எவ்வளவு செலவாகிறது (இதற்கும் டாக்டர்களே காரணம்) என்பதை நினைத்துப் பார்த்தால் ஒரு வார்த்தையாவது மறுப்புத் தெரிவிக்காமல் இருக்க முடியாது. அந்த ஆரம்ப நாட்களில் என் மனைவியின் நேரத்தில் ஒவ்வொரு நிமிடத்தையும் அவளுடைய சக்தியில் ஒவ்வொரு அவுன்சையும் மூன்று அல்லது நான்கு குழந்தைகள் பறித்துக் கொண்ட பொழுது, அவளுடைய வாழ்க்கையையும் மனோ நிலைமையையும் நான் ஒவ்வொரு முறை நினைக்கும் பொழுது இன்று கூட என் உடல் நடுங்குகிறது. எங்களுக்கு வாழ்க்கையே இல்லை. எந்த நேரத்தில் ஆபத்து ஏற்படுமோ என்ற பயத்தில், இந்த ஆபத்திலிருந்து காப்பாற்றப்படுவதும் மறுபடியும் ஆபத்து திரும்புவதும் அதைத் தடுப்பதற்குத் தீவிரமான முயற்சிகளைச் செய்வதும் மறுபடியும் காப்பாற்றப்படுவதுமாக—மூழ்கிக் கொண்டிருக்கும் கப்பலில் இருப்பதைப் போல—நாங்கள் வாழ்ந்தோம். இந்தச் சூழல் வேண்டுமென்றே ஏற்படுத்தப்பட்டது, என் மனைவி குழந்தைகளைப் பற்றிக் கவலைப் படுவதாக நடிப்பது என் மீது அவளுடைய வெற்றியை

நிரந்தரமாக்குவதற்கே என்று சில சமயங்களில் எனக்குத் தோன்றும். ஏனென்றால் எல்லாப் பிரச்சினைகளையும் அவளுக்குச் சாதகமான முறையில் தீர்த்துக் கொள்வதற்கு அது மிகச் சுலபமான, ஆசையூட்டுகின்ற வழியாக இருந்தது. அவள் செய்தவை, பேசியவை அனைத்துமே போலித்தனமாகச் செய்யப்படுபவை, பேசப்படுபவை என்று சில சமயங்களில் எனக்குத் தோன்றியது. ஆனால் இப்படி இருந்ததில்லை. அவள் உண்மையாகவே பயங்கரமான துன்பத்துக்கு ஆளாகியிருந்தாள், குழந்தைகளைப் பற்றி, அவர்களுடைய உடல் நலத்தைப் பற்றி, நோய்களைப் பற்றி நிரந்தரமாகக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். அது அவளுக்கு மட்டுமல்ல எனக்கும் சித்திரவதையாகவே இருந்தது. அவள் அந்தக் கொடுந் துன்பத்தை அனுபவிக்காமல் எப்படி இருக்க முடியும்? தன் குழந்தைகளைப் பற்றிய கவலை, அவர்களுக்கு உணவூட்ட வேண்டும், சமாதானப் படுத்த வேண்டும், பாதுகாக்க வேண்டும் என்ற மிருகத்தைப் போன்ற கவலை பெரும்பான்மையான பெண்களிடம் இருப்பதைப் போலவே அவளிடம் வலுவாக இருந்தது. ஆனால் மிருகங்களிடம் இல்லாத பகுத்தறிவும் கற்பனையும் அவளிடம் இருந்தது. கோழிக்குஞ்சுக்கு என்ன ஏற்பட்டுவிடுமோ என்று கோழி கவலைப்படுவதில்லை. அதற்கு ஏற்படக் கூடிய பல நோய்களைப் பற்றி கோழிக்குத் தெரியாது. அல்லது நோயையும் மரணத்தையும் தடுக்கக் கூடியவை என்று மக்கள் கற்பனை செய்யும் எல்லாவித

மான மருந்துகளைப் பற்றியும் அதற்குத் தெரியாது. ஆகவே கோழிக்குக் குஞ்சுகளால் துன்பம் கிடையாது. குஞ்சுகளுக்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்கிறது, அதை மகிழ்ச்சியோடு செய்கிறது. அதற்குக் குஞ்சுகளினுல் மகிழ்ச்சிதான் ஏற்படுகிறது. குஞ்சுக்கு நோய் ஏற்பட்டால் துல்லியமாக என்ன செய்ய வேண்டுமென்பது கோழிக்குத் தெரியும்; குஞ்சுக்கு உணவு கொடுத்துக் கதகதப்பாக வைத்திருக்கிறது. இதைச் செய்யும் பொழுது அவசியமான எல்லாவற்றையும் செய்வதாக அது நினைக்கிறது. குஞ்சு செத்துப்போனுல் அது ஏன் செத்தது, எங்கே போய்விட்டது என்று கோழி தன்னைக் கேட்டுக் கொள்வதில்லை. சற்று நேரம் கிளக், கிளக் என்று சத்தம் போடுகிறது, பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு பழைய மாதிரி வாழ்க்கையை நடத்துகிறது. ஆனுல் துரதிர்ஷ்டம் பிடித்த நம்முடைய பெண்களுக்கு, குறிப்பாக என் மனைவிக்கு, இது மட்டும் போதுமானதல்ல. குழந்தைகளின் கல்வி, வளர்ப்பு சம்பந்தமாக—குழந்தைகளின் நோய்களையும் அவற்றின் நிவாரணத்தையும் பற்றி சொல்லத் தேவையில்லை—மிகவும் அதிகமாக வேறுபடுகின்ற, மாற்றப்படக் கூடிய எண்ணற்ற விதிகளைப் பற்றி அவள் கேள்விப்பட்டிருக்கிருள், படித்து மிருக்கிருள். அவர்களுக்கு இதைக் கொடுக்க வேண்டும், அதைக் கொடுக்க வேண்டும், இல்லை, அதுவும் இதுவும் கூடாது, இதையும் அதையும் தான் கொடுக்க வேண்டும். குழந்தைகளுக்கு உடை அணிவிக்க வேண்டும்,

எப்படி உணவு கொடுக்க வேண்டும், தூங்கச் செய்ய வேண்டும், உலாவக் கூட்டிப் போக வேண்டும், காற்ருேட்டமாக எப்படி வைத் திருக்க வேண்டும் என்பதைப் பற்றி நாங்கள், குறிப்பாக என் மனைவி, வாரந்தோறும் புதிய தாக ஏதாவதொன்றைத் தெரிந்து கொண் டோம். நேற்றுத்தான் குழந்தைகள் பிறக்கத் தொடங்கியதைப் போல. எங்கள் குழந்தை களில் ஒன்றுக்கு நோய் வந்தால் அது சரியாக உணவு கொடுக்காததால் அல்லது சரியாகக் குளிப்பாட்டாததால் அல்லது அவற்றை நேரப் படி செய்யாததால்தான் ஏற்பட்டிருக்கிறது. சுருக்கமாகச் சொல்வதென்ருல் அந்தக் குழந் தைக்கு நோய் ஏற்பட்டிருப்பதற்கு என் மனை வியே காரணம், ஏனென்ருல் என்ன செய்ய வேண்டுமோ அதை அவள் செய்யவில்லை.

''குழந்தைகள் சுகமாக இருக்கும் பொழுதும் நிலைமை மோசமாகத்தான் இருந்தது. அவர் களுக்கு நோய் வந்துவிட்டால் வாழ்க்கை நரக வேதனைதான். நோய்களைக் குணப் படுத்திவிட முடியும், இது சம்பந்தமாக ஒரு விஞ்ஞானப் பிரிவு இருக்கிறது, நோயை எப்படி குணப் படுத்துவது என்று அறிந்துள்ள சிலர்—டாக் டர்கள்—இருக்கிருர்கள் என்று கருதப்படு கிறது. அவர்கள் எல்லோருக்குமே அது தெரி யும் என்று சொல்ல முடியாது. ஆனுல் அவர் களில் மிகவும் திறமைசாலிகளுக்கு அது தெரி யும். இங்கே, நம் குழந்தைக்கு நோய் வந்து விட்டது; அந்த மிகத் திறமைசாலியான டாக் டரை, எப்படி குணப்படுத்த வேண்டும் என்று அறிந்திருக்கும் நபரை நாம் கண்டுபிடிக்க

வேண்டும், அப்பொழுதுதான் அந்தக் குழந்தையைக் காப்பாற்ற முடியும். நம்மால் அந்த டாக்டரைக் கண்டு பிடிக்க முடியவில்லை என்ருல் அல்லது அவர் வசிக்கின்ற பகுதியில் நாம் வசிக்கவில்லை என்ருல் குழந்தை பிழைக்காது. இதை நம்பிய ஒரே பெண் என் மனைவி மட்டுமே என்று சொல்ல முடியாது. எங்கள் வகுப்பைச் சேர்ந்த எல்லாப் பெண்களுமே இதை நம்பினர்கள். 'இவான் ஸஹாரவிச்சை உடனே கூட்டிக் கொண்டு வராததால்தான் எக்கதெரீனு செமியோனவ்ஞவின் இரண்டு குழந்தைகள் இறந்து போய்விட்டன.' 'மரீயா இவானவ்ஞவின் மூத்த பெண்ணை இவான் ஸஹாரவிச்தான் காப்பாற்றினர்.' 'டாக்டருடைய ஆலோசனையின் பேரில் பெத்ரோவ்கள் வெவ்வேறு ஹோட்டலுக்குப் போய்த் தங்கினர்கள். அதனுல் குழந்தைகள் பிழைத்துக் கொண்டன. இல்லையென்ருல் குழந்தைகள் இறந்திருக்கும்.' 'இன்னருடைய குழந்தை மிகவும் மெலிந்து போயிருந்தது, டாக்டருடைய ஆலோசனையின் பேரில் அவர்கள் தெற்கே ஒரு இடத்துக்குப் போனர்கள். குழந்தை பிழைத்துக் கொண்டது.' எங்கு திரும்பினுலும் அவள் காதில் இது தான் கேட்டது. அவள் எல்லா மிருகங்களையும் போலவே தன்னுடைய குழந்தையின் நலத்தைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டே இருந்தாள்; அக் குழந்தைகளின் நலம் ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி, அதிகக் காலதாமதமாவதற்குள் இவான் ஸஹாரவிச் கவனித்துச் சொல்வதைப் பொறுத்திருக்கிறது என்ருல் அவள் நிரந்தர

மாகக் கவலைப்படாமலும் துன்பமடையாம லும் எப்படி இருக்க முடியும்? ஆனால் இவான் ஸஹாரவிச் என்ன சொல்வார் என்பது யாருக் கும் தெரியாது, அவருக்கோ கடுகளவு கூடத் தெரியாது. ஏனென்றால் தனக்கு ஒன்றும் தெரி யாது, தான் செய்யக் கூடியதும் ஒன்றுமில்லை என்பது அவருக்கு மிக நன்றாகத் தெரியும். எல்லாவற்றையும் அறிந்த டாக்டர் என்று தன்னைப் பற்றிக் கொண்டிருக்கும் நம்பிக்கையை மக்கள் இழந்துவிடாமலிருக்கும் வகையில் தற் செயலான ஒரு சாதகத்தைச் செய்வதற்கு மட் டுமே அவருக்குத் தெரியும். அவள் முற்றிலும் மிருகமாக இருந்திருந்தால் இந்தத் துன்பங் களை அனுபவித்திருக்க மாட்டாள். அவள் முற் றிலும் மனிதப் பிறவியாக இருந்திருந்தால் கடவுள் மீது நம்பிக்கை வைத்திருப்பாள். 'கட வுள் கொடுத்தார், கடவுள் எடுத்துக் கொண் டார். கடவுள் சித்தத்தைத் தவிர நாம் செய்யக் கூடியது ஒன்றுமில்லை' என்று நம்பிக்கை உடை யவர்கள் நினைப்பதையும் பேசுவதையும் போல அவளும் நினைத்திருப்பாள், பேசியிருப்பாள். தன்னுடைய குழந்தைகள் உட்பட எல்லோரு டைய வாழ்க்கையும் மரணமும் மனிதனுடைய சக்திக்கு உட்பட்டதல்ல, கடவுளின் சக்திக்கு உட்பட்டது என்று நினைத்திருப்பாள். தன் னுடைய குழந்தைகளுக்கு நோய் ஏற்படுவதை யும் மரணத்தையும் தன்னால் தடுக்க முடியும் என்று நினைத்து சித்திரவதைத் துன்பத்தை அனுபவித்திருக்க மாட்டாள், அவ்வாறு தடுப் பதற்கும் முயற்சி செய்திருக்க மாட்டாள்.

ஆனால் இந்த விஷயத்தைப் பற்றி அவள் இப்படித்தான் நினைத்தாள். மிக அதிகமான அளவுக்கு பலவீனமான, மென்மையான உயிர்கள், எண்ணற்ற நோய்களுக்கு ஆளாகக்கூடிய உயிர்கள் அவளிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன, அந்த உயிர்களிடம் அவளுக்கு உணர்ச்சி மயமான, மிருகத்தனமான அன்பு ஏற்பட்டிருந்தது. அந்த உயிர்களுக்கு அவள் பொறுப்பு, ஆனால் அவர்களைப் பாதுகாத்து வளர்க்கும் வழி சில பண்டிதர்களைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அவர்களுடைய ஆலோசனையையும் உதவியையும் அதிகமான பணம் கொடுத்துத்தான் பெற முடியும். அது மட்டுமல்ல, பணம் கொடுத்தால் கூட எல்லா நேரங்களிலும் அவற்றைப் பெற முடியாது.

''குழந்தைகளோடு என்னுடைய மனைவியின் வாழ்க்கை—ஆகவே என்னுடைய வாழ்க்கையும் கூட—சித்திரவதையாக இருந்ததே தவிர மகிழ்ச்சி நிரம்பியதாக இருக்கவில்லை. அது வேறு எப்படி இருக்க முடியும்? அவள் எப்பொழுதுமே வேதனைப்பட்டுக் கொண்டிருந்தாள். சில சமயங்களில் ஒரு பொறுமையான சம்பவம் அல்லது சாதாரணமான சண்டைக்குப் பிறகு ஏற்படும் அமைதியில் நான் ஓய்வெடுக்க வேண்டுமென்று நினைப்பேன்; படிக்க வேண்டுமென்று, சிந்திக்க வேண்டுமென்று ஏங்குவேன். எதைப் பற்றியாவது சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது, வாஸ்யா வாந்தியெடுத்துவிட்டான், மாஷாவின் மலத்தில் இரத்தத் துளிகள் இருக்கின்றன, அந்திரியூஷாவின் உடலில் தடிப்பு

கள் ஏற்பட்டிருக்கின்றன என்று தகவல் கிடைக்கும்—அவ்வளவுதான் முடிந்துவிட்டது. இனி வாழ்க்கை இல்லை. நான் எங்கே போக வேண்டும்? எந்த டாக்டர்களைக் கூட்டிக் கொண்டு வர வேண்டும்? குழந்தையை எங்கே தனியாக வைப்பது? பிறகு—மருந்து, உஷ்ணமானிகள், குடலைக் கழுவுதல், டாக்டர்கள். இந்த முற்றுகை முடிவதற்கு முன்பே மற்றொரு முற்றுகை தொடங்கிவிடும். முறையான, நன்கு ஒழுங்கு படுத்தப்பட்ட குடும்ப வாழ்க்கை என்பதே கிடையாது. அதற்குப் பதிலாக—நான் முன்னர் கூறியதைப் போல—உண்மையான ஆபத்துக்களிலிருந்தும் கற்பனையான ஆபத்துக்களிலிருந்தும் எங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்கு முடிவே இல்லாமலிருந்தது. பெரும்பான்மையான குடும்பங்களில் இப்படித்தான் நடக்கிறது. என் குடும்பத்தைப் பொறுத்தவரை இது மிகவும் உண்மையாக இருந்தது. ஏனென்றால் என் மனைவி எதையும் நம்பக் கூடியவளாகவும் குழந்தைகள் மீது அதிகமான பிரியமுள்ளவளாகவும் இருந்தாள்.

''ஆகவே குழந்தைகள் எங்களுடைய குடும்ப வாழ்க்கையில் முன்னேற்றத்தை ஏற்படுத்தவில்லை, அதற்கு பதிலாக அதில் விஷத்தைக் கலந்தன. மேலும் குழந்தைகள் புதிய பிரிவினைகளுக்குக் காரணமாக இருந்தன. குழந்தைகள் பிறந்த உடனே இது தெளிவாயிற்று, அவர்கள் வளர்ந்து கொண்டிருந்த பொழுது எங்களுக்கிடையே கருத்துமாறுபாடுகளுக்குக் காரணமாகவும் இலக்காகவும் மிக அதிகமாக இருந்தார்

கள். அவர்கள் கருத்துமாறுபாடுகளின் இலக்கு மட்டுமல்ல, போராட்டக் கருவியாகவும் இருந்தார்கள். நாங்கள் ஒருவரோடொருவர் சண்டை போடுவதற்குக் குழந்தைகளை உபயோகித்துக் கொண்டோம். ஒவ்வொருவருக்கும் ஒரு குழந்தை மீது அதிகமான பிரியம் இருந்தது. அந்தக் குழந்தை அந்த நபரின் ஆயுதமாகப் பயன்பட்டது. நான் வாடிக்கையாக மூத்த மகன் வாஸ்யாவைத் திட்டினேன். அவள் லீஸாவைத் திட்டுவாள். குழந்தைகள் வளர்ச்சியடைந்து அவர்களுடைய குணதிசயங்கள் உருப்பெற்ற பிறகு அவர்களை எதிர்கால நேச சக்திகளாகக் கருதினோம். ஒவ்வொருவரும் தன்னுடைய தரப்புக்கு அந்தக் குழந்தைகளை இழுப்பதற்கு முயற்சி செய்தோம். பாவம்! இதனால் அவர்கள் பயங்கரமான துன்பத்துக்கு ஆளானார்கள். ஆனால் நாங்கள் எங்களுடைய நிரந்தரமான போரில் மூழ்கிப் போயிருந்த காரணத்தால் அவர்களைப் பற்றிச் சிந்திக்கவில்லை. எங்கள் மகள் என்னை ஆதரித்தாள், என்னுடைய மூத்த மகன் (அவன் என் மனைவியைப் போலவே தோற்றமுடையவன், அவளுடைய செல்லக் குழந்தை) அவள் தரப்பில் இருந்தான். அவன் மீது எனக்கு அடிக்கடி வெறுப்பு ஏற்பட்டது.''

## 17

''இப்படியே நாங்கள் வாழ்ந்தோம். எங்களுடைய பகைமை மென்மேலும் முற்றியது.

கடைசியில் கருத்து வேறுபாடுகள் பகைமை யைத் தூண்டவில்லை, பகைமை கருத்து வேறு பாடுகளை ஏற்படுத்தியது. அவள் ஏதாவது சொல்லப்போகும் பொழுது அவள் அதைச் சொல்வதற்கு முன்பாகவே நான் அதை மறுத் தேன். அவளும் அப்படியே நடந்து கொண் டாள்.

''நாங்கள் ஒருவரை ஒருவர் புரிந்து கொள் ளவும் முடியாது, ஒற்றுமையாக இருக்கவும் முடியாது என்று நான்காவது வருடத்தில் இரு தரப்புமே சுயேச்சையாக முடிவுக்கு வந்தோம். அதற்குப் பிறகு நாங்கள் ஒத்துப் போக முயற்சி செய்வதில்லை. மிகச் சாதாரணமான விஷயங் களில் கூட—அதிலும் அவை குழந்தைகளைப் பொறுத்தவையாக இருந்தால்—ஒவ்வொருவ ரும் தன்னுடைய அசைக்க முடியாத அபிப்பிரா யத்தில் உறுதியாக நின்றோம். இன்று அவற்றை நினைத்துப் பார்க்கும் பொழுது, நான் ஆதரித்த கருத்துக்கள் எனக்கு அவ்வளவு முக்கியமல்ல, அவற்றைச் சுலபமாகக் கைவிட்டிருக்க முடி யும் என்று தோன்றுகிறது. ஆனால் அவளுடைய கருத்துக்கள் வேறுவிதமாக இருந்தன, எனவே நான் மறுக்காதிருந்தால் அவளுக்கு விட்டுக் கொடுத்தது மாதிரியாகிவிடும். அது என்னால் முடியாது. அவளுக்கும் அது முடியாது. ஒரு வேளை தான் சொல்வதுதான் சரியானது என்று அவள் நினைத்திருக்கலாம். நான் சொல்வது தான் சரி என்று நான் நிச்சயமாகக் கருதி னேன். நாங்கள் இருவரும் தனியாக இருக்கும் பொழுது நாங்கள் மௌனமாக இருப்போம்

அல்லது அநேகமாக மிருகங்களைப் போல உரையாடலை நடத்துவோம்: 'இப்பொழுது என்ன நேரம்? தூங்குவதற்கு நேரமாயிற்று. இன்று மாலையுணவு என்ன? நாம் எங்கே போகலாம்? பத்திரிகையில் என்ன செய்தி? மாஷாவுக்குத் தொண்டையில் ஏதோ வலிக்கிறதாம். டாக்டரைக் கூட்டி வர வேண்டும்.' இந்த அளவுக்கு மிகவும் குறுகலான உரையாடல் தலைப்புகளிலிருந்து மயிரிழை அளவுக்கு விலகினால் கூட எங்களுக்கிடையே எரிச்சல் ஏற்படும் என்பது நிச்சயம். நாங்கள் திடீரென்று சீறுவோம். காபியைப்பற்றி, மேசை விரிப்புத் துணியைப் பற்றி, வண்டியைப் பற்றி, சீட்டாட்டத்தில் ஒரு வெட்டைப் பற்றி நாங்கள் திட்டிக் கொள்வோம். ஆனால் அவளுக்கோ, எனக்கோ இவை மிகக் குறைவான முக்கியத்துவத்தைப் பெற்றிருப்பது கூட சாத்தியமல்ல. சில சமயங்களில் அவளைப் பற்றி என்னுடைய வெறுப்பு மிகவும் நம்ப முடியாத எல்லையைக் கூட எட்டியது என்று என்னைப் பொறுத்தவரை நான் சொல்லிக் கொள்ள முடியும். சில சமயங்களில் அவள் தேநீர் ஊற்றுவதை, காலை ஆட்டுவதை, கரண்டியை வாயின் அருகில் கொண்டு போவதை அல்லது தேநீரை உறிஞ்சிக் குடிப்பதை நான் பார்க்கும் பொழுது—அந்த பாவனைகள் உலகத்திலேயே மிகவும் கொடிய குற்றங்களைப் போல —அவற்றுக்காக அவளை வெறுத்தேன். நான் அவளை வெறுக்கின்ற கட்டங்கள் காதல் என்று சொல்லப்படுகின்ற கட்டங்களை வாடிக்கையாகவும் தவிர்க்க முடியாமலும் பின்தொடர்ந்தன

என்பதை நான் அப்பொழுது கவனிக்கத் தவறினேன். ஒரு காதல் கட்டம், ஒரு வெறுப்புக் கட்டம்; ஒரு பலவீனமான காதல் கட்டம், ஒரு குறுகிய வெறுப்புக்கட்டம்; ஒரு தீவிரக் காதல் கட்டம், ஒரு நீண்ட வெறுப்புக் கட்டம். இந்தக் காதலும் வெறுப்பும் ஒரே மாதிரியான மிருக உணர்ச்சியின் வெவ்வேறுன அம்சங்கள் என்பதை நாங்கள் அப்பொழுது உணரவில்லை. உண்மை நிலையை நாங்கள் புரிந்து கொண்டிருந்தால் வாழ்க்கை ஒரு பயங்கரக்கனவாக மாறியிருக்கும். ஆனுல் நாங்கள் புரிந்து கொள்ளவில்லை. உண்மையான நிலைமை என்ன என்பதை நாங்கள் பார்க்கவில்லை. அதில்தான் ஒரு மனிதனுக்கு மீட்சியும் அவனுக்குத் தண்டனையும் இருக்கிறது. ஒரு மனிதருடைய வாழ்க்கை முறை எவ்வளவு தவருனதாக இருந்தாலும் தன்னுடைய நிலைமையின் சோகத்தை மறைப்பதற்காக அவர் அதையே தன்னிடமிருந்து மறைத்துக் கொள்ள முடிகிறது. அதைத்தான் நாங்களும் செய்தோம். அவள் அலுப்புத் தருகின்ற, குழப்பத்தைக் கொடுக்கின்ற வீட்டு வேலைகளில், அறைகளை ஒழுங்கு செய்வதில், தனக்கும் குழந்தைகளுக்கும் உடையலங்காரத்தில், படிப்பதில், குழந்தைகளின் உடல்நலத்தைப் பேணுவதில் கவனம் செலுத்தினுள். எனக்குப் போதையூட்டுவதற்குச் சொந்த வழிகள் இருந்தன—வேலை, வேட்டையாடுதல், சீட்டாட்டம் என்ற போதை. நாங்கள் இருவரும் நாள் முழுவதும் சுறுசுறுப்பாக இருந்தோம். நாங்கள் எவ்வளவு சுறுசுறுப்பாக இருக்

கிறேமோ, அந்த அளவுக்கு ஒருவருக்கொரு வர் எரிச்சலோடு நடந்துகொள்வதற்கு உரிமை இருப்பதாக இருவருமே நினைத்தோம். 'என்னிடம் உன் அழகான முகத்தைக் காட்ட வேண்டியதில்லை. உன் தொந்தரவினால் இரவு முழுவதும் நான் தூங்க முடியவில்லை. இப்பொழுது நான் மாநாட்டில் கலந்து கொள்ள வேண்டும்' என்று அவளை நோக்கி மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். 'உங்களுக்கு அது வேண்டியது தான். இராத்திரி முழுவதும் குழந்தை என்னைத் தூங்கவிடவில்லை' என்று அவள் மனதுக்குள் மட்டுமல்லாமல் வெளியிலும் சொன்னாள்.

''இப்படியே நாங்கள் தொடர்ந்து வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தோம். உண்மை நிலைமை என்ன என்று பார்க்க முடியாதபடி ஒரு வகையான மூடுபனி எங்களைத் தடுத்தது. பின்னர் நடைபெற்ற அந்தச் சம்பவம் ஒரு போதும் நடக்காதிருந்தால், முதிர்ந்த கிழப் பருவம் வரை நான் வாழ்ந்திருப்பேன். நான் நல்ல வாழ்க்கை—மிகவும் நல்ல வாழ்க்கை அல்ல, ஆனால் போதுமான அளவுக்கு நல்ல வாழ்க்கை, எல்லோரும் நடத்துவதைப் போன்ற நல்ல வாழ்க்கை — நடத்தியதாக மரணமடைகின்ற நாள் வரை நினைத்துக் கொண்டிருந்திருப்பேன். துன்பம், பொய்மை என்ற பாதாளத்தில் நான் உழன்றுகொண்டிருந்ததை ஒருபோதும் உணர்ந்திருக்க மாட்டேன்.

''ஒரே சங்கிலியைக் கொண்டு தொழு மரத்தில் கட்டப்பட்ட, ஒருவர் வாழ்க்கையை ஒரு

வர் அழித்துக் கொண்டு, ஆனால் அதை ஒத்துக் கொள்ள மறுக்கும் இரண்டு பரமவைரிகளைப் போல நாங்கள் இருந்தோம். எல்லாத் தம் பதிகளிலும் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தினர் இப்படிப்பட்ட வாழ்க்கைதான் நடத்துகிறார்கள், இது தவிர்க்க முடியாதது என்பதை நான் அப்பொழுது தெரிந்து கொள்ளவில்லை. என்னைப் பற்றியோ அல்லது மற்றவர்களைப் பற்றியோ இந்த விஷயம் அப்பொழுது எனக்குத் தெரியாது.

''ஒருவர் சரியாகவோ, தப்பாகவோ எப்படி வாழ்ந்தாலும் எவ்வளவு விசித்திரமான நிகழ்வுப் பொருத்தங்கள் வாழ்க்கையில் ஏற்படுகின்றன! தங்களுடைய வாழ்க்கையில் தாங்க முடியாத கட்டத்தைப் பெற்றோர்கள் அடைகின்ற பொழுது குழந்தைகளின் கல்வியை முன்னிட்டு நகரத்துக்கு மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. எங்களுக்கும் இந்த அவசியம் ஏற்பட்டது.''

அவர் பேசாமல் மௌனமாக இருந்தார். நெஞ்சின் அழுகையை அடக்கிக் கொள்வதைப் போன்ற சப்தம் அவரிடமிருந்து இரண்டு தடவை வெளிவந்தது. நாங்கள் ஒரு ரயில் நிலையத்தை நெருங்கிக் கொண்டிருந்தோம்.

''இப்பொழுது நேரம் என்ன?'' என்று அவர் கேட்டார்.

நான் கடிகாரத்தைப் பார்த்தேன். அப்பொழுது மணி இரண்டு ஆகியிருந்தது.

''நீங்கள் களைப்படையவில்லையா?'' என்று அவர் கேட்டார்.

''இல்லை. ஆனால் உங்களுக்குக் களைப்பாக இருக்குமே.''

''எனக்கு மூச்சுத்திணறுகிறது. நான் சிறிது தூரம் நடந்து சென்று, தண்ணீர் குடித்து விட்டுத் திரும்புகிறேன்.''

அவர் சற்றுத் தள்ளாடிக் கொண்டே நடை பாதை வழியாகச் சென்றார். நான் அங்கே தனி யாக உட்கார்ந்து அவர் பேசிய எல்லாவற்றை யும் மனதில் நினைத்துக் கொண்டிருந்தேன். அதிகமான சிந்தனையில் மூழ்கிவிட்டபடியால் மறு பக்கத்திலிருந்த கதவு வழியாக அவர் திரும்பியதை நான் கவனிக்கவில்லை.

## 18

''ஆம், என்னால் நிதானமாகப் பேச முடிய வில்லை'' என்று அவர் தொடங்கினார். ''பல விஷயங்களைப் பற்றிச் சிந்திப்பதில் நான் அதிக மான நேரத்தைச் செலவிட்டிருக்கிறேன். பல விஷயங்களை நான் வித்தியாசமாகப் பார்க்கி றேன். இவை எல்லாவற்றையும் தெரிவிக்க விரும்புகிறேன். சரி. நாங்கள் நகரத்தில் வசிக் கத் தொடங்கினோம். மகிழ்ச்சி இல்லாதவர் கள் நகரத்தில் வசிப்பது சுலபம்தான். ஒரு நபர் தான் நெடுங்காலத்துக்கு முன்பே செத்துப் போய் மண்ணோடு மண்ணாகச் சேர்ந்துவிட்ட தை உணராமலேயே நூறு வருடங்கள் நகரத் தில் வாழ்க்கை நடத்த முடியும். தன்னை அறிந்து

கொள்ள அங்கே நேரமில்லை. அங்கே எல்லோ ருக்கும் அவசரம் தான். தொழில் பிரச்சினை கள், சமூகச் சந்திப்புகள், உடல் நலம், கலை கள், குழந்தைகளின் உடல் நலம், அவர்களின் கல்வி இப்படியே. இன்று நீங்கள் ஒருவருக்கு விருந்தளிக்க வேண்டும். நாளை நீங்கள் ஒரு வரைச் சந்திக்க வேண்டும். இதைப் பார்க்க வேண்டும். அதைக் கேட்க வேண்டும். நகரத் தில் எப்பொழுதுமே ஒரு—ஒருவேளை இரண்டு அல்லது மூன்று கூட—பிரபலஸ்தர் இருப்பார். அவரைப் புறக்கணிக்க முடியாது. இவர் அல் லது அவர் அல்லது மற்றொருவருக்குச் சிகிச்சை வேண்டியிருக்கும். ஆசிரியர், விளக்குநர், ஆசி ரியை மொத்தத்தில் வாழ்க்கை பீப்பாயைப் போல காலியாக இருக்கும். இப்படித்தான் நாங்கள் வாழ்ந்தோம். நாங்கள் சேர்ந்து வாழ் வதிலுள்ள வேதனை அதில் தணிந்தது. புதிய நகரத்தில், புது வீட்டில் குடியிருக்கும் கவர்ச் சிகரமான பணியிலும் நகரத்திலிருந்து கிரா மத்துக்கும் கிராமத்திலிருந்து நகரத்துக்கும் பயணம் செய்வதிலும் நாங்கள் முதல் மாதங் களைக் கழித்தோம்.

''ஒரு குளிர்காலம் கழிந்தது, அடுத்த குளிர் காலத்தின் போது அற்பமான, முக்கியத்துவ மில்லாததைப் போலத் தோன்றும் ஒரு சம்ப வம் நடைபெற்றது. ஆனால் பின்னால் நடை பெற்றதற்கு அது நேரடியான பொறுப்பைக் கொண்டிருந்தது. அவளுக்கு உடல் நலமில்லை. அவள் இனிமேல் குழந்தை பெறக் கூடாதென்று அந்த ராஸ்கல்கள் சொன்னதோடு குழந்தை

பிறக்காமல் நிறுத்துவது எப்படி என்றும் அவளுக்குக் கற்பித்தார்கள். எனக்கு இது அருவருப்பாக இருந்தது. அதைத் தடுப்பதற்கு என்னுலியன்ற எல்லாவற்றையும் நான் செய்தேன். ஆனுல் அவள் விளையாட்டுத்தனமான பிடிவாதத்தோடு அதை வற்புறுத்திஞள். நான் விட்டுக் கொடுத்தேன். எங்களுடைய மிருக வெறிக்குக் கடைசிச் சாக்கு—குழந்தை—இப்பொழுது அகற்றப்பட்டு விட்டது. வாழ்க்கை முன் எப்போதுமிருந்ததைக் காட்டிலும் அருவருப்பானதாயிற்று.

''விவசாயிக்கும் உழைப்பாளிக்கும் குழந்தைகள் அவசியம். தங்கள் குழந்தைகளுக்கு உணவு கொடுப்பது எவ்வளவு கடினமாக இருந்தபோதிலும் குழந்தைகள் அவனுக்கு அவசியமே. அவனுடைய தாம்பத்திய வாழ்க்கையில் ஒரு நியாயம் இருக்கிறது. ஆனுல் மேல் வர்க்கங்களைச் சேர்ந்த நமக்குக் குழந்தைகள் இருக்கும் பொழுது இன்னும் அதிகமான குழந்தைகள் வேண்டியதில்லை. குழந்தைகள் என்ருல் அவர்களுக்குக் கவனிப்பும் செலவும் ஏற்படுகிறது; அவர்கள் பரம்பரைச் சொத்தின் விரும்பப்படாத வாரிசுகள்; அவர்கள் ஒரு சுமை. ஆகவே நம்முடைய மிருக வெறிக்கு எத்தகைய நியாயமும் கிடையாது. குழந்தைகள் இல்லாமற் செய்து கொள்வதற்கு நாம் செயற்கை வழிகளைக் கடைப் பிடிக்கிருேம். அல்லது அவர்களை ஒரு இடையூருக, அஜாக்கிரதையால் ஏற்பட்ட தவருகக் கருதுகிருேம். இது எல்லாவற்றையும் காட்டிலும் மிகவும் அருவருப்பானது.

இதற்கு எந்த நியாயமும் இல்லை. ஆனால் நாம் மிகவும் தாழ்ந்துவிட்டபடியால் நியாயப்படுத்துவதற்கு எத்தகைய அவசியமும் இருப்பதாகப் பார்ப்பதில்லை. கல்வி கற்றவர்களில் மிகப் பெரும்பான்மையினர் இன்று மனச்சாட்சி உறுத்தல் எவ்விதத்திலுமில்லாமல் ஒழுக்கக் கேட்டில் மூழ்கியிருக்கிறார்கள்.

''மனச்சாட்சியே ஒருக்காலும் இல்லாமல் இருக்கும் பொழுது நமக்கு மனச்சாட்சி உறுத்தல் எப்படி ஏற்படும். பொதுஜன அபிப்பிராயத்தையோ அல்லது கிரிமினல் சட்டத்தையோ நாம் ஒருவகையான மனச்சாட்சி என்று சொல்லிக் கொள்ள வேண்டியதே. ஆனால் அப்படிச் சொன்னாலும் இதுவும் பாதிக்கப்படப் போவதில்லை, அதுவும் பாதிக்கப்படப் போவதில்லை. எல்லோரும்—மரீயா பாவ்லவ்னாவும் இவான் ஸஹாரவிச்சும் கூட — அப்படி நடந்து கொள்வதால் பொதுஜன அபிப்பிராயம் ஆட்சேபிக்க முடியாது. (என்ன இது? நாங்கள் ஏராளமான பிச்சைக்காரர்களை உருவாக்க வேண்டுமென்று சொல்கிறீர்களா? அல்லது நாங்கள் உயர்ந்த வட்டாரங்களில் பொழுது போக்குகின்ற வாய்ப்பை இழக்க வேண்டுமென்று சொல்கிறீர்களா?) கிரிமினல் சட்டமா—அதைப் பற்றி இங்கே அச்சப்படுவதற்கு ஒன்றுமில்லையே. கீழ் நிலையிலுள்ள பெண்களும் படைவீரர்களின் இரவுராணிகளும் தான் தங்களுடைய குழந்தைகளைக் குளங்களிலும் கிணறுகளிலும் தூக்கிப்பொடுகிறார்கள். அவர்களைச் சிறையிலே தள்ள வேண்டும் என்

பது சரிதான். நாங்கள் எல்லாவற்றையும் தக்க நேரத்தில் நோய்கள் ஏற்படாதபடி பாதுகாப்போடு செய்கிறோம்.

''நாங்கள் இப்படியே இன்னும் இரண்டு வருடங்கள் வாழ்ந்தோம். அந்த ராஸ்கல்களுடைய முறைகள் சிறந்த பலனளித்தன. பிந்திய கோடைகாலத்தின் போது தோன்றும் பூவைப் போல அவள் மலர்ந்தாள், இன்னும் ஆரோக்கியமாகவும் அழகாகவும் மாறினாள். இதை உணர்ந்து அவள் தன்னைப் பற்றி மேலும் அதிகமான அக்கறை எடுத்துக் கொள்ளத் தொடங்கினாள். அவளுடைய அழகில் சவால் விடுவதைப் போன்ற, கலக்க மூட்டுகின்ற ஏதோ ஒரு அம்சம் இருந்தது. அவள் முழுவளர்ச்சி அடைந்த, முப்பது வயதான, குழந்தை பெறாத, வாளிப்பான, எழுச்சி நிறைந்த இளம் பெண். அவளை ஒரு தடவை பார்த்தாலே ஆண்களின் இதயம் படபடக்கும். அவள் ஆண்கள் மத்தியில் சென்ற பொழுது அவர்களுடைய பார்வையைக் கவர்ந்தாள். நிறையச் சாப்பிட்ட, வேலை வாங்கப்படாத குதிரைக்குப் பூரணமான அலங்காரங்களைச் செய்து திடீரென்று கடிவாளத்தை விட்டுவிட்டால் — அந்த மாதிரி அவள் இருந்தாள். நம்முடைய சமூகத்தில் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதப் பெண்களுக்குக் கடிவாளம் இல்லாதிருப்பதைப் போல அவளுக்கும் கடிவாளம் கிடையாது. நான் இதை உணர்ந்தபொழுது எனக்கு பயம் ஏற்பட்டது.''

## 19

அவர் திடீரென்று எழுந்து சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார்.

''என்னை மன்னியுங்கள்'' என்று சொல்லி விட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டார். அங்கே உட்கார்ந்து சன்னல் வழியாக அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தார். மூன்று அல்லது நான்கு நிமிடங்கள் கழிந்தன. பிறகு பெருமூச்சு விட்டுக் கொண்டே எனக்கு எதிரில் உட்கார்ந்தார். அவர் முகம் முற்றிலும் மாறி விட்டது, கண்களில் பரிதாபகரமான பார்வை தென்பட்டது, அவருடைய உதடுகள் சிரிப்பதைப் போல ஒரு மாதிரியாகச் சுளித்துக் கொண்டிருந்தன.

''எனக்குச் சற்றுக் களைப்பாக இருக்கிறது, இருந்தாலும் தொடர்ந்து சொல்கிறேன். விடிவதற்கு இன்னும் எவ்வளவோ நேரம் இருக்கிறது—வெளிச்சம் இன்னும் வரவில்லையே. ஆமாம்'' என்று சொல்லிக் கொண்டே அவர் சிகரெட்டைப் பற்ற வைத்தார். ''குழந்தை பிறப்பதை நிறுத்திய பிறகு அவள் சற்று உயரமாக, குண்டாக மாறினாள். இந்த நோய்—குழந்தைகளினால் ஏற்பட்ட அந்த இடைவிடாத துன்பம்—குணமடைந்தது. அது முற்றிலும் மறைந்துவிட்டதென்று சொல்ல முடியாது. குடிமயக்கத்திலிருந்து விழித்துக் கொள்கின்ற நபரைப் போல அவள் தன்னைச் சுற்றியிருந்த உலகத்தையும் அதன் உல்லாசங்களையும் திடீரென்று பார்த்தாள். அந்த உலகத்

தை, தன்னுல் பாராட்ட முடியாத, புரிந்து கொள்ள முடியாத உலகத்தை அவள் மறந்து போய் விட்டிருந்தாள். 'நான் இதை நழுவ விடக்கூடாது! காலம் ஓடிக் கொண்டிருக்கிறது, அது ஒருக்காலும் திரும்பாது!' அப்படித்தான் அவள் ஓரளவுக்கு நினைத்திருக்க வேண்டும் அல்லது உணர்ந்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது; அவள் வேறு விதமாக நினைத்திருக்கவோ, உணர்ந்திருக்கவோ முடியாது. இந்த உலகத்தில் ஒரே ஒரு விஷயத்துக்காக, காதலுக்காக மட்டுமே நாம் வாழ்கிறோம் என்று நம்பும்படியாக அவள் வளர்க்கப்பட்டிருந்தாள். அவள் திருமணம் செய்து கொண்டாள். அந்தக் காதலிலிருந்து சிறிதளவு அவளுக்குக் கிடைத்தபோதிலும் அவள் எதிர்பார்த்ததற்கு, அவளுக்குத் தரப்பட்ட வாக்குறுதியிலிருந்து அது மிகவும் தள்ளியிருந்தது. அதற்கு மாருக அது அதிகமான ஏமாற்றத்தையும் துன்பத்தையும்—குழந்தைகள் என்ற வடிவத்தில் முற்றிலும் எதிர்பார்க்கப்படாத சித்திரவதையையும் சேர்த்து — அவளுக்குக் கொடுத்தது! அந்தச் சித்திரவதை அவளை உருக்கிவிட்டது. இப்பொழுது பரிவுமிக்க டாக்டர்களின் உதவியால் குழந்தை பெருமல் தடுக்க முடியும் என்பதை அவள் தெரிந்து கொண்டாள். அவள் பரவசமடைந்தாள், இதை ரசித்தாள், வாழ்க்கையில் அவளுக்குத் தெரிந்த ஒரே ஒரு இலட்சியத்துக்காக—காதலுக்காக—அவள் மீண்டும் புத்துயிர் பெற்ருள். ஆனுல் கறைபடிந்த, பொருமையான, திடீர் திடீரென்று எரிச்சலமடைகின்ற

கணவனோடு காதலுக்காக அல்ல. அவள் வேறு விதமான காதலைப் பற்றி, புதுமையும் தூய்மையும் நிறைந்த ஒன்றைப் பற்றிக் கனவு காணத் தொடங்கினாள். குறைந்த பட்சம் அவளைப் பற்றி அப்படித்தான் நான் கற்பனை செய்து கொண்டேன். அவள் யாரையோ எதிர்பார்ப்பதைப் போல, தன்னைச் சுற்றிப் பார்க்கத் தொடங்கினாள். இதைக் கண்ட பொழுது எனக்குக் கலவரம் ஏற்பட்டது. அவள் வழக்கப்படி மற்றவர்கள் மூலமாக என்னிடம் பேசும் பொழுது (அதாவது அவள் மற்றவர்களிடம் பேசும்பொழுது அவளுடைய வார்த்தைகள் எனக்குச் சொல்லப்பட்டவையாக இருக்கும்) தாயார் தன் குழந்தைகளுக்காக வாழ்கிறாள் என்பது ஒரு பொய், ஒரு பெண் இளமையாகவும் வாழ்க்கையை அனுபவிக்கக் கூடியவளாகவும் இருக்கும்பொழுது குழந்தைகளுக்காகத் தன்னுடைய வாழ்க்கையை தியாகம் செய்வது சரியல்ல (அதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பு இதற்கு எதிரிடையான கருத்தைச் சொன்னதை மறந்துவிட்டு) என்று துணிவுடனும் பாதி கேலியாகவும் அவள் திரும்பத் திரும்பச் சொல்வதுண்டு. அவள் குழந்தைகளிடம் காட்டிய அக்கறை குறைந்தது. அந்தக் குறைவான அக்கறையில் கூட முன்பிருந்த மன முறிவான தீவிரம் இல்லை. தன்னை கவனித்துக் கொள்வதிலும் அலங்கரித்துக் கொள்வதிலும் மென்மேலும் அதிக நேரத்தைச் செலவிட்டாள். ஆனால் வேடிக்கைகளிலும் சுய—முன்னேற்றத்திலும் அந்த உண்மையை மறைக்கப் பாடுபட்

டாள். அவள் பியானோ வாத்தியத்தை மறந்து நெடுங்காலமாகிவிட்டது. மறுபடியும் பியானோ இசைப் பயிற்சியை உற்சாகத்துடன் தொடங்கினாள். எல்லாமே இதிலிருந்து தொடங்கியது.''

அவருடைய களைப்படைந்த கண்கள் மறுபடியும் சன்னலைப் பார்த்தன. கதையைத் தொடருமாறு தன்னை நிர்ப்பந்தித்துக் கொள்வதைப் போலத் தோன்றியது.

''ஐயா, அதற்குப் பிறகுதான் அந்த ஆள் வந்தான்.'' அவர் தயங்கினார். அந்த விசித்திரமான சப்தம் இரண்டு அல்லது மூன்று தடவைகள் அவரிடமிருந்து கேட்டது.

அந்த நபரின் பெயரைக் கூறுவது, அவரை நினைவு கூர்வது, அவரைப் பற்றிப் பேசுவது அவருக்கு வேதனையளிப்பதை நான் பார்த்தேன். அவர் சிரமப்பட்டுப் பேசினார். ஆனால் அவர் குரலில் தடைகளை நொறுக்குவதைப் போல ஒரு உறுதி நிறைந்திருந்தது.

''என்னுடைய கருத்தில், மதிப்பீட்டில் அவன் ஒரு இழி பிறவி. என்னுடைய வாழ்க்கையில் அவன் நடத்திய திருவிளையாடலினால் அல்ல, அவன் உண்மையிலேயே இழி பிறவி. அதோடு அவன் இழி பிறவியாக இருந்தது அவள் எவ்வளவு பொறுப்பற்றவளாகிவிட்டாள் என்பதை நிரூபிக்கிறது. அவன் இல்லையென்றால் வேறு யாராவது வந்திருப்பார்கள் —அது நடப்பது திண்ணம்.'' அவர் மறுபடியும் கதையை நிறுத்தினார். ''ஆம், அவன் ஒரு பாட

கன், வயலின் வித்வான் — தொழில் முறை யில் வயலின் வித்வான் அல்ல, பாதி பாடகன், பாதி சமூகப் பிரமுகர்.

''அவன் தகப்பனுர் ஒரு நிலவுடைமையா ளர், என் தகப்பனுருக்குப் பக்கத்து வீட்டுக் காரரர். அவன் தகப்பனுர் தன் பணம் முழுவ தையும் இழந்துவிட்டார், அவருடைய குழந் தைகள் — மூன்று பையன்கள் — வேலே செய் தார்கள், அதாவது கடைசிப் பையனைத் தவிர; அவனைப் பாரிசிலிருந்த ஞானத்தாயிடம் அனுப்பிவைத்தார்கள். அவனுக்கு இசைத்திறமை இருந்தபடியால் இசைப் பள்ளியில் சேர்த் தார்கள். அவன் வயலின் வித்வாஞனுன். இசை நிகழ்ச்சிகளில் வயலின் வாசித்தான். மனிதன் என்ற முறையில் அவன்...'' அவர் கடு மையான ஏதோ ஒரு வார்த்தையைச் சொல்ல விரும்பியிருக்க வேண்டும், ஆனுல் அவர் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு வேகமாகத் தொடர்ந்தார்: ''அங்கே அவன் எப்படிப் பட்ட வாழ்க்கை நடத்திஞன் என்று எனக்குத் தெரியாது. அந்த வருடத்தில் ருஷ்யாவுக்கு வந்தான், என்னுடைய வீட்டுக்கு வருகையளித் தான் என்பதுதான் எனக்குத் தெரியும்.

''ஈரம் புலர்ந்த, வாதுமைக் கொட்டை மாதிரியான கண்கள், சிரிப்புத் தவழும் சிவந்த உதடுகள், முறுக்கிவிடப்பட்ட மீசை, மிகச் சமீபத்திய நாகரிக பாணியில் தலேயலங்காரம் —கீழ்த்தரமான முறையில்—அவன் அழகான வன், பெண்கள் 'பாதகமில்லே' என்று சொல் கிஞர்களே அந்த அழகான தோற்றம்; நோஞ்

சலான ஆனுல் அவலட்சணமில்லாத உடலமைப்பு, பெண்களுக்கு இருப்பதைப் போல நன்கு வளர்ச்சியடைந்த பின்புறம்; ஹாட்டென் டாட்டுகளுக்கும் அதே மாதிரி முதுகு இருப் பதாகச் சொல்கிருர்கள். ஹாட்டென்டாட்டு களும் இசைத் திறமை உடையவர்கள் என்று நான் கேள்விப்பட்டிருந்தேன். சந்தர்ப்பம் கொடுத்தால் அவன் நெருங்கிப் பழகக் கூடிய வன்; ஆனுல் கூருணர்ச்சி உடையவனுதலால் லேசாக முகத்தைச் சுளித்தால் கூடப் பின்வாங் கிவிடுவான். அவன் விறைப்பாகப் பெருமை யோடு நிற்பான். பிரத்யேகமான பாரிஸ் பாணியில் பொத்தான்கள் வைத்த பூட்சுகள், பளிச்சென்று தெரிகின்ற டை மற்றும் வெளிநாட்டுக்காரர்கள் பாரிசில் வாங்கக் கூடிய பொருள்களை—பெண்கள் எப்பொழுதுமே இவற்றின் புதுமை மற்றும் கற்பனை உயர்வி ஞல் கவர்ச்சிக்கப் படுவார்கள்—அணிந்திருந் தான். அவனிடம் எப்பொழுதுமே ஒரு போலி யான, மேலெழுந்த வாரியான குதூகலம் இருந் தது. அவன் அங்கொன்றும் இங்கொன்றுமாக, அரை குறையாக, அவன் என்ன சொல்ல விரும்புகிருன் என்பது எல்லோருக்குமே தெரி யும், வாக்கியத்தை அவர்களே பூர்த்தி செய்து கொள்ளலாம் என்பதைப் போலப் பேசுவான்.

''அவனும் அவனுடைய இசையுமே எல்லா வற்றுக்கும் காரணம். விசாரணையில் எல்லாமே பொருமையின் விளைவாக நடைபெற்றன என்று எடுத்துக் காட்ட முயற்சி செய்யப்பட்டது.

அப்படியல்ல—அதாவது அவர்கள் சொன்ன மாதிரி அல்ல—ஆனாலும், அந்த விதத்தில் அல்ல. நீதி விசாரணையில் நான் வஞ்சிக்கப் பட்ட கணவன், என் கௌரவத்தைக் (அதற்கு அவர்கள் அப்படித்தான் பெயர் சூட்டினார்கள்) காப்பதற்காக என் மனைவியைக் கொன்றேன் என்று முடிவு செய்யப்பட்டது. எனவே என்னை விடுதலை செய்தார்கள். விசாரணையின் போது எல்லா விஷயங்களையும் அவற்றின் உண்மை யான சொரூபத்தில் விளக்குவதற்கு நான் முயற்சி செய்தேன். ஆனால் அவர்களோ, என் மனைவியின் நற்பெயரைக் காப்பாற்ற முயற்சி செய்வதாகக் கருதினார்கள்.

''அந்தப் பாடகனோடு அவளுடைய உறவு கள் எப்படியிருந்தபோதிலும் அவை எனக்கு எந்த முக்கியத்துவத்தையும் கொண்டிருக்க வில்லை. அவளுக்கும் அப்படியேதான். எனக்கு முக்கியமானதாக இருந்த ஒரே ஒரு விஷயத் தைப் பற்றி என்னுடைய மிருக வெறியைப் பற்றி நான் உங்களிடம் ஏற்கெனவே சொன் னேன். எங்களுக்கிடையே பயங்கரமான பிளவு —அதைப் பற்றி உங்களிடம் முன்பே கூறி னேன்—ஏற்பட்டிருந்ததுதான் எல்லாவற்றுக் குமே காரணம். எங்களுக்கிடையே பரஸ்பர வெறுப்பு மிக அதிகமாக முறுக்கியிருந்தபடி யால் எல்லாவற்றையும் உச்சகட்டத்துக்குக் கொண்டு வருவதற்கு ஒரு சாதாரண வார்த் தை கூடப் போதுமானதாக இருந்தது. எங் களுக்கிடையே பயங்கரமான சண்டைகள் ஏற் பட்டன. அதிலும் தீவிரமான மிருக வெறிக்

கட்டங்களோடு அவை மாறி மாறி வந்து கொண்டிருந்தபடியால் அவை மேலும் அதிக பயங்கரமாக இருந்தன.

''அந்த நபர் வந்திருக்காவிட்டால் இன்னொருவன் வந்திருப்பான். பொறுமை உந்தித் தள்ளுகின்ற சக்தியாக இருந்திருக்காவிட்டால் அதற்குப் பதிலாக வேறொன்று வந்திருக்கும். என்னைப் போல வாழ்க்கை நடத்துகின்ற எல்லாக் கணவர்களுமே முற்றிலும் கெட்டவர்களாக இருக்க வேண்டும் அல்லது தங்கள் மனைவிகளை விட்டுப் பிரிந்து விட வேண்டும் அல்லது தங்களையோ தங்களுடைய மனைவிகளையோ—என்னைப் போல—கொலை செய்ய வேண்டும். நான் என் மனைவியைக் கொன்றேன். யாராவது இந்த நிலைமையிலிருந்து தப்ப முடிந்தால் அது அபூர்வமான விதிவிலக்காகத் தான் இருக்க முடியும். இந்தச் சிக்கலை இந்த விதமாக நான் முடிவுக்குக் கொண்டு வருவதற்கு முன்பு தற்கொலை செய்து கொள்ளும் கட்டத்துக்குச் சில முறை வந்து விட்டேன். அவளும் விஷத்தைக் குடித்துச் சாக முயற்சி செய்தாள்.''

## 20

''ஆம், முடிவுக்குச் சற்று முன்பாக இருந்த நிலைமை இதுதான்.

''நாங்கள் ஒரு வகையான போர் நிறுத்தக் கட்டத்தில் இருந்தோம். அந்த சமாதானத்தைத் தொடர்ந்து காப்பாற்றியிருக்க வேண்டும். ஆனால் ஒரு நாள் கண்காட்சியில் ஏதோ

ஒரு நாய்க்குப் பதக்கம் கொடுத்திருப்பதாகச் சொன்னேன். 'பதக்கம் கொடுக்கவில்லை; நற் சான்றிதழ்தான் கொடுத்திருக்கிறார்கள்' என்று அவள் கூறினாள். நாங்கள் விவாதிக்கத் தொடங்கினோம். ஒரு விஷயத்திலிருந்து இன்னொரு விஷயத்துக்குத் தாவினோம். ஒருவரையொருவர் ஏசிக் கொண்டோம். 'எல்லோருக்குமே தெரியும். எப்பொழுதுமே இப்படித் தான். நீங்கள் சொன்னது...' 'நான் அப்படிச் சொல்லவில்லை.' 'அப்படியானால் நான் பொய் சொல்கிறேனா?..' அவளைக் கொல்ல வேண்டும் அல்லது நான் சாக வேண்டும் என்ற வெறியைத் தூண்டுகின்ற பயங்கரமான சண்டையின் விளிம்புக்கு நாங்கள் வந்துவிட்டோம் என்பதை நான் உணர்ந்தேன். அதன் விளிம்பில் நிற்கிறோம் என்பது நிச்சயம். நெருப்பைப் போல அதைக் கண்டு அஞ்சினேன். என்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள விரும்பினேன். ஆனால் என் உடல் முழுவதும் நெருப்பு கொழுந்து விட்டு எரிந்தது. அவளும் அதே நிலைமையில் அல்லது அதைக் காட்டிலும் மோசமான நிலைமையில் இருந்தாள். நான் சொன்னதை அவள் வேண்டுமென்றே திரித்துக் கூறினாள், என்னுடைய வார்த்தைகளுக்குத் தவறான அர்த்தத்தைக் கொடுத்தாள். அவள் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் நஞ்சில் தோய்ந் திருந்தது. என்னிடம் மிகவும் பலவீனமான அம்சங்களை அவள் தேடினாள். அங்கே அவள் என்னைத் தாக்கப் போவது நிச்சயம். 'வாயை மூடு' என்று அல்லது அதைப் போலஎதையோ

நான் கத்தினேன். அவள் குதித் தெழுந்து குழந்தைகள் அறைக்கு ஓடினுள். நான் சொல்ல வந்ததைச் சொல்லி முடிப்பதற்காக அவளை நிறுத்த முயற்சி செய்தேன். அவள் கையைப் பிடித்து இழுத்தேன். அவள் காயம டைந்தவளைப் போலப் பாசாங்கு செய்துகொண்டு 'குழந்தைகளே! உங்கள் அப்பா என்னை அடிக்கிருர்' என்று கத்தினுள். 'பொய் சொல் லாதே!' என்று நான் அதட்டினேன். 'இது முதல் தடவையல்ல!' என்று அல்லது அந்த மாதிரியாக அவள் திருப்பிக் கத்தினுள். குழந் தைகள் அவளை நோக்கி ஓடிவந்தார்கள். அவள் குழந்தைகளை அமைதிப் படுத்த முயற்சி செய் தாள். 'பாசாங்கு செய்யாதே!' என்று நான் சொன்னேன். 'உங்களுக்கு எல்லோமே பாசாங்கு தான். ஒருவரைக் கொன்றுவிட்டு அந்த நபர் பாசாங்கு செய்வதாகக் கூட நீங்கள் சொல் வீர்கள். இப்பொழுது எனக்கு எல்லாமே புரி கிறது. நீங்கள் அதைச் செய்ய விரும்புகிறீர் கள்!' 'நீ ஒழிந்து போ!' என்று நான் கத்தி னேன். என்னுடைய வார்த்தைகளைக் கேட்டு நானே எவ்வளவு பயந்துவிட்டேன் என்பது இப்பொழுது கூட எனக்கு நினைவிருக்கிறது. அவ்வளவு மூர்க்கமான, பயங்கரமான வார்த்தை களை நான் உச்சரிக்க முடியும் என்று நான் கரு தியதில்லை. என்னுடைய வாயிலிருந்து தான் அந்த வார்த்தைகள் வந்தன என்று கூட என்னுல் நம்ப முடியவில்லை. அவ்வாறு கூக்குரலிட்ட பிறகு நான் என்னுடைய படிப்பறைக்குள் ஓடினேன், உட்கார்ந்தேன், புகை பிடிக்கத்

தொடங்கினேன். அவள் ஹாலுக்குள் போய் உடைகளை மாற்றிக் கொள்கின்ற ஓசை எனக்குக் கேட்டது. எங்கே போகிருய் என்று அவளைக் கேட்டேன். அவள் பதிலளிக்கவில்லை. 'எங்காவது தொலையட்டும்' என்று நான் மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். படிப்பறைக்குத் திரும்பினேன். அங்கே படுத்துக் கொண்டு மறுபடியும் புகை பிடிக்கத் தொடங்கினேன். அவளைப் பழிவாங்குவதற்கு, ஒழித்து விடுவதற்கு, நிலைமையை ஒட்டுப் போட்டு ஒன்றும் நடக்காததைப் போல வாழ்க்கையைத் தொடர்வதற்கு ஓராயிரம் திட்டங்கள் என் மூளையில் உதித்தன. அங்கே படுத்தபடியே சிந்தித்துக் கொண்டு புகைபிடித்துக் கொண்டிருந்தேன், தொடர்ந்து புகைபிடித்துக் கொண்டேயிருந்தேன். அவளை விட்டு ஓடிப் போய்விடலாமா, மறைந்து விடலாமா, அமெரிக்காவுக்குப் போய்விடலாமா என்று யோசித்தேன். அவள் குறுக்கிடாத வாழ்க்கை எவ்வளவு நன்ருக இருக்கும் என்று கற்பனை செய்யும் கட்டத்துக்கு வந்துவிட்டேன். ஆ! அது அற்புதமாக இருக்கும்! இன்னெரு பெண்ணேடு, அழகான பெண்ணேடு, முற்றிலும் வேறுவிதமான பெண்ணேடு என் வாழ்க்கையை இணைத்துக் கொள்ள வேண்டும். அவளை சாகடிப்பதன் மூலம் அல்லது விவாகரத்துச் செய்வதன் மூலம் அவள் தொல்லையே இல்லாமற் செய்துவிட வேண்டும். இதை எப்படி நிறைவேற்ற வேண்டும் என்று திட்டமிடுவதற்குத் தொடங்கினேன். நான் நினைக்கக் கூடாத விஷயங்களை நினைப்பதை உணர்ந்

தேன். அந்த உணர்வைச் சந்திக்காதிருப்பதற்காகப் புகை பிடித்தேன்.

''வழக்கம் போல வீட்டில் எல்லாக் காரியங்களும் நடைபெற்றன. ஆசிரியை வந்தாள்; எசமானி எங்கே போயிருக்கிருர்கள், எப்பொழுது திரும்புவார்கள் என்று கேட்டாள். வேலைக்காரன் வந்து மாலைத் தேநீர் தயாரிக்கட்டுமா என்று கேட்டான். நான் உணவருந்தும் அறைக்குள் சென்றேன். குழந்தைகள்— குறிப்பாக அவற்றைப் புரிந்து கொள்கின்ற அளவுக்கு வளர்ந்தவளான லீஸா—என்ன நடந்தது என்று கேட்பதைப் போல ஈரமற்ற முறையில் என்னைப் பார்த்தார்கள். நாங்கள் மௌனமாகத் தேநீர் அருந்திேனும். அவள் திரும்பி வரவில்லை. மாலைப் பொழுது மறைந்தது. அதற்குப் பிறகும் அவள் திரும்பவில்லை. வீட்டுக்குத் திரும்ப வேண்டியதுதான் என்று தெரிந்திருந்த போதிலும் வராமலிருப்பதன் மூலம் என்னையும் குழந்தைகளையும் அவள் சித்திரவதை செய்வதை நினைத்துக் கோபம், அவள் திரும்பி வராமல் தற்கொலை செய்து கொள்வாளோ என்ற அச்சம் — இப்படி இரண்டு விதமான உணர்ச்சிகள் எனக்குள் சண்டையிட்டுக் கொண்டன. நான் அவளைத் தேடிப் போயிருப்பேன். ஆனுல் எங்கே போவது? அவளுடைய சகோதரியின் வீட்டுக்கா? நான் அங்கே சென்று அவளைப் பற்றி விசாரித்தால் அது அசட்டுத்தனமாக இருக்கும். அவள் அதைத்தானே எதிர்பார்க்கிருள்,தொலையட்டும்! யாரையாவது துன்புறுத்த வேண்டுமென்று

அவள் மிகவும் விரும்பினுல் தன்னையே துன் புறுத்திக் கொள்ளட்டும். இல்லையென்ருல் அடுத்த சண்டை இதைக் காட்டிலும் மோசமாக இருக்கும். ஆனுல் அவள் சகோதரி வீட்டில் இல்லாமல் தன் உயிரைப் போக்கிக் கொள்ள உத்தேசித்தால் அல்லது ஏற்கெனவே அப் படிச் செய்திருந்தால்?.. இரவு மணி பதினென்று, பனிரண்டு, ஒரு மணி. நான் படுக்கை அறைக் குள் போகவில்லை—அங்கே போய் தனியே படுத்துக் கொண்டு அவளுக்காகக் காத்திருப் பது அசட்டுத்தனம். படிக்கும் அறையிலும் என் ஞல் படுக்க முடியவில்லை. சுறுசுறுப்பாக எதை யாவது செய்ய, கடிதங்கள் எழுத, படிக்க விரும்பினேன்; ஆனுல் என்னுல் ஒன்றும் செய்ய முடியவில்லை. என் படிப்பறையில் தனியாக, என் சிந்தனைகளால் சித்திரவதை செய்யப்பட்டவனுக, ஏதாவது சிறு சத்தம் கேட்காதா என்று எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தேன். மூன்று மணி, நான்கு—அவள் இன்னும் வரவில்லை. விடி வதற்குச் சிறிது முன்னுல் நான் தூங்கிவிட்டேன். நான் கண் விழித்தேன். அவள் வரவில்லை.

''வீட்டில் வாழ்க்கை தொடர்ந்தது. ஆனுல் ஒவ்வொருவரும் என்னை விசாரிப்பதைப் போல வும் கண்டிப்பதைப் போலவும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். என்னுடைய தவறுகளே எல்லாவற்றுக்கும் காரணம் என்று அவர்கள் முடிவு செய்துவிட்டார்கள். என் மனதில் அதே மாதிரியான போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது: என்னைத் துன்புறுத்துவதற்

காக அவள் மீது ஆத்திரமும் அவளைப் பற்றிக் கவலையும் எனக்கு ஏற்பட்டது.

''சுமார் பதினொரு மணிக்கு அவளுடைய சகோதரி அவளிடமிருந்து தூது வந்தாள். 'அவள் பயங்கரமான நிலைமையில் இருக்கிறாள். என்ன நடந்தது?' என்று வழக்கமான முறையில் தொடங்கினாள். 'ஏன்? ஒன்றும் நடக்கவில்லையே' என்று நான் பதிலளித்துவிட்டு அவள் குணம் மிகவும் மோசம், மற்றபடி நான் ஒன்றுமே செய்யவில்லை என்று சொன்னேன்.

'' 'ஆனால் இப்படியே நிலைமை நீடிக்க முடியுமா?' என்று அவள் சகோதரி கேட்டாள்.

'' 'அதை அவள்தான் முடிவு செய்ய வேண்டும், நானல்ல. முதல் முயற்சியை நான் செய்ய முடியாது. பிரிந்து விடுவதுதான் சரியென்றால் நாங்கள் பிரிந்துவிட வேண்டியதுதான்' என்று நான் கூறினேன்.

''என் மனைவியின் சகோதரி திருப்தியில்லாமல் திரும்பிப் போனாள். நான் முதல் முயற்சியைச் செய்ய முடியாது என்று துணிச்சலாகச் சொல்லிவிட்டேன். அவள் போன பிறகு நான் வெளியே வந்தேன். என்னுடைய குழந்தைகள் அச்சமடைந்து பரிதாபமாக நிற்பதைப் பார்த்த பொழுது அதைப் பற்றி மறுபடியும் சிந்திப்பதற்கு நான் முற்றிலும் தயாராக இருந்தேன். நான் மகிழ்ச்சியோடு முதல் முயற்சியைச் செய்திருப்பேன். ஆனால் எப்படிச் செய்ய வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. மறுபடியும் அறையில் நடந்து கொண்டே புகை பிடித்தேன். காலைச் சிற்றுண்டியின் போது

வோட்காவும் ஒயினும் சாப்பிட்டேன். தன்னுணர்ச்சியில்லாமல் நான் எதற்காக ஏங்கிக் கொண்டிருந்தேனே அதைப் படிப்படியாக அடைந்தேன்: என்னுடைய நிலை எவ்வளவு இழிவானது, முட்டாள்தனமானது என்பதை மறந்துவிட்டேன்.

''சுமார் மூன்று மணி அளவில் அவள் வீட்டுக்குத் திரும்பினாள். என்னைப் பார்த்த பொழுது அவள் ஒன்றும் பேசவில்லை. அவள் தன்னுடைய தவறுக்கு வருந்துவதாக நான் நினைத்துக் கொண்டு என்னுடைய விளக்கத்தைத் தொடங்கினேன். அவளுடைய பேச்சு என்னுடைய ஆத்திரத்தைத் தூண்டிவிட்டது, அதனால்தான் அப்படிப் பேசிவிட்டதாகக் கூறினேன். நான் விளக்கம் கூறுவதற்காக வரவில்லை, குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு போவதற்காகத் தான் வந்திருக்கிறேன், நாம் இனிமேல் ஒன்றாக வாழ்க்கை நடத்த முடியாது என்று அதே கண்டிப்பான முறையில், கனிவில்லாத முகத்தோற்றத்தோடு அவள் கூறினாள். அது என்னுடைய தவறு அல்ல, என்னை மனமுறிவுக் கட்டத்துக்குத் துரத்தியது அவள்தான் என்று சொல்ல முயற்சி செய்தேன். அவள் ஒரு விநாடி நேரம் என்னை எரிச்சலோடு, வெறுப்புக் கலந்த மகிழ்ச்சியோடு பார்த்தாள்.

'' 'என்னிடம் இதற்கு மேல் பேச வேண்டாம். பிறகு நீங்கள்தான் வருத்தப்பட வேண்டியிருக்கும்' என்றாள்.

''இந்த நாடகமெல்லாம் என்னிடம் வேண்டாம் என்று நான் கூறினேன். உடனே அவள்

புரிய முடியாதபடி ஏதோ கத்திவிட்டுத் தன்னுடைய அறைக்குள் ஓடினுள். கதவில் சாவியைத் திருப்புகின்ற சத்தம் எனக்குக் கேட்டது.

''அவள் உள்ளேயிருந்தபடியே கதவைப் பூட்டிக் கொண்டாள். நான் கதவைத் தட்டினேன், பதில் இல்லே. எனக்கு வந்த ஆத்திரத்தில் கதவை ஓங்கி மிதித்தேன். அரை மணி நேரத்துக்குப் பிறகு லீஸா கண்ணீரோடு என்னிடம் ஓடி வந்தாள்.

'' 'என்ன? என்ன நடந்தது?'

'' 'அம்மாவின் அறையிலிருந்து எந்த சத்தமும் இல்லே.'

''நாங்கள் அறைக்குச் சென்ருேம். நான் முழு பலத்தோடும் கதவைப் பிடித்து இழுத்தேன். பூட்டு உடைந்தது. இரு பகுதிக் கதவுகளும் திறந்து கொண்டன. நான் கட்டிலுக்குப் பக்கத்தில் சென்றேன். அவள் ஸ்கர்ட், பூட்ஸ் அணிந்தவாறு அலங்கோலமான நிலேயில் மயக்கமாகக் கிடந்தாள். மேசையின் மேல் ஒரு அபின்குப்பி காலியாக இருந்தது. நாங்கள் அவளே சுய நினேவுக்குக் கொண்டுவந்தோம். மறுபடியும் கண்ணீர், கடைசியில் சமரசம். ஆனுல் அது உண்மையான சமரசமல்ல. எங்கள் ஒவ்வொருடைய இதயத்திலும் பழைய பகைமை நீடித்தது. இந்தச் சண்டைக்கு ஒவ்வொருவரும் அடுத்தவர் காரணம் என்று கூறினேம். அந்தச் சண்டை எங்கள் ஒவ்வொருவருக்கும் ஏற்படுத்திய துன்பத்தினுல் வந்த எரிச்சலும் அதோடு சேர்ந்து கொண்டது.

ஆனுல் நாங்கள் அந்த எரிச்சலை நிரந்தரமாக வைத்துக் கொண்டிருக்க முடியாது. எனவே வாழ்க்கை மறுபடியும் பழைய பாதையில் சென்றது. இதைப் போன்ற சச்சரவுகள்—அல்லது இதைக் காட்டிலும் மோசமானவை — எப்பொழுதும் மாதத்துக்கு ஒரு தடவை, வாரத்துக்கு ஒரு தடவை, ஒவ்வொரு நாளும் ஒரு தடவை நடைபெற்றன. அதே அனுபவம் திரும்பத் திரும்ப ஏற்பட்டது. ஒரு சமயம் நான் வெளிநாட்டுக்குப் போவதற்காகப் பிரயாண அனுமதிக்கு மனுக் கொடுத்தேன் (எங்கள் சச்சரவு இரண்டு நாட்களாக நீடித்தது); ஆனுல் அதற்குப் பிறகு பாதி விளக்கமும் பாதி சமரசமும் ஏற்பட்டது, நான் வெளிநாட்டுக்குப் போகவில்லை.''

## 21

''எங்களிருவருக்குமிடையே உறவுகள் இப்படிப்பட்ட நிலைமையில் இருக்கும் பொழுது தான் அவன் (த்ருஹசேவ்ஸ்கி என்பது அவனுடைய பெயர்) எங்கள் வீட்டுக்கு வந்தான். மாஸ்கோவுக்கு வந்தவுடனே என்னைப் பார்ப்பதற்காகக் காலை நேரத்தில் வந்தான். நான் அவனை வரவேற்றேன். ஒரு காலத்தில் நானும் அவனும் மிகவும் நெருங்கிப் பழகியபொழுது, நீ, வாடா, போடா என்றுபேசிக் கொள்வோம். எங்கள் உரையாடலின் போது அந்தப் பழைய நெருக்கமான நட்பை மறுபடியும் ஏற்படுத்த, ஓரிரு தடவைகள் என்னை நீயென்று கூப்பிட அவன் முயற்சி செய்தான். ஆனுல் நான் ஆரம்பத்திலிருந்தே

நீங்கள் என்று அவனைக் கூப்பிட்டு, அவனோடு நெருக்கமான உறவை நான் விரும்பவில்லை என்பதை நேரடியாகத் தெளிவுபடுத்தி விட்டேன். என்னுடைய வெடுக்குப் பேச்சுக்குத் தகுந்தவாறு அவன் தன்னை மாற்றிக்கொண்டான். அவனைப் பார்த்த முதல் வினாடியிலிருந்தே எனக்கு அவனைப் பிடிக்கவில்லை. ஆனால் அவனிடம் முகத்தை முறித்துக் கொள்ளாமல், அவனைத் திருப்பி அனுப்பாமல் ஏதோ ஒரு விசித்திரமான, ஆபத்தான சக்தி என்னைத் தடுத்ததோடு, அதற்கு மாறாக அவனை ஊக்குவிக்குமாறு செய்தது. அவனை வெறுப்போடு பார்த்து, என் மனைவியை அவனுக்கு அறிமுகப் படுத்தாமல் அவனைத் திருப்பி அனுப்பியிருக்க முடியும். அது சுலபமான காரியம்தான். ஆனால் ஏனோ நான் அவனுடைய இசைத் தொழிலைப் பற்றிப் பேசினேன், அவன் வயலின் வாசிப்பதை நிறுத்திவிட்டதாக யாரோ சொன்னதாகவும் கூறினேன். அவன் அதை மறுத்தான். முன்னைக் காட்டிலும் இப்பொழுது அதிகமாக வயலின் வாசிப்பதாகக் கூறினான். ஒரு காலத்தில் நான் வயலின் வாசித்ததை அவன் நினைவுபடுத்தினான். நான் இப்பொழுது அதை விட்டு விட்டேன், ஆனால் என் மனைவி நன்றாக பியானோ வாசிப்பாள் என்றேன்.

''ஒரு ஆச்சரியமான விஷயம்! அவனுடைய வருகையின் விளைவு எப்படி இருக்கப் போகிறது என்று நான் முன்னறிந்ததைப் போல முதல் நாளிலிருந்து, முதல் மணியிலிருந்தே அவனோடு என்னுடைய உறவுகள் இருந்தன. எங்களுக்

கிடையே ஒரு வகையான இறுக்கம் நிலவியது. நாங்கள் உபயோகித்த ஒவ்வொரு வார்த்தை யையும் ஒவ்வொரு பாவத்தையும் நான் கவன மாகப் பார்த்தேன். அவை விசேஷ முக்கியத்து வத்தைக் கொண்டிருப்பதாகக் கருதினேன்.

''அவனை என் மனைவிக்கு அறிமுகம் செய் தேன். பேச்சு உடனடியாக இசையைப் பற்றித் திரும்பியது. அவன் அவளுக்கு இசைப்பயிற்சி தருவதற்கு முன்வந்தான். என் மனைவி சிறப் பாகவும் கவர்ச்சிகரமான முறையிலும் உடை யணிந்திருந்தாள் (சமீப காலமாக அவள் எப் பொழுதுமே அப்படித்தான் உடையணிந்தாள்). மனதில் கிளர்ச்சியூட்டும் வகையில் அழகாகத் தோன்றினாள். ஆரம்பத்திலிருந்தே அவளுக்கு அவனைப் பிடித்துவிட்டது போலத் தோன்றியது. மேலும் பியானோ மற்றும் வயலின் இரு குர லிசை வாய்ப்பும் அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஏனென்றால் அவள் இதை மிகவும் விரும்பினாள். தன்னோடு வாசிப்பதற்காக நாடக அரங்கத்திலிருந்து ஒரு வயலின் வித்வானை அவள் அடிக்கடி கூப்பிடுவதும் அவருக்கு சன் மானமளிப்பதுமுண்டு. அவள் முகம் மகிழ்ச்சி யைக் காட்டியது. அவள் என் முகத்தைப் பார்த்தபொழுது நான் அதைப் பற்றி என்ன நினைக்கிறேன் என்பதைப் புரிந்துகொண்டாள், உடனே தன்னுடைய முகபாவத்தை மாற்றிக் கொண்டாள். நாங்கள் ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொள்ளும் விளையாட்டு தொடங் கியது. நான் புன்சிரிப்போடு உட்கார்ந்திருந் தேன், மகிழ்ச்சியடைந்ததைப் போலப்

பாசாங்கு செய்தேன். எல்லாக் காமுகர்களும் பெண்களைப் பார்க்கின்ற அதே முறையில் அவன் என் மனைவியைப் பார்த்தான். ஆனால் நாங்கள் பேசிக்கொண்டிருக்கும் விஷயத்தைப் பற்றி மட்டுமே அக்கறை கொண்டிருப்பதைப் போல நடித்தான். அதாவது, அதைப் பற்றி அவனுக்குச் சிறிதும் அக்கறை கிடையாது. அவளும் அக்கறை இல்லாதவளைப் போலத் தோன்றுவதற்கு முயற்சி செய்தாள். எனினும் பொறாமை உணர்ச்சியுடைய தன்னுடைய கணவரின் போலிச் சிரிப்பும் (அந்தச் சிரிப்பைப் பற்றி அவளுக்கு நன்றாகத் தெரியும்) விருந்தினரின் காமப் பார்வையும் அவளிடம் கலவரத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். அவள் முதல் தடவை அவனைப் பார்க்கும் பொழுது அவளுடைய கண்களில் ஒரு விசேஷமான பிரகாசம் ஏற்பட்டதை நான் கவனித்தேன். அவர்களுக்கிடையே ஏற்பட்ட மின்சாரப் பாய்ச்சலுக்கு, அவர்கள் புன்சிரிப்புக்களையும் பார்வைகளையும் அர்த்தம் நிறைந்த பாவங்களையும் பரிமாறிக் கொண்டதற்கு ஒருவேளை என்னுடைய பொறாமை காரணமாக இருந்திருக்கலாம். அவள் நாணத்தைக் காட்டினாள்—அவனும் வெட்கப்படுவது போல இருந்தான். அவள் புன்னகை செய்தாள்—அவனும் புன்னகை செய்தான். நாங்கள் இசையைப் பற்றி, பாரிசைப் பற்றி, பல்வேறு அற்பமான விஷயங்களைப் பற்றிப் பேசினோம். அவன் புறப்படுவதற்காக எழுந்தான், தன்னுடைய துடிக்கும் பின்காலின் சதைப் பகுதிக்குப் பக்கத்தில்

தொப்பியை நீட்டிக்கொண்டு புன்னகை செய்தவாறு நின்ருன். நாங்கள் என்ன செய்யப் போகிருேம் என்று எதிர்நோக்குபவரைப் போல அவளேயும் என்னேயும் பார்த்தான். அந்தத் தருணம் என்னுடைய நினேவில் விசேஷமாகப் பதிந்துவிட்டது. ஏனென்ருல் அந்தத் தருணத்தில் அவனே மறுபடியும் வீட்டுக்கு வருமாறு அழைக்காமலிருந்திருக்க முடியும். அப்படித் தவிர்த்திருந்தால் பின்விளேவுகள் ஏற்பட்டிருக்காது. ஆனுல் நான் அவனேப் பார்த்தேன், பிறகு அவளேப் பார்த்தேன். 'நான் பொருமைப்படுவதாக நினேக்காதே' என்று அவளிடம் மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். 'நான் உன்னிடம் பயப்படுவதாக நினேக்க வேண்டாம்' என்று அவனே நோக்கி மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். பிறகு அவனிடம் வயலினே எடுத்துக் கொண்டு ஒரு நாள் மாலேயில் வர வேண்டும், என் மனேவியோடு கூட்டாக வயலின் வாசிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன். அவள் ஆச்சரியமடைந்து என்னேப் பார்த்தாள், நாணமடைந்தாள்; எதைப் பற்றியோ அஞ்சுவதைப் போல, என்னுடைய வாசிப்பு மிகவும் மோசமாக இருக்கும், கூட்டாக வாசிக்க முடியாது என்று மறுத்தாள். அவள் பியானே வாசிக்க மறுத்தது எனக்கு மேலும் எரிச்சலே ஏற்படுத்தியது. கண்டிப்பாக வர வேண்டும் என்று அவனேக் கேட்டுக் கொண்டேன். அவன் அறையிலிருந்து போகும் பொழுது அவனுடைய தலேயின் பின்புறத்தைப் பார்த்துக்கொண்டிருந்த நேரத்தில் எனக்கேற்

பட்ட விசித்திரமான உணர்ச்சி இன்னும் எனக்கு நினைவிருக்கிறது. அவன் பறவையைப் போலத் தவ்விக் கொண்டு இழுப்பு வந்தவனைப் போல நடந்து சென்றபொழுது கறுப்புத் தலைமுடிக்கு வெளியே வெள்ளைக் கழுத்தின் சிறு கீற்று தெரிவதும் மறைவதுமாக இருந்ததை கவனித்தேன். இவனோடு உட்கார்ந்திருப்பது பெருந் துன்பம் என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். 'இவனை நான் மறுபடியும் பார்ப்பது என்னைப் பொறுத்த விஷயம் தானே' என்று நினைத்தேன். ஆனால் அவனைப் பார்க்கவில்லை என்றால் நான் அவனைப் பற்றி பயப்படுவதாகக் கருதப்படுமே. இல்லை, நான் அவனைக் கண்டு பயப்படவில்லை! அது எனக்கு மிகவும் தரக்குறைவாகும் என்று நான் மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். அந்த ஹாலில்—நான் சொல்வது என் மனைவிக்குக் கேட்கும் என்பதைத் தெரிந்து கொண்டே—அன்று மாலையிலேயே அவன் வயலினோடு வர வேண்டும் என்று வற்புறுத்தினேன். அவன் வருவதாக வாக்குறுதியளித்து விட்டுச் சென்றான்.

''அன்று மாலையில் அவன் வயலினை எடுத்துக் கொண்டு வந்தான். அவர்களிருவரும் சேர்ந்து வாசித்தார்கள். ஆனால் அது சோபிக்கவில்லை. அவனுடைய வயலின் வாசிப்பும் என் மனைவியின் பியானோ வாசிப்பும் சரியாகச் சேரவில்லை (என் மனைவிக்குப் பயிற்சி இல்லாததனால் அந்தப் பாட்டை வாசிக்க முடியவில்லை). எனக்கு இசைப்பற்று மிக அதிகம்; என்னாலியன்றவரை அவனுக்கு உதவி செய்தேன். நிலைமேடை

அமைத்துக் கொடுத்ததோடு பாட்டுப் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டுவதிலும் உதவி செய்தேன். அவர்கள் சிலவற்றை—வார்த்தைகள் இல்லாத சில பாடல்களையும் ஒரு சிறிய மோஸார்ட் சொனுட்டாவையும்—வாசித்தார்கள். அவன் அருமையாக வாசித்தான்; அவனுடைய வயலினிலிருந்து மிக மேன்மையான நாதம் வெளிப்பட்டது. அவன் காட்டிய கலை நயப் பண்பு அவனுடைய குணும்சத்துக்குச் சிறிதும் பொருத்தமில்லாததாக இருந்தது.

''அவனுடைய வாசிப்பு என் மனைவியின் வாசிப்பைக் காட்டிலும் மிகவும் சிறந்து விளங்கியது. அது நிச்சயம். அவன் அவளுக்கு உதவி செய்தான், அதே சமயத்தில் மரியாதை நிறைந்த முறையில் அவளைப் பாராட்டினுன். அவன் அற்புதமாக நடந்து கொண்டான். என் மனைவி இசையில் மட்டுமே அக்கறை கொண்டவளாகத் தோன்றினுள். அவளுடைய பாவனைகள் எளிமையாகவும் செயற்கைத் தன்மை இல்லாமலும் இருந்தன. நானும் இசையில் மட்டுமே அக்கறை கொண்டிருப்பதைப் போல நடித்தேன். ஆனுல் அந்த மாலைப் பொழுது முழுவதும் பொருமை உணர்ச்சி என்னைச் சித்திரவதை செய்தது.

''அவர்களுடைய கண்கள் சந்தித்துக் கொண்ட உடனே அவர்களிருவருடைய பார்வைக்குள்ளும் மிருகம் பதுங்கியிருப்பதைக் கண்டேன். அவர்களுடைய சமூக அந்தஸ்தின்

விதிகளை மீறி 'சம்மதமா?' என்று கேட்பதும் 'ச—ம்—ம—த—ம்' என்று பதிலளிப்பதையும் கண்டேன். என் மனைவி, மாஸ்கோவைச் சேர்ந்த பெண் இவ்வளவு கவர்ச்சி உடையவளாக இருப்பாள் என்று அவன் முதலில் எதிர்பார்க்க வில்லை, அவளுடைய பார்வையில் பரவச மடைந்து விட்டான் என்பதைக் கண்டேன். அவள் தன்னை விரும்புவாளா என்பதைப் பற்றி அவன் ஒரு வினாடி கூடச் சந்தேகிக்கவில்லை. அந்தப் பொறுக்க முடியாத கணவரை எப்படி ஏமாற்றுவது என்பதில்தான் மொத்தப் பிரச் சினையுமே அடங்கியிருந்தது. நான் தூய்மை யான நபராக இருந்திருந்தால் இதைப் புரிந்து கொண்டிருக்க மாட்டேன். ஆனால் பெரும்பான் மையான மற்றவர்களைப் போலவே நானும் என்னுடைய திருமணத்துக்கு முன்பு பெண் களைப் பற்றி இதே எண்ணத்தைத் தான் கொண்டிருந்தேன். எனவே ஒரு புத்தகத்தைப் போல அவளுடைய இதயத்தைப் படிக்க என்னால் முடிந்தது. உடலின்பத்தில் ஈடுபட் டிருக்கும் குறுகிய வினாடிகளைத் தவிர என் மீது அவளுக்கு ஏற்படக் கூடிய ஒரே உணர்ச்சி எரிச்சல்தான்; எனவே இவன் தன்னுடைய புதுமையான, நாகரிகமான தோற்றத்தின் மூலம் — குறிப்பாக இசைத்துறையில் தன் னுடைய தனிச்சிறப்பு மிக்க திறமையின் மூலம் —அவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்து வாசிப் பது மற்றும் கூருணர்ச்சி உடைய இதயங்களின் மீது இசையின் (குறிப்பாக வயலின் இசையின்) தாக்கத்தினால் அவள் தன்னை விரும்புமாறு

செய்வான்; அது மட்டுமல்லாமல், ஒரு விஞடி கூடச் சிந்திக்காதபடி அவனை வெற்றி கொள் வான், பிரமிக்கச் செய்வான், தன்னுடைய சுண்டு விரலின் அசைவுக்கு அவனை ஆட வைப் பான், தன்னுடைய எந்த விருப்பத்தையும் அவள் நிறைவேற்றும்படி செய்வான் என்ப தைச் சிறிது கூட சந்தேகிக்க இடமில்லாதபடி நான் தெரிந்து கொண்ட பொழுது என்னுடைய வேதனைகள் அதிகரித்தன. என்ருல் இதைப் பார்க்காதிருக்க முடியவில்லை, அது எனக்குச் சொல்ல முடியாத துன்பத்தைக் கொடுத்தது. இதற்கு மாருக அல்லது ஒருவேளை அதன் காரணமாக, என்னுடைய சித்தத்துக்கு விரோ தமான ஏதோ ஒரு சக்தி நான் அவனை விசேஷ மான அன்புடன் நடத்துமாறு செய்தது, என்னை மென்மையாகக் கூட நடந்து கொள்ளுமாறு செய்தது. நான் அதை என் மனைவிக்காக, அவனைக் கண்டு நான் பயப்படவில்லை என்று என் மனைவியிடம் காட்டுவதற்காகச் செய்தேனு அல்லது எனக்காக, என்னை ஏமாற்றுவதற்காகச் செய்தேனு என்பதை நான் கூற இயலாது. ஆனல் ஆரம்பத்திலிருந்தே அவனேடு சாதா ரணமான முறையிலும் நேரடியாகவும் பழகுவ தற்கு என்னுல் இயலவில்லை. அவனை அப்பொ ழுதே கொலை செய்ய வேண்டும் என்று எனக்கு ஏற்பட்ட விருப்பத்தை அவனிடம் பரிவோடு நடந்து கொள்வதன் மூலம் நான் மறைத் தேன். மாலையுணவு அருந்திய பொழுது விலையு யர்ந்த ஒயினை அவனுக்குப் பரிமாறினேன்; அவனுடைய வயலின் வாசிப்பைப் பற்றிப்

பரவசமடைந்தேன். அவனிடம் பேசும் பொழுது கனிவோடு சிரித்தேன், அடுத்த ஞாயிற்றுக் கிழமை எங்களோடு உணவருந்த வேண்டும், மறுபடியும் என் மனைவியோடு வயலின் வாசிக்க வேண்டும் என்று அவனை வருந்தியழைத்தேன். அவனுடைய வயலின் வாசிப்பைக் கேட்பதற்கு இசையில் ஆர்வமுடைய சில நண்பர்களையும்அழைப்பதாகக் கூறினேன். அன்றைய மாலைப் பொழுது இப்படி முடிந்தது.''

போஸ்த்நிஷெவ் அதிகமான படபடப்போடு உட்கார்ந்திருந்த நிலையை மாற்றிக்கொண்டார். அவருக்கே உரிய அந்த ஓசையை வெளியிட்டார்.

''அந்த நபர் என்னிடம் ஏற்படுத்திய பாதிப்பு விசித்திரமானதுதான்'' என்று அவர் தொடங்கினார். தன்னை நிதானப்படுத்திக் கொள்ள அவர் முயற்சிப்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ''மூன்று அல்லது நான்கு நாட்களுக்குப் பிறகு ஒரு கண்காட்சிக்குப் போய்விட்டு நான் வீட்டுக்குத் திரும்பினேன். ஹாலில் நுழைந்த பொழுது திடீரென்று என் இதயம் பாறாங்கல்லாக மாறிவிட்டதைப் போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. அது ஏன் என்று சொல்வதற்கு என்னால் முடியவில்லை. முன்கூடத்தைக் கடந்துவருகின்ற பொழுது, அவனை நினைவுபடுத்துகின்ற ஏதோ ஒன்றைப் பார்த்தேன். என்னுடைய படிப்பறைக்குள் நுழைந்தபிறகுதான் நான் பார்த்தது என்ன என்று எனக்குப் புரிந்தது. அதை உறுதிப்படுத்

திக் கொள்வதற்காக முன்கூடத்துக்குத் திரும்பிச் சென்றேன். ஆம். நான் தவறு செய்ய வில்லை. அங்கே அவனுடைய நவநாகரிகமான மேல் கோட்டு தொங்கிக் கொண்டிருந்தது. (அவன் சம்பந்தப்பட்ட எல்லாவற்றையும் நான் — என்னை அறியாமலேயே — குறிப்பாக கவனித்துக் கொண்டிருந்தேன்). நான் விசாரித்த பொழுது அவன் அங்கே இருப்பதாக பதில் வந்தது. நான் உபசரிக்கும் அறைக்குச் சென் றேன், வரவேற்பு அறையின் வழியாக அல்ல, குழந்தைகள் படிக்கும் அறையின் வழியாகச் சென்றேன். என் மகள் லீஸா புத்தகத்தைப் படிப்பதில் மூழ்கியிருந்தாள். செவிலிப் பெண் குழந்தையை வைத்துக் கொண்டு மேசை யின்மேல் உட்கார்ந்து ஒரு மூடியை ஆட்டிக் கொண்டிருந்தாள். உபசரிக்கும் அறைக் கதவு மூடப்பட்டிருந்தது. உள்ளேயிருந்து arpeggio கேட்டது, அவனுடைய குரலும் அவளுடைய குரலும் ஒலித்தன. நான் உற்றுக் கேட்டேன், ஆனால் தெளிவாக ஒன்றும் கேட்கவில்லை. அவர் களுடைய குரல்கள், ஒருவேளை அவர்களுடைய முத்தங்கள் வெளியே கேட்கக் கூடாதென்ற நோக்கத்தோடு பியானோவை வாசித்துக் கொண்டிருந்தார்கள் என்பது வெளிப்படை யாக த்தெரிந்தது. அட கடவுளே! அந்த சமயத் தில் என்னுடைய நெஞ்சு எப்படிக் குமுறி யது தெரியுமா! அந்த வினாடியில் என்னிடம் ஏற் பட்ட மிருக வெறியை இப்பொழுது நினைத்தால் கூட என் உடலெல்லாம் நடுங்குகிறது. என் இருதயம் சுருங்கிக் கொண்டது, இருதயத்

துடிப்பு நின்றது, பிறகு சம்மட்டியைப் போல ஓங்கி அடித்தது. என்னிடம் மேலோங்கியிருந்த உணர்ச்சி என் மீது ஏற்பட்ட பரிதாபமே (ஒரு நபரிடம் அதிகமான வெறி ஏற்படும் பொழுது இது எப்பொழுதும் உண்மையாகும்). 'குழந்தைகளுக்கு முன்பாகவா! செவிலிப் பெண்ணுக்கு முன்பாகவா' என்று நினைத்தேன். என்னுடைய தோற்றம் பயங்கரமாக இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் லீஸா என்னை விசித்திரமான முறையில் பார்த்தாள். 'என்ன செய்ய வேண்டும்?' என்று என்னைக் கேட்டுக் கொண்டேன். 'உள்ளே போவதா? என்றால் முடியாது. நான் என்ன செய்யக்கூடும் என்பது கடவுளுக்கு மட்டுமே தெரியும்.' ஆனால் நான் அங்கிருந்து போவதும் இயலாது. என்னுடைய உணர்ச்சிகளைப் புரிந்துகொண்டவளைப் போல செவிலிப் பெண் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'உள்ளே போகாமல் இருக்க முடியாது' என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். கதவைப் படீரென்று திறந்தேன். அவன் பியானோவுக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டு arpeggio வாசித்துக் கொண்டிருந்தான். அவனுடைய வளைந்த வெண்மையான விரல்கள் புடைத்திருந்தன. அவள் பியானோவின் ஓரத்தில் நின்றுகொண்டு சில குறிப்புகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள். நான் உள்ளே வருவதை முதலில் பார்த்ததும் ஓசையைக் கேட்டதும் அவள் தான். அவள் என்னைப் பார்த்தாள். அவள் ஒருவேளை அச்சமடைந்திருக்கலாம்

ஆனால் அச்சப்படாதது போல அவள் பாசாங்கு செய்தாள் அல்லது ஒருவேளை அவள் அச்சப் படாமலும் இருந்திருக்கலாம். அது என்னவாக இருந்தாலும் அவள் திடுக்கிடவில்லை அல்லது அசையவில்லை. அவள் சற்று நாணமடைந்தாள்; அதுவும் கூட உடனேயல்ல.

'' 'நீங்கள் வந்ததைப் பற்றி நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஞாயிற்றுக்கிழமை யன்று எதை வாசிப்பதென்று நாங்கள் முடிவு செய்ய இயலவில்லை' என்றாள். அவள் பேசும் பொழுது உபயோகித்த குழைவை நாங்கள் தனியே இருந்திருந்தால் அவள் ஒருபோதும் உபயோகித்திருக்க மாட்டாள். தன்னையும் அவனையும் குறிப்பதற்காக அவள் 'நாங்கள்' என்று சொன்னது எனக்கு எரிச்சலேற்படுத்தியது. நான் ஒன்றுமே பேசாமல் அவனுக்கு வணக்கம் தெரிவித்தேன்.

''அவன் என் கையைக் குலுக்கினான். ஞாயிற்றுக்கிழமையன்று வாசிப்பவதற்காகச் சில பாடற்பகுதிகளைக் கொண்டு வந்திருப்பதாகவும் எதை வாசிப்பது—கஷ்டமான சாஸ்த்ரீயப் பாடலா (வயலின், பியானோவுக்கு பீத்தோவனின் சொனாட்டா) அல்லது சில சிறு பாடல்களா?—என்று அவர்களுக்குள் உடன்பாடு ஏற்படவில்லை என்று சிரித்துக் கொண்டே விளக்கினான். அந்தச் சிரிப்பு எனக்குப் போலியாகத் தோன்றியது. அவன் மிகவும் சாதாரணமாகவும் இயல்பாகவும் பேசிய காரணத்தால் நான் ஆட்சேபிப்பதற்கு ஒன்றுமில்லை. ஆனால் அவன் பேசியதெல்லாம் பொய், என்னை

ஏமாற்றுவதென்று அவர்கள் இரகசியமாக முடிவு செய்திருக்கிறார்கள் என்று நான் உறுதியாகக் கருதினேன்.

''ஆண்களும் பெண்களும் மிகவும் ஆபத்தான வகையில் நெருக்கமாகப் பழகுவதை இன்றைய சமூக மரபுகள் அனுமதிக்கின்றன; பொறாமைப் படக் கூடியவர்களுக்கு (நம்முடைய சமூக வாழ்க்கையில் எல்லோருமே பொறாமைக்காரர்கள்தான்) இது மிகவும் அதிகமான சித்திரவதைக்குக் காரணமாக இருக்கிறது. நடனங்களில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஏற்படுகின்ற உடல் நெருக்கத்தை, டாக்டர்களுக்கும் நோயாளிகளுக்கும் ஏற்படுகின்ற உடல் நெருக்கத்தை, கலை, ஓவியம், குறிப்பாக இசை ஆகியவற்றைப் பயில்கின்றவர்களுக்கிடையே ஏற்படும் உடல் நெருக்கத்தை யாராவது தடுக்க விரும்பினால் அவரை மக்கள் எல்லோரும் பரிகாசம் செய்வார்கள். இங்கே கலைகளிலேயே மிக மேன்மையான இசையை இரண்டு நபர்கள் பயில்கிறார்கள். அவர்களுடைய இசைப் பயிற்சிக்கு அவர்கள் நெருங்கியிருக்க வேண்டியிருக்கிறது. இந்த உடல் நெருக்கத்தில் அருவருப்பான அம்சம் சிறிதுகூட இல்லை. மிகவும் முட்டாள்தனமான, பொறாமைக்காரக் கணவன்தான் இதில் ஆட்சேபிக்கக்கூடிய எதையாவது தேடிக் கண்டு பிடிக்க முடியும். ஆனால் இந்தப் பயிற்சிகள்—குறிப்பாக இசைப் பயிற்சிதான்—நம் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களிடம் கூடா ஒழுக்கத்தை ஏற்படுத்துகின்றன என்பது எல்லோருக்குமே தெரியும். என்னுடைய குழப்பம் அவர்களைக்

குழப்பிவிட்டது போலத் தோன்றியது. நெடு நேரம் வரையிலும் என்னுல் ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லே. முற்றிலும் நன்ருக நிரப்பப்பட்ட பாட்டிலேத் தலேகீழாகக் கவிழ்த் தால் அதிலிருந்து ஒன்றுமே கொட்டாது. என் னுடைய நிலேமை அதைப் போல இருந்தது. நான் அவனேத் திட்ட விரும்பினேன்; வீட்டை விட்டு வெளியேற்ற விரும்பினேன். ஆனுல் அவனிடம் மறுபடியும் மரியாதையோடு, நடந்து கொள்ள வேண்டும் என்பதை உணர்ந்தேன். அப்படியே நடந்துகொண்டேன். அவர்கள் செய்த எல்லாவற்றையும் நான் அங்கீகரிப்ப தாகப் பாசாங்கு செய்தேன். நான் மிகவும் பெருந்தன்மையோடு நடந்துகொண்ட மாற்று நிலேமையின் காரணமாக அவன் அங்கேயிருப் பதைப் பார்ப்பதற்கே எனக்கு மிகவும் வேதனே யாக இருந்தது. பாட்டுக்களேப் பற்றி அவ னுடைய முடிவுகள் முற்றிலும் சரியாக இருக் கும் என்று நான் நம்புவதாகக் கூறினேன். என் மனேவியும் அப்படியே நம்பலாம் என்று நான் அவளிடம் ஆலோசனே கூறினேன். நான் திடு மென்று வந்ததாலும் என்னுடைய சங்கடமான மௌனத்தாலும் ஏற்பட்ட அதிருப்திகரமான நிலேமையைச் சரி செய்வதற்கு அவசியமான அளவு நேரத்துக்கு மட்டுமே அவன் அங்கே இருந்தான். மறு நாள் எதை வாசிப்பதென்று கடைசியாக முடிவு ஏற்பட்டு விட்டதாகப் பாசாங்கு செய்துவிட்டு அவன் விடைபெற்றுக் கொண்டான். அவர்கள் எந்த சொனுட்டாவை வாசிக்கப் போகிருர்கள் என்பது அவர்களுக்குச்

சிறிது கூட முக்கியமல்ல என்று நான் நிச்சய மாகக் கருதினேன். ஏனென்றால் அவர்கள் முற்றிலும் வேறு விதமான ஒன்றில் மூழ்கிப் போயிருந்தார்கள்.

''அவனை வரவேற்பு அறை வரை வழியனுப் புகின்ற பொழுது நான் மிகவும் அக்கறையோடு நடந்துகொண்டேன் (ஒரு குடும்பத்தின் அமை தியையும் மகிழ்ச்சியையும் அழிப்பதற்காக வந் திருக்கும் மனிதனை வேறு எந்த முறையில் வழியனுப்ப முடியும்!). அவனுடைய மென்மை யான வெள்ளைக் கையை நான் மிகவும் அன் போடு அழுத்தினேன்.''

## 22

''அன்றைய பகலில் எஞ்சியிருந்த நேரம் முழுவதும் நான் அவளிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. என்னால் பேச முடியவில்லை. அவள் வீட்டிலிருப்பதே என் மனதில் மிகவும் அதிகமான வெறுப்பைத் தூண்டியதால் அதன் விளைவுகளைப் பற்றி நான் அச்சமடைந்தேன். மாலையுணவின் போது குழந்தைகளுக்கு முன் னால் நான் எப்பொழுது ஊருக்குப் புறப்பட உத்தேசிக்கிறேன் (அடுத்த வாரத்தில் ஒரு பிராந்தியக் கூட்டத்தில் நான் கலந்துகொள்ள வேண்டியிருந்தது) என்று அவள் கேட்டாள். நான் அவளிடம் சொன்னேன். எனக்கு ஏதே னும் தயாரிக்க வேண்டுமா என்று அவள் என்னைக் கேட்டாள். நான் பதிலளிக்கவில்லை.

நான் சற்று நேரம் எதுவும் பேசாமலே மேசைக்கு முன்னல் உட்கார்ந்திருந்தேன். பிறகு எழுந்து ஒன்றும் பேசாமலேயே என்னுடைய படிப்பறைக்குள் சென்றேன். சமீப காலமாக — குறிப்பாக அதிக நேரமான பிறகு —அவள் என் படிப்பறைக்குள் வருவதில்லே. அங்கே என் கோபத்தை வளர்த்துக் கொண்டு படுத்திருந்தேன். திடீரென்று எனக்குப் பழக்கமான காலடிச் சத்தம் கேட்டது. உரீயாவின் மனைவியைப் போல தன் பாவத்தை மறைப்பதற்காக இந்த இரவு நேரத்தில் அவள் என்னிடம் வருகிருள் என்ற பயங்கரமான, அருவருப்பான எண்ணம் எனக்கு ஏற்பட்டது. அவள் காலடிச் சத்தம் நெருங்கிய பொழுது 'அவள் உண்மையிலேயே என்னிடம் வருகிருளா?' என்று நான் நினைத்தேன். அவள் இங்கே வருகிருள் என்றால் நான் நினைத்தது சரியே. அவள் மீது சொல்ல முடியாத வெறுப்பு என் இதயத்தில் நிறைந்தது. அவளுடைய காலடிகள் நெருங்கி, நெருங்கி வந்து கொண்டிருந்தன. அவள் கதவைக் கடந்து வரவேற்பு அறைக்குப் போய்விடுவாளா? இல்லே. கதவு கிறீச்சிட்டது. அவள் கதவுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள். உயரமாக, அழகாக கண்களில் ஒரு பயந்த பாவம்—அதை அவள் மறைக்க முயற்சி செய்தாள், ஆனல் அதை நான் கண்டுபிடித்து விட்டேன், அதன் அர்த்தமும் எனக்குத் தெரியும். நீண்ட நேரமாக மூச்சை அடக்கிக் கொண்டிருந்தபடியால் அநேகமாக மூச்சுத் திணறியது. இன்னும் அவளைப்

பார்த்தபடியே நான் சிகரெட் பெட்டியை எடுத்து சிகரெட்டைப் பற்ற வைத்தேன்.

'' 'நான் உங்களோடு பேச வந்திருக்கும் பொழுது நீங்கள் புகை பிடிப்பது சரியா?' என்று சோபாவில் எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு என்னை நோக்கிச் சாய்ந்து கொண்டு கேட்டாள்.

''அவள் என் உடல் மீது பட்டுவிடக்கூடாது என்பதற்காக நான் விலகிக்கொண்டேன்.

'' 'நான் ஞாயிற்றுக் கிழமையன்று பியானோ வாசிக்கப் போவது உங்களுக்குப் பிடிக்கவில்லை என்று தெரிகிறது.'

'' 'அப்படிச் சிறிதுமில்லை' என்று நான் கூறினேன்.

'' 'என்னால் அதைப் புரிந்துகொள்ள முடியாதா?'

'' 'அதை நீ புரிந்து கொண்டால் எனக்கு மிகவும் மகிழ்ச்சியே. என்னைப் பொறுத்த வரை நீ ஒரு சாகசக்காரியைப் போல நடந்து கொண்டதைத் தவிர வேறெதையும் நான் பார்க்கவில்லை...'

'' 'நீங்கள் குதிரை வண்டிக்காரனைப் போலப் பழி சொல்வதாக இருந்தால் நான் போய்விடுகிறேன்.'

'' 'அப்படியே செய். ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள். நீ குடும்ப கௌரவத்தை மதிக்காதிருக்கலாம், ஆனால் எனக்கு அது மிகவும் முக்கியம். உன்னைப் பற்றி நான் கவலைப் படவில்லை. நீ எப்படிக் கெட்டாலும் எனக்கு

ஒன்றுமில்லை. குடும்ப கௌரவத்தைப் பற்றி நான் கவலைப்படுகிறேன்.'

'' 'என்ன? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'

'' 'போ! கடவுளுக்குப் பயந்தாவது வெளியே போ!'

''நான் சொன்னதைப் புரிந்துகொள்ள முடியாதவளைப் போலப் பாசாங்கு செய்து கொண்டு (அல்லது ஒருவேளை அவள் உண்மையிலேயே புரிந்து கொள்ளாதிருக்கலாம்) புண்பட்டவளாகக் கோபத்தோடு அவள் எழுந்தாள். ஆனால் அவள் வெளியே போகாமல் அறைக்கு நடுவில் நின்றாள்.

'' 'நீங்கள் உண்மையில் மிகவும் மோசமாக நடந்துகொள்கிறீர்கள்' என்று அவள் தொடங்கினாள். 'ஒரு தேவதை கூட உங்களோடு வாழ்க்கை நடத்த முடியாது.' வழக்கம் போல மிகவும் பலவீனமான இடத்தில் என்னைத் தாக்குவதற்காக அவள் சகோதரியிடம் நான் பேசியவற்றை அவள் நினைவுபடுத்தினாள் (எனக்கேற்பட்டிருந்த ஆத்திரத்தில் அவளிடம் கீழ்த்தரமான முறையில் பேசிவிட்டேன். அதை நினைக்கும் பொழுது நான் மிகவும் வேதனைப்பட்டேன். அவளுக்கும் அது தெரியும். அதனால் தான் இந்த சமயத்தில் அந்தப் பேச்சை எடுத்தாள்). 'அதற்குப் பிறகு நீங்கள் என்ன செய்தாலும் நான் ஆச்சரியப்பட மாட்டேன்' என்றாள்.

'' 'ஆம், நீ என்னை அவமதிக்க, சிறுமைப்படுத்த, கேவலப்படுத்த விரும்புகிறாய். பிறகு எல்லாவற்றுக்கும் நானே பொறுப்பு என்று சொல்வாய்' என்று நான் மனதுக்குள் சொல்லிக்

கொண்டேன். இதற்கு முன் எப்போதும் ஏற்பட்டிராத வெறுப்புணர்ச்சி திடீரென்று என்னைப் பற்றியது.

''என் வெறுப்பைச் செயலில் காட்ட வேண்டுமென்று முதல் தடவையாக விரும்பினேன். நான் அவளை நோக்கித் தாவி ஓடினேன். ஆனால் அப்படித் தவ்விய பொழுதே, நான் என்ன செய்துகொண்டிருக்கிறேன் என்பதை உணர்ந்தேன், என்னுடைய வெறுப்புக்கு இடம் கொடுப்பது சரிதானா என்று என்னைக் கேட்டுக் கொண்டேன், அது சரியே, அதன் மூலம் தான் அவளை பயமுறுத்த முடியும் என்று பதிலளித்துக் கொண்டது என் நினைவுக்கு வருகிறது. ஆகவே என்னுடைய வெறுப்பை அடக்கிக் கொள்வதற்குப் பதிலாக நான் அதனிடம் சரணடைந்தேன். அது என்னிடம் ஏற்படுத்திய வெறியில் ஆனந்தமடைந்தேன்.

'' 'நான் உன்னைக் கொலை செய்வதற்கு முன்னால் வெளியே போய்விடு!' என்று அவளருகே போய் அவள் கையைப் பிடித்து இழுத்தவாறு கத்தினேன். இதைச் சொன்ன பொழுது வேண்டுமென்றே என் குரலில் அருவருப்பைக் காட்டினேன். என் தோற்றம் மிகவும் பயங்கரமாக இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் அவள் மிகவும் பயந்து போய்விட்டாள். அவளால் அசையக் கூட முடியவில்லை.

'' 'வாஸ்யா! ஏன் இப்படி நடந்து கொள்கிறீர்கள்?' என்று அவள் கேட்டாள்.

'' 'வெளியே போ!' என்று மிகவும் பலமாகக் கர்ச்சனை செய்தேன். 'உன்னைப் பார்த்தாலே

எனக்கு வெறி ஏற்படுகிறது. நான் என்ன செய்வேன் என்று சொல்ல முடியாது!'

''என்னுடைய ஆத்திரத்துக்கு இடங் கொடுத்து விட்டபடியால் நான் ஆவேசமடைந்தேன். என்னுடைய ஆத்திரத்தை எடுத்துக் காட்டுவதற்காக அசாதாரணமான முறையில் எதையாவது செய்ய வேண்டுமென்று விரும்பினேன். நான் அவளை அடிக்க வேண்டும், கொல்ல வேண்டும் என்ற வெறி எனக்கு ஏற்பட்டது. ஆனால் அது கூடாது என்று எனக்குத் தெரியும். எனவே என்னுடைய ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகத் தாட்கட்டையை எடுத்து 'வெளியே போ!' என்று கத்திக் கொண்டே அவளைத் தாண்டிப் போய் விழும் படி வீசினேன். என்னுடைய குறி சரியாக இருந்தது; அது அவள் மீது படாமல் தள்ளி விழுந்தது. அவள் வெளியே போனாள், ஆனால் கதவுக்குப் பக்கத்தில் நின்றாள். அவள் அங்கே இன்னும் நின்று என்னைப் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது (அவள் நான் செய்வதைப் பார்க்க வேண்டுமென்று தான் அப்படி நடந்து கொண்டேன்) என் மேசையின் மேல் இருந்த மெழுகுவர்த்தி விளக்குகள், மசிக்கூடு முதலியவற்றை எடுத்துத் தரையின் மேல் வீசி எறிந்தேன்.

'' 'வெளியே போ!' என்று கத்தினேன். 'வெளியே போ! நான் என்ன செய்வேன் என்று சொல்ல முடியாது!'

''அவள் அங்கிருந்து போய்விட்டாள். உடனே நான் அமைதியடைந்தேன்.

''ஒரு மணி நேரத்துக்குப் பிறகு தாதி என்னிடம் வந்து என் மனைவி ஜன்னியில் பிதற்றிக் கொண்டிருப்பதாகக் கூறினாள். நான் அவளைப் பார்க்கச் சென்றேன். அவள் அழுவதும் சிரிப்பதுமாக இருந்தாள். எதுவும் பேச முடியவில்லை. அவள் உடல் முழுவதும் துடித்துக் கொண்டிருந்தது. அவள் பாசாங்கு செய்யவில்லை. அவளுக்கு உண்மையிலேயே நோய் ஏற்பட்டிருந்தது.

''மறு நாள் காலையில் அவள் உடல்நிலையில் அபிவிருத்தி ஏற்பட்டிருந்தது. காதல் என்று நாம் சொல்கிறோமே, அந்த உணர்ச்சியின் தாக்கத்தில் எங்களுக்கிடையே சமரசம் ஏற்பட்டது.

''அந்த சமரசத்துக்குப் பிறகு த்ருஹசேவ்ஸ்கியைக் கண்டு எனக்குப் பொறாமை ஏற்படுகிறது என்று நான் `ஒத்துக் கொண்ட பொழுது, அவள் சிறிதும் மலைக்கவில்லை. உலகத்திலேயே மிகவும் இயற்கையான சிரிப்பை உதிர்த்தாள். அப்படிப்பட்ட ஒரு மனிதர் மீது நான் மோகங் கொள்வேன் என்று யாராவது கருதினால் அது வேடிக்கையே என்றாள்.

'' 'கண்ணியமான எந்தப் பெண்ணும் அப்படிப்பட்ட ஒரு மனிதரிடம் மோகங் கொள்ள முடியுமா? இசையிலிருந்து ஏற்படும் ஆனந்தத்தைத் தவிர வேறொன்றுமில்லை. நீங்கள் சொன்னால் நான் அந்த நபரை இனிமேல் நிரந்தரமாகச் சந்திக்க மாட்டேன்—ஞாயிற்றுக்கிழமையையும் சேர்த்துத்தான். விருந்தினர்களை அழைத்திருக்கிறோமென்றாலும் எனக்கு உடம்பு

சரியில்லை என்று ஒரு சீட்டில் எழுதி அவருக்கு அனுப்பிவிடுங்கள். அதோடு முடிந்துவிடும். அந்த நபர் ஆபத்தானவர் என்று யாராவது—குறிப்பாக நீங்கள்—கற்பனை செய்து கொள்வதுதான் எனக்கு வருத்தத்தைத் தருகிறது. என்னால் அதை ஒத்துக் கொள்ள முடியவில்லை.'

''அவள் பொய் பேசவில்லை. அவள் என்ன பேசினாளோ அதை நம்பினாள். இந்த வார்த்தைகளின் மூலம் அவரை வெறுக்குமாறு தன்னைச் செய்துகொள்ள முடியும், அவருக்கு எதிராகத் தன்னைத் தற்காத்துக் கொள்ள முடியும் என்று அவள் நம்பினாள். ஆனால் அவள் தோல்வியடைந்தாள். எல்லாமே அவளுக்கு எதிராக இருந்தன. அதிலும் குறிப்பாக அந்தப் பாழாய்ப் போன இசை அவளுக்கு எதிராக இருந்தது. நாங்கள் இதற்கு மேல் அதைப் பற்றிப் பேசவில்லை. ஞாயிற்றுக்கிழமையன்று விருந்தினர்கள் வந்தார்கள். என்னுடைய மனைவியும் அவனும் அவர்களுக்காகப் பியானோ, வயலின் வாசித்தார்கள்.''

## 23

''நான் தற்பெருமை உடையவன் என்பதைச் சொல்ல வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன்; ஒரு நபருக்குத் தற்பெருமை இல்லையென்றால் நமது சமூகத்தில் அவர் வாழ்வதற்கு வேறு என்ன காரணம் இருக்கிறது? எனவே மாலை விருந்தும் இசை நிகழ்ச்சியும் எங்களுக்குப் பெருமையளிக்கின்ற வகையில்

சிறப்பாக நடைபெறுவதற்குத் தேவையான எல்லாவற்றையும் செய்தேன். விருந்துக்குத் தேவையான உணவுப் பொருள்களை நானே போய் வாங்கியதோடு விருந்தினர்களை நேரில் சென்று அழைத்தேன்.

''ஆறு மணிக்கு விருந்தினர்கள் வந்தார்கள். அவன் மாலை உடையணிந்து வைரப் பொத்தான்கள் பிரகாசிக்க வந்தான். அது அவனுடைய நாகரிகக் குறைவைக் காட்டியது. அங்கேயிருந்த எல்லோரைக் காட்டிலும் தன்னை உயர்ந்தவராகக் காட்டிக் கொண்டான். யாராவது தன்னிடம் பேசினால் தன்னைக் காட்டிலும் கீழானவர்களிடம் கருணை காட்டுகின்ற முறையில் சிரித்தான். ஒருவர் என்ன பேசினாலும் செய்தாலும் அது அவன் எதிர்பார்த்த விஷயம் ('ஓ! அது உங்களுக்குத் தெரியாதா!') என்பதைப் போல நடந்து கொண்டான். அவனுடைய பண்புக் குறைவை எடுத்துக் காட்டுகின்ற ஒவ்வொரு அம்சத்தையும் நான் குறித்துக் கொண்டேன். ஏனென்றால் அவை குறிப்பாக எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தன. என் மனைவியே சொன்னதைப் போல, அவள் அவன் மீது மோகங் கொள்ள இயலாத அளவுக்கு மிகவும் தரக்குறைவானவன் என்பதை அவை நிரூபித்தன. அவனைப் பற்றிப் பொறாமைப்படுவதற்கு என்னை அனுமதித்துக் கொள்ளவில்லை. முதலாவதாக, நான் ஏற்கெனவே பொறாமையினால் அதிகமாகத் துன்பமடைந்து களைத்துப் போயிருந்தேன். எனக்கு ஓய்வு அவசியமாக இருந்தது. இரண்டாவதாக, என்

மனைவி சத்தியமாகச் சொன்னவற்றை நான் நம்ப விரும்பினேன்; அப்படியே நம்பவும் செய் தேன். நான் பொறுமைப்படவில்லை என்றாலும் விருந்தின் போதும் இசை நிகழ்ச்சிக்கு முந்திய மாலைப் பொழுதிலும் என்னால் சுபாவமாக இருக்க முடியவில்லை, அவர்கள் இருவரில் யாரு டனும் இயல்பான முறையில் பழக முடியவில்லை. அவர்களுடைய செயல்களையும் பார்வைகளை யும் நான் மேலும் உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருந்தேன்.

''எல்லா விருந்துகளையும் போலவே—சம்பிர தாயமான முறையிலும் சுவாரசியமில்லாம லும்—அந்த விருந்து இருந்தது. இசை நிகழ்ச்சி சீக்கிரத்திலேயே தொடங்கிவிட்டது. அன்று மாலையில் நடைபெற்ற ஒவ்வொரு சிறு நிகழ்ச் சியும் என் மனதில் அப்படியே பதிந்துவிட்டது. அவன் வயலின் பெட்டியை எடுத்ததும், மூடி யைத் திறந்ததும், யாரோ ஒரு ரசிகை சித் திரத் தையல் வேலை செய்து கொடுத்திருந்த உரையைக் கழற்றியதும் வயலினை எடுத்து சுருதி மீட்டியதும் என் நினைவுக்கு வருகிறது. என் மனைவி தன்னிடம் ஏற்பட்டிருந்த நாணத் தை (விருந்தினர்களுக்கு முன்னால் பியானோ வாசிக்க வேண்டுமென்பதே அந்த நாணத்துக்கு முக்கிய காரணம்) மறைப்பதற்காக அலட்சிய மான தோரணையை மேற்கொண்டதும் அந்தப் போலியான முகபாவத்தோடு உட்கார்ந்ததும் என் நினைவுக்கு வருகிறது. பிறகு மத்திமத் தை மீட்டுவதும் நரம்புகளைச் சுருதி பார்ப் பதும் ஆரம்பமாயிற்று. அவர்கள் பார்வை

களைப் பரிமாறிக் கொண்டதையும் உட்கார்ந் திருந்த விருந்தினர்களைப் பார்த்ததையும் ஒரு வரோடொருவர் குசுகுசுவென்று பேசிக்கொண் டதையும் பிறகு வாசிப்பைத் தொடங்கியதை யும் நினைத்துப் பார்க்கிறேன். அவள் முதல் கட்டையை அழுத்தினாள். அவன் பியானோ சுரு திக்குத் தகுந்தாற்போல தன்னுடைய கவனம் நிறைந்த விரல்களால் நரம்புகளை அழுத்திய பொழுது, அதன் சுருதியைக் கேட்டுக் கொண் டிருந்த நேரத்தில் அவன் முகத்தில் ஏற்பட்ட கவலையான, வலிந்து தோற்றுவிக்கப்பட்ட நய மான பாவனையை நினைத்துப் பார்க்கிறேன். அவர்கள் வாசிக்க ஆரம்பித்தார்கள்...''

அவர் நிறுத்திவிட்டு அந்த விசித்திரமான ஓசைகளைத் தொடர்ச்சியாகச் சில தடவை செய்தார். அவர் மறுபடியும் பேச முயற்சி செய்த பொழுது தொண்டையிலிருந்து கம்மிய சத்தம்தான் வெளிவந்தது. எனவே சற்றுத் தாமதித்த பிறகு அவர் பேசினார்.

''அவர்கள் பீத்தோவனுடைய கிரேய்ஸர் சொனாட்டாவை வாசித்தார்கள். அந்த முதல் பல்லவி உங்களுக்குத் தெரியுமா? தெரியுமா?!'' என்று அவர் அதட்டினார். ''ஆ!.. அந்த சொனாட்டா பயங்கரமானது. அதிலும் அந்தப் பல்லவியைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். பொதுவாகவே இசை பயங்கரமான சமாச் சாரம்தான். இசை என்றால் என்ன? எனக்குப் புரியவில்லை. இசை என்றால் என்ன? அது ஒரு மனிதரை என்ன செய்யும்? ஏன் அப்படிச் செய்கிறது? இசை ஆன்மாவின் மேல் மிக உயர்

வான தாக்கத்தைக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள். பிதற்றல், பொய்! அது தாக்கத்தை ஏற்படுத்துவது உண்மைதான். அது பயங்கரமான தாக்கம் (நான் என்னைப் பற்றி மட்டுமே பேசுகிறேன்). அது ஆன்மாவை மேம்படுத்தக்கூடிய தாக்கம் அல்ல. அது மேம்படுத்துவதும் இல்லை, தாழ்த்துவதும் இல்லை. அது வெறுமனே உணர்ச்சிகளைக் கிளறிவிடுகிறது. அதை நான் எப்படிச் சொல்ல முடியும்? என்னையும் என் உண்மையான நிலைமையையும் நான் மறக்கும்படி செய்கிறது இசை. எனக்குப் பாத்தியமில்லாத வேறு எங்கோ என்னைக் கொண்டு போய்விடுகிறது. நான் இசையில் மயங்கியிருக்கும் பொழுது உண்மையில் எனக்கு ஏற்படாத உணர்ச்சிகள் எற்பட்டிருப்பதாக, புரிந்து கொள்ளாதவற்றைப் புரிந்து கொண்டதாக, என்னால் செய்ய முடியாதவற்றைச் செய்ய முடியும் என்பதாகக் கற்பனை செய்கிறேன். கொட்டாவி விடுவதைப் போல, சிரிப்பதைப் போல இசை என்னைப் பாதிக்கிறது என்பதே இதற்குக் காரணம் என்றுதான் நான் விளக்கமளிக்க முடியும். நான் தூக்கக் கலக்கத்தில் இல்லை; ஆனால் ஒருவர் கொட்டாவி விடுவதைப் பார்க்கும்பொழுது எனக்கும் கொட்டாவி வருகிறது. சிரிக்க வேண்டிய விஷயம் எதுவுமில்லாவிட்டாலும் இன்னொருவர் சிரிப்பதைக் கேட்டால் எனக்கும் சிரிப்பு வருகிறது.

''பாடலாசிரியர் பாட்டை எழுதியபொழுது எத்தகைய ஆன்மிக நிலையில் இருந்திருப்பரோ அதே நிலைக்கு இசை என்னை உடனடியாக இழுக்

கிறது. என்னுடைய ஆன்மா அவருடைய ஆன்மாவோடு இணைந்து விடுகிறது. ஒரு மனோபாவத்திலிருந்து மற்றொரு மனோபாவத்துக்கு நான் அவரோடு போய்க் கொண்டிருக்கிறேன். ஆனால் இந்த மனோபாவ மாற்றங்களுக்கு நான் ஏன் ஆளாக வேண்டும் என்பதை என்னால் சொல்ல முடியாது. இதற்கு மாறாகப் பாடலாசிரியருக்கு — கிரேய்ஸர் சொனாட்டாவை எழுதிய பாடலாசிரியரான பீத்தோவன் என்றே சொல்வோம்— அந்தக் குறிப்பிட்ட மனோபாவத்தில் அவர் ஏன் இருந்தார் என்பது தெரியும். அந்த மனோபாவம் அவர் திட்டவட்டமான நடவடிக்கைகளைச் செய்வதற்கு இட்டுச் சென்றது, எனவே அந்த மனோபாவம் அவருக்கு ஒரு அர்த்தத்தைக் கொண்டிருந்தது. ஆனால் எனக்கு எப்படிப் பட்ட அர்த்தமும் கிடையாது. இசை எந்த நோக்கமும் இல்லாமல் உணர்ச்சியைத் தூண்டு கிறது. இராணுவ இசையைப் பாடும்பொழுது படைவீரர்கள் அதற்கேற்ப அணி வகுத்துப் போகிறார்கள். ஆகவே அந்த இசையின் நோக்கம் நிறைவேறுகிறது என்பது உண்மையே. நடன இசையைப் பாடும்பொழுது நான் நடன மாடுகிறேன். இங்கும் இசையின் நோக்கம் நிறைவேறுகிறது. சமயச் சடங்குக்குரிய இசையைப் பாடும்பொழுது நான் திருச் சின்னத்தைப் பெறுகிறேன். எனவே அதிலும் இது உண்மையே. மற்றவைகளைப் பொறுத்தவரை இது வெறுமனே உணர்ச்சிகளைத் தூண்டுகிறது. அந்த உணர்ச்சிக்கு வடிகால் கிடையாது. அத

ஞல்தான் இசை இவ்வளவு பயங்கரமான—சில சமயங்களில் பீதியடையக்கூடிய—தாக்கத்தைக் கொண்டிருக்கிறது. சீனுவில் இசை அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாக இருக்கிறது. அப்படித்தான் இருக்க வேண்டும். யாராவது ஒரு நபர் இன்னொருவரை (அல்லது பல பேர்களைக் கூட) வசியம் செய்து தான் விரும்பியபடி ஆட்டி வைப்பது அனுமதிக்கக் கூடியதா? இதில் மோசமான விஷயம் என்னவென்ருல் வசியம் செய்பவர் பெரும்பாலும் ஒழுக்கமில்லாத நபராக இருக்கிருர்.

''தற்செயலான நபர்கள் கையில் அது ஒரு பயங்கரமான ஆயுதமாக இருக்கிறது. கிரேய்ஸர் சொனுட்டாவின் முதல் பல்லவியை எடுத்துக் கொள்ளுங்கள். உபசரிப்பு அறையில் பெண்கள் கழுத்தை மூடாத உடையணிந்திருக்கும் பொழுது அந்தப் பாட்டை வாசிக்க முடியுமா? அதை வாசித்ததும் கைதட்டிப் பாராட்டி ஐஸ்கிரீமைச் சாப்பிட்டுக் கொண்டு சமீபத்திய வம்புச் செய்திகளைப் பரிமாறிக் கொள்வதென்ருல்—எவ்வளவு துணிச்சல் இருக்க வேண்டும்? அந்த இசையை மிகவும் திட்டவட்டமான, பொருள் பொதிந்த சந்தர்ப்பங்களில், அந்த இசைக்குப் பொருத்தமான மிகவும் திட்டவட்டமான, பொருள் பொதிந்த நடவடிக்கைகளில் ஈடுபடப் போகின்ற சமயத்தில்தான் வாசிக்க வேண்டும். அதை வாசித்து விட்டால் அந்த மனேபாவத்தின் உத்வேகத்தில் பிறக்கும் நடவடிக்கைகளை நிறைவேற்ற வேண்டும். இல்லையென்ருல்—இடத்துக்கும் காலத்துக்கும் பொருத்

தமில்லாத — செலவிடப்படாத சக்தியும் உணர்ச்சியும் அழிவை ஏற்படுத்தும் என்பது உறுதி. குறைந்த பட்சம் இந்த இசை என்னைப் பாழாக்கியது. நான் அதுவரை முற்றிலும் அறிந்திராத புதிய உணர்ச்சிகளையும் புதிய தகுதிகளையும் அது வெளிக்காட்டுவது போல எனக்குத் தோன்றியது. இது இப்படிப்பட்டது, நீ நினைத்துக் கொண்டிருந்த, வாழ்ந்து கொண்டிருந்தபடி ஒன்றும் இல்லை, ஆனால் இது இப்படிப்பட்டது என்று அது என்னிடம் சொல்வது போல எனக்குத் தோன்றியது. அந்தப் புதிய வழி என்ன என்று எடுத்துக்கூற எனக்குத் தெரியாது; ஆனால் அந்தப் புதிய நிலைமையின் உணர்வு எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. அதே நபர்களை—அவளையும் அவரையும் — நான் முற்றிலும் வேறு ஒளியில் பார்த்தேன்.

''அந்தப் பாடலுக்குப் பிறகு அவர்கள் சாதாரணமானதாகஇருந்தாலும் குதூகலமளிக்கின்ற andanteஐ — அதன் கொச்சைத்தனமான மாறுபாடுகளுடனும் தேய்ந்து மறையும் முடிவுடனும் — வாசித்தார்கள். விருந்தினர்களின் வற்புறுத்தலுக்கிணங்க அவர்கள் இன்னும் சில பாடல்களையும் வாசித்தார்கள். எர்ன்ஸ்தின் இரங்கற்பாட்டு ஒன்று, அதற்குப் பிறகு வேறொன்று. அவை நன்றாகவே இருந்தன. ஆனால் முதல் இசை என்னிடம் ஏற்படுத்திய தாக்கத்தில் பத்தில் ஒரு பங்கைக் கூட அவை ஏற்படுத்தவில்லை. முதல் இசை என்னிடம் ஏற்படுத்திய கிறுகிறுப்பின் பின்னணியில் நான் அவற்றைக் கேட்டேன். எஞ்சியிருந்த

மாலைப்பொழுது முழுவதிலும் நான் கவலையே இல்லாமலும் குதூகலமாகவும் இருந்தேன். அன்று என் மனைவி வசீகரமாகத் தோன்றிய தைப்போல அதற்கு முன்பு ஒருபோதும் தோன் றியதில்லை. அவளுடைய கண்களில் தென்பட்ட பிரகாசம், பியானோ வாசிக்கும் பொழுது அவ ளுடைய தோற்றத்திலிருந்த சிந்தனையும் முக் கியத்துவமும் வாசிப்பை முடித்த பொழுது முற்றிலும் தன்வலுவற்ற உடலும் பரவசம் நிறைந்த ஆனால் பலவீனமான சிரிப்பும். நான் எல்லாவற்றையும் பார்த்தேன். என்னைப் போல அவளும் நினைவின் அடியாழத்திலிருந்து வெளிவந்த புதுமையான, அதுவரை அறிந் திராத உணர்ச்சிகளை வெளிக்காட்டினாள் என்று மட்டுமே நான் அதைப் புரிந்து கொண்டேன். அன்றைய மாலைப்பொழுது வெற்றிகரமாக முடிவடைந்தது. எல்லோரும் வீட்டுக்குத் திரும் பினார்கள்.

''நான் இரண்டு நாட்களுக்குப் பிறகு கூட் டத்துக்காக வெளியூருக்குப் போவேன் என்று த்ருஹசேவ்ஸ்கிக்குத் தெரியும். எனவே அவன் போகும் பொழுது அன்று மாலையில் தான் அனு பவித்த மகிழ்ச்சி அடுத்த தடவை அந்த ஊருக்கு வரும் பொழுதும் தனக்குத் திரும்பக் கிடைக்குமென்று நம்புவதாகக் கூறினான். நான் வெளியூருக்குப் போயிருக்கும் பொழுது என்னு டைய வீட்டுக்கு அவன் வர முடியாது என்று கருதுகிறான் என்பதாக நான் இதைப் புரிந்து கொண்டேன். அது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவன் ஊரை விட்டுப் போவ

தற்கு முன்பாக நான் கூட்டம் முடிந்து திரும்ப மாட்டேன் என்பதால் அவனை மறுபடியும் பார்க்கப் போவதில்லை என்று நினைத்தேன்.

''நான் முதல் தடவையாக உண்மையான மகிழ்ச்சியோடு அவன் கையைக் குலுக்கி நன்றி தெரிவித்தேன். அவன் என் மனைவியை அடுத்த தடவை சந்திப்பதற்கு நெடுங்காலமாகும் என்பதைப் போல அவளிடமும் விடைபெற்றுக் கொண்டான். அவர்களுடைய செயல்களில் மிகவும் இயல்பான, கண்ணியமானவற்றைத் தவிர வேறு எதுவுமே இல்லை என்று எனக்குத் தோன்றியது. எல்லாமே மிக நன்றாக இருந்தன. அன்றைய மாலைப் பொழுதைப் பற்றி என் மனைவியும் நானும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தோம்.''

## 24

''இரண்டு நாட்களுக்குப் பிறகு நான் மனதில் எந்தக் கவலையும் இல்லாமல் அதிக உற்சாகத்தோடு என் மனைவியிடம் விடைபெற்றுக் கொண்டு கிராமத்துக்குப் புறப்பட்டேன். எப்பொழுதுமே கிராமத்தில் கவனிக்க வேண்டிய வேலைகளுக்கு முடிவே கிடையாது. அது தனக்கென்று பிரத்யேகமான வாழ்க்கை முறையைக் கொண்ட தனி உலகம். முதல் இரண்டு நாட்களிலும் ஒவ்வொரு நாளும் தொடர்ச்சியாகப் பத்து மணி நேரம் கூட்டத்தில் கலந்து கொண்டேன். மறு நாள் என் மனைவியிடமிருந்து வந்த கடிதத்தைக் கொடுத்தார்கள். நான் உடனே

அதைப் படித்தேன். அவள் குழந்தைகள், அவளுடைய மாமா, செவிலிப் பெண், அவள் வாங்கிய பொருட்கள் ஆகியவற்றைப் பற்றி எழுதிவிட்டு சுற்றி வளைக்காமல்—மிகவும் சாதாரணமான விஷயத்தைப் பற்றி எழுதுவதைப் போல—த்ருஹசேவ்ஸ்கி தான் சொல்லியிருந்தபடி இசைக்குறிப்புகளைக் கொண்டு வந்ததாகவும், அவற்றை வாசிப்பதாகச் சொன்ன பொழுது தான் வேண்டாமென்று கூறிவிட்டதாகவும் எழுதியிருந்தாள். அவளிடம் இசைக்குறிப்புகளைக் கொண்டு வருவதாக அவன் சொன்னதாக எனக்கு நினைவில்லை. அவன் அவளிடம் முடிவாக விடைபெற்றுக் கொண்டதாக நான் எண்ணியிருந்தபடியால் எனக்கு அது மகிழ்ச்சியைத் தராமல் ஆச்சரியத்தைக் கொடுத்தது. ஆனால் அப்பொழுது நான் பரபரப்பாக இருந்தபடியால் அதைப் பற்றி அதிகமாகச் சிந்திக்கவில்லை. மாலை நேரத்தில் அறைக்குத் திரும்பிய பிறகு தான் அந்தக் கடிதத்தை மறுபடியும் படித்தேன். நான் இல்லாத சமயத்தில் த்ருஹசேவ்ஸ்கி வீட்டுக்கு வந்த அதிருப்தியளிக்கும் செய்தியைத் தவிர அந்தக் கடிதத்தின் மொத்த தொனியுமே எனக்குப் பாசாங்காகத் தோன்றியது. பொறாமை என்ற வெறி பிடித்த மிருகம் தன் குகையில் உறுமியது; வெளியே பாய்வதற்குத் திமிறியது. ஆனால் அதன் மிருக பலம் எனக்கு பயத்தைக் கொடுத்தபடியால் நான் அதை பலவந்தமாகப் பின்னால் இழுத்தேன். 'பொறாமை என்பது எவ்வளவு கீழான உணர்ச்சி!' என்று மனதில் சொல்லிக் கொண்

டேன். 'அவள் எழுதியிருப்பவைகளைக் காட்டிலும் அதிக இயல்பானவை வேறு என்ன இருக்க முடியும்?'

''நான் படுக்கையில் படுத்துக்கொண்டு மறு நாள் செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றிய சிந்தனைகளில் மூழ்கினேன். புதிய இடத்தில் படுத்தால் எனக்கு உடனே தூக்கம் வருவது கஷ்டம். ஆனால் அன்றிரவில் நான் உடனே அயர்ந்து தூங்கிவிட்டேன். ஆனால் சில சமயங்களில் நடப்பதைப் போல, மின்சார அதிர்ச்சி ஏற்பட்டதைப் போல திடீரென்று விழித்துக் கொண்டேன். என் மனதில் அவளைப் பற்றிய சிந்தனைகளோடு, அவள் மீது உடற்பசியோடு, த்ருஹசேவ்ஸ்கி அவளிடம் விரும்பியதை அடைந்துவிட்டான் என்ற உறுதியோடு நான் விழித்துக் கொண்டேன். என் மனதை ஆத்திரமும் நடுக்கமும் அடைத்துக் கொண்டன. என்னிடமே நான் வாதாடத் தொடங்கினேன். 'எல்லாம் பிதற்றல்' என்று மனதில் சொல்லிக் கொண்டேன். 'இப்படி நினைத்துக் கொண்டு சங்கடப்பட வேண்டியதில்லை. அவர்களுக்கிடையே எதுவும் நடந்து விடவில்லை, ஒரு போதும் நடக்கவும் இல்லை. இவ்வளவு பயங்கரமான ஒன்றைக் கற்பனை செய்து அவளையும் என்னையும் நான் எப்படிக் கேவலப்படுத்தலாம். கெட்ட பெயரெடுத்த ஒரு கூலிப் பாடகன்—அவளோ கௌரவமான பெண், ஒரு குடும்பத்தின் தாய், என்னுடைய சொந்த மனைவி! என்ன தடுமாற்றம்!' இது விவாதத்தின் ஒரு பக்கம். மறு பக்கத்தில்: அதைத் தவிர வேறு

என்ன இருக்க முடியும்? அந்த சுலபமான' சாதாரணமான விஷயத்தைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்? அதற்காகத் தானே நான் அவளைத் திருமணம் செய்து கொண்டேன். அதனுல் தானே அவளோடு வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறேன். அது ஒன்றைத் தானே அவளிடம் நான் விரும்புகிறேன்; இந்தப் பாடகன் உட்பட மற்றவர்களும் அது ஒன்றை மட்டும்தானே அவளிடமிருந்து விரும்புகிருர்கள். அவன் திருமணமாகாதவன், நல்ல ஆரோக்கியத் தோடிருக்கிருன் (அவன் பெரிய இறைச்சித் துண்டைப் பற்களுக்கிடையே வைத்து நறு நறுவென்று கடித்ததையும் தன்னுடைய சிவந்த உதடுகளால் ஒரு கிளாஸ் ஒயினை மடக் மடக்கென்று குடித்ததையும் நினைத்துக் கொண்டேன்), கச்சிதமான, கொழுத்த உடல். அவன் கொள்கை இல்லாத மனிதன் அல்ல, தனக்குக் கிடைக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற கொள்கையை வழிகாட்டியாகக் கொண்டவன். அவனும் என் மனைவியும் இசையினுல் பிணைக்கப்பட்டவர்கள். காமவேட்கையைத் தூண்டுவதற்கு அதைக் காட்டிலும் அதிக நயமான வழி உண்டா? அவனைத் தடுக்கக்கூடியது ஏதேனுமுண்டா? ஒன்றுமில்லை. அதற்கு மாருக அவனை முன்னுல் உந்தித் தள்ளுவதற்கு எல்லாமே இருக்கின்றன. அவள்? அவள் யார்? அவள் ஒரு புதிர். எப்பொழுதுமே புதிராகத் தான் இருந்திருக்கிருள். நான் அவளைப் புரிந்து கொள்ளவில்லை. ஒரு மிருகம். அவள் எப்பொ

முதுமே அப்படிப்பட்ட மிருகமாகத் தான் இருந்திருக்கிறுள். எந்தத் தடையும் ஒரு மிருகத்தை நிறுத்த முடியாது.

''அன்று மாலையில், கிரேய்ஸர் சொனுட்டாவை வாசித்த பிறகு உணர்ச்சிகரமான ஒரு சிறு பாடலை (அதை எழுதியவர் யார் என்பது எனக்கு நினைவில்லை), உடலின்ப வெறியூட்டுகின்ற ஒரு பாடலை வாசித்த பொழுது அவர்கள் முகங்களில் தோன்றிய பாவம் அப்பொழுது தான் என் நினைவுக்கு வந்தது. 'அவர்களைத் தனியே விட்டுவிட்டு நான் எப்படி வரலாம்?' என்று அவர்களுடைய முகங்களை நினைத்தபடியே என்னைக் கேட்டுக் கொண்டேன். 'அன்று மாலையிலேயே அவர்களுக்கிடையில் எல்லாம் நடைபெற்றுவிட்டது என்பது தெளிவாக இல்லையா? அன்று மாலையில் அவர்களைப் பிரிக்கின்ற தடை எதுவும் அதற்குப் பிறகு இல்லை. அவர்களிருவரும்—குறிப்பாக அவள்—அவர்களுக்கிடையே நடைபெற்றுவிட்ட ஒன்றைப் பற்றி வெட்கப்பட்டார்கள் என்பது தெளிவாகத் தெரியவில்லையா?' அவள் என்னைப் பார்த்து இலேசாக, பரிதாபகரமாக, பரவசமான புன்சிரிப்பை உதிர்த்ததையும் நான் பியானேவுக்குப் பக்கத்தில் போன பொழுது அவள் நாணத்தால் சிவந்த, வியர்வைத் துளிகள் தோன்றியிருந்த முகத்தை எப்படித் துடைத்தாள் என்பதையும் நான் நினைத்துக் கொண்டேன். அப்பொழுது கூட அவர்கள் ஒருவரையொருவர் நேரடியாகப் பார்த்துக் கொள்வதைத் தவிர்த்துக் கொண்டார்கள். இரவு விருந்தின்போது

அவன் ஒரு டம்ளரில் தண்ணீரை ஊற்றி அவளிடம் நீட்டிய பொழுதுதான் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு மிக லேசாகச் சிரித்துக் கொண்டார்கள். அவர்களுடைய பார்வையையும் தோன்றியவுடனே மறைந்து விட்ட புன்சிரிப்பையும் பார்த்ததை இப்பொழுது பீதியோடு நினைத்துப் பார்த்தேன். 'எல்லாம் முடிந்துவிட்டது' என்று ஒரு குரல் என்னிடம் கூறியது. ஆனல் இன்னெரு குரல் முற்றிலும் வேருன ஒன்றைத் தெரிவித்தது. 'உன்னிடம் ஏதோ ஒன்று ஏற்பட்டிருக்கிறது. இது உண்மையாக இருக்க முடியாது' என்று இன்னெரு குரல் கூறியது. அந்த இருளில் படுத்திருப்பது எனக்கு பயங்கரமாக இருந்தது. ஒரு தீக்குச்சியைப் பொருத்தினேன். மஞ்சள் நிறத்தில் சுவர்க் காகிதம் ஒட்டப்பட்டிருந்த அந்தச் சிறிய அறையில் இருக்க எனக்கு ஏனே பயமாக இருந்தது. என்னல் தீர்க்க முடியாத பிரச்சினைகளைப் பற்றித் திரும்பத் திரும்பச் சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது புகை பிடிப்பது என்னுடைய பழக்கம். நான் சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தேன். எனக்கு ஏற்பட்டிருந்த பிரச்சினை தீர்க்கப்பட முடியாதது என்பதை என்னுடைய புலன்கள் மறந்து விட வேண்டுமென்பதற்காக ஒரு சிகரெட்டுக்குப் பிறகு இன்னெரு சிகரெட் என்று தொடர்ச்சியாகப் புகை பிடித்துக் கொண்டிருந்தேன்.

''அதற்குப் பிறகு அன்றிரவில் என்னல் தூங்க முடியவில்லை. இந்தச் சுமையை இனியும் என்னல் சகித்துக் கொள்ள முடியாது, உடனடி

யாக வீட்டுக்குப் போக வேண்டுமென்று முடிவு செய்த பிறகு, ஐந்து மணிக்கு எழுந்து சென்று என்னுடைய காவல்காரனை எழுப்பினேன். குதிரைகளுக்கு ஏற்பாடு செய்யுமாறு அவனை அனுப்பினேன். எதிர்பாராத விதத்தில் அவசரமான காரியங்களுக்காக மாஸ்கோவுக்குப் போவதாகவும் எனக்குப் பதிலாக வேறு யாராவது ஒருவரை நியமித்துக் கொள்ளுமாறும் என்னுடைய சகாக்களுக்கு ஒரு கடிதம் எழுதியனுப்பினேன். எட்டு மணிக்கு வண்டியில் புறப்பட்டேன்.''

## 25

ரயில் வண்டிப் பரிசோதகர் உள்ளே வந்தார். மெழுகுவர்த்தி முற்றிலும் எரிந்து விட்டிருந்ததை கவனித்தார். அதை அணைத்தார். ஆனால் அதற்குப் பதிலாக வேறு மெழுகுவர்த்தியை ஏற்றவில்லை. வெளியே வெளிச்சம் அதிகரித்துக் கொண்டிருந்தது. போஸ்த்நிஷெவ் ஆழமாகப் பெருமூச்சுவிட்டார், ஆனால் அந்தக் கண்டக்டர் வண்டியிலிருக்கும் வரை ஒன்றும் பேசவில்லை. அவர் வண்டியை விட்டுப் போன பிறகு அந்த இருண்ட வண்டியில் சன்னல்கள் கடகடக்கும் சத்தமும் கடைச் சிப்பந்தியின் குறட்டை ஒலியையும் தவிர வேறு சத்தம் கிடையாது. அதன் பிறகுதான் அவர் கதையைத் தொடங்கினார். அந்த அதிகாலையில் என்னால் அவரைச் சரியாகக்கூடப் பார்க்க முடியவில்லை. அவருடைய குரல் மட்டும்தான் எனக்குக் கேட்டது. அந்தக் குரலில் பரபரப்

பும் வேதனையும் மென்மேலும் அழுத்தமாக ஒலித்தன.

''நான் குதிரைச் சவாரி செய்து முப்பத்தைந்து வெர்ஸ்தாக்கள் தூரமும் ரயிலில் எட்டு மணி நேரமும் பிரயாணம் செய்ய வேண்டும். குதிரை வண்டியில் பிரயாணம் ஆனந்தமாக இருந்தது. அது இலையுதிர் காலம். உறைபனி கலந்த காலைப் பொழுது. சூரியன் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஈரமான பாதையில் வண்டிச் சக்கரங்கள் அழுத்தமாகப் பதிந்து தடம் ஏற்படுத்துகின்ற காலை நேரத்தைப் பற்றி உங்களுக்குத் தெரியுமே: வளவளப்பான சாலைகள், பொன்னொளி சுடர் விடுகின்ற காலை நேரம். எழுச்சியூட்டும் காற்று. வண்டியில் போகும் பொழுது பரவசமாக இருந்தது. காலைப் பொழுது தொடங்கிய பிறகு பிரயாணம் தொடர்ந்து கொண்டிருக்கும் பொழுது என் மனநிலையில் முன்னேற்றம் ஏற்பட்டது. போகும் வழியில் குதிரைகளையும் வயல்களையும் மக்களையும் பார்த்த பொழுது நான் எங்கே போய்க் கொண்டிருக்கிறேன் என்பதை மறந்துவிட்டேன். காலையில் காற்று வாங்கப் போவதாகவும், அந்தப் பிரயாணத்தை ஒட்டிய சந்தர்ப்பங்கள் முற்றிலும் கற்பனையானவை என்று கூட சில சமயங்களில் நான் நினைத்தேன். அதை மறப்பதில் நான் குறிப்பிடத் தக்க அளவில் மகிழ்ச்சியும் அடைந்தேன். நான் எங்கே போய்க் கொண்டிருக்கிறேன் என்பதை நினைக்கும் பொழுதெல்லாம், 'அதைப் பற்றி நினைக்காதே. எல்லாமே காலப் போக்கில் தெளி

வாகும்' என்று மனதில் சொல்லிக் கொள் வேன். பிரயாணத்துக்கு நடுவில் என் பயணத் தைத் தாமதப்படுத்தி கவனத்தைத் திருப்பும் படியாக ஒரு சம்பவம் நடைபெற்றது. வண்டி உடைந்துவிட்டபடியால் அதைப் பழுது பார்க்க வேண்டியிருந்தது. அந்த விபத்து மாபெரும் விளைவுகளைக் கொண்டிருந்தது. அதனுல் துரித ரயில் வண்டியைப் பிடிக்க முடி யாமற் போய் தபால் ரயில் வண்டியில் பிர யாணம் செய்யுமாறு நேர்ந்தது, எனவே நான் எதிர்பார்த்தது போல ஐந்து மணிக்கு மாஸ் கோவுக்கு வந்து சேரவில்லை, இரவு பன்னிரண்டு மணிக்குத்தான் வந்து சேர்ந்தேன். வண்டிப் பிரயாணம், வண்டியைப் பழுது பார்த்தல், கணக்குப் பார்த்துப் பணம் கொடுப்பது, போகும் வழியில் ஒரு தங்கும் நிலையத்தில் தேநீர் குடித்தல், அங்கே ஒரு மூட்டை தூக்கு பவனேடு உரையாடல்—இவற்றினுல் என் மூளை சுறுசுறுப்பாக இருந்தது. மாலை நேரத்துக்குள் எல்லாம் சரியாகிவிட்டபடியால் நான் மறுபடி யும் பயணத்தைத் தொடங்கினேன். பகற் பொழுதில் பிரயாணம் செய்ததைக் காட்டி லும் அந்தி நேரப் பிரயாணம் மிகவும் ஆனந்த மாக இருந்தது. புது நிலா, லேசான உறைபனி, வளவளப்பான சாலை, நல்ல குதிரைகள், உற் சாகமான வண்டிக்காரன். எனக்காகக் காத் திருப்பதைப் பற்றி அநேகமாகச் சிந்திக்காமல் அந்தச் சூழலை நான் பூரணமாக அனுபவித் தேன். அல்லது எனக்காகக் காத்துக் கொண் டிருப்பது என்ன என்று தெரிந்திருந்தபடியால்

—அதனால் வாழ்க்கையின் ஆனந்தங்களைக் கடைசித் தடவையாக நான் ருசிக்க விரும்பிய தால்—அதை நான் பூரணமாக அனுபவித்தேன் என்று கூடச் சொல்லலாம். ஆனால் இந்த அமை தியான நிலைமை, என்னுடைய உணர்ச்சியை அடக்கிக் கொள்வதற்குரிய ஆற்றல் வண்டிப் பிரயாணத்தோடு முடிந்துவிட்டது. ரயில் பெட் டிக்குள் நுழைந்த முதல் நிமிடத்திலேயே என் உணர்ச்சிகள் முற்றிலும் மாறிவிட்டன. அந்த எட்டு மணி நேர ரயில் பிரயாண வேதனையை நான் உயிரோடிருக்கின்றவரை என்னால் மறக்க முடியாது. ரயில் பெட்டிக்குள் நுழைந்த உடனே நான் அநேகமாக வீட்டுக்கு வந்துவிட்ட தாக நினைத்தது அதற்குக் காரணமாக இருக் கலாம். அல்லது ரயில் பிரயாணங்கள் எப் பொழுதும் மக்களின் நரம்புகளை முறுக்கிவிடு வது காரணமாக இருக்கலாம். காரணம் எது வாக இருந்தாலும், ரயில் பெட்டியில் என் இடத்தில் உட்கார்ந்த வினாடியிலிருந்து என்னால் என் கற்பனையைத் தடுக்க முடியவில்லை. அது என் பொறுமையைத் தூண்டுவதற்கு ஒன் றுக்குப் பின் ஒன்றாகச் சித்திரங்களைத் தீட்டிக் கொண்டிருந்தது. ஒவ்வொரு புதிய சித்திரமும் முந்திய சித்திரத்தைக் காட்டிலும் ஆபாசமான தாக இருந்தது. நான் இல்லாத நேரத்தில் அவள் என்ன செய்து கொண்டிருந்தாள், என்னை எப்படி ஏமாற்றிக் கொண்டிருந்தாள் என்பதை அந்தச் சித்திரங்கள் அனைத்துமே விளக்கின. ஆத்திரமும் ஆவேசமும் என்னை அழித்தன. இந்தச் சித்திரங்களைப் பற்றிச் சிந்

திக்கும் பொழுது எனக்கு ஏற்பட்ட இழிவுணர்ச்சியில் நான் ஊறித் திளைத்தேன். என்னால் அவற்றை விரட்ட முடியவில்லை, அவற்றிலிருந்து என்னுடைய கண்களைப் பிடுங்கவும் முடியவில்லை, அவற்றை மனக் கண் முன் கொண்டு வராதிருக்கவும் என்னால் முடியவில்லை. இந்தக் கற்பனைச் சித்திரங்களைப் பற்றி எவ்வளவு அதிகமாகச் சிந்தித்தேனோ அந்த அளவுக்கு அவை உண்மையானவை தான் என்று அதிகமாக நம்பத் தொடங்கினேன். அவை என் மூளைக்கு முன்னால் மிகவும் தெளிவாகத் தோன்றியதே என் கற்பனைகள் உண்மை என்பதற்கு நிரூபணமாக இருந்தன. ஏதோ ஒரு பிசாசு என் சித்தத்துக்கு விரோதமாக மிகவும் பயங்கரமான கற்பனைகளைத் தயாரித்துக் கொண்டிருந்தது, என் காதுக்குள் குசுகுசுவென்று அவற்றைச் சொல்லிக் கொண்டிருந்தது. பல வருடங்களுக்கு முன்னால் த்ருஹசேவ்ஸ்கியின் சகோதரனுக்கும் எனக்கும் நடைபெற்ற உரையாடல் என் நினைவுக்கு வந்தது. இந்தப் பேச்சை நினைவுபடுத்திக் கொண்டு அந்தப் பாடகனுக்கும் என் மனைவிக்கும் அதைப் பொருத்திப் பார்த்து ஒரு வகையான அருவருப்பான பரவசத்தோடு என் இதயத்தைப் புண்படுத்திக் கொண்டேன்.

''பல வருடங்களுக்கு முன்னர் அந்த உரையாடல் நடைபெற்றது. ஆனால் அது எனக்குத் தெளிவாக நினைவிருந்தது. விபசார விடுதிகளுக்குப் போவதுண்டா என்று நான் த்ருஹசேவ்ஸ்கியின் சகோதரரிடம் கேட்டேன். அது

பொதுவாகக் கீழ்த்தரமான, அழுக்கு நிறைந்த இடம், மேலும் கௌரவமான பெண் தனக்கு எப்பொழுதும் கிடைக்கும் பொழுது நோய் தொற்றிக் கொள்ளக் கூடிய இடத்துக்கு கண் ணியமான மனிதர் யாருமே போக மாட்டார் கள் என்று அவர் பதிலளித்தார். உண்மை தான். அவர் சகோதரன் என் மனைவியைப் பிடித்துவிட்டான். 'அவள் புது மலர்ச்சியோடு இல்லை என்பது உண்மையே. இடது பக்கத்தில் ஒரு பல் விழுந்துவிட்டது, சற்றுத் தடித்து விட்டாள். ஆனால் அதற்கென்ன செய்வது? ஒரு வர் கிடைப்பதைத் தானே பெற்றுக்கொள்ள வேண்டும்' என்று நான் அவன் சார்பில் சமா தானம் கூறிக் கொண்டேன். 'ஆமாம். அவளைத் தன்னுடைய ஆசை நாயகியாக வைத்துக் கொள்வதன் மூலம் அவளுக்குப் பேருதவி செய்கிறான். மேலும் அவளிடமிருந்து நோய் வரக்கூடிய ஆபத்து இல்லை அல்லவா?' என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். 'இல்லை, இது முடியாது! இதை நினைத்துப் பார்க்கவே முடியவில்லையே' என்று பீதியோடு எனக்குச் சொல்லிக் கொண்டேன். 'ஒன்றுமில்லை. அப்படி ஒன்றும் நடைபெற்று விடவில்லை. அப்படி ஒன்றை நான் கற்பனை செய்வதற்கு மிகச் சிறிய ஆதாரம் கூடக் கிடையாது. அப்படிப் பட்ட ஒரு நபரைப் பற்றிப் பொறாமைப்படு வது உங்களுடைய தகுதிக்குக் குறைவானது என்று அவளே என்னிடம் சொல்லவில்லையா? ஆமாம். ஆனால் அவள் பொய் சொல்லிக் கொண்டிருந்தாள், அவள் பேசியதெல்லாம்

பொய்' என்று நான் மனத்துக்குள் பலமாகச் சொல்லிக் கொண்டேன். பிறகு அது மறுபடியும் தொடங்கியது... அந்தப் பெட்டியில் எங்களைத் தவிர இன்னும் இரண்டு பிரயாணிகள் தான் இருந்தார்கள். ஒரு கிழவி மற்றும் அவளுடைய கணவன். அவர்கள் இருவரும் ஒன்றுமே பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள், ஏதோ ஒரு ரயில் நிலையத்தில் அவர்கள் இறங்கி விட்டார்கள். நான் தனியே விடப்பட்டேன். நான் கூண்டில் அடைக்கப்பட்ட மிருகத்தைப் போல இருந்தேன். ஒரு நிமிடம் குதித்தெழுந்து சன்னலை நோக்கிச் செல்வேன். மறு நிமிடம் வண்டியின் வேகத்தை அது அதிகப்படுத்துவதைப் போல தள்ளாடியபடியே மேலும் கீழும் நடப்பேன். ஆனால் அந்த ரயில் வண்டி சன்னல்களும் பலகைகளும் கடகடக்க வழக்கமான வேகத்திலேயே போய்க் கொண்டிருந்தது. நம் வண்டி இப்பொழுது போவது மாதிரியே...''

போஸ்த்நிஷெவ் குதித்தெழுந்தார். இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் திரும்பினார். பிறகு மறுபடியும் உட்கார்ந்தார்.

''ஓ, ரயில் வண்டிகளை நினைத்தாலே எனக்கு பயம். ஆம், மிகவும் பயம்! '' என்று அவர் தொடர்ந்தார். '' 'நான் வேறு எதைப் பற்றி யாவது—உதாரணமாக, பிற்பகலில் தேநீர் குடித்த விடுதியைப் பற்றி—நினைக்க வேண்டும்' என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். என் மனதில் தாடி வைத்திருந்த அந்த மூட்டை தூக்குபவனை, அவனுடைய பேரக் குழந்தையை—அவனுக்கு என் வாஸ்யாவின் வயதுதான்

இருக்கும் — நினைத்துக் கொள்வேன். என் கண்ணே வாஸ்யா! அந்தப் பாடகன் உன் தாயாரை முத்தமிடுவதை நீ ஒரு நாள் பார்க்கப் போகிருய். பாவம்! நீ துடிதுடிக்கப் போகிருய். ஆனல் அவளுக்கு அது ஒன்றுமில்லே! அவள் காதல் மயக்கத்திலிருக்கிருள்... மறுபடியும் அதையே நினைப்பேன். இல்லே. இல்லே... ஸ்தல மருத்துவ நிலேயத்துக்குப் போனதை நினைத்துக் கொள்ள வேண்டும். நேற்று அந்த நோயாளி டாக்டரைப் பற்றிப் புகார் செய்ததை நினைத்துக் கொள்ள வேண்டும். அந்த டாக்டர் த்ருஹசேவ்ஸ்கியைப் போலவே மீசை வைத்திருந்தார். ஊருக்குப் போகிறேன் என்று சொல்லிக் கேவலமான முறையில் அவனும் அவளும் என்னே ஏமாற்றி விட்டார்களே. மறுபடியும் அது தொடங்கியது. நான் சிந்தித்துப் பார்த்த ஒவ்வொன்றும் ஒவ்வொரு விஷயமும் என்னே அவனிடமே மறுபடியும் கொண்டு சென்றது. நான் பயங்கரமாகத் துன்பமடைந்தேன். பெரும்பாலும் என்னுடைய அறியாமை, சந்தேகங்கள், தீர்மானமின்மை அவளே நான் நேசிக்க வேண்டுமா அல்லது வெறுக்க வேண்டுமா என்று எனக்குத் தெரியாததனல் துன்பமடைந்தேன். அந்தத் துன்பங்கள் மிகவும் அதிகம். வண்டியை விட்டுக் கீழே இறங்க வேண்டும், ரயில் தண்டவாளத்தில் படுத்துக் கொண்டு வாழ்க்கையை முடித்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை வரவேற்றது எனக்கு நினைவிருக்கிறது. இந்த விஷயத்தில் குறைந்த பட்சம் நான் அதிகமாகச்

சந்தேகப்பட்டிருக்க வேண்டும். இதைச் செய்ய முடியாதபடி என்னைத் தடுத்த ஒரே காரணம்: என்னுடைய சுய—அனுதாபம் தான். அவள் மீது மிகவும் அதிகமான வெறுப்பு தவிர்க்க முடியாத வகையில் அதைப் பின்தொடர்ந்தது. அவன் மீது எனக்கேற்பட்ட வெறுப்பு எனக் கேற்பட்டிருந்த அவமானத்தையும் அவ னுடைய வெற்றியையும் பற்றிய என் உணர் வோடு கலந்திருந்தது. அவளைப் பற்றி வெறுப் பைத் தவிர, பயங்கரமான வெறுப்பைத் தவிர வேறு எவ்விதமான உணர்ச்சியும் எனக்கு ஏற் படவில்லை. 'நான் தற்கொலை செய்து கொண்டு அவள் சுதந்திரத்தை அனுபவிக்க விடக் கூடாது. அவளும் துன்பமடையுமாறு செய்ய வேண்டும். நான் எவ்வளவு கஷ்டப்பட்டேன் என்பதை அவள் உணரும்படிச் செய்ய வேண் டும்' என்று மனதுக்குள் சொல்லிக் கொண் டேன். என்னுடைய கவனத்தை மாற்றுவதற் காக ஒவ்வொரு ரயில் நிலையத்திலும் ரயிலை விட்டுக் கீழே இறங்கி நின்றேன். ஒரு ரயில் நிலையத்திலிருந்த உணவருந்தும் நிலையத்தில் சிலர் குடித்துக் கொண்டிருப்பதைப் பார்த் தேன். நானும் வோட்கா குடித்தேன். எனக்குப் பக்கத்தில் ஒரு யூதர் நின்று கொண்டிருந்தார். அவரும் குடித்தார். அவர் என்னோடு பேசத் தொடங்கினர். என்னுடைய பெட்டியில் தனி யாக உட்கார்ந்திருக்கப் பிடிக்காமல் நான் அவ ருடைய மூன்றும் வகுப்புப் பெட்டியில் ஏறி னேன். அந்தப் பெட்டி அசுத்தமாகவும் புகை மண்டியுமிருந்தது; தரை முழுவதிலும் சூரிய

காந்தி விதைத் தோல்கள் சிதறிக் கிடந்தன. நான் அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தேன். அவர் என்னிடம் பல விஷயங்களைப் பற்றி வம் பளந்தார், பல கதைகளைச் சொன்னூர். அவர் பேசுவதை நான் கேட்டுக் கொண்டிருந்தேனே தவிர அவர் சொல்வது எனக்குப் புரியவில்லை. ஏனென்றால் என்னுடைய சொந்தச் சிந்தனை களைப் பற்றித் தொடர்ந்து நினைத்துக் கொண் டிருந்தேன். அவர் இதை கவனித்த பிறகு கவன மாகக் கேளுங்கள் என்று என்னிடம் வற்புறுத் தினூர். நான் அங்கிருந்து புறப்பட்டு என் னுடைய பெட்டிக்குத் திரும்பினேன். ‘இதைப் பற்றி நன்ருகச் சிந்திக்க வேண்டும். நான் இப்பொழுது சிந்திப்பது சரிதானு, நான் இவ் வளவு துன்பத்தை அனுபவிப்பதற்குத் தகுந்த காரணமுண்டா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்’ என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். நான் அமைதியாகச் சிந்திக்க முயற்சித்தேன்; ஆனுல் அமைதியாகச் சிந்திப் பதற்குப் பதிலாக மறுபடியும் அதே மாதிரி யாகத் தொடங்கினேன். அறிவுபூர்வமான சிந் தனைகளுக்குப் பதிலாக சித்திரங்களும் கற்பனை களும் ஏற்பட்டன. ‘இதற்கு முன்பு எத்தனை தடவை இப்படிச் சித்திரவதை செய்யப்பட் டிருக்கிறேன்’ என்று பொருமையில் வெந்த மற்ற சந்தர்ப்பங்களை நினைவுபடுத்திக் கொண் டேன். ‘ஒவ்வொரு தடவையுமே அதில் ஒன்று மில்லை என்று பிறகு தெரிந்தது. இம்முறையும் அப்படித்தானிருக்கும் என்று நம்புகிறேன்— இல்லை, அதுதான் உறுதி. அவள் படுக்கையில்

அமைதியாகத் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கப் போகிறேன். அவள் விழித்துக் கொள்வாள். என்னைப் பார்ப்பதற்கு மகிழ்ச்சி அடைவாள். ஒன்றும் நடந்துவிடவில்லை, இவை அனைத்தும் கட்டுப்பாடில்லாத கற்பனைகள் என்பதை அவளுடைய சொற்களும் பார்வைகளும் தோற்றமும் எனக்குத் தெரிவிக்கும். ஓ! அது எவ்வளவு அற்புதமாக இருக்கும்!' 'இல்லை. அது பல தடவை அப்படி முடிந்திருக்கிறது. ஆனால் இப்பொழுது வேறுவிதமாக முடியப் போகிறது' என்று ஒரு குரல் பேசியது. உடனே எல்லாம் மறுபடியும் தொடங்கின. ஆம். அதில் தான் என்னுடைய தண்டனை அடங்கியிருக்கிறது! ஒரு இளைஞனுடைய காமநோயைப் போக்குவதற்குப் பெண் நோயை குணப்படுத்துகின்ற மருத்துவ மனைக்கு அவனைக் கூட்டிச் செல்ல மாட்டேன். அவனிடம் என்னுடைய ஆன்மாவைக் காட்டுவேன், அதைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துக் கொண்டிருக்கும் பிசாசுகளை அவர்கள் பார்க்கட்டும்! அவளுடைய உடல் மீது—அது என்னுடைய உடல் என்பதைப் போல—முழுமையான, கேள்விக்கு இடமில்லாத உரிமையைக் கோரினேன், அதே சமயத்தில் அவளுடைய உடலை என் உடைமையாக வைத்திருக்க முடியாது, அது என்னுடையது அல்ல, அவள் விருப்பம் போல அதை உபயோகித்துக் கொள்ள முடியும், எனக்கு விருப்பமில்லாத ஒரு வழியில் அவள் அதை உபயோகித்துக் கொள்ள விரும்பினுள் என்பது தான் அருவருப்பைக் கொடுத்தது. அவளையோ

அல்லது அவனையோ நான் ஒன்றுமே செய்ய முடியாது. அவன் பாட்டில் வருகின்ற வாங் காவைப் போல அவளுடைய இனிமை நிறைந்த முத்தங்களைப் பற்றிப் பாடிக் கொண்டு தூக்கு மேடைக்குச் செல்வான். மரணத்தில் கூட அவன் என்னைக் காட்டிலும் உயர்ந்தவனாக இருப்பான். அவளைப் பொறுத்தவரை அவ ளுக்கு இது கூடக் குறைவானதே. அவள் இந்தக் குற்றத்தை இதுவரை செய்யாதிருந் தால்—அவள் இதைச் செய்ய விரும்புகிறாள் என்பது எனக்குத் தெரியும் — அதுதான் அதை இன்னும் மோசமாக்குகிறது. அவள் ஏற் கெனவே அதைச் செய்து முடித்திருந்தால், அது எனக்குத் தெரிந்திருந்தால், அதைப் பற்றி இனி எந்தச் சந்தேகத்துக்கும் இடமில்லாதிருந் தால் அது மிகவும் நல்லதே. நான் சொல்ல விரும்பியதைச் சொல்ல வேண்டிய அவசிய மிருக்காது. அவள் எதை விரும்பாமலிருக்க முடியாதோ அதை அவள் விரும்பக்கூடாது என்று நான் விரும்பினேன். எல்லாமே முற்றி லும் பைத்தியக்காரத்தனமாக இருந்தது!''

## 26

''நான் இறங்க வேண்டிய இடத்துக்கு முந்திய ஸ்டேஷனில் டிக்கெட்டுகளை வாங்கு வதற்காகப் பரிசோதகர் வந்த பொழுது, நான் என்னுடைய சாமான்களை எடுத்துக் கொண்டு ரயில் பெட்டியின் மேடைக்குச் சென்றேன். நான் ஊருக்குத் திரும்பிவிட்டேன், முடிவுக்

கட்டம் நெருங்கிவிட்டது, என்ற உணர்வு என் பரபரப்பை அதிகப்படுத்தியது. என் உடலில் குளிர்ச்சி ஏற்பட்டு நடுங்கியது; பற்கள் கடகடத்தன. நான் இயந்திரத்தைப் போலக் கூட்டத்தோடு ரயில் நிலையத்தை விட்டு வெளியேறினேன். ஒரு வண்டியைக் கூப்பிட்டேன். அதில் ஏறி உட்கார்ந்து புறப்பட்டேன். வண்டியில் போய்க் கொண்டிருந்த பொழுது, தெருக்களிலிருந்த ஒரு சில நபர்களை, மூட்டை தூக்கிகளை, தெரு விளக்குகளினால் ஏற்பட்ட நிழல்களை (அவை ஒரு சமயத்தில் என் வண்டிக்கு முன்னாலும் மறு சமயத்தில் என் வண்டிக்குப் பின்னாலும் தெரிந்தன) என் மூளையில் ஒரு சிந்தனையுமே இல்லாமல் பார்த்துக் கொண்டிருந்தேன். அரை வெர்ஸ்தா தூரம் வண்டியில் போன பிறகு என் கால்கள் குளிர்ச்சி அடைந்திருப்பதை உணர்ந்தேன். ரயில் பெட்டியில் இருந்த பொழுது கம்பளிக் காலுறைகளை அகற்றி என்னுடைய கைப் பெட்டியில் வைத்தது என் நினைவுக்கு வந்தது. அந்தக் கைப் பெட்டி எங்கே? இதோ? இங்கே இருக்கிறது. என்னுடைய கூடை எங்கே? என்னுடைய சாமான்களை முற்றிலும் மறந்துவிட்டேன். இப்பொழுது நினைத்துக் கொண்ட பிறகு சாமான் ரசீதைத் தேடிக் கண்டுபிடித்தேன். ஆனால் இனிமேல் அதற்காகத் திரும்பிப் போவது பயனில்லை என்று முடிவு செய்து என் பிரயாணத்தைத் தொடர்ந்தேன்.

''எவ்வளவு முயற்சி செய்த போதிலும் அந்த நேரத்தில் நான் எந்த மனோ நிலையில் இருந்

தேன் என்பதை என்னால் நினைவுபடுத்திக் கொள்ள முடியவில்லை. நான் எதைப் பற்றி நினைத்தேன்? நான் எதை விரும்பினேன்? பயங் கரமான, மிக முக்கியமான ஒன்று நடைபெறப் போகிறது என்ற முன்னுணர்வைத் தவிர வேறு எதுவும் எனக்கு நினைவில்லை. எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. இந்த மாபெரும் முக்கியத் துவம் கொண்ட சம்பவம் நடைபெற்றது என் னுடைய விருப்பங்களினாலா அல்லது முன் னுணர்ச்சியினாலா என்பது எனக்குத் தெரியாது. அல்லது என் மூளை சூன்யமாகியிருக்க வேண் டும், அத்தகைய துயரமான கருத்துக்கள் எனக்கு ஏற்பட்டிருந்தன என்று நான் பிறகு கற்பனை செய்திருக்க வேண்டும். நான் வீட்டு வாயிலுக்குப் போய் இறங்கினேன். அப்பொ ழுது காலை சுமார் ஒரு மணி இருக்கும். வீட்டுக்கு முன்னால் சில வண்டிகள் நின்று கொண்டிருந்தன. வீட்டில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தது (வரவேற்பு அறை மற்றும் உபசரிப்பு அறைகளில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன) சன்னல்களின் வழியாகத் தெரிந்தபடியால் பிரயாணிகள் வரலாம் என்று நம்பிக்கை ஏற்பட்டிருக்க வேண்டும். இவ்வளவு நேரமான பிறகு இன்னும் ஏன் விளக்குகள் எரிந்து கொண்டிருக்கின்றன என்பதைப் பற்றிக் கூட ஆச்சரியமடையாமல் நான் வாயிற் படி களின் மேல் ஏறி மணியை ஒலித்தேன். ஏதோ பயங்கரமான ஒன்று நடைபெறப் போகிறது என்ற முன்னுணர்ச்சி இன்னும் என்னிடமிருந் தது. எங்கள் வேலைக்காரன், அன்பான, முட்

டாள்தனம் நிறைந்த, கடுமையாக உழைக்கின்ற யெகோர் கதவைத் திறந்தான். நடைபாதையில் மற்ற துணிகளோடு அவனுடைய கோட் தொங்கிக் கொண்டிருப்பதுதான் முதலில் என் கண்களில் பட்டது. நான் ஆச்சரியமடைந்திருக்க வேண்டும். ஆனால் நான் ஆச்சரியமடையவில்லை. நான் அதை எதிர்பார்த்த மாதிரித் தோன்றியது. 'நான் நினைத்தது சரிதான்' என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். யார் வந்திருக்கிறார்கள் என்று நான் யெகோரிடம் கேட்ட பொழுது, த்ருஹசேவ்ஸ்கி என்று அவன் பதிலளித்தான். வேறு யாராவது இருக்கிறார்களா என்று நான் கேட்டேன்.

'' 'ஒருவரும் இல்லை, ஐயா' என்று அவன் பதிலளித்தான்.

''அவன் இதைக் கூறிய பொழுது அவன் குரலில் ஒலித்த மகிழ்ச்சி எனக்கு நினைவிருக்கிறது. வேறு யாரும் இருப்பார்களோ என்ற என்னுடைய கவலையைப் போக்க வேண்டுமென்ற அக்கறையோடு பேசினான். 'ஒருவருமில்லையா, ஆ!' என்று நான் மனதுக்குள் சொல்லிக் கொண்டேன்.

'' 'குழந்தைகள்?'

'' 'கடவுள் கிருபையால் எல்லோரும் நன்றாக இருக்கிறார்கள். அவர்கள் நெடுநேரத்துக்கு முன்பே தூங்கிவிட்டார்கள்.'

''என்னால் மூச்சுவிடக்கூட முடியவில்லை, என்னுடைய உதடுகள் துடிப்பதையும் அடக்க முடியவில்லை. 'ஓ! இந்தத் தடவை வேறு வித

மாக இருக்கிறது. முந்திய சந்தர்ப்பங்களில் துன்பத்தை எதிர்பார்த்தேன். ஆனால் நடந்தது வேறு. எல்லாமே சரியாக முடிந்துவிட்டது. இப்பொழுது எல்லாமே தப்பாக இருக்கிறது. அது நடந்து விட்டது. இதோ...'

''அநேகமாக என் மனம் உடைந்துவிட்டது. 'அவர்கள் ஒருவருக்கொருவர் அமைதியாக விடைபெற்றுக் கொண்டு தங்களுடைய தவறுக்கு எந்த ஆதாரமும் இல்லாமல் பிரிகின்ற பொழுது நீ அழுது சிணுங்கிக் கொண்டிருக்கப் போகிறாயா? தொடர்ந்து சந்தேகித்துக் கொண்டு நிரந்தரமான சித்திரவதையை அனுபவிக்க நீ விரும்புகிறாயா?' என்று ஏதோ ஒரு பிசாசு என் காதுக்குள் முணுமுணுத்தது. உடனே என் சுய அனுதாபம் மறைந்து அதனிடத்தில் வேறொரு புதிய உணர்ச்சி ஏற்பட்டது. நான் சொல்லப் போவதை நீங்கள் நம்பக் கூட மாட்டீர்கள். என்னுடைய துன்பங்களுக்குக் கடைசியில் முடிவு ஏற்பட்டுவிட்டது, இப்பொழுது நான் அவளைத் தண்டிக்க முடியும், அவளை ஒரேயடியாக ஒழிக்க முடியும், என்னுடைய ஆவேசத்தைத் தீர்த்துக் கொள்ள முடியும் என்ற ஆனந்த உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. என்னுடைய ஆவேசத்தைத் தீர்த்துக் கொண்டேன். நான் ஒரு மிருகமாக, மூர்க்கமான, வஞ்சகமான மிருகமாக மாறினேன்.

'' 'பொறு!' என்று உபசரிப்பு அறைக்குள் போகத் திரும்பிய யெகோரைத் தடுத்தேன். 'இந்தா! ரயில் நிலையத்துக்குப் போய் இந்த ரசீதைக் காட்டி என்னுடைய சாமான்களை

வாங்கிவா. வாசலில் வண்டி நிற்கிறது' என்றேன்.

''அவன் கோட்டை அணிந்து கொள்வதற்காக ஹாலுக்குள் சென்ருன். அவன் அவர்களை எச்சரிக்கை செய்து விடலாம் என்று நான் அஞ்சினேன். எனவே அவன் அறைக்குள் போன பொழுது நானும் கூடவே சென்றேன். அவன் கோட்டை அணிந்து கொள்ளும் வரை காத்துக் கொண்டிருந்தேன். வரவேற்பு அறைக்கு அப்பாலிருந்த உணவருந்தும் அறைக்குள்ளிருந்து தணிந்த குரலில் பேசுவதும் கத்திகளும் தட்டுகளும் உரசுகின்ற சத்தமும் கேட்டது. அவர்கள் உணவருந்திக் கொண்டிருக்கிருர்கள், வாயிற் கதவு மணி ஒலித்தது அவர்களுக்குக் கேட்கவில்லை.'அவர்கள் இப்பொழுது வெளியே வரக் கூடாதே' என்று நினைத்துக் கொண்டேன். அஸ்ட்ரஹன் காலர் உள்ள அந்தக் கோட்டை யெகோர் அணிந்து கொண்டு வெளியே சென்ருன். நான் கதவு வரையிலும் அவனேடு சென்று அவன் போன பிறகு கதவைத் தாளிட்டுக் கொண்டேன். நான் தனியே இருக்கிறேன், இனி நடவடிக்கையில் இறங்க வேண்டும் என்பதை உணர்ந்த பொழுது ஒரு அச்ச உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. எப்படி என்பதை நான் இன்னும் முடிவு செய்யவில்லை. இப்பொழுது எல்லாமே முடிந்து விட்டது, அவளுடைய குற்றமின்மையைப் பற்றி எந்தக் கேள்வியும் இனிமேல் இருக்க முடியாது, அவளைத் தண்டிப்பதற்கும் அவளோடு என்னுடைய உறவுகளுக்கு முடிவு கட்டு

வதற்கும் உரிய நேரம் வந்துவிட்டது என்பது மட்டுமே எனக்குப் புரிந்தது.

''முன்னர் நான் எப்பொழுதுமே ஊசலாடினேன். 'ஒருவேளை அது உண்மையாக இல்லாதிருக்கும். ஒருவேளை நான் தவருகப் புரிந்துகொண்டேனே' என்று நினைப்பேன். இப்பொழுது நான் அப்படி எதுவும் நினைக்கவில்லை. எனக்கு முற்றிலும் புரிந்துவிட்டது. நான் ஊரில் இல்லாத பொழுது இரவில் அவனேடு தனியே இருக்கிருள்! மதியில்லாத செயல் அல்லது அதைக் காட்டிலும் கூட மோசம். குற்றம் செய்யும் பொழுது அவள் காட்டியிருக்கும் இந்தத் துணிச்சல், விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாத இந்தத் தன்மை தான் குற்றம் செய்யவில்லை என்று நிரூபிப்பதற்காக வேண்டுமென்றே மேற்கொண்ட அலட்சியமாக இருக்கலாம். எல்லாமே தெளிவாக இருக்கிறது. இதில் சந்தேகத்துக்கே இடமில்லை. இதற்குப் பிறகும் அவர்கள் தப்பிவிடுவார்களோ, எனக்கு ஆதாரமில்லாமலும் அவர்களைத் தண்டிக்கின்ற வாய்ப்பு இல்லாமற் செய்வதற்கும் புதியதாக ஒரு தந்திரத்தைக் கண்டுபிடித்து விடுவார்களோ என்ற ஒரே விஷயத்துக்காக மட்டுமே நான் பயந்தேன். அவர்கள் உட்கார்ந்து கொண்டிருந்த அறைக்கு நான் அடிமேலடி வைத்துச் சென்றேன்—வரவேற்பு அறையின் வழியாகப் போகவில்லை, ஹால் மற்றும் குழந்தைகளின் அறை வழியாகச் சென்றேன்.

''முதல் அறையில் என் பையன்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். இரண்டாவது அறையில்

செவிலிப் பெண் புரண்டு படுத்தாள். அவள் அநேகமாக விழித்துக் கொண்டாள் என்று தான் சொல்ல வேண்டும். எல்லாம் கண்டு பிடிக்கப்பட்ட பிறகு அவள் என்ன நினைப் பாள் என்று நான் கற்பனை செய்த பொழுது எனக்குள் சுய அனுதாபம் பொங்கி என்னை மூழ்கடித்தது. என்னால் கண்ணீரை அடக்க முடியவில்லை. குழந்தைகள் விழித்துக் கொண்டு விடலாம் என்ற பீதியில் நான் ஹாலுக்குள் அடிமேலடி வைத்து ஓடி என்னுடைய படிப் பறைக்குள் நுழைந்தேன். அங்கே சோபாவில் பொத்தென்று விழுந்து கண்ணீரைக் கொட்டி னேன்.

‘ ‘ ‘நான் நேர்மையான மனிதன். என் பெற் றோர்களுக்குப் பிறந்தவன். என் வாழ்க்கை முழுவதுமே ஆனந்தமான குடும்ப வாழ்க் கையைப் பற்றிக் கனவு கண்டவன். அவளுடைய கணவனாகிய நான் ஒருபோதும் அவளுக்கு துரோகம் செய்யவில்லை... ஆனால் இதோ! அவள்—ஐந்து குழந்தைகளுக்குத் தாய்—ஒரு பாடகன் சிவந்த உதடுகளோடிருப்பதனால் அவ னோடு காதல் விளையாட்டில் ஈடுபடுகிறாள்! இவள் மனிதப் பிறவியே அல்ல! இவள் ஒரு மிருகம், அருவருக்கத்தக்க பெட்டைநாய்! அடுத்த அறையில் குழந்தைகள்—அவள் எப் பொழுதுமே மிகவும் நேசிப்பதாகப் பாசாங்கு செய்கின்ற அவளுடைய சொந்தக் குழந்தை கள்—தூங்கிக் கொண்டிருக்கின்றன. எனக்கு எப்படிப்பட்ட கடிதம் எழுதினாள்! இப்பொழுது வெட்கமில்லாமல் அவன் மீது விழுந்து கிடக்

கிருளே! ஆனுல் எனக்கு எல்லாம் தெரியுமா? ஒருவேளை எப்பொழுதுமே இப்படித்தாள் இருந்து வந்திருக்கிருளோ, என்னவோ? ஒரு வேளை அவள் வேலைக்காரர்கள் மூலமாகக் குழந்தைகளைப் பெற்று என் குழந்தைகள் என்று சொல்லிக் கொண்டிருக்கிருளோ, என்னவோ. நான் நாளைக்கு வீட்டுக்குத் திரும்பி வந்திருப்பேன். அவள் தன்னுடைய கவர்ச்சிகரமான தலையலங்காரத்தோடு மயக்க மூட்டும் அழகிய இடையோடு, நளினமான அசைவுகளோடு என்னைச் சந்தித்திருப்பாள். (அவளுடைய அழகான, வெறுப் பூட்டுகின்ற முகத்தின் ஒவ்வொரு அம்சமும் என் கண்களுக்கு முன்பாகத் தோன்றியது), பொருமை மிருகம் திருப்பி அனுப்பப்பட்டிருக்கும். என் இதயத்தைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துப் போடுவதற்காக என் இதயத்திற்குள் பூட்டி வைக்கப்பட்டிருக்கும். செவிலிப்பெண் என்ன நினைப்பாள்? யெகோர் என்ன நினைப்பான்? பரிதாபத்திற்குரிய சிறு பெண்ணுன லீஸா! இங்கேயுள்ள நிலைமையைப் பற்றி அவள் ஏற்கெனவே சூசகமாக அறிந்திருக்கலாம். எத்தகைய வெட்கங்கெட்ட செயல்! எவ்வளவு போலித்தனம்! அவளுடைய மிருக வெறி எனக்கு நன்ருகத் தெரியுமே!' என்று நான் மனதில் சொல்லிக் கொண்டேன்.

''நான் எழுந்திருக்க விரும்பினேன்; ஆனுல் என்னுல் முடியவில்லை. என்னுடைய இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தபடியால் என்னுல் நேராக நிற்க முடியவில்லை. வலிப்பு வந்தவனைப் போல விழுந்துவிடுவேன்

என்று எனக்குத் தோன்றியது. அவள் என்னைக் கொன்றுவிடுவாள். அவள் அதைத்தானே விரும்புகிறாள். அவள் என்னைக் கொல்ல நான் அனுமதிப்பதா? ஓ! இல்லை. அது அவளுக்கு மிகவும் சுலபமானது. அந்த மகிழ்ச்சியை அவளுக்கு நான் கொடுக்க மாட்டேன். நான் இங்கே உட்கார்ந்திருக்கிறேன். ஆம், அவர்கள் சாப்பிட்டுக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இன்னும் ஏதோ செய்து கொண்டுமிருக்கிறார்கள்... ஆம். அவள் ஒரு காலத்தில் எவ்வளவு புது மலர்ச்சியோடு இருந்திருப்பாளோ அப்படி இல்லாவிட்டால் கூட அவளை அனுபவிப்பதைப் பற்றி அவனுக்கு உறுத்தல்கள் கிடையாது. என்னதானென்றாலும் அவள் கவர்ச்சிகரமாக இருக்கிறாள். இன்னும் முக்கியமான விஷயம் அவனுடைய விலைமதிப்பற்ற உடல் நலத்துக்கு அவள் மூலம் தீங்கு ஏற்படாது. முந்திய வாரத்தில் நடைபெற்ற ஒரு சண்டை என் நினைவுக்கு வந்தது. நான் அவளை என் படிப்பறையிலிருந்து விரட்டி சாமான்களைத் தூக்கியெறிந்தேன். 'அப்பொழுதே அவளை ஏன் கொலை செய்யாமல் விட்டேன்?' என்று என்னைக் கேட்டுக் கொண்டேன். அன்று என்னுடைய மனோநிலை அப்படியே தத்ரூபமாக என் நினைவுக்கு வந்தது. அது வெறும் நினைவு மட்டுமல்ல. பொருள்களை உடைக்க வேண்டும், நொறுக்க வேண்டும் என்ற அதே வெறி இப்பொழுது எனக்கு ஏற்பட்டது. ஏதாவது செய்ய வேண்டும் என்று எப்படித் துடித்தேன் என்பது எனக்கு நினைவிருக்கிறது. செயலுக்கு அவசிய

மானவற்றைத் தவிர மற்ற எல்லாச் சிந்தனை களையும் மனதிலிருந்து விரட்டினேன். ஆபத் தான நிலைமையிலிருக்கும் பொழுது ஒரு விலங்கு அல்லது மனிதனுடைய புலன்கள் கூர்மை யடைந்து வேகமாக இயங்குகின்றன. அந்த நிலையில் அவை துல்லியமாக, அவசரமில்லாமல் ஒரு நிமிடத்தைக் கூட வீணாக்காமல், எல்லா வற்றையும் ஒரே தெளிவான நோக்கத்துக்கு உட்படுத்திக் கொண்டு இயங்குகின்றன. நான் அந்த நிலைமையில் இருந்தேன்.''

## 27

''முதல் காரியமாக என்னுடைய பூட்சுகளைக் கழற்றிவிட்டு காலுறையணிந்த படியே சோபா வுக்கு மேல் சுவரில் அலங்காரமாக மாட்டப் பட்டிருந்த துப்பாக்கிகளையும் குத்துவாள்களை யும் நோக்கி நடந்து சென்றேன். ஒரு வளைந்த டமாஸ்கஸ் குத்துவாளை எடுத்தேன். அதை இதற்கு முன்பு உபயோகித்ததில்லை, மிகவும் கூர்மையானது. உறையிலிருந்து குத்துவாளை உருவினேன். உறை சோபாவுக்குப் பின்னால் விழுந்தது. 'பிறகு அதை எடுத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அது தொலைந்து போய்விடும்' என்று மனதில் சொல்லிக் கொண் டது நினைவிருக்கிறது. பிறகு என் கோட்டைக் கழற்றினேன். அது வரையிலும் கோட்டை அணிந்து கொண்டுதானிருந்தேன். காலுறை யணிந்த கால்களை அடிமேலடி வைத்து நடந் தேன்.

''நான் கதவுக்குப் பக்கத்தில் பதுங்கிச் சென்று திடீரென்று அதைத் திறந்தேன். அவர்களுடைய முகபாவங்கள் எனக்கு நினைவிருக்கின்றன. அந்த முகபாவங்கள் எனக்கு ஆனந்தமான வேதனையைக் கொடுத்த படியால் அவை இன்னும் என் நினைவில் இருக்கின்றன. அவளுடைய முகத்தில் பீதி தோன்றியது. நான் அதைத்தான் விரும்பினேன். என்னைப் பார்த்த அந்த முதல் வினாடியில் அவர்களுடைய முகங்களில் பளிச்சிட்ட பீதியையும் ஆபத்திலிருந்து தப்ப முடியாது என்ற பாவத்தையும் என் வாழ்க்கையின் கடைசி நாட்கள் வரை நினைவில் வைத்திருப்பேன். அவன் மேசைக்கு முன்பாக உட்கார்ந்திருந்தான் என்று நினைக்கிறேன், ஆனால் என்னைப் பார்த்தவுடன் அல்லது நான் வருகின்ற சத்தத்தைக் கேட்டவுடன் குதித்தெழுந்து போய் புத்தக அலமாரிக்கு முதுகைக் காட்டிய படி நின்று கொண்டான். அவன் மிகவும் பயந்துவிட்டான் என்பது சந்தேகமில்லாதபடி முகத்தில் தோன்றியது. அவள் முகத்திலும் பேரச்சம் தெரிந்தது. ஆனால் அந்தப் பேரச்சம் வேறு ஒன்றுடன் இணைந்திருந்தது. அது பேரச்சமாக மட்டும் இருந்திருந்தால் ஒரு வேளை பின்னால் நடந்தது. நடக்காமல் இருந்திருக்கும். தன்னுடைய காதல் விளையாட்டும் ஆனந்தமும் தடைப்பட்டுவிட்டதைப் பற்றி ஏமாற்றம், எரிச்சல் ஆகியவற்றின் அறிகுறி அவள் முகத்தில் இருந்தது (அல்லது குறைந்த பட்சமாக அந்த முதல் வினாடியின் போது இருந்ததாக எனக்குத் தோன்றியது.)

அந்தத் தருணத்தில் ஆனந்தத்தை அனுபவிப் பதைத் தவிர வேறொன்றையும் அவள் விரும்ப வில்லை என்று தோன்றியது. இந்த பாவங்கள் அவர்களுடைய முகங்களில் ஒரு கண நேரம் மட்டுமே இருந்தன. அவன் முகத்தில் தோன் றிய பேரச்சம் மறைந்து கேள்விக்குறி வந்தது. 'இவரிடம் பொய் சொல்ல முடியுமா அல்லது முடியாதா? முடியுமென்றால் நான் உடனே தொடங்க வேண்டும். முடியாதென்றால் இங்கே ஏதோ நடைபெறப் போகிறது. ஆனால் அது என்னவாக இருக்கும்? உனக்குத் தெரியுமா?' என்று கேட்பதைப் போல அவன் அவளைப் பார்த்தான். அவன் பார்வையைச் சந்தித்த வுடன் அவள் முகத்திலிருந்த ஏமாற்றமும் எரிச்சலும் மாறி அவனுக்கு ஆபத்து ஏற்பட்டு விடுமோ என்ற கவலைக்குறி ஏற்பட்டது, அல்லது அப்படித்தான் எனக்குத் தோன்றியது.

''நான் குத்துவாளை முதுகுக்குப் பின்னால் மறைத்துக் கொண்டு கதவுக்குப் பக்கத்தில் ஒரு கண நேரம் தாமதித்தேன். அந்தக் கணத் தில் அவன் புன்சிரிப்போடு பேசினான். அவன் குரல் மிகவும் அலட்சியமாக — அநேகமாகக் கோமாளித்தனமாக—இருந்தது.

'' 'நாங்கள் ஒரு சொனாட்டாவை வாசித்துக் கொண்டிருந்தோம்...'

'' 'எதிர்பாராததாக இருக்கிறதே...' என்று அதே சமயத்தில் அவன் குரலைப் பின்பற்றிய படி அவளும் பேசினாள்.

''ஆனால் அவனோ அல்லது அவளோ வாக் கியத்தை முடிக்க சந்தர்ப்பமளிக்கப்படவில்லை.

அதற்கு முந்திய வாரத்தில் எனக்கு ஏற்பட்ட அதே வெறி என்னைப் பற்றிவிட்டது. உடைக்க வேண்டும், அழிக்க வேண்டுமென்னும் ஆவேசம் ஏற்பட்டிருப்பதை நான் உணர்ந்தேன். எனக்கு வெறி பிடித்துவிட்டது, அந்த வெறியில் என்னை மறந்தேன்.

''அவர்கள் இருவருமே வாக்கியத்தை முடிக்க இயலவில்லை... எது நடைபெறும் என்று அவன் பயந்தானோ அது நடைபெற்றுக் கொண்டிருந்தது. அவர்களிருவருடைய பேச்சையும் அது அந்தக் கணத்திலேயே நிறுத்தி விட்டது. நான் குத்துவாளை இன்னும் மறைத்த படியே அவள் மீது பாய்ந்தேன். அவளுடைய இடது பக்கத்தில் மார்புக்குச் சிறிது கீழே அந்தக் குத்துவாளைச் சொருகுவதை (அந்த இடத்தை முதலிலிருந்தே நான் தேர்ந்தெடுத்திருந்தேன்) அவன் தடுத்துவிடுவானோ என்று நான் அஞ்சினேன். நான் அவள்மேல் பாய்ந்த வினாடியிலேயே அவன் என்னுடைய நோக்கத்தைப் புரிந்து கொண்டு என் கையைப் பிடித்து இழுத்தான். அவன் அப்படிச் செய்வான் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

'' 'என்ன செய்கிறீர்கள் என்று நினைத்துப் பாருங்கள்! உதவி!' என்று அவன் கத்தினான்.

''நான் என் கையை விடுவித்துக் கொண்டு அவனை நோக்கிப் பாய்ந்தேன். அவனுடைய கண்கள் என்னுடைய கண்களைச் சந்தித்தன. அவன் உடல்—உதடுகள் உட்பட—வெண்மையான போர்வையைப் போல வெளுத்துவிட்டது. அவன் கண்களில் தனிவகையான ஒளி

ஏற்பட்டது. அவன் பியானே வாத்தியத்துக்குக் கீழே குனிந்து கதவை நோக்கி ஓடினன். அவன் இப்படி ஓடிவிடுவான் என்பதையும் நான் எதிர் பார்க்கவில்லை. நான் அவனைத் தொடர்ந்து சென்றிருப்பேன். ஆனல் என் இடது கரத்தின் மீது ஏதோ ஒரு கனமான பொருள் தொங்கிக் கொண்டிருந்தது. அது அவள் தான். என்னை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்தேன். அவள் தன்னுடைய பிடியை இறுக்கிக் கொண் டாள், என்னைப் போகவிடவில்லை. எதிர்பாராத இந்தத் தடை, என் கரத்தின் மேல் அவளுடைய பளு, அவளுடைய ஸ்பரிசத்தினல் ஏற்பட்ட அருவருப்பு ஆகியவை என்னுடைய வெறியை அதிகப்படுத்தின. நான் முழு வெறியனுகிவிட் டேன். என்னுடைய தோற்றம் பயங்கரமாக இருந்திருக்க வேண்டும் என்று நான் உணர்ந் தேன். அது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத் தது. என் முழு பலத்தோடும் திமிறி என் இடது கையை அவளிடமிருந்து பிடுங்கிக் கொண்டேன். அப்பொழுது என் முழங்கை யினல் அவளுடைய முகத்தில் அடித்தேன். அவள் கூக்குரலிட்டபடியே என் கையைப் பிடித்துக் கொண்டிருந்ததை விட்டாள். நான் ஓடிப்போய் அவனைப் பிடிக்க விரும்பினேன். ஆனல் வெறுங் காலுறையணிந்த கால்களோடு என் மனைவியின் காதலனை விரட்டிச் செல்வது முட்டாள்தனமானது என்று என் மூளையில் பளிச்சிட்டது. நான் பயங்கரமாக இருக்க விரும்பினேனே. தவிர முட்டாள்தனமாக நடந்து கொள்ள விரும்பவில்லை. நான் வெறி

பிடித்த நிலையில் இருந்தாலும் அவர்கள் மீது எத்தகைய விளைவை ஏற்படுத்துகிறேன் என்பதைத் தொடர்ச்சியாகக் கவனித்துக் கொண்டிருந்தேன். அது என்னுடைய நடவடிக்கைகளை ஓரளவுக்கு நிர்ணயித்தது. நான் அவளிடம் திரும்பினேன். அவள் சோபாவில் விழுந்து கிடந்தாள். நான் காயமேற்படுத்திய கண்களைக் கையால் பொத்திக் கொண்டு என்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் முகம் அவளுடைய எதிரியான என் மீது அச்சத்தையும் வெறுப்பையும் காட்டியது. எலி பொறியில் அகப்பட்டிருக்கும் பொழுது யாராவது எலிப் பொறியைத் தூக்கினால் அந்த எலியின் முகத்தில் காணப்படும் தோற்றம்தான் அது. குறைந்த பட்சம் என்றால் அவளுடைய முகத்தில் அச்சத்தையும் வெறுப்பையும் தவிர வேறு ஒன்றையுமே பார்க்க முடியவில்லை. இன்னொருவன் மீது அவளுக்கு ஏற்பட்டிருந்த காதல் என் மீது அச்சத்தையும் வெறுப்பையும் அவளிடம் தூண்டுவது உறுதி. அதுதான் அவள் முகத்தில் தெரிந்தது. ஆனால் அவள் மட்டும் மௌனமாக இருந்திருந்தால் நான் என்னைக் கட்டுப் படுத்திக் கொண்டிருந்திருப்பேன், பின்னால் நான் செய்ததைச் செய்யத் துணிந்திருக்க மாட்டேன். ஆனால் அவள் திடீரென்று பேச, குத்துவாளை வைத்துக் கொண்டிருந்த என் கையைப் பிடித்திழுக்கத் தொடங்கினாள்.

'' 'என்ன காரியம் செய்கிறீர்கள் என்பதை நினைத்துப் பாருங்கள்! அது என்ன? உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? எங்களுக்

கிடையில் ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை, ஒன்று மில்லை... நான் சத்தியமாகச் சொல்கிறேன்!'

''இதற்குப் பிறகும் கூட நான் தயங்கியிருப்பேன். ஆனால் அந்த வார்த்தைகள் முற்றிலும் எதிரான அர்த்தத்தை அதாவது, எங்களுக்கிடையே ஏதோ ஒன்று இருந்தது என்ற அர்த்தத்தை எனக்குக் கொடுத்தன. எனக்கேற்பட்டிருந்த ஆவேசத்துக்குப் பொருத்தமான ஒரு செயலை நான் நிறைவேற்ற வேண்டும். என்னுடைய ஆவேசம் வெறியாக வளர்ச்சியடைந்து கொண்டிருந்தது. அதன் உச்ச கட்டத்தை அடைகின்ற வரை அது மேலும் வளர்ச்சியடைய வேண்டும். வெறிகூட சில விதிகளுக்கு உட்பட்டே நடை பெறுகிறது.

'' 'பொய் சொல்லாதே! கழிசடையே!' என்று கூச்சலிட்டுக் கொண்டு அவள் கையை என் இடது கையால் பிடித்திழுத்தேன். ஆனால் அவள் தன்னை விடுவித்துக் கொண்டாள். குத்துவாளைக் கீழே போடாமலேயே என்னுடைய இடது கையால் அவளுடைய கழுத்தைப் பிடித்தேன். அவளை மல்லாக்கத் தள்ளி அவள் கழுத்தை நெறிக்கத் தொடங்கினேன். அவள் கழுத்து எவ்வளவு விறைத்தது தெரியுமா?.. அவள் கழுத்திலிருந்து என் கையைப் பிடுங்குகின்ற முயற்சியில் அவள் என் கையைப் பிடித்துக் கொண்டாள். நான் இதற்காகவே காத்துக் கொண்டிருந்ததைப் போல அவளுடைய உடலின் இடது பக்கத்தில் விலா எலும்புகளுக்குக் கீழ் என் முழு பலத்தோடும் குத்துவாளைப் பாய்ச்சினேன்.

''ஆவேசத்தில் நாங்கள் என்ன செய்தோம் என்று எங்களுக்குத் தெரியாதென்று சொல் பவர்களுண்டு. அது வெறும் பிதற்றல். வெறும் பொய். எல்லாமே எனக்கு நன்ருக நினைவிருந் தது. ஒரு கணம் கூட அதைப் புரிந்து கொள்ளா திருக்கவில்லை. என்னுடைய ஆவேசத்தின் வெறி அதிகரித்த பொழுது என்னுடைய அறி வின் பிரகாசம் அதிகரித்தது. எனவே நான் என்னுடைய செயலைப் புரிந்து கொள்ளத் தவறியிருக்க முடியாது. ஒவ்வொரு விஞடியும் நான் என்ன செய்து கொண்டிருந்தேன் என் பதை நான் அறிந்திருந்தேன். அதற்குப் பிறகு நான் என்ன செய்வேன் என்பது எனக்குத் தெரியுமென்று நான் சொல்ல முடியாது. ஆனுல் அந்த விஞடியில் நான் என்ன செய்து கொண் டிருந்தேன் என்பதை நான் அறிந்திருந்தேன். சிறிது முற்கூட்டிய காலத்திலும் கூட எனக்குத் தெரிந்திருந்தது என்று தோன்றுகிறது. அது ஒருவேளை நான் வருத்தப்பட வேண்டும், நான் அவசரப்பட்டிருக்க வேண்டாம் என்று எனக்குச் சொல்ல வேண்டும் என்ற காரணத் துக்காகவும் இருக்கலாம். அவளுடைய விலா எலும்புகளுக்குக் கீழே குத்துகிறேன், குத்து வாள் அந்த இடத்துக்குக் கீழே காயப்படுத்தும் என்பதை நான் அறிந்திருந்தேன். நான் பயங் கரமான ஒன்றைச் செய்கிறேன், அதற்கு முன்பு அப்படிப்பட்ட ஒரு காரியத்தை நான் ஒரு போதும் செய்ததில்லை, அதன் விளைவுகள் பயங் கரமாக இருக்கும் என்பதை நான் முழுமை யாக உணர்ந்திருந்தேன். அந்த உணர்வு என்

மூளையில் மின்னல் கீற்றைப் போலப் பளிச் சிட்டது. அந்த உணர்வு ஏற்பட்டவுடனே செய லும் தொடர்ந்தது. அந்தச் செயலை அழுத்த மான தெளிவோடு நான் புரிந்து கொண் டேன். அவளுடைய உள்ளாடை மற்றும் ஏதோ சில ஒரு கண நேரம் தடைசெய்வதை யும் பிறகு குத்துவாளின் முனை மென்மையான உடற் பகுதிக்குள் நுழைவதையும் நான் உணர்ந்தது எனக்கு நினைவிருக்கிறது. அவள் குத்துவாளைத் தன்னுடைய கைகளில் பிடித்த பொழுது கைகளை வெட்டிக் கொண்டாள்; ஆனால் அதைத் தடுக்க முடியவில்லை. அதற்குப் பிறகு நான் சிறையிலிருந்த காலத்தில், தார் மிக மாற்றத்தை அடைந்த பிறகு அந்தக் கண நேரத்தைப் பற்றி நெடுங்காலம் சிந்தித்தேன்; அதைத் திரும்பத் திரும்ப நினைவுக்குக் கொண்டு வந்து அதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முயற்சி செய்தேன். அந்தச் செயலுக்கு ஒரு வினாடிக்கு — மிகவும் குறுகிய வினாடிக்கு— முன்பு, நான் ஒரு பெண்ணை, ஆதரவற்ற பெண்ணை, என் மனைவியைக் கொலை செய்து கொண்டிருக்கிறேன், ஏற்கெனவே கொலை செய்துவிட்டேன் என்ற பயங்கரமான உண் மையை நன்றாக உணர்ந்திருந்தது என் நினை வுக்கு வருகிறது. அந்த உணர்வின் பயங்கரம் எனக்கு நினைவிருக்கிறது, அதனால்தான் குத்து வாளை அவளுடைய உடலுக்குள் பாய்ச்சிய பிறகு—நான் செய்த காரியத்தை இல்லாமற் செய்ய வேண்டுமென்ற விருப்பத்தோடு—நான் உடனடியாக அதை வெளியே பிடுங்கினேன்

என்பதும் கூட எனக்குத் தெளிவில்லாத முறை யில் நினைவிருக்கிறது. என்ன நடக்கப் போ கிறது என்று பார்ப்பதற்காக, நான் செய்த காரியத்தை இல்லாமற் செய்து விட முடியாதா என்று ஆச்சரியப்படுவதைப் போல நான் ஒரு விஞடி நேரம் அசையாமல் நின்று கொண் டிருந்தேன். அவள் குதித்தெழுந்தாள்.

'' 'ஐயோ! அவர் என்னைக் கொன்றுவிட் டார்!' என்று கத்தினுள்.

''அங்கே ஏற்பட்ட சத்தத்தில் விழித்துக் கொண்ட செவிலிப் பெண் கதவுக்குப் பக்கத் தில் நின்றுகொண்டிருந்தாள். நான் எதையோ எதிர்பார்த்தும் நடந்தவற்றை நம்பாத படியும் அங்கே நெடுநேரம் நின்று கொண்டிருந்தேன். ஆனுல் அவளுடைய உள்ளாடைக்குக் கீழே யிருந்து இரத்தம் பீச்சிக் கொண்டிருந்தது. நடந்த காரியத்தை இல்லாமற்செய்ய முடி யாது என்பதை அதற்குப் பிறகுதான் நான் உணர்ந்தேன், உடனே அதை மாற்றக் கூடாது, அதையே நான் விரும்பினேன், அது தான் நடை பெற்றிருக்க வேண்டும் என்று முடிவு செய் தேன். அவள் கீழே விழுகின்ற வரை, செவிலிப் பெண் 'ஐயோ, கடவுளே!' என்று அலறிக் கொண்டு அவளிடம் ஓடுகின்றவரை நான் அப்படியே நின்று கொண்டிருந்தேன். அதற்குப் பிறகுதான் குத்துவாளைக் கீழே எறிந்துவிட்டுக் கதவை நோக்கி நடந்தேன்.

'' 'இனி பதட்டமடையக் கூடாது. என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி நிதான மாகச் சிந்திக்க வேண்டும்' என்று மனதில்

சொல்லிக் கொண்டேன். அவளேயோ அல்லது செவிலிப் பெண்ணேயோ நான் பார்க்காமல் திரும்பிக் கொண்டேன். செவிலிப் பெண் ஓலமிட்டுக்கொண்டு வேலேக்காரியைக கூப்பிட்டாள். நான் ஹாலுக்குச் சென்று வேலேக்காரியை அவளிடம் அனுப்பிவைத்துவிட்டு என்னுடைய அறைக்குள் சென்றேன். 'இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும்?' என்று என்னேயே கேட்டுக் கொண்டேன். நான் என்ன செய்ய வேண்டும் என்பது எனக்குத் தெரிந்திருந்தது. என் படிப்பறைக்குச் சென்று சுவரை நோக்கி நடந்தேன். அங்கே மாட்டப்பட்டிருந்த கைத்துப்பாக்கியை எடுத்து அதைத் திறந்து பார்த்தேன். தோட்டாக்கள் இருந்தன. கைத்துப்பாக்கியை மேசை மேல் வைத்தேன். பிறகு சோபாவுக்குப் பின்னுல் விழுந்துவிட்ட குத்துவாள் உறையை எடுத்தேன். சோபாவில் உட்கார்ந்தேன்.

''நான் அங்கே வெகு நேரம் உட்கார்ந்திருந்தேன். நான் எதைப் பற்றியும் சிந்திக்கவில்லே. எதுவுமே எனக்கு நினேவில்லே. மற்ற அறைகளிலிருந்து வந்து கொண்டிருந்த சத்தங்களேக் கேட்டேன். யாரோ வண்டியில் வந்து இறங்கி வீட்டுக்குள் நுழைகின்ற சத்தம் கேட்டது. பிறகு இன்னெருவர் வரும் சத்தம் கேட்டது. யெகோர் என்னுடைய சாமான்களேத் தூக்கிக் கொண்டு என் அறைக்குள் வருகின்ற சத்தத்தைக் கேட்டேன், பார்த்தேன். இப்பொழுது அவை எனக்கு அவசியமா?

'' 'என்ன நடந்ததென்று உனக்குத் தெரி

யுமா? போலீசுக்குத் தகவல் தெரிவிப்பதற்குக் காவல்காரனை அனுப்பு' என்றேன்.

''அவன் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் வெளியே சென்றான். நான் எழுந்து அறைக் கதவைத் தாளிட்டேன். ஒரு சிகரெட்டையும் சில தீக்குச்சிகளையும் எடுத்தேன். புகை பிடிக்கத் தொடங்கினேன். நான் ஒரு சிகரெட்டைக் குடித்து முடிப்பதற்குள் உறக்கம் என்னைத் தழுவிக் கொண்டது. நான் இரண்டு மணி நேரம் தூங்கியிருப்பேன். நானும் அவளும் நேசமாக இருப்பது போலக் கனவு கண்டது எனக்கு நினைவிருக்கிறது. நாங்கள் சண்டை போட்டுக் கொண்டோம், ஆனால் சமாதானமாகிவிட்டோம். எங்களுக்கிடையே ஒரு வகையான பிணக்கு ஏற்பட்டிருந்தது. ஆனால் நாங்கள் நேசமாகவே இருக்கிறோம். யாரோ கதவைத் தட்டும் சத்தம் தூக்கத்திலிருந்து என்னை எழுப்பியது. 'போலீஸாகத் தான் இருக்கும்' என்று விழித்தவுடன் நினைத்துக் கொண்டேன். 'நான் அவளைக் கொன்றுவிட்ட மாதிரித் தோன்றுகிறது. ஆனால் ஒன்றும் நடக்கவில்லை என்பதாகவும் அவளே கதவைத் தட்டுவதாகவும் இருக்கலாம்.' கதவை மறுபடியும் தட்டுகின்ற சத்தம் கேட்டது. நான் பதிலளிக்கவில்லை. அது நடந்தது உண்மைதானா, இல்லையா என்று முடிவு செய்வதில் நான் மும்முரமாக ஈடுபட்டிருந்தேன். ஆம்! அது உண்மையே. அவளுடைய உள்ளாடையின் எதிர்ப்பையும் அதற்குப் பிறகு குத்துவாள் ஆழமாகப் பாய்ந்ததையும் நினைத்துக் கொண்டேன். என் முதுகெலும்பில்

சிறு நடுக்கம் ஏற்பட்டது. 'ஆம். அது உண்மைதான். இப்பொழுது தற்கொலையைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்' என்றேன். ஆனால் அப்படிச் சொன்ன பொழுதே நான் தற்கொலை செய்து கொள்ள மாட்டேன் என்பது எனக்குத் தெரியும். எனினும் நான் எழுந்து கைத்துப் பாக்கியை எடுத்தேன். ஒரு விசித்திரம்: அன்றைய தினம் ரயில்வண்டியில் வந்துகொண்டிருந்த பொழுது தற்கொலை செய்துகொள்வதைப் பற்றி யோசித்ததைப் போல எத்தனை தடவைகள் அதைப் பற்றிச் சிந்தித்திருக்கிறேன் என்று நினைத்துக் கொண்டேன். அது சுலபமான காரியமாகத் தோன்றியது—அது அவளுக்கு எவ்வளவு பெரிய தண்டனை என்பது தெரிந்திருந்தபடியால் தற்கொலை சுலபமாகத் தோன்றியது. இப்பொழுது என்னால் தற்கொலையைப் பற்றி நினைக்கக் கூட முடியவில்லை. அதைச் செய்வதைப் பற்றிக் கேட்க வேண்டுமா! 'நான் எதற்காகச் செய்ய வேண்டும்?' என்று என்னையே கேட்டுக் கொண்டேன். பதில் இல்லை. கதவைத் தட்டுகின்ற சத்தம் மறுபடியும் கேட்டது. 'முதலில் கதவைத் தட்டுவது யார் என்று பார்க்க வேண்டும். அதைப் பிறகு கவனிக்கலாம்.' கைத்துப்பாக்கியை மேசை மேல் வைத்து ஒரு பத்திரிகையினால் அதை மறைத்தேன். கதவுக்குப் போய்த் தாழ்ப்பாளை நீக்கினேன். என் மனைவியின் சகோதரி — அசட்டுத்தனமான, நல்லெண்ணமுடைய விதவை—நின்று கொண்டிருந்தாள்.

'' 'வாஸ்யா! என்ன நடந்தது?' என்று அவள் கேட்டாள். அவள் கண்களில் எப்பொழுதுமே தயாராக இருக்கும் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது.

'' 'உனக்கு என்ன வேண்டும்?' என்று நான் முரட்டுத்தனமாகக் கேட்டேன். அவளிடம் முரட்டுத்தனமாக நடந்து கொள்வது முட்டாள் தனம், மேலும் அது அவசியமற்றது என்று எனக்குத் தெரியும். ஆனல் எனக்கு வேறு வழி யில்லை.

'' 'வாஸ்யா, அவள் இறந்து கொண்டிருக் கிருள்! இவான் ஃபியோதரவிச் அப்படித்தான் சொல்கிருர்' என்ருள். இவான் ஃபியோதரவிச் ஒரு டாக்டர், என்னுடைய மனைவியின் டாக் டர், அவளுடைய ஆலோசகர்.

'' 'ஓ! அவர் வந்திருக்கிருரா? அதற்கென்ன வாம்?' என்று நான் கேட்டேன். என்னுடைய ஆத்திரம் அதிகரிப்பதை உணர்ந்தேன்.

'' 'வாஸ்யா, போய் அவளைப் பாருங்கள். மோசம். படுமோசம்' என்று அவள் ஓலமிட்டு அழுதாள்.

'' 'அவளைப் பார்க்க வேண்டுமா?' என்று நான் மனதுக்குள் திருப்பிச் சொல்லிக் கொண்டேன். அவளைப் போய்ப்பார்க்க வேண்டும், அது தான் சரியான காரியம், ஒரு ஆண் என்னைப் போல தன்னுடைய மனைவியைக் கொன்ருல் அவளைப் பார்ப்பது தான் சரியான காரியம். 'அப்படி யாளுல் நான் போக வேண்டியதுதான்' என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். 'நான் அடுத்த காரியத்தைச் செய்வதென்ருல் அதற்கு

அதிகமான அவகாசம் வேண்டும்' என்று கைத் துப்பாக்கியை உபயோகித்துத் தற்கொலை செய்து கொள்ள வேண்டுமென்று உத்தேசித் ததை நினைத்தபடி மனதில் சொல்லிக் கொண் டேன். 'வார்த்தைகள், முகச்சுளிப்புக்கள் இருக் கும். ஆனால் அவர்கள் என்னைத் தொட மாட் டார்கள்' என்று மனதுக்குள் சொல்லிக் கொண் டேன்.

'' 'பொறு' என்று அவளுடைய சகோதரி யிடம் கூறினேன். 'காலுறை அணிந்தபடியே நான் சென்றால் அது கோமாளித்தனமாக இருக் கும். குறைந்த பட்சம் செருப்பையாவது நான் மாட்டிக் கொள்கிறேன்.' ''

## 28

''இது விசித்திரமாகத் தோன்றும்! நான் மறுபடியும் அந்த அறைக்குப் போன பொழுது எனக்கு நன்கு பழகிப்போன அறைகளின் வழி யாக நடந்துசென்ற பொழுது, ஒன்றும் நடந்து விடவில்லை என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட் டது. ஆனால் அங்கே அயோடபாரம், கார் பாலிக் அமிலம் ஆகிய மருந்துகளின் அருவருப் பான நெடி இருந்தது. ஆம். அது நடந்துவிட் டது. குழந்தைகள் உறங்கும் அறை வழியாகப் போன பொழுது லீஸாவைப் பார்த்தேன். அவள் மிரண்டுபோன கண்களோடு என்னைப் பார்த்தாள். என்னுடைய ஐந்து குழந்தை களுமே அங்கே இருக்கின்றார்கள், அவர்கள் எல்லோருமே என்னை உற்றுப் பார்த்துக்

கொண்டிருக்கிருர்கள் என்று கூட நான் கற்பனே செய்து கொண்டேன். நான் கதவை நோக்கிச் சென்றேன். நான் உள்ளே வருவதற்காக வேலேக்காரி கதவைத் திறந்தாள், அவள் உடனே வெளியே போய்விட்டாள். என் மனே வியின் முத்துநிற உடை ஒரு நாற்காலியின் மேல் இரத்தக் கறையோடு கிடப்பதை நான் முதலில் பார்த்தேன். எங்களுடைய இரட்டைக் கட்டிலில் என் கட்டில் பகுதியில் (அவளுடைய கட்டில் பகுதி சுவரோரமாக இருந்தது) அவள் முழங்கால்களே மேலே தூக்கிவைத்தபடி படுத் திருந்தாள். தலேயணேகளே மேடாக வைத்து அதன் மீது அவளேப் படுக்க வைத்திருந்தார்கள். அவள் அணிந்திருந்த ஜாக்கெட்டின் பொத் தான்கள் திறந்திருந்தன. காயத்தின் மீது எதையோ வைத்திருந்தார்கள். அங்கேயிருந்த காற்றில் அயோடபாரம் நெடி வீசியது. அவ ளுடைய கன்னம், மூக்கின் ஒரு பகுதி மற்றும் ஒரு கண் காயமடைந்து வீங்கியிருந்ததைத் தான் மற்றவற்றைக் காட்டிலும் முதலில் கவ னித்தேன். அவள் என்னேத் தடுக்க முயற்சி செய்த பொழுது என் முழங்கையால் அவளே இடித்ததன் விளேவாக அந்த வீக்கம் ஏற்பட் டிருக்க வேண்டும். அவளுடைய தோற்றத் தில் அழகான அம்சம் ஒன்றுமில்லே. அவளேப் பார்க்கும் பொழுது எனக்கு அருவருப்பு கூட ஏற்பட்டது. நான் வாயிலிலேயே நின்றுவிட் டேன்.

''‘அவளுக்கு அருகே செல்லுங்கள். அருகே செல்லுங்கள்’ என்ருள் அவளுடைய சகோதரி.

'' 'ஒருவேளை அவள் மன்னிப்புக் கேட்க விரும்புகிருள் போலும்' என்று நான் நினைத்தேன். 'அவளை மன்னித்து விடலாமா? ஆம். அவள் செத்துக் கொண்டிருக்கிருள். ஆகவே அவளை மன்னிக்க வேண்டும்' என்று நான் பெருந்தன்மையோடு நடந்து கொள்ள முடிவு செய்தபடியே நினைத்தேன். நான் நேராக அவளிடம் சென்றேன். அவள் மிகவும் சிரமப்பட்டுத் தன் கண்களைத் திறந்தாள். ஒரு கண் முற்றிலும் வீங்கியிருந்தது. அதிகமான முயற்சிக்குப் பிறகு, விட்டு விட்டு அவள் பேசினுள்:

'' 'நீங்கள் விரும்பியதைச் செய்து விட்டீர்கள்... என்னைக் கொன்றுவிட்டீர்கள்.' அவளுடைய உடல்வேதனைக்கு நடுவே, மரணத்தைப் பற்றி அவளுடைய உணர்வுக்கு நடுவே அந்த அறிமுகமான, பழைய பாவம்—ஈரமற்ற, மிருக வெறுப்பு—பளிச்சிட்டது. 'ஆனுல் நான்... உங்களிடம்... குழந்தைகளைக்... கொடுக்க மாட்டேன்... அவள் (அவளுடைய சகோதரி) குழந்தைகளை வளர்ப்பாள்...'

''நான் அவளுடைய குற்றத்தை, மோசடியை முக்கியமானதாகக் கருதினேன். அவள் அதைப் பற்றிக் குறிப்பிடக் கூட இல்லை.

'' 'நீங்கள் செய்த காரியத்தை நன்ருகப் பார்த்து ரசியுங்கள்' என்று சொல்லிவிட்டுக் கதவைப் பார்த்தாள். உடனே விம்மியழுதாள். அங்கே கதவுக்குப் பக்கத்தில் அவளுடைய சகோதரியும் குழந்தைகளும் நின்று கொண்டிருந்தார்கள். 'நீங்கள் செய்த காரியத்தைப் பாருங்கள்.'

''நான் குழந்தைகளைப் பார்த்தேன், பிறகு மறுபடியும் அவளை, அவளுடைய காயமடைந்த, வீங்கிய முகத்தைப் பார்த்தேன். முதல் தடவையாக என்னை, என்னுடைய உரிமைகளை, என்னுடைய அகம்பாவத்தை மறந்தேன். முதல் தடவையாக அவளை ஒரு மனித ஜீவனுகப் பார்த்தேன். என்னுடைய பொறுமை உணர்ச்சியும் என்னுடைய அகம்பாவத்தைப் புண்படுத்திய அனைத்துமே அற்பமாகவும் நான் செய்த காரியம் மிகவும் மோசமானதாகவும் தெரிந்தது. எனவே நான் முழங்காலில் குனிந்து அவள் கை மேல் என் முகத்தை வைத்து 'என்னை மன்னித்துவிடு' என்று கெஞ்சுவதற்குத் தயாராக இருந்தேன். ஆனுல் என்னுல் அந்த வார்த்தைகளைச் சொல்ல இயலவில்லை.

''அவள் பேசாமல் கண்களை மூடிக் கொண்டாள். மேலும் ஒரு வார்த்தை பேசுவதற்குக் கூட அவளிடம் பலமில்லை என்று தெரிந்தது. காயமடைந்த அவளுடைய முகம் துடித்தது, சுருங்கியது. அவள் பலவீனமான முறையில் என்னைத் தள்ளினுள்.

'''ஏன் இப்படிச் செய்தீர்கள்? ஏன்?'

'''என்னை மன்னித்துவிடு' என்றேன் நான்.

'''உங்களை மன்னிப்பதா? இதெல்லாம் பிதற்றல்!.. நான் மட்டும் மரணமடையாவிட்டால்!..' என்று தன் உடலைச் சற்று மேலே உயர்த்தி என்னை உற்றுப்பார்த்தவாறு அவள் பேசினுள். 'ஆம். நீங்கள் விரும்பியதைச் செய்துவிட்டீர்கள்!.. நான் உங்களை வெறுக்கிறேன்!.. ஆ! ஓ!' என்று ஜன்னியில் எதையோ

பார்த்து பயந்தவளைப் போல அவள் கூக்குரலிட்டாள். 'என்னைக் கொலை செய்யுங்கள். என்னைக் கொல்லுங்கள். நான் பயப்படவில்லை... ஆனால் எல்லோரையுமா, எல்லோரையுமா? அவரையுமா? அவர் போய்விட்டார், அவர் போய் விட்டார்!'

''அவள் இறுதிவரை ஜன்னியில் பிதற்றிக் கொண்டிருந்தாள். அவளுக்கு எங்களில் ஒருவரைக் கூட அடையாளம் தெரியவில்லை. அதே தினத்தின் நடுப்பகலில் அவள் மரணமடைந்தாள். அதற்கு நெடு நேரத்துக்கு முன்பே, காலை எட்டு மணிக்கு என்னை போலீஸ் நிலையத்துக்கும் அங்கிருந்து சிறைச்சாலைக்கும் கூட்டிச் சென்றார்கள். அங்கே, நீதி விசாரணைக்காகக் காத்திருந்த பதினொரு மாதங்களில் நான் என்னைப் பற்றியும் என்னுடைய கடந்த காலத்தைப் பற்றியும் சிந்தித்தேன். அதைப்பற்றி எனக்குத் தெளிவு ஏற்பட்டது. மூன்றாம் நாளன்று அதைப் புரிந்து கொள்ளத் தொடங்கினேன். மூன்றாவது நாள் அவர்கள் என்னை மறுபடியும் அங்கே கூட்டிக் கொண்டு சென்றார்கள்...''

அவர் தொடர்ந்து பேச முயற்சித்தார். ஆனால் தனது அழுகையை அடக்க முடியாமல் பேச்சை நிறுத்தினார். மாபெரும் முயற்சிக்குப் பிறகு அவர் தொடர்ந்தார்.

''சவப்பெட்டியில் அவள் உடலைப் பார்த்த பிறகே நான் புரிந்து கொள்ளத் தொடங்கினேன்...'' அவர் மூச்சுவாங்கிக் கொண்டு வேகமாகப் பேச ஆரம்பித்தார். ''மரண

மடைந்த நிலையில் அவளுடைய முகத்தைப் பார்த்த பொழுது தான் நான் என்ன காரியம் செய்துவிட்டேன் என்பதை உணர்ந்தேன். நான் தான் அவளைக் கொன்றுவிட்டேன், அவள் ஒரு காலத்தில் உயிரோடு, நேசமாக, துடிதுடிப் போடு இருந்தாள், இப்பொழுது அசைவில் லாமல், குளிர்ந்து போய், மெழுகு பொம் மையைப் போல ஆகிவிட்டாள், அதற்கு நானே காரணம் என்பதை உணர்ந்தேன். இதை ஒரு போதும்—ஒருபோதும், எங்கும், யாராலும் மாற்ற முடியாது என்பதை உணர்ந்தேன். அந்த வேதனையை அனுபவித்த ஒருவர்தான் அதைப் புரிந்து கொள்ள முடியும்... ஓ! ஓ! ஓ!'' என்று அவர் சில முறை கதறிவிட்டுப் பிறகு மௌன மாக இருந்தார்.

நாங்கள் நெடுநேரம் வரை பேசாமல் உட் கார்ந்திருந்தோம். அவர் அழுகையை அடக்க முடியாமல் விம்மிக் கொண்டும் குலுங்கிக் கொண்டுமிருந்தார்.

''என்னை மன்னியுங்கள்...''

அவர் முகத்தைத் திருப்பிக்கொண்டார். ஒரு போர்வையால் உடலைப் போர்த்திக் கொண்டு படுத்தார். மறுநாள் காலை எட்டு மணிக்கு நான் இறங்க வேண்டிய ரயில் நிலையத்தை அடைந்தவுடன் விடைபெற்றுக் கொள்வதற் காக நான் அவருக்குப் பக்கத்தில் சென்றேன். அவர் ஆழ்ந்த உறக்கத்திலிருந்தாரா அல்லது அப்படிப் பாசாங்கு செய்தாரா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அவர் அசையாம லிருந்தார். நான் அவருடைய கையைத் தொட்

டேன். அவர் போர்வையை விலக்கிக் கொண்டார். அவர் ஆழ்ந்த உறக்கத்தில் இல்லை என்பதைக் கண்டேன்.

''போய் வருகிறேன்'' என்று அவரிடம் சொல்லிவிட்டுக் கையை நீட்டினேன்.

அவர் மெலிதான புன்சிரிப்போடு என் கையைப் பிடித்தார். அது மிகவும் பரிதாபமாக இருந்ததால் நான் நெகிழ்ச்சியடைந்து கண்ணீர் வடித்தேன்.

''என்னை மன்னியுங்கள்'' என்று தன் கதையை முடிக்கும் பொழுது சொன்ன வார்த்தைகளை அவர் மறுபடியும் கூறினார்.

***1889***

# நடனத்திற்குப் பிறகு

''நன்மை எது, தீமை எது என்று ஒரு மனிதன் தானுகவே முடிவு செய்ய முடியாது, அது சூழ் நிலையைப் பொறுத்த விஷயம்—மனிதன் சூழ் நிலையால் படைக்கப்படுகிருன்—என்று நீங்கள் சொல்கிறீர்கள். எல்லாமே தற்செயலான சந் தர்ப்பங்களைப் பொறுத்திருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். என்னைப் பற்றி நான் சொல் கிறேன். கேளுங்கள்...''

தனி நபரை முன்னேற்றுவதைப் பற்றிப் பேசுவதற்கு முன்பாக மனிதர்கள் வாழ்கின்ற நிலைமைகளை, சூழ்நிலைகளை மாற்ற வேண்டிய அவசியத்தைப் பற்றி நாங்கள் விவாதித்துக் கொண்டிருந்தோம். அந்த விவாதம் முடிவடை யும் தறுவாயில் எங்கள் மதிப்புக்குரிய நண்பர் இவான் வசீலியெவிச் மேலே கூறிய கருத்தைத் தெரிவித்தார். நன்மை, தீமையைப் பற்றி ஒரு வர் தானுகவே முடிவு செய்வது இயலாத காரியம் என்று யாருமே சொல்லவில்லை. ஆனுல்

விவாதத்தினுல் தூண்டிவிடப்பட்ட தன்னுடைய சொந்தச் சிந்தனைகளுக்குப் பதிலளிப்பது இவான் வசீலியெவிச்சினுடைய பழக்கம். அந்தச் சிந்தனைகளுக்கு ஏற்ற முறையில் தன்னுடைய வாழ்க்கை அனுபவங்களை அவர் விவரிப்பார். பெரும்பாலும் கதையில் அதிகமாக ஈடுபட்டுவிடுவதால் (அதிலும் அவர் எப்பொழுதுமே மிகவும் உணர்ச்சியாகவும் உண்மையாகவும் பேசுவார்) அந்தக் கதையைச் சொல்ல வந்த காரணத்தை மறந்துவிடுவார்.

இந்தத் தடவையும் அப்படியே நடந்தது.

''என்னைப் பற்றியாவது இதைச் சொல்ல முடியும். என்னுடைய வாழ்க்கை சூழ்நிலையாலோ வேறு எந்த சக்தியாலோ உருவாக்கப் படவில்லை. அது முற்றிலும் வேறு ஒன்றினுல் உருவாக்கப்பட்டது.''

''அது என்ன?'' என்று நாங்கள் கேட்டோம்.

''அது ஒரு நீண்ட கதை. நான் முழுக் கதையையும் சொன்னுல்தான் நீங்கள் அதைப் புரிந்து கொள்ள முடியும்.''

''அப்படியானுல் சொல்லுங்கள்.''

இவான் வசீலியெவிச் ஒரு விணுடி சிந்தித்தார். பிறகு தலையை அசைத்தார்.

''சரி. சொல்கிறேன். என்னுடைய வாழ்க்கை முழுவதுமே ஒரு இரவில், சரியாகச் சொல்வதென்றுல் ஒரு காலைப் பொழுதில் மாறிவிட்டது.''

''ஏன்? என்ன நடந்தது?''

''நான் அப்பொழுது அதிகமாகக் காதலில் சிக்கியிருந்தேன். அதற்கு முன்பு நான் அடிக்கடி

காதல் வயப்பட்டதுண்டு. ஆனால் இந்தத் தடவை இது ஆழமான காதலாக இருந்தது. இது நெடுங்காலத்துக்கு முன்பு நடந்தது— அவளுடைய பெண்களுக்கு இப்பொழுது திரு மணம் முடிந்திருக்கும். அவள் பெயர் பி..., ஆம், வாரென்கா பி... என்பது அவள் பெயர்.'' இவான் வசீலியெவிச் அவளுடைய குடும்பப் பெயரைக் கூறினார். ''ஐம்பது வயதில் கூட அவள் இன்னும் மிக அழகாக இருந்தாள். ஆனால் அவளுடைய இளமையில், பதினெட்டு வயதில் அவள் ஒரு அற்புதக் கனவு! உயரம், ஒல்லியான உடல், நளினம், கம்பீரம்—ஆம், கம்பீரம்தான். தன்னால் வளைய முடியாது என் பதைப் போல அவள் எப்பொழுதுமே நிமிர்ந்த நடையோடிருந்தாள். அவளுடைய தலை லேசாகப் பின்னால் சாய்ந்திருக்கும். அவள் வெறும் எலும்பு என்று சொல்லக் கூடிய அள வுக்கு மிகவும் ஒல்லியாக இருந்தாலும், அதுவும் அவளுடைய அழகும் உயரமும் அவளுக்கு ஒரு ராணியின் மிடுக்கைக் கொடுத்தன. அவளு டைய உல்லாசமான, வசீகரமான புன்சிரிப்பு, அழகான வாய், ஒளி வீசும் பிரகாசமான கண் கள், உடல் முழுவதும் இளமையின் பொலிவும் கவர்ச்சியும் இல்லையென்றால் அவளுடைய மிடுக் கான தோற்றமே மற்றவர்களை பயமுறுத்தி யிருக்கும்.''

''இவான் வசீலியெவிச் அடுக்கிக் கொண்டே போகிறாரே!''

''நான் எவ்வளவுதான் அடுக்கிக் கொண்டு போனாலும் அவள் உண்மையிலேயே எவ்வளவு

அழகாக இருந்தாள் என்பதை உங்களைப் புரிய வைக்க முடியாது. ஆனால் அது வேறு விஷயம். நான் சொல்லப் போகும் சம்பவம் நாற்பதுக் களில் நடைபெற்றது. அப்பொழுது நான் ஒரு மாகாணப் பல்கலைக்கழகத்தில் மாணவனாக இருந்தேன். அது நல்ல விஷயமா அல்லது கெட்ட விஷயமா என்பது எனக்குத் தெரியாது; ஆனால் அந்தக் காலத்தில் எங்கள் பல்கலைக்கழகத்தில் இப்பொழுது இருக்கின்ற மாதிரி ஆராய்ச்சி வட்டங்கள், தத்துவ விவாதங்கள் கிடையாது. நாங்கள் இளைஞர்கள். இளைஞர்களைப் போல வாழ்க்கை நடத்தினோம், அதாவது படித்தோம், உல்லாசமாகப் பொழுது போக்கினோம். நான் மிகவும் மகிழ்ச்சியான, சுறுசுறுப்பான இளைஞனாக இருந்தேன். போதாததற்குப் பணக்காரனாகவும் இருந்தேன். என்னிடம் வேகமான குதிரை இருந்தது. கோச்சு வண்டியில் பெண்களை வெளியே கூட்டிக் கொண்டு போவேன் (அந்தக் காலத்தில் சறுக்கும் பைத்தியம் இன்னும் ஏற்படவில்லை). என்னோடு படித்த மாணவர்களோடு சேர்ந்து குடிப்பதுண்டு (அந்தக் காலத்தில் நாங்கள் ஷாம்பேனைத் தவிர வேறு எதையும் குடிப்பதில்லை. பணம் இல்லையென்றால் குடிக்காமலிருப்போம். இப்பொழுதிருப்பதைப் போல நாங்கள் ஒருக்காலும் வோட்கா குடிக்க மாட்டோம்). நான் விருந்துகளையும் நடனங்களையும் அதிகமாக ரசித்தேன். நான் நன்றாக நடனமாடுவேன். என்னை அழகில்லாதவன் என்றும் சொல்ல முடியாது.''

''இவ்வளவு அடக்கம் வேண்டாமே'' என்ருள் கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒரு பேண். ''உங்கள் படத்தை நாங்கள் பார்த்திருக்கிருேம். இளமையில் மிகவும் அழகாக இருந்திருக்கிறீர்கள்.''

''ஒருவேளே அப்படி இருந்திருக்கலாம். ஆனுல் நான் உங்களிடம் சொல்ல விரும்பியது அதுவல்ல. என்னுடைய காதல் உச்ச கட்டத்திலிருந்த பொழுது குளிர்காலத் திருவிழாவின் போது மேன்மக்கள் மார்ஷல் நடத்திய நடன நிகழ்ச்சியில் கலந்து கொண்டேன். அவர் நல்ல சுபாவத்தைக் கொண்ட கிழவர், செல்வந்தர், கேளிக்கைகளில் ஈடுபாடுடையவர். அவரைப் போலவே இனிய குணத்தைக் கொண்ட அவருடைய மனேவி அவரோடு நின்று கொண்டு எங்களே வரவேற்ருள். அவள் வெல்வெட்கவுன் அணிந்திருந்தாள். தலேயில் வைர கிரீடம். அவளுடைய வயோதிகமான கழுத்தும் தோள்களும் சதைப் பிடிப்போடு வெண்மையாக இருந்தன. சக்கரவர்த்தி யெலிஸவேத்தா பெத்ரோவ்ஞவின் உருவப் படங்களில் இருப்பதைப் போல அவளுடைய கழுத்தும் தோள்களும் மூடப்படாமல் தெரிந்தன. அது மிக அற்புதமான நடன நிகழ்ச்சி. நடனம் நடைபெற்ற அறை அழகாக இருந்தது. பிரபலமான பாடகர்களும் இசைக் குழுவினரும் அங்கே இருந்தார்கள். அவர்கள் பண்ணேயடிமைகள். இசைப் பிரியரான ஒரு நிலவுடைமையாளருக்குச் சொந்தமானவர்கள். உணவு ஏராளமாகக் குவித்து வைக்கப்பட்டிருந்தது.

ஷாம்பேன் மது ஆருக ஓடியது. எனக்கு ஷாம்பேன் மிகவும் பிடிக்கும். எனினும் நான் குடிக்கவில்லே. எனக்குக் காதல் மயக்கம் ஏற்பட்டிருந்தது. கீழே விழுகின்றவரை நடனமாடினேன். குவாட்ரில், பிறகு வால்ட்ஸ், பிறகு போல்கா நடனமாடினேன். பெரும்பாலான நடனங்களே—இயன்றவரை—வாரென்காவுடன் நடனமாடினேன் என்று சொல்லத் தேவையில்லே. அவள் வெள்ளே உடை அணிந்து அதன் மேல் இளஞ்சிவப்பு நிறத்தில் நாடாவைக் கட்டியிருந்தாள். ஆட்டுத்தோலில் செய்யப்பட்ட வெள்ளேக் கையுறைகளேயும்—அவை அவளுடைய ஒல்லியான, கூர்மையான முழங்கைகளே எட்டவில்லே—வெள்ளே ஸாட்டின் காலணிகளேயும் அணிந்திருந்தாள். அனீசிமவ் என்ற ஒரு பாழாய்ப் போன பொறியியலாளர் நான் அவளோடு மஸூர்க்கா நடனமாட முடியாதபடி என்னே ஏமாற்றிவிட்டார். அதற்காக நான் அவரை ஒருக்காலும் மன்னிக்கவில்லே. அவள் நடன அறைக்குள் நுழைந்தவுடனே அவர் அவளேத் தன்னேடு நடனமாட அழைத்தார். கையுறைகள் வாங்குவதற்காக முடி அலங்கரிப்பவனேத் தேடிச் சென்றதில் எனக்குக் காலதாமதமாகி விட்டது. அதனுல் அவளோடு மஸூர்க்கா நடனமாடுவதற்குப் பதிலாக ஒரு காலத்தில் நான் காதலித்த ஜெர்மன் பெண்ணேடு அந்த நடனமாடினேன். ஆனுல் அன்று அந்தப் பெண்ணே நான் மிகவும் அலட்சியமாக நடத்தினேன் என்று நினேக்கிறேன். நான் அவளிடம் பேசவில்லே, அவளே சரியாகப் பார்க்கக் கூட இல்லே.

ஏனென்றுல் இளஞ்சிவப்பு நாடா தைக்கப்பட்ட வெள்ளே உடையணிந்த, பிரகாசமான, நாணத்தால் சிவப்படைந்த, கன்னங்களில் குழிவும் மென்மையான, அன்பு ததும்பும் கண்களும் கொண்ட உயரமான, ஒல்லியான பெண்ணுக்காகவே என் கண்கள் அன்று காத்திருந்தன. அவளே நான் மட்டுமே போற்றியதாகச் சொல்ல முடியாது. எல்லோரும் அவளேக் கவனமாகப் பார்த்தார்கள், அவள் அழகைப் பாராட்டினுர்கள், ஆண்களும் பெண்களும்தான். இத்தனேக்கும் அவள் அங்கேயிருந்த எல்லாப் பெண்களேயும்விட அழகாக இருந்தாள். அவர்களால் அவளேப் போற்றுமல் இருக்க முடியவில்லே.

''மஸுர்க்கா நடனத்தில் முறைப்படி நான் அவளுடைய ஜோடி அல்ல. ஆனுல் உண்மை என்னவென்றுல் அந்த நடனத்தில் குறைந்த பட்சம் அதன் பெரும் பகுதியில் நான் அவளோடு நடனமாடினேன். அவள் சிறிது கூடக் கூச்சமின்றி அந்தப் பெரிய அறை நெடுகிலும் என்னேடு சேர்ந்து நடனமாடினுள். அவளோடு நடனமாடுவதற்கு அழைப்பில்லாமலேயே நான் துள்ளிக் குதித்து அவளுக்கு முன்னுல் போய் நின்ற பொழுது அவள் விருப்பத்தை நான் ஊகித்ததற்காக அவள் புன்சிரிப்புடன் நன்றி தெரிவித்தாள். முதலில் அவளுக்கு முன்னுல் நான் சென்ற பொழுது அவள் என்னுடைய தகுதியைப் புரிந்து கொள்ளவில்லே. தன்னுடைய ஒல்லியான தோள்களே லேசாகக் குலுக்கிவிட்டு வேருெருவரை நோக்கித் தன்

கையை நீட்டினுள். தன் வருத்தத்தையும் ஆறு தலையும் தெரிவிப்பதைப் போல என்னைப் பார்த்து லேசாகச் சிரித்தாள்.

''மஸுர்க்கா நடனமாடி வால்ட்ஸ் நடனம் ஆரம்பமான பொழுது நான் அவளோடு நெடு நேரம் நடனமாடினேன். அவள் மூச்சுக் கூட விட முடியாமல் சிரித்தாள். 'மறுபடியும்' என்று முணுமுணுத்தாள். நான் என் உடலைப் பற்றியே நினைக்காமல்—அது காற்றுல் செய்யப்பட்டிருப் பதைப் போலக் கருதிக் கொண்டு—மேலும் தொடர்ந்து நடனமாடிக் கொண்டிருந் தேன்.''

''உடலைப் பற்றி நினைக்காமலா? அவளுடைய இடையைச் சுற்றி உங்கள் கையை வளைத் திருந்த பொழுது, உங்களுடைய உடலைப் பற்றி மட்டுமல்லாமல் அவளுடைய உடலைப் பற்றி யும் மிகவும் அதிகமாக நினைத்தீர்கள் என்று நான் நிச்சயமாகச் சொல்வேன்'' என்று அங்கேயிருந்த விருந்தினர்களில் ஒருவர் கூறினுர்.

உடனே இவான் வசீலியெவிச்சின் முகம் சிவந்தது. அவர் உரத்த குரலில் பேசினுர்:

''அது நவீன இளைஞர்களாகிய உங்களுக்குப் பொருந்தலாம். நீங்கள் உடலைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அந்தக் காலத்தில் நாங்கள் வேறு விதமாக இருந் தோம். ஒரு பெண்ணை நான் எவ்வளவு அதிக மாகக் காதலிக்கிறேனே அவ்வளவுக்கு அவள் உடலைப் பற்றி மறந்துவிடுவேன். இன்று நீங்கள் கால்கள், கணுக்கால்கள் இன்னும் மற்றவை

களைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் காதலிக்கும் பெண்களைக் கற்பனையில் நிர்வாணமாக்கிவிடுகிறீர்கள். ஆனால் அல்ஃபோன்ஸ் கார்—அவர் சிறந்த எழுத்தாளர்—கூறியதைப் போல என் காதலுக்கு உரியவள் எப்பொழுதுமே வெண்கல உடைகளை அணிந்திருப்பாள். நாங்கள் உடலை வெளிக்காட்ட முயற்சிக்கவில்லை. நோவாவின் நன் மகனைப் போல நிர்வாணத்தை மறைப்பதற்கே முயற்சி செய்தோம். ஆனால் உங்களுக்கு இதெல்லாம் புரியாது...''

''அவரைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நீங்கள் கதையைத் தொடர்ந்து சொல்லுங்கள்'' என்று கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவர் கூறினார்.

''சரி. நான் அவளோடுதான் அதிகமாக நடனமாடினேன். நேரமாகிவிட்டதைக் கவனிக்கவில்லை. பாடகர்கள் மிகவும் களைத்துவிட்டார்கள். நடனத்தின் முடிவில் எப்பொழுதுமே அப்படித்தான் என்பது உங்களுக்குத் தெரியும். அவர்கள் மஸூர்க்கா நடனத்துக்கு வாசித்துக் கொண்டிருந்தார்கள். உபசரிக்கும் அறையில் சீட்டாடிக் கொண்டிருந்த அப்பாக்களும் அம்மாக்களும் இரவு உணவு சாப்பிட நாற்காலிகளிலிருந்து எழுந்து கொண்டிருந்தார்கள். வேலைக்காரர்கள் எதையோ எடுத்துக் கொண்டு எங்களை வேகமாகக் கடந்து சென்றார்கள். அப்பொழுது மூன்று மணியாகிக் கொண்டிருந்தது. எஞ்சியிருக்கும் சில நிமிடங்களை நாங்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ள

வேண்டும். நான் மறுபடியும் அவளை நடன மாடக் கூப்பிட்டேன்; நாங்களிருவரும் நூரு வது தடவையாக அந்த அறை நெடுகிலும் நடனமாடினேம்.

'' 'இரவு உணவுக்குப் பிறகு குவாட்ரில் நடனத்துக்கு உங்களுடைய ஜோடியாக நான் இருக்கலாமா?' என்று அவளை மறுபடியும் இருக்கைக்குக் கூட்டிக் கொண்டு சென்ற பொழுது கேட்டேன்.

'' 'ஓ! சரி. என்னை வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு போகாமலிருந்தால்' என்று அவள் சிரித்துக் கொண்டே கூறினுள்.

'' 'நான் போகவிட மாட்டேன்' என்றேன்.

'' 'என்னுடைய விசிறியைக் கொடுங்கள்' என்ருள் அவள்.

'' 'அதை உங்களிடம் திருப்பிக் கொடுக்க எனக்கு வருத்தமேற்படுகிறது' என்று சொல்லிக் கொண்டு அவளுடைய மலிவான வெள்ளை, விசிறியை அவளிடம் கொடுத்தேன்.

'' 'அப்படியானுல் வருத்தப்படாமலிருப்பதற் காக இதை வைத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லிக் கொண்டு அந்த விசிறியிலிருந்து ஒரு இறகைப் பிடுங்கி என்னிடம் கொடுத் தாள்.

''நான் அந்த இறகைப் பெற்றுக் கொண் டேன். என்னுடைய பரவசத்தையும் நன்றியை யும் ஒரு பார்வையால் மட்டுமே என்னுல் வெளிப்படுத்த முடிந்தது. நான் குதூகலமாக வும் நிறைவுடனும் இருந்தது மட்டுமல்ல, மகிழ்ச்சியாக இருந்தேன், பேரின்பத்தை அனு

பவித்தேன். பரந்த உள்ளத்தோடிருந்தேன். அப்பொழுது நான் நாஞக இருக்கவில்லை. இந்த உலகத்தைச் சேராத ஏதோ ஒரு பிறவியைப் போல, தீமை என்னவென்றே அறியாத, நன்மையைத் தவிர வேறு எதையும் செய்ய முடியாத பிறவியைப் போல நான் உணர்ந்தேன். நான் அந்த இறகை என் கையுறையில் சொருகிக் கொண்டு அவளை விட்டுப் பிரிந்து செல்ல முடியாதவஞக, அந்த இடத்திலேயே ஆணியடிக்கப்பட்டதைப் போல நின்று கொண்டிருந்தேன்.

'' 'அங்கே பாருங்கள்! அவர்கள் அப்பாவை நடனமாடச் சொல்கிருர்கள்' என்று சொல்லிக் கொண்டு கதவுக்குப் பக்கத்தில் விருந்தளிப்பவருடைய மனைவியோடும் மற்றும் சில பெண்களோடும் நின்று கொண்டிருந்த தன் தகப்பஞரைச் சுட்டிக் காட்டிஞள். அவர் உயரமான, கம்பீரமான தோற்றத்தைக் கொண்ட மனிதர், கர்னல், தோள்பட்டைகளில் வெள்ளியில் பதவிச் சின்னங்களை அணிந்திருந்தார்.

'' 'வாரென்கா! இங்கே வா!' என்று வைர கிரீடம் அணிந்த, விருந்தளிக்கும் அம்மையார் கூப்பிட்டாள்.

''வாரென்கா கதவை நோக்கிச் சென்ருள். நான் அவளைப் பின்தொடர்ந்தேன்.

'' 'Ma chère, உன்ளுேடு நடனமாடுமாறு உன் தகப்பஞரைக் கூப்பிடு. பியோத்தர் விளதிஸ்லாவிச்! தயவு செய்து நடனமாடுங்கள்' என்று அந்தச் சீமாட்டி கர்னலைக் கேட்டுக் கொண்டாள்.

''வாரென்காவின் தகப்பனார் உயரமாக, அழகாக, கம்பீரமாக இருந்தார். அவர் வயதானபோதிலும் இளமையான தோற்றத்தைக் கொண்டிருந்தார். சிவந்த முகம், நரைத்த மீசையை முதலாம் நிக்கலாய் பாணியில் முறுக்கிவிட்டிருந்தார். கன்னத்தில் வளர்ந்திருந்த கிருதா அந்த மீசையோடு சேர்ந்து கொண்டது. தலைமுடி நெற்றியின் மீது விழும் படியாகச் சீவியிருந்தார். அவர் தன் மகளைப் போலவே அன்பும் மகிழ்ச்சியும் ததும்பச் சிரித்தார். அந்தச் சிரிப்பில் கண்களும் உதடுகளும் பளிச்சிட்டன. திடகாத்திரமான உடல், அகன்ற இராணுவ பாணியில் முன்னால் துருத்திக் கொண்டிருந்தது. சில இராணுவப் பதக்கங்கள் மார்பை அலங்கரித்தன. வலுவான தோள்கள் நீளமான, நேர்த்தியான கால்கள். அவர் பழைய ரகத்தைச் சேர்ந்த அதிகாரி; நிக்கலாயைப் பின்பற்றும் இராணுவ பாணி.

''நாங்கள் கதவை நெருங்கிய பொழுது நடனத்தை மறந்து நெடுங்காலமாகிவிட்டதென்று கர்னல் மறுத்துப் பேசிக் கொண்டிருந்தார். எனினும் அவர் புன்சிரிப்போடு உறையிலிருந்து வாளை எடுத்து, அவருக்குச் சேவை செய்ய ஆர்வத்தோடு நின்ற இளைஞனிடம் நீட்டினார். வலது கையில் தோல் கையுறையை மாட்டிக் கொண்டு ('எல்லாவற்றையும் முறைப்படி செய்ய வேண்டும்' என்று அவர் புன்சிரிப்போடு சொல்லிக் கொண்டார்) தன் மகளின் கையைப் பிடித்து நடனமாடும் பாணியில் உடலை

வளைத்து இசை தொடங்குவதற்காக நின்றார்.

''மஸுர்க்கா தொடங்கியதும் அவர் ஒரு காலால் சுறுசுறுப்பாகக் குதித்து அடுத்த காலை வீசினார், அவருடைய உயரமான, கனத்த உருவம் நடன அறையைச் சுற்றிச் சுழன்றது. அவர் ஒரு சமயத்தில் மெதுவாகவும் நாகரிகமாகவும் மறு சமயத்தில் வேகமாகவும் சுறுசுறுப்பாகவும் காலை மாற்றி நடனமாடினார். வாரென்காவின் ஒடிசலான உடல் அவரோடு சேர்ந்து சுழன்றது. அவள் தன்னுடைய சிறு, வெள்ளை ஸாட்டின் மூடிய கால்களை யாருக்கும் தெரியாமல் எப்பொழுதும் உரிய நேரத்தில் அவருடைய காலடிகளுக்கு இணையாக நீட்டி வைத்தாள் அல்லது குறுக்கிவைத்தாள். அந்த ஜோடியின் ஒவ்வொரு அசைவையும் விருந்தினர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்த நேரத்தில் என்னிடம் பாராட்டைக் காட்டிலும் ஆழமான, பரவச உணர்ச்சி ஏற்பட்டது. அதிலும் கர்னலின் காலணிகளைப் பார்த்தபொழுது என் மனம் நெகிழ்ச்சி அடைந்தது. அவை ஆட்டுத் தோலில் தைக்கப்பட்ட நல்ல காலணிகளே. ஆனால் அவற்றில் குதிகால் பகுதி இல்லை. முன்பகுதி நாகரிக பாணியில் கூர்மையாக இருப்பதற்குப் பதிலாக சப்பையாக இருந்தது. அவை படைப் பிரிவைச் சேர்ந்த செம்மானால் தயாரிக்கப்பட்டவை என்பது தெளிவாகப் புலப்பட்டது. 'தன் அன்புக்குரிய மகள் சிறப்பான உடைகள் அணிந்து உயர்ந்த வட்டாரங்களில் பழக வேண்டுமென்பதற்காக அவர் விலை

யுயர்ந்த காலணிகளுக்குப் பதிலாக சாதாரண மான காலணிகளை அணிந்திருக்கிறார்' என்று நான் நினைத்தேன். அதனால்தான் அவருடைய சப்பை முனைக் காலணிகளைப் பார்த்த பொழுது என் மனம் உருகியது. அவர் ஒரு காலத்தில் அழகாக நடனமாடியிருக்க வேண்டும். ஆனால் இப்பொழுது அவர் பருத்து விட்டார். அவர் வேகமாகவும் அழகாகவும் சுழல்வதற்குச் செய்த எல்லா முயற்சிகளையும் நிறைவேற்றக் கூடிய அளவுக்கு அவருடைய கால்களில் நெகிழ்ச்சியில்லை. ஆனால் அவர் நடனமாடிக் கொண்டே இரண்டு தடவை அந்த அறையை அழகாகச் சுற்றி வந்தார். அவர் வேகமாகத் தன் கால்களை விரித்து மறுபடியும் அவற்றை ஒன்று சேர்த்த பொழுது எல்லோரும் கைதட் டினார்கள். அவர் ஒரு காலின் மீது அதிகமான பாரத்தை வைத்துவிட்டபடியால் கீழே விழுந்து விட்டார். அவர் மகள் சிரித்துக் கொண்டே சிக்கிக் கொண்ட தன் உடையை விடுவித்துக் கொண்டு அவரைச் சுற்றி அழகாகச் சுழன் றாள். அவர் எழுந்து நின்று தன் மகளைக் காதோடு சேர்த்து அன்பாக அணைத்து அவள் நெற்றியில் முத்தமிட்டார். பிறகு என்னை அவ ளுடைய நடனஜோடி என்று நினைத்தவராக என்னிடம் கூட்டிக் கொண்டு வந்தார். நான் இல்லையென்று அவரிடம் கூறினேன்.

'' 'அதனாலென்ன? நீங்கள் அவளுடன் நடன மாடுங்கள்' என்று உறைக்குள் வாளைத் திணித்தபடியே அவர் சிரித்துக் கொண்டு கூறினார்.

''ஒரு பாட்டிலிலிருந்து வெளியே வருகின்ற முதல் துளியைத் தொடர்ந்து ஒரு அருவியே கொட்டுவதைப் போல வாரென்கா மீது எனக்கு ஏற்பட்ட காதல் என் ஆன்மாவில் திரண்டிருந்த காதல் உணர்ச்சி முழுவதையும் திறந்துவிட்டது. என்னுடைய காதலின் மூலம் நான் உலக முழுவதையுமே நேசித்தேன். வைர கிரீடத்தை அணிந்திருக்கும் விருந்தளித்த சீமாட்டியையும் அவள் கணவரையும் விருந் தினர்களேயும் பணியாளர்களேயும் நிச்சயமாக எனக்குக் கோபமூட்டிய அந்த பாழாய்ப் போன அனீசிமவையும் நான் நேசித்தேன். சப்பை யான முனைக் காலணிகளும் அவளைப் போன்ற அதே புன்சிரிப்பும் கொண்ட அவள் தகப்பனு ரைப் பொறுத்தவரை—அவரிடம் எனக்கு அன்புப் பரவசம் ஏற்பட்டது.

''மஸூர்க்கா முடிவடைந்தது. விருந்தளித்த வர்கள் உணவருந்த வருமாறு எங்களைக் கூப் பிட்டார்கள். ஆனுல் அதிகாலையில் தான் எழுந் திருக்க வேண்டுமென்று கூறி கர்னல் பி. மறுத் தார். விருந்தளித்தவரிடம் விடை பெற்றுக் கொண்டார். அவர் வாரென்காவையும் கூட்டிக் கொண்டு போய்விடுவாரோ என்று எனக்குக் கலக்கம் ஏற்பட்டது. ஆனுல் அவள் தன் தாயா ரோடு தங்கிவிட்டாள்.

''இரவு உணவுக்குப் பிறகு முன்பே முடிவு செய்தபடி நான் அவளோடு குவாட்ரில் நடனமாடினேன். நான் மிகவும் அதிகமான மகிழ்ச்சியை அனுபவிப்பதாகத் தோன்றியது. அது மேலும் மேலும் வளர்ந்து கொண்டே

போயிற்று. நாங்கள் காதலைப் பற்றி ஒன்றும் பேசவில்லை. அவள் என்னைக் காதலிக்கிருளா என்று நான் அவளைக் கேட்கவில்லை. என்னையும் கேட்டுக் கொள்ளவில்லை. நான் அவளைக் காதலித்தேன் என்பதே எனக்குப் போதுமானதாக இருந்தது. என் மகிழ்ச்சியை ஏதாவது கெடுத்து விடலாம் என்ற ஒரே ஒரு அச்சம் மட்டுமே என்னிடம் ஏற்பட்டிருந்தது.

''நான் வீடு திரும்பியதும் உடைகளை மாற்றிக் கொண்டேன். தூங்க வேண்டும் என்று நினைத்தேன். ஆனுல் என்னுல் தூங்க முடியாது என்பதை உணர்ந்தேன். என் கையில் அவளுடைய விசிறி இறகையும் அவளுடைய கையுறைகளில் ஒன்றையும் வைத்திருந்தேன். அவளையும் அவளுடைய தாயாரையும் வண்டியில் ஏற்றி வழியனுப்பிய நேரத்தில் அவள் அந்தக் கையுறையை என்னிடம் கொடுத்தாள். அந்த நினைவுப் பொருட்களைப் பார்த்த பொழுது அவள் இரண்டு நபர்களில் ஒருவரைத் தன்னுடைய நடனஜோடியாகத் தேர்ந்தெடுத்த பொழுது, என்னுடைய இயல்பை ஊகித்தவளாக, இனிமையான குரலில், 'இவ்வளவு **கர்வமா?** அடேயப்பா?' என்று சொல்லிவிட்டு மகிழ்ச்சியோடு என்னை நோக்கித் தன் கையை நீட்டிய காட்சி என் நினைவுக்கு வந்தது. இரவு உணவருந்தும் பொழுது அவள் ஷாம்பேனை ருசித்தபடியே அந்தக் கோப்பைக்கு மேல் தன் அன்பு விழிகளை உயர்த்தி என்னைப் பார்த்தது என் நினைவுக்கு வந்தது. ஆனுல் அவள் தகப்பனுரோடு நடன

மாடிய காட்சிதான் எனக்கு மிகவும் பிடித் திருந்தது. தன் தகப்பனர் சார்பிலும் தனக் காகவும் அங்கேயிருந்த பார்வையாளர்களை மகிழ்ச்சியோடும் பெருமையோடும் பார்த்த படியே அவருக்குப் பக்கத்தில் அவள் மென் மையழகோடு மிதந்து கொண்டிருந்தாள். என்னையறியாமலே அவர்களிருவரும் என் மனதில் ஒரே பிம்பமாகக் கலந்தார்கள். ஒரு ஆழமான அன்புணர்ச்சி அவர்களைத் தழுவியது.

''அந்த சமயத்தில் என்னுடைய காலஞ் சென்ற சகோதரரும் நானும் தனியாக வசித்து வந்தோம். என் சகோதரருக்கு உயர்ந்த சமூகத் தொடர்புகள் பிடிக்கவில்லை. அவர் நடனங்களுக்கும் போக மாட்டார். அவர் முது கலைப் பட்டத் தேர்வு எழுதுவதற்காகத் தீவிர மாகப் படித்துக் கொண்டிருந்தார். முன் னுதாரணமான வாழ்க்கையை நடத்தி வந் தார். அவர் தூங்கிக் கொண்டிருந்தார். தலை யணையின் மேல் பாதித்தலையை வைத்துக் கொண்டு உடலைப் போர்வையால் பாதி மூடிய படி அவர் தூங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்த பொழுது நான் அவருக்காக வருத்தப் பட்டேன். நான் ஏன் ஆனந்தத்தில் மூழ்கி யிருக்கிறேன் என்பது அவருக்குத் தெரியாது, அதைப் பகிர்ந்து கொள்ளவும் அவரால் முடி யாது என்பதற்காக நான் வருத்தப்பட்டேன். என்னுடைய பணியாளான பெத்ருஷா மெழுகு வர்த்தி விளக்கை எடுத்துக் கொண்டு வந்து என்னைச் சந்தித்தான். என் உடைகளைக் கழற்று

வதற்கு அவன் எனக்கு உதவி செய்ய வந்தான். ஆனால் நான் வேண்டாம் என்றேன். அவன் முகத்திலிருந்த தூக்கக் கலக்கத்தையும் தலைமுடி கலைந்து கிடந்ததையும் பார்த்த பொழுது எனக்கு அவன் மீது இரக்கம் ஏற்பட்டது. நான் சப்தமில்லாமல் அடிமேலடி வைத்து என் அறைக்குச் சென்று படுக்கையின் மீது உட்கார்ந்தேன். எனக்கு ஓரே மகிழ்ச்சியாக இருந்தபடியால் என்னால் தூங்க முடியவில்லை, அந்த அறை வெப்பமாக இருந்தது, எனவே என்னுடைய இராணுவ உடையை மாற்றிக் கொள்ளாமல் நான் சப்தமில்லாமல் ஹாலுக்குள் சென்றேன். என்னுடைய கம்பளிக் கோட்டை அணிந்து கொண்டு வாயிற் கதவைத் திறந்து வெளியே சென்றேன்.

''நான் நடன அறையிலிருந்து வந்த பொழுது அநேகமாக ஐந்து மணி ஆகியிருந்தது. அதற்குப் பிறகு சுமார் இரண்டு மணி நேரமாகியிருக்கும். எனவே நான் வெளியே போன பொழுது ஏற்கெனவே வெளிச்சம் ஏற்பட்டிருந்தது. குளிர்காலத் திருவிழாக் காலத்துக்கே உரித்தான பருவநிலை — மூடுபனி; சாலைகளில் ஈரப்பனி உருகிக் கொண்டிருந்தது, எல்லாக் கூரைகளிலிருந்தும் தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. அப்பொழுது பி. குடும்பத்தினர் புறநகர்ப் பகுதியில், ஒரு பக்கத்தில் பெண்கள் பள்ளிக்கூடமும் மறுபக்கத்தில் உலாவுதிடலும் அமைந்திருந்த மைதானத்தின் ஓரத்தில் ஒரு வீட்டில் வசித்து வந்தார்கள்.

நாங்கள் வசித்துவந்த அமைதியான சந்தைக் கடந்து பிரதான வீதிக்கு வந்தேன். அங்கே பாதசாரிகளேயும், சறுக்கு வண்டிகளில் மரப் பலகைகளே ஏற்றிக் கொண்டு வந்த வண்டிக் காரர்களேயும் சந்தித்தேன். அந்தச் சறுக்கு வண்டிகளின் அடிச்சட்டங்கள் நடைபாதை வரை பனியைச் செதுக்கிக் கொண்டு சென் றன. குதிரைகள் வர்ணம் பூசப்பட்ட நுகத் தடிகளின் கீழ் தாளலயத்தோடு தலேகளே ஆட் டியதும் மரவுரிப் பாய்களே முதுகில் அணிந் திருந்த வண்டிக்காரர்கள் கால்களில் பெரிய பூட்சுகளே அணிந்து கொண்டு சறுக்கு வண்டி களுக்குப் பக்கத்தில் பனிச் சேற்றை மிதித்துக் கொண்டு ஓடியதும் சாலேயில் இரு மருங்கிலும் அமைந்திருந்த வீடுகள் மூடுபனியில் உயரமாகத் தெரிந்ததும் — எல்லாம் குறிப்பிடத்தக்க வகையில் இனிமையாகவும் முக்கியமாகவும் தோன்றின.

''மைதானத்தில் அவர்கள் வீடு இருந்த பகு திக்கு நான் போனபொழுது மக்கள் உலாவு வதற்குப் பயன்படுத்தும் பகுதியின் முடிவில் கறுப்பாகவும் பெரியதாகவும் இருந்த ஏதோ ஒன்றைப் பார்த்தேன். இராணுவ இசைக் குழல் மற்றும் முரசு ஒலிக்கின்ற சத்தம் கேட் டது. அந்த நேரம் முழுவதும் என் உள்ளம் இனிமையாகப் பாடிக் கொண்டிருந்தது. மஸூர்க்காவின் இசை அவ்வப்பொழுது என் நினேவுக்கு வந்து கொண்டிருந்தது. ஆனுல் இது வேறுவிதமான இசை—கடுகடுப்பாகவும் பயங் கரமாகவும் ஒலித்தது.

" 'இது என்னவாக இருக்கும்?' என்று நினைத்த படியே மைதானத்தின் குறுக்கே வழுக்கலாக இருந்த வண்டித் தடத்தின் வழியாக சத்தம் வந்த இடத்தை நோக்கிச் சென்றேன். சுமார் நூறு தப்படிகள் நடந்த பிறகு அங்கே மக்கள் கூட்டமாக நிற்பதை மூடுபனியை ஊடுருவிப் பார்க்கத் தொடங்கியதும் கண்டேன். அவர்கள் படைவீரர்களாக இருக்க வேண்டும். 'பயிற்சி நடைபெறுகிறது போலும்' என்று எண்ணியபடியே, எண்ணெய்க் கறை படிந்த சட்டையும் மேலங்கியும் அணிந்து, கையில் ஒரு பெரிய மூட்டையைத் தூக்கிக் கொண்டு வந்த ஒரு கருமானைத் தொடர்ந்து சென்றேன். கறுப்புக் கோட்டுகள் அணிந்த படைவீரர்கள் துப்பாக்கிகளோடு எதிரெதிராக இரண்டு வரிசைகளாக நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் இராணுவ இசைக் குழலை வாசிப்பவனும் முரசடிப்பவனும் நின்று கொண்டு அந்த இனிமையற்ற சங்கீதத்தைத் திரும்பத் திரும்ப ஒலித்துக் கொண்டிருந்தார்கள்.

" 'அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?' என்று எனக்குப் பக்கத்தில் வந்து கொண்டிருந்த கருமானைக் கேட்டேன்.

" 'ஓடிப் போக முயன்ற தாத்தாரியனுக்குத் தண்டனை கொடுக்கிறார்கள்' என்று அந்தக் கருமான் இரட்டை வரிசை முடிகின்ற இடத்தைப் பார்த்தபடியே பதிலளித்தான்.

"அந்தத் திசையில் நான் பார்த்த பொழுது

படைவீரர்களின் வரிசைகளுக்கிடையில் பயங்கரமான ஒன்று என்னை நோக்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். அது ஒரு மனிதன். இடுப்பு வரை உடை இல்லை. பூமிக்குக் கிடைக் கோடாகப் பிடிக்கப்பட்டிருந்த துப்பாக்கிகளில் அவன் கட்டப்பட்டிருந்தான். அந்தத் துப்பாக்கிகளின் இரண்டு முனைகளையும் இரண்டு படைவீரர்கள் பிடித்துக் கொண்டிருந்தார்கள். கம்பளிக் கோட்டும் இராணுவத் தொப்பியும் அணிந்த உயரமான அதிகாரி அவனுக்குப் பின்னால் நடந்து வந்து கொண்டிருந்தார். அவரை நான் ஏற்கெனவே பார்த்திருப்பது போலத் தோன்றியது. அந்தக் கைதி உடல் முழுவதும் துடிக்க, உருகிக் கொண்டிருந்த பனிச் சேற்றைக் கால்களால் மிதித்துக் கொண்டு, இரண்டு பக்கத்திலிருந்தும் அவன் மீது விழுந்த சவுக்கடிகளுக்கு நடுவில் வந்து கொண்டிருந்தான். சில சமயங்களில் அவன் பின்னால் வளைந்தால், துப்பாக்கிகளைப் பிடித்துக் கொண்டிருந்த படைவீரர்கள் அவனை முன்னால் இழுப்பார்கள். அவன் முன்னால் துள்ளினால் படைவீரர்கள் அவனைப் பின்னால் இழுப்பார்கள். அவனுக்குப் பக்கத்தில் அந்த உயரமான அதிகாரி, சிறிதும் பின்தங்கிவிடாமல் உறுதியான காலடிகளோடு வந்து கொண்டிருந்தார். சிவந்த முகமும், வெள்ளை நிற மீசையும் கிருதாவும் கொண்ட அதிகாரி வாரென்காவின் தகப்பனார்தான்.

''ஒவ்வொரு முறை சவுக்கடி விழுகின்ற பொழுதும் அந்தக் கைதி சவுக்கடி வந்த

திசையை நோக்கி வலியினால் கோரமடைந்த தன் முகத்தைத் திருப்பி ஆச்சரியமடைவதைப் போலப் பார்த்து தன்னுடைய வெண்மையான பற்களைக் கடித்துக் கொண்டு எதையோ திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். அவன் எனக்குப் பக்கத்தில் வருகின்ற வரையிலும் அந்த வார்த்தைகள் என்னவென்று எனக்குத் தெரியவில்லை. அவன் பேசினான் என்று சொல்வதைக் காட்டிலும் புலம்பினான் என்றுதான் சொல்ல வேண்டும். 'சகோதரர்களே, இரக்கம் காட்டுங்கள்! சகோதரர்களே, இரக்கம் காட்டுங்கள்!' ஆனால் சகோதரர்கள் இரக்கம் காட்டவில்லை. அந்த ஊர்வலம் எனக்கு நேராக வந்த பொழுது ஒரு படைவீரன் உறுதியாக ஒரு எட்டு முன்னால் சென்று சவுக்கை ஓங்கி அவன் முதுகில் அடிப்பதைப் பார்த்தேன். அவன் அடித்த வேகத்தில் சவுக்கு காற்றைக் கிழித்து சப்தமிட்டது. அந்தத் தாத்தாரியன் முன்னேக்கி விழுந்தான். ஆனால் படைவீரர்கள் அவனைச் சுண்டியிழுத்துத் தூக்கினார்கள். எதிர்ப் பக்கத்திலிருந்து மறுபடியும் அடி விழுந்தது, பிறகு இந்தப் பக்கத்திலிருந்து, மறுபடியும் அந்தப் பக்கத்திலிருந்து... கர்னல் அவனுக்குப் பக்கத்தில் நடந்து வந்தார். அவர் ஒரு சமயத்தில் தன் காலைப் பார்ப்பார், மறு சமயத்தில் அந்தக் கைதியைப் பார்ப்பார், ஆழமாகக் காற்றை மூச்சிழுத்துத் தன் கன்னங்களை உப்ப வைத்துக் கொள்வார், பிறகு மூடிய உதடுகளுக்கு நடுவே அந்தக் காற்றை மெதுவாக வெளியே விடுவார். நான் நின்று கொண்டிருந்த

இடத்துக்கு நேராக அந்த ஊர்வலம் வந்த பொழுது வரிசையாக நின்று கொண்டிருந்த படைவீரர்களுக்கு இடையில் அந்தக் கைதியின் முதுகைப் பார்த்தேன். வரி வரியாகக் கோடு கள், இரத்தம் கசிந்து கொண்டிருந்தது, செந் நிறம், பார்க்கவே அருவருப்பான காட்சி. அது மனித உடலின் ஒரு பகுதி என்று என்னல் நினைக்க முடியவில்லை.

" 'அட கடவுளே!' என்று எனக்குப் பக்கத் தில் நின்று கொண்டிருந்த கருமான் முணு முணுத்தான்.

"ஊர்வலம் எங்களைக் கடந்து போய்க் கொண்டிருந்தது. கெஞ்சிக் கொண்டும் தள் ளாடிக் கொண்டுமிருந்த அந்தப் பிறவியின் மீது இரண்டு பக்கங்களிலிருந்தும் சவுக்கடி கள் விழுந்து கொண்டிருந்தன. முரசு ஒலித்துக் கொண்டிருந்தது, இசைக் குழல் தொடர்ந்து கீச்சிட்டது. கைதிக்குப் பக்கத்தில் அந்த உயர மான, கம்பீரமான கர்னல் உறுதியாக நடந்து வந்து கொண்டிருந்தார். திடீரென்று கர்னல் நின்றார். ஒரு படைவீரனை நோக்கி வேகமாகச் சென்றார்.

" 'சவுக்கடி தவறிவிட்டதா? உனக்கு நான் கொடுக்கிறேன்' என்று அவர் கடுங்கோ பத்தோடு சொல்வதைக் கேட்டேன். 'இதை வாங்கிக் கொள்! இதையும் வாங்கிக் கொள்.'

அந்தத் தாத்தாரியனின் இரத்தவிளாறுன முதுகில் அந்தச் சிறு, பலவீனமான, படைவீர

னின் சவுக்கடி பலமாக விழவில்லை என்பதற்காக அந்தக் கர்னலின் பட்டுக் கையுறையணிந்த பலமான கரம் அவன் முகத்தில் ஓங்கிக் குத்தியது.

'' 'புதுச் சவுக்குகளைக் கொண்டு வா!' என்று கர்னல் உத்தரவிட்டார். அவர் பேசிக் கொண்டு திரும்பிய பொழுது என்னைப் பார்த்தார். என்னை அடையாளம் கண்டு கொள்ளாதது போலப் பாசாங்கு செய்தபடியே, பயமுறுத்துவதைப் போல முகத்தைச் சுளித்துக் கொண்டு வேகமாகத் திரும்பினார். எனக்கு மிகவும் அவமானமாக இருந்தபடியால் என் கண்களை எங்கே திருப்புவதென்று எனக்குத் தெரியவில்லை. ஏதோ வெட்கக் கேடான காரியத்தைச் செய்யும் பொழுது பிடிபட்டதைப் போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. நான் தலையைக் குனிந்து கொண்டு வேகமாக வீட்டுக்குத் திரும்பினேன். போகும் வழியெல்லாம் முரசு ஒலிப்பதும், இசைக் குழல் கீச்சிடுவதும் 'சகோதரர்களே, இரக்கம் காட்டுங்கள்!' என்ற சொற்களும் 'இதை வாங்கிக் கொள்! இதையும் வாங்கிக் கொள்!' என்று ஆத்திரமான, சுய-நம்பிக்கை நிறைந்த குரலில் கர்னல் திட்டுவதும் என் காதுகளில் கேட்டுக் கொண்டிருந்தன. இதனால் என் உள்ளத்தில் தீவிரமான வேதனையும் குமட்டல் உணர்ச்சியும் ஏற்பட்டதால் நான் பல தடவை நின்று போக வேண்டியதாயிற்று. நான் பார்த்த காட்சி எனக்குள் ஏற்படுத்திய அருவருப்பை வாந்தியெடுத்து வெளியே கொட்ட வேண்டும் என்ற உணர்ச்சி

எனக்கு ஏற்பட்டது. நான் எப்படி வீட்டுக்குத் திரும்பினேன், கட்டிலில் எப்படிப் படுத்தேன் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் நான் தூங்கத் தொடங்கிய மறு விநாடியே அங்கே நடந்த எல்லாவற்றையும் மறுபடியும் கண்டேன், கேட்டேன். நான் திடுக்கிட்டெழுந்தேன்.

'' 'எனக்குத் தெரியாத ஏதோ ஒன்று அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்' என்று கர்னலைப் பற்றி நினைத்தேன். 'அவருக்குத் தெரிந்திருக்கும் விஷயம் எனக்கும் தெரிந்திருக்குமானால் அதைப் புரிந்து கொண்டிருப்பேன். அந்தக் காட்சி எனக்கு இவ்வளவு வேதனையைக் கொடுத்திருக்காது' என்று நினைத்தேன். ஆனால் எவ்வளவோ சிந்தித்துப் பார்த்தும் கர்னல் அறிந்திருந்த விஷயம் என்னவாக இருக்கும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. மாலை வருகின்றவரை எனக்குத் தூக்கமும் வரவில்லை. அதிலும் ஒரு நண்பருடைய வீட்டுக்குச் சென்று எல்லாவற்றையும் மறக்கக் கூடிய வகையில் அதிகமாகக் குடித்தபிறகு தான் என்னால் தூங்க முடிந்தது.

''தீமையைப் பார்த்துவிட்டதாக நான் முடிவு செய்தேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அப்படி ஒன்றும் இல்லை. 'நான் கண்டவை இவ்வளவு நிச்சயத்தோடு செய்யப்பட்டு, எல்லோராலும் அவசியமானதென்று ஒத்துக் கொள்ளப்படுமானால் எனக்குத் தெரியாத ஏதோ ஒன்று அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்' என்ற முடிவுக்குத் தான் நான்

வந்தேன். அது என்னவென்று கண்டுபிடிக்க முயற்சி செய்தேன். ஆனால் அதைக் கண்டு பிடிக்க என்னால் ஒருக்காலும் முடியவில்லை. இராணுவத்தில் சேர வேண்டுமென்று நான் முதலில் எண்ணியிருந்தேன். ஆனால் இதைத் தெரிந்து கொள்ளாமல் என்னால் இராணுவத் தில் சேர முடியவில்லை. அது மட்டுமல்ல. வேறு வேலையிலும் நான் சேரவில்லை. அதன் விளை வாக உதவாக்கரையாகிவிட்டேன், அது உங் களுக்குத் தெரிந்தது தான்.''

''நீங்கள் எப்படிப்பட்ட 'உதவாக்கரை' என்பது எங்களுக்குத் தெரியுமே. நீங்கள் மட்டும் இல்லாவிட்டால் எத்தனையோ பேர் உதவாக்கரை ஆகியிருப்பார்கள் என்று சொல் லுங்கள். அது தான் பொருத்தம்'' என்றார் விருந்தினர்களில் ஒருவர்.

''இது முட்டாள்தனமான பேச்சு'' என்று இவான் வசீலியெவிச் உண்மையான சங்கடத் தோடு சொன்னார்.

''போகட்டும். உங்கள் காதல் என்ன ஆயிற்று?'' என்று நாங்கள் கேட்டோம்.

''என் காதலா? அன்று முதல் என் காதல் தேய்ந்துவிட்டது. நாங்கள் உலாவப் போகும் பொழுது அவள் தனக்கு வழக்கமான முறை யில் சோகத்தோடு சிரிப்பாள். அந்த மைதானத் தில் பார்த்த கர்னலின் உருவம் உடனே என் நினைவுக்கு வரும். அது எனக்குச் சங்கடத்தை யும் வருத்தத்தையும் கொடுக்கும். நான் படிப் படியாக அவளைப் பார்க்கப் போவதை

நிறுத்திக் கொண்டேன். என் காதல் தேய்ந்து மடிந்துவிட்டது. ஆகவே சில சமயங்களில் இப்படித்தான் நடக்கிறது. இதைப் போன்ற சம்பவங்கள் தான் மனிதனின் மொத்த வாழ்க்கையையும் மாற்றிவிடுகின்றன. நீங்கள் என்னடாவென்ருல் சூழ்நிலையைப் பற்றிப் பேசுகிறீர்களே...'' என்று முடித்தார் இவான் வசீலியெவிச்.

*1903*

வாசக நேயர்களுக்கு

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் ஆலோசனைகளை வரவேற்கவும் ராதுகா பதிப்பகம் மகிழ்வுடன் காத்திருக்கிறது.

கடிதங்களைத் தயை செய்து Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம்
41, பி.சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
சென்னை—600098

ஷோ-ரூம்
136, மவுண்ட் ரோடு, சென்னை—600002

கிளைகள்
80, மேலக் கோபுர வீதி, மதுரை—625001
87/89, ஒப்பணக்கார தெரு, கோயம்பத்தூர்—
641001
சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி—
6200008
செர்ரி ரோடு, சேலம்—636001

விற்பனை நிலையங்கள்
3—22—75—D, மதுரை சாலை;
திருநெல்வேலி ஜங்ஷன்
66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்

இப்புத்தகங்கள் ராதுகா பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது:

கரலேன்கோ வி. **கண் தெரியாத இசைஞன்**

விளதீமிர் கரலேன்கோ (1853-1921) லேவ் தல்ஸ்தோய் மற்றும் அன்தோன் சேகவின் சமகாலத்தவர், அவர் ஒரு சிறந்த எழுத்தாளர். மக்சீம் கோர்க்கி அவரைத் தன்னுடைய முதல் ஆசிரியராகக் கருதினர்.

பியோத்தர் பொப்பேல்ஸ்கி என்ற பார்வையில்லாத சிறுவன் ஒரு பிரபல பாடகராவதை இக்கதை எடுத்துரைக்கிறது. அந்தச் சிறுவன் தன்னுடைய உடற் குறையைச் சமாளித்து ஆன்மிக ஒளியை அடைந்து ஆனந்தத்தைப் பெறுகின்ருன்.

## இப்புத்தகங்கள் ராதுகா பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது:

சேகவ் அ. **மூன்று ஆண்டுகள்.** குறுநாவல்

ருஷ்ய இலக்கியத்தின் மூலச் சிறப்புடைய மரபைச் சேர்ந்த அன்தோன் சேகவ் (1860—1904) எழுதியிருக்கும் இக்குறுநாவல் அவருடைய மிகச் சிறந்த படைப்புகளில் ஒன்றாகும்.

ஒரு டாக்டருடைய மகளான யூலியா, அலெக்ஸேய் லாப்தேவ் என்ற வணிகரைத் திருமணம் செய்துகொள்கிறாள். அது காதல் திருமணம் அல்ல, பணத்துக்காக நடைபெற்ற திருமணமும் அல்ல. மூன்று வருடத் திருமண வாழ்க்கை லாப்தேவ் தன் மனைவியோடு, குடும்பத்தோடு, வெளியுலகத்தோடு கொண்டிருக்கும் உறவுகளில் அசாதாரணமான மாற்றங்களை ஏற்படுத்துகின்றன...

சேகவ் பலமும் இனிமையும் கொண்ட மனிதர்களை, ஆனந்தமும் உரிமையும் நிறைந்த காதலைப் பற்றிக் கனவு கண்டதை இக்குறுநாவலில் காண்கிறோம்.

## இப்புத்தகங்கள் ராதுகா பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது:

வஸீலியெவ் ப. **அதிகாலையின் அமைதியில்**

''அதிகாலையின் அமைதியில்'' பரீஸ் வசீலியெவ் (பிறப்பு 1924) எழுதிய முதல் நவீனம். ஆசிரியருக்குப் பெரும் புகழ் தேடித் தந்த இந்த நவீனம், இளைஞர்களுக்கான சிறந்த நூலுக்கு உரிய பரிசைப் பெற்றது. ஹிட்லரின் பாசிஸத்தை எதிர்த்து சோவியத் மக்கள் நடத்திய மாபெரும் தேசபக்தப் போர்க் காலத்தில் சோவியத் இளைஞர்கள் ஆற்றிய வீரத்தை இந்த நூலில் வருணிக்கிறார் பரீஸ் வசீலியெவ்.

...பதினாறு பாசிஸ்டுகளை எதிர்த்து நின்றனர் அறுவர்—விமான எதிர்ப்புப் படைப்பிரிவைச் சேர்ந்த ஐந்து பெண்களும் சார்ஜண்டு மேஜர் வஸ்கோவும். இவர்கள் ஒவ்வொருவரது போர்க்கால வாழ்க்கையும் தனி வகையானது. ஒவ்வொருவரும் தனிப்பட்ட காரணத்தால் பாசிஸ்டுகளைப் பழிவாங்கத் துடித்துக் கொண்டிருந்தார்கள். போர் முனையை அடுத்த பின்புலப் பகுதியில் பிடிக்கப்பட்ட பாசிஸ்டு அழிவுப் படையினரை இவர்கள் எப்படித் தடுத்து நிறுத்தி அவர்களுடைய திட்டத்தைக் குலைத்தார்கள் என்பதே ''அதிகாலையின் அமைதியில்'' என்னும் இந்த நவீனத்தின் கதை.

''மறுபடியும் நான் படிக்கத் தொடங்கினேன்... அந்த சமயத்தில், மற்றவைகளைக் காட்டிலும் ''கிரேய்ஸர் சொனாட்டா''; ''இவான் இலியீச்சின் மரணம்'' ஆகியவற்றை எழுதிய ஆசிரியர் என்ற முறையில்தான் தல்ஸ்தோயை நான் ரசித்தேன்... அவற்றிலிருந்த தத்ரூபமான வாழ்க்கைச் சித்திரங்கள் அதிகமான ஆனந்தத்தைக் கொடுத்ததோடு என்னை உலுக்கிவிட்டன. அதன் விளைவாக, எழுத்தாளனாக இருந்தால் எவ்வளவு அற்புதமாக இருக்கும் என்ற எண்ணம் என் மனதில் திடீரென்று தோன்றியது. தல்ஸ்தோயைப் போல என்னால் எழுத முடியுமானால், உலகம் என்னுடைய கருத்துக்களைக் கேட்குமாறு செய்ய முடியுமானால்!..''

தியதோர் டிரைஸர்

''என்னுடைய வாழ்க்கையில் லேவ் தல்ஸ்தோய்க்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன், அவருடைய உண்மையான வாசகன் நான்.''

மகாத்மா காந்தி

''ருஷ்ய வாழ்க்கையைப் பற்றிப் பொதுவாக மற்ற ருஷ்ய இலக்கியத்திலிருந்து எவ்வளவு தெரிந்து கொள்கிறோமோ அதே அளவுக்குத் தல்ஸ்தோயின் எழுத்துக்களிலிருந்து மட்டுமே நாம் தெரிந்து கொள்ள முடியும்.

''...அவருடைய புத்தகங்கள் ஒரு மேதையின் இடைவிடாத, கடும் உழைப்புக்கு நினைவுச் சின்னங்களாகப் பல நூற்றாண்டுகளுக்கு நிலைத்திருக்கும்.''

மக்சீம் கோர்க்கி